TO

**His Highness Sri Chama Rajendra Wudayar Bahudur,**

**THE MAHARAJA OF MYSORE.**

This Little Volume is respectfully dedicated

*By his Most Obedient Servant*

THE AUTHOR.

---

PRINTED AT THE MANONMANIVILASAM PRESS:—MADRAS.

SECOND EDITION.

---

By தி.தி. அப்பாவுபிள்ளை.



உ

முருகன் துணை.

# சர்வ அதிகார சாசன அறிவிப்பு.

---

இதனால் சென்னை முதலிய இடங்களில் வைத்திருக்கும் அச்சுக்கூடத்தலைவர்களுக்கும், புத்தக வியாபாரிகளுக்கும், மற்றேனையோர்களுக்கும், தெரிவிப்பது யாதெனில், இதுவரையில் யான் நூதனமாயேற்படுத்தி அச்சிட்டுவெளிவந்த சரித்திரங்களுக்கும், இனி செய்யப்படும் சரித்திரங்களுக்கும், சென்னை, மீஞ்சூர் அப்பாவு முதலியார் வீதி, ௩௫-வது வீட்டிலிருக்கும் ம-௱-௱-ஸ்ரீ, பாரிப்பாக்கம்-மாசிலாமணிமுதலியாருக்கு மேற்படி சரித்திரங்கள் யாவையும் மேற்படியாரே அச்சிடவும், ரிஜிஸ்டர் முதலியதும் என்பெயரால்மாத்திரமிருக்கவும், சர்வ அதிகார சாசனமென்னும் (ஜெனரல் பவராப் அட்டார்ணி) ரிஜிஸ்டர் செய்து கொடுத்துவிட்டேனாகையால், இனி யாதாமொருவர் என்னால் செய்யப்பட்ட எவ்விதச்சரித்திரங்களை அச்சிட்டுவெளிவரக்கண்டால் மேற்படி முதலியாரே மாஜிஸ்டிரேட் முதலிய அதிகாரிகளிடத்தில் இச்சர்வ அதிகார சாசனத்தை முன்னிட்டு யாவத்ஞாயங்களையும் ஏற்படுத்திக்கொள்ளலாம். இதுநிற்க, இதற்குமுன் யாருக்கேனும் யான் அச்சிட உத்திரவுகொடுத்திருந்தபோதிலும் இவ்வதிகாரங்கொடுத்ததேதிமுதல் செல்லாதெனத்தெரிந்துகொள்ளுவதுந்தவிர, இனி யாருக்கும் அச்சிடவுத்திரவுகொடுப்பதுமில்லை, மேற்படியாருக்குக்கொடுத்த ஜெனரல் பவராப் அட்டார்ணியை மாற்றுவதுமில்லை, ஆகையால் இத்தப்படிக்கு என் முழுமனதுடன் சம்மதித்துக்கொடுத்த சர்வ அதிகார சாசனம்.

தி-தி. அ-பி.

சுப்பிரமணியன்சகாயம்.

உ

முருகன் துணை.



ஸ்ரீ-ஸ்ரீ-அப்பாவு



பிள்ளை.



ஸ்ரீசாமுண்டீஸ்வரி துணை.

பெங்களூர் ஆதி விநோதசபை.



# ஆக்கியோன் கருத்து.

ஆரியச்ரேயர்களே ?

இப்பரதகண்டத்தின்கண்ணே அநாதிகாலந்தொட்டு வழங்கிவரும் பாஷைகளனந்தம்; அவற்றுள் தமிழ்ப்பாஷை இயலிசை நாடகமென முப்பாற்படும்; அம்மூன்றினுள் ஒன்றாகிய நாடகத்தமிழ் இனேதினை சிறப்பில்குறைந்து வருவதை அடியேன் சிந்தித்து ஒருவாறு மனஞ்சஞ்சலப்பட்டு பூர்வத்திலுள்ள மகாபண்டிதர்கள் பலவிதநாடகங்கள் இயற்றியிருந்தும், அவைகற்றறிந்த அறிவுடையோர்களுக்கன்றி மற்றவர்கள் எளிதில் பொருள் உணரத்தக்கதல்லவென்பதைக் கருதி தற்காலம் தெள்ளியநடையில் பலவித நூதன வர்ணமெட்டுகளுடன் அடியேன்

குருவின்கிருபையாலும், ஸ்ரீமத்-சுப்பிரமணியசுவாமிகள் திருவருட்பாலகினாலும், மூதறிஞர் ஆசீர்வாதத்தினாலும், இதுகாறும் இயற்றியநாடகங்கள்பலவற்றினுள்ளு மிச்சத்தியபாஷா அரிச்சந்திரன் சரிதையே யாவரிடதருமங்களையும், மாதர்கள் தம்தம்பதியினிடத்தில் அனுஷ்டிக்கத்தக்கநெறிகளையும், மைந்தர்கள் மாதாபிதாக்கள் முதலியோர்களிடத்தில் நடந்துகொள்ளத்தக்க ஒழுக்கங்களையும், எஜமான்விஷயத்தி லூழியன் அதிவினயத்துடன் நடந்துகொள்ளத்தக்க முறைமைகளையும், இராஜநீதி, அமைச்சுரிமை, தவம், சத்தியம், ஆண்மை, பொறுமை, ஈகைமுதலியபலவிதநற்குணங்களை எளிதிற்புகட்டத் தகுதியுற்றதென அடியேன்கருதிச்செய்த ஷை சரிதையை அடியே னனுமதியின்பேரில்சென்ற ௧௮௮௯-ம்-ஆண்டில் அச்சிட்டு வெளிவரக்கண்டபுத்தகங்களை யாவரும்பார்த்தேயிருக்கலாம், இதுநிற்க ஆதியில் இச்சரிதையை பெங்களூரின்கண்ணே நடத்துங்காலையில் இவ்வரிச்சந்திரன்பாகத்தை காசிகாண்டத்திலிருந்து மயானகாண்டம்வரையில்வெகு சிறப்பாகவும், கண்டவர்மனங்களிக்கவும், கேட்டவர்கள்செவி ஆனந்திக்கவும், நவரசபாகங்களையும் இணைத்து இப்பாகத்திற்கு இவனேதக்கவல்லவனென எண்ணி மு-சுப்பராய ஆச்சாரியாருக்கு கற்பித்தவாறு ஷை ஆச்சாரியார் பல இடங்களிலும் நாடகக்கம்பெனியுடன்சென்று நடிக்கக்கண்ட பலரும் மெச்சிப்புகழ்ந்தனர்; இதுநிற்க, முதற்பதிப்பு சத்தியபாஷா அரிச்சந்திரவிலாசத்திலுள்ள கரலிகிதவழுக்களை நீக்கி துரைத்தனப்பாடசாலைகளுக்கு மேல்விசாரணை கர்த்தராயிருந்த வித்வான்-நெல்லை முருகேசமுதலியா ரவர்களைப்பதிப்பித்துத்தரும்படி கேட்டுக்கொள்ள அவர் ஷை என்வேண்டுகோளுக்கிரங்கி பரிசோதித்தளிக்க, அவற்றுள் எனதாத்மசமானஸ்தரான நண்பர் பாரிப்பாக்கம்-மாசிலாமணிமுதலியாரவர்கள் ஆங்காங்கு சந்தர்ப்பத்திற்கேற்பவசனங்களும், ஐதீகலேதகிரப்படங்களுஞ்சேர்த்து கனம்பொருந்திய ம-ள-ள-ஸ்ரீ, கொன்றைமாநகரம் மாணிக்கமுதலியாரவர்கள் பொருளுதவியா லச்சிடப்பட்டுவெளிவரக்கண்ட புத்தகங்களில் ஒன்றை அடியேன் கண்ணுறக்கண்டு ஆனந்தபரவசமாய்விட்டேன், ஏனெனி லிச்சரிதையில் சில முக்கியமான அம்சங்களை இவ்விரண்டாம்பதிப்பில்வெளிப்படையாக வெகு ஞாயனுட்பங்களுடன் பின்வரும் கண்ணிய நாமதேயமுடையவரால்தெரிவித்திருப்பதை அடியேன் கண்ணோட்டமிட்டகாலையில் அடைந்த பரவசமே பரவசம்!!! அன்றியில் ஷை கனவான்கள் எடுத்துக்கொண்ட நன்முயற்சிக்கு பதிலாகைம்மாறு ஏதுசெய்யவல்லேன்! அடியேன்யனதே காரணமாம்; பலதேயபெண்ணரசிகள் வாசித்தறிந்தவரையில் சந்திரமதியம்மன்பாகத்தை முற்றிலும் கவனித்து தங்களுக்குரிய இதுவேயென அறிந்து அப்பதிவிரதமென்பதை சதா அனுட்டித்து இப்பாரி லொப்பிலார்போல நற்கீர்த்தி பூணுவார்களென நம்பி முக்கியமாய் அடியேன் புல்லறிவிலெட்டியவாறு வரைந்திருக்கின்றேன்: முன்னோர்கள் இக்கற்பெனும் நிலையைப்பற்றி கிரந்தங்களில்வாயிலாக பேசியிருப்பதை நம்மனோர்கேட்டும் இருக்கின்றோமல்லவா; அவ்வாறிருக்க அடியேன் சற்றுவிஸ்தரிக்கமுயன்றதேதெனின், மாதர்களில் அ

றிவிற்சிறந்தவர்களும் அறிவிற்குறைந்தவர்களும் தாங்கள் வசிக்குநாட்டில் இவ்விலாசம் ஆடுவதாய்த்தெரிவர்களாயின் தங்கள் வீண்பொழுதைச்சரித்திரக்கேள்வியிற் சற்றுபோக்கக்கருதி பெரும்பான்மை வந்துபார்ப்பது இயல்பாகையால் அக்காலத்திலும் அக்கற்புவிதியை வெளிப்படையாகப்பேசி அநேகபிரயோசனத்தை யுண்டாக்குமென எண்ணித் துணிந்தேயாம்.

மேற்கண்ட முதற்பதிப்பில், விடுபட்டவைகளையும், கரலிகித வழுக்களையும், சீர்திருத்திக்கொடுத்த ஷை நெல்வேலி முருகேசமுதலியாரவர்களுக்கும், ஷை சரித்திரத்துள் ஆங்காங்குதக்கபடி வசனங்களையமைத்துப்பதிப்பித்த என் நண்பர் ம-ள-ள-ஸ்ரீ, பா-மாசிலாமணிமுதலியாரவர்களுக்கும், ஷை புத்தகத்தை அச்சிட்டு நிறைவேற்றபொருளுதவிபுரிந்த ப-ள-ள-ஸ்ரீ, கொண்டைமாநகர் - மாணிக்கமுதலியாரவர்களுக்கும் நான் நன்றிமறவாதவந்தனம் தந்தனன்.

---

## வந்தனம்.

பூமேவுயோத்திமாநகராண்டமன்னருட்
பொய்யறுவரிச்சந்திரன்
புரிசெயலனைத்துந்திரட்டியோர்முனம்
புகன்றுளவிலாசமதனைப்
தேமேவுகுவளையணிநண்பன்பாரிப்பாகை
ஜெயமாசிலாமணிப்பேர்
செந்தமிழ்க்கவிஞனுக்கன்புடனளித்தனம்
செப்புமவனதைவிரித்துப்
பாமேவுமாங்காங்குவேண்டியவசனமும்
படங்களுமமைத்துசத்ய
பாஷாவரிச்சந்த்ரவிலாசமாமிதனைப்
பகர்ந்தனனிதைக்கொண்டைவாழ்
தாமேவுமாணிக்கவள்ளல்தன்னுதவியாற்
றன்னுடச்சிற்பதித்தான்
சொல்லுபன்னவர்கணன்றற்பேறுபெய்தியித்
தொல்லுலகில்வாழ்கமாதோ.

---

பார்புகழ்வண்கல்யாணபுரியதனிலடைக்கலகுபாங்குபெறுவினோதசபையிற்
பலவிசையிற்பர்பாவிசைக்குநற்குணமுறும்பரிதிமரபரிச்சந்திரன்
சீரமருநீஞ்சரிதைபலர்கேட்கவவண்பிரிவைச்செயிரகற்றினியையோடு
செப்பியுமுருமாறிகவாசமினைத்துபவைசித்தைமகிழ்வார்நடித்த
பேர்வளருமாழிகடலீர்வயலுநீடுங்கிலெபெருகிடுஞ்சென்னைவாழ்ந்து
பிறைசூடிதன்னருட்கொண்டசற்குணயார்த்தபெயர்கொண்முனியப்பனின்ற
தேரறிவமைந்திடுநடராஜனைப்பணியுந்திவ்யநடைசுப்பராயன்
தெற்கொடுவடக்கினுங்கீழ்மேலெங்குமிலையுந்திகழ்பாவலாழியனரோ.

தி-தி-அ-பி.

முருகன் துணை.

பெங்களூர் ஆதிவிநோதசபை.

# சாத்துகவிகள்.

---

## அஸ்டாவதானம்

## புரசை - சபாபதிமுதலியாரவர்களியற்றிய

### நிலைமண்டில-ஆசிரியப்பா.

முரலிசைவண்டின மூசும்பொதும்பர் ப்
பாங்கரெப்புடையினும் பன்மணங்கம ழ
அஞ்சிறைப்பைங்கிளி யகங்களிதுளும்ப ப்
பேட்டொனிதிரூஉம் பார்ப்பினைநோக் கா
இமையாநாட்ட மிமைக்குந்தோ கை
பச்சொளிகதுவ விரித்துப்பசுமயி ல்
நாடகநிற்றப் பேடைமஞ்ஞைகுழு ன
மேகமேற்செறிவின் விதானித்தமை ய
பொன்னியம்பெருக்கெழு மின்னியங்கறங் க
வார்திரைதண்பனி நீருறைவழங்கு ம்
நீளிடையங்கதி நெடிதுபயக்கு ம்
சோணாட்டகத்துத் துங்கவானளவு ம்
சிகரநெடுவரைத் திருக்கோயில்கொண் டு
வீற்றிருந்துமையொடு போற்றுநர்க்கருளு ம்
தாயுமான தயாநிதியிறைகொளு ம்
சிராப்பளியென்னுந் திருத்தகுநகரின ன்
அருந்தவப்பயனென வமைதரவுதித் த
செப்தமிழ்ப்புலமை முந்தியதிறலோ ன்
முத்துச்சாமி யுத்தமனினி து
வாய்மையீதெனவு மற்றதைக்காப் ப
தெவ்வணமென்னி னிவ்வணமெனவு ம்
அன்னைதக்காத்து வரசருண்மிக் க
சீரியனின்றோ னெனவவன்தேற்றி ய
கோசலநாட்டுக் கொற்றவர்க்குறிய து
பகைஞரால்வேறற் கரிதெனும்பரிசா ல்
அயோத்தியென்னப் பேர்பெறுநகரி ல
தன்குலமுதல்வ னென்றுரைசெஞ்சுட ர்
இரவிபுரைய விருந்துழியிருந்தா ங
கார்ணைத்திகிரி யாண்டுஞ்செல்ல க்

கோமுடி கவித்து மாநிலம்புரந்
அரிச்சந்திரன்புகழுடைவுறுசரிதையி
விலாககாண்ட மாதியாவிளம்பு
தவாநிலைமுற்றுந் தனியாராய்ந்
நாடகத்தமிழி னன்குறத்தொடுத்து
பண்ணுமிசையும் பலவியல்வண்ணமு
நண்ணுகந்தருவ நன்னூலறிஞ
முதலியோர்கேட்டுள மூன்னினர்வியப்
நிலவுறவியற்றி நீடுலகுள்ளோ
பலர்க்குமின்பு பதியப்பதித்
நவியாவச்சி னல்கினனென்
யேற்றிசையெந்நாட் டினுமேன்மைத்தென
சாற்றுமாண்பு தனுவாவலைத்
சாலிவாகந தராபதியரசிய
வேலியெனையா வரையுமிக்கோம்பு
நலனிரையும்பதி நஞ்சுண்டீச
கருணையோவாத் திருவநீண்மா
மைசூரண்மிய வரியளிகாமர
பாடிக்கூட்டுணப் பயிலுறுமதுமல
பொதுளியதண்ணிழற் பொங்கர்மீமிசை
திங்களுளாவும் பெங்களூரகத்

(வலப்புறம் நிலைக்குத்தாக: தன்னுப்பார்ப்ப்ர்துபச்தல்ம்ன்ட்ம்ர்த்தே.)

---

சென்னைச்சருவகலாசாலைத் தமிழ்த் தலைமைப் புலவர் வித்வான்,

## கோமளபுரம் - இராஜகோபாலபிள்ளையவர்களியற்றிய

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருமறைசொன்முறைமைவழாத்திறத்துநின்று
செய்யவழன்றுமமைபுமனங்கினிதினோம்பும்
தெருமால்செய்சிறுகலியின்றிறலெருக்குந்
தெய்வவாலறிஞர்தொகுசிறப்பிற்றாகிச்
செருமலிவெங்கோடையெனுந்தெவ்வுப்பாறத்
தெழிகுரற்காவிரிப்பாங்கர்ச்செலவிற்றாகிப்
பருவரலெம்மருங்குமந்திற்படர்தலில்லாப்
பண்புடைத்தாந்திரிசிரமாபதியின்மேலான்,
நிலவுகால்வெண்முத்தநிறையினன்று
நீடுதிரைக்கங்கைகுலமொடிதந்தாசை

கலவுநீண் மனமொருகித்தூய் துஞற்றுந்
தொகுமாதவப்பேறுத்தோன்றுதோன்றல்
பலவுநாமுறைப்படிதேனேபளகிலாமே
பயன்படுதல்லொழுக்கமெலாம்பரீஇயதற்கண்
செலவுமாண் குணமுடையான்றென்சொலாதிச்
செப்புபலமொழிப்புலமைசிறந்தான்மதோ.

---

துரத்தனபாடசாலை மேல்விசாரணைக் கர்த்தராயிருந்த
வித்வான்-நெல்வேலி
முருகேச முதலியாரவர்களியற்றிய
எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கங்கைகுல திலகன்சர வணமூர்த்தி சீடன்வரகவிஞன்சங் கீத நிபுணன்
திங்களொடு பொங்கர வணிந்தகுரு பரன்தங்கு திரிசிர புரத்து தித்தோன்
அங்கையின் கனியென வரிச்சந்த்ரன் கானதயை யப்பாவு பிள்ளை யென்போன்
சங்கையற வெவருமெளி துணர்ந்துய விலாசமாய்ச் சாற்றினன் றமிழின் மா
காலிகித வேட்டிலுறு பழுதுபல வற்றையுங் கவனியா தச்சிட்டரால் [தோ
திரிதலில் லாமலே படிக்கவுங் கேட்கவுந் தெளிவுடன் சீர்தி ருத்தித்
தருகவென பலர்வேண்ட மாசிலா மணியெனுந் தகுதியோன் மனமி ரங்கிப்
பரிவுடன் பிழைதபுத் தச்சினி லிபற்றியே பாருளோர்க் குதவி னனல்.

---

மஹாவித்வான்-புரசை-அஷ்டாவதானம்
சபாபதி முதலியாரவர்கள் மாணாக்கரும்,
சென்னைத் தொண்டைமண்டலம் துளுவவேளாளர் ஆங்கிலோவெர்னகுலர்
கல்விச்சாலைத் தமிழ்ப்பண்டிதருமாகிய
திருமழிசை - சிவப்பிரகாசையரவர்களியற்றிய
குளகச்செய்யுள்.

பொன்பூத்தமகரத்தப்புதுவச்செழுங்கமலப்பொய்கைமேவுந்
தென்பூத்தவளக்குடந்தைச்சரவணதேசிகன்பாற்செந்தமிழ்ப்பயின்ற
மின்பூத்தசுற்றிரிசிராமலைவாழ்கவிஞனப்பாவேந்திரன்செய்
மின்பூத்தவேற்கரன்சத்தியபாஷாவரிச்சந்த்ரவிலாசந்தன்னை [கப்
சொன்னயமும்பொருணயமுந்துதைந்தெவர்க்கும்நல்லறிவுஞ்சுகமுமோங்
பன்னரியவசனமுமாங்காங்குவிரித்ததற்கேற்பப்படமுஞ்சேர்த்து
கன்னல்வினைவியல்பாரிப்பாகைமாசிலாமணிப்பேர்க்கவிஞன்மேன்மை
மன்னுமச்சிற்பதிப்பித்துவெளிபிட்டானவன்சீர்த்திமதிக்கற்பாற்றே.

---

ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோத சபை.

# மைசூர்மகாராஜன்வாழ்த்து.

* சாமராஜே இந்த்ரா வுன்னைப் போற்றினேன்.

சாமுண்டிபாலகா சர்வதினயகா
சந்திரசூரியர்போல வாழுவே. (சா)
எங்கெங்குமுந்தன்புக ழேற்றிப்பேசவேதிகழ்
இதிகாசபுராணவொலி வாழுவே. (சா)
மாதமும்மாரிபெய்ய மன்னன்குடைதுலங்க
மண்ணிலுஞ்சத்தியமோங்கி வாழுவே. (சா)
எத்திசையிலுந்தன்கீர்த்தி யியம்பிடப்போமோநீதி
முத்துசாமியின்மொழி வாழுவே. (சா)

வேறு.

* மன்னன் சாம்ராஜேந்திரா யதிபனுக்கருள்புரிமனோஹரா னே
இன்னிலம்புகழுடலெடுத்தோன் இகபரமதனிற்கிணையடுத்தோ ன்
அன்னைசாமுண்டியடிபிடித்தோன் அதமகுணமணுகாதடுத்தோ ன்
என்சாமியுமைகாமியென்றுமுன்னருளினல் நன்றளிப்பாயெந்தன் ()
வேதகோஷ்டமெங்கணுமோத விதவிதகருவிகண்மிகவூ த
மாதவத்தோர்கணெறியோத மகிகூஷியமமர்ந்திடசங்கீ த
விண்கோவே சுரர்தேவே வேண்டியபுஜபல ந்
தாண்டியளிப்பாயெந்தன். (மன்)
ஆலயப்பூஜைதினம்பெருக அகற்றிப்புலைகொலையருள்தரு க
ஞாலமதில்மிடிகருக நமனணுகாததோர்நிலைவரு க
அன்பாக நண்பாக வனுதினமகிழுட ன்
மநுமுறையளித்தெந்தன் (மன்)
விநோதசபையதுசெழித்தோங்க வீணரின்கொள்கைகள்பின்வாங் க
கீர்த்திநிதியரசனிருட்தங்க கருணைப்புரிந்திடமனம்பொங் க
விண்ணேனே முக்கண்ணேனே வேண்டினேன்முத்துசா மி
ஆண்டருள்வீரெந்தன். (மன்)

வேறு.

நோட் - மோகனம், தாளம் - ரூபகம்.

* இராஜன்மைசூர் இராஜசாம இராஜ
சரணம் சரணம் சரணம் சரணம். (இ)
தேசமதிற்புகழ்பெருக தீமையோடசுகம்வருக
சரணம் சரணம் சரணம் சரணம். (இ)

---

* இக்குறியுள்ள வாழ்த்துகள் பொதுவெனக் கவனிக்கவும்.

கிருஷ்ணராஜன்மகிழ்ந்தசீலா கிரீடியெங்குமேற்றும்லோலா
சரணம் சரணம் சரணம் சரணம். (இ)
வித்வஜனர்கள்போற்றுங்கையா விநோதசபைக்கருளுமெய்யா
சரணம் சரணம் சரணம் சரணம். (இ)
முத்துசாமிமொழியும்வாறே முனைந்து அளிப்பாய்நீசீரே
முருகா முருகா முருகா சரணம். (இ)

## மைசூர்மஹாராஜாவைவாழ்த்துதல்.

தரு - இராகம் - மோகனம், தாளம் - ரூபகம்.

ஸ்ரீராஜன் மைசூர் ராஜன்மஹா ராஜன் வாழ்க வே
தேச மதில் மும்மாரிதான் செழிக்க வீழ்க வே
கிருஷ்ண ராஜ பூப தியின் கீர்த்தி பொங்க வே
அஷ்ட லக்ஷ்மி யர சனு ளன்பாய்த் தங்க வே
சாம ராஜன் புகழ் கீர்த்தி தரணி பேச வே
காம னிவ னழகைக் கண்டு கண்கள் கூச வே
அறுகு ணங்கள் பெருகி யெங்க ளரசி வாழ்க வே
தருமபத்னி கெர்ப்ப மது தழைத்து நீள்க வே
மக்கட் பதி னாறும் பெற்று மன்ன னோங்க வே
திக்கு திக்கு களிற் கீர்த்தி ஜெயமா யோங்க வே
நித்தி யானந் தனுய் ராஜ நீதி தருக வே
சத்தி சிவ சாமுண் டியின் றயை பெருக வே
சத்ரு பய மின்றி வேந்தன் தரணி காக்க வே
மித்ரு வாகி பசுவும் வேங்கை மேன்மை நோக்க வே
புஜ பலமும் நால் வகையும் பொருந்தி வாழ வே
விஜய லக்ஷ்மி யாட துட்டர் மெலிந்து தாழ வே
வானம் பூமி நீரு முள்ள வரையி லாள வே
தான மீயும் மன்னன் கீர்த்தி தழைத்து நீள வே
அந்த ணர்மு னிவரெக்ய மனேத்து மோங்க வே
இந்த சாம ராஜன் புக ழெங்குந் தங்க வே
நாட்டி லமருங் குடிக ளுக்கே நலந் தருக வே
மேட்டி சாம ராஜ பஹதூர் மேன்மை பெருக வே
கரோ நிதி யெங்கள் ராஜன் களம் பெருக வே
விநோத சபைத் தழைக்க வன்பு மிகத் தருக வே.

ஸ்ரீ-ஸ்ரீ அப்பாவு பிள்ளை.



ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோத சபா.

சத்தியபாஷை

# அரிச்சந்திரவிலாசம்.

## விநாயகர் துதி.

வெண்பா.

சீராரிரவிகுலச் செம்மலரிச்சந்திரன்
பேரார்சரித்திரத்தைப்பேசுதற்கு - ஏரார்
செஞ்சடையிற் கங்கையுடன் திங்களணியெம்பெருமான்
கொஞ்சுமகி ழைங்கரனைக் கோரு.

## பொது தரு.

இராகம்-எமுனாகல்யாணி, தாளம்-ஆதி.

பல்லவி.

வேலாயுதன்முன்வந்த லோலா அருட்செய்பாலா.

அநுபல்லவி.

சீலாமூஷிகமேறுங் காலா சதங்கைக்கொஞ்சுஞ்
சிவமேயெனக்கருட் செயுமனோகரனே
அபயமபயமெனை யாளைங்கரனே (வே)

சரணங்கள்.

வேதாகமமுறை விமலவகிலபரிபூரணா - சுழி
நாதாஞானவிநோத சகலகலை காரணா
வாதாவென்முன்வரப்போ காதா துதிக்கைகொளும்
பாதாவிமலர்கள் பணிசேவகனே
தாதாநின்னடி ததி காவலனே. (வே)

ஏகாக்ஷரமுடி யிடையடிதங்கிய தேவனே-சர்வ
லோகாத்மமெலாந்துதியருளோங்கியபாவனே
நா வரமருட் தியாகா வுனைப்பணிந்தேன்
நாகாபணிசிந் தூரணிபாகா
வாகாவல்லபை மகிழுறுபோகா. (வே)
நீராயென்றயரோடிட வின்றடநீயே-வரந்
தாராயிருவினை யகன்றிடவேவருவாயே
சேராய் நின்னன்பருடன் பாரா யருட்கண்ணாலே
தாராய்த்திருமுத்து சுவாமியைச்சீலா
வாராயவனுள நாடியலோலா. (வே)

## பரமன்துதி விருத்தம்.

ஆதியாய்ப்பரமாய்நேச ரன்பனாய்முடியின்மீதிற்
பாதியாந்திங்களோடு பகீரதிமேவத்தாங்கி
வேதியாயும்பரேற்ற வெண்விடையோங்கியெங்குஞ்
ஜோதியாயிலகுந்திவ்ய சுந்தரனைப்பணிவாய்நெஞ்சே.

## திருமால்துதி வெண்பா.

சங்குடனே சக்கரமுந் தாங்கிகதை கோதண்டம்
பங்கயனைத் தானளித்தப் பாவனுந் - துங்கமுகில்
வண்ணன் வைகுந்தனு மாய னெனைக்காத்த
கண்ணனடி யைத்தொழுதேன் காண்.

## முருகன்துதி வெண்பா.

வள்ளிதெய்வயானை வளர விருபுறமும்
புள்ளிமயி லேறிவரும் புண்ணியனே - கள்ளியவள்
பெற்றெடுத்த பாலா பெருமையுட னன்பர்கடம்
நற்றுயரம் போக்கமன நாடு.

## உமையவள்துதி கலித்துறை.

சுந்தரிநீலி துரந்தரிமாதவி துய்யவொளி
விந்தரிபார்வதி விமலிவராகி விரும்புதிரி
மந்திரிவாலையம் மாயாசொரூபி மனோன்மணியாம்
பந்தந்தொலைக்குமுமையாட்பதத்தைப்பணிநெஞ்சமே.

## சரஸ்வதிதுதி விருத்தம்.

அயனதுதாலமேவு மம்பிகாமணியேதேவி
நயமுடன்வெண்பட்டாடை நாடுங்கமலநேத்ரி
ஜெயம்பெறச்சித்தர்யோகர் தினேதினேகளிகொண்டாடுந்
தயவுறுவரணிபாதத் தாளணிப்பணிகுவேனே.

## குருவணக்கம் விருத்தம்.

நன்மைதீதறியாக்காலை நாடியேயென்னையடைந்து
உன்னியேகலைநாலோர்து முத்தமனெழுத்தையீந்து
என்மனநாட்டுதற்கே யீதெனக்காட்டவந்த
இன்புறுசரவணைய னெழிலடியேற்றுவேனே.

## அரிச்சந்திரன் வணக்கம் விருத்தம்.

சத்தியம்வழுவுறாதத் தனியரிச்சந்திரனுசான்
பத்தியிலுயர்ந்தயோத்தி பாலித்தோன்தேவிபால
னத்தியதுயரைநீக்கி நற்கதியடைந்தோனென்னை
யெத்திசையினிலுங்காக்க வெழிலடிபோற்றினேனே.

## சபாவணக்கம் விருத்தம்.

வேதமாமறைகணூலும் விளங்குசாத்திரங்களாறு
மோதருபுராணமற்று முள்ளதுமுணர்ந்தேயிந்த
தீதிலாவிலாசம்பார்க்கத் தெம்புடன்வந்திருக்குங்
கோதிலாச்சபையார்பாதங் கும்பிட்டுவணங்கினேனே.

## அவையடக்கம் ஆசிரியவிருத்தம்.

பார்புகழுங்கலியாண புரியதனிலோங்கிவளர்
பண்புளவிநோதசபையார்
பக்ஷமுடனென்னையே கோரினாராதலால்
பரிதிகுலதிலகனான
சீர்பெறுமயோத்திநகராண்டதிரிசங்கீன்ற
செல்வனற்சரிதையதனைச்
செப்பருவிலாசமாய்ப்பாடவேசிங்கார
சேவலங்கொடிவேலவன்
பேர்தனைத்தொழுதுமே யென்னுளியீன்றதைப்
பேணிகமலாக்ஷியருளால்
பேசினேனிசைதனைசொல்பிசகாயிருக்கினும்
பெரியோர்கட்கனிவுகூர்ந்தே
சார்புறுவிலக்கணமிலக்கியமுமறியாத
தனையனைச்சீடனாகத்
தாங்கிப்பெருங்கருணை புரிவீர்களெனவுங்கள்
தாளடிபணிந்தனனரோ.

---

## தோடையம்.

தரு - இராகம் - நாட்டை, தாளம் - திருபுடை.

சகலலோகமுங்கீர்த்தியோங்கிய தனியரிச்சந்திரன்சரிதையை
தரும்விலாசமதாகநானுமே தமிழிலிசைபன்னவே ஆ - ஆ
அகிலபுவனத்துளமரர்முனிவர்க ளனைவருமடிபணிந்திடு
மகரகுண்டலவைங்கரனருள்வைத்துமென்றனைக்காக்கவே. (ஜெய)

பெருமைபெற்றிடவருமையுற்றதோர் தருமனரிச்சந்திரன்காதையை
அருமைகங்கியபொருளமைத்துமேயான்விலாசமாய்ப்பாடவே ஆ - ஆ
வருந்துந்தேவர்கட்சிறையறுத்திட வந்தேசூரனைவாட்டிய
முருகவேலவன்கருணையென்னுள மோங்கிநானுமேகாக்கவே. (ஜெய)

சுந்தரமுளசந்திரவதி சொல்லோனுப்பத்னிசரிதையை
இந்தநாட்டுளோர்வந்துபார்க்கவே யிவ்விலாசநான்பாடவே ஆ - ஆ
கந்தவேளினையந்தநாளினிற் கரிமுகன்பின்னளித்ததோர்
பந்தபாசத்தைவிலக்கியாளும்மென்பரமனாருள்காக்கவே. (ஜெய)

தந்தைவாக்கியம்பிந்திடாமலே வந்தலோகிதன்காதையை
விந்தையாங்கவிவாணரின்பதம்வேண்டிநான்தமிழ்பாடவே ஆ - ஆ
கந்தைபோற்றியதோழனையன்று கருதியாண்டவென்கண்ணனை
யெந்தையினருளென்னுளோங்கியே மிடியகன்றிடக்காக்கவே. (ஜெய)

நிலையுளோன்புகழ்கலையுளோனன் னெறியுளமந்திரிகாதையைப்
புலையிலாருளங்களிக்கவேநான் புகழ்விலாசமாய்ப்பேசவே ஆ - ஆ
தலைமைதங்கியேதரணியங்குள சகலநூல்களுக்காதியாங்
கலைமகளருளென்னுளோங்கியெக்காலமுமெனைக்காக்கவே. (ஜெய)

கள்ளமுஞ்சூதுங்கபடுநீக்கிய கனனரிச்சந்திரன்காதையை
வள்ளலென்குருபாதம்போற்றியே வாயினாற்றமிழ்பாடவே ஆ - ஆ
வெள்ளைக்காளையன்வேணுகோபாலன் விமலிகணபதிமுருகனு
முள்ளம்வைத்துவிநோதசபையோ ரோங்கிவாழ்ந்திடவருளவே. (ஜெ)

---

# விநோதசபையார் வாழ்த்து.

இராகம்-காம்போதி-தாளம்-ஆதி.

பல்லவி.

விநோதசபையோரிவர்வாழ்கவே - வெற்றி
வேலனருளளித்தே காக்கவே - நித்தம்.

அநுபல்லவி.

கனமுள வரிச்சந்திரன் கதையைவிலாசமாக
காவியமதுசெய்துவித்த கலியாணபுரிவாழும் (வி)

சரணங்கள்.

திருவள்ளூர்நாடுறைந்த செல்வனருணாசலன்
செய்தவத்திலுதித்த தீரனுதாரன்மாரன்
இருவினையணுகாத இன்பன் இராஜரத்னம்
இச்சபைக்கோநாயகன் இவனுக்குதவியானோர்
தருமகுணவான்கல்வி சார்ந்தோனவ்வேலநகர்
தாவும்லோகனுதன்றன் றனயன் திருவரங்கம்
அருமையிச்சபைவிருத்தி ஆக்கியகுணசீலன்
அன்பனிவனிளையோன் அரிபுகழ்வாசுதேவன்
ஆதிமூலத்தைத்பணி ஐயன்வீராசாமிதான்
அளித்தயோகவான்சீலன் அன்பன் சிவகுரு தர்மி (வி)
வேதமுன்றைக்குஞ்சிவவேடந்தரித்தோன்புனு
வேண்டிப்பாலாறுகாடுவிளங்கும்நாடுறைவாழ்வோன்
நாதகீதங்களுறு நண்பன் சுப்பராயனுல்
நாட்டில்வந்தவர்களில் நற்குணந்தீரனீகன்
பாதகம்புரியாதபண்புளோன் பாலசுந்திரன்
பாரிலிச்சபையோங்கபணிகளை நடத்தினோன்
நீதமுடையோன்ஹரி நிலையுளாதிகேசவன்
நிகழ்ந்தபுத்திரர்களில் நேயன்குணவானன்பன்
நிக்ஷயன்கனவந்தன் நீடிக்குங்கீர்த்திவான்
நீயறிவாலைநகர்நேமன் ஸ்ரீபாலகிருஷ்ணன் (வி)
இச்சபைதிரவியத்திற் கிவ்விருவர்தலைவர்
என்றும்வைகுந்தம்வாழு மீசன்மரபிலுற்றோன்
மெச்சும்நடக்கையுளான் மெய்யன்நீதிவிவேகி
வீராசாமியளித்த விற்பனன் பீ. யல். என்னும்
நிச்சயகுணன்பக்தி நேமி அப்பாய்செட்டி
நீடுலகினிற்கவி பாடுவோர்க்களிகரன்

அச்சுதனடிதொழும் அன்பன்கொண்டல்நாயுடு
அளித்த பி. சபாபதி யித்திரன்மகிழ்யோகன்
ஆகவிவர்கள்கூடி யேகமனதாய்நாடி
யோகன்சரிதைதனைப் யோகமாய்நடத்திய (வி)

## பொது கலித்துறை.

அத்திக்கணபதி யாதிக்கணபதி யன்பர்துதி
சித்திக்கணபதி செல்வக்கணபதி சிப்புறதாய்
பத்திக்கணபதி பாலக்கணபதி பாக்கியமருள்
வெத்திக்கணபதி விநோதசபையில் விளங்கினனே.

## விநாயகர் தரு.

இராகம்-மோகனம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

சித்திவிநாயகன் குனிதோவந்தான் - வெற்றியளிக்க
சித்திவிநாயகன் குனிதோவந்தான்.

அநுபல்லவி.

எத்திசைபுகழுங் கல்யாணபுரியி
லுத்தம வேளாளர்கருதும் நெறியில்
தித்தித்தோமென்று தித்தித்தோமென்று
தேசங்கள் கொண்டாட வாசங்கள்பாட. (சித்தி)

சரணம்.

அன்னையுமையருளங்குச பாசன்-கருணாகரன்
ஆதிமூலமாய்வரும் விசுவாசன்
என்னையடிமை கொண்டிட்ட நேசன்-தொழுபவர்க
ளிடுக்கண்போக்கி யாண்டிடுமீசன்
முன்னை வினையைக் களையும்நாதன்
மோனநிலையைத் தரும்விநோதன்
தன்னையண்டினோர்க் கருளும்பாதன்
சாயுஜ்பமடையச் சாற்றிடும்போதன்
சற்குணதீரன் வல்லபை நற்குணமாரன் பலகலை
ஓட்டிடுந் துயரதை விற்றிடும் ப்ரமதை
தாங்கி ஐங்கரத்துட னோங்கி
சரணனவென்னிரு கரமதைத் தூக்கிட
வரமதையளித்துமே பிரபலஞ் செய்திடுஞ். (சித்தி.)

ஸ்ரீ-ஸ்ரீ அப்பாவு பிள்ளை.



ஸ்ரீசாமுண்டீஸ்வரி துணை.

பெங்களூர் ஆதி விநோத சபா.

# கன்னமாபுரிகாண்டம்.

## மதிதயமஹாராஜன் சபை.

### பொது விருத்தம்.

புவிதனிற்கீர்த்திவோங்கப் புண்ணியந்தனில்மிகுந்தே
கவியுரைவாணர்மெச்சுங் கையனுமுனிவர்கட்கே
தவிழின்றியாகமேற்றத் தனமளித்திடுவோன்றிவ்விய
மவினர்கள்மகிழுமந்த மதிதயன்கட்டியன்வாரான்.

(பொது-வ-ம்.) சபையோர்களே ? கன்னமாபுரியை அரசாக்ஷி செய்யு மதிதயமகாராஜன் ஆசாரவாசற்கர்க்குங் கட்டியக்காரன்வருகிறவி தங் காண்பீர்கள் கனவான்களே.

### கட்டியன் தரு.

இராகம் - பந்துவராளி. தாளம் - ஆதி,

பல்லவி.

கட்டியக்காரன்வந்தான் இதோ இதோ பாரும்.

அநுபல்லவி.

மட்டில்லாமதிதயன் மகபதியடிநாளும்
வாழ்த்திப்புகழையென்று மேத்திப்படிக்கும்வீர. (கட்டி)

சரணம்.

நெத்தியில்முத்திழைத்த நிகழ்குச்சுக்கொண்டைதொட்டு
நேர்விழியிரண்டிற்கும் நிகரிலாமையுமிட்டு
சுத்திக்கச்சையுடனே சொகுசாயங்கியுமிட்டு
சொல்லொணுடால்விருது ஜொலிக்குங்கத்தியுந்தொட்டு

சூரனெனவேவெகு வீரனெனவேபலர்
சொல்லப்பயந்தொதுங்கிச் செல்லவரசன்புகழ்
மெல்லசர்வத்திலும் நல்லகுணமுடைய (கட்டி)

பொது விருத்தம்.

நீதியும் பொறுமைசத்யம் நிலைகளும் பிசகாவண்ண
மாதியை மனதில்நாளு மன்புடன் பணிந்தேயேற்றி
வேதியர் பலவாய்வாழ்த்த வெண்குடை மரையும்வீச
வோதிடு மதிதயேந்திர வுத்தம ரிதோவாராரே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? கன்னமாபுரியையாளும் மதித
யேந்திராராஜன் கொலுவிற்கு வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

மதிதயன் தரு.

இராகம்-தோடி. தாளம்-ஆதி.

பல்லவி.

சூரரதியுலாச வீரர்மதிதயேந்திர
தீரரிதோவந்தார் கொலுவிருக்க
தீரரிதோவந்தார்.

அநுபல்லவி.

மாரனிவரைக்கண்டால் வணங்கியோடுமழகர்
மானபூஷணர்சர்வ கியானமுளவாசவர்
மன்னிய நிதியுளோர் துன்னிய நெறியுளோர்
பன்னவர் புகழுளோர் இன்னகர் மகிழ்கொளுஞ் (சூரன்)

சரணம்.

சுந்தரவஞ்சியர்க ளாடப்பதமும்பாடச்
சொல்லிமறைமொழியைத் தூயவேதியர்நாட
மந்திரிபிரதானிகள் வளர்ந்திருபுறங்கூற
வாய்கூசாக்கட்டியனுரை வாக்கால்ஜனங்களோட
துந்துமிபேரிகை சொல்லுஞ்சல்லரிதாளம்
தொந்தோந்தோமெனத் துவனிக்கக்கொம்புகளூத
ஜொலிக்க நவமணி பளிக்க முடிதனிற்
களிக்கப் பலர்மனம் நெளிக்கப் பகைவருந்
தொண்டரெனவே யெதிற்
கொண்டே வணங்கிவர
அண்டமெலாம் புகழும்
மண்டலாதிப ரான. (சூரன்)

## மதிதயன் போற்றி விருத்தம்.

என்னெறி யோங்கிவாழ்க வினியதோர் மறைகள்வாழ்க
நன்னெறி குடிகள்வாழ்க நாட்டினில் முனிவர்வாழ்க
வின்னகர் செழித்துவாழ்க வெங்குமென் புகழ்விளங்கத்
துன்னவா கைலைவாழுந் தூயனே யருள்வாய்போற்றி.

## மந்திரி போற்றி விருத்தம்.

மன்னர்கள் மன்னர்மற்று மண்டலாதிபர்கள் யோகர்
துன்னவ ரிஷிகள்சித்தர் தூயநன்னெறியோர் வீரர்
பன்னவர் வசுக்களெல்லாம் பரவியே புகழக்கீர்த்தி
கன்னமா புரியையாளுங் கர்த்தனே நின்றருள்போற்றி.

## மதிதயன் தேசவிசாரணை.

மந்திரியென்னாட்டில் மாதமும்மாரிதான்
மகிழுடன் பொழிகின்றதா ?
மந்திரி.—மகிபனேதடையின்றி காலத்தில்வருஷங்கள்
மாறுமல்பொழி கின்றதே.
மதி.—என்றனதுநாட்டினி லாலயப்பூஜைக
ளினியாய்நடக் கின்றதா ?
மந்.—எந்தையேதடையின்றி பூஜைகள்விதிப்படி
யெங்கணும்நடக் கின்றதே.
மதி.—வந்திடும்பகுதிகள் பாளையக்காரர்தான்
வணங்கியேகொடுக் கிறாரா ?
மந்.—மன்னனேயவரவர்கள் தடையின்றிகப்பங்கள்
மகிழுடன்கட்டு றார்கள்.
மதி.—நந்திதான்வேங்கையின் றுயரின்றிக்ஷேமமாய்
நாட்டினில்வாழ் கின்றதா ?
மந்.—நாதனேகோவினை மியாதுமொருதுயரின்றி
நலமுடன்வாழ் கின்றதே.

(மதி-வ-ம்.) அப்படியா ? மகாசந்தோஷம், எல்லாம் அந்தஜெகதீசனருளல்லது வேறல்ல, அப்பா மந்திரி ! இவ்வாசனத்திலிருப்பாய்.

## கட்டியன் கட்டியம்.

சூரனேசகலகுண வீரனேயெனையாளுந்
தூயனே வெகுபராக்கு
சொல்லொணாநீதியை வழுத்துவோய்சத்யநெறி
தோன்றலே வெகுபராக்கு

தீரனேபகைஞர்மனம் வாடிடவேயம்புதொடு
செய்யனே வெகுபராக்கு
செப்பரியவோமங்க ளெக்கியம்வளர்ந்தோங்க
செயுமரசே வெகுபராக்கு.

மதிதயன் விருத்தம்.

புத்தியிலுயர்ந்தமந்திரி புவிதனையின்னாள்மட்டும்
வித்தியாசங்களின்றி வெகுநீதிசெலுத்திநாட்டில்
சுத்தியேபெருங்கீர்த்தி நான்கொண்டுங்குலம்விளங்க
பத்தினிகெர்ப்பமோங்காப் பாவமேனுரைசெய்வாயே.

(மதி-வ-ம்.) அப்பா மந்திரி? நான் என் தந்தையினுடைய செங்கோலைக் கையிற்றாங்கியது முதல் விதுவனாக்கும் நீதிமானென்றுல கெங்கும் கீர்த்திபெற்றேனேயல்லாமல், என் குலம்விளங்க புத்திரபாக்கிய மில்லாமலிருக்க என்னபாவஞ் செய்தேனோ தெரியாது, இதற் கொரு யோசனை சொல்லுவாயப்பா மந்திரி.

(மந்-வ-ம்.) அப்படியே சொல்லுகின்றேன் சுவாமி.

மந்திரி விருத்தம்.

அண்ணலேயரசேகேளீ ரவனியிலுள்ளதெல்லா
மண்ணலேயதற்கீடாமோ வரன்பதந்துதிப்பீராகி
லண்ணலேயருளிப்பா ரம்மணிகெர்ப்பந்தன்னி
லண்ணலேகுலம்விளங்க வடைகுவீர்பலனைத்தானே.

(மந்-வ-ம்.) ஆண்டவனே? இப்போது நீரடைந்திருக்கும்படியான சகல சம்பத்தும் புத்திரசம்பத்திற் கீடானதல்ல, நீர் பரமசிவத்தைக்குறித்துத்தவஞ்செய்தால், சந்தானமடைவீர் வேந்தனேதடையிரா.

(மதி-வ-ம்.) அப்படியேசெய்கின்றேனப்பா, மதிமந்திரி? இந்தச் சங்கதி யென்னுடைய தேவிக்குத் தெரியப்படுத்துவா யப்பா.

(மந்-வ-ம்.) மஹாபாக்கியம், அப்படியேதெரிவிக்கிறேன்சுவாமி.

மந்திரி விருத்தம்.

ஆரடாகட்டியக்காரா வன்னையின்றன்பாற்சென்று
கூறடாவேந்தன்றானுங் குமாரனைப்பெறவேவேண்டிச்
சீரதாயடவிகிட்டிச் சிவன்பதந்துதிக்கவின்று
போராதுதெரியச்சொல்லி பெட்டெனவழைத்துவாராய்.

(மந்-வ-ம்.) அடா கட்டியனே? நமது ராஜர், புத்திரபாக்கியம் பெறவேண்டி நிமித்தம் பரமனைக்குறித்துத் தவஞ்செய்யக் காட்டுக்கு

ப்போகிறாரென்று, தேவியாருக்குத் தெரிவித்து, ஜாக்கிரதையுடனழைத்துக்கொண்டு வருவாயடா கட்டியனே.

(கட்-வ-ம்.) அப்படியே தெரிவித்து அழைத்து வருகிறேன்சுவாமி.

பொது விருத்தம்.

கொலுமுகத்தில் நடந்தவகை குறைகளின்றிக்
கொப்பெனவே தேவியர்க்குக் கூறவேண்டி
வலுமைபெறு கட்டியனும் ராணிமுன்னே
வழுத்துவான் மந்திரிமுறை செலுத்துவானே.

(பொது-வ-ம்.) சபையோர்களே? மந்திரிசொன்ன வாக்கின்படி கட்டியன் தோழி மந்திரவாகை முன்தோன்றி, சங்கதி தெரிவிக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

கட்டியன் விருத்தம்.

தோழிநீகேளாயிங்கு தோன்றலும் விடநான்வந்தேன்
தாளிணைகாணத்தேவி தன்பரமறிவிப்பாயே.

(கட்-வ-ம்.) தோழி மந்திரவாகையே? கொலுமுகமிருந்து காணவேண்டி நான்வந்திருக்கிறேனென்று, தேவியாருக்குத் தெரிவிப்பாய்.

(தோழி-வ-ம்.) அப்படியே தெரிவிக்கிறேனப்பா கட்டியனே.

தோழி விருத்தம்.

அன்னையேமதிதயேந்திர னன்புறுதேவியம்மா
உன்னையேகாணவேண்டி யுத்தமன்விட்டதாக
மன்னவன்கொலுவைவிட்டே வந்துகட்டியனுந்தாயே
யின்னிமையறிவிக்கத்தா னியம்பினனருள்செய்வாயே.

(தோழி-வ-ம்.) அம்மா? அரசர் யாதோ காரியமாய் விட்டதாக கட்டியக்காரன் வந்திருக்கிறான் தாயே.

(சுங்-வ-ம்) அப்படியா? வரச்சொல்லுவாயம்மா மந்திரவாகையே.

(தோழி-வ-ம்.) நல்லது, புத்தியம்மா, அப்பாகட்டியனே? தேவி உத்தரவாயிற்று, போய்க்காணலாம் தடையில்லை.

(கட்-வ-ம்.) அப்படியா! சந்தோஷம்.—(காணல்.)

கட்டியன் விருத்தம்.

அன்னையேபோற்றி யரசியேபோற்றி
உன்னதகுணமுள வுத்தமிபோற்றி
என்னையாள்தேவி யிறைவியேபோற்றி
மன்னவன்மருவே மலரடிபோற்றி.

(கட்-வ-ம்.) போற்றிபோற்றி யென்தாயே, நின்னடிக்கேபோற்றி.

சுந்தரரோகை விருத்தம்.

வர்ழிகேட்டியனே வந்தவாறதனைத்
தாழ்வின்றியிங்குன சாற்றிடுவாயே.

(சுக்-வ-ம்.) வாழி வாழி, நீ வந்தகாரியந் தெரியச்சொல்லுமப்பா கட்டியனே.

(கட்-வ-ம்.) நல்லது அம்மணி மஹாபாக்கியம்.

கட்டியன் அகவல்.

அன்னையேதாயே யம்மணிகேளாய்
மன்னவன்புத்திர வாஞ்சையால்மீறி
சுரமதிற்கேகிச் சுந்த்ரனைப்பணிந்து
வரமதுபெற்று மைந்தனைப்பெறுக
எண்ணமுங்கொண்டா ரெந்தையுமின்று
வண்ணமாயுனைவர வழைக்கவேயென்னை
பொட்டெனவுரைக்கப் புனிதனுமந்திரி
விட்டனர்வந்தேன் மெய்யடிபோற்றி.

(சுந்-வ-ம்.) அப்படியா! மஹாசந்தோஷம், அப்படியே வருகிறேனப்பா கட்டியனே.

சுந்தரரோகை தரு.

இராகம்-தன்னியாசி. தாளம்-ஆதி.

பல்லவி.

மதிதயன்மாதுவந்தாள் சுந்தரரோகை
மதிதயன்மாதுவந்தாள்.

அநுபல்லவி.

பதிமொழிமீறாத பண்புளோளறமெலாம்
பாரில்சரிநடத்தத் தேறிவிதிதெரிந்த. (மதி)

சரணம்.

அன்னப்பேடினைப்போல வசைந்தநடைநடந்து
அரசன்கொலுவ்வாடி யந்தப்பணியணிந்து
சின்னவிடையுமாடச் செருக்காய்மனைகடந்து
செப்பொணுவாசத்தேமல் திரோகமதிற்படர்ந்து
தன்னுளாந்திரியத்தின் தகைமைமுடியவென்று
எண்ணமனதில்நாட்டி யீசன்பதந்துதித்து
ஏற்றி கணவர்பதம்
போற்றி யருளால்துய
ரோட்டி மாதர்களின்
மேட்டி யெனப்புகழ



இன்புறுநினைவுட னினிச்சுகம்பெருகவே
அன்புடனரசனு மழைத்ததைத்தெரிகவே. (மதி)

சுந்தரரோகை விருத்தம்.

இன்னிலம்புகழ்கொண்டோங்க விமையவர்மகிழ்வுபெய்ய
உன்னதயாகமெக்கிய மோங்கிடநிதியளித்து
கன்னமாபுரியையாளுங் கர்த்தனேயுலகோரேற்ற
நன்னிலைபூண்டபிராண நாதனேநின்றுள்போற்றி

மதிதயன் விருத்தம்,

என்னருங்கிளியேமானே யிச்சென்மக்குறையீடேற
அன்னரும்புத்ரபாக்கிய மடைந்திடவேண்டிநாம்தான்
சொன்னமாஞ்சுரத்திற்கேகிச் சுந்தரனைப்பணியவேண்டும்
அன்னமேயென்றன்கூட அடைவுடன்வருகுவாயே.

(மதி-வ-ம்.) பெண்ணே? நமது குலம் விளங்கச் சந்தானம்பெறுவதற்காகப் பரமசிவனைக்குறித்து, தவஞ்செய்யக் காட்டிற்குப் போகின்றேன், நீயுங்கூட வருவாயடி யென்கண்ணே.

(சுங-வ-ம்.) மஹாபாக்கிய மப்படியே வருகின்றேன் நாதா.

சுந்தரரோகை விருத்தம்,

கணவரோயிதுநாள்மட்டுங் கருதியவென்றனெண்ணங்
கணவரோகூடுங்காலங் கைலைவாழீசன்றானுங்
கணவரோயின்றேயும்முட் காட்டினுன்றுயரம்விட்டேன்
கணவரோவுரியுடுத்திக் கடிகினான்வருகுவேனே.

(சுங-வ-ம்.) சுவாமி? இதுநாள்வரையிலடியாள் மனதிற்கொண்டிருந்த கவலைநீங்க, இன்றுதான் பரமன், தங்கள் மனதிலுதித்தார், அடியாளும் மரவுரிதரித்துக்கொண்டு வருகின்றேன் பிராணநாதா.

(மதி-வ-ம்) அப்படியே செய்வாயடி மாதரசே.

பதிதயன் விருத்தம்,

அப்பனேநீதான்சொன்ன அருமையாம்பரத்தைக்கோரி
யப்பனேயடவிபுக்கி ஐந்தெழுத்துருவையோதி
அப்பனேயபுத்ரனென்னு மபக்யாதிதன்னைநீக்கி
அப்பனேசடுதிவாரே னரசதைக்காத்திடாயே.

((மதி-வ-ம்.) மந்திரி? நீ சொன்னவாறே நானுமென்பத்தினியு மரவுரியுடுத்தி காடுறைந்து, பரமனைக்குறித்து தவஞ்செய்து, மலடனெனும்பேரை மாற்றிக்கொண்டு வருகிறேன், நீ யென் செங்கோலைத்தாங்கி நீதியைக் குறைவின்றி நடத்திவருவாயப்பா மந்திரி.

(மங்-வ-ம்.) மஹாபாக்கிய மப்படியே நடத்திவருகின்றேன், தாங்கள் நற்றவம்புரிந்து கோரிக்கையை யீடேற்றிக்கொண்டு வருவீரென் னுண்டவனே! பரமன் அருள்செய்வார்.

மதிதயன் தரு,

இராகம்-காம்போதி. தாளம்-சாப்பு.

பல்லவி.

வருவாயடிமானே வனத்திற்கேகி
வணங்குவோம் பெருமானை

அநுபல்லவி.

திருநீரணிவோன்றன் சேவடியைத்துதித்து
தருகப்புத்திரபாக்கியம் பெருகவென்னுடன்கூட. (வரு)

சரணங்கள்.

மக்களில்லார்க்குமே நற்பதவி வாழக்கிட்டாதாமே
இக்கனம்பழுதாமே யடைந்ததா லென்னபலனுமே
அக்காலனையுதைத்தோ னடியைப்பணிந்துநாம்
சிக்காப்பொருட்புத்ரன் சீரகப்பெறுவோம். (வரு)

சம்பத்திற்கெலாமேலாந் தரணியிற் றனையனேயதிசீலாம்
உம்பனுலேயடையலாம் எனமந்திரி யுரைத்தனன்போகலாஞ்
சம்போசிவமென்று சதாசிவாவானென்று
அன்பாய்த்தவசில்நின்று அடையமகனையின்று. (வரு)

என்றன்செங்கோலைத்தாங்கி யுலகினி லேற்றநீதியிலோங்கி
உன்றன்கெர்ப்பத்திற்பாங்கி நற்குண பாலனுதிக்கவரம்வாங்கி
சந்ததம்புகழ்பெறத் தரணியோர்மகிழுற
இந்தமலடரெனு மிழிவுமின்றோடற (வரு)

பொது விருத்தம்.

மன்னவனுமங்கையருமிவ்வாறாக
மனமொத்துவுரியுடுத்திமகிழ்வுகொண்டே
தன்னகரைக்கடந்தடவி சேர்ந்துமங்கே
சார்வின்றிநற்சாலை தானுங்கட்டி
யுன்னதமாங்கம்பம்நட்டு சுவாலையேற்றி
யொருமனமாய்த்தானேறி மாலைதாங்கி
கொன்றைமலர்முடிப்பவனை மனதிலெண்ணிக்
கொண்டிட்டான்கால்தூக்கி நின்றிட்டானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாக மதிதயமகாராஜரும் சுந்தரரேகையும் மரவுரிதரித்து, சடைடைந்து, பர்ண்கசாலையியற்றி, பஞ்சாக்கினிமத்தியில் ஸ்தம்பம் நாட்டி, ஒரே நிலையில்மனதைநிறுத்தி உருத்திராக்ஷமாலைத்தாங்கி நாரிபாகனைத்துத்தித்துத் தவஞ்செய்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## மதிதயமஹாராஜன் தபசு.

### அகவல்.

ஓம்நமசிவாயமே யும்பர்கள்துதிக்கு ம்
வாநமசீயனே வருகுவீர்சரண ம்
நித்தியநிராமய நிர்மலரூ பா
சத்தியவேதஞ் சாற்றிடும்நா பா
அரியயன்காணு அருமையாம்பா தா
கரிதனையுரித்த கபாலனேநீ தா
சுடலையிலாடிய சுந்தரமணி யே
இடைபிங்கலைநுனி யிருந்திடுந்த்வனி யே
அஞ்செழுத்தான ஆதியேபர மே
வஞ்சககாலனை வாட்டியதவ மே
ஓங்காரரூபனே யொளியுளமதி யே
றீங்காரநாட்டிய மியற்றியபதி யே
மூத்தியின்முதலே மூலத்தின்பொரு ளே
சத்திபார்வதியாள் தான்மகிழ்தெரு ளே
மழுவதைத்தாங்கு மகாகுண்டல னே
பழுததுநினையாம் பாங்கிமணாள னே
உடுக்கையைத்தாங்கி யுருத்ரனேவிண்ணே ர்
நடுக்கத்தைக்கொய்த நாதனேமண்ணே ர்
ஏற்றிடுங்கோவே யென்மனக்குறை யை
ஓட்டிடவாவே ஓம்நமசிவாய மே
நற்கதிசேர நாதனேவருவா ய்
மூற்பதிக்கரசே மோனனேவருவா ய்
ஆதிசொரூபமே யன்பனேவருவா ய்
ஜோதிச்சுடரே தூயனேவருவா ய்
மூலமேமுதலே மூத்தனேவருவா ய்
ஆலமதுண்ட வையனேவருவா ய்

அமரரைக்காத்த வண்ணலேவருவா ய்
சமரசம்போன்ற சம்புவேவருவா ய்
சத்தினிற்சித்தே சான்றோய்வருவா ய்
வித்தினில்முத்தே விமலனேவருவா ய்
ஈசனேவருவா யிறைவனேவருவா ய்
நேசனேவருவாய் நித்தனேவருவா ய்
தத்துவநிலையின் ருணுவேவருவா ய்
முத்துசாமிப்பணி முதல்வனேவருவா ய்
ஏற்றினேனுன்னை யிங்ஙனவேவருவா ய்
போற்றினேனுன்பதம் புனிதனேசரண ம்.

பரமன் விருத்தம்.

அன்பனேமதிதயேந்த்ரா வரசனேயெனைநீகோரி
இன்பமாயழைத்தவெண்ண மியம்புவாயினிவாய்த்தானே.

(பர-வ-ர்) அப்பனே மதிதயா ? ஈதென்னகாரணம் ? நீ என்னைவருந்தியழைத்த காரியந்தெரியச்சொல்லுவாய் அரசனே.

மதிதயன் விருத்தம்.

சம்புவேபோற்றி சங்கராபோற்றி
அம்புலிதரித்த வண்ணலேபோற்றி
நம்பினேனுன்பதம் நாயகிவயிற்றில்
தெம்புறுபாக்கியஞ் சித்திக்கவருள்வாய்.

(மதி-வ-ம்) ஆண்டனே ? என்குலம்விளங்க ஏன்பத்தினி வயிற்றில் புத்திரசந்தானம்பாலிக்கவேண்டும் பரம்பொருளே.

பரமன் வெண்பா.

உன்றுதிக்கேயான்மகிழ்ந்தே னுன்பத்தினிவயிற்றில்
மன்மதனுக்கண்டோடுங்க மாதொன்று - ஜென்மிப்பாள்
தாலியுடனேகண்டாய் சற்குணனேகண்டவர்க்கே
பாலிப்பாய்பெண்டெனவே பார்.

(பர-வ-ம்) அப்பா இராஜனே ? உன்பத்தினிவயிற்றில் சூரியப்பிரகாசம்போன்ற ஒரு பெண் தாலியுடன்பிறப்பாள், அதைக்கண்டு சொன்னவனுக்கு, அந்தப்பெண்ணை விவாகஞ் செய்துகொடுப்பாய், இந்த வார்த்தையை இரகசியமாய்வைப்பா யப்பாமன்னவனே.

மதிதயன் விருத்தம்.

மான்மழுதரித்தோய்போற்றி மங்கையோர்பாகாபோற்றி
நான்மிகக்களித்தேனுன்ற னல்லடிபோற்றிபோற்றி.

(மதி-வ-ம்) அடியேன் பாக்கியமே பாக்கியம், என்கோரிக்கையீடேறிற்று, தன்னியனானேன் பரமசிவமே.

பரமன் விருத்தம்.

தொண்டனேவாழி தேர்கையேவாழி
யெண்டிசைபுகழ விருக்கநீவாழி.

(பர-வ-ம்) வாழி வாழி மதிதயா, நீ சுபமாயிருக்கவாழி.

மதிதயன் விருத்தம்.

அன்னத்தைப்பழிக்குந்திவ்ய வழகுருமயிலேகேளாய்
பன்னகம்பூண்டஜோதிப் பரமனுமனமகிழ்ந்தே
யின்னகருள்ளோர்மற்றோ ரியம்பிடும்வசையைநீக்க
வுன்னருங்கெர்ப்பமோங்க வுரைத்தனர்போவோம்வாராய்.

(மதி-வ-ம்) பெண்ணே? உனது கெர்ப்பத்தில் பாக்கியமாகும்படி பரமனருள் செய்தார், இனி தேசம்போவோம் வருவாயடிகண்ணே.

(சுந்-வ-ம்) மகாசந்தோஷம் என்பிராணநாதா அப்படியேபோவோம்.

மதிதயன் தரு.

இராகம்-சுருட்டி, தாளம்-சாப்பு.

பல்லவி.

அடியென்மயிலே வாராய் நாட்டிற்கேபோவோம்
அடியென்மயிலே வாராய்.

அநுபல்லவி.

புடவியிற்பழியின்றி போக்கதாம்வரம்பெற்றோம். (அடி)

சரணங்கள்.

புத்திரபாக்கியமிலார்க்கு புண்ணியங்கிடையாதென்றிடும்
சித்திரவாசகமொழிச் செருக்கைத்துடைத்தோமினி. (அடி)
ஆருமெளிதிற்காணு வரனடிதரிசித்தோஞ்
சீருமடைந்தோங்குணச் செல்விபெருவோமினி. (அடி)
கொண்டைக்கருத்திடேறக் கோமான்றன்னருள்பெற்றோம்
அண்டம்புகழுமுன்ற னமரிக்கையோங்குமினி. (அடி)

மதிதயன் விருத்தம்.

அடிமானேசுரங்கடந்தே யழகுறுநமதுநாட்டின்
அடிமானேயெல்லைவந்தோ மைங்கரன்கோயிற்கண்டோம்
அடிமானேயுள்ளேபுக்கி யாதிமூலத்தைப்போற்றி
அடிமானேவிடுதிசேர்வோ மன்புடன்வருகுவாயே.

(மதி-வ-ம்) அடி என்பிராணநாயகி ? நாம் காட்டைவிட்டு நமது நாட்டெல்லைக்குள் வந்தோம், இதோ தோன்றும் கணபதியைத் தரிசிப்போம் வருவாயடி என்சுந்தரமே.

(சுந்-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே வருகின்றேன் பிராணநாதா.

## மதிதயன் விருத்தம்.

அந்தருமாதியான வைங்கரத்தோனேபோற்றி
சுந்தரமூர்த்தியென்ற சுகுணனேநின்றாள்போற்றி
கந்தவேள்முன் னுதித்த கஜமுகாபரனேபோற்றி
சந்ததமெனையுரட்கொள்ளுந் தாணுவேபோற்றிபோற்றி.

(மதி-வ-ம்) ஓம்கணபதியேபோற்றி, மூஷிகவாகனனேபோற்றி, முக்கண்புதல்வாபோற்றி, எட்டிரண்டுமறியா ஏழையேனை யாட்கொண்டு இரக்ஷித்தாளும் கஜமுகனேவென்று மூத்திகொடுத்த காருண்யனே.

(விநாயகர்-வ-ம்) அப்பா பாலகா ? நீயும், உன்பத்தினியும், இனி பிறக்குஞ் செல்வியால் இம்மூவுலகங்களும் ஏற்றி போற்றுதலோடு, உன் செங்கோல், குடிகள்முதலியயாவர்களும் சாதவாழி, யான்போய்வருகின்றேன், இனியாதொருதாக்ஷியில்லை, சுபம்.

(மதி-வ-ம்) புத்திபுத்தி யெனதாண்டவனே, இதோ தாளடிபணிந்தேன், போய்வருவீர்மூலாதாரப்பொருளே, ஆ ! கணபதியே காரும்.

## பொது விருத்தம்.

மன்னவனுந் தேவியரு மூலநாதன்
வளர்கோயிற் புகுந்தவுடன் கண்டநம்பி
நன்னகரை யாள்வேந்தன் வரவைச்செப்ப
நாடியே தூதுவிட வமச்சன்கேட்டே
யன்னகரை யலங்கரித்தே சாற்பதாதி
யனுப்பியே ரதத்துடனே தானும்வந்தே
துன்னவன்ற னடிதொழுவே யரசன்றானுஞ்
சொல்லுவா னவன்சரிதை மெல்லுவானே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? மதிதயராஜனுங் தேவியுங்கோயிற்குள்வரக்கண்ட குருக்கள், தன் தூதனால் தெரிவிக்கக்கேட்ட மதிமந்திரி இரதமுதலிய நால்வகைச்சேனைகளுடன்வந்து அரசரைக்கண்டுபரவசமாகி தொழுதுநிற்க, அரசர் தவத்தாலடைந்தப் பலனைச்சொல்லுகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

மதிமந்திரி விருத்தம்.

வேந்தனேநின்றாள்போற்றி மெல்லியென்றாயேபோற்றி
காந்தனேதவசின்னேர்மை கடையனுக்குரைப்பீர்போற்றி.

(மந்.வ-ம்) ஆண்டவனே! தாங்களடவிபுகுந்து தவமியற்றியதினால் வந்த பலனை என்செவிகேட்க மனம்பூரிக்க அருள் செய்யவேண்டும் நாதா, இதோ போற்றிசெய்தேன், சீக்கிரந் தேவே.

(மதி-வ-ம்) அப்படியே சொல்லுகிறேன் அப்பா மதிமந்திரி.

மதிதயன் தரு.

இராகம்-கல்யாணி, தாளம்-சாப்பு.

பல்லவி.

அமைச்சனேசொல்லக்கேளாய் - அடவிசேர்ந்தே
அடைந்தபலனைக்கேளாய்.

அநுபல்லவி.

நிமைக்குள்நீசெப்பிய நேர்நிலைதனைநாடி
நித்தன்பதத்தைநான் நத்தித்தொழுதவாறு. (அ)

சரணங்கள்.

பஞ்சாக்னிநடு நின்றே கம்பத்தின்மேலோர்
பாதத்தைத் தூக்கிகொண்டே
நெஞ்சாலரனை விண்டே யைந்தெழுத்தோதி
நிர்மலவா வென்றே
கொஞ்சுங்கிளிமொழியாள் கூப்பிக்கையேங்கிநிற்க
அஞ்சுமொன்றாயமைத்தே யரனையழைத்தவாறு. (அ)

ஆதிபரம் பொருளை யெவ்வுயிர்களின்
அங்கத்தில்வாழ் தெருளை
ஜோதிச் சுடாருளை துதியார்க்குத்
தோன்றாப்பெரு மிருளை
கோதிலாமனத்தோனைக் குமரனையீன்றோனை
பாதிமதிபுனைந்த பரனைநினைத்தவாறு. (அ)

மான்மழு விடையேறி முறைக்கிரங்கி
வந்தாரென் முன்தோன்றி
நான்தொழவே கோரி மங்கைகெர்ப்பத்தில்
நங்கைப்பிறக் கத்தேறி
காணுத்தாலியுடன் கண்டவர்க்கேயவளை
பாணிக்ராணமாயீயப் பரமனுரைத்தவாறு. (அ)

மந்திரி விருத்தம்.

என்னருக்கோவேதவே யீசனைக்கண்டுபெற்ற
வன்னையாம்வரத்தைக்கேட்டேன் மனமதுகுளிர்ந்ததையா
வுன்னநுங்குமரியாலே யுலகெலாங்கீர்த்திகொள்வீர்
பன்னவாவினிநடத்தும் வாறெனக்கருள்வீர்போற்றி.

(மந்-வ-ம்) சுவாமி ? யாவராலுங்காணுதற்கரிய அந்தக்கைலாச நாத னைக்கண்டு அப்பரமனால் அடைந்த குமாரத்தியால் இனி உலகமெங் குங்கீர்த்திப்பெறுவீர், இனி நடத்துங்காரியந் தெரிவிக்கவேண்டும் என் அரசர்கோமானே, என்ன பாக்கியம்பெற்றீர் ! ! !

மதிதயன் விருத்தம்.

அப்பனேமதிமிகுந்த வமைச்சனேசொல்லக்கேளாய்
நற்பதிகன்னிதேசம் நாமினிச்சேரவேண்டும்
ஒப்பவேதளத்தையெல்லா மொழுங்கதாய்நிறுத்திபேரி
செப்பவேயறைவாய்நானுஞ் சீக்கிரமுடுத்திக்கொள்வேன்.

(மதி-வ-ம்) அப்பா மந்திரி ? நாம் நாட்டிற்குள் போகவேண்டுமல்ல வா, ஆனதால் சேனைகளைச்சீராக அணிவகுத்துநிறுத்திச் சகலவாத்தி யங்களும் முழங்கச்செய்வாய், நான் உடுத்திக்கொள்ளுகின்றேன் என் அறிவிலுயர்ந்த மதிமந்திரி.

(மந்-வ-ம்) அப்படியே சித்தஞ்செய்விக்கின்றேன் அரசே.

மந்திரி விருத்தம்.

இங்குமுன்னிற்குங்கட்டியா இயம்புவேன்நீதான்சென்று
கங்குல்வந்தணுகாமுன்னங் கடிகியேசேனைதன்னைப்
பொங்குடனணிவகுத்துப் பூரியெக்காளங்கொம்பு
யெங்குமேயதிரப்பேச இனிவுடனறைவிப்பாயே.

(மந்-வ-ம்) அடா கட்டியனே ? நமதரசர் நாட்டிற்குள்பிரவேசிக்கப் போகிறார், ஆனதால் சேனைகளை அணிவகுத்துச் சகலவித மேளவாத் தியங்களுமுழங்கச் செய்வாயப்பா.

(கட்-வ-ம்) அப்படியே செய்விக்கின்றேன் சுவாமி.

மதிதயன் விருத்தம்.

மாதேநாமுடுத்திவந்த மாவுரிநீக்கினாளு
மாதேநந்தொடுஞ்சிங்கார மதிப்புள்வாடைபூண்டு
மாதேநாம்ரதத்தின்மீது மகிழுடனேறியின்றி
மாதேநம்மனைக்கிச்செல்வோ மனக்களிப்புடனேவாராய்.

(மதி-வ-ம்) அடி என்பிராணநாயகி? நாம் அணிந்திருக்கும் மாவுரியை நீக்கி, இல்லறத்திற்குரிய இராஜபணிபூண்டு, இரதமேறி, நமது அரண்மனைச்சேருவோம் வருவாயடி கண்ணே.

(சந்-வ-ம்) மகாசந்தோஷம், அப்படியே நானும் உடுத்திக்கொண்டு வருகிறேன் என் பிராணவல்லபா.

பொது விருத்தம்.

அண்ணலெனு மன்னவனுந் தேவியாரு
மன்புடனே யிரதமேறி யமைச்சர்சூழ
விண்ணவரு மலர்பெய்யச் சுரங்கள்மேளம்
வெகுவாகத் தானொலிக்க நடனமாத
ரெண்ணறுமுத் தாலத்தி பவளக்கும்ப
மெடுத்தேற்ற மறையவர்கள் வேதமோத
நண்ணவரா முனிவர்களு மாசிகூற
நாயகனு மரண்மனைக்குள் நாடினனே.

(பொது-வ-ம்) சபையோர்களே? மதியராஜனும், தேவியும், இரதமேறிவர, நாட்டியப்பெண்கள் முத்தாலத்தி, பவளாலத்தி, எடுக்க வேதமோத, முனிவர்களாசிகூற, அரண்மனைச் சேர்ந்து நீதி வழுவாமல் செங்கோல் நடாத்திவருங்காயிற் தோழி தன்னரசியின் சேதி சொல்லவருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

தோழி விருத்தம்.

ஓதுமறை நான்புக ழுருத்திரன்றானு
முரைத்த வண்ணங் கருதரித்தே யுமதுநல்ல
மாதுபத்னி படிப்படியாய் மாதம்பத்தும்
மகிழுடனே தான்கழித்தே மண்ணின்மீது
தீதொன்று மில்லாம லழகின்மிக்க
திவ்யமகள் தனைப்பெற்று ளின்றுதானே
பாதுகாத்திடு மரசே யடியாட்தானும்
பண்புடனே யிங்குவந்தேன் பகரத்தானே.

(தோழி-வ-ம்) மகாராஜனே? இன்று உமது தேவி, பத்துமாதமுங் கழித்து திவ்யரூபம்போன்ற பெண்ணைப்பெற்றாள், அதுசேதியறிவிக்கவந்தேன் சுவாமி.

மதியன் விருத்தம்.

மந்திரியெனக்கேயின்று மகள்தானும்பிறந்ததாலே
மந்திரிவேணதெல்லா மகிழுடன்தானமீவாய்

மந்திரிபுத்திரிக்கே வழங்கிடப்பேரைக்கேழ்க்க
மந்திரிசாஸ்திரிதன்னை வரச்செய்வாயினிவாய்த்தானே.

(மதி-வ-ம்) அப்பா மந்திரி ? என்னபாக்கியம்பெற்றேன் ! இன்றல்லோ அபுத்திரனென்னும் வசை நீங்கிற்று, இனியின்புற்றேன், அதாவது பரமனளித்த வரத்தின்படி எனக்கு மகள்பிறந்ததாகத் தோழிமூலமாய்த்தெரிந்தமடியால், இப்போதே நீ பாத்திராபாத்திரமறிந்து உனதிஷ்டம்போல் வேண்டியதானங்கள் கொடுப்பதோடு குழந்தைக்கு நாமகரணஞ்செய்யவேண்டியிருப்பதால் சாஸ்திரியை வரவழைப்பாய் மதிமந்திரி.

(மந்-வ-ம்) அப்படியா ! மகாசந்தோஷம் ! அரசே? என்னமங்களகரமானசேதி யும்மால் கேள்விப்பட்டேன் ! இன்றுடெங்கும் இவ்வாறேயிருக்குமென எண்ணுகிறேன், இனிதங்களுத்தரவின்படியே செய்விக்கின்றேன் சுவாமி.

## பொது விருத்தம்.

சாஸ்திரியையழைக்கவென்று வேந்தன்கூறுனுஞ்
சாத்திடவு மசரீரி தோன்றியங்கே
நேத்தியுள்ள மகள்தனக்கே பலருங்கேழ்க்க
நிகழுவாள் பேரதனைப் புகழுவாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இராஜன் தனக்குப்பிறந்தபெண் குழைந்தைக்குப் பேரிட சாஸ்திரியையழைக்கச் சொன்னவுடனே ஆகாயவாணி அசரீரியாய்த்தோன்றி சொல்லுகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## ஆகாயவாணி விருத்தம்.

அப்பனேமதிதயேந்திரா அன்பனேயுரைக்கக்கேளாய்
இப்போநீயருட்சிவத்தா லீன்றநற்புத்ரிக்கேதான்
செப்பவேயுலகோரெல்லாந் திகழ்பெறக்களிகொண்டோங்க
வொப்ப *சந்திரவதியென் றகந்துபேரிடுவாய்மன்னா.

(ஆகா-வ-ம்.) மதிதயனே ! நான் ஆகாயவாணி, அப்பா உன்மகளுக்கு உலகத்தாரெல்லாம் புகழும்படியாகச் சந்திரவதியென்று பேரிட்டழைப்பாய் வேந்தனே, யான்போய்வருகின்றேன் வாழி வாழி.

(மதி-வ-ம்) அம்மா ஆகாயவாணித்தயே ? மஹாபாக்கியமப்படியே பேரிட்டழைக்கின்றேன் போற்றி போற்றி அம்மணி, போய்வருவாய்த்தாயே.

---

* சந்திரவதி யென்பது சந்திரமதி யெனவும் பாடம்.

## மதிதயன் விருத்தம்.

மந்திரியாகாயவாணி வழுத்தியவாறுபோல
வெந்தனல்மகள்தனக்கே யிதுமுதலுரைக்கக்கேளாய்ச்
சந்திரவதியாளென்று சாற்றியேயழைக்கவேண்டு
மிந்தநன்னுமத்திற்கே யென்மனங்களித்தேனப்பா.

(மதி-வ-ம்.) அப்பா மந்திரி? இன்றுமுத லெனது புத்திரிக்கு சந்திரவதியம்மாளென்று பெயரிட்டழைக்கச் செய்வாயப்பா மதிமந்திரி

(மந்-வ-ம்.) அப்படியேஅழைக்கச்செய்விக்கின்றேன்மஹாராஜனே

## பொது விருத்தம்.

இந்தவிதம்பெயரிட்டே யழைக்கமாது
இரவிமதிபோற்ஜொலித்து நாட்குநாளாய்
சுந்தரத்திலதிகரித்தே யறிவிலோங்கிச்
சொல்லொணுநீதிமுறை யனைத்துமோதி
மந்திரமாம்வேதநெறி தானும்பார்த்தே
வாழ்க்கையினுள்நுட்பமெலா மடங்கக்கற்று
சந்திரவதிபருவமது அடையக்காலந்
தான்கொண்டாளினிச்சரிதை நான்சொல்வேனே.

(பொது-வ-ம்.) சபையோர்களே! சந்திரவதி அம்மன், நாளொருமேனி பொழுதொருவண்ணமாய் வளர்ந்து, சகல நீதி, நெறி, ஒழுக்கமுங் கற்று, பருவமடையுங்காலங் கொண்டாளென் றறிவீர்கள் கனவான்களே.

## மதிதயன் விருத்தம்,

என்னிடமகட்தானிப்போ வெய்திடப்பருவகாலம்
நன்மையாய்க்கிடைக்கும்போல நான்கண்டேனுனதாலே
யின்னகர்சில்ப்பிமாரை யிக்ஷணமழைப்பித்தேதான்
கன்னியமாடமொன்றைக் கடிகினில்முடிப்பிப்பாயே.

(மதி-வ-ம்.) அப்பா மந்திரி? என்மகளாகிய சந்திரவதியம்மன், பருவமடையக்காலமானதால், சில்ப்பியையழைத்து ஒருதிவ்ய அரண்மனை முடிப்பிப்பாய் மந்திரி.

(மந்-வ-ம்.) அப்படியே கட்டிமுடிப்பிக்கின்றேன் மஹாராஜனே.

## மந்திரி விருத்தம்.

கட்டியக்காராநீதான் கடிகியேசென்றுமாடங்
கெட்டியாயிருக்கவிந்தக் கெடிதலமதனிலெங்குங்

கிட்டாதிருக்கும்வாறு கிரமமாய்முடிக்கவேண்டி
பொட்டெனச்சுப்பாச்சாரி புனிதனையழைத்துவாராய்.

(மங்-வ-ம்.) அடா கட்டியனே? நமதுஇராஜாவின் குமாரத்திவசிக்க வேண்டி கன்னிகாமாடங்கட்ட சில்ப்பியாகிய சுப்பாச்சாரியை அழைத்துவருவாயடா கட்டியனே.

(கட்-வ-ம்.) அப்படியே யழைத்துக்கொண்டு வருகின்றேன் சுவாமி

## கட்டியன் விருத்தம்.

க்ஷேத்திரமியற்றுமார்க்கத் திறமையிலுயர்ந்தசுப்பா
சாத்திரியாரேவேந்தன் தானழைத்திட்டார்வாரீர்.

(கட்-வ-ம்.) ஐயா சுப்பாச்சாரியரே? உம்மை யெங்களரச னழைத்தனர், வாருஞ் சில்ப்பியே.

(சில்-வ-ம்.) அப்படியே வருகின்றேனப்பா கட்டியனே.

## சில்ப்பி தரு.

இராகம்-மோகனம். தாளம்-ஆதி.

பல்லவி.

சுப்பாச்சாரிவந்தான்	சில்ப்பியெனுஞ்
சுப்பாச்சாரிவந்தான்.

அநுபல்லவி.

இப்பாருலகினி லிணையொருவ	னெனக்கு
இல்லையெனவேசாத்திரச்	சொல்லைவாயால்படிக்குஞ். (சுப்)

சரணம்.

பீஜகணிதமறி	வோன் - பாதாளமட்டும்
பெருகும்வஸ்த்துக்கள் தெரிவோன்
சாஜமென்பது	மறிவோன் - சிருட்டிக்கமனை
தாழுறுவிடமுந்	தெரிவோன்
நேசமாய்க்குடிபோவோர்	நீடூழிகாலம்வாழ
நிகழ்மனைநிலையோக	நேர்மைப்படியியற்றி
நித்தமுமானந்த	மெத்தவுமோங்கிட
வுத்தமநினைவுடன்	சுத்தமாமாளிகை
நீட்டி யக்கினிவள	மோட்டி யுதயபரங்
காட்டி வடவளவை	வாட்டி கதிரோனேட்டம்
பெருகவே சுகமது	வருகவே சகலமுந்
தருகவே பகைவரு	மருகவே மனைகோலுஞ்	(சுப்)

சில்ப்பி விருத்தம்.

கன்னமாபுரியையாளுங் கையனேயதிவுல்லாச
வுன்னதகுணனேதான முதவிடும்பரனேயென்னை
மன்னனேயழைத்தவாறு வழுவறவுரைத்தால்நானே
பின்னகர்மதிக்கச்செய்வே னெந்தையேபோற்றிபோற்றி.

(சில்-வ-ம்.) போற்றி போற்றி தேவனே? அடியேனை யழைத்தகாரியந் தெரிவிக்கவேண்டுஞ் சுவாமி.

மதிதயன் விருத்தம்.

கன்மமுஞ்சூதும்வாதுங் கமெனம்படைத்தோர்காணு
வன்பனும்விடைவெண்ணேக்கு மரனருளதனல்வந்த
வென்மகள்பருவங்கொள்ள விசைந்தனளவள்வசிக்க
நன்மையாமாடமொன்று நலமுடன்முடித்திடாயே.

(மதி-வ-ம்.) அப்பாசில்ப்பாச்சாரி? என்னருமைமகளிருக்கவேண்டியொருதிவ்வியமான கன்னிகாமாடங்கட்டி முடிப்பாயப்பாசில்ப்பியே.

(சில்-வ-ம்.) மஹாபாக்கியம் அப்படியே முடிக்கின்றேன்வேந்தனே.

(கட்டிமுடிந்தவுடன் அரசனிடம்வந்து அறிவித்தல்)

சில்ப்பி விருத்தம்,

அரசரேநீர்தான்சொன்ன வாக்கினைப்படியேயானும்
அரசரேயுமதுபுத்ரி யன்புடன்வாழவேண்டி
அரசரேதிவ்யமான வரண்மனைமுடிவுசெய்தேன்
அரசரேயினிமேலென்ன லாவதையுரைசெய்வீரே.

(சில்-வ-ம்.) இராஜபரமேஸ்வரா ? உமது மகள் வாசஞ்செய்ய திவ்விய அரண்மனை கட்டி முடித்தே னினிமே லென்னலாகவேண்டியதை அருள்செய்வீர் வேந்தனே.

(மதி-வ-ம்,) மஹாசந்தோஷமப்பா சுப்பாச்சாரி, மந்திரி ? சில்ப்பி நமதுத்திரவின்படி கட்டிமுடித்த அரண்மனையைப் பார்த்துவருவோம் வருவாயப்பா பாலகா.

(மந்-வ-ம்.) அப்படியே வருகின்றேன் சுவாமி.

(மதி-வ-ம்.) அப்பா சில்ப்பியே ? நீ கட்டியிருக்கு மரண்மனையினுடைய வளப்பத்தை விபரமாகச் சொல்லிக் காட்டுவாயப்பா.

(சில்-வ-ம்.) அப்படியே யென்னாண்டவனே.

## சில்ப்பி தரு.

இராகம்-இந்துஸ்தான் செஞ்சுருட்டி, தாளம்-ஆதி.

பல்லவி.

கட்டினேனே பாராய் மன்னுமனை கட்டினேனேபாராய்,

அநுபல்லவி.

இட்டமுடனெனக்கு இயம்பியவாறு போல. (கட்)

சரணங்கள்.

குட்டிக்கரணம்போட்டுக் கொண்டாலும்வேறொருவர்
குணத்திற்கமையாதெனக் கொள்வோர்பெரியோர்வேந்தே (கட்)
சிங்காரவளவதுஞ் சீர்செயுமாளிகையும்
மங்களமாய்நீராடும் மடமுந்துயிற்கூடமும் (கட்)
தாதிவளாவுங்கன்னி தானருந்துமறையுஞ்
ஜோதிவொளியாய்மின்னுஞ் சொல்லொணுஜாரமும் (கட்)
வண்டகசாலையும் மலர்வாவிதோட்டமுங்
கண்டவர்வினைவாட கனத்தமேல்மாடமும் (கட்)
காலையுபாதிபோக்கக் களிம்புருச்சிற்றறையும்
வேலையொத்தவிழியாள் விளையாடநல்மனையும் (கட்)
தந்தைதாய்வந்திடற் றங்கிடமாளிகையுங்
கந்தகஸ்தூரிபூசக் கதம்பச்சாவடியிங்கே. (கட்)

## மதிதயன் விருத்தம்.

மந்திரிசில்ப்பிதானு மகிழ்பெறமகள்வசிக்கச்
சுந்தரமனைதானென்று சொகுசுடனமைத்ததற்காய்ச்
சந்தமனங்களிக்கச் சாற்றொணுப்பொன்பட்டாடைத்
தந்தனுப்பிவொய்நீயுந் தாமதமின்றியப்பா.

(மதி-வ-ம்) அப்பா மந்திரி? என் புத்திரிக்காகத் திவ்வியமான மாளிகை கட்டிமுடித்த சுப்பாச்சாரிக்கு வேண்டிய வெகுமதி கொடுத்தனுப்புவாயப்பா மந்திரி,

(மந்-வ-ம்.) அப்படியே கொடுத்தனுப்புகின்றேன் சுவாமி.

## சில்ப்பி விருத்தம்.

வேந்தனேமந்திரிதானு மிகவிலையுயர்ந்தவாடை
வேந்தனேபணியும்ரத்ன மிகுதியாயளிக்கப்பெற்றேன்
வேந்தனேயுனைப்போல்தியாகி வேறுண்டோவுலகில்நாதா
வேந்தனேநீயுஞ்செங்கோல் விநோதமிச்சபையும்வாழி.

(சில்-வ-ம்.) மஹாராஜனே? மந்திரி யடியேனுக்கு, விலையுயர்ந்த பட்டாடைகள், பொன்பணிகள், நவரத்தினங்களும் அப்ரிமிதமாய்க் கொடுக்கப் பெற்றுக்கொண்டேன்; நீரும் உமது செங்கோலும், இந்த விநோதசபையுஞ் சதாவாழிவாழி பூதேவனே.

மதிதயன் விருத்தம்.

மதிதனிலுயர்ந்தவென்றன் மந்திரியுரைக்கக்கேளாய்
நதியணியுமையாள்பாகன் நல்கியவரத்தாற்பெற்ற
விதிமுறையுணர்ந்தபுத்ரி வீற்றிடமனையுமாச்சிப்
பதியினிலாரோசொல்வாய்ப் பாங்கியாயமைக்கத்தானே.

(மதி-வ-ம்.) அப்பா மந்திரி? எனது புத்திரிக்காகத் திவ்விய அரண்மனையுங் கட்டிமுடிவாயிற்றல்லவா: இனி சந்திரவதிக்கு யாரைத் தோழியாக நேமிப்பது? யோசித்துரைப்பாய் மதிமந்திரி.

(மந்-வ-ம்.) அப்படியே உரைக்கின்றேன் மஹாராஜனே.

மந்திரி விருத்தம்.

அய்யனேயரசேயென்னை யாண்டிடுங்கோவேநீதி
மெய்யனேமந்திரவாகை மேவியீன்றெடுத்தமாது
துய்யநன்னடையொழுக்குஞ் சுருதிநேரறிவுபுத்தி
பொய்யதுமுரையாள்சந்திர பூவைக்கேதோழிசெய்வீர்.

(மந்-வ-ம்.) மஹாராஜனே? தோழி மந்திரவாகையின் புத்திரியாகிய சவுந்தரவல்லி, மெத்தவும் புத்தியுடையவள், நல்லநடக்கையாள், விவேகி, நீதியறிந்தவள்; ஆதலால் சந்திரவதியம்மனுக்குத் தோழியாக அமைப்பது நலமென்றுண்டவனே.

மதிதயன் விருத்தம்.

மந்திரிசுந்த்ரதேவி மகிழுறுதோழியான
மந்திரவாகைதன்னை வரச்செய்வாய்விரவிற்றானே.

(மதி-வ-ம்.) அப்படியானால் எனது தேவியின்தோழியாகிய மந்திரவாகையை யிங்குவரவழைப்பாய் மதிமந்திரி.

(மந்-வ-ம்) அப்படியே வரச்செய்விக்கின்றேன் வேந்தனே.

மந்திரி விருத்தம்.

கட்டியக்காராநீதான் கடிகிப்போய்தேவிதோழி
யிட்டிங்குவருவாயப்பா விறைவன்சொற்படிக்குத்தானே.

(மந்-வ-ம்.) அடா கட்டியனே? விரைவாய்ச்சென்று நமது இராஜ

பத்தினியின் தோழியாகிய மந்திரவாகையைக் கூட்டிக்கொண்டு அதி சீக்கிரம் வருவாயடா கட்டியனே.

(கட்-வ-ம்) அப்படியே யழைத்துக்கொண்டு வருகின்றேன்சுவாமி.

## கட்டியன் விருத்தம்.

மந்திரவாகையம்மா மன்னனுமுனையேயிப்போ
வந்திடவழைத்தார்நீயும் வருகுவாய்கடுகிற்றுனே.

(கட்-வ-ம்) அம்மாமந்திரவாகையே? உன்னை அரசனழைத்துக்கொண்டு வரச்சொன்னுர் வருவாயம்மா தடைசெய்யப்போகாது.

(மந்திர-வ-ம்.) அப்படியே வருகின்றேனப்பா கட்டியனே.

## மந்திரவாகை தரு.

இராகம்-சுருட்டி. தாளம்-ஆதி.

பல்லவி.

மந்திரவாகைவந்தாள் மதிதயன்றேவியி னதிமகிழ்தங்கிய

அநுபல்லவி.

அந்தியிருளையெங்கு மகற்றுங்குணமுடைய
சந்திரனொளிபோலத் தான்முகக்காந்திகொண்ட. (மந்)

சரணம்.

தேசங்கள்களிப்புற செங்கோல்கரத்திற்றுங்கி
திவ்வியவோமவெக்கியந் திசைகளில்வளர்ந்தோங்கி
நேசனுய்பரமத்தி னெறியையமனதில்நாளும்
நினைந்தேநீதிசெலுத்தி நிகராய்ப்புவியையாளும்
நிருபனழைத்தசேதி தெரியவணங்கிமனப்
பெருமையுடனேராஜன் பேணுங்கொலுவைநாடி. (மந்)

## மந்திரவாகை விருத்தம்,

மன்னனேபோற்றி மகிபனேபோற்றி
மென்னையேயழைத்தவா றியம்புவீர்போற்றி.

(மந்திர-வ-ம்.) போற்றி போற்றி மஹாராஜாவே; என்னையழைத்த காரியந் தெரியப்படுத்தவேண்டுஞ் சுவாமி.

## மதிதயன் விருத்தம்.

பாங்கியேயுரைக்கக்கேளாய் பத்தினியின்றபுத்ரி
பாங்கியேபருவகாலம் பண்புடனடைந்ததாலே
பாங்கியேயுனதுதிவ்விய பாவையைத்தோழியாகப்
பாங்கியேயமைக்கவேண்டி பற்றிநானழைத்தேன்காண்பாய்.

(மதி-வ-ம்.) பெண்ணே மந்திரவாகை? எனது புத்திரியாகிய சந்திரவதியம்மாள் பருவமடையுங் காலமானதால், புதியதாய்க் கட்டிய கன்னியாமாடத்தி லிருத்தப்போகிறேன், உன்மகளைத் தோழியாகவைக்கக் கருதியழைத்தே னறிவாய்மாதே.

(மந்திர-வ-ம்.) மஹாபாக்கியம், என்கோரிக்கையும் அதுதான் சுவாமி, சித்தத்தின்படிநடத்த அடியாள் தடைசெய்வதுமுண்டோ என்றுண்டவனே.

மதிதயன் விருத்தம்.

தோழியுமிசைந்தாளின்று சுபதினமானதாலே
நாழிகைகடவாமுன்னம் நல்மனைபுகவேவேண்டும்
காழியோன்றனையளித்த கயிலைவாழ்கடவுள்பாதம்
வாழியென்றடுத்தேபெற்ற வரபுத்ரிவரச்செய்வாயே.

(மதி-வ-ம்.) அப்பா மந்திரி? இன்றையதினஞ் சுபதினமாகையால், புதியதாய்க்கட்டிய அரண்மனைக்கு என்மகளை யனுப்பித்துக்கொடுக்கவேண்டும், ஆகையால்காலம்போகாமுன்னஞ்சந்திரவதியை வரவழைப்பாயப்பா மந்திரி.

(மந்-வ-ம்.) அப்படியே வரவழைக்கின்றேன் ஆண்டவனே.

பொது விருத்தம்.

மன்னவனும்வரவிட்ட சேதிகேட்ட
மாதுசுந்த்ரரேகையரு மகளைநல்ல
உன்னதமாய்த்தானுடுத்திப் பணிகளிட்டு
உம்பர்களும்மன்னர்களு மகிழ்கொள்ள
சின்னமுடன்பலமேள மொலிக்கமுத்துச்
சிவிகையினிற்றுனேற்றிச் செலவுமீயத்
துன்னவன்வாழ்நற்சபையிற் சந்திரவதி
சொகுசுடனேவந்திறங்கித் தோன்றுவாளே.

(பொது-வ-ம்.) சபையோர்களே? இராஜனழைத்தசேதி கேட்டவுடன் தாயாருஞ் சந்திரவதியைச் சிங்காரித்து முத்துச்சிவிகையிலேற்றியனுப்ப, சகல வாத்தியத்தொனியுடன் இராஜசபைக்கு வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

பாலசந்திரவதி தரு-இங்கிலீஷ்நோட்.

வாலைசந்திரவதியிதோ வந்தாள்நாடியே
சாலமனமகிழுடன் சாரத்தேடியே

முகடோசந்திரபிம்பந்தலை முடிகருமேகம்
ஜகமயங்கும்விழியகல்போற் றுவிடபோகம் (வா)
நாசிகுமிழ்மாற்றுங்கொங்கை நாடுமேகிம்பை
ராசிதுடையடிவாழை நாணவேரம்பை (வா)
மூனும்பிறைபோலநெத்தி முத்தெனத்தந்தம்
காணுக்குயிலொலிவுடல் காட்டுமேயந்தம். (வா)
மாதோவன்னப்பேடுநடை மயிலையேவாட்டும்
ஏதோயிவளெனப்பேச இருகைகள்காட்டும் (வா)
காயாம்பயிர்விரல்புரி கழுத்துமேவோங்க
வாயாமிதழ்கோவைமலர் வாசனைவாங்க. (வா)

## சந்திராவதி விருத்தம்.

எந்தையேபோற்றிபோற்றி யீசனார்தன்பதத்தை
விந்தையாய்ப்பணிந்தேயென்னை வேண்டியீன்றெடுத்தநல்ல
தந்தையேயடியாடன்னைத் தானிங்கேயழைத்தவாறைச்
சிந்தைநீர்குளிர்ந்தெனக்கே செப்புவீர்நின்றாள்போற்றி.

(சந்-வ-ம்.) அருந்தவஞ்செய்து என்னைப்பெற்ற தந்தையே? என்னை யழைத்தகாரியந் தெரியச்சொல்லவேண்டும் பிதாவே.

## மதிதயன் விருத்தம்.

அன்னமே யரன்றவத்தாற் பெற்றெடுத்த
அற்புதமே செழுந்தேனே கதலிமாவே
சொன்னமே செண்பகமே மருக்கொழுந்தே
சொல்லொணாக் கற்பகமே சுகிர்தமானே
நன்மையுள நீதிமொழி யறிந்தவெந்த
னயகமே விலைமதியா நாகரத்ன
வென்மகளே திவ்வியமனையுனக்கிணைத்தே
னேகுவாய் தோழியுடன் வாழ்குவாயே.

(மதி-வ-ம்.) அம்மா என்னருந்தவப்பொருளே? உனக்காக வொரு சொகுசுள்ளமாளிகை கட்டிமுடிந்தது; இன்று சுபதினமானதாற்றோழியுடன்சென்று சுகமாய் வசிப்பாயம்மா கண்மணியே.

(சந்-வ-ம்) அப்படியே போய்வாழ்கின்றே னென்பிதாவே.

## மதிதயன் விருத்தம்.

மந்திரியென்மகட்காய் மஹாவிந்தையாய்முடித்த
சுந்தரமாளிகைக்கே சொகுசுறுகிள்ளையோடு

பந்துவம்மானைரங்கம் பலகைக்காயெலாமமைத்தே
யிந்தநற்கடிகைதோழி யிங்குமேவரச்செய்வாயே.

(மதி-வ-ம்.) அப்பா மந்திரி ? என்மகளுக்காகக் கட்டிய அரண்மனை யில கிளி, பந்து, அம்மானை, சதுரங்கம், பள்ளாங்குழிமணை காய்கள் முதலானவைகளை அமைத்துச்சீக்கிரத்தில் மந்திரவாகையின்மகளையு மழைப்பிப்பாயப்பா மதிமந்திரி.

(மந்-வ-ம்) அப்படியே அழைப்பிக்கச்செய்கிறேன் மஹாராஜனே.

## மந்திரி விருத்தம்.

கட்டியக்காரா பொட்டெனவோடி
கிட்டியேதோழியை யிட்டுநீவருவாய்.

(மந்-வ-ம்.) அடாகட்டியனே ? சீக்கிரம்போய் தோழி மந்திரவாகை மகளாகிய சவுந்தரவல்லியை யழைத்து வருவாயப்பா வீரனே.

(கட்-வ-ம்.) அப்படியே யழைத்து வருகின்றேன் சுவாமி.

## கட்டியன் விருத்தம்.

ராணியின்றோழியான நற்குணமந்திரவாகா
பூணியுன்மகளைராஜன் பொட்டெனவழைத்ததாலே
வீணிலேகாலந்தன்னை மேவியேகழிக்கப்போகா
வீணிலம்புகழவென்பின் னினீவுடனனுப்புவாயே.

(கட்-வ-ம்.) அம்மா மந்திரவாகை ? உன்மகளை நமது இராஜர்சீக்கிர மழைத்துக்கொண்டு வரச்சொன்னா ரனுப்புவா யம்மா.

(மந்திர-வ-ம்.) அப்படியே யனுப்பித்துக் கொடுக்கிறேனப்பா கட்டியனே.

## மந்திரவாகை விருத்தம்.

என்னருமகளேயுன்னை யிறைவனுந்தன்மகட்கே
உன்னருந்தோழியாக வுகந்துமேயழைப்பதாலே
அன்னமேநீதான்சென்றே யகமதிற்புகழ்கொண்டாட
துன்னவன்சொற்படிக்கே சோர்வின்றிநடப்பாய்கண்ணே.

(மந்திர-வ-ம்) அம்மா என்னருமைமகளாகிய சவுந்தரவல்லி ? இரா ஜன்மகள் சந்திரவதியம்மாளுக் குன்னைத் தோழியாக நேமிக்க நமது வேந்தனழைப்பதால், நீயிசைந்து அரசனுக்கிணைப்படி நடந்து கீர்த்தி பெறுவா யென்கண்மணியே.

(சவுந்-வ-ம்) புத்தி தாயே ? அப்படியே நடந்துகொள்கிறேன்.

## சவுந்தரவல்லி தரு.

இராகம்-சாரங்கா. தாளம்-ஆதி.

பல்லவி.

தாதிசவுந்தரவல்லிவந்தாள் - சந்திரவதி
தாள்பணிநடப்பேனென்றே.

அநுபல்லவி.

பேதியாமனத்துடனே யோதிடுமொழிப்படிக்கே
பாதுகாத்தரசன்மகள் பணிவிடைசெய்வேனென்று (தாதி)

சரணம்.

கோடிமதிகள்கும்பாய்க் கூடிவந்தவாறுபோல்
குளிர்ந்தமுகமுமேனி கோரில்கிட்டாவழகும்
தேடிவருந்திடினுஞ் சிக்காதசற்குணமுந்
தேஜசநடக்கையுந் திகழ்நீதிமுறைமையும்
பாடிப்படிப்பதிலும் பண்புறுகுணவந்தி
பத்தினிமார்க்கேற்ற பணிசெய்விதரணமு
நாடியரசன்கொலு நங்கைமந்திரவாகை
நலமுடனீன்றெடுத்த பலகலையுணர்மாது
நண்புடன்நன்மனத் தென்புடன்வேந்தனுக்
கின்புடனடந்திட வன்புடனிதோவிதோ
நாயகிதன்னையே தாயகம்போலவே
காயந்தனில்நினைந் துபாயவழிதெரிந்த (தாதி)

## சவுந்தரவல்லி விருத்தம்.

வேந்தனேநின்றாள்போற்றி விமலனேயெனையழைத்த
சாந்தனேசேதிதன்னைச் சாற்றுவீர்போற்றிபோற்றி.

(சவுந்-வ-ம்.) போற்றிபோற்றி ஆண்டவனே, எனையழைத்தகாரியந் தெரியச்சொல்லவேண்டுஞ் சுவாமி.

## மதிதயன் விருத்தம்,

மந்திரவாகைபெற்ற மகிழுறுமாதேகேளா
யெந்தனன்மகளுக்குன்னை யிதுமுதற்றோழியாக
சந்திரவதியாளோடு தான்சேர்ந்துமாளிகைக்கே
வந்திடாதேதுந்தோஷம் வகையுடன்காப்பாய்த்தானே.

(மதி-வ-ம்.) அம்மா சவுந்தரவல்லி? என்னருமைமகளாகிய சந்திரவதியம்மாளுக்கு, நீ தோழியாக இருந்து, இப்போது கட்டிய புதிய

அரண்மனைசேர்ந்து யாதொருதோஷம் நேரிடாமல் பாதுகாத்து வருவாய் சவுந்தரவல்லியே, இனிநானொன்றுஞ்சொல்லவேண்டுவதில்லை.

சவுந்தரவல்லி விருத்தம்,

எங்களாண்டவரேநீர்தா னியம்பியவாக்குமீறேன்
எங்களாண்டவரேயாது மிழிவின்றிநடந்துகொள்வேன்
எங்களாண்டவரேதாங்க ளீன்றபுத்திரியைக்காப்பேன்
எங்களாண்டவரேதோகை யிணையடிபணிசெய்வேனே.

(சவுந்-வ-ம்.) சுவாமி ! தங்களாக்கினைமீறேன், சந்திரவதியம்மாளுக்கு யாதொரு குறைவுநேரிடாமல் காத்து, அந்த அம்மாள் பணிவிடையைப்புரிந்து வருவேனாண்டவனே.

(மதி-வ-ம்) மெத்த சந்தோஷம், என்மகளை யழைத்துக்கொண்டு புதிய அரண்மனைக்குப் போவாய் பெண்ணே சவுந்தரவல்லி.

(சவு-வ-ம்) அப்படியேயழைத்துக்கொண்டு போகின்றேன் சுவாமி

சவுந்தரவல்லி தரு,

இராகம் - காம்போதி. தாளம்-ஆதி.

பல்லவி.

போவோம்வருவா யன்னமே - அரண்மனைக்கே
புகழ்பெருகுஞ் சொர்னமே - சந்திரவதியே.

அநுபல்லவி.

காவலன்தவஞ்செய்ய கைலையனருள்தர
கருவாயுதித்துவந்த மருவேமருக்கொழுந்தே (போ)

சரணம்.

நற்குணநிறை வாவியே - மாதர்களில்
சற்குணமுடைய தேவியே
அற்புதவொளிவாந் தீவியே - எளிதிற்கிட்டா
கற்பகசன்மன ரூபியே
சர்ப்பசயனன்காணுஞ் சுவாமிகொடுக்கவந்த
தாயேயென்னுடனிப்போ வாயேநாம்வாழ்மனைக்குச்
சாரவுலகநடை தேறநல்லொழுக்கத்தில்
மீறதேசத்தோருனைக் கூறவுத்தமியென்று
செப்பருகலைவிதி தினந்தினமோதுவோம்
ஒப்பவேபலவகை யுவந்துநாமாடுவோம் (போ)

## பொது விருத்தம்.

வேந்தனுமுரைக்கக்கேட்டே விந்தையாய்சவுந்தரவல்லி
சாந்தமாங்குணத்தைப்பூண்ட சந்திரவதியாளோடே
காந்தமாந்தோழியாகக் கடிகியேமாளிகைக்குள்
வாய்ந்தனளினிநடக்கும் வகையறிவீர்கள்தாமே.

(பொது-வ-ம்.) சபையோர்களே ? சந்திரவதியுந் தோழி சவுந்தரவல்லியும், புதிய அரண்மனைச்சேர்ந்தார்கள், இனிநடக்கும் வாறறிவீர்கள் கனவான்களே.

## சவுந்தரவல்லி விருத்தம்.

கருமணற்குழலியான கண்மணியுமதுபுத்ரி
பருவமதாளுளின்று பாலைபோய்மங்கையென்றே
சருவருமழைக்கலானுள் சற்குணபதியேநாதா
தருமனேசடங்குசெய்யத் தானறிவிக்கவந்தேன்.

(சவுந்-வ-ம்.) மஹாராஜனே ? உமது திவ்வியபுத்திரியின்று புஷ்பவதியானுள், சடங்குகள் நடத்தவேண்டுமாதலால் தெரிவிக்கவந்தேனுண்டவனே.

(மதி-வ-ம்.) சந்தோஷம் சந்தோஷம், அப்படியே நடப்பிக்கச்செய்கின்றேன் பாவாய்.

## மதிதயன் விருத்தம்.

மந்திரிதோழிசொன்ன வாறுநீயறிந்ததாலே
மந்திரிபக்ஷமொன்று மகாசடங்கதையியற்ற
மந்திரிவேணதெல்லா மட்டின்றியமைத்தேயப்பா
மந்திரியனைநொடிக்குள் மகிழுடனனுப்புவாயே.

(மதி-வ-ம்.) அப்பா மந்திரி ? என்னருமைமகள் புஷ்பவதியானதிற்காகச் சடங்குகள் நடத்தவேண்டியவைகளைச் சேகரித்தனுப்புவாயப்பா ! சீக்கிரம் காலதாமதஞ் செய்யப்போகாது.

(மந்-வ-ம்) அப்படியே சேகரித்தனுப்புகின்றேன் சுவாமி.

## மந்திரி விருத்தம்.

கோவேநீருரைத்தவாறு கொப்பெனக்களபம்புஷ்பங்
கோவேகேளிலையடைக்காய் குரும்பைநீர்க்காயும்வாழை
கோவேசர்க்கரையுஞ்சீனி கூடவேமற்றதெல்லாங்
கோவேநான்சேகரித்தே கொப்பெனவனுப்பினேனே.

(மந்-வ-ம்) சுவாமி? சடங்கிற் காகவேண்டிய வஸ்துக்களையெல்லாஞ் சேகரித்தனுப்பிவைத்தே னுண்டவனே.

(சுந்-வ-ம்) அடியம்மாசவுந்தரவல்லி? என்மகளைச் சீராகச்சிங்காரித் தழைத்துவருவாயடி தோழியே.

(சவுந்-வ-ம்) அப்படியே சிங்காரித்தழைத்து வருகின்றேன்.

சவுந்தரவல்லி தரு

இராகம்-எமுனுகல்யாணி, தாளம்-ஆதி.

பல்லவி.

ஜோடினைசெய்குவேனே சுந்தரரோகையின்சந்திரவதிக்கே.

அநுபல்லவி.

நாடதனிலேயுள்ள　　நாயகிமார்களும்
நாணவிவள்சிங்காரம்　　பூணப்புனிதமென　　(ஜோ)

சரணங்கள்.

கூந்தலிதோ　　வாரினேன் - கோதினைநீக்கிக்
கோணுச்சடையும்　　பாவினேன்
காந்தலங்காரம்　　பூட்டினேன் - குச்சுங்தொட்டு
கல்லின்ருக்கடி　　சூட்டினேன்
சந்திரபிறைசூரியன்　　தன்பிறைநெத்திச்சுட்டி
சாத்தினேன்முகஜம்புல்　　தகதகவெனவிதோ (ஜோ)

பிறைநுதல்　　நீறணிந்தேன் - குங்குமச்சாந்து
பேணிமைவிழிக்　　கணிந்தேன்
உறைமேற்　　புருவந்தீட்டினேன் - நாசிக்கிதோ
வொளிபணி　　மூன்றுமாட்டினேன்
நிறைசெவிக்கிரண்டிற்கு　　நிகழ்கம்மல்ஜிமிக்கியும்
நிறமதிமுருகுடன்　　நேர்ந்ததொங்கலுமிட்டே　　(ஜோ)

முத்துமோகனம்　　பூட்டினேன் - கழுத்திற்கே
மொழிசந்திரஹாரஞ்　　சூட்டினேன்
பத்துமோதிரந்　　தீட்டினேன் - விரல்களுக்கே
பணிகைக்கடகம்　　மாட்டினேன்
ஏத்துங்கரத்திற்கிதோ　　இரத்தினவங்கியுமுரி
யெழிலுறுபாஜிபந்து　　இணைபுஜகிரியிட்டே　　(ஜோ)

இடையிலொட்டியாணம் பூட்டி-இத்தினமிழைத்த
இருகால்சிலம்புந் தீட்டி
நடைபொற்கொலுசு மாட்டி - சதங்கையுள
நல்லசரங்கள் நாட்டி
படைமுகம்புகழ்மன்னர் பார்த்துமயங்கநல்ல
பட்டுச்சரிகையாடை பாங்காயிடையிற்கட்டி (ஜோ

(சவுந்-வ-ம்) தாயே? பெண்ணைச் சிங்காரித்தாயிற்று அம்மணி.

(சுந்-வ-ம்) அடி பாங்கி? என்மகளை யழைத்துவந்து இந்தநவரத்தின முக்காலியின்பேரில் கிழக்குமுகமா யுட்காரவைப்பாய் சவுந்தரவல்லியே.

(சவுந்-வ-ம்) அப்படியே யழைந்து வந்து உட்கார வைக்கின்றேனம்மணி.

(சவுந்-வ-ம்) அம்மாசந்திரவதியே? இந்த முக்காலியின்பேரில் கிழக்குமுகமாய்த்திரும்பி யுட்காருமம்மா.

பொது-விருத்தம்.

புஷ்ப்பவதியானமகள் தனையிருத்திப்
பூவுடனேகஸ்த்தூரி புனுகணிந்து
நிஷ்க்கபடவேந்தர்களின் தேவிமார்கள்
நின்றுலஞ்சுற்றும்வகை நீர்காண்பீரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? சந்திரவதிக்கு இராஜர்களின் தேவிமார்கள் ஆலமெடுக்கும் வகைகாண்பீர்கள் கனவான்களே.

லாலி.

இராகம்-நவரோஜ், தாளம்-ஜம்பை.

லாலிசுந்தரமூர்த்தி லாலிசுந்தரர்தேவி
லாலிமழுதரித்தவற்கு லாலிசுப லாலி (லாலி)

சுந்தரரோகையும்வேந்தன் சுரத்திலருந்தவம்புரிய
வந்தவழகுருபாவை வாழ்கசுப லாலி (லாலி)

ஆதிபரம்பொருளான வண்ணலருளாலுதித்த
ஜோதிவடிவுளபாவை சுபம்வாழ்க லாலி (லாலி)

திங்களணியெம்பெருமான் சித்தமகிழ்ந்தேகொடுத்த
மங்கைசந்திரவதியும் வாழ்கசுபம் லாலி (லாலி)

சற்குணமும்பேரறிவுஞ் சத்தியமும்நீதிநெறி
அற்புதமாயபபூண்டவரை யடையசுபம் லாலி (லாலி)

பதிவிரதம்பண்பொழுக்கம் பாரிலுளதானமெலாம்
அதிகமுடன்ருனடத்தி வாழ்கசுபம் லாலி (லாலி)

சுதபாக்கியசம்பத்துஞ் சோடசமுந்தானடைந்து
வதனவதிநற்கதியில் வாழ்கசுபம் லாலி (லாலி)

ஐம்பத்தாறுதேசமன்ன ரடிபணியவிருந்துதினம்
இன்பமுடனரசியென விருக்கசுபம் லாலி (லாலி)

கழல்முருகனடிபணிந்து கைகூப்புமன்பர்களாம்
அழகுளவிநோதசபை யனுதினமும் வாழி (லாலி)

## பொது விருத்தம்.

மன்னவன் தவமிழைத்த தாலேவந்த
மகளான சந்திரவதி மங்கையாகி
தன்னுவமை யில்லாத பாக்கியான
சவுந்தரவல்லி தன்னுடனே சுகமாய்வாழ
நன்னகரா ளயோத்திபனுந் திரிசங்கின்ற
நற்குணமுஞ் சத்தியநிலே நாளுமோங்கு
மன்னவனு மரிச்சந்திரன் கொலுமுகத்தே
வருகின்ற ஏதிதிநிலே தருகின்றனே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? நான்குமறைகளும், திருப்பாற்கடலின்கண்ணே ஆலிலையின்பேரில் இலக்ஷுமிசமேதராய்ப் பள்ளிகொண்ட ஸ்ரீமந்நாராயணமூர்த்தியும், ஈரேழுலகங்கணிடத்தே யுள்ள அனந்த ஆன்மாக்களைச் சிருட்டிக்கும், நான்முகனும், தேவர்கண்முதலிய இரிஷிகளுங் காணுதற்கரிதாகவும், காலகாலனுயிருந்து ஸ்ரீமத்மார்க்கண்டேயமுனிவரைக் காத்தப் பரசோதியினருளால் வந்த சந்திரவதியும், தன் தோழி சவுந்தரவல்லியுங் கன்னியாமடத்தில் இவ்வாறு சுகமாயிருக்க ; அயோத்தியாபுரியையாளுகின்ற அரிச்சந்திரமகாராஜன்கொலுவிற்கு வருகிறவிதங்காண்பீர்கள்கனவான்களே.

## கன்னமாபுரி காண்டம் சம்பூரணம்.

ஸ்ரீமத்சுப்ரமண்யர் சகாயம்

---



ஸ்ரீ-ஸ்ரீ அப்பாவு பிள்ளை.



ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோத சபா.

# அயோத்தியா காண்டம்.

## சத்தியபாஷ அரிச்சந்திரபடலம்.

### கட்டியன் விருத்தம்.

அட்டமாசித்தியாலே யமலவன்குலம்விளங்க
இட்டஅந்தரசொர்க்கத்தி லிலங்கியதிரிசங்கின்ற
கிட்டியவினைகளைந்த கிளரரிச்சந்திரன்வாசல்
கட்டியக்காரன்தானும் களிப்புடன்தோன்றினனே.

### கட்டியக்காரன்-தரு.

இராகம்-பந்துவராளி, தாளம்-ஆதி.

பல்லவி.

கட்டியக்காரன் வந்தான் வந்தானிதோ
கனனரிச்சந்திரன் மனமதுமகிழ்ந்திடும் (கட்டி.)

சரணம்.

எட்டுத்திசைகளெங்கும் இறைவன்புகழ்கொண்டோங்கி
யீட்டிவலயங்கத்தி யிடுக்கிக்கரத்திற்றாங்கி
கெட்டப்பகைவரெலாம் கிலிபிடித்துப் பின்வாங்கி
கிளரொணுவுக்கிரமும் கிருபைமனத்தநீங்கி
கிடுகிடுத்திட நடுநடுத்திட
வெடுவெடுத்திட படபடத்திட

கிட்டி ராஜன்வரவை யொட்டி ஜனத்திரளை
நெட்டி சமர்த்ததனில் கெட்டி யிவனேயென
கிளறிடதுட்டர்க ளலறிடவாயது
குளறிடமனமது தளறிடவிதோவிதோ. (கட்டி)

பொது விருத்தம்.

ஜெகமதிலறம்விளங்கத் திரிசங்கீன்றமைந்தன்
திகழ்பெறச்சத்தியந்தன்னைத் தினையளவழுவாவேந்தன்
யுகம்பலவேற்றிநீதி யும்பரும்புகழப்பெய்வோ
னகமதிற்கீர்த்திபூண்ட வரிச்சந்திரதீரன்வாரார்.

(பொது-வ-ம்.) சபையோர்களே? புவனத்தில் யாவரும் புகழத்தக்கக் கீர்த்திபுனைந்து அயோத்தியில் நீதி வழுவாமல் அரசு செய்கின்ற இராஜாதி இராஜனுன அரிச்சந்திரமஹாராஜன் கொலுவிற்கு வருகிற விதங்காண்க.

# அரிச்சந்திரமஹாராஜன் கொலு.

---

அரிச்சந்திரமஹாராஜன்வருகிற தரு.

இராகம்-தோடி, தாளம்-ஆதி.

பல்லவி.

தேசதேசங்களெல்லாந் திகழ்கொண்ட அரச்சந்திர
ஜெயவீரராஜன் வந்தான் - கொலுவிருக்க.

அநுபல்லவி.

வாசவ னயன்காணு மலர்ப்பதந் திருத்தாளை
வணங்கிமனதில்நாளு மிணங்கியிருக்குந்திவ்விய
- வாணிபுகழுந் தீரன் ராஜர்
பேணிப் பணியுஞ் சூரன் ஜெக
வல்லவர் நல்லவர் கல்லவர் சொல்லவர்
வாழ்த்த முடியதனைத் தாழ்க்த விருபுறமு
மேத்தக் குடிகள்தனைக் காத்தப்புகழுடைய. (தேச)

சரணம்.

முத்துக்குடைநிகழ்த்த ரத்தினமுடிதரித்து
மோகனமாலையுடன் வாகுசெங்கோல்பிடித்து
சுற்றுமமைச்சர்வர சொகுசாய் நாட்டியநடித்து
சொல்லொணுமறையொலி தூயர்மிகப்படித்து

சூழ பகைவரெல்லாம் தாழ நீதியாய்லோகம்
வாழ நாட்டினில்சூது மாழ வெகுவிநோத
நாயகனுகவே தாயகம்போலவே
காயந்தனைமறந்த நேயர்கள்சூழ்ந்திட
நாடி விருதுகட்டியம் பாடி மிடியர்வரத்
தேடி கலியைப்போக்கி யாடி தருமமாதை
வேண்டிவளர்க்குந்தீரன் நவகண்டம்
தாண்டிப்புகழுஞ் சூரன் மெய்மை
பூண்டில கிடுமார னயோத்திநக
ராண்டிடு மதிகாரன் சுகம்
எச்சிடகண்டவர் மெச்சிடமகிழுடன்
இருந்தேசிம்மாசனத்திற் பரிந்தேநீதிசெலுத்த. (தேச)

## அரிச்சந்திரன் விருத்தம்.

சதுர்மறைவிளங்கவெந்த தனிச்செங்கோல்விதிகளோங்க
கதிர்குலந்தழைக்கநாளுங் கருதியமுனிவரோங்க
நிதியதுபெருகநாட்டில் நீடித்தென்குடிகள்பொங்க
நதிபுனைகைலவாசா நாட்டுநின்னருளேபோற்றி.

## சத்தியகீர்த்தி விருத்தம்.

விரிச்சிறகறுத்தகோனும் விண்சுரர்பன்னவாசர்
கரிச்சரமெடுத்தோன்மற்றோர் காவியர்முனிவர்யோகர்
சரிச்சொலாவும்பர்வேந்தர் சான்றோர்கட்புகழ்கொண்டாடு
மரிச்சந்திரமகிபாவுன்ற னழகடிபணிந்தேன்போற்றி.

(சத்-வ-ம்.) மஹாராஜஇராஜபூஜித இராஜகெம்பீர இராஜமார்த்தாண்ட இராஜாதிஇராஜ அரிச்சந்திரமஹாராஜனே போற்றி.

## கட்டியன் விருத்தம்.

தீரனேபகைவரைமீறுதொடுக்கியச் செம்மலேவெகுபராக்கு
செப்பரியநால்வேதமொப்பியருட்பாதனேத் தினந்துதிப்போய்பராக்கு
வீரனேசத்தியமுந்தருமமும்நீதியும் விளக்கும்வித்தேபராக்கு
வேந்தனேயண்டினோர்மகிழுறச்செய்திடு மெய்யனேவெகுபராக்கு.

# தேசவிசாரணை.

இ-ஜகமதிற்குறைவின்றிமாதமும்மாரிதான்செழிக்கவேபெய்கின்றதா?
ம-செம்மலேகாலமுறைதவறுமல்வருஷங்கள்தேசத்தில் பொழிகின்ற
இரா-அகமதில்மன்னர்கள்கட்டிடும்பகுதிதானன்பாயளிக்கிறாரா? [தே

மந்- அண்ணலேராஜர்கள் தடையின்றிபகுதியையடங்கியேகட்டிவாரார்.
இ-உகம்புகழுமாலயந்தனில்பூஜைபிசகாமலொழுக்கமாய் நடந்துவருதா?
மந்-உம்பனேதேவதாபூஜைகட்குறைவின்றியுலகினில்நடந்தேறுதே.
இ-அகவிலைக்காரர்கட்படிநிறைவுகுறையாமலன்புடனளக்கிறாரா?
மந்-ஐயனேவாணிபர்கள்நிறைகுறைக்காமலே யளவாயளக்கிறார்கள்.

### பொது விருத்தம்.

மன்னவன்சொலுமுன் னுன்னதநாட்டியம்
பன்னவேமாது முன்னிவந்தனளே.

(பொது-வ-ம்.) சபையோர்களே? மகாராஜாசொலுமுன் நாட்டியஞ்செய்ய நடனப்பெண்வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

## நடனப்பெண் நாட்டியம்.

---

### நடனப்பெண் வருகிற தரு.

இராகம்-தோடி, தாளம்-ஆதி.

பல்லவி.

வாராளே வனிதையும் வானத்தின்ரதிபோல.

அநுபல்லவி.

நேராய்விழிசுழற்றிக்காட்டி நிகர்த்தகுசங்களசையவாட்டி
மாரனுடனேதேவர்களும் மனம்வாடிடவேமுன்னம். (வா)

சரணம்.

மின்னற்கொடியோவென வெண்ணிமனமுரு
சின்னவிடையுமேரு வென்னவிருஸ்தனமும்
அன்னப்பேடையொத்த வசைந்தநடை...த்து
அன்புடன்பரதத்தி னம்சந்தஜ...பிடித்து
சா சநிததபமா கமகநிதநீ
கா கதமரிகா கமம கநிசதபா
தீம்கிடதஜெணு தநி...ணத்தோமென
தீம் கிடதஜெணு தித்தில்லாமென. (வாரா)

### நடனப்பெ...ண விருத்தம்.

அண்ணலேபோற்...யயோத்திநாடாளுஞ்
சென்னலே...றன் றிருவடிபோற்றி.

(நட-வ-ம்.) போற்...போற்றி மஹாராஜனே போற்றி.

(அரி-வ-ம்.) அப்பா பாலகா? இன்னமேன் நாட்டியப்பெண் நடனஞ்செய்யா திருக்குங்காரணம்?

(மந்-வ-ம்.) அரசே? காரணந்தெரிந்து, தங்கள் மனம்போல் நடப்பிக்கச்செய்கிறேன் நாதா—ஏ பெண்ணே? இன்னமென்னதடை?

(நட-வ-ம்.) பிரபூ? இதோ காத்துக்கொண்டு இருக்கிறேன்.

நடனப்பெண் தரு.

இராகம்-உசேனி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

இன்னமோடிசெய்வதேனையா அரிச்சந்திரராஜே.

அநுபல்லவி.

மன்னவர என்றன் மையல்தீர்க்க
மனங்கனையா தேதோகாணேன். (இன்)

சரணங்கள்.

தீரனுன திவ்வியரூபனே - இதோவிதோ
தேடிவந்தேன் பாருந்தாபனே
மாரன்பாவி கணையைத்தாக்கி
மடக்கிறானினித் தாளேன்வேந்தே. (இன்)

சுந்தரமாலைபூண்ட மெய்யனே - என்றன்பேரி
லிந்தகோப மேனோவையனே
கந்தமாமலர் தாக்கதிரோகம்
கசிந்துகளையு மீறுதையோமோகம். (இன்)

பாதாம்புணி கின்றேன்சீலனே - உமக்குமேது
பாதகஞ்செய்தேன் நானும்லோலனே
மாதரசம் பெருகிமெத்த
மனமுஞ்சோர மாகுதையனே (இன்)

அரிச்சந்திரன் விருத்தம்.

அப்பனேசத்தியகீர்த்தி யன்பனேகொலுவின்முன்னே
அப்பனேநடனஞ்செய்த வாரிழைமனங்களிக்க
அப்பனேபொன்பட்டாடை யனைத்தையுமளித்தேதநீதான்
அப்பனேவிடுதியேக வனுமதிபுரிகுவாயே.

(அரி-வ-ம்.) அப்பா சத்தியகீர்த்தி? இந்த நாட்டியப்பெண்ணிற்கு வேண்டிய வெகுமதி கொடுத்தனுப்புவாய் மந்திரி.

## பொது விருத்தம்.

அயோத்திபன்வளவைநாடி யவனியில்வெகுதீர்த்தங்கள்
வியோத்திகளானயாத்திரை வேதியர்வருகின்றாரே.

(பொது-வ ம்.) சபையோர்களே ? அரிச்சந்திரமஹாராஜனுடைய திருக்கொலுவிற்கு உத்தமயாத்திரைப்பிராமணாள்வருகிறவிதங்காண்க.

## யாத்திரைபிராமணாள் வருகிற தரு.

இராகம்-தனியாசி, தாளம்-ஆதி.

பல்லவி.

யாத்திரைவேதியர் வந்தார் - அயோத்திநாடி
யாத்திரைவேதியர் வந்தார்.

அநுபல்லவி.

மாத்திரைப்பொழுதாகிலும் வேற்றுமைசெய்யாமல்மன
மேத்தியேசிவஸ்தலங்கள் நேத்திபாய்த்தெரிசித்திடும். (யா)

சரணங்கள்.

உலகினிலுள்ளபல வுசிததீர்த்தங்களாடி
உம்பர்மகிழும்வெகு உன்னதக்ஷேத்திரந்தேடி
கலைக்கியானவருள்பாடி கருதிபிரம்மத்தைநாடி
காலனணுகாமலே சாலவேயருள்பெற்ற. (யா)

வேதமென்பதிலுள்ள மேன்மைதனைப்படித்து
விண்ணோர்மகிழுந்தீர்த்தம் வெகுவாயாடிமுடித்து
காதகநினைவதைக் கருதாமலேயடித்து
சயவர்கள்நேசமதைக் கண்பாராமல்கடித்து. (யா)

தேசதேசாதிமன்னர் திசழ்கொலுமுகங்கண்டே
தீர்க்காயுசாய்வாழச் செப்பியர்சிகள்விண்டே
ஆசனவிதிமுறை யனைத்தையுங்கைக்கொண்டே
அயோத்திபன்மகிழுற வன்புடன்காணவென்றே. (யா)

## அரிச்சந்திரன் விருத்தம்.

நதிபுனைநீலகண்டன் நாட்டினிலமைத்தவேத
விதிமுறையுணர்ந்தேதிவ்விய வேள்விசெய்பவரேபோற்றி
கதியெனக்களிக்கவேண்டி கருதியிங்குற்றீருங்கள்
பதியேதோவடியேன்காணப் பகருவீர்பாதம்போற்றி.

(அரி-வ-ம்) சுவாமிகளே ? என்குலஞ்செய்த புண்ணியத்தினால் இங்குவந்தீர்கள், தாங்களிருக்கும் திவ்வியதேசமெதுவோ, அருள்புரிய வேண்டும் சுவாமிகளே.

### யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

பருதியின்மரபில்வந்த பண்பனேயாசிர்வாதந்
தருமத்தைக்குறைவில்லாமற் றழைப்பிப்போயாசிர்வாதம்
பெருமையாய்லோகமன்னர் பேணிடும்பதியேயுன்ற
னருமையாஞ்செங்கோலோங்க வரிச்சந்திராவாசிர்வாதம்.

(யாத்-வ-ம்.) ஆசிர்வாதம் ஆசிர்வாதம், மஹாராஜனே.

### யாத்திரைப்பிராமணாள் விருத்தம்,

அதிபதியயோத்தியாண்ட வன்பனாந்திரிசங்கின்ற
மதிபுனையான்பதத்தை மறவாமற்செங்கோற்தாங்கி
கதிபெறபிதிர்க்கனெல்லாங் கனமுடனரசுசெய்யும்
பதியரிச்சந்திரனை பண்பனேவாழிவாழி.

(யாத்-வ-ம்.) வாழி வாழி, அரிச்சந்திரமஹாராஜனே வாழி.

(அரி-வ-ம்.) இந்த திவ்விய ஆசனங்களின்மேல் வீற்றிருக்கப் பிரார்த்திக்கின்றேன் சுவாமி.

(யாத்-வ-ம்.) சந்தோஷமப்பா அப்படியே யிருக்கின்றோம் மஹாராஜனே.

### யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

எந்தவூரென்றுகேட்ட விறைவனேயயோத்திமன்னா
சுந்தரமுடையவந்த சொல்லுகாம்பிலிவாழ்வோர்
வந்ததோர்கருமம்நீங்க வகையுளயாத்திரைவந்தோர
முந்தனற்கீர்த்திகேட்டே யுனைக்காணவந்தோம்வேந்தே.

(யாத்-வ-ம்.) அரசனே? நாமிருப்பது காம்பிலிதேசம், புண்ணிய தீர்த்தங்களாடவந்தோம், உமது பெருமையைக்கேட்டுக் கண்டுபோகவந்தோம், அரிச்சந்திரமஹாராஜனே.

### அரிச்சந்திரன் விருத்தம்.

இன்னிலந்தனிலேயுள்ள வெழிலுறஸ்தலங்கள்தீர்த்தம்
வன்மையாயாடிதேச வளப்பமுமுணர்ந்தேவந்தீ
ரென்னதோரதிசயங்க ளெங்கெங்குமேதுகண்டீர்
பன்னவேயடியேன்கேழ்க்கப் பண்புடன்பகருவீரே.

(அரி-வ-ம்.) சுவாமிகளே? நீங்கள் யாத்திரைசெய்த விடங்களில், ஏதாகிலும் அதிசயங்கண்டிருந்தால் தெரிவிக்கவேண்டும்சுவாமிகளே.

## யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

காசிதொட்டிதற்குத்தெற்கே கன்னியாகுமரிமட்டும்
பூசிததீர்த்தமாடிப் புகழ்பெறுஸ்தலஞ்சேவித்தோம்
மாசிலாமணியனந்த மதிதயன்செய்துபெற்ற
நேசியினழகைக்கண்டோம் நிகழ்த்தவுமாகாதப்பா.

(யாத்-வ-ம்.) மஹாராஜனே! காசிமுதல் கன்னியாகுமரி யளவுமுள்ள ஸ்தலங்கள்தீர்த்தமெல்லாம்ஆடிவந்தோம், ஆனால் யாதொருகுற்றமுமற்ற மதிதயன்சுரமடைந்து கைலாசநாதனைத்துதித்துத் தபஞ்செய்து பெற்ற மகளுடைய அழகைப்போல எங்குங்கண்டறியோம்வேந்தனே.

## அரிச்சந்திரன் விருத்தம்.

மாதொன்றுகண்டோமென்றீர் மறையோரேயவள்பேரென்ன
மாதுவின்ரூபமென்ன மணமுண்டோவிலையோமற்றும்
மாதுவின்தந்தையாரோ வண்ணமாயெனக்குத்தோற்ற
மாதுவின்குணத்தையெல்லாம் வகையுடனுரைசெய்வீரே.

(அரி-வ-ம்.) சுவாமிகளே? நீங்கள் சொன்ன பெண்ணிற்கு மணமாய்விட்டதா? அவளுடையபெயரும், ரூபமும், நடக்கையும், அவள் தந்தையின்பெயரும், விளங்கத்தெரிவிக்கவேண்டும் சுவாமிகளே?

(யாத்-வ-ம்.) அப்படியானால் எங்களுக்குத்தோன்றியமட்டும் சொல்லுகிறோம் கேளும் இராஜனே.

## யாத்திரைப்பிராமணாள் அகவல்.

சொல்லுவோங்கேளாய்த் துரைமதிதயேந்திரன்
கல்லுருகிடவே கைலையன்பதத்தை
நாடியேபெருந்தவம் நலமுடனியற்ற
வோடியேவந்தவ னுளமதுகளிக்க
மாததுபிறக்க வரமதுமளித்தா
ளுதவுமெங்களாலொக்குமோவரசே
சந்திரனைப்பழிக்குந் தனித்திருமுகமுந்
தந்தமோமுத்ததைத் தாநெடிக்கிடுமே
கண்களோகெண்டையைக் கருதியேபழிக்கும்
விண்ணொளிவில்லென விளங்கிடும்புருவமும்
நாசியோகுமிழை நலமுடன்மாற்றும்
வாசனைமொழியோ வளர்குயிலொக்கும்
கூந்தலால்மேகங் குறைவெனக்காட்டும்

சாந்தனேகுணமோ சாற்றவும்போ கா
கழுத்ததுவலம்புரிக் கைப்பிடியிடையினு ள்
வழுத்தவுமாமோ மதனனுமயங்கிட ப்
பொற்கிண்ணமொத்தப் பூவையின்குசங்க ள்
விற்பனகண்டவர் மெய்குலைந்திடுவ ரே
நடையதுமன்னம் நாணிடுங்கண்டா ற்
றுடையடிவாழைச் சொல்லுவோமன் று
வேதமுறைமையும் வெகுவெகுநீதி யு
மோதருபுராணமு முணர்ந்தவள்கண்டா ய்
மன்னரிலவளை மணர்வனேசகல ப்
புண்ணியவானும் புனிதனேவேந் தே
சந்திரவதியெனத் தனிப்பெயருடையவ ட்.
சுந்தராவவணிலைச் சொல்லவும்போ மோ
வெங்களாலியன்றதை யியம்பினோமன் றி
மங்களாவதியின் வடிவதைச்செப் ப
வல்லவாவாயிரம் வளருநாவுடையவ ன்
சொல்லவுமறிதெனத் தோணுவாயர சே.

அரிச்சந்திரன் விருத்தம்.

அந்தணமாரேநீங்க ளறிவித்தமாதின்பேரில்
அந்தணமாரேநானு மளவிலாமோகங்கொண்டேன்
அந்தணமாரேதீர்க்க வடியனும்மாறுகாணேன்
அந்தணமாரேநெஞ்ச மனல்மெழுகானேன்கண்டீர்.

(அரி-வ-ம்) ஐயமாரே! அந்தசந்திரவதியின்பேரில் மெத்த ஆவலானேன், மனமுருகுகின்றது, திருமார்க்கமேதோஅறியேன்சுவாமிகளே.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

மன்னனேநாங்கள்சொன்ன மாதின்மேலுனக்கேகாதல்
மன்னனேபெருகுமாகில் வழுத்துவாய்ச்சங்கையின்றி
மன்னனேநாங்கள்சென்றே மதிதயனுடனேபேசி
மன்னனேயுனக்கேசந்திர மதிமாலைசூட்டச்செய்வோம்.

(யாத்-வ-ம்.) உனக்கு அவ்வளவு ஆவல்பெருகுமாகில், நாங்கள் சென்று மதிதயனுக்குப்போதித்து, சந்திரவதி உன்னை விவாகஞ்செய்யும்படிக்கு முடிவுசெய்வோம் மஹாராஜனே.

அரிச்சந்திரன் விருத்தம்.

செப்பவேசொன்னீரென்னைத் திகழ்பெறுமையமாரே
யெப்படிசகிப்பேன்மோக மேந்திழைதன்னைப்பெற்ற

வப்பனுமதிதயேந்திர வரசன்பாற்றாங்கள்சென்றே
யிப்பவேயெனக்குமாலை யிடத்திடஞ்செய்வீர்போற்றி.

(அரி-வ-ம்) சுவாமிகளே? மானிடதேகமெடுத்த ஒவ்வொருவருக்கும் மோகம் தொடர்வதுயாவருக்குந்தெரிந்தவிஷயமே, ஆனதால்தாங்கள் இப்போதேசென்று அம்மாது என்னை மாலையிடும்படிக்குத் திட்டஞ்செய்து காப்பாற்றவேண்டும் பெரியோர்களே.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

வேந்தனேயயோத்திராஜே விடுவிடுகிலேசந்தன்னை
வேந்தனேயரைநொடிக்குள் வேண்டியவாறுபோல
வேந்தனேகன்னிதன்னை விரைவினிலுனக்கேமாலை
வேந்தனேசூட்டச்செய்வோம் விடைதராய்வாழிவாழி.

(யாத்-வ-ம்) இராஜனே? அச்சந்திரவதியையுமக்கே பாரியாகச்செய்விப்போம், நாங்கள்போகவிடைதாரும் வேந்தே? நீ வாழி வாழி.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயரேதககமைவாய்ந்த வறிவினிலுயர்ந்தவென்றன்
ஐயரேஸ்னனஞ்சந்தி யனுஷ்டிக்கும்பொருளேநீங்கள்
ஐயரேயங்குசென்றே யரசனையிணங்கச்செய்து
ஐயரேவருவீருங்க ளடிபார்த்துநிற்பேன்கண்டீர்.

(அரி-வ-ம்) சுவாமிகளே? நீங்கள் மதிதயராஜனிடத்திற்பேசித் தீர்மானித்துவருகிறவரையில், உங்கள்வழியை யெதிர்பார்த்திருப்பேன், சீக்கிரஞ்சென்று அடியேன் எண்ணமதைப்பூர்த்திசெய்யவேண்டும்.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

மன்னனேநாங்கட்சென்றே மதிதயன்மகடானுன்னை
மன்னனேமணரச்செய்வோ மகிழுறுவேந்தேவாழி.

(யாத்-வ-ம்) மகாராஜனே? நாங்கள் போய்வருகிறோம், சந்தோஷமாயிரும், உமதுகோரிக்கையையீடேற்றுவோம் ஆசீர்வாதம்.

பொது விருத்தம்.

அந்தணர்கள்விடைபெற்றே யேகமன்னன்
அரன்மருகன்கணையாலே நொந்துமெத்த
சந்திரவதிசந்திரவதி யென்றேயெண்ணித்
தளருவான்விரகமிஞ்சிக் கிளருவானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? யாத்திரைப்பிராமணாள் போயின

அ

பின்பு, அரிச்சந்திரமகாராஜன், சந்திரவதியம்மனை யெண்ணியெண்ணி, விரகதாபம்படுகிறவிதங்காண்க.

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-பைரவி, தாளம்-ஆதி.

பல்லவி.

மன்மதனே பொறுப்பாய் - என்மீதிற்கணை
மாரித்தூவாமலிருப்பாய்.

அநுபல்லவி.

உன்மதமுன்னொருஞ ௌாடிக்கினன்பரமன்
என்மீதில்வன்மம்வைத்தே யிப்படிச்செய்யத்தகுமோ. (மன்)

சரணங்கள்.

வேதியருரைக்கக்கேட்டேன் - மனதுருகி
விதவிதவுண்டியைவிட்டேன்
பாதிமதியனுற்றந்த பாவைசந்திரவதியாளை
பாரியாயெனக்களிக்கக் கோரியேயுருகும்வேளை. (மன்)

இல்லமுடைய பேரையலவோ-நீதான்
வல்லமைசெய்குவாய் போரை
கல்லதிதுமுன்காலம் நாரிசந்திரவதிவாய்க்கில்
நாணங்கொள்ளவுன்னையெங்கும் வீணனாகச்செய்வேனப்போ. ()

காலமிது உனக்கின்றே - யென்னைவருத்தும்
கோலமினியாகாதென்றே
சீலமுளமாதுமந்த தேவிசந்திரவதிவரில்
செப்புவேனுனக்கே யொப்புவாயித்தருணத்தில். (மன்)

சத்தியகீர்த்தி விருத்தம்.

வேதத்தின்வாக்கியமென்ன விளங்குமெய்நாவைப்பூண்ட
போதத்திலுயர்ந்தவெங்கள் புனிதரேயரசேகேளுஞ்
சீதளச்சந்திரன்வீசத் தென்றலுஞ்சுடுகுதென்றீர்
வாதனைமறையோர்சொன்ன வாக்கியமெய்யோசொல்வீர்.

(சத்-வ-ம்) இராஜபரமேஸ்வரா? வேதியர்கள்வந்து சொல்லிப்போனவார்த்தையைப் பொய்மெய்யென்று எப்படியறிந்தீர் அரசே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்,

அப்பனேசத்தியகீர்த்தி யழகுநற்குணங்கள்பூண்ட
அப்பனேமதிதயந்தா னளிப்பனோவெனக்குத்தானே

அப்பனேபாரியாக வமைவதுமென்றேமோகம்
அப்பனேமீறுதிங்கே யணையும்வாறறிகிலேனே.

(அரி-வ-ம்) அப்பா மந்திரி? அச்சந்திவதி எனக்குங் கிட்டுவாளா! மோகமீறுது, என்னசெய்வேன் பாலகா.

சத்தியகீர்த்தி விருத்தம்.

மனதிற்குமனமேசாக்ஷி வண்மையுமெய்யேயையா
மனமகிழுறவேசந்திர மதியைசேர்வீர்சேர்வீர்
மனமுடனவர்போயந்த மதிதயன்கொண்டதிவ்ய
மனமதுமறிந்துமிங்கே வருமட்டும்பொறுப்பீர்வேந்தே.

(சத்-வ-ம்) அரசே? மனதிர்க்கு மனமேசாக்ஷியென்பது சரியே, மதிதயராஜன் எண்ணத்தையறிந்து சென்றவேதியர்கள் தெரிந்துவருகிறவரையில் பொறுப்பீர் ஆண்டவனே.

பொது விருத்தம்.

அமைச்சனுமுரைக்கக்கேட்டு அண்ணலுந்தணிவுகொண்டார்
அமைச்சருமதிதயேந்திரன் அணிகொலுமுகம்வாராரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? சத்தியகீர்த்தி அரிச்சந்திரமகாராஜனுக்குத்தணிவுசொல்லக் கேட்டனர், இனிகன்னமாபுரியில் மதிதயராஜன் கொலுவிற்கு வருகிறவிதங் காண்க.

---

## மதிதயமஹாராஜன் கொலு.

இராகம்-மோகனம், தாளம்-ஆதி.

பல்லவி.

மன்னர்மன்னர்கள்புகழ் - மன்னன்மதிதயேந்திர
மகாராஜனிதோவந்தான் கொலுவிருக்க
மதிதயராஜன் வந்தான்.

அநுபல்லவி.

நன்னகர்குடிவாழ நாட்டில்மும்மாரிவீழ
நம்பனிருபதத்தை நாளும்பணியுந்திவ்ய
நாட்டோர்புகழுந் தீரன் - தவ
வீட்டோர்மகிழுஞ் சூரன் - குல
நயமுளவாசகன் ஜெயமுளகேசவன்
நாளும் மேலும் சாலும் வாழும் ஆளுலக. (மன்)

சரணம்.

இத்தித்தோ மென்றும்
சிவனடி நாளும்பாடும்
திவ்வியக் குணத்தில்மிக
வொவ்விய வாயுதத்தோன்
கத்தியுடனே செங்கோல் காத்தி லேந்திமுடியில்
கதிரோனொளியைமாற்றும் கனத்தக்கிரீடந்துலங்க
கயவர்கண்டு ஓட இருபுறம்
ஜயமாய்க்கட்டியம் பாட வுசித
மயலார்நாட்டிய மாட குடிகள்
பயத்தைவிட்டே நாட எங்கும்
கண்டவர் நின்றவர் சென்றவர் மண்டலர்
காண வாக்குமனம் பூண வேற்றரசர்
நாணத் தன்மயமாய்த் தோண வுலகமெலாம்
தண்ணொளியாகவே விண்ணவர்மகிழ்ந்திட
நண்ணுநீதியா யின்றுலகாண்டிடும். (ம)

## மதிதயராஜன் போற்றி விருத்தம்.

வையகந்தனிலேநீதி வளர்ந்திடவறம்விளங்க
துய்யவேமண்ணின்மீது தொகுத்துமும்மாரிபெய்ய
நொய்யுறலகத்திவேத நொடித்திடவெக்கியமோங்க
வையனேகைலவாழ்வே யருள்செய்வாய்போற்றிபோற்றி.

## மதிமந்திரி விருத்தம்.

மண்ணுளோர்போற்றும்வேந்தே மகதநாடாளுங்கோவே
திண்ணமாமுனிவர்தாமுஞ் செயுந்தவந்தனைவளர்த்தே
வண்ணமாந்தருமமோங்க வளர்செங்கோல்புரியுமெந்த
னண்ணலேமதிதயேந்திர வரசனேபோற்றிபோற்றி.
(மந்-வ-ம்) போற்றி போற்றி மகாராஜனே போற்றி.

## கட்டியன் விருத்தம்.

பார்புகழுகன்னமாபுரியாளுமெந்தையே பார்த்திபாவெகுபராக்கு பண்புபெறுகீர்த்திபுனைவேந்தனே நீதியுளபாக்கியனேவெகுபராக்கு கார்முகிலைவிதிமுறைகள்பிசகாமல் பெய்விக்குங்கர்த்தனேவெகுபராக்கு, கண்டபகையோர்களுங் கொண்டமதம்விட்டோட கணைதொடுப் [போய்பராக்கு.
(மதி-வ-ம்) அப்பா மந்திரி ?

மதி - பொன்னுலகையாள்கின்ற மன்னனதுசெங்கோலும்
புகழாய்நடக்கின்றதா ?
மந் - புனிதனே யிந்திர னுனுகைக்குறைவின்றி
புகழாய் நடக்கின்றதே.
மதி - எண்ணரும்முனிவர்கள் செய்கின்றஹோமங்க
ளினிதாய்நடந்தேறுதா ?
மந் - ஈசனேயோகிகள்நடத்திடு மெக்ஞியங்க
ளதேஷ்டமாய்நடந்தேறுதே.
மதி - வண்ணமுள் தேசத்தில் மாதமும்மாரியும்
மாருமற்பெய்கின்றதா ?
மந் - வாணிபுகழ்தீரனே காலமுறைதவருமல்
மாரியும்பெய்கின்றதே.
மதி - தண்ணொளிவிளங்கவே தேவாலயத்தினில்
தான்பூசைசெய்கிறரா ?
மந் - தயாபராகுறைவின்றி யாலயங்களிற்பூசை
தடையிலாமற்செய்கிறார்.

## மதிதயராஜன் விருத்தம்.

நன்னருமதிமிகுந்த நலமுளமந்திரிகேளா
யென்னருமகள்தனக்கே யெவ்வனக்காலம்வாய்த்தும்
பன்னருவிவாகஞ்செய்யும் பாங்கதையோசிக்காம
லின்னமுமிருப்பதாமோ வியம்புவாயியம்புவாயே.

(மதி-வ-ம்) அப்பா மந்திரி ? எனது தவப்புத்திரி பருமடைந்தது தெரிந்தும், விவாகத்திற்கு முயற்சிசெய்யாமலிருப்பது ஏது காரணம் ? சொல்லுவாயப்பா மந்திரி.

## மந்திரி விருத்தம்.

ஜெகம்புழ்கன்னிநாட்டைச் சீருடனரசுசெய்வோ
யகமகிழ்ந்திடநீர்பெற்ற வழகுளபுத்ரிதானுந்
தகமையுள்ளெவனகாலந் தானுற்றுளென்றேமெத்த
மகபதிதுயரமாமோ மணஞ்செய்யயோசிப்பீரே.

(மந்-வ-ம்) இராஜனே ? உமதுபுத்திரி பருவமடைந்ததற்காக விய சனப்படப்போமோ, சீக்கிரத்தில் விவாகம் முடிக்கத்தகுந்த முயற்சி செய்வீர் அரசே.

## மதிதயராஜன் விருத்தம்.

மந்திரியுன்றன்வார்த்தை மகிழுடனுப்பலானேன்
மந்திரியெனதுபுத்ரி மின்னொளியழகுக்சேற்ற

மந்திரிபுருஷன்வேண்டுமகிழ்ந்திடச்சூத்திரத்தை
மந்திரியறிந்தோனிந்த மண்ணின்மீதாரோகாணேன்.

(மதி-வ-ம்) அப்பாமந்திரி ? என்மகள் அழகுக்கேற்ற புருஷனாகவும் அவளிடமிருக்குஞ் சில இரகசியத்தைத்தெரிந்து சொல்பவனாக இருப்பவனாரோ தெரியாமற் தயங்குகின்றேன் அப்பா மந்திரி.

## மந்திரி விருத்தம்.

சந்தேகங்கொள்ளப்போமோ சாந்தனேநீர்தான்பெற்ற
சுந்தரமகள்தனக்கே சுருக்கினில்விவாகமாக
வந்தாரகிதனான வாண்டவனருளேசெய்வா
ரிந்தபுன்துயரம்விட்டே யேங்காமலிருப்பீர்வேந்தே.

(மந்-வ-ம்) என்னாண்டவனே ? நீர்பெற்றபுத்திரிக்குக் கலியாணமாகும்படி பரமசிவன் கடாக்ஷிப்பார், உமது துயரத்தைநீக்குவீரரசே.

## பொது விருத்தம்.

வேந்தனும்கள்தனக்கே விவாகமுமிலேயேயென்று
சாந்தமும்போக்கிதுக்கச் சாகரமிருக்கும்வேளை
வேந்தனுமரிச்சந்திரன்றன் விடைபெற்றவையமார்கள்
சாந்தமாய்மதிதயேந்திரன் றனிக்கொலுமுன்வந்தாரே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? சந்திரவதியின் கலியாணத்தைமுடிக்கக் காலம்வருமோவென்று சிந்தித்துக்கொண்டிருக்கும், மதிதயராஜன் கொலுவைநாடி யாத்திரைப்பிராமணாள்வருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## யாத்திரைப்பிராமணாள் தரு.

இராகம் - கலியாணி, தாளம் - சாப்பு.

பல்லவி.

அந்தணர்வந்தாரே அயோத்திவிட்டே
அந்தணர்வந்தாரே.

அநுபல்லவி.

இந்தலோகம்புகழச் சந்திரவதிதனக்கே
சுந்தரமணமாலைச் சூட்டிடச்செய்வதற்கே. (அந்)

சரணம்.

அண்டத் தவனைப்பாடி - மதிதயன்
அமர்ந்த வளவைத்தேடி
கொண்ட வெண்ணத்தைநாடி அரிச்சந்திரன்
கொள்கை முடியவோடி

ஈன்றிட்டதங்கைக்கே யிறைவன்பெருமைசெப்பி
யிணங்கச்செய்தேவிவாக மிக்ஷணம்முடித்திட. (அக)

மதிதயராஜன் விருத்தம்.

ஆதியாம்பரத்தையாளு மறிவுடனுணர்ந்தசில
வேதியமாரோதங்கண் மெய்யடிபோற்றிபோற்றி.

(மதி-வ-ம்) போற்றிபோற்றி வேதியர்களே போற்றி.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

கன்னமாபுரியையாளுங் கனமுளோயாசீர்வாத
முன்னதமகளைப்பெற்ற வும்பனேயாசீர்வாதம்
நன்நிலைகருமமெல்லாம் நயமுடன்முடிப்பாயப்பன்
சென்னியைமறவாத்திவ்விய செம்மலேயாசீர்வாதம்.

(யாத்-வ-ம்) ஆசீர்வாதம் மதிதயராஜனே? நீர்கோரிய கோரிக்கைகள் தடையின்றி நிறைவேறு மப்பா இராஜனே.

மதிதயராஜன் விருத்தம்.

அருமறைநாலுவேத மனைத்தையுந்தெளிவதாகப்
பெருமையாயுணர்ந்தேயாரும் பேணிடக்கீர்த்திபூண்டத்
தருமரோகீங்கள்வாசந் தங்கிடும்நகரம்யாதோ
நிருபஞ்செய்தருள்வீரென்றன் நெஞ்சதுகுளிரத்தானே.

(மதி-வ-ம்) நீங்கள் வாசஞ்செய்யும்படியான நாடு எதுவோ ? விபரமாய்ச் சொல்லவேண்டியது சுவாமிகளே.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

வேந்தனேகேள்காம்பிலி மேவியேவாழ்வோர்நாங்கள்
வேந்தனேநதிகள்யாத்திரை விரும்பியேகுமரிமட்டும்
வேந்தனேயுள்ளதிவ்விய விநோதக்ஷேத்திரங்கள்பார்த்தே
வேந்தனேயுனையுங்காண வேண்டியிங்குற்றோம்வாழி.

(யாத்-வ-ம்) மஹாராஜனே ? நாங்களிருப்பது காம்பிலிதேசம், யாத்திரைவந்தோம், கன்னியாகுமரிமட்டும் உள்ளநதிகளும், க்ஷேத்திரங்களும், தரிசித்து வந்தோம், உம்மையுங்கண்டுபோக இங்குவந்தோம் மஹாராஜனே.

மதிதயராஜன் விருத்தம்.

வேதத்தினுணுக்கங்கண்டு வேள்விசெய்விப்போரான
நாதரேநீங்களென்றன் நாட்டில்வந்ததுவேபாக்கிய
மேதெதுகருமம்நாடி யிங்குநீருற்றீரிந்தப்
பாதகனறியவேண்டிப் பகருவீர்பண்பினோரே.

(மதி-வ-ம்) சுவாமிகளே? நீங்கள் என்னாட்டில் வந்ததுவே மஹாபாக்கியம், தாங்கள் வந்தகருத்தை தெரிவிக்கவேண்டும் வேதியரே.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

உன்மனமகிழவிண்ணி லும்பரும்புகழ்கொண்டாடும்
நன்மையைநாடிவேந்தே நாங்களும்வந்தோங்காண்பீர்.

(யாத்-வ-ம்) மஹாராஜனே? தேவர்களு மானிடர்களு நீரும் மகிழும்படியான வொருசுபகாரியத்தை நாடிவந்தோம் வேந்தனே.

(மதி-வ-ம்) அப்படியா! வெகுசந்தோஷம்; வேதியர்களே.

மதிதயராஜன் விருத்தம்.

எங்கெங்குசென்றீர்நீங்க ளேதேதுகண்டீரையா
அங்குளவதிசயத்தை யடியனுக்குரைசெய்வீரே.

(மதி-வ-ம்) சுவாமிகளே? நீங்கள் எங்கெந்த தேசங்கள் பார்த்தீர்கள்? அங்கே யேதாகிலு மதிசயங்களைக் கண்டிருந்தால், அடியேனுக்குச்சொல்லவேண்டும் வேதியர்களே.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

அதிசயமொன்றுகண்டோ மயோத்தியையாளுமந்த
மதிமுகமுடையவேந்தன் மன்னவர்மன்னனான
நிதிபெறுமரிச்சந்திரனன் நெறியுளசத்தியங்கண்டே
மதிதயாவுனக்கேசொல்லி மருகனாய்ச்செயவேவந்தோம்.

(யாத்-வ-ம்) மஹாராஜனே? நாங்கள் கண்டதில், அயோத்தியையாளும் அரிச்சந்திரன் அழகும், சத்தியமும், நீதியும், நெறியும் கண்டோம், அவனையுனக்கே மருகனாகச் செய்யவேண்டி வந்தோம் அரசனே, அவன்கிடைப்பது அரிது.

மதிதயராஜன் விருத்தம்.

நல்லறிவுடையவேத நான்மறைதெரிந்தோரான
வல்லவர்நீங்களென்றன் மகளிடமணத்திற்கேற்ற
நல்லவனாமோவெந்த நாட்டுளோன்நடைக்கையாதோ
வல்லவாவெனக்குத்தோற்ற வகையுடனுரைசெய்வீரே.

(மதி-வ-ம்) அப்படியா ஐயமாரே? என்மகள் குணத்திற்கேற்ற புருஷனைக்கண்டோமென்றீர், அவனுடைய குணாதிசயங்களைத் தெரிய விபரமாய்ச் சொல்லவேண்டும் சுவாமிகளே.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

தினமுந்தன்குருவின்வார்த்தைச் சிதறாமல்நடக்குந்திரன்
தனவந்தன்ரவிகுலத்தோன் தாரணிவேந்தர்வேந்தன்

மனமதிற்சூதும்வாதும் மருவாமல்நீக்கிவாழ்வோ
னுனதருமகளுக்கேற்ற வுத்தமபுருஷன்காண்பாய்.

(யாத்-வ-ம்) மகாராஜனே? அவ்வரசனே அதியுத்தமன், சத்தியவந்தன், குருவிசுவாசன், சக்கிரேஸ்வரன், உன்மகளுக்கு அவனேதகுந்தபுருஷன், அறிந்தீரோ அரசே.

மதிதயராஜன் விருத்தம்.

பொங்கமாங்கீர்த்தியுள்ளோன் பொய்யுரையாதமெய்யன்
துங்கவனழகில்மாரன் தூய்மெய்கொள்வீரன்சூரன்
மங்களமுடையவென்றன் மகளுக்கேதகுந்தோனென்றீர்
சங்கரனுடையகூக்ஷந் தானுணர்பவனோசொல்வீர்.

(மதி-வ-ம்) சுவாமிகளே? அழகன், சத்தியன், வீரன், என்றும் என்மகளுக்குத்தகுந்தவனென்றும் சொன்னீர்கள், நானும் நம்பினேன் ஆனால் சங்கரனால் சந்திரவதியிடம் விளங்கும் சிவ இரகசியத்தைக் கண்டு சொல்லுபவனோ ஐயமார்களே.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

ஜகமதுமதிக்கக்கீர்த்தி தான்பெற்றராஜேகேளா
யகமதுமகிழவைய னனுக்கிரகம்புரிவான்கண்டாய்
மகளேயேவிவாகஞ்செய்ய மணவாளனையாகு
மிகபரமகிழகூக்ஷ மினிதுடனுரைப்பான்வேந்தே.

(யாத்-வ-ம்) அரசே? அந்த அரிச்சந்திரன் உனக்கே மருகனாகும்படிபரமசிவன் அருள்செய்வார், நீர் ஒன்றுக்கும் யோசிக்காமலிருப்பீர்.

மதிதயராஜன் விருத்தம்.

திடமுடன்சொன்னீரந்தத் திரிச்சங்குமைந்தனுனும்
திடமுடன்மருகனாகச் சிக்கும்வாறெதுவோசுவாமி.

(மதி-வ-ம்) சுவாமிகளே? அந்த அரிச்சந்திரன் எனக்கு மருகனாகும்படியானவகையறியேனே வேதியர்களே.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

வேந்தனேயெங்கள்வார்த்தை வெகுவாகநம்பிநீர்தான்
வேந்தனேயரசர்க்கெல்லாம் விரைவினில்மணத்திருேலை
வேந்தனேயளிப்பாயந்த வீரனுமயோத்திமன்னன்
வேந்தனேவருகநாங்கள் வேண்டியவாறுசெய்வோம்.

(யாத்-வ-ம்) இராஜனே? சந்திரவதிக்கு சுயம்வரமென்று இராஜா

ஜாக்களுக்கும் மணவோலை யனுப்புவீர், அந்த அரிச்சந்திரமகாராஜன் இங்கேவரவேண்டியமுயற்சிசெய்ய நாங்கள் போய்வருகிறோம் அரசே.

மதிதயராஜன் விருத்தம்.

ஐயரேயுங்கள்வாக்கை யடியேனுந்தடுக்கமாட்டேன்
ஐயரேசுயம்வரமென் றவனியில்முரசடிப்பேன்
ஐயரேயரிச்சந்திரன்ற னடியேன்றன்மருகனாக
ஐயரேசெய்திருங்க ளடிபணிந்திட்டேன்போற்றி.

(மதி-வ-ம்) சுவாமிகளே? தங்கள் கருத்தின்படி சுயம்வரம் சாட்டுகின்றேன், ஆனால் அந்த அரிச்சந்திரமகாராஜன் எனக்கே மருகனாகும்படிக்குத் தாங்கள் வேண்டியபிரயத்தனஞ்செய்து காப்பாற்றும்படி இதோ போற்றிசெய்கின்றேன், போய்வருவீர்கள் வேதியர்களே.

(யாத்-வ-ம்) அப்படியே போய்வருகிறோம், சுபம், சுபம், வேந்தே.

பொது விருத்தம்.

மதிதயன்சபையிற்கேட்ட வாறெலாமுரைக்கவேண்டி
யதிமகிழுடனேதோழி யரசிமுன்னேறொன்றுவாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே? மதிதயராஜன்முன் நடந்தசங்கதிகளைச் சந்திரவதிக்குத்தெரிவிக்க தோழி வருகிறவிதங்காண்க.

தோழி விருத்தம்.

மங்கையர்க்கரசேபோற்றி மான்மயிலொளியேபோற்றி
சங்கையில்லாத்தவத்தாற் றானுதித்தவளேபோற்றி
யெங்களாண்டவன்மகிழ்ந்தே யீன்றதோர்மாதேபோற்றி
தங்கத்தைப்பழிக்குஞ்சோதி சந்திரவதியேபோற்றி.

(தோழி-வ-ம்) போற்றி போற்றி எனது இராஜாத்தியாகிய சந்திரவதித்தாயே? நின்னடிக்கே போற்றி போற்றி.

சந்திரவதி விருத்தம்.

களிப்புறவெனதுநெஞ்சங் கனிவுளவார்த்தைசொல்லும்
விளிப்பெருமலையினுள்ள மெல்லிநீயெங்குசென்றாய்
தளிர்நிமேழகைப்போன்ற சவுந்தரவல்லியுன்றன்
சலிப்பென்னவெனக்குத்தோற்றச் சாற்றுவாய்சாற்றுவாயே.

(சந்-வ-ம்) அம்மா தோழி? நீ எங்குபோயிருந்தாய்? உனக்கென்னமனக்குறை? பயமின்றிசொல்லுவாய் அம்மா.

தோழி விருத்தம்.

அம்மணிநீதான்கொண்ட வழகுக்குணத்துக்கேற்ற
அம்மணிமன்னர்மன்ன னன்புடன்வந்தேயுன்னை

அம்மணிமாலைசூட்டு மதிசயக்காலமிப்போ
அம்மணிவாய்க்கக்கேட்டே னறிவிக்கவந்தேந்தாயே.

(தோழி-வ-ம்) அம்மா சந்திரவதி? மன்னர்க்கெல்லாம் மன்னரான வர்வந்து உன்னைக்கலியாணஞ் செய்யப்போகிற சங்கதிகேட்டுத் தெரிவிக்க ஓடோடியும்வந்ததால் அலுப்பினால் முகம்வேறுபட்டது, மற்றொன்றுமில்லை தாயே, என்னபாக்கியம் பெறப்போகிறாய்!

சந்திரவதி விருத்தம்.

என்னடிதோழிசொன்ன யின்னமோர்தரமுரைப்பாய்
மன்னவன்றவத்தால்வந்தேன் வாய்த்ததுபருவந்தானு
மின்னகர்தனிலேவாழு மிளங்கையர்போலநானும்
நன்மையாயிருக்கத்தெய்வ நாடுமோவுரைசெய்வாயே.

(சங்-வ-ம்) அடி அம்மா தோழி? நானும் நாலு நாட்டுப்பெண்களைப்போலச் சுகப்படக் கடவுளருளுண்டாகுமா சொல்லடிபாங்கி.

(தோழி-வ-ம்) அ! இதென்ன இப்படி கிலேசப்படுகின்றாயம்மா.

தோழி அகவல்.

சந்தோஷமாகவே சாற்றுவேனாசி  யே
யுந்தனற்றந்தையு முகந்தமந்திரிகளு  ஞ்
சித்திரச்சாவடி செழுங்கொலுமண்டப  ம்
நத்தியேவிசாரணை நடாத்திடும்வேளையி  ற்
தேசசஞ்சாரத் தேசிகவேதிய  ர்
வாசவன்கொலுமுன் வந்துமேகண்ட  ன
ரரசருமவர்க்கே யாசனமளித்  து
பரமரேயெங்கெங்கு பற்றினீரங்கு  ள
வதிசயம்யாதோ வடியனுமகிழ்பெ  ற
பதிகளேயிங்ஙனம் பன்னுவீரென  வே
யந்தணர்மகிழ்ந்தே யறைந்தனராம்  மா
சந்திரனைப்பழிக்குந் தனித்திருமுகமு  ம்
மன்மதன்நாணும் வதனமுமழகு  ஞ்
சன்மார்க்கவொழுக்கமுஞ் சத்தியநிலைமையு  ம்
வேதவிளக்கமும் வெண்கிரியோன்மகி  ழ்
சாதனைநிஷ்டையுந் தன்மொழிபிச  கா
வீரமும்வெற்றியும் வேந்தருக்கடுத்  த
சாரமாம்நீதியிற் றனைவிடவே  று
மன்னரிலையென வழுத்திடச்செங்  கோ
லுன்னதமாகவே யுயிர்களைக்காக்  கு

மரசனுமயோத்தியாதித்தன்பரம ன்
சரசவுல்லாசன் தாஷ்ட்டிகன்சூர ன்
திரிச்சங்களித்தச் செல்வராமுனர் வா
யரிச்சந்திரரவர்பே ரம்மணிகேட்டே ன்
மனமதுமகிழ்ந்தே மன்னவரங்ங னே
நினைவதையுன்மேல் நிருத்தியேவந் தோ
மூன்றவப்புத்திரி யுயர்சந்திரவதிக் கே
நண்புளபக்குவம் நண்ணியதா லே
சந்திரவதியின் சற்குணமொழுக்கமு ஞ்
சுந்தரவடிவமுஞ் சொகுசுருநடக்கையு ங்
கண்டவராதலாற் கடிகியிங்குற்றே ம்
மண்டலாதிபனை மருகனுக்கொள் வா
யென்னவேவேதிய ரெந்தையுமகிழ்ந் தே
சொன்னதுசரியே சுந்தரமக ளை
மணஞ்செயவவரும் வருவரோவன் றி
யினம்வேறுஉண்டோ வெப்படியாகு மோ
வென்மகள்கவலை யென்றுயீட்டேறு மோ
நன்மையாம்வரக்கதை நல்குவீரென் றி
டொன்றுக்கும்நீர்தான் யோசிக்கப்போ கா
நன்றுநீர்சுயவரம் நாட்டுவீர்நாங்க ளு
மயோத்தியையடைந்தே யரசனையிங் கே
சயோத்தியாய்வருகத் தான்புரிவோமெ ன
விந்தையாயுரைத்தே விரைவினில்வந் த
வந்தணர்சென்றன ரம்மணிபோற் றி.

## சந்திரவதி விருத்தம்.

பாங்கியேநீதானிப்போ பகர்ந்ததோர்மன்னர்மன்னன்
பாங்கியேகுணவானென்றே பக்ஷமாய்மறையோர்வந்து
பாங்கியேயுரைத்தாரென்றாய் பண்புளோன்மகிமைதன்னை
பாங்கியேயெனக்குத்தோன்றப் பற்றறவுரைசெய்வாயே.

(சங்-வ-ம்) அடி தோழி ? அந்த வேதியர் சொல்லிப்போயினதாக நீ இப்பொழுது செப்பிய அரசரின் பெருமையையும், அழகையும், எனக்குத் தெரியப்படச்சொல்லுவாய் பாங்கி.

(தோழி-வ-ம்) அம்மா தாயே ? யான் கொலுமுகம் போயிருந்தபோது அவ்விடம் வந்திருந்த யாத்திரைப்பிராமணனுந்தங்கள்பிதாவினிடம்

அந்த அரிச்சந்திரபூபதியின் பெருமைமுதலானதுகளைச் சொல்லக் கேட்டிருந்த யான் அவ்வாறே யென் சிற்றறிவிலெட்டியவாறு சொல்லப்புகுகின்றேன், சற்று அங்கு மிங்கும் ஞாபகம் வைக்காமல் கவனமுடன் கேட்பாயம்மா.

## தோழி தரு.

இராகம்-சங்கராபரணம், தாளம்-சாப்பு.

பல்லவி.

அந்த வரிச்சந்திர னழகைப்படித்துச்சொல்ல
ஆதிசேஷந்தான் வேண்டு மெந்தாயே.

அநுபல்லவி.

கந்தமலரோனென்னகருதிப் படைத்தானோதான்
கதிர்குலம்விளங்கிடக் காவலனையுதித்த. (அந்)

சரணங்கள்.

கோடிமதிகளொன்றாய்க் குவிந்தமலர்முகமும்
கோர்வைமுத்தைப்பழிக்குந் தந்தம்நாசியோவென்றாற்
தேடிக்குமிழைமாற்றுந் திருநுதல்மூன்றாநாள்
திங்கள்வடிவைப்போக்குஞ் செல்வீகூடப்போகும். (அந்)
இருபுஜங்கிரியென யெங்குளோர்நடுங்கிட
எடுத்தவில்மாறும லேவுங்கணையிற்சூரன்
மருவேமன்மதன்கெர்வ மடங்கச்சல்லாபநாலே
வாசித்தோனுனைக்கூடி மருவவேவருகின்ற. (அந்)
வேதமதையுணர்ந்தோன் வித்தகன்றிருத்தாளை
விளங்கிடவனுதின முளமிகுவொய்யாரன்
பாதகமென்பதைப் பற்றறவிடுத்தவன்
பாவையேயுன்றனைத் தாவியணையவரும். (அந்)
சத்தியமென்பதைத் தரணியில்நிலையாக
சார்ந்திடத்தருமத்தைத் தானேயேற்றிடுஞ்சீலன்
நித்தியகருமத்தில் நிபுணனேசந்திரவதி
நீசெய்தபாக்கியம் நேர்மையாருக்குமுண்டோ. (அந்)

## சந்திரவதி விருத்தம்.

கனிபலாவாழைதேனுங் கற்கண்டிற்கதிகமான
இனிவுளவார்த்தைபேசு மென்னிட்சகியேகேளாய்த்
தனிமயிலுயர்ந்தவந்த தயாபராரிச்சந்திரர்தான்
பனிபோலென்றுயரம்நீக்கப் பார்ப்பரோபன்னுவாயே.

(சங்-வ-ம்) அடி அம்மா தோழி? என்னுடையகவலையைச் சூரியனைக்கண்ட பனிபோல நீக்க அந்த அரிச்சந்திரமகாராஜர் வருவாரோ அல்லது வாராரோ சொல்வாயடி பாக்கியே.

தோழி விருத்தம்.

அந்தணருரைத்துப்போன வன்புளமொழியினாலே
சந்திரவதியேவங்க தயாபரர்வருவாரென்றே
யுந்தனின்மனதில்மெத்த வுறுதியைநாட்டுந்தாயே
சுந்தரனருளினாலே சுகமதையடைவாயம்மா.

(சங்-வ-ம்) அம்மா சந்திரவதி? வேதியர்கள் சொல்லிப்போன உறுதிவாக்கிற்குப்பிசகுவராது, உன்கோரிக்கையீடேறும்படி சிவன் கிருபைசெய்வான்தாயே, கிலேசம்வேண்டாம், நல்லோர்கட்கு நல்லபடியே நடக்கும்.

சந்திரவதி விருத்தம்.

தோழிநீசொல்லக்கேளாய் சுந்தரனருளினாலே
தோழிநான்பிறந்தேதிவ்வியச் சொகுசுறும்பருவங்கொண்டேன்
தோழிநான்வரடுமெண்ணந் தொலைத்திடக்கைலைவாசன்
தோழிதானருட்செய்வானோ சொல்லுவாய்த்தோன்றத்தானே.

(சங்-வ-ம்) அடி தோழி? எனக்குப்பருவம்வாய்த்து நான்படும்படியானதுன்பத்தை நீக்க கடவுளருள்வருமோ சொல்லடி அம்மா.

(தோழி-வ-ம்) அ! இதென்னபுதுமையாய்க்காட்டுகின்றது, கிணர்வெட்டப்போய் பூகம்புறப்பட்டவாறாயிற்று, சரி, சரி, இவள் பால்யமானதால் யாம் சிற்றின்பவிஷயமாய் எடுத்துப்பேசியதில் சித்தங்கலங்கி இவ்வாறு கேட்கலானாள், பெரிதல்ல இன்னமும்பார்ப்போம்.

சந்திரவதி தரு.

இராகம்-காம்போதி, தாளம்-ஆதி.

பல்லவி.

ஒருநொடியுகம்போல விருக்கையி லிதோதென்றல்
வருகுதென்னடிசெய்குவேன்.

அநுபல்லவி.

அருமையெந்துரையான வரிச்சந்திரரிங்குவர
அன்னமேநான்கொண்ட வெண்ணமுடியுமட்டும் (ஒரு)

சரணங்கள்.

மெய்யுஞ்சோருதேயென்றன் கையுமிடைதளர்ந்து
அய்யம்போலென்குஜங்க நொய்யுதடிமாதே

செய்யும்வகைகளொன்றுந் தெரியாமல்நானிருக்க
தையலேமதன்பாவி தான்புரிவகைக்காளாய். (ஒரு)
அன்னமருந்தயன மெண்ணமும்விட்டதாலே
சொன்னம்போலொத்தமேனி வண்ணங்குன்றிடலாகி
யென்னென்னமோமனதி லேக்கங்களாகுதையோ
வன்னையேவிரகமீறி யாளன்வரவைப்பார்த்தே. (ஒரு
பாடுங்கிள்ளைமொழியு மாடுமன்னநடையும்
நாடுங்களபமலர் தேடுமெண்ணமும்விட்டே
ஓடுதேயெந்தன்மன மோகோயெண்ணுதுமெண்ணி
வாடுதேயரிச்சந்திரர் வருவாரென்றேயோசித்து. (ஒரு)

(பொது-வ-ம்) இவ்விதமாகமோகமீறி சந்திரவதி சோகிக்க பாங்கியால் ஒருவாறு தேறுதலையடைந்தாள், இனி மதிதயராஜன் சந்திரவதி திருக்கலியாணத்திற்காக இராஜாராஜாக்கு மணவோலை அனுப்ப இராயசக்காரனை வரவழைக்கிற விதமறிவீர்கள் கனவான்களே.

மதிதயராஜன் விருத்தம்.

பழுதனைத்தையறியாத்திவ்யப் பண்புளமந்திரிகேளாய்
மழுவதைத்தரித்தோனீந்த மகள்சந்திரவதிக்கேயிங்கு
பொழுததுபோக்கிடாமற் பூமணவோலைதன்னை
யெழுதராயசனைநீயு மிக்ஷணம்வரச்செய்வாயே.

(மதி-வ-ம்) அப்பா மந்திரி? சந்திரவதிக்குத் திருக்கலியாணமென்று ஐம்பத்தாறுதேசத்து இராஜாக்களுக்கும் மணவோலையெழுத இராயசக்காரனை வரவழைப்பாய் மந்திரி.

(மந்-வ-ம்) அப்படியே அழைப்பிக்கின்றேன் வேந்தனே.

மந்திரி விருத்தம்.

ஆராடாகட்டியக்காரா வரைநொடிதனிலேசென்று
தீரனுநமதுராஜன் திவ்யமகள்தனக்கே
சீரதாய்மணம்நடத்துஞ் சேதியையறியமன்னர்
காரணமெழுதராயசக் காரனையழைப்பிப்பாயே.

(மந்-வ-ம்) அடா கட்டியக்காரனே? நமது இராஜன்மகளாகியசந்திரவதியம்மனுக்குச் சுயம்வரமென்று மணவோலையெழுத இராயசக்காரனைச் சீக்கிரமழைத்தோடிவருவாய் அப்பா.

(கட்-வ-ம்) அப்படியே யழைத்தோடிவருகின்றேன் சுவாமி,—ஐயா இராயசக்காரரே? அரசர் உம்மை யதிசீக்கிரமாயழைத்து வரச்சொன்னர் காலதாமசஞ்செய்யாமல் வருவீரையா.





(இராய-வ-ம்) அப்படியே வருகிறேனப்பா.

இராயசக்காரன் தரு.

இராகம்-ஆனந்தபைரவி, தாளம்-ஆதி.

பல்லவி.

இராயசக்காரன் வந்தான் வந்தானிதோ இராயசக்காரன்வந்தான்.

அநுபல்லவி.

நியாயமதையறிந்தே யுபாயமாய்மொழிசேர்த்தே
நாடியநினைவதை யேடதிலெழுதிடும். (இரா)

சரணம்.

தலையிற்பாகையுங் கட்டியே - அரைதனிலே
தனிச்சரிகையுள்ள வேட்டியே
விலையிலாவங்கியு மாட்டியே - கண்டவரோட
வேண்டிக்கைகளை நீட்டியே
கலைமகளருளினுற் கணக்கினு ணுக்கங்கற்றே
கருதிமதிதயேந்திரன் கனக்கொலுமுகமுற்றே. (இரா)

இராயசக்காரன் விருத்தம்.

ஜெகதலம்புகழ தேவரும்மகிழ
மகதலக்கன்னியை வளமிகுத்திடவே
யுகம்பலவேத்தி யுரைத்திடச்செங்கோ
லகத்துளேபுரியு மண்ணவலேபோற்றி.

(இராய-வ-ம்) போற்றி போற்றி மகாராஜனே போற்றி.

இராயசக்காரன் விருத்தம்.

மன்னனேயென்னை வரவழைத்திட்ட
தென்னகாரணமோ வியம்புவீர்போற்றி.

(இராய-வ-ம்) சுவாமி? அடியேனை வரவழைத்தக்காரியம் இன்ன தென்று தெரியப்படுத்தவேண்டும் மகாராஜனே.

மதிதயராஜன் விருத்தம்.

சீர்பெறுமைம்பத்தாறு தேசத்திலுள்ளவென்றன்
பேர்பெறுமரபைச்சார்ந்த பிரபலமன்னருக்கே
கார்முகிற்குழலாளானக் கன்னிசந்திரவதிக்குச்
சோர்விலாச்சுயம்வரந்தான் சூட்டலென்றறிவிப்பாயே.

(மதி-வ-ம்) அப்பா இராயசனே? எனதுபுத்திரியாகியசந்திரவதிக்கு நாளைவரும் சித்திரைமாதம், பதினைந்தாந்தெய்தி, புதவாரம், சுயம்

வரஞ் சூட்டலென்றறியத் தேசராஜர்களுக்கும் மணவோலை யெழுதும் பிள்ளாய் இராயசனே.

(இராயச-வ-ம்) மஹாபாக்கியம், அப்படியே யெழுதுகின்றேன் ஆண்டவனே —(எழுதுதல்) அரசே? தாங்கள் ஆக்கியாபித்தபடிக்கே யெழுதினேன்மஹாராஜனே.

(மதி-வ-ம்) எங்கெங்கதேசத்திற் கெழுதினாய்சொல்லும்பிள்ளாய்?

(இராயச-வ-ம்) அப்படியே சொல்லுகிறேன் சுவாமி.

## இராயசக்காரன் விருத்தம்.

அங்ககுடகம்மச்ச காம்போஜ ஆந்திரம்
அயோத்திபாஞ்சாலமகதம்
வங்கம்வங்காளமா ளவகுருகுபல்லவம்
மலையாளசூரசேனம்
கொங்கணம் கூர்ச்சரம் கேகயம்கேரளம்
கொல்லகோசலசாலவம்
தெங்கணம்பப்பரம் நேபாளம்குந்தளம்
சீனசவ்வீரகருசம்
சிங்களம்சோனகம் துறுவங்கடகஞ்சிந்து
திராவிடம்போடம் அருணம்
பொங்குபாண்டியசோழ காந்தாரகன்னட
புலிந்தமாராடகாசம்
துங்கமுறுகன்னடம் கிராடகாஸ்மீரகுரு
தேசரசரியா வருக்கும்
சங்கமகிழ்மணவோலை யெழுதினேனுத்தரவு
தந்திடிலனுப்புவேனே.

(இராய-வ-ம்) மேற்சொன்ன தேசத்தின் இராஜாக்களுக்கெல்லாம் ஓலை யெழுதினேன், உத்தரவானால் அனுப்பிவிடுகின்றேன் வேந்தே.

## மதிதயராஜன் விருத்தம்.

எழுதியவோலையைப் பழுதறவெனையே
தொழுதிடும்ராயசா கழறுவாயெனக்கே.

(மதி-வ-ம்) இராயசனே? இவ்வுலகத்தில் இருக்கும் இராஜாக்களுக்கெல்லாமெவ்விதமரியாதையுடன் நீ எழுதினாய், அதை யான்கேட்க விபரமாய் வாசியும்பிள்ளாய், சீக்கிரம்.

(இராயச-வ-ம்) அப்படியே வாசிக்கின்றேன் மஹாராஜனே.

## இராயசக்காரன் விருத்தம்.

மகராஜராஜ கெம்பீர மகராஜஸ்ரீ
மன்னுதிமன்னர் சமுகம்
வந்தனந்தந்துமிகச் சிந்தைகளிகூர்ந்து நான்
வரவிப்பதியா தென்னிலோ
யுகமாதிகன்னிலே மனுவாதிமரபினி
லுதித்துரவி மரபடைந்து
மூளமதில்யாவரும் புகழ்தரச்செங்கோலை
யூர்ஜித்து கன்னிநாட்டை
யகமகிழ்ந்தாளுமதி தயனுனநானின்ற
வழகுபெறுசந்திரவதியை
யடுத்தமேஷம்நடுவில் புந்திவாரமுச்சி
யமர்ந்தபஞ்சமி நாளிலே
ககனமாளும்விருஷப வுத்திரஞ்சுபபஞ்ச
கரணசுபயோகவணசி
காலத்திற்குருவோரை மணமாலைசூட்டவே
காரிமீதில்முறை சாட்டினேன்
ஜெகம்புகழ்வீரியம் தேஜசுமுடையநீர்
திரள்யந்து தளசகிதராய்
திருஷ்டித்தென்கோரிக்கை யீடேற்றுவீரெனச்
செய்யும் விண்ணப்பமிதுவே.

## மதிதயராஜன் விருத்தம்.

மந்திரிகேளாயிந்த மணவோலைதன்னையெல்லாம்
சுந்தரமுடையராஜர் சுருக்கதாயறிவதாகத்
தந்தனுப்பிடவேவேண்டுந் தாமசஞ்செய்யொணாது
விந்தையாய்ப்பந்தலுந்தான் விரைவினில்முடிப்பிப்பாயே.

(மதி-வ-ம்) மந்திரி? இராஜாக்கள், சந்திரவதியின் மணமாலை சூட்டலை தீவரத்தில் அறிந்துவரும்படிக்கு, இந்த ஓலைகளை அனுப்பிவிடு வாய் மணப்பந்தலுஞ் சித்தஞ்செய்குவாய் மந்திரி.

## மந்திரி விருத்தம்.

கேட்டீரோதூதமாரே கிடுகிடுத்திடவேபூமி
யோட்டமும்நடைகடந்தே யொருநொடிதனிலேசென்று
நாட்டமாயரசர்கட்கே நயப்புடனோலையீந்து
வாட்டமில்லாமலிங்கு வருகுவீர்வருகுவீரோ.

(மந்தி-வ-ம்) கேளுங்கள் தூதரே? தேசதேசராஜாக்களுக்கு இந்த மணவோலைகளைக்கொடுத்து சீக்கிரம் வருவீர்களப்பா தூதர்களே.

(தூதர்-வ-ம்) புத்தி, அப்படியே கொடுத்து வருகிறோம் சுவாமி.

மந்திரி விருத்தம்.

ஜாலஞ்செய்யாமற்கட்டியா ஜகதலத்துள்ளசர்வ
சீலமாம்வேலைசெய்யுஞ் சிற்பிகள்தனையழைத்தே
கோலமாய்நமதுசந்திர குணவதிமணத்திற்காகச்
சாலவேமண்டபத்தைச் சதிருடன்முடிப்பிப்பாயே.

(மங்-வ-ம்) பிள்ளாய் கட்டியனே? நமது நாட்டிலுள்ள சகலசிற்பிகளையும் அழைப்பித்து, சந்திரவதி அம்மன் கலியாணத்திற்காக ஒரு திவ்விய மண்டபம்முடிக்கச் செய்வாய் கட்டியனே.

(கட்-வ-ம்) அப்படியேசெய்விக்கின்றேன்சுவாமி (கட்டிமுடித்தல்)

கட்டியக்காரன் விருத்தம்.

மன்னனின்னருட்படிக்கே யுன்னதமாகநீங்கள்
சொன்னதோர்மண்டபந்தான் மன்னியேமுடிந்ததையா.

(கட்-வ-ம்) சுவாமி மந்திரியே? தாங்கள் உத்தரவு செய்தபிரகாரம் கலியாணமண்டபம் முடிவுசெய்தேன் ஐயா.

(மங்-வ-ம்) மஹாசந்தோஷம்,—(போய்பார்த்துக்களிப்புறல்.)

பொது விருத்தம்.

கன்னமாபுரியையாளுங் காவலன்மகிழ்ந்தேபெற்ற
வன்னமாமகள்தனக்கே மணமெனவோலையொன்று
சொன்னமாம்பசுமைகொண்டே ஜொலித்திடவரிச்சந்திரன்முன்
மன்னவன்விடுத்த தூதன் வணங்கியேயளித்திட்டானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? மதிதயமஹாராஜன் விடுத்த தூதன் வணங்கி சந்திரவதிமணத்தின் ஓலை அரிச்சந்திர மஹாராஜன் சமுகங்கொடுத்தன னென்றறிவீர்கள் கனவான்களே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

பார்த்தையோமந்திரியென்றன் பாக்கியமேபாக்கியமாகும்
சாத்திரிமார்கள்வாக்கு சடுதியில்முடிவதாக
நேத்தியாய்மணத்திறைலை நெறியுடன்வந்ததாலே
சாத்தியமாய்ப்போகவேணுந் தளமதைச்சேர்த்திடாயே.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? வேதியர்கள் சொல்லிப்போன காரியம்

முடிவானதுபோற் காணுகின்றது, சந்திரவதிக்குச் சுயவரமென்றுதிரு மணப்பத்திரிகை மதிதயராஜன் அனுப்பியிருக்கிறான், நாங்போகவே ண்டும் தளமுதலானவைகளைச் சித்தஞ்செய்விப்பாய் மந்திரி.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

என்மனக்கவலைநீங்கி யிருந்திடமதிதயந்தான்
நன்மையாயளித்ததிவ்விய நங்கைசந்திரவதிக்கே
யின்னிலமதிக்கவேநீ யீந்ததோரோலைபார்த்தேன்
ஜென்மசாபல்லியமாச்சு செப்புவாயவர்க்குத்தானே.

(அரி-வ-ம்) அப்பா தூதனே ? நீகொண்டுவந்து கொடுத்த ஓலையை வாசித்து ஆனந்தபரவசனானேன், நீ சுபம்வாழ்த்தி போய் வருவாய் தூதனே.

(தூதர்-வ-ம்) அப்படியேபோய் வருகின்றேன் மஹாராஜனே.

தூதன் விருத்தம்.

வேந்தனேபோற்றி விமலனேபோற்றி
சாந்தனேயுன்றன் தாளடிபோற்றி.

(தூதர்-வ-ம்) போற்றிபோற்றி மதிதயமஹாராஜனே போற்றி.

மதிதயராஜன் விருத்தம்.

எங்கெங்குநீதான்சென்று யெவரொவர்க்கோலையீந்தா
யங்குளமன்னர்சொன்ன வதிசயவார்த்தையாது
பொங்குளவரிச்சந்திரன்பாற் போனையோகண்டாயோதா
ளிங்ஙனேமனங்களிக்க விடம்புவாயியம்புவாயே.

(மதி-வ-ம்) அடா தூதனே, எங்கெங்த இராஜாக்களுக்கு மணவோலைகள் கொடுத்தாய், அங்கு நீ கேட்ட அதிசயவார்த்தைகளென்ன ? அரிச்சந்திரமஹாராஜனிடம் போயிருந்தையா ? எனக்குத்தெரியச் சொல்லும் பிள்ளாய் தூதனே.

தூதன் விருத்தம்.

தேசதேசாதிமன்னர் செங்கோலுமுன்றுற்சென்று
தாசனாய்நின்றேயோலைச் சாதித்தேன்கைக்கொண்டார்கள்
வாசகல்மலரணிந்த மன்னவனையோத்திவேந்த
ராசையாய்வாங்கிக்கொண்ட வானந்தமென்சொல்வேனே.

(தூதர்-வ-ம்) ஆண்டவனே ? எல்லாராஜாக்களும் நான்பணிந்து கொடுத்த ஓலையை வாங்கிக்கொண்டார்கள், ஆனால் அரிச்சந்திரமஹா

ராஜன் மாத்திரம் மணவோலையை வாங்கிப்பார்த்தவுடன் கொண்ட ஆனந்தத்தை சொல்ல என்னொருநாவாலாகாது வேந்தனே.

(மதி-வம்) அப்படியா !!! சரி.

## மதிதயராஜன் விருத்தம்.

மந்திரிதூதர்தாமும் மனமதுகளிக்கநீதான்
தந்துமேபொன்பட்டாடை சடுதியிலனுப்புவாயே.

(மதி-வ-ம்) அப்பாமந்திரி ? இந்ததூதர்களின் மனங்களிக்க நல்ல வெகுமதிகொடுத்தனுப்புவாய் மந்திரி, வெகுகெட்டிக்காரர்கள்.

(மந-வ-ம்) அப்படியே யிதோகொடுத்தனுப்புகிறேன் சுவாமி. அடா தூதர்களே ? இந்தபொன்பட்டாடை வாங்கிக் கொள்ளுங்களப்பா.

(தூதர்-வ-ம்) மகாபாக்கியம், அப்படியேபெற்றுக்கொள்ளுகிறோம்.

## பொது விருத்தம்.

அரசன்முன்னடந்தசர்வ வனைத்தையுங்கேட்டதோழி
வரிசையாய்மாதுசந்திர வதிக்குரைசெய்குவாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? மதிதயராஜன் கொலுவில் நடந்த சங்கதிகளைக் கேட்டிருந்ததோழி, ஓடோடிவந்து சந்திரவதிக்குச்சொல்லுகிறவிதங் காண்பீர்கள்கனவான்களே.

## தோழி விருத்தம்.

கற்பினிலுயர்ந்ததிவ்விய கனசந்திரவதியேபோற்றி
நற்குணமுடையவென்றன் நாயகிபோற்றிபோற்றி.

(தோழி-வ-ம்) போற்றிபோற்றி, என் இராஜாத்தியேபோற்றி.

## சந்திரவதி விருத்தம்.

ஏதடிமாதேநீதா னெங்குற்றுவந்தாயிப்போ
ஓதடிநானுங்கேழ்க்க வொளிக்காமல்நடந்தவாறு
வாதடிகாமன்செய்யும் வகையினுலுருகுகின்றேன்
போதடியென்றன்ஜன்மம் புனிதமாவாறுசொல்வாய்.

(சந-வ-ம்) அம்மாசவுந்தரவல்லி ? நீயெங்குபோயிருந்தாய் ? என்ன விசேஷங்கேழ்விப்பட்டாய் ? தெரியப்படச் சொல்லடிபாங்கி.

## தோழி விருத்தம்.

தாயேநீகேளாயுன்றந் தந்தையுஞ்சுயவரத்தை
நேயமாய்முரசுசாட்டி நீணிலத்தரசர்க்கெல்லாம்
வாய்வேகதூதர்கையால் மணவோலையனுப்பக்கண்டு
காய்முங்களித்தயோத்தி காசிபன்மகிழ்ந்தான்கண்டாய்.

(தோழி-வ-ம்) அம்மாசந்திரவதியே? உனக்குத்திருக்கலியாண மென்று மணவோலை அரசனனுப்பக்கண்ட அரிச்சந்திரமஹாராஜன் மெத்த சந்தோஷப்பட்டாரென்றுசபையில் உமதுபிதாவினிடத்தில் தூதுவர்சொல்லக்கேட்டு உமதிடந்தெரிவிக்கவந்தேனம்மணி.

## சந்திரவதி அகவல்.

என்னடிதோழி யேதுநீபுகன்று ய்
அன்னமேயயோத்தி அரசருமிங் கு
வருவரோவென்னை மணர்வரோவின்ப ம்
தருவரோவுரைப்பாய் சத்தியமாய் நீ
சொல்லடிமகிழுறச் சொகுசுளமணி யே
யில்லடியென்பரம் நினைவதுமுடி ய
காலமும்வருமோ கருத்துக்கிசைந் த
லோலரும்வருவரோ நுகருவாய்பாங் கி
போவதுமேனெனப் புந்தியில்மதித் தே
சாவதானமதாய் தடையதுபுரிந்திடி ல்
என்னடிசெய்குவே னென்னுயிர்த்தோ ழி
பன்னடிதெரியப் பண்புடநீதா ன்
அரசருக்கென்போ லானவொத்த னை
அரசிபருண்டோ வறிகிலேனென்ற ன்
மோகம்பொல்லாது முடிவறியேன்மன த்
தாகம்தில்லாதே சகிப்பதெப்படி யோ
கருத்துக்கிசைந்த கன்னிகையென வே
உரைத்தனனுனக்கே யுயிர்த்துணையா ளே.

## தோழி விருத்தம்.

சந்தேகம்விடுவாயென்றன் தாய்சந்திரவதிநீகொண்ட
விந்தையாங்கருத்திடேற வேண்டியவ்வரசரிங்கே
வந்திடுவார்நான்கண்ட வகையுளகனவினாலே
யுந்தனுக்குரைத்தேன்நீதா யுதியென்றுணர்வாயம்மா.

(தோழி-வ-ம்) அம்மா? நான்கண்டகனவுபொய்க்காது, நீ கோரிய புருஷனே உன்னைக்கூடுவார், தைரியத்துடனிருப்பாய் தாயே.

## சந்திரவதி விருத்தம்.

நல்லதுகண்ணே சொல்லியவாறு
வல்லவர்வந்தா லல்லவோமகிழ்வேன்.

(சந்-வ-ம்) அடிதோழி? நீசொல்லியபடி, அவர் வந்தகாலத்திலல்லவோ நான் மகிழ்வேன் சவுந்தரவல்லி.

(தோழி-வ-ம்) அகத்தியம் வருவாரம்மா நீசந்தோஷமாயிருப்பாய்.

பொது விருத்தம்.

மதிதயனிடத்திற்சென்று மகிழுடன்வார்த்தையாடி
கதிகொண்டகருத்தீடேற்றி கருதியெயயோத்தியென்னும்
பதிதனையாளும்வேந்தன் பக்கலைநாடி திவ்விய
நதிதனைக்கண்டவந்த நம்பிகளிதோவாராரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? மதிதயராஜனைக்கண்டுபேசிய சங்கதிகளை அரிச்சந்திரமஹாராஜனுக்குத்தெரிவிக்கவேண்டி யாத்திரைப்பிராமணாள்வருகின்றார்கள் கனவான்களே.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

அண்ணலேயாசீர்வாத மரிச்சந்திரா வாசீர்வாதம்
விண்ணவர்மதிக்கும்நீதி வேந்தனேயாசீர்வாதம்.

(யாத்-வம்) ஆசீர்வாதம் ஆசீர்வாதம் அரிச்சந்திர மஹாராஜனே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அருமறைவேதநாலு மங்கமாய்ப்பூண்டதிவ்விய
குருபரவையமாரே கும்பிட்டேன்வருவீர்சுவாமி.

(அரி-வ-ம்) வாரும் வாருஞ்சுவாமிகளே? இந்த ஆசனத்தின்பேரில் எழுந்தருள்வீர்கள் ஐயமாரே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்,

மதிதயராஜந்தன்னை வணங்கவேகண்டீரோதான்
சதியெனைக்கூடத்தக்கச் சம்பந்தமுடித்திட்டீரோ
பதிகளேமணத்திருேலை பண்புடனனுப்பக்கொண்டேன்
கதிபெறுகன்னிதேசங் கடையன்பின்வருகுவீரே.

(அரி-வ-ம்) சுவாமிகளே? தாங்கள் எனக்காக சம்பந்தம்பேசி முடித்தீர்களா, மதிதயராஜன் அனுப்பிய மணவோலை நான் கைக்கொண்டேன், என்னுடன் தாங்களும் கன்னமாபுரிக்கு வருகவேண்டும் வேதியர்களே.

யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

தருமமுஞ்சத்தியம்நீதி தண்மையும்நிறைந்தகல்வி
பொறுமையும்படைத்தயோத்தி பேர்பெறவரசுசெய்யும்
குருமொழிபிசகாமன்ன கொண்டவுன்கருத்திடேற
திருபனேசுயவரந்தான் நிகழ்த்தினன்மதிதயேந்திரன்.

(யாத்-வ-ம்) அரிச்சந்திரமஹாராஜனே ? நீ கொண்ட கருத்திடேற்ச் சந்திரவதிக்குச் சுயவரஞ்சாற்றினர் தெரிகுவாய் வந்தேனே.

(அரி-வ-ம்) அப்படியா ! மகாசந்தோஷம் !

சத்தியகீர்த்தி விருத்தம்.

அண்ணலேநீர்தான்சொன்ன வாக்கினைப்படியேசேனை
வண்ணமாம்பரிகஜங்கள் வகையுளரதமுஞ்சேர்த்தேன்
நண்ணியேகன்னிநாட்டை நாடியேநடக்கநேரம்
பண்ணுவதேனோவுன்றன் பாதமேபோற்றிபோற்றி.

(சத்-வ-ம்) மஹாராஜனே ? தங்களுத்தரவின்படிக்கே இரதம்,கஜம் பரி, சேனைமுதற்சித்தஞ்செய்தேன், கன்னமாபுரிக்குப்போகத் தடை செய்வதேன் என் ஆண்டவனே.

(அரி-வ-ம்) அப்படியா ! இப்போதே போகலாம் மந்திரி.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அய்யரேயடியேன்கொண்ட வாவலும்நீங்கக்காலம்
பையவேவந்ததாலே பண்புடனீங்களெல்லாந்
துய்யமாங்கன்னிதேசந் தொடர்ந்தென்பின்ரதத்திலேறி
மெய்யரேவருவீர்போவேன் மெல்லியைமணரத்தானே.

(அரி-வ-ம்) சுவாமிகளே ? நானிதோ சந்திரவதியைத் தங்கள் தயவாற் கலியாணஞ்செய்யக் கன்னமாபுரிக்குப் போகின்றேன், தாங்களும் இரதத்தின்பேரிலேறி யென்கூடவருவீர்கள் சுவாமிகளே.

(யாத்-வ-ம்) மஹாசந்தோஷம், அப்படியே வருகின்றோம் பிரபு.

அரிச்சந்திரராஜன் தரு.

இராகம்-அடாணா, தாளம் ஆதி.

பல்லவி.

போவோம்வருவீர் ஐயமாரே நாம் ஒருமையாய் (போ)

அநுபல்லவி.

ஆவும்மதிதயன்றன் கன்னமாபுரிதேடி
கருதியவென்மனக் கவலைகள்நீங்க
பரிதியின்குலமது பண்புடனோங்க. (போ.)

சரணம்.

இந்தவுபேப்பை அணிவீர் - சுபங்கள்சொல்லி
யென்னுடன்ரதமேறுவீர்

கந்தமலரைத் தாவுவீர் - வழியிற்தோற்றும்
களைநீங்கச்சோலை யுருவீர்
சந்தசம்புகழைப் பெறுவீர் - என்னை
தன்னியனுக்கியக் கன்னியவான்களே
புன்னியகருமத்தை யின்னிமைமுடித்திட. (போ)

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அண்ணலேயெனதுதிவ்விய வந்தணமாரேயிந்த
நண்ணரும்பாலைதன்னில் நான்கண்டேன்க்ஷேத்ரமொன்று
கண்ணதிற்தோற்றுதையா கண்டுநான்போற்றிவாரேன்
வண்ணமாம்ரதத்தின்மீதே மகிழுடனிருந்திடீரே.

(அரி-வ-ம்) ஐயமாரே ? இந்தப்பாலைவனத்தில் ஏதோ ஒரு திவ்ய சந்நதானம் தோன்றுகிறது, நான் போய் தரிசித்துவருகின்றேன் நீங்கள் இவ்விடமிருப்பீர்கள் வேதியர்களே.

(யாத்-வ-ம்) அப்படியே, சீக்கிரம்வருவீர் பிரபு.

## பொது விருத்தம்.

அரசனுமறையோர்தன்பா லனுமதிபெற்றேபாலை
சுரமதில்தோன்றுந்திவ்விய சுந்தரிகோயிற்புக்கி
கரமதைக்குவித்துநின்றே கன்னியையெகுவாருக
சிரமதுவணங்கிப்போற்றி செய்குவான்செய்குவானே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? வருகிறவழியில் ஒரு திவ்யகோயிலைக்கண்டு அரசன் பிராமணர்களை நிறுத்திவிட்டுசந்நதிக்குத்தனியாய் வந்து அம்மனைப்பார்த்து மானதபூசைசெய்கிறவிதங்காண்க.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அந்தரிகபாலிநீலி யபிராமிசூரிவீரி
மந்தரிவாலைகௌரி மனோன்மணிமயிடாந்தன்னை
சுந்தரிவதைத்ததேவி சொல்லொணுமுக்குணத்தி
யிந்தநல்வனத்தில்தோன்று மீஸ்வரியெனையாள்வாயே.

காலனையுதைத்தோன்கூடக் கைலையில்வாழுந்தேவி
பாலனையளித்தேதேவர் பட்டத்தைக்காத்தசூலி
சீலமாமாதிநூலைச் செம்மலுக்களித்தவேலி
கோலம்நான்கொண்டவெண்ணங் கூடிடவருள்வாய்போற்றி.

சடலையிற்சிலம்புபேசச் சுந்தரனுடனேயன்று
படமுளநாகம்பாடப் பண்புடனடித்தசிலி
கடலுறுலோகம்வாழுங் கனவுயிர்காக்கும்பாலி
சடலமுமுனதேயாகுஞ் சாம்பவியருள்வாய்போற்றி.

(அரி-வ-ம்) அம்பா ? ஏ முக்கண்தேவியே ? ஈரேழுபுவனங்களேயும் அதிலுள்ளடங்கிய சீவராசிகளேயும் காத்து ரட்சிக்குந் தயாநிதியுடையவளே மாதே எட்டிரண்டுமறியாப்பேதையேனை எக்காலமும் சற்றுக்கடைக்கண் கிருபைவைத்து காப்பாற்றுவதன்றி, இப்போது மனக்கவலையுற்றிருக்கும் வேளையில்வந்து அபையஸ்தங்கொடுத்து காரும் காரும் சௌவுந்தரவல்லியே.

## பொது விருத்தம்.

தேவிமுன்னரசனின்று சிரத்தின்மேல்கரத்தைத்தூக்கி
யாவியையுள்ளடக்கி யம்பிகைப்புகழைப்போற்றி
கூவியமுறையைக்கேட்டுக் கோமளிமனமகிழ்ந்தே
தாவியேயரசன்முன்னே சாம்பவிதோன்றினாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இந்தவிதமாக அரிச்சந்திரமகாராஜன் வணங்கிநிற்கச் சாம்பவியும் பிரசன்னமாகி வருகிறவிதமறிவீர்கள் சனவான்களே.

## பராசத்தி தரு.

இராகம்-மத்தியமாவதி, தாளம்-ஆதி.

பல்லவி.

பராசத்திதோன்றினாளே தானேதாய் பாலேவனந்தனிலே.

அநுபல்லவி.

சராசரபுவனமுந் தன்மயமாயிலங்க
சாம்பவிவிண்ணோர்க ளேத்தும்
பாம்பணி ஜடாதரி. (பரா)

சரணம்.

திருமுகஞ் சதுர்ப்புஜமும் - அன்பர்கள்காண
திவ்வியசூலமுந் துலங்க
ஜெகத்துள மற்றதெய்வமும் - அம்மைமகையிற்
சிக்கினல்மனங் கலங்க
அருண கிரணமணி யணியும்பரி பூரணி
யம்பரி மனோன்மணி யருளளிக்குங் காரணி

ஆடப் பூதங்கள்சுத்தி நாத வுடுக்கையாலம்
பாடச் சிலம்பொலிகள் கூடச் சாந்தமாக
அம்ரீம்சம்ஸ்ரீ மானந்தசுந்தரி
ஐயுங்கிலியுமோ மருளுந்தயாபரி. (பரா)

அரிச்சந்திரராஜன் கலித்துறை.

மாதவிசாமளை வாலையானந்தி வராகிபொல்லாக்
காதகவேமன் றனையுதைத்தோன்மகிழ் கௌரிசூரி
சாதகிகாடதில் வாழ்ருத்ரிசங்கரி தாங்கியெனை
யாதரிவேதி தயாபரிதிரிபுரை யம்மணியே.

பராசத்தி விருத்தம்.

புகழ்பெருமயோத்திநாட்டைப் பொங்குடனரசுசெய்த
மகிழுறுதிரிசங்கீன்ற மைந்தனேசதாநீவாழி
திகழ்பெறமுனிவர்யோகர் செயும்பெருந்தவங்களோங்க
நிகழ்நிதியளிக்குந்திவ்விய நெறியரிச்சந்திரவாழி.

வேறு.

அந்தமாம்ரவிகுலத்தி லவதரித்திட்டபாலா
வுந்தநற்றேத்திரத்தா லுருகியேமனமகிழ்ந்தேன்
னிந்தநல்வேளைதன்னி லெங்குநீயேகுகின்றாய்
வந்தகாரணந்தானென்ன வழுவுறவுரைசெய்வாயே.

(பரா-வ-ம்) அப்பா இரவிகுலம் கீர்த்திபெற அவதரித்தபாலனே ! நீ இரதாரூடனாக எங்கு செல்கின்றாய்? என்னைக்காணவந்த கோரிக்கையென்ன ? தெரியச்சொல்லுவாய் மைந்தா.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

சாம்பவிவினவிப்பேனுன் சந்திரவதிதனக்கே
சாம்பவிசுயம்வரந்தான் சாற்றினன்மதிதயேந்திரன்
சாம்பவியவள்மேற்சேயன் றனிமனமுருகிக்கூட
சாம்பவிபோகலானேன் றயேநீவரமீவாயே.

(அரி-வ-ம்) அம்பா ? சந்திரவதிக்குசுயம்வரமானதால் அவளைமாலையிட்டுச் சுகமடையக்கருதிப்புறப்பட்டுவரும்வழியில் உன்னுடையதரிசனஞ்செய்து என்கோரிக்கை ஈடேறும்படியான வரம்பெறவந்தேன் தாயே, ஆனதால் கிருபைசெய்தாட்கொள்ளவேண்டும் அம்மணி.

பராசத்தி விருத்தம்

பாலனேபரசேயந்தப் பவையாம்மதிதயேந்திரன்
சாலவேவரத்தாற்பெற்றச் சந்திரவதியாம்மாது

நீலவேல்விழியாள்தன்னை நீமணஞ்செய்வாய்நித்தியம்
கோலமாயிருவரொத்துக் குவலயமாள்வீரப்பா.

(பரா-வ-ம்) அப்பா பாலகா ? அந்தச் சந்திரவதி யுனக்கே பாரியாவாள்; நம்புவாய் நீங்களிருவரும் மனதொத்துச் சகலசாம்ராஜ்ஜியத்துடன் அரசாண்டிருப்பீர்கள் அப்பா வேந்தனே.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

தாயேயீதென்னகோலஞ் சற்றுமுன்னெனக்கீதெல்லாம்
தாயேகேள்கருங்கல்லாகத் தான்தோற்றக்கண்டேனிப்போ
தாயேபார்பசும்பொன்னாகத் தனுக்குதேபுதுமையாதோ
தாயேநானறியநீதான் தயைபுரிந்துரைசெய்வாயே.

(அரி-வ-ம்) அம்மணி ? நான் இங்குவரும்போது இவைகள் கல்லாகக்காணப்பட்டன, இப்போது பொன்னாகக்காணுகின்ற புதுமையைச்சற்றுதயையுரிந்துசொல்லவேண்டுஞ் சங்கரி.

## பராசத்தி விருத்தம்.

வருணனுமுலகையாண்டு வளவிற்குப்போகுங்காலை
யுருவுளதேர்வில்லம்பை யுதிக்கக்கல்லாகச்செய்தே
யிருத்தியென்வசத்தில்யார்க்கு இதுபொன்னாய்த்தோன்றுங்கா
கருதிநீகொடுப்பாயென்றான் கைக்கொள்வாய்வேந்தேநீயே. [லே

(பரா-வ-ம்) அப்பா பாலகா ? வருணன் உலகையாண்டு தன்பதிக்குப்போகுங்காலையில் இந்தத் தேர், இரதம், வில் முதலானதுகளையும் கல்லாயிருத்தி என்னடம்வந்து இதுகள் யாருடையகண்களுக்குப்பசும்பொன்னாய்ப் புலப்படுகிறதோ அவருக்குக் கொடுத்துவிடும்படிசொன்னான், ஆனதால் நீ ஒப்புக்கொள்வாய் வேந்தே.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

எனையீன்றமாதேயம்பா வென்குலதேவிநீதான்
தனையனைவிரும்பியீந்த தனுசம்புரதமுங்கொண்டேன்
முனையெனைநாளுங்காக்கும் மூதண்டியடியேன்செல்லத்
துணையருள்தருகவேண்டுஞ் சுந்தரிநின்றாள்போற்றி.

(அரி-வ-ம்) அம்மணி ? எனக்காக வைத்திருந்துகொடுத்த இரதம், வில், அம்புமுதலானதும் கைக்கொண்டேன், இன்றுமுதல் நீ எனக்குத்துணையாயிருக்கும்படி வேண்டினேன் அருள்செய்வாய், நான்போகச்செலவுதாரும் தாயே, இதோ போற்றிசெய்தேன்.

## பராசத்தி விருத்தம்.

மைந்தாவித்தேர்மேலேறி வளர்கையில்வில்லைத்தாங்கி
மைந்தாநீபரியைப்பூட்டு வாழ்கன்னிநாடடைந்து
மைந்தாநீகருதுமாதின் மாயசூக்திரமுங்கண்டே
மைந்தாநீயவளைமேவி மண்மீதில்வாழ்வாய்வாழி.

(பரா-வ-ம்) அப்பா இராஜனே ? நீ சந்திரவதி சுயம்வரத்தில் அவளிடமிருக்கும் பரமசூத்திரத்தைக்கண்டு சொல்லவே அவளுனக்கு மாலையிடுவாள், நீ சுகமாய்வாழும்படி வரந்தந்தேன், போய்வருவாய் வேந்தனே.

(அரி-வ-ம்) அப்படியே போய்வருகின்றேன் தாயே.

## யாத்திரைப்பிராமணாள் விருத்தம்,

சென்றதோரிடத்தில்நீர்தான் தரிசித்தக்ஷேத்திரம்யாது
கண்டதோர்புதுமையேதோ சழறுவீரறியத்தனே.

(யாத்-வ-ம்) இராஜனே ? நீ சென்று தரிசித்தக் கோயிலும், அங்கு நடந்தவாறும் இந்தத் தேர் முதலானதும் கிடைத்தவகையும் தெரியச்சொல்லவேண்டுமெகாராஜனே.

(அரி-வ-ம்) அப்ப்டியே சொல்லுகின்றேன் சுவாமி.

## அரிச்சந்திரராஜன் அகவல்.

அய்யனேகேளீ ரடியனுந்தங்களை
பையயவேபிரிந்து பற்றியேதனிவழி
சென்றனனங்கே செழும்பொன்னிறமாய்க்
கண்டேனோர்க்ஷேத்திரங் கானகந்தனிலே
யென்னநானுரைப்பே னேதெனப்புகல்வேன்
வன்னமாமதிலும் வளர்ந்தகோபுரமும்
படிக்கட்டினழகும் பகரொணுஸ்தம்பமுந்
துடியிடைசங்கரி ஜொலித்திடுமெரையும்
மூலஸ்தானமும் முன்னடிபீடமும்
வேலனையீன்ற விமலிநுண்ணுருவை
கண்ணினாற்கண்டேன் கழறுவேன்கேளீர்
விண்ணினிற்கிட்டா விழிகளுநாசி
நேர்மையுஞ்சதுர்புஜம் நிகழ்த்தொணு தூலமுங்
கூர்மையுள்வேலுங் குறிப்பிடுசூலமும்

பிண்டியுமுடுக்கையும் பெரும்பூகப்படையு ஞ்
சண்டிகையேறுந் தனிச்சிம்மாசமு ம்
கபாலபாத்திரமுங் கண்டுகைகட்டி யே
துவாரபாலன்போற் றொழுதெதிர்நின் றே
யந்தரிகௌரி யழகுளவிய வி
வீந்தரிநீலி வெற்றிகொள்சூ லி
பாசாங்குசத்திப் பகரொணாச்சத் தி
யாசாவிரக்தி யடங்காப்பிடா ரி
தேவிமனோன்மணி திரிபுரைமாத வி
தாவிடுபார்வதி சங்கரிகம லி
யாக்ஷிகிழத்தி யானந்தபைர வி
தாக்ஷிமையில்லாத் தயாபரிசாம்ப வி
யென்றுநான்படித்தே யேத்தியேதொழ வே
நன்றுளமகிழ்ந்தே நாயகியென்மு ன்
ஜலஜலவெனுமோர் சப்தத்துட னே
கலகலநகைப்புடன் கண்முனேதோன்ற வே
தாயேநீயெனைத் தர்க்காவென வே
சேயேயெங்ஙனஞ் செல்கின்றாயென்றன ள்
கன்னமாபுரியின் கன்னிகைக்கா க
வன்னையேபோகிறே னளித்திடுவர மே
யம்மணியென்றே யடிபணிந்தேத்த ச்
செம்மணிமகிழ்ந்தே ஜெயம்ஜெயமென்றன ள்
பாலகாவோர்குறி பாங்கிக்குமுண் டு
சாலவேயுனக்குத் தானதுதோற்றிம ஃ
துரைக்கவேமகிழ்ந்தே யுனையவள்கிட்டி யே
விரைவினில்மாலையை விளங்கவுன்கழுத்தி ல்
சூட்டுவள்நீயுஞ் சுகமடைவாயெ ன
காட்டுமென்றொளிக்கிவைகல்லதாய்நின்றது ம்
பசும்பொன்னிறமாய்ப் பகரொணாவொளியா ய்
விசும்புவதேதென வினவினேன்றே வி
யாதியில்வருணனு மன்புடனீந் த
ஜோதியுளரதமுஞ் சொகுசம்புவில் லு
மிங்ஙனேவைத்தே யேகிடுங்கா லை
தங்கமரயார்க்கிது தாறொளிகாட்டு மோ
வவர்க்கிதையளிப்பா யன்றியேமற் ற
வெவர்க்குமீயாதென வியம்பியவா று

கண்டுநீசத்தியவான் சுளிப்புடனிகைகளை க்
கொண்டுமேசெல்லெனக் கொடுத்தனளடைந்தே
யையநான்வந்தே னினிவருமதன்மே த்
பைய்யவேவருவீர் பற்றுவோம்வழி யை.

(யாத்-வ-ம்) அப்படியா ! மகாசந்தோஷம், உமதுபெருமையே பெருமை, இனிபோய்வருவோம் பிரபு.

பொது விருத்தம்.

தேசதேசாதிமன்னர் சேர்ந்தெதிர்செல்லக்கண்டு
பாசமாயயோத்திமன்னன் பதிந்தவர்தமைக்கலந்தே
நேசமாய்வார்த்தையாடி நிகழ்மணச்சாலைநோக்கி
வாசமாய்வருகும்வேந்தர் வகையினியறிகுவீரே.

(பொது-வ-ம்) சபையோரே ? அரிச்சந்திரமகாராஜன் வருகிற வழியில் மற்றதேச அரசனைக்கண்டு அவர்களுடன் தானுங்கலந்து சந்திரவதி சுயம்வரச்சாலைக்கு வருகிறவிதங் காண்பீர்கள் கனவான்களே.

தேசாதிபதிகள் தரு.

இராகம்-காம்போதி, தாளம்-ஆதி.

பல்லவி.

அகிலபுவனத்துள்ள ஐம்பத்தாறுதேசத்தின்
அரசர்களிதோவந்தார் மணத்திற்காக
அரசர்களிதோவந்தார்.

அநுபல்லவி.

சகலவாத்தியமுடன் சங்கொலியோங்கிட
சதுர்விததளங்களும் தான்திரளாய்வந்திட
மகபதியின்தவத்தால் வந்தசந்திரவதியாள்
மணத்தைக்கோரியேமண மண்டபந்தனைநாடி. (அ)

சரணம்.

ஆலவட்டசாமர மழகுகொடிகளோங்க
அணியணியாய்ரத பஸ்வக்கூட்டந்துலங்க
சாலவேகஜவர்க்கஞ் சம்பிரமமாயிலங்க
தகமையாயவரவர் தாவியானந்தம்பொங்க
நீலவிழியாளான நேர்சந்திரவதிதனை
நீநான்மணர் வேணென்று
தானேதானாய் மகிழ்ந்து. (அ)

## மதிதயராஜன் விருத்தம்.

இத்தலந்தனிலேயுள்ள வினியதேசங்களாளும்
உத்தம ராசரான வுசிதரேசரணம்வாரீர்.

(மதி-வ-ம்) வருவீர்கள் வருவீர்கள், மன்னுதிமன்னர்களே சரணம், இந்ததிவ்வியஆசனங்களின்மீதிருப்பீர்கள் வேந்தர்களே.

## பொது விருத்தம்.

சந்திரவதிமணத்தைத் தான்பார்க்கவேண்டிதிவ்விய
விந்தமாமேருவிட்டு விஸ்வாவித்திரர்வாராரே.

(பொது-வ-ம்) சபையோர்களே! சந்திரவதியம்மன் திருக்கலியாணத்தின் மகிமையைப் பார்க்கவேண்டி விஸ்வாமித்திரமுனி வருகிற விதங்காணுவீர்கள் கனவான்களே.

## விஸ்வாமித்திரர் தரு.

இராகம்-தோடி, தாளம்-ஆதி.

பல்லவி.

ராஜராஜனுக நவிலுலகாண்டதிவ்விய
ராஜரிஷியும்வந்தார் - விஸ்வாமித்திர
ராஜமுனிவர்வந்தார்.

அநுபல்லவி.

தேசதேசங்களெல்லாந் திகழுடன்தனைப்போற்ற
திரிசங்குக்குமன்னுளிற் றிகழுந்தரம்படைத்த. (ரா)

சரணம்.

உத்தமன்குருமொழி யுணர்ந்தேகடப்போனிந்த
வுலகரசரில்கீர்த்தி யோங்குமரிச்சந்திரன்றன்
அத்தன்மேல்வைத்திட்ட வபிமானந்தனையெண்ணி
அயோத்திபன்மணக்கோல மடைந்தேகளிக்கநண்ணி. (ரா)

## மதிதயராஜன் விருத்தம்.

அத்தனையகத்துண்ணுட்டி யன்புடனேத்துந்திவ்விய
வித்தகவிஸ்வாமித்திர வெந்தையேபோற்றிபோற்றி.

(மதி-வ-ம்) போற்றி போற்றி விஸ்வாமித்திர மகாமுனியே போற்றி.

## விஸ்வாமித்திரன் விருத்தம்.

மகதநாடாளுகின்ற மன்னனேவாழிவாழி
ஜெகதலந்தனிலேயுன்றன் செங்கோலுநீதிவாழி.

(விஸ்-வ-ம்) வாழிவாழி மதிதயராஜனே வாழி.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அந்தநாளென்றன்தந்தை யண்ணலின்றுயர்க்கிரங்கி
விந்தமாயந்தரத்தில் மேவிநற்சுவர்க்கந்தன்னை
சுந்தராவமைத்துமங்கே சுகமுடனிருக்கச்செய்தே
யெந்தனையடிமைகொண்ட விறைவனேபோற்றிபோற்றி.

(அரி-வ-ம்) எனது தந்தை திருச்சங்குமகாராஜன்தானடையவேண்டுமெனக்கோரிய வெண்ணமதை யந்தரவாசிகளாற் தடைபட்டதைப்பற்றித்துயருற, அக்காலே தங்கட்தவப்பலனால் வேறுசொர்க்கமளித்து இரட்சித்த தயாநிதியே, இதோ நின்றாளடிபோற்றினேன், காரும் காரும் ஆண்டவா.

## விஸ்வாமித்திரன் விருத்தம்.

திரிசங்கின்மைந்தாவாழி ஜெயவரிச்சந்திராவாழி
பெருநீதிகுணமும்யோக்கியம் பெற்றவாவாழிவாழி.

(விஸ்-வ-ம்) வாழிவாழி அரிச்சந்திரமகாராஜனே வாழி.

(மதி-வ-ம் இந்த இரத்தினபீடத்தின்மீது வீற்றருளவேண்டும் முனிநாதா.

(விஸ்-வ-ம்) மகாசந்தோஷமப்படியே மதிதயராஜனே.

## பொது விருத்தம்.

சீடன்றன் மணத்தைப்பார்க்க திவ்யவசிஷ்டமூர்த்தி
நாடதையடையவேண்டி நடந்திதோவருகின்றாரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? தனது சீஷனாகிய அரிச்சந்திரமகாராஜன் விவாகத்தைப் பார்க்கவேண்டி, வசிஷ்டமகாமுனிவர் வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

## வசிஷ்டர் தரு.

இராகம்-சஹானா, தாளம்-ஆதி.

பல்லவி.

கியானவசிஷ்டர்வந்தார் பிரம்மக் கியானவசிஷ்டர்வந்தார்.

அநுபல்லவி.

ஞானவழிதெரிந்து மோனநிலையில்நிற்கும்
தீனதயாளனுந்தன் சீடன்மணத்தைப்பார்க்க. (கி)

சரணங்கள்.

உத்தமன்முனிவரி லோகோவுயர்ந்தோனந்த
சத்தமிலாதெழுத்தைத் தானனுஷ்டிக்குந்திவ்விய. (தி)
அஞ்சடக்கியிருபத் தஞ்சையுந்தான்பாழாக்கி
நெஞ்சைத்துலக்கிசிவ நேசன்வானவர்புகழ். (தி)
கன்னமாபுரிநாடி கனஅரிச்சந்திரனிட
தன்னருமணந்தனைத் தானேமுடிப்பேனென்று. (தி)

மதிதயராஜன் விருத்தம்.

நிர்த்தொந்தரகிதஞான நிமலனைப்போற்றுகின்ற
வுத்தமவசிஷ்டமூர்த்தி யுமதடிசரணம்போற்றி.

(மதி-வ-ம்) போற்றி போற்றி வசிஷ்டமகாமுனியேபோற்றி.

வசிஷ்டர் விருத்தம்.

மதிதயராஜேவாழி மன்னரில்கீர்த்திதன்னை
ததியதிலடைந்தநல்ல தயாபராவாழிவாழி.

(வசி-வ-ம்) வாழிவாழி மதிதயமகாராஜனே வாழி.

அரிச்சந்திராராஜன் விருத்தம்.

என்குருபரனேபோற்றி யென்றனையடிமைகொண்ட
நின்திருப்பாதம்போற்றி நிருபனேபோற்றிபோற்றி.

(அரி-வ-ம்) போற்றி போற்றி என்குருவேபோற்றி.

வசிஷ்டர் விருத்தம்.

அப்பனேசீடாவாழி யயோத்தியாள்வேந்தேவாழி
இப்பநீகொண்டவெண்ண மீடேறும்வாழிவாழி.

(வசி-வ-ம்) வாழிவாழி அரிச்சந்திரமகாராஜனே வாழி.

(மதி-வ-ம்) இந்ததிவ்விய ஆசனத்தில் எழுந்தருள வேண்டுஞ் சுவாமி.

(வசி-வ-ம்) அப்படியே சந்தோஷம் சந்தோஷம் இராஜனே.

பொது விருத்தம்.

மதிதயன்மகளுக்கின்று மணமென்றுகேள்விப்பட்டே
ததியில்நாரதருமங்கே தான்வந்துதோன்றினாரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? சந்திரவதியின் கலியாணமகிமையைப்பார்க்க நாரதர் வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

நாரதர் தரு.

இராகம்-மத்தியமாவதி, தாளம்-ஆதி.

பல்லவி.

நாரதமுனிவந்தார் சுக்ஞான நாரதரிதோவந்தார்.

அநுபல்லவி.

தாரகமந்திரத்தைத் தானுணர்ந்தேயந்த
சத்தியமிலாப்பிரம்ம ஸ்தானமறிந்தகுண. (நா)

சரணங்கள்.

பூரணத்தில்நினைவைப் பூட்டித்தினமகிழ்ந்து
பொறிபுலன்களையெல்லாம் போக்காகவேகழித்து
நாரணனெட்டெழுத்தை நாட்டிபுவனமெங்கும்
நண்ணியிந்திரனுலகும் நலமுடனுலாவிடும். (நா)

கசடுகுணமொழித்து கன்மமிடரழித்து
காயமழியாவண்ணங் கருதிநிலைபிடித்து
அசடுமழுக்காறவா வகத்தைவிட்டேபோக்கி
ஆனந்தக்கூத்தாடி யருளோங்கித்தானுலவும். (நா)

எட்டுத்திசைகளையு மெண்ணிலொருநொடியில்
ஏகியக்குற்றதொரு மியற்கையறிமுடியில்
சுற்றுஞ்சடைவளர்த்து சொகுசாய்மணிதரித்து
சுக்குமமறியும்வீணை தோன்றகரத்திற்றாங்கி. (நா)

மதிதயராஜன் விருத்தம்.

வரதனின்னருளையோங்கி வானவர்போற்றுந்திவ்விய
ப்ரதநாரதரேயுன்றன் பாதமேபோற்றிபோற்றி.

(மதி-வ-ம்) போற்றிபோற்றி நாரதமகாமுனிவரேபோற்றி.

நாரதர் விருத்தம்.

சந்திரவதியைப்பெற்றத் தன்னியனேவாழிவாழி
யுந்திருநாடுங்கோலு மோங்கமென்னாளும்வாழி.

(நார-வ-ம்) வாழிவாழி மதிதயமகாராஜனே வாழி.

வசிஷ்டர் விருத்தம்.

தவத்தினிலுயர்ந்ததிவ்விய தாணுவேநாரதாதி
பவத்தினையொழித்தநல்ல பண்பனேவாரும்வாரும்.



(வசி-வ-ம்) வாரும்வாரும் நாரதமகாமுனியே வாரும்.

(நார-வ-ம்) வந்தேன் வந்தேன் தவசிரேஷ்டர்களே.

## நாரதர் விருத்தம்.

மன்னாதிமன்னருந்தன் மகள்மணமாலைக்காக
மன்னாதிமன்னர்வந்தும் மதிதயாதருணம்வாய்த்தும்
நன்னாதிகுணத்தையுற்ற நங்கையைச்சிங்காரித்தே
யின்னாதிச்சாலைபுக்க வினித்தடைசெய்வதேனோ.

(நார-வ-ம்) மதிதயராஜனே? உனது மகளுடையமணத்தைக்கோரி தேசதேசாதிபர்வந்தும், லக்கினநேரங்கிட்டியும், சந்திரவதியைச் சுயவரச்சாலைக்கு அழைப்பிக்கத்தடையாதோ வேந்தனே.

(மதி-வ-ம்) இதோ அழைப்பிக்கிறேன் நாரதமகாமுனிவரே.

## மதிதயராஜன் விருத்தம்.

அப்பனேமந்திரியைம்பத் தாறுதேசாதிமன்னர்
ஒப்பவேவந்தாரொன்ற னொருமகள்மணத்தைநாடி
செப்பருமணிக்குடைக்கீழ் செல்வியைச்சிங்காரித்தே
யிப்பவேவருகத்தானே யிடம்புவாய்பாங்கியார்க்கே.

(மதி-வ-ம்) அப்பாமந்திரி? இராஜாதி இராஜர்கள்வந்து வீற்றிருக்குஞ் சுயவரச்சாலைக்கு என்தவப்புத்திரியைச்சிங்காரித்து அழைத்து வரும்படி தோழிகளுக்கு உத்தரவுசெய்வாய் அப்பாமந்திரி

(மந்-வ-ம்) அப்படியே அழைப்பிக்கச்செய்கின்றேன் அரசே.

## மந்திரி விருத்தம்.

சந்திரவதியைநாளுந் தயவுடன்பாதுகாக்குஞ்
சுந்தரமொழியாளான தோழியேசொல்லக்கேளா
யிந்தநற்சமுகந்தன்னி லேந்திழைதனையேநீதான்
வந்திடமணிக்குடைக்கீழ் மகிழுடனழைத்துவாராய்.

(மந்-வ-ம்) பெண்ணேதோழி? இந்தட்சணத்திலேபோய் சந்திரவதியம்மனைச்சிங்காரித்து முத்துக்குடையின்கீழ்நடத்தி, இந்தமணவரைப்பந்தலுக்கு அழைத்துவருவாய்பாங்கி.

(தோழி-வ-ம்) சந்தோஷம், அப்படியே அழைத்துவருகிறேன்பிரபூ.

## தோழி விருத்தம்.

மதிதனைப்பழிக்குந்திவ்விய மலர்முகமுடையசந்திர
வதிபெணுந்தாயேயுன்னை மன்னனுமணச்சாலைக்கே

நிதிபெரும்வேந்தர்தம்மை நீகண்டேமாலைசூட்ட
வதிவிரைவினிலேயம்மா வணமுத்தனர்வருகுவாயே.

(தோழி-வ-ம்) அம்மாசந்திரவதி? உனதுமணச்சாலையில், அனேக இராஜாதி இராஜாக்கள் வந்திருக்கிறார்கள், நீகண்டு உன்மனதுக்கேற்ற புருஷனை விவாகஞ்செய்துகொள்ளும்பொருட்டு, உன்னை அழைத்துவரச்சொன்னார் உன்பிதா, வருவாய் அம்மணி.

## சந்திரவதி விருத்தம்.

சகியேநீயன்றுவந்தே சாற்றியநாட்டுவக்கி
சகியேநானயோத்திமன்னர் தான்கிட்டவேண்டுமென்றே
சகியேநான்பரத்தைக்கோரி தனியுருஜபித்தேனிப்போ
சகியேயென்விதிதானென்ன சர்ப்பனைசெயுமோவாராய்.

(சங்-வ-ம்) அடிதோழி? நீசொன்னநாள்முதல் அந்த அரிச்சந்திர மகாராஜர் எனக்குக்கணவராக வேண்டுமென்று, ஆண்டவனைத்துதித்துக்கொண்டிருந்தேன், என்விதி யேதேதுசெய்யுமோதெரியேன், வாராய்போவோம், சவுந்தரவல்லி.

## பொது விருத்தம்.

தவத்தினாலரசன்பெற்ற சந்திரவதியாளிதோ
மகத்துவமன்னர்சூழும் மகாசபைவருகின்றாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே? கலியாணமண்டபச்சாலைக்கு, சந்திரவதியம்மன் வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

## சந்திரவதி தரு.

இராகம்-பந்துவராளி, தாளம்-ஆதி.

பல்லவி.

மாதுசந்திரவதனாள் வந்தாள்
மாசிலாதமணி பூஜிதகுணமணி. (மாது)

அநுபல்லவி.

ஏதுயிவள்போற்பாவை யெங்குங்கிட்டாதெனவே
இனிவுடன்கண்டவர் மனமதுமுருகிட. (மாது)

சரணங்கள்.

கரியமுகிலைப்போன்றக் கனத்தகூந்தல்முடித்தே
கையில்வெகுவுன்னதா காரமலர்பிடித்தே
திருநீறணிநுதலாற் திங்கள்தனைப்பழித்தே
திவ்வியநாசியும்விழி திரள்கயலையழித்தே

பரிவுளவேந்தர்கள் சேர்ந்தலேந்திட
பணிந்துமதனுந்தூரம் பாரமலோடிட. (மாது)
இரத்தினத்தில் முத்திழைத்த வெழில்போல்தந்தந்துலங்க
இமையவர்முதலோரு மிவளழகாற்கலங்க
விரதத்திலுயர்ந்தோரும் வேண்டி நாடித்தியங்க
மேவிப்பொற்கிண்ணமென விளங்கும்ஸ்தனங்குலுங்க
கரத்தின்விரல்பற்றக் காய்களைமாற்றிட
கைப்பிடியிடையுள காமரதியென்றிட. (மாது)
தவ்ளச்சங்கதைமாற்றுந் தனிக்கழுத்ததுமோங்க
தவக்கடமாந்தோளடையென தாவிவண்டுகள்தாங்க
இவளழகைக்கண்டுமே யிந்திர ணிபின்வாங்க
ஈசன்படைக்கமன மேன்கொண்டானெனவேங்க
பவமதைநண்ணிடாப் பண்பர்கள்தனக்குமே
பாரியாவாளென்றெண்ணப் பதறுமன்னடந்துமே. (மாது)

## சந்திரவதி விருத்தம்.

விண்ணவர்காணொண்ணுத வெண்கிரிபரத்தைநாடி
நண்ணருந்தவமியற்றி நாதன்றன்னருளாலென்னை
வண்ணமாயீன்றெடுத்தே மகிழுடன்வளர்த்ததூய
வண்ணலேயழைத்தவாறை யன்புடனருட்செய்வீரே.

(சங்-வ-ம் என்னை அருந்தவஞ்செய்துபெற்றுவளர்த்த தந்தையே? அழைத்தகாரணந்தெரியச்சொல்லவேணும் என்பிதாவே.

## மதிதயராஜன் விருத்தம்.

என்னருந்தவத்தால்வந்த வினியவென்கண்ணேயம்மா
மன்னவர்மன்னருந்தன் மணமதுநாடிவந்தார்
உன்னதமாலைதாங்கி யொளிபவர்கீர்த்திகேட்டே
அன்னமேயுனக்கிசைந்த வரசர்மேற்சூட்டுவாயே.

(மதி-வ-ம்) அம்மா? உன் கலியாணத்திற்காக இராஜாதி இராஜாக்களும் வந்திருக்கிறுர்கள், நீ யிந்தபுஷ்பமாலையைக்கையில்தாங்கி, அவாளவாள் பெருமையுங்கீர்த்திப்பிரதாப குணத்தையுங்கேட்டு, உனக்கு இஷ்டமான அரசர் கழுத்தில் சூட்டுவாய் நான் பெற்றசெல்வமே.

(சங்-வ-ம்) அப்படியே செய்கின்றேன் என்பிதாவே.

## சந்திரவதி விருத்தம்.

பாங்கிமேயெனதுதந்தை பகன்றதால்சுயம்வரத்தி
லோங்கியேபிரபலமன்ன ரொளிசபைதனில்நான்சென்றே

நீங்கிடமதஞ்செய்வாது நிகழ்மணமாலைசூட்டத்
தாங்கியமன்னர்பேருஞ் சௌரியமுமுரைப்பாயம்மா.

(சந்-வ-ம்) அடிதோழி? என் தந்தைவாக்கின்படி, நான் செய்யப்போகின்றேன், நீ யிவ்விடம் வீற்றிருக்கும் இராஜர்களின் பெயரும், பெருமையும், எனக்குத்தெரியச்சொல்லுவாயம்மா.

## மதிதயராஜன் விருத்தம்.

மன்னரின்மன்னரான மகிபரேயுரைக்கக்கேளீ
ரன்னவனருளினாலே யருந்தவப்புத்ரியான
கன்னிகைக்கிலங்குஞ்சூக்ஷமங் கண்டுரைத்தவர்க்கிம்மாது
முன்னதமனைவியாவா ளுரைத்திட்டேனறிகுவீரே.

(மதி-வ-ம்) இராஜாதிராஜர்களே? என்மகளிடத்தில்தோன்றும்படியான பரம இரகசியத்தைக்கண்டு சொன்னவர்க்கு மாலையிடுவாளென்றறிவீர்கள் வேந்தர்களே.

(தோழி-வ-ம்) அம்மா? இராஜர்களின் ஊரும்பெருமையுஞ்சொல்லுகிறேன் கேளாய்தாயே.

(சந்-வ-ம்) அப்படியே சொல்லுவாயடி பாங்கியே.

## தோழி தரு.

இராகம்-நாதநாமக்கிரியை, தாளம்-சாப்பு.

பல்லவி.

சொல்லுவே னம்மா - மன்னர் பெருமை
சொல்லுவேன் கேளம்மா.

அநுபல்லவி.

அல்லும்பகலுலாவு மாதித்தன்மதிகுலம்
அடைந்தவரசர்புக ழரிவையேநீதெரியச் (சொ)

சரணங்கள்.

அங்கதேசாதிபதி மகிற்சிறந்தோரிவர்
அரிவையேகாம்போஜ மாளும்புனிதரிவர்
கொங்கணமாள்பவர் கூர்ஜ்ஜராதிவீரர்
கோதையேநேபாளர் கொடுஞ்சூரரிவரினி. (சொ)

பாண்டியநாடாள்வோர் பகைகலையுணர்ந்தவர்
பத்தினிவங்காளம் டணியுமுத்தாரறிவர்
ஆண்டவன்வளர்காசி யாளுமகிபரிவர்
அறந்தனைவிளைவிக்கு மண்ணலென்றறியினி. (சொ)

சிந்துதேசத்தையாளும் சிங்காரசுமலையாள
தேசமரசுசெய்யுந் திசரிவரறிவாய்
தந்துபின்வாங்காத திராவிடர்கலிங்கத்தார்
தாழ்விலாச்சேரசோழர் தானிவர்முன்னடப்பாய். (சொ)

அம்மாவயோத்தியானு பாதியின்மரபுற்ற
அண்ணலிவரறிவா யயழகிற்சிறந்தோர்சூரர்
பெம்மானைப்பணிபவர் பெருமையிற்சிறந்தவர்
பேருலகம்மதிக்கும் பெண்ணேசந்திரவதியே (சொ)

சந்திரவதி விருத்தம்.

என்மனங்களிக்கநாளு மிசைபுரிதோழிநீகேளாய்
முன்னம்நீவந்துரைத்த மொழிபெறுதிரிச்சங்கீன்ற
மன்னவரிவரேயன்றி மற்றுவேறுண்டோவிங்கு
பன்னவேவேண்டும்பிராண மதமானசகிதான்நீயே.

(சங்-வ-ம்) அடி அம்மாதோழி? முன்னம் நீ வந்து சொன்னவரிவர் தானா? அல்லதுவேறுண்டா? சொல்லவேணும் பாங்கியே.

தோழி விருத்தம்.

அம்மாசேளிவரேயாகு மயோத்திபன்திரிச்சங்கீன்ற
அம்மாகேளரசர்முன்னே யந்தணருரைத்துப்போன
அம்மாகேள்தருமநீதி யசத்தியந்தவிழ்க்கிசெய்யு
மம்மாகேள்முனம்நான்சொன்ன வரிச்சந்திரரிவர்தான்தாயே.

(தோழி-வ-ம்) அம்மணி? முன்பு நமது இராஜனிடம்வந்து உனக்குக்கலியாணத்தை நிர்னயித்துப்போன வேதியர்கள் சொல்லிய இராஜாதி இராஜரிவர்தான், தெரிலாயம்மா.

அரிச்சந்திரமகாராஜன், பிரணவமூர்த்தியையும், பாதிமதியணிந்தோனையும் பராசத்தியையும், இன்னும்மற்றுமுள்ளதேவர்களையும் மானதபூஜைசெய்து சந்திரவதியை யுற்றுப்பார்த்து தன்விழியால் கண்டதை வினவுதல். (மற்ற இராஜாக்கள் திப்பிரமைகொள்ளல்.)

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

என்னகாரணந்தான்சொல்வா யேந்திழாய்நின்கழுத்தில்
மின்னல்போலேதுதாலி விளங்குதேயுனதுதந்தை
முன்னம்யார்தனக்கேயுன்னை முடித்தனன்விவாகஞ்சொல்வாய்
நன்னலங்கடந்தேகூறு நடத்தலுந்தகுமோமாதே.

(அரி-வ-ம்) பெண்ணே? உன்கழுத்தில் தாலியேது? முன் உன்னை மணஞ்செய்து மாங்கல்யம் சூட்டினவனார்? உன் தந்தை இவ்வித மோசம் நடத்தக்கருதினதுஞ் சரியோ! சொல்வாய் மாதரசே.

சந்திரவதி விருத்தம்

அரசேநானுரைக்கக்கேளீ ரண்ணலுங்குழந்தைவேண்டி
சுரர்பணிகங்கைபூண்ட சுந்தரனைத்தொழவேநானும்
வரவென்றனுடனித்தாலி வந்திடுங்கண்டபேர்க்கே
தரவெனைப்பாரியென்றே சாற்றினாரறிவீர்நாதா.

(சந்-வ-ம்) மகாராஜனே? சற்றுகவனமுடன்கேட்பீர், அதாவது சந்ததிவேண்டி என் தந்தை சங்கரனைக்குறித்துத் தவஞ்செய்ய பரமசிவன் தவத்திற்கு மகிழ்ந்து உனக்கு ஒரு பெண் தாலியுடன் பிறப்பாள், அதைக்கண்டுசொன்னவர்க்கு அவளைப்பாரியாகச்செய்வாய் என்றனர், அவ்வாறே யானும் பிறந்து இதுகாறுங் காத்தேன், இதுதான் பரம இரகசியம் என்று எந்தந்தை சபையோருக்குஞ்சொன்னது, நீரும் இவ்விரகசியத்தை அறிந்துரைத்தீர் நாதா.

(அரி-வ-ம்) அப்படியா, மகாசந்தோஷம் மாதே.

## சந்திரவதி மாலைசூட்டல்.

சந்திரவதி விருத்தம்.

வல்லவன்கிருபையாலே வந்தனரிவருமிங்கே
நல்லதோர்காலமின்று நாதனுமெனக்களித்தார்
சொல்லரும்வேந்தர்மன்னர் சூழுமிச்சபையிற்றோழி
யல்லலையகற்றிமாலை யன்புடன்சூட்டினேனே.

(சந்-வ-ம்) அம்மா சவுந்தரவல்லி? நான் செய்த பூஜாபலத்தினால், இவர் வந்தார், வந்தவர் மற்ற அரசர்களைப்போலிலாமல் சூக்ஷமத்தையுங்கண்டு யாவருங்களிக்க உரைத்தார், ஆனதால் இதோ இச்சபையிலுள்ள முனிவர்களும், இராஜராஜாக்களும் அறிய இந்த அரிச்சந்திர மகாராஜருக்கு மாலைசூட்டினேன், அடி அம்மா தோழி.

(தோழி-வ-ம்) மகாசந்தோஷமம்மா சந்திரவதித்தாயே.

(இரிஷிகள்-வ-ம்) சகலசவுக்கிய சாம்ராஜ்ஜிய அபிவிர்த்திக்கவேண்டியது, சுபம் சதாஸ்து: அப்பா அரிச்சந்திரபூபனே? அம்மா கற்பிலுயர்ந்த சந்திரவதித்தாயே? நீங்களிருவரும் உடலும் உயிரும்போலும் அரைநொடியாகிலும் இணைபிரியாமல் இருக்கக்கடவது சதாவாழி.

நாரதர் விருத்தம்.

சந்திரவதியைப்பெற்றத் தயாபராமதிதயேந்திரா
வுந்தனற்பெருமைகீர்த்தி யுலகில்வேறொருவர்க்குண்டோ
கந்தவிழ்மலர்ப்பூஞ்சோலைக் கன்னியாபுரிகளிக்க
வந்தவர்போகாமுன்னம் மணமதைநடப்பிப்பாயே.

(நார-வ-ம்) மதிதயராஜனே? இந்தச்சபைகலைவதற்குமுன்னதாக உனது தவப்புத்திரியாகிய சந்திரவதியின் நற்குணத்திற்கேற்ற கணவன் வாய்த்தான், சீக்கிரத்தில் கலியாணத்தை நடப்பிக்கத்தீவரப்படுவாய் மன்னனே.

(மதி-வ-ம்) அப்படியே செய்கின்றேன் முனிநாதரே.

மதிதயராஜன் விருத்தம்.

ஐயரேவிஸ்வாமித்திர வண்ணலேயெனதுபுத்திரி
ஐயரேதிருச்சங்கின்ற வன்புளவேந்தனுக்கே
ஐயரேசுயம்வரத்தி லணிந்தனள்மாலைதன்னை
ஐயரேயுமதுகையா லணிமணம்நடப்பிப்பீரே.

(மதி-வ-ம) சுவாமி விஸ்வாமித்திரரே? எனதுபுத்திரி அரிச்சந்திர மகாராஜனுக்கு மாலைசூட்டினாள், தாங்கள், தங்கள் திருக்கரங்களால் கலியாணத்தை நடப்பிக்கவேண்டும் முனிநாதரே.

விஸ்வாமித்திரர் விருத்தம்.

மதிதயா மணம்நடத்தும் வண்மைபுங்கிரிகையெல்லாம்
சதியன்றியுணர்ந்தவந்த தன்னியவசிஷ்டராலே
விதிபிசகாதவண்ணம் விரைவினில்முடிப்பிப்பாய்நற்
கதிபெறவுபயத்திராள்தம் கருத்தைநான்சொன்னேன்கண்டாய்.

(விஸ்-வ-ம்) அப்பா இராஜனே? கலியாணநடத்தும் சடங்குகளில் தெளிந்தவசிஷ்டராலே சீக்கிரத்தில் இலக்கினமீறாமல் நிறைவேற்றுவாய் வேந்தனே.

மந்திரி விருத்தம்.

மண்ணுளோர்மதிக்குமன்ன மதிதயேந்திரனேகேளீர்
வண்ணமுன்மகளதனக்கே மணஞ்சூட்டுங்காலமாச்சே
திண்ணமாஞ்சடங்கையெல்லாம் திறமையாய்நடத்தவேண்டி
செண்ணலேவசிஷ்டர்கையால் செய்விப்பீர்செய்விப்பீரே.

(மந்-வ-ம்) மகாராஜனே? சந்திரவதியம்மன் திருக்கலியாண சடங்கைவசிஷ்டனைக்கொண்டு நடப்பிப்பதேவெகுவுத்தமம், மகாராஜனே.

(மதி-வ-ம்) அப்படியே நடப்பிக்கின்றேன் மந்திரி.

மதிதயராஜன் விருத்தம்.

அவமதியனைத்தும்போக்கி யைம்புலன்றனையொடுக்கித்
தவநிறைநிஷ்டைபுக்கித் தானதாய்நின்றபிரம்ம
குலமெலாந்துதிக்குங் குருநாதவசிஷ்டமூர்த்தி
கவலைவிட்டெனதுபுத்திரி கலியாணம்நடப்பிப்பீரே.

(மதி-வ-ம்) சுவாமி வசிஷ்டமுனியே? எனது புத்திரியாகிய வுமது அடியாள் சந்திரவதியின் திருக்கலியாணத்தை தங்கள் கையினால் நடப்பிக்கவேண்டுகின்றேன் தேவனே.

(வசி-வ-ம்) அப்பா மதிதயராஜனே? சந்தோஷம் அப்படியே நடப்பிக்கின்றேன், சகலரும் கலியாணமண்டபத்திற்கு வருவீர்களப்பா.

(மதி-வ-ம்) அப்படியே யெல்லோருங் கலியாணமண்டபத்திற்கு வருகின்றோம் முனிநாதரே.

(வசி-வ-ம்) மதிதயராஜனே? கலியாணத்திற்குவேண்டிய சாமக்கிரயங்களை வரவழைக்கவேண்டும் வேந்தே.

(மதி-வ-ம்) சுவாமி? அப்படியே ஓமத்திரவியங்களும், சமத்துகளும், சாமக்கிரயங்களும், இதோவரவழைத்தேன், நடத்தவேண்டியதை நடப்பிப்பீர் முனிநாதரே.

(வசி-வ-ம்) அப்பா இராஜனே? சந்திரவதியை ஆசனத்தில் அரிச்சந்திரன் முன்னிலையிலிருக்கச்செய்வாய் வேந்தனே.

(மதி-வ-ம்) சுவாமி? உமது ஆக்கினையின்படி யெனதுபுத்திரியைச் சிங்காரித்து ஆசனத்திலிருக்கச்செய்தேன் முனிநாதரே.

(வசி-வ-ம்) வேதியர்களே? ஆதிகணபதியின்பூசை நடப்பிப்பீர்கள் சுவாமிகளே.

(மதி-வ-ம்) பெண்ணே சுந்தரரேகையே? நாம் மணவரைச்சாலைக்குப்போவோம்வாராய், என்னபாக்கியம்பெற்றோம்! யாரடைவார் இப்பார்மீதில் இப்புகழ்!!!

சுந்தரரேகை விருத்தம்.

என்னுயிர்க்குயிரதான விறைவனேநின்றாள்போற்றி
மன்னரில்மகிமைபூண்ட மகதநாட்டரசேபோற்றி
யுன்னருமணச்சாலைக்கே யுகந்தெனைநீரழைத்த
தென்னகாரணமோதோன்ற வியம்புவீரெளியாளுக்கே.

(சுந்-வ-ம்) பிராணநாதா? என்னை மணவரச்சாலைக்கு அழைக்கிற காரணந் தெரியச்சொல்லவேண்டும், சரி, சரி———பத்தா திருமுகத்தில் யாதோ ஒருசந்தோஷக்குறிகாட்டுகின்றது.

## மதிதயராஜன் விருத்தம்.

அடிமானேநாம்தான்பெற்ற வருந்தவமாதையின்று
படிமிசைபுகழயோத்தி பதிகனேமாலேயிட்டாள்
கொடிதலம்நமதுநாட்டிற் கிளரொன்றுமன்னர்காண
கடிகினில்வாராய்சென்று கன்னியைத்தாரைசெய்வோம்.

(மதி-வ ம்) என்பிராணநாயகி? நமதுதவப்புத்திரியாகிய சந்திரவதி யம்மாளின்று சுயம்வரச்சாலேயில், அயோத்தியாபுரியையாளும் ஏக சக்ரேஸ்வரனுகிய அரிச்சந்திரமகாராஜனுக்குமாலேசூட்டியதால், நாமி ருவரும் மணவரையிற்சென்று சகலருமறிய கன்னியைத்தாரையிட்டு வருவோம் வாராய் பெண்ணே.

(சுந்-வ-ம்) மகாபாக்கிய மப்படியே வருகின்றேன் பிராணநாதா.

## வசிஷ்டர் விருத்தம்.

அப்பனேமதிதயேந்திரா வன்பனேபலருங்காண
இப்பவின்மகளேயிங்கே யினிவுடன்தாரைவாரே.

(வசி-வ-ம்) அப்பாமதிதயமகாராஜனே? நீயும், உன்தேவியும், மண வரையில் நின்று பலருங்காணச் சந்திரவதியை அரிச்சந்திரமகாராஜ னுக்குத் தாரை வார்ப்பாய்வேந்தனே.

# தத்தஞ்செய்தல்.

---

## மதிதயன் சுந்தரரேகை இருவருஞ்சொல் விருத்தம்.

அரியதவஞ் செய்தன்று சிவத்தால்நாங்க
ளடைந்தவழ குறுசந்திர வதியையின்று
பிரியமுடன் ரவிகுலத்துத் திரிசங்கீன்ற
பேசரிய வரிச்சந்திர மகிபனுக்கே
கரியுரித்தோன் ரவிமதியும் பூமிசேனும்
கல்ஜலமு மஷ்டதிக்கோர் முனிவர்காணப்
பரிவுடனே மணவரையிற் றரைவார்த்தோம்
பலகோடி காலமிவர் வாழ்கவாழி.

(மதி-சுந்-வ-ம்) சபையோர்களே? நாங்களரியதவஞ் செய்துபெற்ற சந்திரவதியம்மாளேயின்று, கயிலேவாசனும், தேவியும், தேவர்களும், சூரியசந்திரர்களும், பூமிதேவி, ஆகாயவாணியும், அஷ்ட-திக்குப்பாலக ர்களும் தவமுனிவர்களும், மன்னுதிமன்னர்களுமறியக் கன்னியைத்

தாரைவார்த்தோம் இவர்கள் கற்பகோடி காலஞ்சுகமாய் வாழக்கடவ துவாழிவாழி. ஏ! பரமசிவமே! நின்கிருபையாலன்றோ இவ்விதப் பெருமைகிடைத்தது.

### வசிஷ்டர் விருத்தம்.

மன்னவர்மன்னாநீதான் மகாகோடிகாலம்வாழி
யின்னிலமதனிலிந்த வேந்திழைகற்பும்வாழி
பன்னரும்யோகரேத்த பரவுநின்சத்தியம்வாழி
யென்னருஞ்சீடாநீத ளிகபரசவுக்கியம்வாழி.

(வசி-வ-ம்) அப்பாஎன்னருமை சீடனாகிய அரிச்சந்திரா? நீயுமுன் பத்தினியாகிய சந்திரவதியும், தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், வேந்தர்கள், புகழக்கீர்த்திபெற்று இகபரசவுக்கியமடைவீர்கள் வாழி.

### நாரதர் விருத்தம்.

சந்திரவதியும்வாழி சற்குணம்பெருகவாழி
சுந்தரவரிச்சந்திராநீ சுகமாகவாழிவாழி.

(நார-வ-ம்) அரிச்சந்திரமகாராஜனே? நீயும் சந்திரவதியம்மனும் சதாசுபம் வாழிவாழி.

### விஸ்வாமித்திரன் விருத்தம்.

என்னருங்குலத்தில்வந்த விறைவனாந்திரிசங்கீன்ற
மன்னனுந்தேவிநாளும் மகிழுடன்வாழிவாழி.

(விஸ்-வ-ம்) என்குலத்தில்வந்ததிரிசங்களித்த அரிச்சந்திரநிருபனே? நீயும் உன்தேவி சந்திரவதியுஞ் சதாசுபம் வாழிவாழி.

### யாத்திரைப்பிராமணாள் விருத்தம்.

எங்களையன்றுவேண்டி யிசைத்ததைமுடியச்செய்த
மங்களவுமையாள்பாகா மன்னனாந்திரிசங்கீன்ற
திங்கள்நன்னுழகன்தேவி செப்பொணுப்பெருமைபூண்டே
சங்கராவுனைத்துதித்தே சதாசுபம்வாழிவாழி.

(யாத்-வ-ம்) எங்களையன்று கோரிக்கேட்ட மன்னவனிஷ்டப்படி சந்திரவதியம்மன் அவனை மணஞ்செய்யக்கூட்டிவைத்த பரமசிவமே? இந்ததம்பதிகளிருவரும், மகாகோடிகாலம் கீர்த்தியடைவது, சகலசம்பத்துடன் உனது திவ்வியநாமந்துதித்து சுகமாயிருக்க வாழிவாழி.

### நாரதர் விருத்தம்.

மண்ணில்தேர்கன்னிநாட்டின் மகிபனேவுரைக்கக்கேளாய்
திண்ணமதாய்விவாகம் தேவரும்மகிழ்வதாக

வண்ணமாய்நடந்ததாலே வந்ததோர்மன்னர்கட்கே
யண்ணலேபோஜனந்தா னன்புடனளிப்பாய்வேந்தே.

(நார-வ-ம்) மதிதயராஜனே? சந்திரவதியினுடையவிவாகம், தேவர்களும் மகிழத்தக்கதாக நடந்தேறிற்று, இனிவந்திருக்கும் பந்துஜனவர்க்கங்களுக்குப் போஜனத்தை நடப்பிப்பாய் வேந்தனே.

(மதி-வ-ம்) அப்படியே நடப்பிக்கின்றேன் முனிநாதரே.

பொது விருத்தம்.

புளிப்புடனே காரமுப்பு துவர்ப்பினிப்பு
புனிதமுடன் கயப்புடனறு ருசிகளோடு
களிப்புறவே மன்னுதி மன்னரெல்லாங்
கருதியதோர் புசிப்பதனை யுண்டுப்பால்
நளிப்புறவே தாம்பூலம் கந்தம்புஷ்பம்
நாடியே பன்னீருந்தாங்கியாவர்
வெளிப்பட்டேயவரவர்கள் தேசம்புக்க
வேந்தனிடம் விடைபெற்று மேவினரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? சந்திரவதியம்மன் திருக்கலியாணத்திற்காக வந்திருந்த பந்துவர்க்கசம்பந்த மன்னுதிமன்னர்களெல்லாம், அறுசுவைபதார்த்தத்துடன் உண்டிபுசித்து, கந்தபரிமளமணிந்து தாம்பூலந்தரித்து, மதிதயராஜனிடத்தில் விடைபெற்று தங்கள் தங்கள் இருப்பிடஞ் சென்றார்களென்றறிவீர்கள் சபையோர்களே.

(விஸ்-வ-ம்) மதிதயராஜனே? உனது புத்திரியின்விவாகம் நடந்த விஷயத்தில் மெற்றவும் களிப்புற்றேன், இனிநமது ஆசிரமம்போய் வருகின்றேன் வேந்தனே

(மதி-வ-ம்) மகாபாக்கியம், அடியேன்பேரில் சம்பூர்ணகடாக்ஷமிருக்கவேண்டியது முனிநாதா.

(வசி-வ-ம்) அப்பா மதிதயராஜனே? கலியாணம் வெகுநேத்தியகாவே நடப்பித்தாய், சந்தோஷம் சந்தோஷம். எனது ஆசிரமத்திற்குப் போய்வருகின்றேன் வேந்தனே.

(மதி-வ-ம்) அடியேன்பேரில் என்றும் சம்பூர்ணகடாக்ஷம் வைத்தாளவேண்டியது வசிஷ்டமகாமுனியே.

(நார-வ-ம்) மதிதயராஜனே? தேவாதிதேவர்களுங்கண்டு மகிழத்தக்கதாக சந்திரவதி அம்மாளுக்கு விவாகம்யாதொருகுறைவின்றி நடந்தேறியது, உனதுபாக்கியமேபாக்கியம், நீ மகளைத்தவஞ்செய்து பெற்

றது பெரிதல்ல, உன்கோரிக்கைப்படி நல்லயோக்கியனான மருமகன் கிடைத்ததற்காக நான்மெத்தவுஞ்சந்தோஷப்பட்டேன், இனி நான் தேவலோகத்திற்குப்போய்வருகின்றேன் வேந்தனே.

(மதி-வ-ம்) எல்லாம் தங்களுடைய ஆசிர்வாதம், அடியேன்பேரில் பூர்ணகடாக்ஷம் இருக்கவேண்டியது நாரதமகாமுனிவரே.

பொது விருத்தம்.

வனமிகுமணத்தைநாடி வருமன்னர்முனிவரெல்லாம்
கனமுடன்களித்தேயுண்டு கன்னிபன் விடைபெற்றேக
மனமதுகளித்தேகூட மன்னனும்மாதுமொத்து
கனமுடன்பள்ளியுற்றார் கழறினேனறிவீர்தாமே.

(பொது-வ-ம்) கனவான்களே! கலியாணத்திற்காக வந்திருந்த முனிவர்களும், இரிஷிகளும், வேந்தர்களும், மதிதயராஜனிடம் விடைபெற்று அவரவரிருப்பிடஞ்சென்றனர்; சந்திரவதியம்மனும் அரிச்சந்திரமகாராஜனும், உண்டிடித்தி சயனிக்கப்பள்ளியறை அடைந்தனர்களென்றறிவீர்கள் சபையோர்களே

# சோபனப்பிரிவு.

---

அரிச்சந்திரராஜன் தரு.

இராகம்-சஹானா, தாளம்-சாப்பு.

பல்லவி.

மயிலே யிதுகாலமே பாராய் - கூட
வருவாய் முத்தந்தருவாய் மடே. (மயி)

அநுபல்லவி.

கையில்மன்மதன்வில்லைக் காட்டுகிறான்பாவி
கண்ணேயென்மேலருள் பண்ணேயினிசகிக்கேன் (மயி)

சரணங்கள்.

உன்னைச்சேரவேநானு மோஹோஹோவெகுநாளாய்
உம்பன்னைகயிலேயனை யுருகிப்படித்திருந்தேன்
தன்னையணையஜாலங் தாக்குதலாகுமோ
தானேனினி மீளேன்மயல்
சாலேன்தனி வாழேன்மடே. (மயி)
வேண்டியேபோனதெய்வம் விளங்கமுன்கண்டாப்போல்
வித்தகிநீயெனக்கே பத்தினியாகவாய்த்தாய்
தாண்டியெனையேவிட்டுச் சங்கரன்மருகனும்

தலைதப்பியே நிலைவிட்டிட
குலைகெட்டுமே யலையுற்றிட. (மயி)
சுரநூலினிற்செப்புஞ் சூட்சுமந்தெரிந்துநாமே
சொருசுறுகேளிக்கை துணிவாய்நடத்தப்போமோ
விரவியின்குலமோங்க வீசனுமருள்செய்ய
எண்ணிமனம் நண்ணியுடல்
பின்னிகயற் கண்ணிமடே. (மயி)

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அன்னமேகிளியேமானே யயோத்தியைவிட்டேவந்து
அன்னமேநெடுநாளாச்சே யரசுவெவ்வாறுகாணேன்
அன்மேநீதான்சென்றே யண்ணலின்விடைகைக்கொண்டால்
அன்னமேநமதுநாட்டை யடைகுவோமன்பாய்த்தானே.

(அரி-வ-ம்) பெண்ணேசந்திரவதி? நான் நமதுதேசம் விட்டுவந்து வெகுநாளாயிற்று, நமது இராஜ்ஜியம் ஏதாயிற்றோ! நீ யுன்தந்தையிடஞ்சென்று விடைபெற்றுவந்தால், நம்து தேசத்திற்குப்போவோம் பெண்ணே,

(சங்-வ-ம்) அப்படியே விடைபெற்றுவருகிறேன் பிராணநாதா.

## சந்திரவதி விருத்தம்.

தந்தையேவெகுநாளாகத் தவஞ்செய்துமெனையேபெற்று
விந்தையாயிதுவரைக்கு மேனியைவளர்த்தவையா
வுந்தனைப்பிரியநாளு முற்றதேபெண்ணின்ஜென்மம்
வந்ததின்பயனைக்கண்டேன் மனமதுவாடுதையா.

(சங்-வ-ம்) என்னை அருந்தவஞ்செய்துபெற்ற தந்தையே? உம்மை பிரியுங்காம் வந்துநேரிட்டது என்னசெய்வென் என்பிதாவே.

## சந்திரவதி தரு.

இராகம்-ஆனந்தபைரவி, தாளம் ஆதி.

ஆளன்வரவேசொல்லி யழைக்கிறாரெனையையா!
அடியாளும்போய்வரவோ சொல்லையாயென்னையா!
காலமிப்படியென்றன் கருத்திலெண்ணமற்போனேன்
கழலடிபிரிந்திடக் காரணம்வந்ததையா! (ஆ)
பெண்ஜென்மமெடுத்ததும் பெருந்துயருறவென்றே
பேதையிப்போதறிந்தே னையாவேயென்னையா!
நன்மையாய்ப்பெறறெடுத்த நாதாக்களைப்பிரிய
நாயகனுல்கலங்கண்டே னையாவேயென்னையா! (ஆ)

பிறந்தவிடம்பிள்ளைக்கன்றி பெண்களுக்கில்லையெனும்
பேச்சின்றறியலானே ளையாவேயென்னையா!
வரந்தந்தசிவன்றனே மகனையெனைப்படைக்க
மன்றாடாதேனோநீர்தா ளையாவேயென்யா! (ஆ)

நாளுஞ்சதமென்றெண்ணி நானுமிருந்தேனிங்கு
நகன்றிடக்காலமாச்சே யைடாவேயென்னையா!
வாழுமனைவேறென்று வழுத்தும்மாந்தர்மொழியின்
வண்மைக்குள்நானுமானே னையாவேயென்னையா! (ஆ)

(மதி-வ-ம்) அம்மாசந்திரவதி? வியசனத்தைவிடு, இது எல்லோருக்கும் இயல்பேயாகும், என் கண்மணியே.

(சந்-வ-ம்) ஆனால் சரிதான் என்பிதாவே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

மன்னனேமதிதயேந்திர மாமாநானுரைக்கக்கேளா
யென்னுருஞ்செங்கோல்தன்னை யீந்துமேயமைச்சன்பாகம்
வன்னமுன்மகளைநாடி வந்துதான்வெகுநாளாச்சே
சென்னெலோங்கயோத்தியேகச் செலவதுகொடுப்பீர்போற்றி.

(அரி-வ-ம்) எனதுமாமாவே? நான்வந்து நெடுநாளாச்சுது, அயோத்திக்குப்போக விடைதரவேண்டும் மாமாவே.

அரிச்சந்திரராஜன் தரு.

இராகம்-எமுனகல்யாணி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

விடைகொடுப்பீர் மாமாபோக விடைகொடுப்பீர்.

அநுபல்லவி.

தடைகளின்றியே சந்தோஷமாகவே
தக்கவயோத்திக்குச் சந்திரவதியுடன். (விடை)

சரணங்கள்.

வீட்டைவிட்டேவந்து வெகுநாளாச்சுது
நாட்டையடைந்தினி நானரசுசெய்ய (விடை)

சத்தியமாதுமே தான்வருந்தாதிட
பத்தியாய்க்குடிகளைப் பாலிக்கநான்போக. (விடை)

உந்தன்திருவடி யுள்ளத்தில்நாட்டுவேன்
சந்திரவதியுடன் தன்னுடுநான்செல்ல (விடை)

## மதிதயராஜன் தரு.

இராகம்-நாராயணி, தாளம்-ஆதி.

பல்லவி.

சுகமாய்ப் போய்வாரும்
சூரனே சொல்லொணு வீரனே மருகனே.

அநுபல்லவி.

மகளோர்சிறியவள் மன்னுவனுதினமு
மனமகிழ்களிப்புறு மின்பமதாய்நடத்துவீர். (சுக)

சரணங்கள்.

சந்திரவதியாள்குற்றந் தனைப்பாராட்டாதேயப்பா
வந்திடாக்கோபங்கொண்டால் வணங்கியடிபணிவாள்
வருத்தமதின்றியே கருத்துடனிறுத்துவாய். (சுக)

நீதிநெறியுலக நேர்ப்புமுணர்ந்தவள்
ஜாதிமுறையுஞ்செங்கோற் றகைமையுமறிந்தவள்
சார்ந்தேயென்மகனுடன்சேர்ந்துநீமனமொத்து. (சுக)

மாதர்நீதிகளெல்லாம் வழுவறத்தெரிந்தவள்
சாதனக்களபஞ்செய்யுஞ் சமர்த்திலுமுயர்ந்தவள்
சாந்தகுணமுடைய சந்திரவதியாளுடன். (சுக)

## சந்திரவதி விருத்தம்.

அண்ணலேசொந்தவீடு வயோத்தியென்றறிந்தேனிப்போ
அண்ணலேகணவர்பின்னே யடியாளும்போய்நான்வாறேன்
அண்ணலேயென்மேல்வைத்த வாசைதானகன்றிடாதீர்
அண்ணலேவாழ்த்தியென்னை யன்புடனனுப்புவீரே.

(சந்-வ-ம்) என்பிதாவே! நான் என் புருஷன்கூட அயோத்திக்குப் போய்வருகின்றேன், என்மேல்வைத்த அன்பைமறவாமல் வாழ்த்தி விடைதாரும் தந்தையே.

## மதிதயராஜன் தரு.

இராகம்-துஜாவந்தி, தாளம்-ஆதி.

பல்லவி.

போய்வருவாய்மகளே உன்மாமிவீடு
போய்வருவாய்மகளே.

அநுபல்லவி.

நீயொன்றையும்மனதில் நினையாதே-அம்மா-அம்மா
நினைக்கும்போதடிக்கடி நினைப்பார்க்கநான்வருவேன். (போ)

சரணங்கள்.

தாய்மனைநாளும்வாழ்தல் தகாமைதையலர்க்கென்றே
சாற்றும்விதிமுறையைத் தானுணர்ந்திட்டகண்ணே. (போ)
கணவன்மொழிக்கிடறு கட்டாதுசாட்டாதேநீ
கட்டிக்கரும்பேதேனே கதலிகற்கண்டமுதே. (போ)
ஆளன்சொற்படிநின்று லடைவாய்பெரும்பதவி
அன்னமேநான்செய்தவச் சொர்ணமேயென்சுந்தரமே. (போ)
ஆடைபதுமைபணி யடிக்கடியனுப்புவேன்
அன்பாகவாழ்ந்திருப்பா யன்னமேகண்மணியே. (போ)
வேணும்புத்திமதியுன் வேந்தனுக்குமுரைத்தேன்
வேண்டாம்மகளேதுக்கம் விட்டுநீசிவிகையேறி. (போ)

அரிச்சந்திராராஜன் விருத்தம்.

மாமாநானெனதுதேசம் மகிழுடன்சென்றுவாறேன்
மாமாநின்மகளுநானும் மனமொத்துசுகமாய்வாழ்ந்தே
மாமாவென்குலம்விளங்க மக்களும்பெருகவேண்டி
மாமாநீர்வாக்களிப்பீர் மலரடிபோற்றிபோற்றி.

(அரி-வ-ம்) எனது அருமைதங்கியமாமாவே? நானும் உமது புத்திரியாகிய சந்திரவதியும் மனமொத்துவாழ்ந்து, சகலசம்பத்துடன் புத்திரசந்தானம் பெருகும்படிக்கு ஆசீர்வதித்தனுப்பவேண்டும் மாமா.

மதிதயராஜன் விருத்தம்.

மருகனேநீயுமென்றன் மகள்சந்திரவதியும்வாழி
மருகனேயுனதுசெங்கோல் மண்ணின்மீதோங்கவாழி
மருகனேசுகம்சம்பத்தும் மற்றதுமடைவாய்வாழி
மருகனேயுனதுகீர்த்தி மகாகோடிகாலம்வாழி.

(மதி-வ-ம்) வாழிவாழி, அஷ்டைஸ்வரியமும், புத்திரசம்பத்தும், கீர்த்தியும், மென்மேலும்பெருகவும் வாழிவாழி, மருமகனேவாழி.

(சந்-வ-ம்) அம்மா என்னைப்பெற்றதாயே? இதுவரையில் உங்களைவிட்டுப்பிரியாதிருந்தேன், இப்போது எப்படி என்மாமியார்வீட்டுக்குப் போய்தனியேயிருப்பேனம்மா! இதை நினைக்குந்தோறுந்துக்கம் மென்மேலும்பெருகுகின்றதே இதற்கென்னசெய்வேனம்மணி,

சுந்தரரேகை தரு.

இராகம்-சாமா, தாளம்-ஆதி.

பல்லவி.

அழவேண்டாமம்மா ஆளன்மனைக்கேபோக.

அநுபல்லவி.

மழுதரித்தோனளித்த மணியே மரகதமே . (அழ)

சரணங்கள்.

மண்ணில்மாது பிறத்தல் வாழுபல்மனைக்கன்றி
மாதாவிடத்திற்றங்க வசமோ வுத்தமக்கண்ணே. (அழ)
உன்னைப்பெற்றகாலம்மா வுலகினில் சத்தியமன்னன்
உற்றான்மருகனென்றே யும்பர்புகழுவாழ்வாய். (அழ)
போதுபோகுமுன்னுன்றன் புகழயோத்திக்குப்போவா
யேதுவேண்டிலுன்தந்தை யினிவாயனுப்புவாரே. (அழ)
கணவனடிபணிந்தாற் காணும்பெரும்பதவி
கண்ணேயயோத்திசென்று கருத்தாய்வாழ்வாய்நீதாயே.(அ)
தந்தைதாய்குருதெய்வம் தானறியிவரொன்றே
தையலேவிண்ணவர்கள் சார்ந்துனைப்புகழுவாரே. (அழ)

சுந்தரரேகை விருத்தம்.

என்தங்கக்கொழுந்தேயம்மா விசனுர்மகிழ்ந்தளித்த
நன்மையிலுயரயோத்தி நாடிநீகணவன்பாத
முன்மனந்தனிலேநாட்டி யுபர்பதிவிரதம்பூண்டு
மன்மதனழகைமாற்றும் மக்களைப்பெற்றுவாழ்வாய்.

(சுங்-வ-ம்) அம்மா என்னருமைக் குழந்தையாகிய சந்திரவதியே? சுபம், நீயுன்கணவனையே தெய்வமென்று, அநுதினமுமலரடியைத் துதித்து, பதிவிரதாதருமம்பூண்டு, மன்மதனைப்பழிக்கத்தக்க அழகை யுடைய சற்குணப்புத்திரனைப்பெற்று சுகமாய் வாழ்வாயம்மா.

(சந்-வ-ம்) புத்தி புத்திதாயே, அப்படியே போய்வருகின்றேன்.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

என்னருங்கிளியேதேனே யிளங்குயிலொலியேமானே
நன்னிலைபாலைவந்தோம் நாஞென்றுசொல்வேனிங்கே
புன்னதமானகோயி லுண்டுநாம்சென்றேவாழும்
கன்னிசாம்பவியைக்கண்டு கழலடிபணிவோம்வாராய்.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரவதி? இந்தபாலைவனத்தில் சிவசாம்பவி கோயிலிருக்கின்றது, நாமிரண்டுபேரும்போய்தரிசித்து, அம்பாளின் செலவுபெற்று முன்னுக்குச்செல்வோம் வாராய்கண்ணே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

திரிபுரமெரித்தோன்பாகஞ் சேர்ந்திருப்பவளேயம்பா
வரியயன்தேடிக்காணு வண்ணலோடாடுந்தேவி

விரிசடைகங்கைநாதன் மேவிடுங்கனியேதாயே
தெரியேனுன்பணியவந்தேன் சேவடிகாட்டுவாயே.

(அரி-வ-ம்) ஓ ! சங்கரி ? நீ கொடுத்த வரத்தின்பலத்தால் என்கொரிக்கையீடேறிவந்தேன், உனது திருப்பாதங்களைத் தரிசிக்கச்செய்வாய் மயிடாசூரனை வதைத்ததேவியே.

## பராசக்தி விருத்தம்.

அன்பனேயயோத்தியாளு மரசனேநீதான்சென்ற
நன்மையெவ்வாறடைந்தாய் நவிலுவாய்த்தெரியத்தானே.

(பரா-வ-ம்) அப்பா அரிச்சந்திரனே ? நீ சென்றகாரியம் முடிந்தவகையைச்சொல்லுவாய் இராஜனே.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

உனதருளாலேதேவி யுற்றுமேகன்னிதேசந்
தனிமணச்சாலைபுக்கி தராதிபர்மகிழ்வதாகக்
கனமுளபரமகுகூஷங் கண்டுநானுரைக்கவேந்த
னினமொத்திம்மாதுதன்னை யீந்தனனெனக்கேதாயே.

(அரி-வ-ம்) அம்மா தேவியே ? உனது உத்தரவின்படி யான் கலியாணமண்டபஞ்சேர்ந்து, இக்கன்னிகையிடம் இருந்த பரமரகசியத்தை வெளியிட்டேன், மதிதயமகாராஜன் மிகவுஞ் சந்தோஷப்பட்டு தனது மகளாகிய இச்சந்திரவதியையெனக்குப் பாணிக்கிரஹணஞ் செய்துகொடுத்தார் அம்மா.

(பரா-வ-ம்) அப்படியா மகாசந்தோஷம்.

## சந்திரவதி விருத்தம்.

அம்புவிதனிலெல்லோரு மடிபணிந்தேத்துகின்ற
சம்புவினிடதுபாகந் தங்கியதாயேபோற்றி
தும்புருநாரதாதி சுரர்களும்பணியுஞ்சத்தி
தெம்பதையெங்கட்கீந்தே சீருடன்காப்பாய்போற்றி.

## பராசத்தி விருத்தம்.

தம்பதிமாரேநீங்கள் தாணியிலோங்கிவாழ்க
தம்பதிமாரேபுத்திர சம்பத்தும்பெருகிவாழ்க
தம்பதிமாரேயுங்கள் சத்தியநிலைத்துவாழ்க
தம்பதிமாரேநாடு தான்சேர்ந்தேவாழ்கவாழ்வீர்.

(பரா-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? அம்மா சந்திரவதி ? நீங்கள் சு

கமாய் நீரேசேர்ந்து சகலசம்பத்தும் பெருகி, புத்திரசந்தானம்பெற்று சத்தியமோங்க வாழ்வீர்கள் வாழி வாழி, யான் போய்வருகின்றேன்.

## பொது விருத்தம்.

மன்னனுமாதிரேடு மஹேஸ்வரிதனைப்பணிந்து
மன்னனும்விடைகைக்கொண்டே மகிழுடனிரதமேறி
மன்னனும்வாத்தியமேளம் வாசிக்கவயோத்திவந்தே
மன்னனக்குள்ளதெல்லா மங்கைக்குக்காட்டுவானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? அரிச்சந்திரமகாராஜனும், சந்திரவதியம்மனும், பராசத்தியிடம் விடைபெற்று சகல மேளவாத்தியங்களும் ஓலிக்க இரதாரூடராய் அயோத்தியடைந்து அங்குள்ள விநோதங்களைச் சந்திரவதியம்மனுக்குக் காட்டுகிறவிதங்காண்க.

## அரிச்சந்திராராஜன் தரு.

இராகம் - தோடி, தாளம் - ஆதி.

பல்லவி.

அன்னமேநீவாராய் அயோத்தியின் அதிசயத்தைப்பாராய்.

அநுபல்லவி.

முன்னமேநான்செய்த முறைதவப்பலத்தினால்
முத்தேநீகிட்டினாய் முனேந்தேயென்கைப்பற்றி. (அ)

சரணங்கள்.

வேதமறைபோர்வாழும் வீதியிதுநிதமும்
வித்தைநடனம்புரி வேசியர்ஸ்ரேணியது
பாதகம்புரியாமற் பணிமாறும்வணிபர்கள்
பக்ஷமுடனேவாழும் பாவையேவீதியென்றன். (அ)

வீராதிவீரரான வில்லாளர்வீதியிது
விதியறிந்துரைநீல வேணியமைச்சர்வீதி
காராளரிருப்பிடங் கண்ணேதருமவான்கள்
கருதிப்பலகுலத்தோர் களிக்கும்வீதிகள்பாராய். (அ)

சித்திரச்சாவடி செழுங்கொலுவாசலிது
தேசப்பரிகள்தேருஞ் சீருநமிடமிது
பத்தினிநீவாழும் பண்புளவரண்மனே
பரரேயுன்மனமதைத் தேறுவாயடியென்தன். (அ)

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அப்பனேசத்தியகீர்த்தி யப்பனேநமதுநாட்டி
லிப்பவேதகுதியுள்ள விளைஞர்கள்தமைநீ தேடி [7ட
கொப்பவேகளஞ்சியத்திற் கோரும்பொன்னெடுத்துக்கொண்
டொப்பவேசஹஸ்திரத்தெட்டு ஒளிமணம்முடிப்பாய்மந்திரி.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி? நமது நாட்டிலுள்ள சதுர்வித ஜாதிகளில் தேடி ஆயிரத்தெட்டு விவாகஞ்செய்துவைப்பாய் பாலகா.

(சத்-வ-ம்) மகாசந்தோஷம், அப்படியே செய்விக்கின்றேன்சுவாமி, —அப்பா கட்டியனே? நமது நாட்டிலிருக்கும்படியான நாலுவகை ஜாதிகளில் கலியாணத்திற்குத் தகுதியான சிறுவர்களைக் கூட்டிவருவாய் அப்பா கட்டியனே.

(கட்-வ-ம்) அப்படியே கூட்டிக்கொண்டுவருகிறேன் சுவாமி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

வேதியரிலிருநூறு முடிக்குகந்த
வேளாளர்நானூறு விஜயம்போன்ற
வாதிபனேவைசியரி லிரண்டுநூறு
அன்பாகச்சூத்திரரி லிருநூற்றெட்டு
பாதிமதியோன்மகிழப் பந்தலிட்டுப்
பண்பாகவெடிகிளப்பி மணஞ்செய்வித்தே
னேதுனைப்போல் மன்னருண்டோவென்றுசெப்பி
யேத்தினர்குடிகளெல்லாம் வாழ்த்தினரே.

(சத்-வ-ம்) மகாராஜனே? அந்தணரில் உ00, வேளாளரில் ச00, வைசியரில் உ00 சூத்திரரில் உ0அ, ஆக ௲அ கலியாணம்வெகு ஆடம்பரத்துடனே நடத்தினேன்: குடிகளெல்லாம் மகிழ்வடைந்து தங்கள் கீர்த்தியைக்கொண்டாடினார்கள் வேந்தே.

(அரி-வ-ம்) மகாசந்தோஷம் அப்பா சத்தியகீர்த்தி.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

பத்தியாய்ச்சிவத்தைநாடி பாரகற்றவம்புரிந்து
நத்தியென்குலம்விளங்க நாயகிகர்ப்பந்தன்னிற்
புத்திரனடையவேண்டிப் போய்வரேன்வருமட்டு
முத்தியிலுயர்ந்தமந்திரி யுகந்தென்றனரசைக்காப்பாய்.

(அரி-வ-ம்) அப்பா பாலகா? என்குலமனைக்கு நீடயில்லாதிருப்பதால் நான் சரயுநதிச்சாரற் புக்கிப்பரமசிவத்தைக்குறித்துத்தவஞ்செ

ய்து புத்திரனடையவரம்பெற்று வருகின்றேன், நீ அரசாக்ஷியை கவனத்துடன் நடப்பித்துக்கொண்டிருப்பாய் மந்திரி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

உலகினிலடையும்பாக்கிய மும்பனேபுத்திரானறி
யுலகினில்மற்றும்வேறே யுரைக்கவுமுளதோநாதா
நிலையதுவழுவிடாமல் நேர்மையாயரசைக்காப்பேன்
நிலையுடன்சிவத்தைநாடி நீர்வரம்பெறுவீர்வேந்தே.

(சத்-வ-ம்) அரசே? உலகிலுள்ளவர்கள் அடையத்தக்கது புத்திர பாக்கியமன்றி வேறுண்டோ, ஆகலால் தாங்கள் ஆக்கியாபித்தபடிக்கே இந்த நாட்டைக் காத்திருப்பேன், தாங்கள் பரமசிவனருட்பெற்று வருவீர்கள் வேந்தனே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

மாதேகேளுலகந்தன்னில் மக்களைப்பெற்றோர்மேலோர்
மாதேகேள்மைந்தரிலலார் மலடரென்றிசைக்குள்ளாவார்
மாதேநாமதைவிலக்க மயூரனையளித்தோன்பாதம்
மாதேநாம்பேணவேண்டி வனத்திற்கேவருகுவாயே.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரவதி? பிள்ளையில்லாதவர் மலடரென்று உலகோர் சொல்லும் மொழி நம்மைவிட்டு நீங்கும்படிக்கு நாம்காட்டிற்குச்சென்று சிவத்தைத்துதித்து புத்திரனளிக்கும்வரம் பெற்று வரலாம் வருவாயடி மாதரசே.

(சந்-வ-ம்) என் பிராணநாதரே? நீர் சொன்னதைக்கேட்டு நான் மெத்தவுஞ்சந்தோஷமானேன், அடியாளுக்கு மதேகியாபகமாயிருந்தது வாரும்போவோம் சுவாமி, (இருவரும் மரவுரிதரித்தல்.)

பொது விருத்தம்.

வேந்தனும்புத்திரசோபம் மீறியேசிவத்தைநாடி
வேந்தனுந்தபசுசெய்ய வேண்டியேசதியாளோடு
வேந்தனுமரசுதன்னை விதிதெரிமந்திரிபாகம்
வேந்தனுமொப்பிவித்தே மேவிபேசுராஞ்சென்றாரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? அரிச்சந்திரமகாராஜன் புத்திரசோபம் நீங்க அரசை மந்திரிவசம் ஒப்பிவித்து, தானும், பத்தினியும், மரவுரிதரித்து சிவனைக்குறித்துத்தவஞ்செய்யப்போகின்ற விதங் காண்பீர்கள் கனவான்களே.





அரிச்சந்திரராஜன் தரு.

இராகம்-சாவேரி, தாளம்-சாப்பு.

பல்லவி.

வருவாயடிபெண்ணே தவஞ்செய்ய வருவாயடிகண்ணே.

அநுபல்லவி.

பெருமானடியிணைப் பேணிமனதின்குறை
பெறத்திவ்வியமகனைப் பெறவேயென்னுடன்கூட. (வரு)

சரணங்கள்.

பஞ்சாக்கினி வளர்த்தே - நடுஸ்தம்பம்
பற்றிநான்மேல் நடித்தே
அஞ்சாமல்காலையெடுத்தே - ஒன்றையூன்றி
அரனுமந்தனைப்படித்தே
நெஞ்சதையவன்பாகம் நிறுத்தியோர்நினைவாகி
நீலகண்டனருளால் நீபாலன்றனைப்பெற. (வரு)
பூவுலகமு மேத்தும் - அவனடியைப்
பொன்னுலகமும்போற்றும்
நாவுக்குறையை யோட்டும் - அணிபவர்முன்
தன்னருளொளி காட்டும்
கோவும்வேங்கையிரண்டுங் கூடிவாழ்ந்திடச்செய்யுங்
கொற்றவனருளினால் குமாரனைநீபெற. (வரு)
தேவர்களும் பணியுந் - திருநாமஞ்
சித்தர்களு மணியும்
மூவர்களுங் கனியும் - நமக்கொரு
மோசம்வராதினியும்
காவலனடியோரின் கர்த்தன்கயிலைவாசன்
கழலைத்துதித்துநீதான் காளைதனைப்பெற. (வரு)

அரிச்சந்திரராஜன் தபசு கண்ணிகள்.

இராகம்-எதுகுலகாம்போதி, தாளம் - ரூபகம்.

சம்போஹரசம்போஹர சம்போஹரவருவாய்
அம்புலியைச்சடையிலிட்ட வரனேவரந்தருவாய் சிவ. (சம்)
மானும்மழுதானேந்கிட வருத்தப்பரமசிவமே - யெங்குந்
தானாய்நின்றபரனேயென்முன் தயவாய்வாருந்தவமே சிவ. (சம்)
கொன்றைதுமபைமுடியுஞ் சுப குணனேயிதுகால - முனே
யன்றிவேறுகதிகாணேனே னையாவென்னஜாலம் சிவ. (சம்)

காலன்றனையன்றுதைத்தக் கடலேயென்முன்தோன்று - மிந்த
ஞாலமீதிலுனைவிடயார் நாதனேவரவேண்டும் சிவ. (சம்)
சுரர்கள்தனைக்காக்கவன்று சுரதமுண்டகாதா - இப்போ
வரவென்றன்முன்தடைசெய்திடும் வன்மம்விடும்பாதா சிவ. (சம்)
பாலனிலாப்பாவியெனும் பழிநீக்கிடத்தேவே - சுவாமி
தூலவுன்றனடியேத்தினேன் சமயமெனைக்காக்கவே சிவ. (சம்)
கத்தும்வினைபோக்கவென்முன் நாடியிங்குவரவே - சொல்லும்
மூக்துசாமிகோருவரம் முனைந்துதினந்தரவே சிவ. (சம்)

## பரமசிவன் விருத்தம்.

அர்சனையென்னைக்கோரி யனலின்மேற்கம்பம்நாட்டி
அர்சனேயொருகாற்றூக்கி யருந்தவம்புரிவதேது
அரசனேயுனக்கேநல்ல வம்சையும்பதியளித்தே
அரசனேயிருக்கச்செய்து மறைத்தவாறேது சொல்வாய்.

(பர-வ-ம்) அப்பா பாலகா ? உனக்குத் தனகனகவஸ்துவாகனமுங் கொடுத்திருக்க, என்னை யிப்போதழைத்தகாரியம் என்னசொல்லும் பிள்ளாய் இராஜனே.

## அரிச்சந்திரராஜன் தேவாரம்.

எங்களாண்டவனேபோற்றி யிறைவனேநின்றுள்போற்றி
துங்கவாமக்களின்றி துரைத்தனமிருந்துமென்ன
மங்கள்குணத்துளோனே மைந்தர்பாக்கியநான்கொள்ள
சங்கரா திவ்வியவாக்கே தானளித்திடுவாய்போற்றி.

(அரி-வ-ம்) ஆண்டவனே ? வமிசவுத்தாரஞ்செய்யப் புத்திரபாக்கியந்தவிர மற்றபாக்கியமெல்லாமிருந்தும் பயனென்ன ? ஆனதால் அழைத்தேன், சம்போ ? புத்திரபாக்கியமடைய அருள்செய்யவேண்டும் கைலேயங்கரசே.

(பர-வ-ம்) அப்படியா, நல்லது.

## பரமசிவன் வெண்பா.

உந்தன்முறைக்கேமகிழ்ந்தே யூரினல்லகீர்த்திவா
மைந்தனுனக்கேபிறப்பான்மங்கையினால் - இந்தைப்
பழிக்குமழகுடையான் பல்கலையுமோதச்
செழிக்குங்குலமவனுஞ்தேர்.

(பர-வ-ம்) அப்பா சுதனே ? நீ கேட்டபடி சகலகலைக்கியானமுமறிந்தவனாக ஒருதிவ்விய மகன் சந்திரவதி கர்ப்பத்திலுதிப்பான், அவனால் உன்குலமீடேறும் அபுத்திரனென்னும்வசைநீங்கும் அப்பா, சுபம்.

## அரிச்சந்திராராஜன் சந்திரவதி விருத்தம்.

சம்புவேபோற்றி தயாபராபோற்றி
நம்புவோர்தமைக்க் காடுவோய்போற்றி.

(அரி-சந்-வ-ம்) அடியாரைக்காக்கும் ஆண்டவனே போற்றி.

## பரமசிவன் விருத்தம்.

மன்னனேவாழி மாதுடன்வாழி
சின்னவன்பெறுவாய் செல்கிறேன்வாழி.

(பர-வ-ம்) அப்பா பாலகா? அம்மா சந்திரவதி? நீங்கள் கேட்டவாறு யாவரும்மகிழத்தக்க ஒரு திவ்வியமகன் உதிப்பான், அவனால் நீங்கள் மிகவும் பெருமையடைவீர்கள், இனிதவத்தைநிறுத்தி உங்கள்பதியையடைவீர்கள் யான்போய்வருகின்றேன், வாழி வாழி.

(அரி-வ-ம்) அடியார்கள் துயரடையும்போது வந்துகாக்கும் தயாநிதியே, போய்வாரும் நாங்களும்போய்வருகின்றோம் பரம்பொருளே.

## பொது விருத்தம்.

வேந்தனுந்தவமியற்றி விமலன்றன்னருளைப்பெற்று
சாந்தமாய்தனதுதேவி தரித்தகர்ப்பமுமேயோங்கி
மாந்தளிர்மேனிகுன்றி மாதம்பத்தானதாலே
வாய்ந்ததோர்கர்ப்பநோயின் வளர்ப்பினித்தெரிகுவீரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? பரமசிவம் வரமளித்துப்போயின பின்பு தம்பதிகள் காட்டைவிட்டு நாடடைந்து மரவுரிநீக்கி, அரசுசெய்யுங்காலையில் சந்திரவதியம்மனுக்கு மாதம் பத்துங்கழிந்ததால் இனி கர்ப்பவேதனைப்படுகிறவிதமறிவீர்கள்கனவான்களே.

## சந்திரவதி தரு.

இராகம்-புன்னாகவராளி, தாளம்-ஆதி.

பல்லவி.

என்னமோவெனக்கொரு விதமாய்வருகுதடி.
என்னென்றுசொல்வேனம்மா பாக்கியே - இதை
யேதென்றுசொல்வேனடி தோழியே.

அநுபல்லவி.

தின்னவாய்வயிற்றினுள் திக்குத்திக்கெல்லாஞ்சுற்றித்
திரும்புதென்னமோகாணேன் பாக்கியே. (எ)

சரணங்கள்.

நெஞ்சில்படபடென்று நீள்மூச்சுவாங்குதடி
விஞ்சவொட்டாமலிடை நெளிக்குதேதோழியடி

கொஞ்சியாடியதெல்லாங் குறைசெப்பவிடமாச்சே
கூறவும்மனம்வெட்கங் கொள்ளுதடிபாங்கி. (எ)
விலாவிலென்னமோவந்து விரலாலிடிக்கிறப்போல்
வெம்பிடங்டுமுது விரியுதென்னடிசெய்வேன்
சலகலங்கியேநீருங் கால்வாய்பெருகுதடி-
கண்ணேமணியேதோழி கருத்தென்னவுரைபாங்கி. (எ)

(தோழி-வ-ம்) கொஞ்சம் பொறுத்திருப்பாயம்மணி, இதுதலைசுறை கையால் கிஞ்சிற்று வருத்தமுறல்வேண்டும், ஆனதால் இது சேதி நான் ஓடி அரசருக்குத்தெரிவித்துவருகிறேன் தாயே.

அரிச்சந்திரராஜன் தரு.

இராகம்-அடாணு, தாளம்-ஆதி.

பல்லவி.

மன்னர்மன்னருக்கெல்லாம் மன்னரரிச்சந்திர
மகாராஜரிதோவந்தார் கொலுவிருக்க
மகுடவர்த்தனர்வந்தார்.

அநுபல்லவி.

அன்னநடைவஞ்சிய ராடச்சவரிபோட
அந்தணர்சித்தர்யோக ராசிகளோதிட
நன்னகர்மாந்தர்களும் நாடிப்பணிந்திட
நாலுதிக்கிலுங்கீர்த்தி நாட்டினிலோங்கிட
நல்லுளந்தங்கியே நவிலொணுமகிமையாய்
அல்லும்பகலும்சிவத்தை யறிவினில்நிறுத்திய (மன்)

சரணம்.

இரத்தினமிழைத்தமுடி நெற்றிப்பட்டமுந்துன்ன
நேராய்முத்துவடமும் நிகழ்வலயமுமின்ன
சத்தியகொடிதுலங்கச் சாயணைபேரிபன்ன
சான்றோரிவரேயெனச் சகலருந்துதிசொன்ன
நித்தியகருமநெறி நிலைபிசகாதநேயர்
நிகருண்டெனவெவரும் நினைக்கப்போகாததூயர்
பத்தினிமாதுபாகம் பண்பிருந்திடும்மாயர்
பலகலைநீதிபத்தி பாரில்சத்தியவாயர்

பம்பையின்னொலி பம்பம்பம்மென
ஜம்பையின்ஜாலர் ஜம்ஜம்ஜம்மென
கொம்புகள்தொனி கும்கும்கும்மென
தம்புருமிசைத் தொம்தொம்தொம்மென

ஜொலிக்கப்பகைவரைக் கெலிக்கத்தவமிலே
பலிக்கச்சத்திய மொலிக்கப்புகழுடன்
சொல்லொணுக்கீர்த்தி தோய்ந்திடவெங்கணும்
மெல்லொணுச்சித்தி மேன்மைகள்தங்கிட. (மன்)

தோழி விருத்தம்.

அரசரேயுமதுதேவி யடைந்ததால்பத்துமாதம்
அரசரேகர்ப்பநோயி னடையாளஞ்சாட்டக்கண்டே
அரசரேயோடிவந்தே னனுப்பிகட்டியனையிப்போ
அரசரேமருத்துவமாதை யழைத்திடச்செய்குவீரே.

(தோழி-வ-ம்) சுவாமி? சந்திரமதி அம்மன் பத்துமாதமானதால் கர்ப்பநோய்படுகின்றாள், சீக்கிரத்தில் கட்டியனைக்கொண்டு மருத்துவச்சியை யழைப்பிக்கவேண்டும் மகாராஜனே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

புத்தியிலுயர்ந்தேலோகம் புகழ்ந்திடநெறியைப்போன்ற
சத்தியகீர்த்தியென்னுந் தனையனேமந்திரிகேளாய்
பத்தினிகர்ப்பவாதை படுவதால்மருத்துவத்தில்
முத்தியேதெளிந்தமாதை முன்னுதாய்வரச்செய்வாயே.

(அரி-வ-ம்) அப்பாசத்தியகீர்த்தி? எனதுதேவி, கர்ப்பநோய்படுவதால் விவேகசாலியாகிய மருத்துவச்சியை சீக்கிரம் வரச்செய்வாயே

(சத்-வ-ம்) அப்படியே வரச்செய்கிறேன் மகாராஜனே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

அப்பனேகட்டியக்காரா வரசன்தன்தேவிதானும்
இப்பவேகர்ப்பவேதை யெடுத்திடக்கண்டதாகச்
செப்பவுந்தோழிவந்தே செம்மலுமாக்கியாபித்தா
ரொப்பவேமருத்துவமாதை யோடிநீயழைத்துவாராய்.

(சத்-வ-ம்) பிள்ளாய்கட்டியனே? நமது இராஜன்தேவி, கர்ப்பநோய்படுவதால், மருத்துவச்சியை சீக்கிரம்போயழைத்துவாராயப்பா கட்டியனே.

(கட்-வ-ம்) இதோவொருநொடிக்குள் ளழைத்துக்கொண்டுவருகின்றேன் சுவாமி.

கட்டியன் விருத்தம்.

மருத்துவமாதே மன்னருமுன்னே
கருத்துடனழைத்தார் கடுகியேவருவாய்.

(கட்-வ-ம்) மருத்துவமாதே? அரசனழைப்பதால் சீக்கிரம் வருவா யம்மா.

(மரு-வ-ம்) அப்படியே வருகின்றேனப்பா கட்டியனே.

## மருத்துவச்சி தரு.

இராகம்-ஆனந்தபைரவி, தாளம்-ஆதி.

பல்லவி.

மருத்துவமாதுவந்தாள் கைவாசியுள்ள
மருத்துவமாதுவந்தாள்.

அநுபல்லவி.

வருத்தமுற்றேகளைக்கும் மங்கையாள்துயர்நீங்க
வாட்டமூரகவேகுந்து ஓட்டமும்நடையுமாய். (மரு)

சரணங்கள்.

சுக்குத்திப்பிலியுடன் சொல்லுமின்குகோஷ்டம்
சொகுசதிமதுரமுஞ் சூரணித்தேயதனில்
இக்குகளினிலுள்ள செடிமூலிகைக்கலந்தே
தேனுடன்பனம்பாகுஞ் சேர்த்தவுண்டைதாங்கியே. (மரு)

மாதர்கள்பிரசவ மாகுங்காலையிலவர்
மனந்தளராமல்நல்ல மார்க்கந்தனைப்படித்து
சிதனந்தாக்கிடாமல் சிசுவையளிக்கச்செய்துஞ்
செப்பொணுகிலையுடன் சிற்றறைதனைக்காக்கும். (மரு)

என்னைப்போலிவ்வுலகி விருப்பரோமருத்துவர்
என்றேகுலதெய்வத்தை யேத்திமனதில்நாட்டி
முன்னேயெனக்குக்கீர்த்தி மொழிவரச்செய்வாயென்றே
மூர்க்கமாய்தன்பெருமை மோடியாய்ப்பேசியிதோ. (மரு)

## மருத்துவச்சி விருத்தம்

விண்ணவர்புகழுங்கோவை வேந்தனேயயோத்தியாளு
மண்ணவலேயழைத்தவாறை யடியாளுக்கருள்வீர்போற்றி.

(மரு-வ-ம்) போற்றிபோற்றி, அடியாளை அழைத்தகாரியந் தெரியப்படச்சொல்லவேணு மகாராஜனே.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

மருத்துவமாதேயென்றன் மாதினைகர்ப்பநோய்தான்
வருத்துதாம்நீயுஞ்சென்றே வகையேதோபுரிகுவாயே.

(அரி-வ-ம்) மாதே மருத்துவச்சி? எனது தேவிக்கு கர்ப்பவேதனை கண்டிருக்கிறதாம், நீ சென்று அதிஜாக்கிரதையுடன் வேண்டியவாறு செய்வாய்.

(மரு-வ-ம்) மகாபாக்கியமப்படியே செய்கின்றேன் ஆண்டவனே.

மருத்துவச்சி விருத்தம்.

என்னடியம்மாசந்திர வேந்திழாயுன்றன்னேயை
பன்னடியெனக்குத்தோற்ற பண்பினிலுயங்குந்தாயே.

(மரு-வ-ம்) அம்மா என் இராஜபுத்திரியே? உனக்கு என்னமாயிரு க்கின்றது தெரியச்சொல்லுவாயம்மா.

சந்திரவதி விருத்தம்.

மந்திரமுணர்ந்தநல்ல மருத்துவத்தாயேகேளாய்
வந்திட்டநோயின்கூறு வழுத்தவுமாகாதம்மா
மைந்தனைப்பெறவேவேண்டி மகாதவம்புரிந்தோரிந்தச்
சிந்தனைப்படுவதுண்டோ செப்புவாயெனக்குத்தானே.

(சந்-வ-ம்) அம்மாமருத்துவச்சி? அந்தநோயின்கூறு என்னசொல் வேனடி! பிள்ளைக்காகத் தவமிருந்துபெறுவோர்களிந்தத்துயரடைந்த துண்டா சொல்வாயடி தாயே.

(மரு-வ-ம்) அம்மா எல்லாருக்குமுண்டு, உனக்கு என்னவிசேஷ மான நோயெடுத்தது தெரியச்சொல்லுவாய் தாயே.

சந்திரவதி விருத்தம்.

நாணமுமாகுதம்மா நவின்றிடப்போமோகேளாய்
சாண்வயிறதிலேதாயே தனியடிவாரந்தன்னில்
கோணமாயக்குமிக்குங் குடுகுடென்றுலாவுருப்போல்
காணவுமானேன்பெண்பால் கடைப்பிறப்பறிகுவாயே.

(சந்-வ-ம்) அடிஅம்மா? அடிவயிற்றில் ஏதோ சங்கடமாகின்றது, ஏதோ முட்டுகின்றது, பலவித ஆயாசமாகின்றது, இந்தபெண்ஜென் மம் கடைப்பிறப்படிதாயே.

மருத்துவச்சி விருத்தம்.

ஆதிசத்தியுமையவளும் பெண்ணேயாகும்
அருந்ததியு மாகாயவாணிபெண்ணே
ஜோதியுளலட்சுமியும் பெண்ணேயந்த
சுருதிபுகழ்கலைமகளும் பெண்ணேயம்மா

எதிலுமிப்பெண்ணுருவே யுயர்ந்ததென்று
எண்ணியல்லோமாலொருநாளெடுத்துக்கொண்டான்
நீதிதனிலுயர்ந்தவன்பால் வந்ததேவி
நின்ஜென்மம்புநிதமென நினைப்பாயம்மா.

(மரு-வ-ம்) அம்மா? பார்வதி, இலட்சுமி, அருந்ததி, ஆகாயவாணி, சரஸ்வதி, பூமாதேவி யிவர்களெல்லாம் பெண்ணல்லவோ, இதைச்சிறந்ததென்று மாயனும் பெண்ணுருவம் எடுக்கவில்லையா, அதிலும் உன் ஜென்மம் மெத்தச்சிறந்ததென்றறிவாயம்மாதாயே.

சந்திரவதி பிரசவ தரு.

இராகம்-கெண்டா, தாளம்-சாப்பு.

பல்லவி.

என்னசெய்வேனடி - அம்மா! அம்மா! ஐயோ! நான்
ஏதுசெய்வேனடி.

அநுபல்லவி.

பெண்ஜென்மமறியடி பெருந்துன்பக்குகைபடி
பேதையேயீதென்ன பிரளயஞ்சொல்லடி. (என்)

(சந்-வ-ம்) அடிமருத்துவச்சி? இந்தஜென்மம்போதும், இந்தத்துயரும்போதுமடி போதும், அம்மா? பிள்ளையின்பலன்கண்டேன்.

(மரு-வ-ம்) சகலமுந்தெரிந்தவளாச்சுதே, இப்படித்தியங்கலாமா, சற்று மனம்பொறுத்திருப்பாய் தாயே.

சரணங்கள்.

கல்லுமண்ணுமரமாய்க் கருதிப்பிறத்தல்மேலு
காட்டில்மிருகமாகி கனங்கனம்வெருமேலு
தொல்லுலகினில்தாயே தோகைபிறத்தல்பாழு
துன்பத்திலிதுமெத்த துயரடிநீகேளு
துடிக்குதேவிலாவி விடிக்குதேயிடை
கடுக்குதேதொடை நடுக்குதேயடி. (என்)

(மரு-வ-ம்) மண்ணும்பெண்பால்தான், மிருகங்களிலும் பெண்ணுண்டு, இன்னங்கொஞ்சநேரம்பொறுப்பாய் தாயே.

மேல்நோக்கியேசுவாச மெடுக்குதடிதாயே
விதவிதநோய்வயிற்றில் விளங்கிகாட்டுதுவாயே
கால்நிற்கச்சோருது கைகலாகுதாநீயே
கமலவாசனிதற்கோ கருதிப்படைத்தான்சேயே
கசையுதே குடல் பிசையுதே யுட
லசையுதே மன மிசையுதே குந்த. (என்)

(மரு-வ-ம்) இந்த இரத்தினகசித முக்காலியின்பேரில் சற்று இருப்பாயம்மா, இது ஒரு பெரிதானகாரியமல்லவே என்னைப்பார்ப்பது போல் மேல் நோக்கிப்பார்ப்பாய் தாயே, ஆச்சு ஆச்சு.

அடிவயிற்றினிலிதோ வசையுதடியம்மா
ஆபாசம்மீறுது அழுத்தாதடிசும்மா
துடிதுடிக்குதேயரை தோகையேதுரிதமாய்
சொல்லடிநீர்பெருகுஞ் சூக்ஷமென்னடியம்மா
சோருதே யேதோ தோணுதே களை
மீறுதே மனங் கோருதே தாங்க. (என்)

(மரு-வ-ம்) அம்மா தாயே? இதோ கோடிசூரியப்பிரகாசம்போலத் தேஜசு உடைய திவ்வியமகன் பிறந்தான், சந்தரவசியம்மா? உனது பாக்கியமேபாக்கியம் அம்மா தாயே.—அம்மா சவுந்தரவல்லித்தாயே? குழந்தைபிறந்த சங்கதியை அரசருக்குத்தெரிவித்துவருவாயடியம்மா

(தோழி-வ-ம்) அப்படியே இதோ ஓடிதெரிவித்துவருகிறேனம்மா.

தோழி விருத்தம்.

வேந்தனேமன்னவியாக வேண்டியேமணம்புரிந்த
சாந்தமாங்குணத்தில்மிக்க சந்திரவதியுமிப்போ
தீந்துமேகர்ப்பவாதை திவ்வியமகனைப்பெற்று
ளீந்ததோர்தாயும்பிள்ளை யிருக்கிறார்சுகமாய்வேந்தே.

(தோழி-வ-ம்) மகாராஜனே? சந்திரவதியம்மன் கர்ப்பநோய் நீங்கி திவ்விய மகனைப்பெற்றாள், தாயும்பிள்ளையுஞ் சுகமாயிருக்கிறார்கள் என் ஆண்டவனே.

(அரி-வ-ம்) அப்படியா! மகாசந்தோஷம்! எல்லாம் பரமசிவத்தினுடைய அருளாகும், உனது எஜமானிக்காக வேண்டிய சீதளவுபசாரத்தி லதிஜாக்கிரதையாயிருப்பாய் பெண்ணே சவுந்தரவல்லி.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அப்பனேமந்திரியென்ற னரசதைத்தாங்கவேண்டி
அப்பனேதிவ்வியபுத்திர னவனியிற்பிறந்ததாலே
செப்பவேபலதேசங்கள் திகழ்பெறமனங்களிக்க
விப்பவேசுவர்னதான மிடைவிடாதீகுவாயே.

(அரி-வ-ம்) அப்பாசத்தியகீர்த்தி? சிவனருளால் என்குலம்விளங்க திவ்விய புத்திரன் பிறந்ததால், வேண்டியதானங்கள் அபரிமிதமாகக் கொடுப்பாய் மந்திரி.

எதிலுமிப்பெண்ணுருவே யுயர்ந்ததென்று
எண்ணியல்லோமாலொருநாளெடுத்துக்கொண்டான்
நீதிதனிலுயர்ந்தவன்பால் வந்ததேவி
நின் ஜென்மம்புநிதமென நினைப்பாயம்மா.

(மரு-வ-ம்) அம்மா? பார்வதி, இலட்சுமி, அருந்ததி, ஆகாயவாணி, சரஸ்வதி, பூமாதேவி யிவர்களெல்லாம் பெண்ணல்லவோ, இதைச்சிறந்ததென்று மாயனும் பெண்ணுருவம் எடுக்கவில்லையா, அதிலும் உன் ஜென்மம் மெத்தசிறந்ததென்றறிவாயம்மாதாயே.

சந்திரவதி பிரசவ தரு.

இராகம்-கெண்டா, தாளம்-சாப்பு.

பல்லவி.

என்னசெய்வேனடி - அம்மா! அம்மா! ஐயோ! நான்
ஏது செய்வேனடி.

அநுபல்லவி.

பெண்ஜென்மமறியடி பெருந்துன்பக்குகையடி
பேதையேயீதென்ன பிரளையஞ்சொல்லடி. (என்)

(சந்-வ-ம்) அடிமருத்துவச்சி? இந்தஜென்மம்போதும், இந்தத்துயரும்போதுமடி போதும், அம்மா? பிள்ளையின்பலன்கண்டேன்.

(மரு-வ-ம்) சகலமுந்தெரிந்தவளாச்சுதே, இப்படித்தியங்கலாமா, சற்று மனம்பொறுத்திருப்பாய் தாயே.

சரணங்கள்.

கல்லுமண்ணுமரமாய்க் கருதிப்பிறத்தல்மேலு
காட்டில்மிருகமாகி கனங்கனம்வெருமேலு
தொல்லுலகினில்தாயே தோகைபிறத்தல்பாழு
துன்பத்திலிதுமெத்த துயரடிநீகேளு
துடிக்குதேவிலாவி விடிக்குதேயிடை
கடுக்குதேதொடை நடுக்குதேயடி. (என்)

(மரு-வ-ம்) மண்ணும்பெண்பால்தான், மிருகங்களிலும் பெண்ணுண்டு, இன்னங்கொஞ்சநேரம்பொறுப்பாய் தாயே.

மேல்நோக்கியேசுவாச மெடுக்குதடிதாயே
விதவிதநோய்வயிற்றில் விளங்கிகாட்டுதுவாயே
கால்நிற்கச்சோருது கைலாகுதாநீயே
கமலவாசனிதற்கோ கருதிப்படைத்தான்சேயே
கசையுதே குடல் பிசையுதே யுடலசையுதே மன மிசையுதே குந்த. (என்)

(மரு-வ-ம்) இந்த இரத்தினகசித முக்காலியின்பேரில் சற்று இருப்பாயம்மா, இது ஒரு பெரிதானகாரியமல்லவே என்னைப்பார்ப்பது போல் மேல் நோக்கிப்பார்ப்பாய் தாயே, ஆச்சு ஆச்சு.

அடிவயிற்றினிலிதோ வலைசயுதடியம்மா
ஆயாசம்மீறுது அழுத்தாதடிசும்மா
துடிதுடிக்குதேயரை தோகையேதுரிதமாய்
சொல்லடிநீர்பெருகுஞ் சூசுமென்னடியம்மா
சோருதே யேதோ தோணுதே களை
மீறுதே மனங் கோருதே தாங்க. (என்)

(மரு-வ-ம்) அம்மா தாயே? இதோ கோடிசூரியப்பிரகாசம்போலத் தேஜசு உடைய திவ்வியமகன் பிறந்தான், சந்தரவசியம்மா? உனது பாக்கியமேபாக்கியம் அம்மா தாயே.—அம்மா சவுந்தரவல்லித்தாயே? குழந்தைபிறந்த சங்கதியை அரசருக்குத்தெரிவித்துவருவாயடியம்மா

(தோழி-வ-ம்) அப்படியே இதோ ஓடிதெரிவித்துவருகிறேனம்மா.

தோழி விருத்தம்.

வேந்தனேமனைவியாக வேண்டியேமணம்புரிந்த
சாந்தமாங்குணத்தில்மிக்க சந்திரவதியுமிப்போ
தீந்துமேகர்ப்பவாதை திவ்வியமகனைப்பெற்று
ளீந்ததோர்தாயும்பிள்ளை யிருக்கிறார்சுகமாய்வேந்தே.

(தோழி-வ-ம்) மகாராஜனே? சந்திரவதியம்மன் கர்ப்பநோய் நீங்கி திவ்விய மகனைப்பெற்றாள், தாயும்பிள்ளையுஞ் சுகமாயிருக்கிறார்கள் என் ஆண்டவனே.

(அரி-வ-ம்) அப்படியா! மகாசந்தோஷம்! எல்லாம் பரமசிவத்தினுடைய அருளாகும், உனது எஜமானிக்காக வேண்டிய சிதளவுபசாரத்தி லதிஜாக்கிரதையாயிருப்பாய் பெண்ணே சவுந்தரவல்லி.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அப்பனேமந்திரியென்ற னரசசைதத்தாங்கவேண்டி
அப்பனேதிவ்வியபுத்திர னவனியிற்பிறந்ததாலே
செப்பவேபலதேசங்கள் திகழ்பெறமணங்களிக்க
விப்பவேசுவர்னதான மிடைவிடாதீகுவாயே.

(அரி-வ-ம்) அப்பாசத்தியகீர்த்தி? சிவனருளால் என்குலம்விளங்க திவ்விய புத்திரன் பிறந்ததால், வேண்டியதானங்கள் அபரிமிதமாகக் கொடுப்பாய் மந்திரி.

எக்கியஹோமங்களுமே யெத்திசையுந்தானோங்க
திக்கெல்லாங்கீர்த்திபெறுந் திகழொளியேகண்வளராய். (ஆரா)
தருமமுடன்சத்தியமுந் தானோங்கவினைதமெனும்
பெருஞ்சபையைக்காக்கவந்த பேரணியேகண்வளராய். (ஆரா)

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

மந்திரிசத்தியகீர்த்தி வளமிகுகுடிகளீயு
மிந்தநல்வருஷத்தீர்வை யியம்புவாய்வேண்டாமென்றே
யந்தமாய்நாட்டிலுள்ள வனைவருக்களிக்கச்சீனி
சிந்தரன்பிறந்ததற்காய் சுருக்கெனவழங்குவாயே.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? மகன்பிறந்தபடியால், ஊரில்வாழுஞ் சகலருக்கும் சர்க்கரை, தாம்பூலமுதலானதும், வழங்குவாய், பின்னும் நமது குடிகளுக்கு இவ்வருஷத்திய தீர்வை வெகுமதியெனத் தெரியப்படுத்துவாய் சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) அடியேன் அப்படியே செய்விக்கின்றேன் வேந்தே.

## சத்தியகீர்த்தி விருத்தம்.

முற்றுமிந்த வரசாள புத்திரன்வந்த
மொழியறைந்து கட்டியனே குடிகட்கெல்லாம்
நற்றிமிந்த வருஷத்தின் தீர்வைதன்னை
நாயகனு மன்னித்தா ரென்றேசொல்லி
யெற்றிசையும் புகழோங்கச் சகலருக்கு
மெண்ணெய்காய் சர்க்கரைவெற் றிலையும்பாக்கும்
வெற்றியுடன் சுவர்னப்பூ நூறுமிட்டு
விரைவுடனே யளித்திங்கு வருகுவாயே.

(சத்-வ-ம்) அப்பா கட்டியனே? நமது இராஜருக்கு ஆண்பிள்ளை பிறந்ததாலே, குடிகளுக்கெல்லாம் இந்தவருஷத்திய தீர்வை மன்னித்தோமென்றுசொல்லுவாய், பின்னும் நாட்டிலுள்ள சகலருக்கும் சர்க்கரை, பெண்ணெய், சீக்காய், தாம்பூலம், ௱ - பொன் பூவுங்கொடுத்து வருவாய் கட்டியனே.

(கட்-வ-ம்) அப்படியே செய்கின்றேன் சுவாமி.

## கட்டியன் விருத்தம்.

சொன்னதோர்முறைபோ லின்னிலத்தெவர்க்கும்
வண்ணமாயளித்தே னண்ணலேபோற்றி.

(கட்-வ-ம்) சுவாமி? தாங்கள் செப்பியவாறே செய்துவந்தேன்.

சத்தியகீர்த்தி விருத்தம்.

அண்ணலேநீர்தானிட்ட வாக்கினைப்படியேசீனி
அண்ணமேலசுவர்னபுஷ்ப மடைக்காய்தாம்பூலத்தோடும்
அண்ணலேயாவருக்கு மளித்துமேகுடிகட்கெல்லாம்
அண்ணலேவருஷத்தீர்வை யறிவித்தேன்வேண்டாமென்றே.

(சத்-வ-ம்) ஆண்டவனே? சகலருக்கும் சர்க்கரை, சுவர்னபூ, தாம்பூலமுதலானதும் அளிப்பித்தேன், குடிகளுக்கும் இந்தவருஷத்திய தீர்வை வெகுமதியென்றும் அறிவித்தேன் மகாராஜனே.

(அரி-வ-ம்) வெகுசந்தோஷம் வெகுசந்தோஷமானேன் மந்திரி.

பொது விருத்தம்.

வேந்தனுமகன்பிறந்த விருப்பத்தால்சகலருக்கு
மீந்தபின்சீனிபுஷ்ப மிளையவன்பிறந்தவாறுஞ்
சாந்தமாய்முன்னடக்குந் தனிப்பலாபலனைக்கேட்க
வாய்ந்தஜோதிடரைராஜன் வருவிக்கும்விதங்காண்பீரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? அரிச்சந்திரமகாராஜன் குழந்தை பிறந்ததற்காகவேண்டிய வெகுமதிகளை நடத்தி, இனிகுழந்தைக்கு வரும் ஜாதகப்பலாபலனைத் தெரியவேண்டி ஜோதிடரை அழைப்பிக்கிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

நலமையும்பெருமைநீதி ஞாயமுமொழுக்கந்தன்னை
நிலமையாய்விளங்கச்செய்யு நெறியுள்ளமந்திரிகேளாய்
குலமதுவிளங்கதிவ்வியக் குமரனும்பிறந்ததாலே
வலதுளசாஸ்திரியானா வரச்செய்வாய்வரச்செய்வாயே.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? குழந்தை பிறந்தவகையால் இனிநடக்கப்போகிற பலாபலன்களைத் தெரியவேண்டியதால் ஜோதிடரை அழைப்பிப்பாய் மந்திரி.

(சத்-வ-ம்) அப்படியே அழைப்பிக்கிறேன் வேந்தனே.

மந்திரி விருத்தம்.

ஆரடாகட்டியக்காரா வரைநொடிதனிலேசென்று
தீரமும்வலுமைசாஸ்திரத் திறமையுமுணர்ந்தேகால
நேரமுமறியச்செப்பும் நிகழுஞ்ஜோதிடரைநீதான்
வீரமாயழைத்தேயிங்கு விரைவினில்வருகுவாயே.

(மந்-வ-ம்) அப்பாகட்டியனே? வேந்தருக்குக்குழந்தைபிறந்தபலாப

லத்தைத்தெரியவேண்டியதால், ஜோதிடரை அழைத்துவருவாயப்பா.

(கட்-வ-ம்) அப்படியே அழைத்துவருகின்றேன் சுவாமி.

## கட்டியன் விருத்தம்.

சாத்திரமுணர்ந்த ஜோத்தியரேவும்மை
பார்த்திபனழைத்தனன் நேத்தியாய்வருவீர்.

(கட்-வ-ம்) ஐயா ஜோதிடரே? உம்மை எங்களுடைய மகாராஜர் அழைக்கச்சொன்னார் சுவாமி, சீக்கிரம் வருவீர்.

## ஜோதிடர் விருத்தம்

ஒருதடையின்றி யருமையாய்நானும்
வருகிறேனுன்பின் வருகிறேனப்பா.

(ஜோதி-வ-ம்) வருகிறேனப்பா வருகிறேன் கட்டியனே.

## ஜோதிடர் தரு.

இராகம்-தன்னியாசி, தாளம்-ஆதி.

பல்லவி.

ஜோதிடர்வந்தார் பலன்சொல்லும் ஜோதிடர்வந்தார்.

அநுபல்லவி.

பாதிமதிசடையிற் பரிவுடனேதரித்த
வாதிசிவனடியை யனுதினமுந்துதிக்கும். (ஜோ)

சரணம்.

வேதமுறைபடித்தே நவக்கிரக விதியைவாயால் நொடித்தே
குரோதமதைத்தடுத்தே பலபேருங் கொள்ளுங் கருத்தைவிடுத்தே
மாதலத்தினில்நரர் வகுத்தபாலகர்களின்
வந்தகடிகைதனே வழுத்துமுடனேயவர்
வாழ்வையும் வரும்தாழ்வையும்
மட்டிலாமலே விட்டிடாமலே
தட்டிடாமலே கெட்டிடாமலே மனம்
வைத்துத்திசை புக்தியுடன்
நத்தந்திரம் முற்றுஞ்சொலும். (ஜோ)

## ஜோதிடர் விருத்தம்.

சத்தியவழுவில்லாமற் றனிச்செங்கோற்செலுத்திநாட்டில்
நித்தியந்தருமம்வேள்வி நேமமாய்நடக்கவாவி
சுற்றியேகோவும்வேங்கைச் சொல்பகைநீக்கிவாழ்க
வைத்திமேரசேயென்னை வரவிட்டதருள்வாய்போற்றி.

(ஜோதி-வ.ம்) போற்றிபோற்றி மகாராஜனே? அடியேனை அழைப்பித்த காரணந்தெரியப்படுத்தவேண்டியது வேந்தே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

சாத்திரியாரேகேளீர் தருமபத்தினியுமென்றன்
கோத்திரம்விளங்கத்திவ்வியக் குழந்தையீன்றெடுத்ததாலே
நேத்தியாய்ஜோதிடத்தால் நீருமேபலாபத்தைச்
சாத்திடவேண்டியிங்கு தானழைப்பித்தேன்கண்டீர்.

(அரி-வ-ம்) ஜோதிடரே? என்குலம் விளங்க மகன்பிறந்தபடியால் ஜோதிட நூலைப்பார்த்துப் பலாபலன் தெரிந்துசொல்ல அழைப்பித்தேன் ஐயா ஜோதிடரே.

ஜோதிடர் விருத்தம்.

அப்படியேநான் சொற்படி நூலை
ஒப்பிடப்பார்த்தே யொப்பெனவுரைப்பேன்.

(ஜோதி-வ-ம்) பிரபு? தங்களுத்தரவின்படி நூற்களைச்சோதித்துச் சொல்கின்றேன் சற்று கவனிப்பீர்.

ஜோதிடர் விருத்தம்.

வேந்தரேமதலைவந்த வேளையும்நாளும்நீரே
சாந்தமாயெனக்குரைப்பீர் தாளடிபோற்றிபோற்றி.

(ஜோதி-வ-ம) மகாராஜனே? குழந்தைபிறந்த நாளும், நேரமும், எனக்குத்தெரியச்சொல்லவேண்டும் பிரபு.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அறிவினிலுயர்ந்தவென்ற னன்புக்கோர்தாழ்வுமின்றி
நெறியுடனடக்குமந்திரி நிமைதனில்நீயேசென்று
விரிபுகழ்மைந்தன்வந்த விபரமுங்கடிகைதன்னைச்
சரிவரத்தெரிந்துவந்தே சாத்திரிக்குரைசெய்வாயே.

(அரி-வ-ம்) அப்பா என்னன்புக்கிசைந்த மந்திரி? என்மகன் பிறந்தநாளையும், நேரத்தையும், பிசகாமல் தெரிந்துவந்து சாஸ்திரிக்கு உரைப்பாய் பாலகா.

(சத்-வ-ம்) அப்படியே நாதா, (அறிந்துவந்துரைத்தல்)

சத்தியகீர்த்தி விருத்தம்.

அத்தனையரசேயெங்க ளன்பனேயண்டினோரின்
கத்தனேதேவியீன்றக் கண்மணிதானுமிந்தச்
சித்திரையடுத்தபத்தாந் திங்களில்நவமியந்தி
யுத்தனனென்றேதாயா ருரைசெய்யவறிந்தேன்வேந்தே.

(சத்-வ-ம்) ஆண்டவனே? தைமாதம், பூர்வபக்ஷம், நவமி, பகல் உகூ௭ நாழிகைக்குமேல் ஜெனனமென்றுதெரிந்தேன் சுவாமி.

(அரி-வ-ம்) சரி, ஐயா ஜோதிடரே? மந்திரிசொன்னபிரகாரம் குறிப்பிட்டுக்கொள்ளும் ஜோதிடரே.

(ஜோதி-வ-ம்) மகாபாக்கியம், அப்படியே குறிப்பிட்டுக்கொண்டேன், இனி கவனிப்பீர் மகாராஜனே.

ஜோதிடர் வெண்பா.

வாரமது திங்கள் வளர்நவமி யாம்பூர்வம்
தாரணியி லேபரணி தானுதித்தான் - வீர
அவனிதனி லோர்குடையி லாள்வான் பன்ரெண்டில்
கவனியினி குண்டலியால் காண்.

(ஜோதி-வ-ம்) சுவாமி? * மகரமாதம், பூர்வபட்சம், நவமி, சோமவாரம் பகல் நாழிகை உகூ௭ - க்குமேல் கர்க்கடக லக்கினத்தில் மேஷராசியில் ஜெனனமானதால், இதன் இராசியில் கிரகம்நின்றநிலையைத்தெரிவிக்கிறேன், மகாராஜனே.

(அரி-வ-ம்) சரி, அப்படியே தெரிவியும் ஜோதிடரே.

ஜோதிடர் விருத்தம்.

ஆதித்தன் திருவோண மொன்றிற் செவ்வாய்
அதேரெண்டிற் சந்திரனே, பரணிபொன்றில்
பேதிக்காய்ச் செட்டியுமே சித்திரைரெண்டில்
பிராமணனும் பூசமுதற் காலில்நின்றான்
வேதமுற்ற தேவர்கோன் முதல்மகத்தில்
வீர்யமுள காலனுமே சதயமூன்றில்
பாதகியாங் காளியுமே யனுஷம்மூன்றே
பார்கணக்கன் ரோகணிமுன் பகருவேனே.

(ஜோதி-வ-ம்) சுவாமி? திருவோணம் ஒன்றில் சூரியன், பரணி ஒன்றில் சந்திரன், திருவோணம் இரண்டில் செவ்வாய், சித்திரை இரண்டில் புதன், பூசம் ஒன்றில் குரு, மகம் ஒன்றில் சுக்கிரன், சதயமூன்றில் சனி, அனுஷம் மூன்றில் இராகு, ரோகணி ஒன்றில் கேது, இப்படியாகத் தற்காலத்தில் கிரகம் நின்றநிலை வேந்தனே.

---

* மகரமாதத்தை தைமாதமெனவும் பாடம்.

## நவராசி குண்டலம்.

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | கேது | |
| சனி | இராசி குண்டலி. | | லக்கினம் குரு |
| செவ்வாய் சூரியன் | | | சுக்கிரன் |
| | இராகு | | புதன் |

(ஜோதி-வ-ம்) சுவாமி ? இராசி குண்டலியில் கிரகம் நின்றவகை யைச் சொல்லுகிறேன் மகாராஜனே.

(அரி-வ-ம்) சந்தோஷம் அப்படியே தெரியச்சொல்லும் ஐயா.

### ஜோதிடர் விருத்தம்.

சூரியனுங் குஜனேழிற் குருவுதானும்
சொகுசுற்றான் லக்கினமாங் கடகந்தன்னில்
வீரமுடன் ராகுஐந்தி லதற்கேழ்கேது
விளங்கினன் நட்புடனே புதனேவென்றால்
சாரமுள கன்னியிலு மேஷச்சந்திரன்
தனிச்சுக்கிரன் சிங்கத்தி லச்சம்பெற்றான்
காரியுமே கும்பத்தி லாக்ஷியுற்றான்
கழறுவே னிதின்பலத்தைக் [illegible]ன்பிர்வேந்தே.

(ஜோதி-வ-ம்) மகாராஜனே ? இலக்கினமாகிய கடகத்தில் குருவும், இரண்டாமிடத்தில் சுக்கிரனும், மூன்றாமிடத்தில் புதன் உச்சனும் ஐந்தாமிடத்தில் இராகு ஆக்ஷியாயும், ஏழாமிடத்தில் சூரியன் பகைவ னும், செவ்வாய் உச்சனும், எட்டாமிடத்தில் சனி ஆக்ஷியாயும், ப த்தாமிடத்தில் சந்திரன் பகைவனும், பதினோராமிடத்தில் கேது ந ண்பனும், நின்றபடியால் இனி நடக்கும் பலனைச்சொல்லுகிறேன்.

(அரி-வ-ம்) சரி சரி, அப்படியே பலனைச்சொல்லும் ஜோதிடரே.

### ஜோதிடர் அகவல்.

வேந்தனேகேளாய் விளம்புவேன்நீர்தான்
ஏந்தரோர்மைந்தன லினிவரும்பலத்தை
மேஷமோராசி மேவினதாலே
தோஷங்கள்கொஞ்சஞ் சொல்லிடலானேன்
இலக்கினப்பலனை வெழினலந்திரன்

கள

எக்கியஹோமங்க ளியற்றியேவாழ்வா ன்
உச்சத்தில்மூவ ருற்றதால்லோக ம்
மெச்சவேகீர்த்தி விளங்கியேயிருப்பா ன்
காரியுமாக்ஷி கனமுடனுற்றதா ல்
வீரியம்பெருகி மேதினியாள்வா ன்
சூரியனொருவன் சொல்லுவேனரா சே
காரியபங்கனாய்க் கயப்பிடமுற்றன ன்
ஆகலா லுரைப்பே னையனேகொஞ்ச ம்
வேதனைவிளைந்தே விரைவினில்நீங்கு ம்
மதியுபேக்ஷத்தில் வாய்ந்ததாற்சந்தி ர
னதியுமேகிலேசம் மனதினிலடைவா ன்
ஆயுள்காரக னாக்ஷிபெற்றதனா ல்
காயத்திற்கொன்றுங் களிம்பில்லைவேந் தே
கோசாரவிதியையுங் கூறுவேன்சொஞ்ச ம்
நாசனும்முடவன் நகன்றிடில்மீன ம்
ஏழரையாண்டி லிமிசையுங்கலகமு ம்
தாழுறச்செய்தவந் தன்னாளொழிந்திடி ல்
மென்மேற்கீர்த்தியும் விளங்கவேயெசசு ம்
தன்மையுஞ்செல்வமுந் தான்கொடுத்திடுவா ன்
இதுமிதுனத்தி லேகியபின்னெ ன
பதுமனேநீதான் பண்புடனறிவா ய்
ஞாலத்திற்பரணியில் நற்சிசுவந்ததா ற்
சாலவேலோக தாசனேபெயரா ம்
வியாழனும்லக்கினம் வீற்றதாற்சிறுவ ன்
ஞாலமேற்பலகலை நவிலுவன்கோ வே
நடப்பதுசுக்கிர நற்றிசைரா கு
கடப்பதிபுத்தியாங் கண்டிடுமா சே
யெக்கையேயெனக்கே யியன்றமட்டிலு ம்
வேந்தனேயுரைத்தேன் விமலனேசரண ம்.

அரிச்சந்திராராஜன் விருத்தம்

மந்திரிகேளாய் வலுமைஜோதிடர்க்கே
தந்தினிவெகுமதி தானனுப்புவையே.

(அரி-வ-ம்) அப்பா பாலகா? இந்த ஜோதிடருக்கு தகுந்தவெகும தி கொடுத்தனுப்புவாய் மந்திரி.

(சத்-வ-ம்) அப்படியே கொடுத்தனுப்புகிறேன் சுவாமி ——ஐயா ஜோதிடரே ? இந்த விலையுயர்ந்த பட்டுபணிமுதலானதுங் கைக்கொள்ளுவீர் ஐயா.

ஜோதிடர் விருத்தம்

அனுதையாவெனக்கே யன்புடன்வெகுமதி
மனேறிக்கமாகவே மந்திரியளித்தனர்
குணோதியும்நீருமுன் குழந்தையுஞ்செங்கோல்
வினோதமாஞ்சபையும் மென்மேலும்வாழி.

(ஜோதி-வ-ம்) மகாராஜனே ? யான் அனேககாலமாக வறுமையடைந்திருந்த எனக்கு காரி யெனைவிட்டு இன்றுநீங்கினதால் தங்கள் அருந்தவப்புதல்வனுக்கு என்னுலியன்றவரையில் பலாபலன் சொல, தாங்கள் மனமகிழ்ந்து அறிவிலுயர்ந்தமந்திரிக்குக் கட்டளையிட்டவாறு இலாமல் மென்மேலும் அபரிமிதமாய் வெகுமதிகொடுக்கப் பெற்றுக்கொண்டேன், வாழி வாழி மகாராஜனே வாழி.

பொது விருத்தம்.

தேவர்களரக்கர்சித்தர் திகழ்புவிசேவந்தர்மன்னர்
மூவர்கள்வசுக்கள்பாலர் முனிவர்கள்யோகவான்கள்
யாவருநடுங்கச்செய்தோ னணிநவக்கிரகத்தின்மேலான்
காவலன்றன்னைக்காணக் காரியும்வருகின்றனே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? ஜோதிடர்பரிசுபெற்றுப் போன சிலகாலத்துக்குப்பின்பு ஏழுபச்சைப்புரவிகள்கட்டிய ஒற்றைச்சக்கிரமுடைய தேரின்மேல் அருணனதுதயவால் உலகமெங்கணுமுள்ள இருளைப்போக்குவிக்கும் சூரியன்புதல்வனுகிய சனிபகவா னரிச்சந்திரமகாராஜனைத் தொடருதலைப்பற்றிக் காணவருகிறவிதங் காண்பீர்கள் கனவான்களே.

சனிபகவான் தரு.

இராகம்-அடாணு, தாளம்-ஆதி.

பல்லவி.

தேவர்தேவர்களு நாதர்மூவர்களும்
திகைக்கச்செய்தசனியன் நானே - மனம்
பதைக்கச்செய்தபுனிதன் நானே.

அநுபல்லவி.

காவலனேயாகிலு மெனக்கிணைச்சொல்லப்போமோ
கடந்தசுக்கியாணிகளுங் கண்டால்நிலைக்கலாமோ

பாவந்தனக்குமஞ்சாப் பழியைச்சுமத்திமெத்த
தாபத்திரையத்துள்ளாக்குஞ் சாயாவதியளித்த. (தே)

சரணம்.

ஆதிமூலப்பொருளை யொருநொடிக்குள்ளாக
வடக்கிசர்ப்பந்தரிக்கச் செய்தேன் - நல்ல
வழகுள்ளமாயனைக் சேர்வமொடிக்கிப்பன்றி
யாக்கிபூமியைக்கெல்ல வைத்தேன்
நீதிவழுவாக்காலன் கொண்டமதமழிக்க
நிலத்திலுருளவுதைப் பித்தேன் - சர்வ
நிகரொடிங்கிடவந்தப் பிரமன்சிரசுதனை
நிமையிற்கிள்ளிடச்செய்து வைத்தேன்
கோதிலாக்குணனந்த குமரன்பயமடைந்தே
கோணுமரமாய்நிற்கச் செய்தேன் - சகல
கோடிராசிகளைக் காக்குமவனிநாதனே
குன்றிற்றவம்புரிய வைத்தேன்
ஜோதிச்சுடராம் வஜ்ராயுதனுடலெல்லாம்
தொண்டிகளாகக் காணச்செய்தேன் - திகழ்
சூரனெனவேவெகு வீரியம்பெற்றவனைத்
துண்டிரண்டாகவெட்டு வித்தேன்
எதிலுமென்னைவிட வொருவன்வலியனுண்டோ
எதிர்த்தென்னுடன்சமர் புரியும்பெரியோனுண்டோ
இல்லை யிதுவே யென்றன் சொல்லை யமரரில்லை
றல்லைக் கண்டேகாட்டப் பல்லை யின்னமுங்கேளீர்
திண்ணடங்காமலை யிரண்டுதுண்டுபெற
வண்டரண்டபகி ரண்டமெண்டிசையும்
திகைச்க பிரமிக்க நடிக்க வெடிக்கவே
செய்வேன்மதங்கொண்டோரைக் கொய்வேன்பணிபவரை
யுய்வேன் நிகர்ந்தவரை வைவேனித்
தேசம்புகழ்பெறவே வாசம்மருவவிடு
நேசன்பாபவி மோசனனெனை. (தே)

சனிபகவான் விருத்தம்.

ஆரடாகட்டியக்காரா வரைநொடிதனிலேநீதான்
தீரனுமரிச்சந்திரன்றன் செங்கோலுமுனமேசென்று
வீரனுஞ்சனியன்காண வேண்டியேவந்தானென்றே
கூறடாவுத்தரவாகிற் கொப்பெனவருகுவாயே.

(சனி-வ-ம்) அடா கட்டியனே? அரிச்சந்திரமகாராஜர் கொலுவின் முன்னே சென்று காண்பதற்காகச் சனியன் வந்திருக்கிறானென்று தெரிவியும்பிள்ளாய் கட்டியனே, சீக்கிரம் சீக்கிரம்.

(கட்-வ-ம்) அப்படியே தெரிவிக்கிறேன் பகவானே.

கட்டியன் விருத்தம்

வேந்தனேகாணவேண்டி விரும்புரார்சனியன்றானும்
சாந்தனேகொலுமுன்னுட சாற்றிநல்வரச்செய்வேனே.

(கட்-வ-ம்) ஆண்டவனே? தங்களைக்காணவேண்டி சனிபகவான் வந்திருக்கிறார், உத்தரவாகில் வரச்சொல்லுகின்றேன் வேந்தே.

(அரி-வ-ம்) அப்படியே அழைத்துவாரும் பிள்ளாய் கட்டியனே.

(கட்-வ-ம்) புத்தி, அப்படியே வரச்செய்கிறேன் ஆண்டவா. —ஐயா சனிபகவானே? அரசர் வரச்சொன்னார் வாரும் சுவாமி.

(சனி-வ-ம்) அப்படியே, வருகிறேன் கட்டியனே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

நீரினையுண்டெழுமேகமுற்றவண்ணு
நெடுங்கரத்திற்சூலமதைத்தாங்குமன்னு
சூரியன்றன்றவப்பலத்தால்வந்தகண்ணு
சொல்லுநவக்கிரகத்திலுமேலானவண்ணு
காரியெனும்பேர்படைத்தக்குருவேயிந்தக்
காசினியோரைக்காக்குங்கடலேநாதா
நீரிங்குவந்தவகையடியனுக்கே
நிகழ்த்துவீர்நின்னடிக்கேபோற்றிபோற்றி.

(அரி-வ-ம்) போற்றி போற்றி சனிபகவானே? தாங்கள் வந்தகாரியந் தெரியப்படச் சொல்லவேண்டும் சுவாமி.

(சனி-வ-ம்) அப்படியே தெரிவிக்கின்றேன் இராஜனே.

சனிபகவான் விருத்தம்.

சத்தியம்வழுவில்லாமற் றாணியையாளுமன்னு
யெத்திசையுள்ளோரெல்லா மெனக்குட்பட்டோர்கண்டாய்
நத்தினுனுன்னைக்காண நாட்டமுங்கொண்டுவந்தே
னித்தினம்நலமோவன்றி யிளமைபோய்வரவோசொல்வாய்.

(சனி-வ-ம்) அப்பா இராஜனே? சகலரும் என்க்குட்பட்டவர்களென்று உனக்குந்தெரியுமல்லவா, ஆதலால் உன்னிடம் சிலகாலம் வாச

ஞ்செய்யவேண்டி வந்தேன், உம்மையுங் கண்டேன், இது காலஞ்சரி யோ, அன்றி இந்த இளமைபோய் முதுமையில் வரவோசொல்லும் வேந்தனே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

எதுகாலமென்றேயென்னை யின்பமாய்க்கேட்டநாதா
விதுகாலமதுவேயன்றே யிளமைபோய்முதுமையுற்றுற்
றதும்புமுன்னருளைத் தாங்கச் சக்கியமோவென்றற்சுவாமி
யுதும்பிலாமனத்தோயீதே வுத்தமமுணருவீரே.

(அரி-வ-ம்) சுவாமி ? முதுமைதங்கியகாலத்தில் உம்முடையகருணை யால் வருங்காரியங்களைச்சகிக்கப்போமோ ! ஏதேது முடியா, ஆனதா ல் இந்த இளமையிலேயே தாங்கள் திருஷ்டிக்கத்தகுந்தகாலம் ஆண்ட வனே,— ஆ ! ஈசா ! காரும் காரும், பரஞ்சோதியே, உஸ்.

சனிபகவான் விருத்தம்

நல்லதுமன்று சொல்லியவாறே
வெள்ளிபோயுன்பால் வள்ளலேவருவேன்.

(சனி-வ-ம்) மகாராஜனே ? நீர் கோரியபடியேவருகிறேன் சதாவாழி.

(அரி வ-ம்) சுவாமி ? தாங்கள் வந்தாலும் அடியேன்பேரில் பூரண கடாக்ஷம் வைக்கவேண்டியது, மேலும் உமது பெருமையை யாவர் அறிவார் போய்வாரும் ஆண்டவனே.

பொது விருத்தம்.

காரியுமேயரசனுடன் வினவிச்சென்றான்
கதிர்குலத்தோன்பாலகனும் வயதுமைந்தை
மீறுமுன்சகலகலை யுணர்த்தவேண்டி
மேவியினிபள்ளிவைக்கும் விதங்காண்பீரே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? சனியன் கண்டுபோயினபின்பு, அரிச்சந்திரமகாராஜன் தன்மகனாகிய லோகிதாசனைப் பள்ளிக்குவை க்கும் விதங்காண்பீர்கள் கனவான்களே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

பத்தியில்மிகுந்தவென்றன் பாங்குளவமைச்சனான
சத்தியகீர்த்தியொன்று சாற்றுவேன்கேளாயப்பா
புத்திரன்லோகிதாசன் பொருந்தினன்வயதோரைந்து
வித்தியாப்பியாசஞ்செய்ய வேதியன்வரச்செய்வாயே.

(அரி-வ-ம்) அப்பா மந்திரி? லோகிதாசனுக்கு வயது ஐந்தானதால் வித்தியாப்பியாசஞ்செய்யவேண்டும், உபாத்தியாயரைய ழைப்பிப்பா ய் சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) அப்படியெ அழைப்பிக்கின்றேன் அரசே.

### சத்தியகீர்த்தி விருத்தம்

ஆரடாகட்டியக்காரா வரைநொடிதனிலேயோடி
நீரசாஸ்திரங்களோதிச் சேய்களைவிருத்திசெய்யும்
சீரனுங்குமரவேலு சிறப்புள்ளவுபாத்தியாரை
வீரமாயென்றன்முன்னே விரைவினில்வரச்செய்வாயே.

(சத்-வ-ம்) அடா கட்டியனே? வித்தையில் மகாவல்லவனாகியகும ரவேல் உபாத்தியாயரைச் சீக்கிறமழைத்துவருவாய் கட்டியனே

(கட்-வ-ம்) இதோ ஓடி அழைத்துவருகின்றேன் சுவாமி.

### கட்டியக்காரன் விருத்தம்.

பிள்ளைகள்தங்களுக்கே பேரறிவிளங்குஞான
முள்ளமுங்களிக்கவேத முணர்ப்பிக்குமையா கேளாய்
கள்ளமுங்கபடுஞ்சூதுங் கனவிலுங்கருதாவெங்கள்
வள்ளலுமுமையழைத்தே வரவென்னைவிட்டார்சுவாமி.

(கட்-வ-ம்) உபாத்தியாயரே? எங்களரசர் தங்களை அதிசீக்கிரமாய் அழைத்துவரச்சொன்னார் வாரும் சுவாமி.

(உபா-வ-ம்) அப்படியே வருகிறேனப்பா வாரும் வீரகட்டியனே.

### உபாத்தியாயர் வருகிற தரு

இராகம்-நாதனுமக்கிரியை, தாளம்-சாப்பு.

பல்லவி.

வாத்தியார்வந்தார் - அயோத்திவாழ்
வாத்தியார்வந்தார்.

அநுபல்லவி.

நேத்தியதாகவெண் ணீறுநுதலிற்பூசி
சாத்திரமுறையினில் தாக்கமிகவேபேசி. (வா)

சரணங்கள்.

அரையிற்பட்டுமடி யன்பாகவேகட்டி
அங்கவஸ்திரம்மேலஞ்சு மழகாய்த்தொங்கவேபூட்டி
சிரமேல்மடியொன்றைச் சிககாரமாய்க்கட்டி
சீனமவாத்திகளெல்லாம் திகைத்திடவேசெட்டி. (வா)

வேதசாஸ்திரமதை விதிமுறைப்படியந்த
வேணுஞ்சிறுவர்க்கெல்லாம் விரைவிலுரைப்போன்பந்த
பாதகம்போக்கவே பரிவாயுரைசாந்த
பஞ்சாக்ஷரநிட்டை பண்புடன்சொல்வேனென்று. (வா)

சொல்வித்தைவில்வித்தைச்சுருக்காய்ப்படிப்பிப்பேன்
ஜோதிடவாகடத் தன்மையுங்கற்பிப்பேன்
மல்யுத்தம்வாள்யுத்தம்வகையுட னுணர்ப்பிப்பேன்
மத்தகரிபரிவிடும் வரிசையுஞ்சொல்வேனென்று. (வா)

நித்தியகருமவிதி நிலைதனிலேயாடி
நீடுலகிற்றனக்கு நிகரில்லையெனப்பாடி
சத்தியபாஷவரிச் சந்திரன்கொலுவைநாடி
சந்தோஷமேலிட்டு தாண்டித்தாண்டியோடி. (வா)

## உபாத்தியாயர் விருத்தம்.

உன்னைதக்கட்டியனே பென்வரவைநீ
மன்னவன்றனக்கே பன்னியேவருவாய்.

(உபா-வ-ம்) உபாத்தியாயர் வந்தாரென்று தெரிவியுங்கட்டியனே.

(கட்-வ-ம்) அப்படியே தெரிவிக்கிறேன்குருவே, — மகராஜரே தலைவாசலில் உபாத்தியாயர் வந்திருக்கின்றார் அரசே.

(அரி-வ-ம்) அப்படியா மகாசந்தோஷம் வரச்சொல்லும்பிள்ளாய்.

(கட்-வ-ம்) புத்தி நாதா — எங்களாண்டவர் உத்தரவுசெய்தார் வாரும் உபாத்தியாயரே.

## உபாத்தியாயர் விருத்தம்.

மாரனைப்பழிக்குந்திவ்விய மதிமுகமுடையோய்போற்றி
வீரனைபகைத்தபேரை வெற்றிகொள்சூராபோற்றி
நாரணனயனுங்காணு நம்பனைதுதிப்போய்போற்றி
காரணமெனையழைத்தக் கருத்துரைசெய்வாய்போற்றி.

(உபா-வ-ம்) போற்றி போற்றி மகாராஜனே? என்னையழைத்தகாரியங்தெரியப்பட அருள்புரியவேண்டும் வேந்தனே.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

ஐயரேயெனதுபாலனேந்தாண்டுசிறுவனுனும்
செய்யவேவித்தியாப்பியாசம் சீருடனழைத்தேன்காண்பாய்.

(அரி-வ-ம்) உபாத்தியாயரே? என் குமாரனுக்கு ஐந்துவயதான

தால், வித்தியாப்பியாசம் உம்மிடத்திடல் செய்விக்க அழைப்பித்தேனையா போதகரே.

(உபா-வ-ம்) மகாசந்தோஷமப்படியே செய்விக்கலாம் அரசே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

செப்புவேனுபாத்தியாரே நீவரந்தனிலேநீரு
மொப்புடன்பஞ்சாங்கத்தை யுற்றுமேநோக்கினாளை
கொப்பெனவுரைப்பீராகிற் குழந்தையைவரவழைத்தே
யப்பவேயக்ஷரத்தை யனுட்டிக்கவிடையீவேனே.

(அரி-வ-ம்) உபாத்தியாயரே? நீர் பஞ்சாங்கத்தைப்பார்த்து நல்ல நாள்வேளையைச் சொல்வீராகில், லோகிதாசனைவரவழைத்து அக்ஷராப்பியாசஞ்செய்ய விடைகொடுக்கின்றேனுபாத்தியாயரே.

உபாத்தியாயர் விருத்தம்.

இன்றுநற்றினமேவித்தியாப் பியாசமேதான்செய்விக்க
நன்றுநன்றிதுவேகண்டீர் நடப்பிக்கவிடையீவேந்தே.

(உபா-வ-ம்) மகாராஜனே? வித்தை ஆரம்பஞ்செய்வதற்கு, இன்றையதினமே சுபமாயிருக்கின்றது வேந்தனே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

வித்தியாப்பியாசத்திற்கே வேண்டியவகைகளெல்லாம்
சித்தஞ்செய்திடவேநீதான் சீக்கிரப்படுவாய்மந்திரி.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? லோகிதாசனைப் படிப்பிக்கவேண்டிய தால், வேண்டியதினுசுகளையெல்லாஞ் சீக்கிரத்திற் சேகரிப்பாய் சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) அப்படியே சேகரிக்கச் செய்கின்றேன் மகாராசனே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

கடலைபொரி காய்பழமுஞ் சீனிதேனுங்
கரும்படைக்காய் வெற்றிலையுங் *கருப்புட்டிப்பால்
திரமுடனே தூபதீப நெய்யுமெக்கிய
தினுசுகளும் பட்டுநூ லோலையேடும்
படருமல ருங்குடனே யெள்ளுந்தான்னியம்
படியொன்று மெழுத்தாணி பண்பின்மிக்க
நடனகிளி மொழியைவிட வினிப்பதான
நற்புதல்வன் படிக்கவேநா னமைத்தேன்வேந்தே.

* கருப்புட்டி யென்பது வெல்லம் அலது பெல்லக்கட்டியெனவும்பாடம்.

(சத்-வ-ம்) மகாராஜனே? வித்தியாப்பியாசத்திற்கு ஆகவேண்டிய சகலதினுசுகளுஞ்சித்தப்படுத்தினே னாண்டவனே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

மந்திரிகேளாய்நீதான் மதிமுகம்போன்றவென்றன்
சந்திரவதியாளீன்ற சற்குணபாலன்றன்னை
சுந்தரப்பொட்டுமிட்டு சொகுசுறவுடுத்தியிங்கு
வந்திடச்செய்வாய்பள்ளி வைத்திடக்காலமாச்சே.

(அரி-வ-ம்) அப்பாபாலகா? நீ சென்றுலோகிதாசனை ஸ்னானஞ்செய்வித்து, நல்ல ஆடையுடுத்தி, அதிசீக்கிரமாய் அழைத்துவருவா யப்பா சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) நல்லது ஆண்டவனே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

அன்னையேகேளாயுன்ற னருமையாம்பாலன்றன்னை
இன்றையதினத்தில்வித்தை யியற்றிடவேணதெல்லாம்
முன்னமேசேகரித்தோ முதிடஞ்சென்றுபாலன்
றன்னையேயழைக்கவேந்தன் தான்வரவிட்டார்தாயே.

(சத்-வ-ம்) என்னை அடிமைகொண்டதாயே? இன்றைபதினம் வித்தியாப்பியாசஞ்செய்யவேண்டி, லோகிதாசனைச்சிங்காரித்து அழைத்துவரும்படி ஆண்டவன் ஆக்கியாபித்தார் அம்மணி.

(சந்-வ-ம்) மகாசந்தோஷ மப்படியே யழைத்துக்கொண்டுபோவாயப்பா சுதனே.

சந்திரவதி விருத்தம்.

கேளடிதோழி பாலனைநன்றாய்
மேலெனவுடுத்தி சாலவேகொணர்வாய்.

(சந்-வ-ம்) அம்மா சவுந்தரவல்லி? பாலகனைக்குளிப்பாட்டி, திலதமிட்டு, ஆடையாபரணம்பூட்டி, சீக்கிரத்திலழைத்துவருவாய் தோழி.

(தோழி-வ-ம்) அப்படியே சீக்கிரத்தில் செய்விக்கின்றேன் தாயே.

தோழி விருத்தம்.

அம்மணியெனக்குநீதா னுக்கினையிட்டவாறு
அம்மணிபாலன்றன்னை யழகுநற்றீர்த்தமாட்டி
அம்மணிநீறுபூசி யதன்பேரில்திலதமிட்டு
அம்மணியுடுத்தியாச்சு அறிகுவாய்தாயேபோற்றி.

(தோழி-வ-ம்) அம்மா? தாங்களுத்தரவுசெய்தபடியே கண்மணியாகிய லோகிதாசனைச்சிங்காரித்தேன் தாயே.

(சங்-வ-ம்) அப்பா என்குலம் விளங்கவந்த லோகிதாசா.

(லோகி-வ-ம்) சொல்லுவாயம்மா என்னைப்பெற்றதாயே.

சந்திரவதி விருத்தம்.

அப்பனேமகனேயென்ற னருந்தவப்பலனேகேளாய்
செப்பவுமாமோ கல்விச் சிறப்பிற்குமிணையாவேறு
இப்பதிசுவர்னம்ரத்ன மின்னதைவிடவுமேலாம்
ஒப்பவேயோதிவிக்க வுன்தந்தையழைத்தார்போவாய்.

(சங்-வ-ம்) அப்பா என்கட்டிக்கரும்பே? செல்வப்பொருளெல்லாங் கல்விப்பொருளுக் கீடல்ல; ஆனதாலுனக்குக் கல்வி கற்பிக்கவேண்டி உன்தந்தை யழைத்தாராம் போய்வருவாய் மகனே.

லோகிதாசன் விருத்தம்.

அம்மணிகல்விகற்க வடியனும்போவேன்தாயே
அம்மணியுனதுதிவ்விய வருள்வாக்குக்கொடுப்பாயம்மா.

(லோகி-வ-ம்) அம்மா என்னைப்பெற்றதாயே? எனக்கு சகலகலையுந்தீவரத்தில் சித்திக்கும்படிக்கு ஆசீர்வாதஞ்செய்குவாய் தாயே.

சந்திரவதி விருத்தம்.

பாலனேவுனக்கேகல்வி பலித்திடவாசீர்வாதம்
பாலனேபரியினேற்றம் பலித்திடவாசீர்வாதம்
பாலனேவில்லும்வேலும் பலித்திடவாசீர்வாதம்
பாலனேயோகஞ்ஞானம் பலித்திடும்போய்வாகண்ணே.

(சங்-வ-ம்) அப்பாமகனே? உனக்குக்கல்வி, யோகம், ஞானம், ஆனையேற்றம், குதிரையேற்றம், வில்வித்தை முதலானதும் இனி சிவனருள்செய்வார் போய்வருவா யென்கண்மணியே—அப்பா மந்திரி? லோகிதாசனை அழைத்துக்கொண்டுபோவாய் சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) மகாபாக்கிய மப்படியே அழைத்துக்கொண்டுபோகிறேன் தாயே.

லோகிதாசன் விருத்தம்.

அன்னையேபோற்றி யனைவரும்பணிய
மன்னியவுமது மலரடிபோற்றி.

(லோகி-வ-ம்) போற்றி போற்றி என்னையீன்ற தந்தையே? என்னைவரவழைத்தகாரியந்தெரிந்திலேன், தயவுசெய்யவேண்டும்.

(அரி-வ-ம்) சரி வாழிபாலகா. ஐயா உபாத்தியாயரே, இதோகுழந்தையும் வந்துவிட்டான் இனி வித்தியாரம்பஞ்செய்யத்துவக்கும் ஐயரே.

(உபா-வ-ம்) சுவாமி அப்படியே ஆரம்பிக்கின்றேன் மகாராஜனே.—அப்பாலோகிதாசா? என்வலதுபக்கத்தில் சப்பாணிகாலிட்டு, கிழக்குமுகமாய்த்திரும்பி உட்காருவாய், அப்பா நான்சொல்லுகின்றபடிக்கு உன்வாயினாற்சொல்லி ஆதிகணபதியைத்தொழுவாயப்பா கண்மணியே.

(லோகி-வ-ம்) அப்படியே சொல்லுகின்றேனையா.

உபாத்தியாயர் விருத்தம்,

ஓம்கரிமுகனேபோற்றி யுயர்கணபதியேபோற்றி
தேங்கனிவாயாபோற்றி திருநேத்திரமுடையாய்போற்றி
தாங்குமைக்கரத்தாய்போற்றி சத்திவல்லபையாய்போற்றி
மூங்கிசர்பாலபோற்றி மூஷிகாபதியேபோற்றி.

(உபா-வ-ம்) அப்பாலோகிதாசா? நான்சொல்லும் வாக்கியத்தை நீயுஞ்சொல்லுவாயப்பா கண்மணியே.

வாக்கியம்.

பஜேபிர்ம பஜேவிஷ்ணு பஜேருத்திர மகேஸ்வர
பஜேசாக்ஷாத் பரம்பிரம்மம் சதாமனம் ஷண்முகா-

(உபா-வ-ம்) அப்பாலோகிதாசா? இம்மலர்த்தட்டைத்தாங்கி நான் சொல்லுகிறபடியே நீயுஞ்சொல்லி மூலகணபதிக்கு அர்ச்சனைசெய்குவாயப்பா பாலகா.

அர்ச்சனை.

| | |
|---|---|
| ஒற்றைக்கொம்பாய நம: | ஓங்கணபதியே நம: |
| சித்திபுருஷாய நம: | தேவிவல்லபாய நம: |
| திவ்வியரூபாய் நம: | தேஜோன்மயாய நம: |
| விக்கைக்கரசேய நம: | விக்னேஸ்வராய நம: |
| சித்திமூலாய நம: | சின்மயரூபாய நம: |
| ஆதிகாரணாய நம: | அனாதிப்பொருளேயநம: |
| ஜோதிச்சுடரேய நம: | சூர்ப்பகர்ணாய நம: |
| அகண்டபரிபூரணாயநம: | அரிவோம்ய நம: |

(உபா-வ-ம்) அப்பாலோகிதாசா? இந்த ஏட்டைக்கையிற்றாங்கி நான்சொல்லும்படியே உன்னுவால் ஓலிப்பாய் மைந்தனே.

(லோகி-வ-ம் அப்படியே ஓலிக்கின்றேனையா.

(உபா-வ-ம்) ஹரி - ஓம் - நன்றாக - குருவாழ்க - குருவேதுணை.

(லோகி-வ-ம்) ஐயா? இதன்பலனை யெனக்குந் தெரிவியும்.—

(உபா-வ-ம்) அப்படியே சொல்லுகின்றேன் பாலகா.—அப்பாலோகிதாசா? நீ நலப்பட வுனக்குப் போதிக்குங்குருவானவன், வாழ்ந்து அவன் மொழி யுனக்கு முன் துணையாகி ஓம் எனும் பீசத்தையறிந்து, தெளிவுறுவதே யிதன் கருத்தென்றுணர்வாய் கண்மணியே.

லோகிதாசன் விருத்தம்.

ஓமெனச்சொல்வதென்ன வுணர்வதால்வருவதென்ன
நான்மனங்களிக்கவையா நலமுடன்தெரிவிப்பீரே.

(லோகி-வ-ம்) ஐயா வுபாத்தியாயரே? ஓம் என்று சொல்வதின் பயனென்ன? அதை யுணர்வதால் வரும்பயனென்ன? எனக்குத் தெரியப் படச்சொல்லவேண்டுஞ்சுவாமி.

(உபா-வ-ம்) அப்படியே சொல்லுகின்றேன், தெரிந்துகொள்ளுவாயப்பா லோகிதாசா.

உபாத்தியாயர் விருத்தம்.

ஓதுவாய் முதலெழுத்தே யகாரமாகும்
உணர்ந்திடுவா யுகாரமதே நடுவதாகும்
பேதமறி நுனியெழுத்தைச் சொல்வேனப்பா
பிரியமுடன் தெரிந்துகொள் மகாரந்தானே
சாதனையா லிதைச்கூட்டி யோமென்றேதான்
சாற்றிடுவாய் பரஞ்சோதி தன்னுட்டோன்றும்
வாதுகளும் வேதனையுங் காலனாலே
வாராது பேரின்பம் வாய்க்குந்தானே.

(உபா-வ-ம்) அப்பா லோகிதாசா? அகார, உகார, மகாரமாகிய, மூன்றையுமிணைத்து ஓமென்று மனதைநிறுத்தி உச்சரித்தால், இயமபாதை நீங்கி, பேரின்பவாரியில் குளிக்கலாகும், இதுதான் சகலத்திற்கு மூலமந்திரமென்று தெரிந்துகொள்வாய் கண்மணியே.

(லோகி-வ-ம்) இதுமூலமானவகை தெரியச்சொல்லவேணுமையா?

(உபா-வ-ம்) அப்படியே சொல்லுகின்றேன் பாலகா.

உபாத்தியாயர்விருத்தம்.

அண்டபிண்ட மவற்றுள்ள சராசரங்க
ளணுவுமுதல் மேருவரை யொன்றுமில்லா
பிண்டாகி காலையிலே பரையோடுற்ற
பரமணுருள லேயோமென்றசத்த



முண்டாகி யதிற்பஞ்ச பூதந்தோன்றி
யுற்பத்தி யாயினார் பஞ்சகர்த்தாள்
கண்டாயோ முறைமுறையே யமைந்தாநீயுங்
காரணங்க ளினைமூண்டு கழறுவேனே.

(உபா-வ-ம்) இன்னந்தெளிவாகக் கேளாயப்பா பாலகா.

உபாத்தியாயர் விருத்தம்.

விளம்புவே னிவ்வகையாய்ப் பஞ்சகர்த்தர்
வெளியாகிப் பலவுருவாய் வீற்றுநின்றார்
இளம்புவேன் பிரிநிலப்பு தேயுவென்றும்
கிட்டாத வாய்வு ஆகாயமென்றும்
தலந்தனிலே பிரம்மவிஷ்ணு ருத்திரனென்றே
சாற்றியே ரூபங்கள் தானமைத்தார்
நலந்தெரிவாய் மற்றிரண்டின் ரூபங்காணார்
நற்பாலா வினிபாடம் படிப்பாய்நாதா.

(உபா-வ-ம்) அப்பாபாலகா? அண்ட பிண்ட சராசரமில்லாத காலையில் மூலப்பிரகிருதியோடுற்ற கடவுள் அரூபியாய்த்தானேதானு யெங்கும்பரவி நிற்க, அவ்வரூபத்திலிருந்து ஓம் என்று ஒரு சப்தம்பிறந்தது, அதிலிருந்து ஆகாயம், வாயுவு, அக்கினி, ஜலம், மண் ஆகிய பஞ்சபூதங்களுண்டாய், அவற்றுள் ஆகாயத்தால் சதாசிவமும், காற்றால் மகேஸ்வரனும், அக்கினியால் ருத்திரனும், ஜலத்தால் மாயவனும், ஜலந்தங்கிய மண்ணால் பிரமனும் வெளியாக இதில் கண்ணுக்குத்தோற்றும்படியான மூன்றைமாத்திர முருவாயமைத்து அவைகளுக்கு பிரம்மா விஷ்ட்ணு உருத்திரனென்று பெயரிட்டு காரணதேவதைகளாக பூசித்துவருகிறார்கள், மற்ற இரண்டுங் கண்ணுக்குத்தோற்றாதானதால் உருவு அமைக்கத்தெரியாமல் விடப்பெற்றிருக்குதென்றறிவாய் பாலகா.

(லோகி-வ-ம்) மகாபாக்கியம் மகாபாக்கியம் சற்குருவே.

(உபா-வ-ம்) அப்பாலோகிதாசா? இனி அக்ஷரத்தை வாசிப்பாய் பாலகா.

(லோகி-வ-ம்) அப்படியே வாசிக்கின்றேன் குருவே.

உபாத்தியாயர் தரு.

இராகம்-பிலஹரி, தாளம்-ஆதி.

உபா-ஓ ம் ந ம வென்றுரைப்பாய் நீ என்கண்மணியே.
லோ-ஓ ம் ந ம வென்றுரைத்திட்டேன் என் குருவே.

உபா-சிவய வெனச்செப்புவாய் நீ கண்மணியே.
லோ-சிவய வெனச்செப்பினேன் என்குருவே.
உபா-அ ஆ இ ஈ யென்றறைவாய் நீ கண்மணியே.
லோ-அ ஆ இ ஈ யென்றறைந்திட்டேன் என்குருவே.
உபா-உ ஊ ரு ரூ வென்றோதுவாய் நீ கண்மணியே.
லோ-உ ஊ ரு ரூ வென்றோதினேன் என்குருவே.
உபா-லு லூ எ ஏ யென்றுரைசெய்வாய் நீ கண்மணியே.
லோ-லு லூ எ ஏ யென்றுரைசெய்தே னென்குருவே.
உபா-ஐ ஒ ஓ வென்றுரைத்திடு நீ கண்மணியே.
லோ-ஐ ஒ ஓ வென்றறைந்திட்டேன் என்குருவே.
உபா-ஔஉடனிவை உயிர் அறிந்துகொள் நீ கண்மணியே.
லோ-ஔஉடனிவை உயிர் அறிந்திட்டேன் என்குருவே.
உபா-க க க க வைகருது நீ கண்மணியே.
லோ-க க க க வைகருதினேன் என்குருவே.
உபா-ச ச ச ச வைசாற்றுவாய் நீ கண்மணியே.
லோ-ச ச ச ச வைசாற்றினேன் என்குருவே.
உபா-ட ட ட ட நீதானோது கண்மணியே.
லோ-ட ட ட ட நான்தான் கொண்டேன் என்குருவே.
உபா-த த த த வைதான் சொல்லு நீ கண்மணியே.
லோ-த த த த நான் தான் சொன்னேன் என்குருவே.
உபா-ப ப ப ப நீ படித்திடு கண்மணியே.
லோ-ப ப ப ப நான்படித்திட்டேன் என்குருவே.
உபா-ங ஞ ண ந ம வைநாட்டிக்கொள் நீ கண்மணியே.
லோ-ங ஞ ண ந ம நான் நாட்டினேன் என்குருவே.
உபா-ய ர ல வ நீ அறிந்துகொள் கண்மணியே.
லோ-ய ர ல வ நான் அறிந்திட்டேன் என்குருவே.
உபா-ஜ ஷ ஸ ஹ நீ சாற்றிடு கண்மணியே.
லோ-ஜ ஷ ஸ ஹ நான் சாற்றினேன் என்குருவே.
உபா-ள ற க்ஷ மெய் நாட்டிக்கொள் நீ கண்மணியே.
லோ-ள ற க்ஷ மெய் நாட்டினேன் என்குருவே.
உபா-நாற்பதும்பத்துமொன்று நயந்தெரி நீ கண்மணியே.
லோ-நாற்பதும்பத்துமொன்றை நான்கண்டேன் குருவே.

(உபா-வ-ம்) கேளும் அப்பா லோகிதாசா ?

(லோகி-வ-ம்) சொல்லும் ஐயா குருவே.

உபாத்தியாயர் விருத்தம்.

மெய்யினி லுயிரைப்பூட்டில் வேணும்வாற் நீண்டொலிக்கு
மையனேயசைகள்சேர்ப்பா யதன்பினபுபதமும்வாக்கியம்
வையகந்தனிலேயாரும் வகுத்திடாரிந்தசூக்ஷம்
பையவேயுணர்வ யக்கல்விப் பயிற்சியின்மூலந்தானே.

(உபா-வ-ம்) அப்பா சீடனே ? மெய்யெழுத்துடன் உயிரெழுத்தை யிணைத்தால், நீண்டொலிக்கும் ஒலியறிந்து அசைசேர்ப்பாய், அதன் மேல் பதம், வாக்கியம், முதலானதுஞ்சேர்க்க அறிவாய், இதுதான்வி த்தைகற்க நுட்பவழி என்றறிவாய் பாலகா.

லோகிதாசன் விருத்தம்.

தெரிந்திட்டேன்படிப்பின்சூக்ஷந் செப்பும்வேதம்படிப்பேன்
பரிந்துநீருரைத்தமார்க்கம் பளாபளா மிகவுநன்றே.

(லோகி-வ-ம்) ஐயரே ? நீர் சொன்ன மார்க்கம் மிகவும்நன்றுநன்று, வித்தையின் சூக்ஷந்தெரிந்தேன், இனி தடையின்றி வேதமுதலான தும் எளிதில் வாசிப்பேன் சுவாமி :—ஒன்றுமறியாக்காலையில் அக்ஞா னியாகிய எனக்கு யாவத்மூலப்பொருள்களையும் தெள்ளிநடையில் யாதொருபாதையினறி உபதேசித்துவைத்து உட்கண்காட்டி யருளிய என்குருநாதரே ? ஒரு பெருத்தசந்தேகம் அடிமைமனதின்கண் குடி புகுந்துவாட்டத்தலைப்படுகின்றது, அதாவது :—

லோகிதாசன் விருத்தம்.

இப்படிக்கிருக்கமார்க்க மேனிந்தச்சிறுவர்தானும்
வெப்பவேவெகுநாளாக வேதனைப்படுகிறுர்கள்
கைப்பணியிவையிரண்டு கண்ணிற்குத்தோற்றிடாமல்
வைப்பதேனையாநீர்தான் வகையெனக்குரைசெய்வீரே.

(லோகி-வ-ம்) ஐயா ? வித்தையின் சூக்ஷமிப்படியிருக்க இவாளுக் குத்தெரிவிக்காதிருப்பது யாதுகாரணமோ ! சொல்வீர் குருவே.

(உபா-வ-ம்)——தனியேயோசித்தல், ஏ ! மனமே ? பார்த்தனையா! நாம் பள்ளியில் வாசிக்கத்தொடங்கினதுமுதல் இதுகாறும் இப்பேர்க் கேற்ற நற்புத்திரனையும், இவ்வித விபரீதகேள்வியையும், கண்டுங் கேட்டிலேம், அ ! என்ன ஆச்சரியம் ! சிசி, வெறிமனமே இப்புதல் வன் மகாராஜன் அருந்தவஞ்செய்ய பரமனருளால்வந்த பாலகனல்ல வா ! இதுகாறு கேட்பன், இதற்கு மென்மேலுங்கேட்பானென்றறி, ஆனதால் சந்தோஷமெனும் சாகரத்தில்மூழ்கி * சிண்டையைக்கோ

* சிண்டை யென்பது குடுமியெனவும் பாடம்.

திரைத்தையாற்றுவதுபோல், உம்மைக்கேட்டத்தவப்புதல்வனது சந்தேகக்கோளைப்பற்றறக்களையமுயல்வாய்,—சரி சரி, அப்பா அறிவிலுயர்ந்த பாலகா? உன் சந்தேகக்கேள்வியை இரவியைக்கண்ட பனிபோல் நிவர்த்திக்கின்றேன் சற்று கவனிப்பாய் சீடனே.

(லோகி-வ-ம்) நல்லது, புத்தி புத்தி குருவே.

## உபாத்தியாயர் விருத்தம்.

நிரந்தரமன்னை தந்தை நிகழ்த்திடுகர்மத்தாலே
வருவர்கள்சுதர்கள்கண்டாய் வகையறிபுத்தியோகந்
திறமையும்பெறுதல்மெத்த சிறுமையென்றுணர்வாய்நீதா
னருந்தவச்சத்தியபாஷ வரிச்சந்திரனளித்தபாலா.

(உபா-வ-ம்) பாலகா? நீ கேட்டகேள்விக்காகரொம்பவும்சந்தோஷப்படுகிறேன், இப்படி பெந்தபிள்ளைகள் கேட்டார்கள், ஆ! என்ன அருமையானகேள்வி! சரி, மாதாபிதாக்கள் செய்தகருமத்தை அனுசரித்தே புத்திரர்கள்பிறப்பது, அறிவின்னுட்பந்தெரிவது துர்லபம், நீ சத்தியவாக்கரிச்சந்திரன்பெற்ற பாலனென்றறிவாய் கண்மணியே.

## லோகிதாசன் விருத்தம்.

இப்படிக்கிவர்பிறக்க வேதுகாரணமோவையா
கொப்பெனவெனக்குத்தோற்ற குறைவின்றியுரைசெய்வீரே.

(லோகி-வ-ம்) ஐயா? இவர்களிப்படி பிறப்பதற்குக்காரணஞ்சொல்லவேணுஞ் சுவாமி?

(உபா-வ-ம்) அப்படியே சொல்லுகின்றேன் அறிவுடைய பாலகா.

## உபாத்தியாயர் விருத்தம்.

சத்தியந்தனைமறந்தே தனைப்படைத்தோனைவிட்டும்
நித்தியகருமம்போக்கி நீள்கிரகநிலைமறந்தும்
முத்தியேமூர்க்கமோகம் மூன்றுமேநிலைமையில்லா
பத்தினிதனையணைந்த பாவத்தால்வந்தோர்கண்டாய்.

(உபா-வ-ம்) அப்பா? அசத்தியனாய் கடவுளைமறந்து, நித்தியகர்மானுஷ்டானங்களைவிட்டு, மூர்க்கமோகங்கொண்டு, நக்ஷத்திராதியோகமறியாமல் புருஷன் பணிவிடையில் குறைவாகிய மாதரைப்புணர்ந்தால், வருபவர்களென்றறிவாய் கண்மணியே

## லோகிதாசன் விருத்தம்.

அறிந்திட்டேனீர்தான்சொன்ன வரும்பொருள்விதியையானே
திறமுடன்முன்பாடத்திற் செப்பியவைந்தெழுத்தும்

பிறந்ததோவுயிர்மெய்தன்னிற் பேதத்தையானுநன்று
யறிந்திடவுரைப்பீரென்ற னண்ணலேவுபாத்தியாரே.

(லோகி-வ-ம்) ஐயா? நீரெனக்குச்சொல்லிவைத்த அக்ஷரத்தில், முன்செப்பிய ந ம சி வ ய என்பவைகள் ஐம்பத்தோரெழுத்தில் சேர்ந்ததா? வேறா? அதின்விபரமும் நுட்பமுந்தெரிய நன்றாய்ச் சொல்லவேண்டுஞ்சுவாமி.

உபாத்தியாயர் விருத்தம்.

சொல்லுவேனப்பா நல்லறிவுற்ற
வள்ளலேகவனம் வைத்துநீகேட்பாய்.

(உபா-வ-ம்) அப்படியேசொல்லுகின்றேன், கவனத்துடன் கேட்டுத்தெரிந்துகொள்ளுவாய் பாலகா.

லோகிதாசன் விருத்தம்.

அஞ்செழுத்தே யாதிபரன்நாமமப்பா
அதையுரைத்தா லந்திசந்தியுச்சிதன்னில்
நெஞ்சமதில்குடிகொள்வான் கவலைநீங்கும்
நீதெரிவாய்கண்மணியே நிகழும்வேந்தே.

(உபா-வ-ம்) அப்பா இராஜகுமாரனே? அந்த ஐந்தெழுத்தாகிய ந, ம, சி, வ, ய, என்பதே பிரம்மா, விஷ்ணு, ருத்திர, மஹேஸ்வர சதாசிவ மென்னும் பஞ்சகர்த்தராகிய சிருஷ்டி, திதி, சம்மார, த்ரோபவ, அநுக்கிரகமென்னும் ஐந்தொழிற்புரிந்து பிரிதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்னும் பஞ்சபூதரூபமாய், ஆன்மாக்களுட்பிரவேசித்து, நடத்தல், இருத்தல், அறிதல், உணர்தல், தெளிதல், என்னும் பஞ்ச அறிவைப்புகட்டி, நன்மை தீமைகளைப் பகுத்தறியச் செய்யாநின்றவைகளாகும் சீடனே; இதுவுமன்றி துவக்கத்துள்ள மூன்றுங் கண்ணுக்குத் தோற்றுபவைகளாதலால், விக்கிரஹரூபமாக நிறுத்திநிறல் காமம், தூளிதம் என்னு மூவகைக்குறியிட்டு, நாலு, ஐந்து, எட்டெழுத்தில் மூலமந்திரத்தையிணைத்து திவ்வியமலர்களால் நாமாவளி செப்பி அர்ச்சனைப்புரிந்து கொலை, பொய், களவு, கள்ளருந்தல, குருநிந்தை, தவிர்த்து பக்தியாய்தூப தீபநைவேத்திய மீந்து, சென்னி வணங்கவேண்டியது பாலகா; நடுவில் த்ரோபவம்பெற்றால் இந்தவுருவுகளைத்துறந்து ஆராதனைவிட்டு மந்திரத்தையே மனமலரால் அர்ச்சிக்கவேண்டியது பாலகா; அதன்பேரில் அரும்பெரும்பொருளாய் இவ்வைந்திற்கும்மேலதாய் நிற்கும் அருபியாகிய பிர்ம்மத்தை அனுஷ்டிப்பது முறை, இம்முறையில் ஒன்றைவிட்டு ஒன்றில் பிரவேசித்தால்வ

ழி அறியாக்குருடனாய்வாசாஞானம்பேசி பல்லோரும் நகைக்க வுடல் வெட்கி எமனுக்கிரைக்குள்ளாகி, ஆவியானது ஸ்தூலத்தைவிடுங்காலையில் நீலி கைவிட்டுவெளிப்பட அசக்தியாய் மனக்கண்ணிற்கும் ஞானக்கண்ணிற்கும் மத்தியிற் சிலேஷ்ம கபங்கட்டி, நாய்போல்மொறுகி குலைக்கவெழாமற்பார்ப்பவர் இவன்மகாபாவியென உயிர் நீங்குமென்றறிவாய் அறிவிலுயர்ந்தபாலகா.

லோகிதாசன் விருத்தம்.

அய்யனேயெனக்கேயந்த வரும்பொருள்மந்திரத்தை
உய்யவேதயைபுரிந்தே யுபதேசித்தாட்கொள்வீரே.

(லோகி-வ-ம்) சுவாமி? அடியேனுக்கு அந்த பஞ்சாக்ஷரமந்திரத்தை உபதேசஞ்செய்யவேணுங்குருவே.

(உபா-வ-ம்) அப்படியே உபதேசிக்கின்றேன்; அறிவையோர்நிலையில்நிறுத்தி தெரிந்துகொள்ளுவாயப்பா சிஷ்னே.

(லோகி-வ-ம்) புத்தி அப்படியே நிறுத்திக்கொண்டேன் குருவே.

உபாத்தியாயர் உபதேசம் தரு.

இராகம்-ஆரபி, தாளம்-ஆதி.

பல்லவி.

ஓம்நமசிவயவென்றோதுபாலா - ஓதுபாலா
இதேபோதுஞ் சீலா. (ஓம்)

அநுபல்லவி.

ஓம்நமசிவயவென வசமசிய வென
மசிநயவவென வாழ்த்துபாலா - உரு
வேற்றுஞ் சீலா. (ஓம்)

சரணங்கள்.

ஜனனமரணதுன்பச்சிக்கறுத்திடும் பிரம்ம
கவனநிலையுன்னுள் காட்டும்பாலா - சுழிமேல்
ஏற்றுஞ் சீலா. (ஓம்)

இருக்கினுமேகினு மெத்தொழில்புரிகினுந்
திருமுத்துசுவாமிபோலச் செப்புபாலா - மனம்
ஒப்புஞ் சீலா. (ஓம்)

(லோகி-வ-ம்) புத்தி புத்தி அப்படியே யென்குருநாதனே.

(உபா-வ-ம்) அப்பாலோகிதாசா? இன்னமொருநிரந்தமிருக்கின்றது, அதையும்படித்துத்தெரிந்துகொள்ளுவாய் அப்பா இராஜகுமாரா.

(லோகி-வ-ம்) மகாபாக்கிய மப்படியே தங்களுடைய திருவாக்கின் படிக்கே வாசித்துதெரிந்துகொள்ளுகிறேன் என்குருநாதனே.

உபாத்தியாயர் விருத்தம்.

கரிபரிவிடுத்தல்தாண்டல் ககனத்திலுலாவுமம்பு
வரிசையாயத்தொடுத்தல்வாளால் வகுத்திடுங்கதையின்மல்லும்
சரிச்சொலாப்பிண்டிபாலம் சஸ்திர அஸ்தலாகம்
தெரியுநூலிதுவேயப்பா சீருடன்வாசிப்பாயே.

(உபா-வ-ம்) அப்பாலோகிதாசா? ஆனையேற்றம், குதிரையேற்றம், வில்வித்தை, மல்யுத்தம் முதலானவைகளைத் தெரிவிக்கும் நூலிதுவானதால், நன்றாய் கவனித்து கைபழகுவாய் வேந்தனே.

(லோகி-வ-ம்) அப்படியேசெய்கின்றேன் சுவாமி.

லோகிதாசன் விருத்தம்.

ஓதியேநீர்தானன்று உரைத்தவப்படியிந்நூலை
சாதனைபுரிந்துணர்ந்தேன் சஸ்திரவஸ்தலாகம்
நீதியாய்க்கரிமேலேறும் நேர்மையும்பரிவிடுத்தல்
பேதியாமல்லும்வாளும் பிரியமாயறிந்திட்டேனே.

(லோகி-வ-ம்) சுவாமி? அடியேனுக்குச்சொல்லியவாறே, இந்த நூலைவாசித்து சாதனையும்புரிந்து, ஆனையேற்றமுதலான சகலமுந்தெரிந்துகொண்டேனையா நாதனே.—கேளுஞ்சுவாமி யென்குருநாதா?

(உபா-வ-ம்) சொல்லுவாயப்பா இராஜகுமாரா.

லோகிதாசன் விருத்தம்.

ஐயரேகுருவேபிரம்ம மநுஷ்டிக்கவெனக்கேநீரும்
பையவேயருள்தான்செய்வீர் பாதமேபோற்றிநாதா.

(லோகி-வ-ம்) சுவாமி? அடியேன் பிரம்மத்தை அநுஷ்டிப்பதற்காக முறைதெரியச்சொல்லவேண்டுங்குருநாதனே.

(உபா-வ-ம்) அப்பா? பிரமத்தை அநுஷ்டிக்க காலமல்ல அதற்குத்தகுந்த காலத்தில் முறைசொல்லுகின்றேன் கேளாய் பாலகா.

உபாத்தியாயர் இரட்டை ஆசிரியவிருத்தம்.

வாக்குமன மொன்றாய் மெய்யறிவில்நின்று
மண்ணாசை பொருளாசை மங்கையாசை
நீக்கிநிஜ மடைந்தேபொய் கொலையும்போக்கி
நிகழுமா றாடனெட்டிஞ்சாம்பலாக்கி

தாக்கிரவி மதியையுமே யிணைத்துப்பூட்டி
தாமரையின் நடுவிருத்தி யோட்டைமூடி
ஆக்கியே யூணுறக்கம் நீருந்தள்ளி
அணுகாமல் மலசலத்தை யகற்றியப்பா
தூக்கியே யிரிரண்டு மூன்றுமாறும்
சொல்லுவேன் பதியிருக்கு மிடத்தில்வைத்தே
ஜாக்கிரதையாய்க் காவல்புரி நீலிமாயம்
தனையறுத்தே கும்பத்தி லோசைகாட்டி
யோக்கியமா யிருப்பவர்கள் பிரம்மந்தன்னை
உணர்வர்கண்டாய் பக்வமின்றி யொலிப்பதெல்லாம்
நாய்க்குலையாம் நரகம்வரும் குலமுநாசம்
நாடாதே யுனக்கிதுதான் காலமன்றே.

(உபா-வ-ம்) அப்பா சிஷனே? சபலசித்தவிருத்தியையகற்றி, யேக சித்தனுக்மனம்வாக்கொன்றாகவமைத்து, மூவாசையெனும் மூளையின் அடிவேர்களைக்களைந்து, கொலையாதிபஞ்சபாதகங்களைத்தவிர்த்துவிரு த்திக்காமல் ஷட்வர்க்கங்களையும் அஷ்டமதங்களையும்கருக்கி இருகலை களையுமிணைத்து, ஒருமொக்காகிய பலவிதழுடைய கமலத்துள்ளிருத் தி மூலக்கனலெழுப்பி வாசல்களையடைத்து உபாதைகளணுகாமல்நீரு ணவுநித்திரையும்போக்கி மூன்று, நான்கு, ஆறுகோணங்களுள்ளகொ த்தளங்களின்பேரில் ஏகோபாவனுய் உலவுபவனாகியும், ஒரு கொத்த ளமுள் ஒப்பிலாக்கோட்டையுள் தங்கியும் தங்காமற்சஞ்சரிக்குங்கள்ள னை காப்பவனாகிய கபாலியின் மாய்கைகளையெல்லாம் பற்றறவறுத்து பிரம்மரந்திர வழியிடாமல் மூலத்தைநிறுத்தி பேசும்பேசாத ஏகாக்ஷ ர படணத்தால் பூரகத்தைக்கட்டி ஆட்டி கும்பஸ்தானத்தில் பேரா னந்த இசைபாடி இருவினைகளையும் நீக்கத்தகுந்தவரும் சுழுத்தியில் மெய்த்தூக்கம் புரிபவர்களாகிய யோக்கியவான்களல்லவோ அந்த சத் து, சித்து, ஆனந்த, நித்திய, நிராமய, நிர்த்தொந்த, நிர்மல நிராங்கார நிரூப, சுத்தசுயம்பொருளான பிரமந்தனை யிருக்குமிடந்தெரிந்து, உ ணரத்தக்க மகானுபாவர்கள், அப்பாபாலகா, இவைகளையறியாமல் வாய் ஒலியினால் பிர்ம்மமென்பதெல்லாம் வெறிநாய்கள் புரியுங்குலைச் சல்களானதால் பாலகா இது உனக்குத்தகுதியான காலமல்லவென்று அறிந்துகொள்வாய் சீடனே.

(லோகி வ-ம்) புத்தி அபசாரம்பொறுத்தருளவேண்டியது குருவே.

(உபா-வ-ம்) சரி அடாசிங்காரம்? உன்பாடத்தை யொப்பியும்.

சிங்காரம் தரு.

இராகம்-நாதநாமக்கிரியை, தாளம்.ஆதி.

பல்லவி.

அறஞ்செயவே விரும்பு - மனதே நாளும்
அறஞ்செயவே விரும்பு.

அநுபல்லவி.

பரமன்சோதிக்கவேண்டி பணமுனக்கே கொடுப்பான்
பாசவலைக்குள்ளாகி மோசம்போகாமல் தினம். (அற)

சரணங்கள்.

வரும்விருந்தனை நாடு - நாளுந்தானம்
வந்திரந்தவர்க் கிடு
கருமத்திற்குள்ளாகிய கள்ளைக்குடிக்காமலும்
கயவனையெளியோரைக் கண்டித்துரைக்காமலும். (அற)

கோவுக்கேயுண விடு - கவிஞர்கள்
குறைதவிர்த்திடத் தேடு
பாவிபோலடுத்தோரைப் பதைக்கநீவதையாதே
பண்புளோர்வரிலன்னம் பகாமற்புசியாதே. (அற)

தாயற்றபிள்ளைகட்கே - வேணவுதவி
சாதிப்பாய் பலனுனக்கே
நாயைப்போல்வந்தவனை நயமின்றிநீபேசாதே
நமனிடவோலைவந்தால் நாடாதுமிப்போதே. (அற)

(உபா-வ-ம்) சட்டாம்பிள்ளை! இவனுக்கு நாளையபாடத்தைச் சொல்லிக்கொடுமப்பா. அடா சுந்தரம் உன்பாடத்தை வொப்பியும்.

(சங்-வ-ம்) அப்படியே வொப்பிவிக்கின்றேனையா.

சுந்தரம் தரு.

இராகம்-சங்கராபரணம், தாளம்-ஆதி.

பல்லவி.

படைத்தகுருவின் பாதம் மறவாதே - உன்னை
அடுத்தசேட்டைகள்நாளும் பரவாதே.

அநுபல்லவி.

துடைத்திடோளுந்தேவ தூஷணைநீசெய்யாதே
துன்பந்தனையறுக்க வின்பந்தனையடைய
வன்மமதுகளைந்தே கன்மமதைதொலைப்பாய். (ப)

சரணங்கள்.

ஒருவர்கொள்கையைப்பற்றி யிகழாதே-வீணாய்
கருமத்திற்குள்ளாய்நாய்போ லலையாதெ
திருநீறென்பதைக்கண்டால் குலையாதே-நாளும்
வருந்துன்பமகங்காரம் நிலையாதே
சருவுமாதருஞ்சுற்றந் தழைக்காதே-யென்றும்
தங்குமருளைநாடி யெங்குமவனைப்பாடி
பொங்கும்படிக்கேயாடி யங்கந்தனிலேதேடி. (ப)

மாயனடியரை நீ தூறாதே-யிந்த
காயநிலைக்க வருள் வாராதே
நேயங்கொடுப்பார்வேறு பாராதே-லோக
தூயவனன்றிவேறுந் தேறாதே
சேயன்றிமுறையிடி லேறாதே-நான்
செப்புமொழியைக்கேட்டு ஒப்பினைதிவிட்டு
கப்புமடம்பத்தைவிட்டு அப்பனடியைக்காட்டு. (ப)

எல்லாமொருதெய்வமே யறிவாயே-அவன்
அல்லாலொன்றசையாது தெரிவாயே
கல்லாகிலுமுண்மையாய்ப் பணிவாயே-பத்தி
நல்லாயியற்றிலருள் பெறுவாயே
சொல்லாராருமுனக்குச் சரியாயே-யிதைச்
சூட்டினேனுனக்குமே காட்டினேன்வினைக்குமே
நாட்டினிலெவர்க்குமே மேட்டியாய்க்காக்குமே. (ப)

(உபா-வ-ம்) அடாமாணிக்கம்? உன்பாடத்தைச்சொல்லும்.

(மாணி-வ-ம்) அப்படியே சொல்லுகிறேனையா.

மாணிக்கம் தரு.

இராகம்-இந்துஸ்தான், தாளம்-ரூபகம்.

பல்லவி.

புத்திகேட்பாயே நான்சொலும் புத்திகேட்பாயே.

அநுபல்லவி.

சத்தியந்தன்னையே தள்ளிச்சொல்லாதே
தரணியிலடம்பனாய்த் தான்திரியாதே-என். (புத்)

சரணங்கள்.

உத்தமனை யிகழாதே-ஞாயம்
ஓதிடாச்சபை நீசாராதே

பத்தினிதன்னை நோக்காதே-பாவம்
பலித்திடும்நரகினில் மூழ்காதே-என். (புத்)
கெட்டவார்த்தை புகலாதே-நீதி
கிட்டாதமார்க்கத்தில் நீ நுழையாதே
பட்டகுடி யடுக்காதே-நாளும்
பாரிற்கொலைசெய்துதான் துடிக்காதே-என். (புத்)
புத்திகெடக் குடியாதே-பலர்
புகலவார்த்தைகளை நீவிடியாதே
சுத்தியில்லா திருக்காதே-தேவ
தூஷணைமார்க்கத்தை நீபடியாதே-என். (புத்)
ஜீவன்நோவப் புரியாதே-உடல்
சிக்கிப்போம்சொன்னேனதை யறியாதே
கோபத்தால் வசையுரையாதே-நமன்
கொள்ளுமெண்ணமுனக்குத் தெரியாதே-என். (புத்)

(உபா-வ-ம்) அடா இரத்தினம்? உன்பாடத்தைச்சொல்லும்.

(இர-வ-ம்) அப்படியே சொல்லுகின்றேனையா,

இரத்தினம் விருத்தம்.

ஒருவனே யாவருக்குந் தேவனாகும்
ஓதுபல பேரிலுறு மவனேயாகும்
கருமவிதி நடத்துபவ னவனேயாகும்
கனிந்தவர்க்கே வரமளிக்குங் கடவுளாகும்
தருமகுணம் படைத்தவனு மவனேயாகும்
சரவணமூர்த் தியுமென்றன் தந்தையாகும்
முருகனே விநோதசபை காப்போனாகும்
முகிழ்ந்துபணி வோமவனை நாளுநாமே.

(உபா-வ-ம்) கேளாயப்பா சட்டாம்பிள்ளே?

(சட்-வ-ம்) சொல்லுஞ்சுவாமி குருநாதரே.

உபாத்தியாயர் விருத்தம்

அரசன்றன்மகனுமிந்த வன்புள்ளலோகிதாசன்
வரபுத்திரனானதாலே வகையுடன்மூலாதார
சாவிதிநீதியெல்லாஞ் சார்வறத்தெரிந்தரன்வேந்தன்
பாஞ்சென்றுவருவேன்பள்ளி பத்திரம்சட்டாம்பிள்ளாய்.

(உபா-வ-ம்) அப்பாசட்டாம்பிள்ளே? இந்தலோகிதாசன், நாலுவேதம், ஆறுசாஸ்திரம், மநுவிக்கியானம், நீதிநெறி, இராஜாங்கத்தைச்

சார்ந்த சகலவித்தைகளிலுந் தேவிவுற்றான், ஆதலால் மகாராஜனிடம் போய்வருகின்றேன், பள்ளிக்கூடம் பத்திரமப்பா.

சட்டாம்பிள்ளை விருத்தம்.

சீர்வருங்கடிகைகட்டும் நிமைப்பொழுதிடர்செய்யாமல்
கார்வின்றிச்சிறுவர்பாடஞ் சட்டமுந்திட்டமாகப்
பார்வைநான்கொள்வேனையா பதிவரகோமாகில்
யார்பொழுதிருக்கவைந்தர் மனைக்குகவிடைபிவேனே.

(சட்-வ-ம்) அப்படியே பார்த்துக்கொள்ளுகிறேன், தாங்கள் வரத் தடையாகில் ஒருஜாமப்பொழுதிருக்கச்சே சிறுவர் வீட்டிற்குப்போக விடுக்கிறேனையா.

(உபா-வ-ம்) அப்படியே செய்யாயப்பா சட்டாம்பிள்ளாய்.

உபாத்தியாயர் விருத்தம்.

கட்டியக்காரனேளாய் கனமுடன்சென்றுபாத்தி
கிட்டினுரென்றுவேந்தன் * கிமியுறச்செப்புவாயே.

(உபா-வ-ம்) அப்பாகட்டியனே? உபாத்தியாயர் வசிஷ்டரை அழைத்துக்கொண்டு காணவேண்டிவந்திருக்கிறாரென் அரிச்சந்திர மகாராஜருக்குத் தெரிவியும்பிள்ளாய் வீரனே.

(கட்-வ-ம்) அப்படியே தெரிவிக்கின்றேனையா சுவாமி.

கட்டியக்காரன் விருத்தம்.

ஐயனேவாத்தியாரு மழகுகின்பாலனோடு
ஐயனேயிங்குற்றேகா னறிவிக்கச்சொன்னார்வேந்தே.

(கட்-வ-ம்) ஆண்டவனே? குமரவேலுபாத்தியாயர் நமதிளவரசனை அழைத்துக்கொண்டு கொலுவாசல்முன் வந்திருக்கிறார் சுவாமி.

(அரி-வ-ம்) அடாகட்டியனே? ஜாக்கிரதையாயழைத்துவருவாய்.

(கட்-வ-ம்) புத்தி ஆண்டவனே,—ஐயா உபாத்தியாயரே? அரசர் வரச்சொன்னார்போகலாமையா.

உபாத்தியாயர் விருத்தம்.

வேந்தனேபோற்றி விமலனேபோற்றி
சாந்தனேபோற்றி தாளடிபோற்றி.

(உபா-வ-ம்) போற்றி போற்றி மகாராஜனே போற்றி.

(அரி-வ-ம்) வாருமுபாத்தியாயரே, நீர்வந்தகாரியந்தெரிவியும்.

உபாத்தியாயர் விருத்தம்.

சத்தியனேயுமதுபாலன் சாஸ்திரமெல்லாங்கண்டான்
சத்தியனேயஸ்தலாசம் சார்வறக்கற்றானம்பு

* கிமி - செவி யெனவும் பாடம்.

சத்தியனேவிடவும்ஞானம் சாரவேவழியுங்கொண்டான்
சத்தியனேயிவனைத்*தேவ தாசனென்றறிகுவீரே.

(உபா-வ-ம்) மகாராஜனே? உமதுகுமாரனாகிய லோகிதாசன், நாலுவேதம், ஆறுசாஸ்திரம், அரசுக்குரிய வில்யுத்தம், மல்லயுத்தம், ஆனையேற்றம், குதிரையேற்றம், நீதிநெறி, ஒழுக்கலானதுஞ் சற்றதுடன் கூட, பரமன்மகிழும்ஞானத்தைச்சார நேர்வழியுந்தெரிந்திட பஞ்சாக்ஷரமகிமையும், அறிந்தானதலால் இதுமுதலிவனைத் தேவதாசனென்று அழைக்கத்தகும் வேந்தனே.

(அரி-வ-ம்) அ! அப்படியா! வெகுசந்தோஷம்! இன்றுமுதல்நீருரைத்தபடியேதேவதாசனென்றழைக்கச் செய்வேன் உபாத்தியாயரே.

தேவதாசன் விருத்தம்

என்னையீன்றெடுத்தவையா விணையடிபணிந்தேனந்த
தன்னிகரில்லாவீசன் தயவினாலுபாத்தியாயர்
தன்னையேபணிந்தேவேத சாரமுந்தருமநீதி
பன்னவேமற்றதெல்லாம் பழுதறக்கற்றேன்வேந்தே.

(தேவ-வ-ம்) என்னையீன்றபிதாவே? உபாத்தியாயர் பாதம்பணிந்து, சகலகலைகளையுங்கற்று, அரசுக்குரியவிசிஷ்டமும் அறிந்தேன் இன்று பஞ்சாக்ஷர வுபதேசமும்பெற்றேன் தந்தையே.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

கண்ணின்மணியே யென்குலத்தைக் காக்கவந்தசுதிரொளியே
விண்ணின்மதியேநீபடித்த வித்தையென்னவிளம்புவையே.

(அரி-வ-ம்) அப்பாபாலகா? நீ வாசித்த வித்தையை விபரமாய்ச் சொல்வாய் என்கண்மணியே.

(தேவ-வ-ம்) அப்படியே சொல்லுகிறேன் என்பிதாவே.

தேவதாசன் அகவல்.

சீர்பெறுமயோத்தி செங்கோல்நடாத்து ம்
பார்புகழ்தந்தையே பகருவேன்கேளீ ர்
ஓமெனுமெழுத்தி னுறுதியுமோ ன

* லோகிதாசன் தனக்குக்கற்பித்தபோதகரால் தன் சிற்றறிவைப்போக்கிப் பேரறிவைக்கொண்டு ஓம் எனும் பிரணவத்தினுட்பங்களையும், ந, ம, வ, சி, ய வெனும் மகாமந்திரத்தையும், நான்குவேதம், ஆறுசாஸ்திரம், மறுவிக்கியானம், அரசுக்குரிய சாம பேத தான தண்டமெனும் சதுர்விதவுபாய நீதிநெறிவழிகளையும், ஐயந்திரிபறவுணர்ந்தபடியால் லோகிதாசனென்பதற்கு இடுகுறிகாரணமாகத் தேவதாசனெனவும், தான் பிறந்த விலக்கினதோஷபலத்தினுலிடையில் ரோகமுதலியதோஷம் நேரிட்டதினால் ரோகிதாசனெனவும்பாடம் இதையரிச்சந்திர காவியத்தில் விசிதமாய்க் காண்க.

நேமமுமக்ஷர நிலைமையுமுணர்ந்தே  ன்
அ முதல் க்ஷ கடை ஐம்பத்தோரக்ஷர  ம்
நன்மையாயுரைத்ததி னயப்பையுங்கண்டே  ன்
அசைமொழிவாக்கிய மமைத்திடுவகையையு  ம்
இசைதனைதொங்க விலக்கணமறிந்தே  ன்
அஞ்செழுத்தாகி அடியிடைமுடியா  ய்
நெஞ்சதிலமர்ந்த நிலையதுமறிந்தே  ன்
கரிபரிவிடுக்குங் கவனமுமம்புக  ள்
அறிவுடன்தனுசா லனுப்பவுங்கற்றே  ன்
மல்லுடன்வாளும் வளைதடிபாலமு  ம்
சொல்லிடுங்கதையின் சூக்ஷமுந்தெரிந்தே  ன்
செங்கோன்முறைமையுந் தேசவழக்கமு  ம்
தங்கள்சொல்மீறுத் தன்மையுமுணர்ந்தே  ன்
ஆசனவிதியு மரும்பொருளறமு  ம்
தேசமும்பெற்றேன் தேவனேபோற்  றி.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

மந்திரிகேளாயென்றன் மகனுமேவித்தையெல்லாம்
சுந்தரமாகக்கற்றான் சுருக்கெனநீதானிங்கு
வந்திட்டவுபாத்தியாயர் மனங்களித்திடவேசென்று
உன்திருக்கையால்நல்ல வுடுப்புதந்தனுப்புவாயே.

(அரி-வ-ம்) அப்பாசத்தியகீர்த்தி? நமதுதேவதாசனுக்கு வித்தை கற்பித்த வுபாத்தியாயர் மனங்களிக்கவேண்டிய வெகுமதிகள் கொடுத்தனுப்புவாய் மந்திரி.

(சத்-வ-ம்) அப்படியே கொடுத்தனுப்புகின்றேன் மகாராஜனே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

வாத்தியார்தனக்கே நேத்தியாய்வெகுமதி
பார்த்திபாவளித்தேன் சாற்றியபடியே.

(சத்-வ-ம்) மகாராஜனே? உமது உத்தாரவின்படி உபாத்தியாருக்குவேண்டியவெகுமதி கொடுத்தேன்வேந்தனே.

(அரி-வ-ம்) மெத்தசந்தோஷம்! மெத்தசந்தோஷம்! அப்பாமந்திரி.

உபாத்தியாயர் விருத்தம்.

வெகுமதிதோணப்பெற்றேன் வேண்டிலேன்வேறுராஜே
ஜெகதலரும்மைப்போலச் செய்தவரெங்குங்காணேன்
மகிழுடனிருந்தேவி மட்டிலாத்தேவதாசன்
திகழ்சபைவிநோதமுன்றன் செங்கோலும்வாழிவாழி.

(உபா-வ-ம்) மகாராஜனே! வெகுமதிபெற்றுக்கொண்டேன், போய்வருகின்றேன் வாழி வாழி மகாராஜனே.

(அரி-வ-ம்) அப்படியே போய்வாரு முபாத்தியாயரே.

### தேவதாசன் விருத்தம்.

அம்மணியுபாத்தியாய ரடிபணிந்தடியேன்றானும்
அம்மணிசகலவித்தை யடியனுங்கற்றேனம்மா
அம்மணியஞ்செழுத்தி னடிநனியறிந்ததற்காய்
அம்மணிதேவதாச னென்றெனையழைத்தார்தாயே.

(தேவ-வ-ம்) என்னைப்பெற்றதாயே! உனது ஆசீர்வாதபலத்தினால் சகலவித்தையுங்கற்று, பஞ்சாட்சரவுண்மையுந் தெரிந்துகொண்டேன்: அதனு லெனக்குத்தந்தைமுன்னிலையில் என்குரு என்னைத் 'தேவதாசன்' என்றழைக்கச்சொல்ல, தந்தைமகிழ்ந்து அவ்வாறேயவனையுமழைக்கச்சொல்லி தானு மப்படியேயழைத்தனர், இதுநிற்க, இதுவரையில் எனக்கும் மற்றெவ்வொருவருக்கும் தாய் ஒருவரே தந்தை ஒருவரேயென்றிருந்தேன், சுருதிமொழிப்படி தாய் ஐந்துபேரும், தந்தையைந்துபேருமாயினர்: அதாவது தன்னையீன்றதாயொன்று, தன்பத்தினியையீன்றதாயொன்று, தமயன்பத்தினியொன்று, குருவின்பத்தினியொன்று, அரசன்பத்தினியொன்று, ஆகதாய்மாரைந்துபேர்: தன்னையீன்றதந்தையொன்று, கல்விகற்பித்த குரு வொன்று, கலியாணமுடிப்பித்தவனொன்று, வறுமையுற்றகாலத்தி லன்னமளித்துக்காப்பாற்றினனொன்று, ஆபத்துகாலத்திலுதவிபுரிந்தாயிரட்சித்தவனொன்று, ஆகத்தந்தையர்களைந்துபேரெனவுந்தெரிந்தே னன்னையே.

### சந்திரவதி விருத்தம்.

என்தவமுதலேவாழி யென்கண்ணின்மணியேவாழி
முன்செய்தபலனால்வந்த முத்தொழில்விளக்கேவாழி.

(சந்-வ-ம்) வாழிவாழி என்தவப்புத்திரனாகிய தேவதாசனே.—ஆ! மெத்தபாக்கியமேபாக்கியம்! மேலும் அண்டசராசரங்களைப்படைத்து அதனிலுள்ளவான்மாக்களைக்காக்கு மந்த ஆரணபரண னருளாக்கும்.

## அயோத்தியாகாண்டம்,

சம்பூரணம்.

---




ஸ்ரீசாமுண்டேஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோத சபை.

# இந்திரகாண்டம்.

---

## விநாயகர் துதி வெண்பா.

சீராரவிகுலத்துச் செம்மணிச்சந்திரன்றன்
பேரார்சரித்திரத்தைப் பேசுதற்கே - ஏராரும்
செஞ்சடையிற்கங்கையுடன் றிங்களணி[illegible]பெருமான்
கொஞ்சிமகி ழைங்கரனைக்கோரு.

## விநாயகர் பொது தரு.

இராகம்-சுருட்டி, தாளம்-ஆதி.

பல்லவி.

ஓங்கணபதிசரணம் வரத்தருணம் ஓம்.

அநுபல்லவி.

மாங்குயிலொலியுமை ஓங்களித்தவனே
மனமதுகாரடிமேனென் கனமுடன்றங்கியே
இனமுமெய்வாய்மொழி வணங்கம்புகழ்பெற (ஓம்)

சரணங்கள்.

அஞ்செழுத்தானபரமே புனைப்பணிவோர்
நெஞ்சைத்தலைக்கும் காமே
குஞ்சரவேண்முகா வஞ்சகாத்திலகா
கோரினோனுந்தனைப் பாரிலென்னுவினிற்
பேரிடிபோற்கலி தாரிசொரியவருட்
கொற்றவாவெந்தனைப் பெற்றவாதநிதி
மற்றவாமகிமைதா குற்றமாமோவாதே. (ஓம்)
அங்குசபாசம்பிடித்தாய் தாந்தணியே
வங்குங்கவிக்க நடுத்தாவி

பொங்கரவப்பணி கங்கைசடையிலணி
பொன்னம்பலவனும் அன்னநடையாளும்
நன்னயமாமகி ழுன்னதவருட்செய
போற்றினேன்மனமது தேற்றினேனின்புக
ழேற்றினேன்முறையிதோ சாற்றினேனருடா. (ஓம்)

மூலாதாரத்தினுருவே பத்தரனு
கூலாவேதத்தின் மருவே
சீலாவல்லபைமகிழ் லோலாசுரரும்புகழ்
சீருளமுனிவரும் பாருளவேந்தருங்
காருண்யனென்னவே மேருவினற்கதை
செப்பிடுமாயவ ளொப்பிடுகுணமது
உப்பிடுவாறுபோல் வெப்புடனெழுதிய. (ஓம்)

அரிமகிழாசைமருகா கைலையெனுங்
கிரிவிட்டிங்கனம் வருகா
தறியேனேமுத்துசாமி சிறியேனுனக்குக்காமி
தாவிடப்[illegible]கழது மேவிடத்திசைகளுங்
கூவிடனன்னருட் பாவிடவுன்னடி
தேடவுமுளமது நாடவுமெங்கணும்
பாடவுமுன்னேபே கூடவுஞ்செய்திட. (ஓம்)

இதன்பின் வரவேண்டிய பரமன்துதி, பார்வதிதுதி, திருமால் துதி, இலக்குமிதுதி, முருகன்துதி, சரஸ்வதிதுதி, குருவணக்கமுதலியவை யிச்சரிதையின் உ-வது பாரத்தில் கஉ-வது பக்கமுதல் வரிசைக்கிரமமா யச்சிட்டிருப்பதா லிங்கு மறுபடியு மச்சிட்டிலம்.

## பொது விருத்தம்.

கிட்டையிலுயர்ந்தசித்தர் கிகழ்த்திடதேவர்போற்ற
துட்டராக்கதர்நடுங்கத் துறவிகள்பணிந்துபோற்ற
அட்டதிக்கெல்லாமோங்க வரசுசெய்தேவராஜ
னிட்டமேமகிழுங்கட்டிய னிதோவந்துதோன்றினனே.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திரமகாராஜன் கொலுவாயில்காக்குங்கட்டியன் சபைக்குவருகிறவிதங்காண்க.

## கட்டியன் தரு.

இராகம்-மோகனம், தாளம்-ஆதி.

பல்லவி.

கட்டியக்காரன்வந்தான் - இதோ
கனமுளவிந்திரன் மனமதுமகிழ்ந்திடும் (கட்)

அநுபல்லவி.

எட்டித்துட்டர்கள்பல்லைத் தட்டிமதமொடுக்க
கெட்டிமனத்தோன்கும்பை வெட்டிக்குலைநடுங்க. (கட்)

சரணம்.

விண்ணுலகோரெல்லாம் வேந்தனெனப்பணிய
விமலனடிமறவாவாயன் சர்வ
வேதசாஸ்திரமுறை விதிதெரிவேதியரின்
வெற்றியாசிசட்டபெறு நேயன்
மண்ணுள்முதல்யாரு மகிழ்ந்திடச்சொர்க்கத்தை
மகாநெறியுடனாளுங்காயன் வந்த
பல்லரக்கர்படையை மாய்க்கவேதான்வேண்டி
மாறுவியூகங்கள்செய் யுபாயன்
என்னுந்தனக்கெதிரி யில்லையுலகிலென
எண்ணவெவருமடி யேற்றவேவாழுங்கன. (கட்)

(கட்-வ-ம்) சபையோர்களே? சொர்க்கத்தையாளுகின்ற ஜெயவீர தீரனாகிய தேவேந்திரமகாராஜன் வருகிறார், எச்சரிக்கை எச்சரிக்கை கனவான்களே.

பொது தரு.

இராகம்-கியால், ஏகதாளம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| வாரா | ரிதோ | வஜ்ர | பாணி | வளர்சபை | நாடி | |
| சீராய் | நாரி | யரு | மாடச் | சேர்ந்துமே | கூடி. | (க) |
| தேவர் | முனிவர் | மனம் | நாடத் | திகழொளி | பேச | |
| பாவ | லருஞ் | சா | மரை | பண்புளோர் | வீச. | (உ) |
| கோலா | கல | முடி | யுடன் | கோஷ்டமும் | பாட | |
| சீலா | வென | அசுர | ராஞ்சி | சேவடி | நாட. | (ங) |

தேவேந்திரராஜன் தரு.

இராகம் - தோடி, தாளம் - ஆதி.

பல்லவி.

தேவாதிதேவன்திகழ் விண்ணுலகையாளுந்
தேவேந்திரராஜன்வந்தான் - கொலுவிருக்க
தேவேந்திரராஜன்வந்தான்.

அநுபல்லவி.

மூவர்மனமகிழ தேவர்களும்புகழ
முனிவராசிகள்கூற கனியிந்திராணிசேர





மூவரேற்றுந்தானவ - னகமகிழ்
முறை-மறை-அரைநிதிக்குடையவனுன்-களிபெற. (தேரி)
திருமுத்துசாமியின் - புகழடி
தெரி-அறி-குறிதினம் போற்றுவேனுன்-கனமிகு. (தேரி)

## தேவேந்திரன் போற்றி விருத்தம்.

அருமறைவேதநான்கு மறிந்திடுமறிவேனானக்
கருணைசெய்பொருளேதிவ்யக் கதிரொளிச்சுடரேமுத்தி
தருநிலைக்குறியேயாய்ஜீவ தயாபராவெனதுசெங்கோற்
பெருமையாய்வாழ்கப்பாரும் பிஞ்ஞகாகைலைவாழ்வே.

## மந்திரி போற்றி விருத்தம்.

தன்னிகரிலாதசத்ய தருமமும்நிலையுமோங்க
பன்னருஞ்சுரரும்வாழ்கப் பாரெலாந்தழைக்கநீதி
யன்னவாகனனேடைவ ரகமதுகளிக்கப்பெய்யு
மன்னவாவுமதுதிவ்ய மலரடிக்கடியேன்போற்றி.

## கட்டியன் கட்டியம்.

விண்ணுலகையாள்கின்றதேவனே முனிவர்புகழரசனே வெகுபராக்கு
வித்தகாராக்கதரைப் பற்றறவொடுக்கிய வீரனே வெகுபராக்கு
அன்றகங்கொண்டமலைச்சிறகதை யறுத்தவெனையனேவெகுபராக்கு
அருந்ததிக்கொப்பான விந்திராணிமனமகிழாளனே வெகுபராக்கு
மண்ணுலகின்வேந்தர்க ணின்புகழ்கொண்டாடுமகிபனே வெகுபராக்கு
மாசிலாமுப்பத்துமுக்கோடி தேவர்க்குமகிபனே வெகுபராக்கு
கண்ணுண்மணிநோக்கொணுரத்னமுடிதாங்கியகர்த்தனே வெகுபராக்கு, கருதரியவிநோதசபையோங்கவே வந்தவுன்கழலடிக்கே பராக்கு.

## தேவேந்திரராஜன் தேசவிசாரணை.

தே-தேவாதிதேவர்கள் யாதுமொருதுயரின்றி திகழுட னிருக்கிறுரா?
மங்-திரனேவச்சிரந்தாங்கியகைபனே தெளிவுட னிருக்கிறுர்கள்.
தே-தவயோகமுனிவர்கள்செய்திடுங்கருமங்கள்தடையின்றிநடக்குதா?
மங்-தானுவேமுனிவர்புரி யாகாதிகருமங்கள்தழைத்துமே நடக்கிறது,
தே-அஷ்டதிசைபாலகர் செயத்தகுங் காரியமன்பாய் நடத்துறுரா?
மங்-ஐயனேதடையின்றி முறைப்படிவேலைகளழகாய் நடத்திவாருர்.
தே-நவக்கிரகவாசிக ளவரவர் கதிப்படி நண்பாய் நடக்கிறுரா?
மங்-நாதனேகிரகங்கள் நிலைபிசகாமலே நலமாய் நடந்துவாருர்.
தே-அசுரர்கள்தேவர்க்கு பணிந்துமேயேவல்களடங்கியே புரிகிறுரா?
மங்-ஆண்டவாராக்கதர் சுரர்மொழிகடவாமலன்பாய் நடக்கிறுர்கள்.

தே-விருட்சமாங்கற்பக மதனது இடத்திலேவிளங்கியே நிற்கின்றதா?
மங்-வேந்தனேகற்பகந் தன்னுநிலேதன்னிலேவெற்றியாய் நிற்குதையா.

(தேவே-வ-ம்) வெகுசந்தோஷம், வெகுசந்தோஷம் மந்திரி.

தேவேந்திரன் விருத்தம்.

என்னரும்கொலுமுன்னித்த மிருந்துகைகூப்பிநிற்கும்
உன்னதவமைச்சனுன வுயர்குணமந்திரிகேளாய்
நன்னெறியுடையதூய நாரதமுனிதானிங்கே
யின்னமும்வாருதேனு வினியுடனழைப்பிப்பாயே.

(தேவே-வ-ம்) அப்பாமந்திரி! நாரதமகாமுனியை நமதுசபைக்கு சீக்கிரத்தில் வரவழைப்பாயப்பா மந்திரி.

(மங்-வ-ம்) அப்படியே வரவழைக்கின்றேனுண்டவனே.

மந்திரி விருத்தம்.

வையகமதிக்குமிந்திரன் வாசலிற்காத்திருந்தே
செய்யவேவாள்கைக்கொண்டு நிற்குங்கட்டியனேகேளாய்
துய்யநாரதரிடம்போய்த் தொழுதுநற்சபைக்கிப்போதே
பையவேயழைத்துக்கொண்டே பண்புடன்வருகுவாயே.

(மங்-வ-ம்) அப்பாகட்டியனே? நமது ஆண்டவன் வீற்றிருக்கும்படியான சபைக்கு, நாரதமகாமுனியைச்சீக்கிரமழைத்துவருவாய்பாலகா.

(கட்-வ-ம்) அப்படியே யழைத்து வருகின்றேன் சுவாமி,—சுவாமி நாரதமகாமுனிவரே? தேவேந்திரமகாராஜன் சபைக்குவரும்படி தெரிவிக்கச்சொன்னுர் முனிநாதா.

(நார-வ-ம்) அப்படியே வருகின்றேனப்பா கட்டியனே.

பொது விருத்தம்.

பவந்தரும்பந்தந்தன்னைப் பற்றறவொழித்துவிட்டே
தவந்தனின்மிகுத்தேமுத்தர் தன்னெளிகொண்டநல்லோன்
சிவந்தனையிடைவிடாமற் சிந்தையினுட்டுமிக்க
நவநிலம்புகழ்கொண்டேற்றும் நாரதர்வருகின்ருரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? தவத்திலுயர்ந்த நாரதமகாமுனி தேவேந்திரமகாராஜன்சபைக்குவரும்விதங்காண்பீர்கள்கனவான்களே

நாரதர் பொது தரு.

இராகம்-மத்தியமாவதி, தாளம்-ஆதி.

பல்லவி.

நாரதமுனிவந்தார் - வந்தாரிதோ - நாரதமுனிவந்தார்.

அநுபல்லவி,

தாரமதானப்பொன் தாங்கும்வீணையுமேந்தி
தங்கநிறம்பொன்மேனி தழைத்திடவதிகாந்தி
வீரமுடையதேவர் விரும்பிப்புகழைப்பேச
வெற்றிபுனைந்தகுரு விரதமுடையதாச. (நார)

சரணம்.

மன்னும்பெண்ணாசையெனு மயக்கமதையொழித்தே
மயக்கிடும்பொன்னாசையை மாறியோடவழித்தே
எண்ணுஞ்சிவமதனி லேகோபித்துப்புகழ்ந்தே
ஏகாக்ஷரநிலையை யிருத்திமனமகிழ்ந்தே
எங்குஞ்சிவத்தைநாடி மனம்
பொங்குமெழுத்தைப்பாடி தினம்
கங்கைதனிலேயாடி யருள்
தங்கமனதிற்கோடி தினம்
ஏற்றிபிறவித்துயர் ஓட்டிப்பரப்பிரம்மத்தை
போற்றித்தவசிகளின் மேட்டியெனவேசொல
இருவினையெனுமந்தக் கருவையழித்தேசந்த
பெருமைபடைத்துகந்தக் குருவைப்பணியுமிந்த. (நார)

(தேவே-வ-ம்) போற்றி போற்றி, நாரதமகாமுனியேபோற்றி.

(நார-வ-ம்) வாழிவாழி, தேவேந்திரமகாராஜனே வாழி.

(தே-வ-ம்) இந்ததிவ்ய ஆசனத்தின்பேரி லெழுந்தருளுஞ் சுவாமி.

(நார-வ-ம்) சந்தோஷம் சந்தோஷம், இந்திரதேவே.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திர மகாராஜன்சபைக்குச்சுப்பிரமணியர் வந்தனரென்றறிவீர்கள் கனவான்களே.

## தேவேந்திரன் விருத்தம்.

எங்கடன்னிடுக்கண்தீர வெழிலுறுவேலைத்தாங்கிப்
பொங்குளசூரனுவி போக்கியேயமரர்கொண்ட
சங்கடமனைத்துமோட்டிச் சாங்கமாயிருக்கச்செய்த
மங்களவள்ளிலோலா மயூரனேநின்றருள்போற்றி.

(தேவே-வ-ம்) கொடும்பாவியாகிய சூரனைவதைத்தெங்களைக் காத்தவடிவேலனே? போற்றிபோற்றி, இந்ததிவ்வியஆசனத்திலெழுந்தருளுந் தேவே.

(சுப்-வ-ம்) வாழி வாழி, இந்திராணிலோலனே வாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திரமகாராஜன் சபைக்

கு அக்கினிபகவான் வந்தனரென்றறிவீர்கள் கனவான்களே.

(தேவே-வ-ம்) எனதன்புக்குரிய அக்கினிபகவானே? வாரும் வாருமிந்த ஆசனத்திலெழுந்தருளுமையா.

(அக்-வ-ம்) சந்தோஷம் வாழி வாழி, இந்திரனே வாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திரமகாராஜன்சபைக்கு சுக்கிரபகவான் வந்தாரென்றறிவீர்கள் கனவான்களே.

(தேவே-வ-ம்) நவக்கிரகத்திற்பெருமைதங்கிய சுக்கிரபகவானே? சரணஞ்சரணஞ்சுவாமி, இந்த ஆசனத்திலெழுந்தருளும் பகவானே.

(சுக்-வ-ம்) வாழி வாழி, தேவர்கோனே வாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திரமகாராஜன் சபைக்கு எமதருமராஜன் வந்தனரென்றறிவீர்கள் கனவான்களே.

(தேவே-வ-ம்) சரணஞ்சரணம், எமதருமராஜனே? சரணம், இந்த ஆசனத்திலிருந்தருளுமையா.

(எம-வ-ம்) வாழி வாழி தேவேந்திரமகாராஜனே வாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திரமகாராஜன் சபைக்கு மகாவிஷ்ணு வந்தனரென்றறிவீர்கள் கனவான்களே.

(தேவே-வ-ம்) போற்றி போற்றி, கபடநாடக சூத்திரதாரனேபோற்றி, இந்த ஆசனத்திலெழுந்தருளுஞ்சுவாமி.

(மகாவி-வ-ம்) வாழி வாழி, தேவேந்திரனேவாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திரமகாராஜன் சபைக்கு வருணபகவான் வந்தனரென்றறிவீர்கள் கனவான்களே.

(தேவே-வ-ம்) வாரும்வாரும் வருணபகவானே? வாரும், இந்த ஆசனத்திலெழுந்தருளுமையா.

(வரு-வ-ம்) வாழி வாழி,தேவேந்திரமகாராஜனே வாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திரமகாராஜன் சபைக்கு வதிஷ்டர் வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

### வதிஷ்டர் தரு.

இராகம்-சுருட்டி, தாளம்-ஆதி.

பல்லவி.

வதிஷ்டமுனிவந்தேன் - சகலரிலு - வதிஷ்டமுனிவந்தேன்.

அநுபல்லவி.

விதித்தவிதிநடக்கும் வேணுநிலையுரைக்குஞ்
சதுர்த்திசைகளும்போற்றுஞ் சகலரும்பணிந்தேற்றும், (வதி)

சரணம்.

அவதியாய்ப்பாலகரை யன்றுகாமதேனுக்கா
யவர்கள்பிறவிபெறச் செய்தேன் - அந்த
அரியயனாதிகாணு வரும்பொருளதையென்ற
னறிவிலடக்கிமாய்கைக் கொய்தேன் - நல்ல
தவநிலைபெற்றேயிந்த தரணிவாழ்வேந்தர்களுங்
தழைக்கச்சாத்திர முணர்ப்பித்தேன் - அன்றித்
தபதியைசூரியனாற் றாழ்ந்துவாரணனுக்கே
தானேகொடுத்திடவே வைத்தேன்
இனித்தேறும் - இன்னம்பாருங்
கவுசிகன்பிள்ளைகளுங் கெருவம்படைத்ததாலே
கருக்கிச்சாம்பலாக கெடுத்தேன் - எந்தன்
காமதேனுக்காய்வந்த காதிமகன்படையைக்
கலங்கிமறித்திடவே விடுத்தேன் - சர்வ
புவனமதில்விளங்கும் புனிதமுனிவர்களிற்
புகழுங்கனமதைநா னெடுத்தேன் - எங்கும்
போற்றிசெய்யவேப்ரமம் புகட்டும்பரஞ்சோதியை
புக்குநிலைதெரிந்தே யடுத்தேன் - என்னைப்
போற்ற - யாவர்களு - மேற்ற
எவர்களாலுமிவ்வா றெனைப்போலறியாரா
ளிருக்குமிடத்தைக்கண்டே பிடித்தேன் - இன்ன
மெழிலுறுமருள்ஞானத்தின்பத்தினுணுக்கத்தை
யிச்சித்தவர்களுக்குப் படித்தேன் - சர்வ
பதமதுமறிந்திடப் பார்வதியாணாலைப்
படித்ததின்சாரத்தைக் குடித்தேன் - எந்தப்
பாவையாகிலுமோகம் பற்றமயக்கிடினும்
பதறாதிருக்கமன முடித்தேன் - ஆ ! ஆ !
கேளுங் - சதாநாளும் - வெகு
கெர்வக்குணங்கள்போகக் கிட்டுஞ்சீடருக்கே
கீர்த்திவாய்ந்திடநோக்கிக் கிளம்பிடும்நாடருக்கே. (வதி)

## தேவேந்திரன் விருத்தம்.

பந்தமென்பதையொழித்த பண்பனேயுன்றாள்போற்றி
சிந்தையைச்சிவத்தில்வைத்த சிறப்புளநாதாபோற்றி
விந்தையாங்காமதேனை விளைவித்தபொருளேபோற்றி
யெந்தையேயென்னைக்காக்கு மிறைவனேபோற்றிபோற்றி.

(தேவே-வ-ம்) போற்றி போற்றி, வசிஷ்டமகா முனியேபோற்றி.

வசிஷ்டர் விருத்தம்.

விம்பனவேந்தேவாழி வெற்றிகொள்படையாவாழி
பொற்புறுகுணனேவாழி புகழுமிந்திராணிவாழி
கற்பகத்தருவும்வாழி கவஜ்ராயுதமும்வாழி
தற்பராதேவர்தேவே தயாநிதிவாழிவாழி.

(வசி-வ-ம்) வாழி வாழி, தேவேந்திர மகாராஜனே வாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே? தவத்திலுயர்ந்தவிஸ்வாமித்திரமுனி, இந்திரன் சபைக்குவருகிறவிதங் காண்பீர்கள் கனவான்களே.

விஸ்வாமித்திரர் தரு.

இராகம்-மோகனம்-தாளம்-ஆதி.

பல்லவி.

கதிக்குஞ்-சதுர்மறைநெறியினைமதிக்கும்
பெருமையிலுயர்தவ கவுசிகமுனிநானே - நவ
கண்டம்போற்றுங்-கவுசிகமுனிநானே.

அநுபல்லவி.

எத்திசைபுவனங்க ளினிலெனைப்போலொருவ
ரற்றவருண்டோ - ஆ! ஆ! மற்றவருண்டோ - யார்
யீண்டோ கரம் விண்டோ துவ
ருண்டோ வருள் கொண்டோ ரதி
எழிலுறுமுனிவர்கள் கழலடிகாணுைப்
பழியதையறுத்திடு மழிவிலானடிகொளுங். (கதி)

சரணம்.

இரிசியின்மாயையென்னை யேரிடிற்பயங்கோட
எண்ணெணுானநிலே நாட்டுவேன் - தபம்
ஏற்றுந்திறமையிறு லெவ்வுலகங்களுநா
னெண்ணுநிமையிலாட வாட்டுவேன்
சரிதைமுதலாய்நாலுஞ் சாற்றும்பெருங்கதியைச்
சார்ந்துவினைகடனை யோட்டுவேன் - மற்றுஞ்
சாரொணுவைகுந்தத்தைச் சர்வருளமகிழச்
சட்டமாயுள்ளங்கையிற் காட்டுவேன் - நல்லோர்
அருகிற்பணியப் பேரானந்த மூட்டுவேன்
அண்டியவல்வினைக ளகன்றிடமாட்டுவேன்
கிரிகளுமெரிந்திடக் கிளரனல்மூட்டுவேன்
கீழ்மேலுலகமெலாங் கீர்த்தியைநாட்டுவேன்

அரியயன்மூவர்களு மறியொணுமூலத்தை
யகத்திலடக்கிநிலை யேற்றுவேன் - சர்வ
வாத்மகோடிகளெலா மறையுமொழிப்படிக்கே
யடங்கிப்பணியமதி தெற்றுவேன்
கரியுரித்தோனுமெனைக் கண்டால்மனமகிழக்
கனிவுபிரமத்தினடி போற்றுவேன் - அந்த
காமதேனுவுமென்றன் கைக்குளடங்கிடவே
காகூஷியெழுத்தையென்னுள் சாற்றுவேன்
விரிவுலகதனையும் வேண்டிடின்மாற்றுவேன்
வேதமொலிக்கும்பல வேள்வியுமியற்றுவேன்
பரிகரிநூலிலும் பண்புறத்தேற்றுவேன்
பகரொணுமூடனைப் பணிந்திடநீற்றுவேன்
பற்றித் துயர்கடனை பெற்றி பதவியதை
நற்றி யுலகதனில் வெற்றி பெருகியெங்கும்
பாவித்த வஜ்ஜிர மேவித்த திரிசங்கை
கோவித்த தேவருந் தாவித் தணியச்செய்த
பட்சன் முனிவர்களின் மெச்சன் கனிவுபெறு
மிச்சன் சகலரிலு முச்ச னெனவேதொழு
பாடி யதிநடையா யோடி யிந்திரன்சபை
நாடி யாவரிலு மோடி மோடியெனவே (கதி)

(தேவே-வ-ம்) போற்றி போற்றி, விஸ்வாமித்திர முனியே போற்றி.

(விஸ்-வ-ம்) வாழி வாழி, தேவேந்திர மகாராஜனே வாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திர மகாராஜன் சபைக்குத் தேவர்கள், முனிவர்கள், அட்டவசுக்கள், சித்தர்கள், முதலான சகலரும் வந்துசேர்ந்த பின்னர், தேவேந்திரமகாராஜன் வீற்றிருக்குஞ் சபையினட்டியஞ்செய்ய அரம்பை வருகிறுளென் றறிவீர்கள் கனவான்களே.

## அரம்பைவருகிற பொது தரு.

இராகம்-கியால், ஏகதாளம்.

அண்டர்புகழ்தேவராஜ னருளைநாடியே
அழகிலுயர்மாதரம்பை யடையத்தேடியே.
முகத்தான்மதிநாணவின்னேர் முகமும்வாடவே
முத்தோவெனத்தந்தம்நாசி மோகங்கூடவே.
தங்கநிறமேனிமாரன் தானும்நாணவே
தாவவண்டுகிள்ளைமொழி தனியாய்ப்பூணவே.

## அரம்பை பொது தரு.

இராகம்-தோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

நடனமாதுவந்தாள் அரம்பையெனும்
நடனமாதுவந்தாள்.

அநுபல்லவி.

கடினமனத்துடையோர் கருதக்காலனை வென்ற
காலன்பூஜையும்போக்கி கலக்கமாரனைப்போன்ற
கண்டவராசை கொண்டுமேவாட
வெண்டிசையோரிவ ளண்டையேநாட (நட)

சரணம்.

மூன்றாம்பிறையைப்போல முதிராநுதல்துலங்க
முகத்தைப்பழிக்குஞ்சரத்ன மொவ்வாத்தந்தமிலங்க
வானத்தின்வில்லோவென வண்புருவங்களோங்க
வளர்குமிழைப்போனாசி வானவர்களுமேங்க
வண்டினொலிநாண கயல்
கெண்டைவெட்கம்பூண வவள்
வாயினிதழ்கோவை மாங்
காயினிதழோபாவை சொல்
வலம்புரியொத்ததோர் வறிகழுத்தோங்க
வானத்தின்மீன்களின் வளரொளிவாங்க
வண்டுமொய்க்குங்கனங்கள் கிரிகள்
கண்டொடுங்குந்தனங்கள் பிடி
உற்றிடு சிற்றிடை பெற்றிடை சுற்றிய
பேரும்நகைக்க சர்வ நாரிபகைக்க முத்
தேவர்திகைக்க ரசி பாவையதைக்க மால்
மகனுமிவள்முகங்கண்டுமே வோட
ககனம்விடச்சகுனமென நாட
வஜ்ராயுதனை நாடி சத்ஜனசபை தேடி
கைச்சிலம்பொலி கூடி மெச்சத்தோடியிற் பாடி (நட)

(அரம்பை-வ-ம்) போற்றி போற்றி தேவராஜனே.

(தேவே-வ-ம்) மாதே! நல்ல இசைகூட்டி ஒருபதம்பாடி நடிப்பாய்

(அர-வ-ம்) மகாபாக்கிய மப்படியே நடிக்கின்றேன் தேவே.

## அரம்பை தரு

இராகம்-கமாஸ்-தாளம்-ஆதி.

பல்லவி.

மோடிசெய்குவதேதுகாரணமோ ஐயோ
மோகம்பொல்லாதுசுவாமி. (மோடி)

அநுபல்லவி.

நாடி யுன்றன்பாதந் தேடி யென்றன்மனம்
வாடி யிங்கிதச்சொல் பாடி நின்றாலுமென்மேல் (மோ)

சரணங்கள்.

மார னுன்றனைவிட கூற காணேனேயெனைச்
சேர யுனக்கேயிது பார மென்றாலுமென்மேல் (மோ)
சங்கை யேனோயென்றன் கொங்கை விம்முதேயிதோ
மங்கை வாடுறேனுன் செங்கை தாக்கிடவென்மேல் (மோ)
வாசா மலர்கள்புனை யீசா தேவர்கள்பணி
நேசா வரக்கர்படை நாசா விதுவேகாலம் (மோடி)

(தேவே-வ-ம்) இன்னமொருபதம் பாடுவாய்மாதே.

## அரம்பை பதம்.

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

நான்-கொண்டமோகஞ்சகிக்க வென்னாற்கூடுமோ சுவாமி

அநுபல்லவி.

அண்டர்கோனே அடிபணிந்திட்டேன்
ஆரைக்கண்டாலுநான் அணையவழைப்பேனோ (கொ)

சரணங்கள்.

தென்றற்காற்றும் வீசுதே - என்றன்
றோகமெங்குங் கூசுதே
கொண்டற்குயிலுங் கூவுதே - இரு
கொங்கைவிம்மி நோவுதே
தெண்டனிட்டுன் தாள்பணிந்திட்டேன்
தீராயென்றாவலை தாராயொருவிலை (கொ)
சந்திரனொளியுந் தாக்குதே - காமச்
சரம்மிகவு மோங்குதே
எந்தனுடலுஞ் சோங்குதே - மனம்
இனிநிலைக்கப்பின் வாங்குதே
சுந்தரவாகாவுன் சொகுசுகண்டுநான்
சொக்கலானேநாதா விக்கணமும்வாதா (கொ)

காமநீரு மோடுதே - உன்றன்
கனியிதழினைத் தேடுதே
ஜாமத்தினை கூடுதே - மனஞ்
சஞ்சலத்தினின் றூடுதே
க்ஷேமமாகவே நின்றடியேற்றினேன்
சித்தனேவந்திடும் முத்தமேதந்திடும் (கொ)

(தேவே-வ-ம்) இன்னமொரு பதம்பாடுவாய் அரம்பையே.
(அர-வ-ம்) மகாபாக்கியஞ் சுவாமி.

அரம்பை ஜாவளி.

இராகம்-காபி, தாளம்-ரூபகம்.

இனி அவனோடுகூடி ஆடுமிச்சை போதுமே.
ஆடுமிச்சைபோதுமே-அவனோ-டாடுமிச்சைபோதுமே (இனி)
நின்றவிடத்திலன்றிலாட நினைவுமவன்மேல்நாடுதே
நினைவுமவன்மேல்நாடுதே-என் வினையெனமனம்வாடுதே (இனி)
இருந்திடாமலொருவெழுத்தை யெழுதிலவனுகுதே
எழுதிலவனுகுதே மதம் வழிந்துவீணய்ப்போகுதே (இ)
கனவிலவன்வந்தேயென்னைக் கிட்டினற்போல்காட்டவே
கிட்டினற்போல்காட்டவே அவன் தட்டியெனைவாட்டவே (இ)

அரம்பை வேறு ஜாவளி.

இராகம்-பியாக்-தாளம்-ரூபகம்.

ஒ மங்கையரோ தேவராஜன் மருவநாடானே
கொங்கை சருவத்தேடானே (ஓ)
தாவவந்த வெந்தன்மனம் நோவலாச்சுதே அடி
தங்கையே நாமிங்கிருந்தால் தாங்கலல்லவோ
மனம் வாங்கலல்லவோ (ஓ)
நெஞ்சமிலா வஞ்சகனைக் கெஞ்ச லாகுமோ அடி
கொஞ்சநேரம் வந்துயென்னைக் கூடவாரானே
கலந்தாடவாரானே (ஓ)
ஆசையில்லா வாளருட நேசங்கெட்டது அடி
வாசமலர் பன்னீரிங்கு வாங்கிப்போடடி
நீயுநேங்கிவாடடி (ஓ)
காமமீறுங் காலங்கூடாக் கணவனேனடி அடி
களைக்குதெந்தன் நெஞ்சையிதோ துளைக்குதையையோ
உட-லிளைக்குதையையோ (ஓ)

(அர-வ-ம்) இன்னமுங்கேளும் இராஜபரமேஸ்வரா.

அரம்பை வேறு ஜாவளி.

இராகம்-பிலஹரி, தாளம்-ரூபகம்.

மோகமேலிட்டதினால் மோடிகாட்டுராயோடா.

தேக்கிமனம்நிற்கிலேயே தேவிமுகம்பார்க்கிலேயே. (மோ)
மனதாலுனைநாடிவந்தேன் மாதெனநீயறியாமலே
மரியாதையாகுமோடா மர்மம்விடடாசாமி. (மோ)
கனமறந்துகால்பிடித்தேன் காமமீறிபாவியடா
கண்களைமூடியதென கர்மமோடாசாமி. (மோ)
இனிசகிக்கலாகுமோ ஏக்கமீறுதையையோ
ஏதுஇனிச்செய்குவேன் என்னைச்சேரடாசாமி. (மோ)

(தேவே-வ-ம்), அப்பா மந்திரி? நேத்தியாய் நாட்டியஞ் செய்த அரம்பைக்கு, விலையுயர்ந்த வெகுமதிகொடுப்பா யப்பா.

(மங்-வ-ம்) அப்படியே கொடுக்கின்றேன் மகாராஜனே.

(அர-வ-ம்) மெத்தசந்தோஷம் மனங்களிக்க வெகுமதிபெற்றேன், போற்றி போற்றி, இந்திரராஜே போற்றி.

(பொது-வ-ம்) சபையோர்களே? பரமசிவத்தை யிடைவிடாமல் மனதிற்றியானஞ்செய்து கொலுவீற்றிருக்குந் தேவேந்திர மகாராசன் சபைக்கு ஊர்வசிவருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

ஊர்வசி கண்ணிகள்.

இராகம் - கியால், ஏகதாளம்.

இராஜதேவராஜவிந்திர ராஜபூபனே
ஆசையுடனூர்வசியுனை நாடிநாபனே
கண்டதேவரசுரர்மையற் கொண்டுதேடவே
மண்டலத்திலுள்ளோரொலா மயங்கிவாடவே
ஆதிசிவபூஜைசெயு மறிஞர்தானுமே
ஜோதிதனைவிட்டேயெனைத் தொடரவேணுமே
மாரனொளியென்னைப்பார்க்கிற் றாரமோடுமே
தீரரெனைக் காணிலுடற் சோரவாடுமே

(ஊர்வசி-வ-ம்) போற்றி போற்றி தேவர் கோனேபோற்றி.

(தேவே-வ-ம்) இச்சபைகளிக்க ஒருபதம் பாடுவாயடி அப்சரா.

(ஊர்-வ-ம்) மகாபாக்கியம், அப்படியேபாடிநடிக்கின்றேன்தேவே.

ஊர்வசி ஜாவளி.

கூடவாருமே கலந் தாடவாருமே
வாடமன்மதனிதோ வாளிதூவுறானேராஜே. (கூட)

ஆசைமீறுதே புணர் ஓசைகோருதே
மாசைவேண்டும் வேசையல்லேன் மருவவாருமே ராஜே. (கூட)
காணம்போக்குதே மலர்ப் பாணந்தாக்குதே
சேணமீதிற் பேணவெனைச் செல்லுங்கூடவே ராஜே. (கூட)
நானேவந்தேனே வேண்டிக் கோனேநொந்தேனே
தானேகோற லானேன் நீக்கத் தகுதியல்லவே ராஜே. (கூட)
என்னபாவமோ வுமக் கின்னங்கோவமோ
மன்னவனே யுன்னிதயம் மலையின்பிஞ்சதோ ராஜே. (கூட)

(தேவே-வ-ம்) இன்னமொரு பதம்பாடுவாய் பெண்ணே ஊர்வசி.
(ஊர்-வ-ம்) அப்படியே நாதா.

ஊர்வசி வேறு ஜாவளி.

இராகம்-காப்பி, தாளம்-ரூபகம்.

ஓ அரசே ஏதுசெய்தேன் அணையவாருமே
வாதுசெய்யில் மதன்வாளி வருத்தும்பாருமே. (ஓ)
ஜாலஞ்செய்யக் காலமல்ல சரணங்காருமே. (ஓ)
கொங்கைவிம்மு திக்கேயெனைக் கூடித்தீருமே. (ஓ)
அஞ்சலென்று அடிப்பணிந்தே னருளைத்தாருமே. (ஓ)
காமரசம் கக்கவெனைக் கட்டிச்சேருமே. (ஓ)

ஊர்வசி வேறு ஜாவளி.

இராகம்-கமாஸ், அடதாளம்.

ஓ துரையே மனம்நாடுதுவாவே ஓ (துரை)
நாடுதுவாவே தேடுதுதாவே ஓ (துரை)
அந்தத்தில்மார சுந்தரத்தானே
சொந்தமாய் எந்தனை சந்தித்தே பந்தசுகம் ஓ (துரை)
வாடினேனுனுமே பாடினேன்காணுமே
நாடிடக் கூடிட ஆடிடத் தேடிடச்சுகம் ஓ (துரை)
தேகமுஞ்சோருதே மோகமுமீறுதே
தாகமாய் வேகமாய்ப் போகமாய் ஏகமாய்ச்சுகம் ஓ (துரை)
மாரனும்பாவியே சரங்களை தூவியே
கோரமாய் வீரமாய் வாரதைத் தீரவேசுகம் ஓ (துரை)

(தேவே-வ-ம்) இன்னமொருபதம்பாடி நடிப்பாய்பெண்ணே.
(ஊர்-வ-ம்) அப்படியே, மகாபாக்கியஞ் சுவாமி.

ஊர்வசி வேறு ஜாவளி.

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ஆதி.

திரதிரதானிதானிதானிதிந்திரதானி தகதிகதகுந்தரி
ததீம் தில்லானா தரி திர. (திர)

கோரினேனிவ்வேளைக்கூடிடுவாயே குணவதிசிலனே
ததிமித்திமிதிமிதகுந்தரிகுகுந்தரி தகதிகதகுந்தரிததீம்தில்லானதிர
கொங்கைகள்விம்மியே கூடவும்நாடியே [திர
கோரியேயின்றுநான் கோபமோடாசாமி - தா
ச நி தா பா யே நீ யிந்த - ம க ம ப தா மா - கோபமாமோ
த ப த மா யெளியனே-ப ம ப கா வந்திட-மா ப த சா லாகுமோதா
ரி க ம க ரி க ரி ச - மனதினிநாடிய நி த ப மா - மலரடியே
க ம ப தா - தனேநீதரவே - ச சா ப பா ச சா ததியிதே
வா வா க ம ப த னி - பதியெனவே (தானி)

(ஊர்-வ-ம்) இன்னமுங்கேளு மரசே.

ஊர்வசி வேறு ஜாவளி.

இதுவேளையே என்னைக்கூடும் இஷ்டமாய்த்தாவி
பொதுவாகமதன் வாளிதீட்டிப் பொருமுரான்பாவி. (இ)
உன்னைக்கண்டு உருகிவாடிவாடி உளங்கரைந்துமே
உகந்துமெனைக் கலந்தணையும் ஓடிவந்துமே. (இ)
காமமீறி ஜலமோடவோட தடுக்கவாருமே
காதலாகி வந்தேனெனைக் கட்டிச்சேருமே. (இ)
அரையின்சேலை யவிழுதையோவையோவரசனேபாரும்
அனங்கன்செய்யுங் கோரம்நீக்க வாபுடன்வாரும். (இ)
முத்தமிட்டு நிதம்நடித்துக்கடித்து முகத்துடன்சேர்த்து
மோகந்தீர விருவராட முறையதுபார்த்து (இ)

(தேவே-வ-ம்) சபாஷ், ரொம்பவு மெச்சினேன், அப்பாமந்திரி? நமதுசபையின் முன் உன்னத ஆடல்பாடல் செய்த ஊர்வசி மனங்களிக்க விலையுயர்ந்த ஆடையாபரணங்கள் வெகுமதி கொடுப்பாயப்பா.

(மந்-வ-ம்) அப்படியே கொடுக்கின்றேன் மகாராஜனே.

(ஊர்-வ-ம்) சுவாமி? வெகுமதி தோணப்பெற்றேன், போற்றிபோற்றி தேவர் கோனேபோற்றி அடியாள்போய்வருகின்றேன்.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திர மகாராஜன்சபைக்கு நாட்டியஞ்செய்ய மேனகைவருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

மேனகை வருகிற பொது தரு.

இராகம்-கியால், ஏகதாளம்.

வாராளிதோமேனகையும் வாடவிண்ணவர்
வாடிடவும்நெஞ்சமது வதங்கிமண்ணவர்
கண்டமாந்தர்கருத்தழிந்து காணவேயவர்
காமரதியெனமனங் காட்டவேதவர்
மோகமுட்டும்பதுமையென மோடியாகவே
முனிவர்சித்தர்யோகர்மனம் முழுதும்போகவே

தேவராசன்சபைநாடி திங்கள்போலவே
பாவையிவளழகால்மனம் பதரச்சாலவே.

## மேனகை பொது தரு.

இராகம்-உசேனி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

மேனகைவந்தாள் வெகுவுச்சித சுரமெச்சித (மேனகை)

அநுபல்லவி.

வானவர்பணி வஜ்ஜிரபாணி
மகிழிந்திராணி மருவுநல்மணி
வாடும்பசை கூடுமிசை நாடுமசை பாடும்விசை (மேன)

சரணம்.

முகத்தால்மதியை யோட்ட-கண்டவர்
மோகத்தாற்புத்தியை நாட்ட
குசத்தாற்கிரியை வாட்ட - விழிகள்
குண்டுபோற்கெண்டையாய்காட்ட மிகு
மத்தகரிநடப்பதைப் போல
மட்டில்லாதவிடையாடவே லோல
விதித்தநான்முகன் கண்டாலுமேசால
வெட்கித்துத் துக்கித்து ஒடிடவேஜால
விண்ணி லொளி மண்ணிற் கிளி
புண்ணிற் றெளி நண்ணி னொளி
விண்ணவர் பன்னவர் மன்னவர் கின்னரர்
வேட நாட பாட ஆட (மேன)

(மேனகை-வ-ம்) போற்றி, தேவேந்திரமகாராஜனேபோற்றி.
(தேவே-வ-ம்) பெண்ணே? யாவருமகிழவொருபதம்பாடி நடிப்பாயடி.
(மேன-வ-ம்) மகாபாக்கியஞ் சுவாமி.

## மேனகை ஜாவளி.

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ஆதி.

சரசசல்லாப சன்மானனே
சதியாளிதோ காமமானனே. (சர)
உன்னைக்கோரியே வரலானேனே
ஒருமுத்தமிட்டா லோடிப்போவேனே. (சர)
காமன்வேதனைக் கஞ்சிவந்தேனே
காணுமனுனைமனம் நொந்தேனே. (சர)
அடியாளினி பொறுக்கலாகேனே
அணைந்தாலோடியே நானும்போவேனே. (சர)

மோகமொழுகு திதோபாருமே
மோடிசெய்ய லெனைச்சேருமே. (சர)

பேனகை தரு.

இராகம்-பிலஹரி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

வாரும்வாரும் காலமென்னைச் சேரு மையல்தீரும் ராஜனே

அநுபல்லவி.

பாருங்கண்ணாலே பாவிமதனோட
பதைக்குதேயுடல் பதறுதேயோடி (வாரு)

சரணங்கள்.

நல்லவாசம் வெறுக்குதே-இதோ
கல்லாய்க்கொங்கை பெருக்குதே
அல்லற்செய்வது மாகுமோவெந்தனே
வல்லவாவென்னுளம் வாடுதையோவோடி (வாரு)

பனிநீரும்வெப்பங் காட்டுதே-உன்
கனியிதழ்மேலே நாட்டுதே
வனிதைமேலிந்த வன்மமாகுமோ
இனிச்சகிக்கிலே னெந்தலேநீயோடி (வாரு)

திரேகமெத்த சோக்குதே - ஐயோ
விரகநீருங் கக்குதே
சரசனென்றுமே சார்ந்தேனிந்திரா
கரந்தொட்டுக்கொங்கை கட்டியணைந்திட. (வாரு)

மேனகை ஜாவளி.

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ஆதி.

கோறினேனெனைக்கூடுமே சாமி - நான். (கோ)

தென்றலும்வீசுதே திரேகமுங்கூசுதே
மன்றலிதோபூசுதே மலர்வாளி
மன்றலிதோபூசுதே மையல்மீற
மன்றலிதோபூசுதே யிதுவேளை. (கோ)

உன்சுகந்தேடுதே யுளமதுகாடுதே
என்மனமும்வாடுதே யிதோபாரும்
என்மனமும்வாடுதே பாணந்தைக்க
என்மனமும்வாடுதே யிதுவேளை. (கோ)

துயிலிதோசோறுதே துடைகளுங்கடுக்குதே
குயிலினமுங்கூறுதே மதனனுக்காய்
குயிலினமுங்கூறுதே யெனேவருத்த
குயிலினமுங்கூறுதே யிதுவேளை. (கோ)

(தேவே-வ-ம்) அடி மேனகா ? நேற்றியதினம் உலோகமெங்கனுஞ் சஞ்சரிக்கானின்ற நாரதமகாமுனிவர் ஒரு நூதனபதம் சிக்ஷைசெய்து வைத்ததாகக்கேள்வி, அப்படியிருக்கின் அதைப்பாடுவாய்.

(மேன-வ-ம்) அப்படியே, சற்றுகவனிப்பீர் நாதா.

மேனகை தரு.

இராகம்-செஞ்சுருட்டி, அடதாளம்.

பல்லவி.

அணைவானோநங்கை அமரராஜன் அணைவானோ நங்கை.

அநுபல்லவி.

இணையாவானென்றுமே யேங்கினானின்றுமே
கணையால்நொந்துமெத்தக் களைத்தேனேமங்கை
வரக்கருதானேதங்கை
நானிங்கே அவனங்கே இனியெங்கே. (அணை)

சரணங்கள்.

அழகுயந்தமுங்கண்டு ஆசைபெருகிக்கொண்டு
பழகியதெண்ணியெண்ணி பதைக்கிறேன்மங்கை
யினிச்சகிக்கிலேன்தங்கை
நானிங்கே அவனங்கே இனியெங்கே. (அணை)

உபரதிசமரதி ஊட்டுவனெனத்ததி
தவரிலெனக்கினித் தகுதியார்மங்கை
யினித் தாளேனேதங்கை
நானிங்கே அவனங்கே இனியெங்கே. (அணை)

மேனகை ஜாவளி.

இராகம்-கமாசு, சின்ன-தாளம்-ஆதி,

மயலிலேசொக்கி மனம் வாடினேண்டா சாமி
தயவுடன் ஒருமுத்தந் தருக தருக வேளை. (ம)

கனவினிலுன்னையே கண்டவாறெழுந்து
நினைவதுமாறியே நின்றிடவே
தனமதுவிம்முதே தழுவு தழுவு முத்தன். (ம)
ஆநடனுனுமே அன்புடன்பேசிலுன்
பேரதுவருகுது பிசகலவே
திருமென்னுவலே தேவர் தேவனே யெந்தன். (ம)

வஞ்சிநானிங்கே வாடியேநிற்கநீ
நெஞ்சிரங்காதது நீதியதோ
கொஞ்சியேவந்தெனைக் கூடுங் கூடிடு முந்தன். (ம)

(தேவே-வ-ம்) அப்பாமந்திரி? நமது சபையி லுள்ளவர்களுடைய மனதையும், என்மனதையும் பிரமிக்கச்செய்து ஆடிப்பாடிய இம்மேனகைக்குத் தக்கவெகுமதிகொடுத்தனுப்புவாயப்பா பாலகா.

(மந்-வ-ம்) அப்படியேநாதா —(கொடுத்தல்)

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திர மகாராஜன் சபைக்குத் திலோத்தமைவருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## திலோத்தமை பொது கண்ணிகள்.

இராகம்-கியால், ஏகதாளம்.

தேவவிந்திரசபைதிலோத் தமைமாதுமே
தேடி வாராளடையவிங்கு தெரியப்போதுமே
இந்திராணிமுதல்யாரு மிவளைக்கண்டுமே
ஏங்கமனம்வாங்கவெட்க மேந்திக்கொண்டுமே
மூவர்முதற்றேவர்களும் மோகங்கொள்ளவே
முகத்தின்காந்திமதியொளியை யொதுக்கத்தள்ளவே

## திலோத்தமை பொது தரு.

இராகம்-சுருட்டி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

தேவேந்திரன்சபையைநாடியே - நடனமாது
திலோத்தமைவந்தாள் தேடியே.

அநுபல்லவி.

பாவலர்களும் நாவலர்களும்
பட்சமுடனேதி யட்சதைதூவிட
பதியாய்விண்ணின் மதியாய்த்தேவர்
பார்க்கத் துயர்தீர்க்க மனமூர்க்க வொளிதாக்க விதோ. (தே)

சரணங்கள்.

மூன்றாம்பிறைபோலவே நுதலும் ஆடவர்மகிழ
மொழிகிளிக்கோவைக்கனிபோல விதழும்
கெண்டைபோல நீண்டவிழியுங்
கிளரும்பேடைப் பழிக்கும்நடையுங்
கிட்டவே மோகம் முட்டவே மையற்
கிஞ்சித்திட நெஞ்சசற்றிட அஞ்சுற்றிட வஞ்சசற்றிட. (தே)

பொற்கிண்ணம்போலொத்தஸ்தனமும் - இடைசிறுத்து
புதுமையோவெனப்          பார்க்கவேமனமும்
அற்பமல்ல          யிவளிருதொடை
அடிவாழைமாங்          கனிபோலதாடை
ஆற்றவே காமமேற்றவே யிதோ
அன்புற்றுமே தென்பற்றுமே யின்புற்றுமே நன்பற்றுமே. ()
சுருட்டிராகப்பதமும்பாடியே அபிநயத்தாற்
சோரத்தேவர்மனங்கள்வாடியே
மருவுமுல்லை          வாட்சிமல்லிகை
வாசனைமிக          வீசிடவேமேனி
வஞ்சியே மோகமிஞ்சியே கிட்ட
வந்திடவும் தந்திடவும் பிந்திடவும் நொந்திடவும். (தே)

(திலோத்தமை-வ-ம்) போற்றி போற்றி, தேவர்கோனேபோற்றி.

(தேவே-வ-ம்) பெண்ணே திலோத்தமை? நல்லபதம் பாடுவாயடி.

(திலோ-வ-ம்) மகாபாக்கியஞ் சுவாமி.

## திலோத்தமை ஜாவளி.

இராகம்-பிலஹரி, தாளம்-ரூபகம்.

இந்திரனேயுன்னைவிட          வெவர்மேல்மனம்நாடுவேன்
சுந்தராங்காயுன்வடிவாற்          சொக்கினேனுனைக்கூடுவேன். (இ)
பொறுக்கிலேனேபொங்கிக்காமம்          போகுதேதாபமீறுதே
தரிக்கிலேனேயோரிடத்திற்          றதியிதுவென்னுடல்சோருதே. (இ)
மதியைமாற்று மதிகமாகின்          மலர்முகத்தைக்கண்டபோதே
சதிகாரனும்மாரன்மலர்ச்          சரந்தொடுக்கின்றானேவாதே. (இ)
கொங்கைபடுங்கோரம்போக்கக்          கூடியென்னைச்சேராயோ
அங்கமெலாம்வெப்பமாகி          யடியாள்படுந்துயர்தீராயோ. (இ)
உன்னைப்பார்த்தகண்கள்வே          றொருவனைக்கண்டாற்கூசுதே
என்னையிரட்டமதனும்பாவி          யேவுறான்தென்றலிதோவீசுதே. (இ)

(தேவே-வ-ம்) இன்னமொருபதம்பாடுவாய் பெண்ணே.

(திலோ-வ-ம்) அப்படியே நாதா.

## திலோத்தமை வேறு ஜாவளி.

இராகம்-கமாஸ், தாளம்-ஆதி.

ஆ! ஆ! அதி அன்பனே - ஆசையானனே
சகித்திடேனினிமிக சரணஞ்செய்கிறேனிதோ. (ஆ)
மனதுந்தன்மேலிட்டு          மகிழ்ந்திட்டேனுனே
கனயிலாமற்றவனைக்          கருதேன்கருதேனினி. (ஆ)

கொங்கைகள்விம்முதே　　கூடிடவாவே
சங்கைதனைநீக்கியே　　சாமிசாமிநீயினி.　　(ஆ)
படமிதோதுடிக்குது　　பாவைக்குத்தானே
கொடங்கையாலணைத்துமே　　கூடுங்கூடுமினி.　　(ஆ)

(திலோ-வ-ம்) இன்னமும் சற்றுகவனிப்பீர்கோவே.

## திலோத்தமை வேறு ஜாவளி.

இராகம்-காப்பி, தாளம்-சாப்பு.

கூடவும்நானே　　கோரியகாலமே
பாடலைப்பாடியும் பாவியானேனே உனை.　　(கூட)

காமனுமென்னையே　　கணைகளைத்தூவியே
சாமமோராண்டதாய்　　சாடுறானே உனை.　(கூட)
கொங்கைகளூறுதே　　கோரமும்மீறுதே
சங்கையாயெந்தனை　　சாரவுங்கோனே உனை. (கூட)
தேகமும்வாடுதே　　திரமுமோடுதே
போகனேயுன்னடி　　போற்றினேனே உனை. (கூட)

(தேவே-வ-ம்) ஆ! பெண்ணே? என்ன இரசக்கியானமுள்ளபாடலைப்பாடியாடினாய் இப்படியல்லவோ பாடவேண்டும்; சரி, இன்னம் ஒருஜாவளிபாடி ஆடுவாயடி திலோத்தமா.

## திலோத்தமை வேறு ஜாவளி.

இராகம்-பியாக், தாளம்-ரூபகம்.

காமியாய்நான்வந்தேனே - காலமேகூடவாவே
ஜாமமோரிர　　வாகுதே.　　(கா)
வந்துவெகுநேரமாச்சு வாருஞ்சேரவேணுமையல் பாருந்திரவே.　　(கா)
சுந்தரனேயிதுவேளை சுகந்தாருமே அதி மதந்தீருமே.　　(கா)
தேவர்கோனேயிடதுமுலை தீண்டவாருமே மதன் வேண்டப்பாருமே.

(தேவே-வ-ம்) அப்பாமந்திரி? இந்த திலோத்தமைக்கு வேண்டிய வெகுமதி கொடுத்தனுப்புவா யப்பா.

(மந்-வ-ம்) அப்படியேகொடுத்தனுப்புகிறேன் மகாராஜனே.

(திலோ-வ-ம்) மெத்தசந்தோஷம், வெகுமதிபெற்றேன், போற்றி போற்றி இந்திராஜேபோற்றி யான்போய்வருகின்றேன் நாதா.

## தேவேந்திரன் விருத்தம்.

எண்ணருஞ்சபையுளோரே யின்றுநானியம்பக்கேளீர்
வண்ணமாஞூலகிற்சத்தியம் வழுவாமனீதியேற்றி

திண்ணமாம்பொறுமையோடு திண்மையுங்கீர்த்திகொண்டோன்
மண்ணினிலுண்டோநீங்கள் மகிழுடனுரைசெய்வீரே.

(தேவே-வ-ம்) சபையோர்களே? பூலோகத்தில் சத்தியம்வழுவாமல், பூதயவு, பச்சாதாபமடைந்து செங்கோற் செலுத்து மன்னர்களுண்டோ? தெரியச்சொல்வீர்கள் கனவான்களே.

(நாரதர்-வ-ம்) தேவேந்திர மகாராஜனே? நீர்கேட்ட சங்கதி வதிஷ்டராற் றெரிந்துகொள்ளக் கூடும் மகாராஜனே.

## தேவேந்திரன் விருத்தம்.

ஐயனேவதிஷ்டமூர்த்தியரும்பொருளுணர்ந்தநாதா
ஐயனேயுலகில்வாழு மரசரின்மெய்மைபூண்டோன்
ஐயனேசத்யனுரோ வடியனுந்தெரியவேண்டி
ஐயனேபணிந்தேனீரு மன்புடனுரைசெய்வீரே.

(தேவே-வ-ம்) சுவாமி வதிஷ்டமாமுனியே? பூலோகத் தரசர்களிற் சத்தியனும் மெய்யனுமிருப்பவன் யாரோ? தெரியச் சொல்லவேண்டும் முனிநாதா.

## வதிஷ்டர் விருத்தம்.

இந்திரரோ நீர்வினவு நெறிக்குறியோ னுலகதனி
  லியம்பக்கேளும்
அந்தரமாஞ் சொர்க்கமுற்ற திரிசங்கின்ற
  வயோத்தி நாடாள்பவனே யன்றிவேறு
சுந்தரரோ நானறியே னிதிகள் மூன்றுஞ்
  சோராமற்சத்தியத்தை யுடையோன்கண்டீர்
மந்திரமாமஞ்செழுத்தை மனதிலெண்ணி
  மகிழுடனேவாழ்கின்றான் மண்ணிற்றானே.

(வதி-வ-ம்) தேவேந்திர மகாராஜனே? உலகத்தில் நீர்கேட்டவாறு நீதிசெலுத்துபவ னயோத்தியை யாளாநின்ற அரிச்சந்திர னென்றறிவீர் மகாராஜனே.

## வதிஷ்டர் விருத்தம்.

திங்களைச்சடையில்வைத்த தேவனதடியைப்போற்றி
பங்கமதன்றிக்கருமம் பலப்படவியற்றவேண்டிற்
பொங்கமாய்முனிவருக்கே பொருள்கொடுத்துதவிசெய்வோ
னெங்களாண்டவரேகேட்பீ ரெனக்கவன்சீடனுமே.

(வதி-வ-ம்) தேவராஜனே? எக்கிய ஓமங்கள் செய்ய நிதிகள் கொடுத்து தபோதிஷ்டர்களைக் காக்கத்தக்கவனெனக்கு நல்லசீடன்தெரிவீர்

(தேவே-வ-ம்) சுவாமி? அந்தவரிச்சந்திர னெப்படிக்கொத்தவனு! அவனுடைய குணாதிசயங்களை விபரமாயின்னந் தெரியச்சொல்லும் முனிநாதரே.

(வதி-வ-ம்) அப்படியேசொல்லுகிறேன்கேளும் ராஜரூபனே.

வதிஷ்டர் விருத்தம்.

பரநாரிசகோதரனுங் குருமொழியைக் கடவாத பண்பனுகுந்
திரமானவரக்குள்ளான் பொய்பேசான் நிலைதவறான் திகழ்பெருந்த
வரமுடையமனைவியுள்ளான் றனக்குகந்தவமைச்சனையும் வகுத்தோன்
கண்டீர், நரர்வாழுமுலகில்வெகு கீர்த்தியுளோன் நற்புதல்வ னடைந்தோன் வேந்தே.

(வதி-வ-ம்) பரதாரம் விரும்பாதவன், பொய்சொல்லாதவன், பதிவிரதையை மணந்தவன், சற்குணமுடைய மகனைப்பெற்றவன், தனக்குரிமையான மந்திரியையுமுடையவனென் றறிவீர் தேவேந்திரனே.

(தேவே-வ-ம்) சுவாமி வதிஷ்டரோ? உலகில் மெய்மையுண்ட ராஜர்க்க ளிருக்கிறார்களென் றறியாமல் வினவினேன் மன்னிப்பீர் நாதா.

நாரதர் விருத்தம்.

மன்னரோவதிஷ்டர்தானு மறைவதாலவனேசத்தியன்
மன்னரோசபையில்வேறு மறுப்பவர்காணேன்கண்டீர்
மன்னரோவந்தனந்தான் மகிழுடனவருக்கீந்து
மன்னரோவிடைதானேக மகாசபைக்கருள்செய்வீரே.

(நார-வ-ம்) தேவேந்திர மகாராஜனே? இந்தசபையோரை நோக்கி நீர் பிரேரேபித்த பிரசனை, வதிஷ்டராற் பூர்த்திசெய்யப்பட்ட படியா லவருக்கு யாவரும் வந்தனஞ்செய்து, அவரளவ ளிருப்பிடம்போக விடைதாரு மிந்திர லோகாதிபரே.

(தேவே-வ-ம்) அப்படியே செய்விப்ப தெனக்குச்சரியாய்த் தோற்றுகின்றது, நாரதமகாமுனியே? சபையோரெல்லாம் வதிஷ்டருக்கு வந்தனந் தாருங்கள் கனவான்களே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

வதிஷ்டனும்வாய்க்குவந்த வாறுபோலுளறித்தீர்த்தான்
வதிஷ்டனேசத்தியமூட்டை வாய்த்ததோர்சீடனென்றால்
வதிஷ்டனைவிடமேலானேன் வளர்சபைதனிலேநீரும்
வதிஷ்டனைவணங்கச்சொன்ன வாறதுதடுப்பீர்வேந்தே.

(விஸ்-வ-ம்) தேவேந்திர மகாராஜனே? வதிஷ்டனே சத்தியமூட்டை, அவனுடைய சீடனே அவனைவிடப் பெரியமூட்டை, அப்படிக்

இருக்க அவனுளறியதைக் கேட்டு மகாசபையிலுள்ளோரை வந்தனஞ் செய்யச் சொல்வது தகாதகாரியம் வேந்தே.

நாரதர் விருத்தம்.

கவுசிகமுனிநீசொன்ன காரியமொப்பப்போகா
தவசினிலுயர்ந்தோன்வாக்கு தாழுண்டோவுனக்குப்பேச
வவசியக்காரணங்க ளகப்படுமாகிலிங்கே
நவசிகாமணிமுன்பாக நயம்பெறநவிலுவாயே.

(நார-வ-ம்) விஸ்வாமித்திர முனியே? வசிஷ்டர்வாக்கு பிசகிராது, [illegible]கேதாகிலுங் காரணமிருந்தால், வெளியிடுவாய் ரிஷியே.

(விஸ்-வ-ம்) அப்படியே வெளியிடுகிறேன் பாரும் நாரதரே, ஓய் வசிஷ்ட மாமுனியே? நீர்சொன்ன குணங்களந்த அரிச்சந்திரனிட மிருப்பது மெய்தானமுனியே?

(வசி-வ-ம்) நான்சொன்ன குணங்களைவிட இன்னமதிக முண்டென் றறிவீர் விஸ்வாமித்திரமுனியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

வேங்கையிலாக்காட்டினரி வேந்தனெனுங்கதையுன்றல்
விளங்கக்கண்டேன்
சாங்கமிலானருளில்லான் மாபாவிபொய்வாயன்
சருவவேறு
பாங்கியரைப்பிடித்திழுப்போன் சத்தியமிலானெக்கியரை
பதைக்கக்கொல்வோன்
ஈங்கையோநீயயோத்தியனை மேலோனென்றுரைதைமதிக்கப்
போமோதானியம்புவாயே.

(விஸ்-வ-ம்) ஆ! ஆ! ஆ! வெகுநேர்த்தி! புலியில்லாதகாட்டில் நரியே துரையெனுங்கதைபோலாச்சுது, அந்தவரிச்சந்திர னதிகபொய்யன், அசத்யன், அன்னியமாதரை பலவந்தமாய்ப் புணர்வோன், இரப்பவற் கீயாலோபி, கொடியன், கோபி, நிர்மூடன், தேவதாபக்தி யில்லாதவன், அப்படிப்பட்ட வீணனை யிந்ததேவசபையில் மேலோனென்றுரைதையார்தான்மெச்சுவார்போதும்போதும்வசிஷ்டமாமுனியே.

வசிஷ்டர் விருத்தம்.

நீதிநெறியுள்ளோனையிச்சபையில் நீதானும்
நினைவஞ்சாமல்
ஓதினைப்பொய்யனென்றுஞ் ஜாரனென்றும்
லோபியென்று மொடுக்கம்விட்டே,

வேதனையாந்தோஷம்வருந்தெய்வஞ்சீறும்
விண்ணுமண்ணுமுன்றனையேவிரும்பாதையோ
சாதனைகள்பேசாதேபாவஞ்சேருஞ்
சாற்றுவேனவன்மெய்யன் சரிதான்பாரே.

(வசி-வ-ம்) கவுசிகமுனியே ? அரிச்சந்திரனை பொய்யன், லோபி, ஜாரனென்று, பலவாறிகழ்ந்தா யிதுதெய்வத்திற் கேற்காது, பாவஞ் சம்பவிக்குமவனே சத்தியனென்று நம்புவாய் ரிஷியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

மெய்யனைப்பொய்யனென்றால் மிருத்திவதாகுமன்றி
பொய்யனைச்சொல்வதாலே பொருந்துமோவெனக்குத்தோஷம்
வையகந்தனிலேநீதான் வருத்தவன்கொடியன்கண்டாய்
பையவேவதிஷ்டாவிந்தப் பதிவிட்டேயேகுவாயே.

(விஸ்-வ-ம்) ஓய் வதிஷ்டமாமுனியே ? மெய்யனைப் பொய்யனெனி ல் பழி பொய்யனைச்சொல்லில்குற்றமில்லை, அந்த அரிச்சந்திரனுமகா பாவி யவனை நீ புகழ்ந்தாவிந்த சபையைவிட் டகலப்போவாய்ரிஷியே

வதிஷ்டர் விருத்தம்.

அலைகடல்பொங்கினாலு மவனியுமழிந்திட்டாலும்
நிலைதப்பிரவியுந்திங்கள் நீள்கிரகம்பிசகிட்டாலுங்
கலைநான்குபொய்த்திட்டாலுங் கயிலையன்வருந்தினாலும்
புலையிலாவரிச்சந்திரன்றான் பொய்சொல்லாப்புநிதன்காணே.

(வதி-வ-ம்) கவுசிகமுனியே ? வேதம்பொய்த்தாலும், சூரிய சந்திர நவக்கிரகங்கள் கதிதப்பினாலும், ஈசனொருவேளை விரும்பினாலுமென் சிஷனாகிய அரிச்சந்திரன் பொய் சொல்லானென் றறிவாய்ரிஷியே.

விஸ்வாமித்திரன் கண்ணி.

இராகம்-மோகனம், தாளம்-சாப்பு.

பொய்சொல்லானென்றுமே தெய்வச்சபையில்வந்து
புகழொணாப்பேச்சுகள் பேசுறாய் மெத்த
விகழானவீச்சுகள் வீசுறாய் உன்றன்
புத்தியுமவனுடை சத்தியதருமமும்
போதும்போதறிகுவேன் வதிஷ்டா.

வதிஷ்டர் கண்ணி,

இராகம்-காம்போதி, தாளம்-சாப்பு.

சத்தியந்தருமமுந் தண்மையுமறியாமல்
சாதனைப்பொய்களேன் பேசுறாய் சர்வ

சாதகனைப்போலேன் வீசுறாய் இந்த
சாருமண்ணினில்நிகர் வேறொருவனாயிங்கு
சாற்றப்போகாதறி கௌசிகா.

விஸ் - அறியாமற்சொல்வனோ வன்பில்லாதவனென்
றகமதிலுணராமற்கொள்ளுறாய் வேறு
ஜகமதிலிலையென்றுதுள்ளுறாய் அடா
ஆ! ஆ! ஆ! ஆச்சர்ய மவனுக்குநிலையேது
அறமேதுதவமேது வஸிஷ்டா.

வஸி - அறமில்லானென்றுமே யறையச்சூதுவாது
மளவில்லாப்பொய்கற்றாய் முனியே அவன்
உளந்தெரியாமலே தனியே ஆ! ஆ!
ஆட்டாதேயுன்னாவைக் காட்டாதேமௌடீக
வவனைப்போனீயாகாய் கௌசிகா.

விஸ் - காட்டாதேநீயென்றாய் காட்டில்வாழ்மிருகத்தை
கருதிக்கொலைபுரியும் நேமி சத்திய
சுருதியுணராத காமி அவனை
கம்பீரனென்றுமே வம்பிங்குரைக்கிறாய்
கட்டுவுன்மூட்டையை வஸிஷ்டா.

வஸி - வம்போவவனாட்டில் வாழுங்குடிகளெல்லாம்
வண்ணமுளசத்ய வான்கள் தர்ம
எண்ணமிடும்புத்தி மான்கள் மன்னன்
வாய்பிசகாதவன் நீயதையுணர்ந்துமே,
வணக்கமாயொடுங்கிப்போ கௌசிகா.

விஸ் - ஒடுங்கச்சொன்னாய் நீதி யுடன்முன்கோபிமெய்யை
யுணராதவெகுதுஷ்டப் பாவியை பலர்
வணங்கப்பேசுங்கெட்ட காவியை ஓகோ
ஓதிடவிங்குமே கோதிலாதவனென்று
உன்குருசொன்னதோ வஸிஷ்டா.

வஸி - குருமொழியென்றாயுன் அரசுமைந்தர்கணீதி
கோலமென்னாலல்லோ போச்சு இப்போ
ஜாலங்கற்றாயிது ஏச்சு அடா
கோவிக்காமன்னனைப் பாவியென்றாயுன்றன்
கொள்கையுந்தெரிந்திட்டேன் கௌசிகா.

விஸ் - தெரிந்திட்டேன்நீதேவ காசிமைந்தனென்றுந்
தேடிச்செம்மாரியைப் புணர்ந்தாய் மனம்

வாடிநின்றுமிதை யுணர்ந்தாய் அடா
தேசமிகழவுன்றன் பாசமக்களைநீரும்
தீய்த்தவனானல்லவோவதிஷ்டா.

வதி - தானுய்ச்சிவம்நின்ற ஸ்தானமறிந்திடுந்
தனைமையுனக்குண்டோ நாயே தேவர்,
நகைக்கிறார்மூடவுன் வாயே அவன்
தன்மையையுணராமல் புன்மையாயுளறாதே
தாழ்ந்துன்பௌசுபோங் கௌசிகா.

விஸ் - போமென்றுரைத்திட்ட தாமதம்போக்காத
பொய்யனேயுன்வாயை மூடடா நீ
உய்யுமிடமெல்லாங் காடடா அவனை
பொய்பேசச்செய்துநான் வையகமிசழ்ந்திடப்
புரிகுவேனுன்னையேவதிஷ்டா.

வதி - புரிகுவேனென்றென்முன் சரியாகநின்றுமே
பூச்சிகாட்டாதேடா நீயே அடா
சீச்சீயோடிப்போடா பேயே துஷ்டா
போக்குநீக்கறியாத காக்கைப்பிறவியுற்ற
புத்தியீனனான கௌசிகா.

(வதி-வ-ம்) வார்த்தைக் கெதிர்வார்த்தைகள் பேசுமுனியே? இச் சபையை விட்டப்புறம் போவதிலுனக்கு மெத்தகுணமென் றறிவாய் விஸ்வாமித்திர முனியே.

## விஸ்வாமித்திரன் விருத்தம்.

போவெனச்சொன்னாய்நல்ல புத்தியில்லாதபேயா
தாவிநானவன்பாற்சென்று தழுவியேயநேகம்பொய்யைக்
கூவவேசெய்வேன்மெத்த கொலைகளும்புரியச்செய்வேன்
பாவனேயுனக்கேவெட்கம் பலிக்கவுஞ்செய்வேன்காண்பாய்.

(விஸ்-வ-ம்) ஓமுனியே? நான்போயந்த வரிச்சந்திரன்வாயி லனேகம் பொய்களைவரச் செய்வதுடன்கூட, அனேகதுட்ட கிருத்யங்களுஞ் செய்வித்து தேவர்முன்னிலையிலுன் மானங்கெடுப்பேன் தெரிகுவாய்

## பொது விருத்தம்.

வதிட்டனும்விஸ்வாமித்திரன் வழக்கிட்டுசினமேற்கொண்டு
அதட்டியேபேசியேசி யறைவதைக்கண்டேயிந்திரன்
பதட்டமாய்நடுங்கியோடி பண்புடனிருவர்தம்மை
யுதட்டைடையுமுடிமத்யே யோதுவான்கீதிதானே.

(போது-வ-ம்) சபையோர்களே? வஷிஷ்டனும் விஸ்வாமித்திரனும் வழக்காடக்கண்ட தேவேந்திரனோடிப்போய், சமாதானஞ் செய்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

தேவேந்திரன் தரு.

இராகம்-அடாணா, தாளம்-ஆதி.

பல்லவி.

போதும்போதும் பொறுங்கள் முனிவர்களே
பேர்புரியாதிருங்கள்.

அநுபல்லவி.

வாதுபுரிவதுங்கள் வண்மைக்கடுக்குமோதான்
ஏதித்தனைகோப மிருவருங்கொண்டீர்கள். (போ)

சரணங்கள்.

பஞ்சேந்திரியங்களைப் பழுதாகவேயொடுக்கிப்
பாரமதங்களெல்லாம் பரந்தோடவேமுடுக்கி
நெஞ்சிற்சிவனடியை நிறுத்தித்தவம்புரிவோர்
நிகழ்த்தொணுவீணர்போல் நின்றெதிரிடப்போமோ. (போ)
மூவாசையெனும்மரம் மூளைக்காமலடிகிள்ளி
மோடிவீம்புவம்பும் முதலுருமலேதள்ளி
ஆவாகனமாக வனுதினம்பிரமத்தை
அடுத்துப்பணிந்திட்ட வருமையுமிதுதானோ. (போ)
ஒருவற்கொருவர்மேலா யுணர்ந்தவர்மூலத்தை
ஓகோவினிநீங்க ளுகமறவீர்கோலத்தை
தருமதேவதைகூட தழைப்பதுமுங்களாலே
தாபந்தவிர்த்துசுபந தாவுவீர்வாக்காலே. (போ)
அண்டமெலாம்நடுங்க அதிர்ச்சியாய்பேசுறீர்
ஆ! ஆ! ஆ! கோபத்தா லாக்ரிஷம்வீசுறீர்
தெண்டம்புரிவேனீங்கள் தவிர்த்திடுவீர்வாதை
தேவர்கள்மதியாரோ சிரமுடிக்கேபணிந்தேன். (போ)

(தேவே-வ-ம்) முனிவர்களே? உங்கள்கோபத்தைத் தணித் திந்த ஆசனங்களிலிருப்பீர்கள் ரிஷிகளே.

(வஷி-வ-ம்) அப்படியே யிருக்கின்றேன், தேவேந்திர மகாராஜனே.

நாரதர் விருத்தம்.

தத்துவத்தின் றற்குணத்தை நீக்கியேமெய்ஞ்ஞானந்தனைச்சேருஞ்
சித்தருக்குள்சிறந்தவரே யிவ்விதமாய்ச்சினங்கொண்டு சேறல்மோ

வுத்தமனோவரிச்சந்திரன் மத்தியனோவிங்குள்ள வும்பர்கேட்க வித்தலத்திலிருந்தபடி யோர்நிலைமைகுறிப்பாகவியம்புவீரோ.

(நார-வ-ம்) வசிஷ்டரே? விஸ்வாமித்திரரே? அந்தவரிச்சந்திரன் பொய்யனா? அல்லதுமெய்யனா? யாரொதைத் திர்மானிக்கிறீரா வதற்காக ஓர் நிலையானவாக்கு சொல்வீர்கள் முனிநாதரே.

(தேவே-வ-ம்) சபையோர்களே? நாரதர்சொன்னதே சரியானதாகத் தோற்றுகின்றது, உங்களுக்கு தோன்றுங்கருத்தை வெளியிடுவீர்கள் கனவான்களே.

(சபையோர்-வ-ம்) தேவேந்திரமகாராஜனே? நாரதர்சொன்னதே யெங்களுக்கும் யுக்தமாகத் தெரிகின்றது இராஜனே.

தேவேந்திரன் விருத்தம்.

ஐயரேவசிஷ்டமூர்த்தி யரிச்சந்திரன்மெய்யனென்றே
ஐயரேயுரைத்தீர்பொய்யென் றறைந்தனர்விஸ்வாமித்திரர்
ஐயரேயுமதுசீட னருமையாம்பொய்புரைக்கில்
ஐயரேசொன்னவாக்கு மழியுமோவிலையோசொல்வீர்.

(தேவே-வ-ம்) சுவாமி வசிஷ்டரோ? உமதுசீடனாகிய வரிச்சந்திரனொருவன் தான் பூலோகத்தில் மெய்யனென்றிந்த தேவசபையின் முன்சொன்னீர், அவனைப் பொய்யனென்று விஸ்வாமித்திரரிஷிவெளியிட்டார், அப்படிக்கவன் பொய்சொல்வானாகி லுமதுவாக்கு பிசகோ அலவோ சொல்வீர் சுவாமி.

வசிஷ்டர் விருத்தம்.

தண்ணொளிகொள்ளரிச்சந்திர மகாராஜன்றன்குணத்தை
தடைகளின்றிக்
கண்ணொளியாயிரமுங்கொண் டோய்கவுசிகனுஞ்சோதிக்கக்
கனிவுகூர்வாய்
திண்ணொளியேபொய்புரைக்கிற்றவங்கலைந்துமுடிகளைந்
தென்சிரசின்மீதி
லெண்ணொணாமதுக்குடத்தையேந்திபலர்நகைக்கத்தெற்
கேகுவேனே.

(வசி-வ-ம்) தேவேந்திர மகாராஜனே? அந்தவரிச்சந்திரன் வாயால் விஸ்வாமித்திரனொரு பொய்வரச் செய்வானாகில், நானென் தவவேடத்தைவிட்டு, முடியைச் சிரைத்தெறிந்து, கள்நிரப்பியபாண்டத்தைத் தாங்கி, பலரும்நகைக்கத் தென்றிசைநோக்கிச் செல்லுவேனறி, இது சத்தியம்மகாராஜனே.

(சபையோர்-வ-ம்) ஆ! தேவர்கோனே? வசிட்டர் பெருத்த சத்தி

யஞ் சொன்னார், கேட்ட எங்கள் மனமெல்லாம் நிலேகுலேந்தது, இனி விஸ்வாமித்திரருடைய கருத்தைவெளியிடச் செய்வீர் மகாராஜனே.

(தேவே-வ-ம்) அப்படியேவெளியிடச்செய்கின்றேன்சபையோரே

தேவேந்திரன் விருத்தம்.

அண்ணலேவிஸ்வாமித்திர வன்பரோவதிட்டர்தானுஞ்
சொன்னதைக்கேட்டீர்யாருஞ் சொல்லொணுச்சத்யங் கொண்டார்
விண்ணருந்திசைத்தாரந்த வேந்தனும்வாயாற்பொய்யை
பன்னவேதவர்வாஞகிற் பகருவதெதுவோகாணேன்.

(தேவே-வ-ம்) விஸ்வாமித்திரரோ? தேவசபை நடுங்கிட வதிஷ்டர் சொன்னசபதங்கேட்டீரோ? நீர் தவறிப்போகாமல் அரிச்சந்திரனைப் பொய் பேசச்செய்வீரோ? சொல்லுவீர் முனிவரே?

விஸ்வாமித்திரன் விருத்தம்.

மன்னனரிச்சந்திரனைமடக்கிவெகுபொய்யுரைக்கமகிபாசெய்வேன்
மன்னவனுமெனைக்கெலித்தானினிநாட் புரிந்ததொருமகாதவத்தில்
மன்னவனுக்கதிற்பாதிதாரைசெய்வேன்வதிட்டனுக்குமடங்கிநிற்பேன்
மன்னவனேயிச்சேதிநரபதிக்கேகிட்டாத மார்க்கஞ்செய்வீர்.

(விஸ்-வ-ம்) தேவர்கோனே? அரிச்சந்திரனை அனேகம்பொய்பேசச் செய்வேன், தவறுவேனுகில் என்றபோபலத்தில் பேர்பாதியவனுக்குத் தாரைவார்த்து, வதிஷ்டனுக்குப் போற்றிசெய்வேன், ஆனலிங்கு நடந்தசங்கதி யவனுக்கெட்டாத வாறுசெய்யக் கோருகின்றேன் இராஜே

(தேவே-வ-ம்) அப்படியே கிட்டாதபடிக்கு, வேண்டிய முயற்சி செய்கின்றேன் விஸ்வாமித்திர முனியே.

தேவேந்திரன் விருத்தம்.

தேவரேகேளீர்சித்தில்தெளிவுளமுனிவரோநீ
ரேவுமொரிடமிச்சேதி யியம்பிடிற்றுரோஷஞ்சுற்றும்
மேவியேநேசத்துரோக மிழைத்தவன்புகுங்கதிக்கே
தாவியேவாழ்வீரெந்தன் தன்னியரேசத்தியந்தானே.

(தேவே-வ-ம்) சபையிலுள்ளோரே? இந்ததேவ இரகசியத்தை வெளியிட்டவர்களுக்குத் தோஷஞ்சம்பவிக்குந்தவிர, சினேகத்துரோகஞ்செய்தபாதகன் போகும்படியான கதியடைவார் கனவான்களே.

(சபையோர்-வ-ம்) தேவராஜனே? சிவசிவா, நாங்களுந்தாக்கினைக் குஞ்சத்தியத்திற்குமுள்ளானோம், வெளியிட கவனிக்கோமரசே.

வதிஷ்டர் விருத்தம்.

வல்லபமுயர்ந்தவிண்ணோர் வாதியேயுரைக்கக்கேளீர்
புல்லறிவுளோனிவன்றன் பொருந்திரனைவெளியேசென்றல்

சொல்லருஞ்சேதிதன்னைச் சொன்னதாய்ப்பழியுரைப்பான்
கல்லதைக்கொய்தோய்தேவர் காவலிலெனைவைப்பாயே

(வசி-வ-ம்) தேவர்கோனே ? நான்வெளிசென்றால் நானே சொன்னதாகப்பழிபேசுவான் விஸ்வாமித்திரன், ஆனதாலென்னை தேவர்கள் காவலில்வைத்திடுவீர் வேந்தனே.

(சபையோர்-வ-ம்) தேவேந்திர மகாராஜனே ? அந்தப்படிசெய்வது மிக நலமாய்த் தெரிகின்றது, அதின்பேரிற் றங்கள்சித்தம்மகாராஜனே.

(தேவே-வ-ம்) சபையோர்களே நானப்படியேசெய்விக்கின்றேன்.

## தேவேந்திரன் விருத்தம்.

ஆரடாகட்டியக்காரா வரன்றவந்தனிலுயர்ந்த
தீரராம்வதிட்டர்தம்மை தெரிவாயென்விடையிலாமல்
வேறொருவிடத்திற்கேகி யிக்குற்றமொழிபேசாமல்
வீரமாய்க்காவற்காக்க விதித்தனுக்கினைகாண்பாயே.

(தேவே-வ-ம்) அடாகட்டியனே ? இந்தவதிஷ்ட மகாமுனிவரை யென்னுடைய வுத்தரவன்றி யொருவருடன்பேசாமலும், வெளியே புறப்படாமலுஞ் சிறையில்வைத்துக் கடின மானகாவல் புரிவாயடா.

(கட்-வ-ம்) அப்படியே அதிஜாக்கிரதையாய்க் காக்கின்றேன் தேவேந்திர மகாராஜனே — சுவாமி ? வாரும் வதிஷ்டமூர்த்தியே.

(வதி-வ-ம்) அப்படியே வருகின்றேனப்பா கட்டியனே !

(கட்-வ-ம்) சுவாமி ? இந்த அறையி லிருக்கவேண்டும், யாருடனும் பேசப்போகாது, தேவர்கோனுக்கிணைப்படி நானுங் காவல் காக்கின்றேன் போற்றி போற்றி முனிநாதா.

(வதி-வ-ம்) அப்படியே யிருக்கின்றேனப்பா கட்டியனே.

## விஸ்வாமித்திரர் விருத்தம்.

சேனாதிபதியேபோற்றி செங்கண்மால்வருணாபோற்றி
வானாதிநவக்கிரகத்துள் வலுமைசுக்கிரனேபோற்றி
தானாகநீதிகண்ட தருமனேதேய்வேபோற்றி
நானுடுங்காலம்வந்தால் நலந்தாவரமீவீரே.

(விஸ்-வ-ம்) சுவாமி சுப்பிரமணியரோ ? திருமாலே ? வருணரோ ? சுக்கிரரோ ? அக்கினிதேவரோ ? எமதர்மரோ ? நானென்றுவேளைதங்களைக் கவனித்தாலடியேன் முன்தோன்றி, என்கோரிக்கை யீடேற்றுகிறதாக அபய அஸ்தங்கொடுக்கவேண்டுந் தேவர்களே.

## தேவர்கள் விருத்தம்.

மிக்கநற்றவங்கள்செய்யு மித்திரமுனியேவாழி
பெக்கணந்தனிலேநீர்தா னெங்களைநினைப்பீராகில்

முக்யமாய்வருவோம்நீரு முனைத்திடுக்காரியத்தின்
பக்குவமறிந்தேசெய்வோம் பணித்தசொற்பாதுகாப்பீர்.

(தேவர்கள்-வ-ம்) விஸ்வாமித்திரரே ? எங்களில்நீர் யாரைக் கோரி னும் தடையின்றிவந் துமது மனக்கோரிக்கையை யீடேற்றுவோ மிதை நம்புவீர் முனியே நின்சபதத்தின்பேரில் ஞாபகமிருக்கட்டும்.

(விஸ்-வ-ம்) சுவாமிகளே ? மெத்தசந்தோஷமினி வஷிஷ்டனைவெகு சீக்கிரத்திலவமானப் படுத்திவிடுகிறே னீங்களேபார்க்கப்போகிறீர்கள்.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

மங்கையிந்திராணிபாகா மன்னவனாயினாலே
சங்கையில்லாமற்பொய்யைச் சாற்றிடச்செய்வேனின்ன
மிங்கிதக்கொலைசெய்விப்பே னியம்பியபந்தயத்தைப்
பொங்கமாய்ச்செலிப்பேன்போகப் புனிதனேவிடையீவாயே.

(விஸ்-வ-ம்) தேவேந்திர மகாராஜனே ? நான் அரிச்சந்திரனை படாதபாடுபடுத்தி, பொய்யுடன் கொலை, ஜாரத்வமும், புரியச்செய்து வஷிஷ்டனை யவமானப்படுத்துகின்றேனெனக்குப்போகவிடைதாரும்.

(தேவே-வ-ம்) அப்படியே போய்வாரும் முனிநாதரே.

(விஸ்-வ-ம்) போய்வருகிறேன் வாழிவாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே ? விஸ்வாமித்திரன் தேவேந்திர னிடம் விடைபெற்று வருகிறவழியில் சனிபகவானைக்கண்டு சகலமுந் தெரியச்சொல்லி தனக்குத் துணையாக விருக்கும்படி கேட்டுக் கொள் ளுகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

(விஸ்-வ-ம்) போற்றி போற்றி, சனிபகவானே போற்றி.

சனிபகவான் விருத்தம்.

தேகத்தைநிலைநிறுத்த திவ்வியரூபன்மங்கை
பாகத்தோனடியைநாளும் பணிந்திடுமுனியேயேது
ஏகனாய்ச்செல்லலானீ ரினிமுகங்கருகலேனோ
யோகனேயெனக்குத்தோன்ற வொளியாமலுரைசெய்வீரே.

(சனி-வ-ம்) விஸ்வாமித்திரமுனியே ? நீர்தனிவழியாய் முகம் வாடியேதோ யோசனையாய் நடப்பதைப்போல் காணுகின்றது ஒளி யாமலெனக்குச் சொல்லும் இரிஷியே.

விஸ்வாமித்திரர் அகவல்.

சொல்லெனக்கேட்ட சூரியன்புதல்வா
வள்ளலாமித்திரன் வளர்சபைசென்றேன்
தேவருமுனிவர்கள் திரளுடன்வஷிஷ்டன்
பாவலர்யாவரும் பண்புடன்வந்தனர்.

நாட்டியமாதரும் நலமுடனடித்தபி ன்
மேட்டியுமுலகினில் மெய்யனுண்டோவெ ன
வசிஷ்டனுமயோத்தி வளர்பவனென் று
பதட்டமாயுரைக்கப் பார்த்திபன்மகிழ்ந் தே
சபையிலுள்ளோரை சற்குணமுனிக் கே
நிடம்பெறவந்தனம் நிகழ்த்திடவுரைந்தா ன்
நானதுபொறுமல் நாயகாவயோத்திய ன்
ருன்பொய்யனென்றேன் றவவதிட்டனு மே
அரிச்சந்திரனைப்பொய் யறைந்திடச்செய்தா ற்
றரித்தவிவ்வேடந் தள்ளிகள்ளேந்துவே ன
என்றனைனென்னை யேறிடவிந்திர ன்
நன்றதுபொய்சொல நான்செய்குவேனதி ற்
றவறுவேனாகிலென் றவத்தினிற்பா தி
நவருணதிரிசங்கு நற்புதல்வனுக் கே
தருகுவேனென்றே தமியனுஞ்சாற்றி யே
வரும்வழிதனிலுன் வளரடிகண்டே ன்
எப்படியாமோ வேந்தலோசத்ய ன்
அப்பனேயெனக்குமுன் னருளதையளிப்பீ ர்
அல்லலையற்றுப்பி ரடியனைக்காப்பீ ர்
வள்ளலேயுன்றன் வாக்கருள்போற் றி.

## சனிபகவான் விருத்தம்.

முனியேநீவருந்திடாதே முன்னேக்கியவண்டாற்செல்வாய்
முனியேயுன்றுணையாய்நிற்பேன் மூர்க்கனைவாட்டிவாயால்
முனியேபொய்சொல்லச்செய்வாய் முனையுமுன்காரியத்தில்
முனியேநீவிழைசகாய முகந்துநான்செய்வேன்வாழி.

(சனி-வ-ம்) விஸ்வாமித்திரமுனியே! அரிச்சந்திரன் நம்முடைய கைக்குளானவன்றான் அவன்வாயிலொருபொய்வருவிப்பதொருபெரிதா! நீ செய்யும்படியான பிரயத்தினத்திற்கெல்லாம் நானுஞ்சகாயமாயிருந் துனதுமனம் மகிழச்செய்கின்றேனஞ்சாதேயும், வாழி வாழி.

(விஸ்-வ-ம்) மகாசந்தோஷம் போய்வருகின்றேன் சனிபகவானே.

## இந்திரகாண்டம்.

சம்பூரணம்.

சுப்ரமண்யன் சகாயம்.

---

தி-தி-அப்பாவு  பிள்ளை.

ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோத சபை.

# அயோத்தியாகாண்டம்.

## பொது விருத்தம்.

சுரபதியின்சபைவிடுத்துக் காரியோடு
சொல்விமுறைகௌசிகனுமகிழ்ச்சிகொண்டே
நரபதியாமரிச்சந்திரன் றன்னைவாட்டி
நாவிலொருபொய்விளைக்கக் கருதியங்கே
விரவுடனேயயோத்தி தனையடையவேண்டி
வீம்புற்றுத்தானடந்தே யிமயமென்னும்
பருவதத்தின்சாரலுற்று னயோத்தியாளும்
பரிதிமன்னன்கொலுச்சீர்மை பகருவேனே.

(பொது-வ-ம்) சபையோர்களே ! இவ்வாறு விஸ்வாமித்திரன் சனி பகவானிடம்விடைபெற்று, சத்துசித்தானந்த பரஞ்சோதியை சதா மனதினிடத்தி லிருத்திய சத்தியபாஷ அரிச்சந்திரமகாராஜன் திருவாயின்கண்ணிருந்து தேவசபையிற் பந்தயமிட்டவாறு ஒரு பொய்வரவழைக்கு நிமித்தம் என்னுந எண்ணங்கொண்டவனாய் இமயமலைச் சாரல் சேர்ந்தான், இனி அரிச்சந்திரமகாராஜன் கொலுவின்வண்மையைப்பற்றிக் கவனிப்பீர்களவான்களே.

## கட்டியன் வருகிற பொது தரு.

இராகம்-தோடி, தாளம்-ஆதி.

பல்லவி.

கட்டியக்காரன்வந்தான் - வெகுவுன்னத
அதிகன்னதமாகவே. (கட்)

அநுபல்லவி.

எட்டுத்திசைகளெல்லா மேகக்குடைக்குளாக்கும்
இறைவனரிச்சந்திர னெழிற்கொலுவாயற்காக்கும். (கட்)

சரணம்.

நீறுநுதலணிந்து செடியவங்கியுந்தொட்டு
நிகரில்லாமதிப்புள்ள நேராபரணமிட்டு
கூறும்பகைஞரெல்லாங் கொள்ளப்பயத்தையிட்டு
கொடியவாயுதமீட்டி கூர்வாளுடனேயெட்டு
கோணம்நடுங்க வறிவிலா வீணரோடுங்க
குதித்து அற்பரை மிதித்து புரணியைச்
சதித்து துரும்பதாய் மதித்து களிப்புடன்
கொக்கரித்தேயரசன் மிக்கப்புகழைப்பாடி
தக்கவிநோதசபை யெக்காலம்வாழநாடி. (கட்)

## பொது விருத்தம்.

திருபுரத்தையெரித்தவனுய்திகழ்சடையிற்கங்கைமதிமுடியணிந்த
வரியயனுங்காணுதபெரும்பொருளாஞ் சிவமதனையகத்திற்கொண்டோ
கரிமுகிலோனிடபாகம்வாழ் தேவிமனமகளித்தேகருதியாடப் [ன்
பரிதிகுலதிலகனெனுஞ்சத்தியபாஷுவரிச்சந்திரன்பாரீர்வாரார்.

(பொது-வ-ம்) சபையோர்களே? நீதிநெறிபிசகாமல், சதாகாலமு
ங் காணுதற்கரிதாகிய பரமசிவத்தை மனதினிடந்துதித்து, செங்கோ
ற்செலுத்தாநின்ற அயோத்தியாபுரி ஏக சக்ரேஸ்வரனுகிய பொய்யா
அரிச்சந்திரமகாராஜன் சபைக்குவருகிறவிதங்காண்பீர்கள்.

## அரிச்சந்திரராஜன் வருகிற பொது தரு.

இராகம்-கல்யாணி, தாளம்-ஆதி.

பல்லவி.

இராஜராஜனுனராஜனயோத்தியாளும்
இராஜாதிராஜன்வந்தான் - கொலுவிருக்க
இராஜாதிராஜன்வந்தான்.

அநுபல்லவி.

தேசதேசாதிமன்னர் திருவடிபோற்றிசெய்ய
ஜெயஜெயவென்றுவீரர் செப்பமலர்கள்பெய்ய
வாசவரமரர்கள் வாழ்த்தியாசிகட்கூற
மந்திரிபிரதானிகள் மகிழ்ந்திருபுறஞ்சார
வஞ்சிய ராட தேவி கொஞ்சியே நாட பகைஞர்
அஞ்சியே ஓட வேத மிஞ்சிய பாட இவ்வ



Sequence of pages changes from this page

வாகுவலயமுடன் பாகுபுஜகிருது
ஆகுமனத்தை யுத்தாங்கி லாகுமன்னர்கைகொடுக்க. (இரா)

சரணம்.

சத்தியமாதுதனைச் சாரக்கைகொண்டசூரன்
சர்வுதாவரனடி சரணம்பணியுத்தாரன்
நித்தியகருமத்தில் நிலைபிசகாதகடீரன்
நேமநிஷ்டைபுரிய நிதியளித்திடுந்தீரன்
நீதியுறிந்தமாரன் வேத
மோதித்தெரிந்தவீரன் லோக
ஆதியுணர்ந்தசீரன் ஜீவ
ஜாதிமகிழ்ந்தசூரன் எங்கும்
நிலைக்க வமரரு மிலைக்க வறமெங்கும்
உலைக்கப் பவத்தொழிம் சிலைக்கச் சதுர்மறை
பத்தினிசந்திரவதி பாகம்வாழ்மெய்யாரன்
பாரில்தளக்குநிகர் பதாக்கிட்டாதமாரன்-சிவ
பாதங்கண்டநீதன் சகல நீதங்கொண்டசாதன்-வெகு
நாதமூண்டபோதன் கீர்த்தி காதநின்றமேதன்
பண்ணவர் மன்னவர் பன்னவர் மன்னவர்
பணியப்புகழ் விடித்து தணியமன் முடித்து
இனியவிசை படித்து தொனியதுவாய்நடித்து
பத்திபூனைந்தகீர்த்தி பணிகுடைபிடிவீரன்
பலபுலவெகுமதி பாவலர்க்களிக்குந்தீரன்
பாட திசைகளெங்கும் ஆட தருமமாது
நாட முனிவர்வந்து கூட பார்க்கொளுத
பகுபகுவிடங்களில் பகுதிகளிலங்கிட
பரிதிவொளிபோல்ரத்ன பணிமுடிதுலங்கிட
பண்டு குடிகடனைக் கண்டு சிவனருளைக்
கொண்டு சரிவருஷம் விண்டு பொழியச்செயும். (இராஜ)

## அரிச்சந்திரராஜன் போற்றி விருத்தம்.

புவிமேலாம்புகழ்ந்துவாழ்க பூச்சக்ரக்குடையும்வாழ்க
கவிபுலவாணர்வாழ்க கனிந்துமென்குடிகள்வாழ்க
தவிழிஷ்டிமுனிவர்வாழ்க தருமறைவேதம்வாழ்க
வீரவிகுலமோங்கிவாழ்க விரட்சித்தேயாள்வாய்போற்றி.

## சத்தியகீர்த்தி போற்றி விருத்தம்.

அந்தரசுவர்க்கமுற்ற வண்ணலாந்திரிசங்கின்ற
எந்தனையாண்டவனேபோற்றி யினியுடனயோத்தியாளுஞ்
சுந்தரகுணனேபோற்றி சொல்லொணுமெய்ம்மைபூண்ட
கந்தனன்மலனைப்போன்ற கழலடிக்கடியேன்போற்றி.

## சற்குணமந்திரி போற்றி விருத்தம்.

ஆதியைமனதினூட்டி யறமதுவிளங்கவெங்கும்
நீதியைநிலைநிறுத்தி நிலமதில்மாரிகாலம்
பேதியாப்படிதான்பெய்ய பிரியமாய்க்குடிகள்வேத
மோதியேவாழகாக்கு மும்பனேநின்றாள்போற்றி.

## கட்டியன் கட்டியம்.

சத்தியம்வழுவாம லுலகதையாளுமென்
சாமியேவெகுபராக்கு
சாந்தமாய்க்குருமொழி தப்பாமலேயொழுகுஞ்
சார்பனேவெகுபராக்கு
நித்தியநிர்மலநிருபனை யுளமதில்
நினைத்திடும்பதிபராக்கு
நேருடன்மும்மாரி கோரியேபொழிந்திட
நிட்டைபுரிபவாபராக்கு
வெற்றிகொடுகேடயங் கார்முகமணிந்தோர்
வீரனேவெகுபராக்கு
விளங்கவேகதிர்குல மேதினியிலேவந்த
வேந்தனேவெகுபராக்கு
நத்தியேவருகவிஞர் மகிழ்பெறப்பெய்திடு
நாதனேவெகுபராக்கு
நாட்டினிற்பகைவர்க ளுடாமலரசுசெய்
நாயகாவிதுபராக்கு.

## அரிச்சந்திரராஜன் தேசவிசாரணை.

இராகம்-மத்தியமாவதி.

தேசத்தி லாலயப் பூஜைகள் தடையின்றி
தினந் தினம் நடந்தேறுதா ?
சத்—செப்பரியமெய்யனே யொப்பவேபூஜைகள்
செழிப்பாய் நடக்கின்றதே.

இராகம்-சஹானா.

அரி—பாசத்தைநீக்கிய மாமுனிவ ரெக்கியம்
பண்புடன் புரிகிறாரா?
சத்—பரமனைத்தியானித்து பரிவுடனோமங்கள்
பண்பாகவேசெய்கிறார்.

இராகம்-தன்னியாசி.

அரி—ஏர்குடிதழைத்திட மாதத்தில்மும்மாரி
யென்னாட்டிற் பெய்கின்றதா ?
சத்—எங்களாண்டவனேகேள் திங்களின்மும்மாரி
யதேஷ்டமாய்ப் பொழிகின்றதே.

இராகம்-கமாசு.

அரி—பார்மன்னர்தருகின்ற பகுதியதுதடையின்றி
பரிவாகவருகின்றதா ?
சத்—பணிந்துமேபலமன்னர் அவரவர் முறைப்படி
பகுதிகள்கட்டிவாரார்.

இராகம்-அடாணா.

அரி—சதுர்வகை வாணிகள் அவரவர்விதியதைச்
சார்ந்தே நடக்கிறாரா?
சத்—தருமனே யவரவர்கள் கருமத்தின்முறைப்படி
தானடக்கிறார்களையா.

இராகம்-மோகனம்.

அரி—நாட்டினிலந்தணர் வேதபாராயண
நண்பாய்ப்புரிகிறாரா?
சத்—நாதனேவேதியர்கள் பாராயணம்மிக்க
நன்றாகவேசெய்கிறார்.

இராகம்-கேதாரகௌளம்.

அரி—அகிலேக்காரர்க ணிறைகுறைக்காமலே
யளவுடன் விற்கிறாரா?
சத்—ஐயனேதானியம் படிநிறைகுறையாம
லன்பாயளக்கிறார்கள்.

(அரி-வ-ம்) மந்திரி? வெகு சந்தோஷப்பட்டேன், எல்லாம் பரம சிவத்தி னருளாகும். இந்த ஆசனத்தில்வீற்றிருப்பாய் அப்பா.

(பொது-வ-ம்) சபையோர்களே? அரிச்சந்திர மகாராஜன்சபைக்கு [illegible] வருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## நாட்டியப்பெண் பொது தரு.

இராகம்நாதனாமக்கிரியை-தாளம்-ஆதி.

மங்கைவந்தனள் - ஆட-மங்கைவந்தனளே.

அம்மையொத்தவிழியும் நிம்மைநிறத்துடனே
தும்பைநிறமாம்பட்டுங் கெம்புநகைகளிட்டு
ஐம்புதொங்கலுமாட்டி செம்பிரமாய்நடந்து. (ம)

கச்சைகட்டியுமே-இதோ-கச்சை கட்டியுமே
இச்சையுடனேமதன் மெச்சிநயந்துவாட
எச்செகத்துள்ளோரும் தச்செயலாய்நாட
சொச்சபணிபூண்டு பச்சைக்கிளிபோல. (ம)

ஆடவந்தனளே-இதோ-ஆடவந்தனளே
வாடப்பலர்மனமும் தேடவிரகமீறி
பாடப்பலபதமும் நாடவரசன்முதி
கூடமத்தளதாளம் போடவொயில்ராயிதோ. (ம)

## நடனப்பெண் ஜாவளி.

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ஆதி.

தடையேனோ தழுவவே - தகுமோவென்சாமியே.

இடையதுதவளுது ஏக்கமுமாகுது
நடையதுமாறுது நாயகனே. (த)

மோகமுமீறுது மூர்ச்சையாய்த்தோணுது
சோகமுமாகுது சுந்தரனே. (த)

காமனீரோடுது கண்ணொளிமாறுது
தாமசமேனோ சத்தியனே. (த)

## வேறு ஜாவளி.

இராகம்-காபி, தாளம்-ஆதி.

ஏதினிச்செய்குவதே துரை
வாதியாமதனிதோவாட்டுரானெந்தனே. (ஏ)

நீயெனைக்கூடிட நினைக்கவுமாட்டையே
நாயமதோவிதுநயந்து நான்கோரியும்
பிரியமில்லாப்பேச்சானதே துரை. (ஏ)

தென்றலின்வாதையை தெரிவித்துமென்மயல்
தீரத்தகுந்தவொரு கூறுசெய்யாவிடில்
கிருபையில்லாவாறானதே துரை. (ஏ)

இன்றுனேச்சேரவே யெண்ணமாய்வந்துமே
என்றனிருகொங்கையைவந்தீண்டவகைநோக்கில்
இச்சையில்லாப்போறகாணுதே துரை. (ஏ)

## வேறு ஜாவளி.

இராகம்-சுருட்டி, தாளம்-ஆதி.

நாயகாமோகிங்ஙனே நாங்களும்வர்டிடப்போமோ
நயந்துகூடவாராதென்னமோ.

காயமும்வாடுது காமனும்பாவியே
கணையதூவியே கசக்கிறான்தாவியே
வாய்திறவாததும் வகையா வகையா இது. (நா)
ஆலளுந்துமேனியும் தோணுது தோணுது
தூக்கமிரவினில் தூரமாயோடுது
தவமணிகூடிடுந் தகுதி தகுதி யிது. (நா)
சித்தமும்வாடுது சேரவுந்தேடுது
சீக்கிரந்தாவிட சீவனும்நாடுது
நத்திமெந்தனே நலமே நலமே யிது. (நா)

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி? இந்நாட்டியப் பெண்ணிர்க்கு வேண்டியவெகுமதி கொடுத்தனுப்புவா யப்பா.

(சத்-வ-ம்) அப்படியே கொடுத்தனுப்புகிறேன் மகாராஜனே.

### அரிச்சந்திரராஜன் விருத்தம்.

சத்தியகீர்த்திகேளாய் சற்குணதேவதாசன்
வித்தியாப்பியாசஞ்செய்தே வெகுநெறியறிந்ததற்கா
யெத்திசைதனிலுமுள்ள வினியவாதுலர்கடம்மை
சுத்தியிங்கழைப்பாய்தானஞ் சோர்வறக்கொடுக்கத்தானே.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? தேவதாசன், வித்தைகளிற்றேர்ந்த சந்தோஷத்திற்காகத் தானங்கொடுக்க வேண்டியிருப்பதால், யாசகர்களை வரச்செய்குவாய் சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) மகாபாக்கியமப்படியே வரச்செய்கிறேன் மகாராஜனே.

### சத்தியகீர்த்தி விருத்தம்.

ஆடாவாயற்காக்கு மதிவீரக்கட்டியக்காரா
தீரனுமதுராஜன் தினமின்றேயாசகர்க்கு
பேர்பெறதானம்பூரி பெய்கவேபோவதாலே
பூரதிலுள்ளோரெல்லா மொக்கவேவரச்செய்வாயே.

(சத்-வ-ம்) அடாகட்டியனே? நமதுராஜர் இன்றையதினந் தானங் கொடுக்கப்போகிறபடியால் நாடுகளிலுள்ள யாசகர்களையெல்லாந்தேட்டி மூலமாய்பறைசாட்டிவரச் செய்குவாயப்பா கட்டியனே.

(கட்-வ-ம) அப்படியே செய்விக்கின்றேன் ஆண்டவனே, கேளடா

தோட்டி? நமது ராஜன் வெகுதானங் கொடுக்கப் போகிறபடியால், பறைசாட்டி யாசகர்களை வரச்செய்யடா.

(தோட்டி-வ-ம்) அப்படியே வரச்செய்கிறேஞ்சாமி.

தோட்டி தரு.

இராகம்-நாதநாமக்கிரியை தாளம்-ஆதி.

பல்லவி.

தோட்டிநான்தானே பறையடிக்குந் தோட்டிநான்தானே

அநுபல்லவி.

பேட்டியாமரிச்சந்திர ஞட்டிலேகாத்திடும். (தோ)

சரணங்கள்.

சிசுவதைசெய் தோரும் - மற்றும்
பசுவதைபுரிந் தோரும்
குசுகுசுவென் போரும் - என்றன்
கூற்றைப்பழித்தோரும்
அசுபதியண்ணலு மாக்கிலேயிட்டிட
கொசுவதாய்த்தாங்கியே குறவலேவெட்டிடும் (தோ)

பின்மொழிசொல் வோரும் - ஒருவர்
தன்மையையிகழ்ந் தோரும்
நன்மையைவிடுத் தோரும் - குலத்
தின்மையைத்தொடுத்தோரும்
துன்மைசெய்யெனவேந்தன் தொனியிடுமுன்னமே
எம்முவங்களைக்குத்தி யிரத்தம்வடித்திடும் (தோ)

வழிகட்டிப்பறிப் போரும் - கெட்ட
விழியிட்டுநகைப் போரும்
பழிகளைச்சொல் வோரும் - கேளா
மொழிதனைப்புகழ்வோரும்
அழியுறவாண்டவ னமைக்கவேகெண்டலே
குழியுறமுள்ளினுற் கொந்திசதைபறிக்கும் (தோ)

(தோட்-வ-ம்) அய்யா பிச்சைகார ஆண்டமாரே! ராசா தானங் கொடுக்கிறாங்கோ ஓடிவாங்கோ, தேடிவாங்கோ, தேடிவாங்கோ, கூடி வாங்கோ, கூடிவாங்கோ, டேயே எங்கூத்தி வாங்களே.

(பொது-வ-ம்) சபையோர்களே! தானம்வாங்குவதற்கு யாசகர்கள் வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

## பார்பாட்டி கண்ணிகள்.

இராகம்-புன்னாகதோடி-ஆதி.

ஆடுபாம்பே நீ தேடுபாம்பே - யிந்த
  அரிச்சந்திரன்சபைவாழப்பாடுபாம்பே. (நீ ஆடு)
ஒருவர்நிலையதனை - யுணராமலே தூஷணை
  யுளரும்நாயைகடிக்கத்தேடுபாம்பே. (நீ ஆடு)
தருமன்கதையிதனுள் - த்கைமையறியாமலே
  தண்டுக்கூத்தென்போனைப் போய்ஜாடுபாம்பே. (நீ ஆடு)
அரசனுக்கினைதள்ளி யறியாமற்றிரிந்திடும்
  ஆங்காரிகளைக்கொத்த வோங்குபாம்பே. (நீ ஆடு)
சரசமாய்முன்பேசி - சார்ந்துபின்தூஷிக்கும்
  சண்டாளனைக்கடிக்கத்தாவுபாம்பே. (நீ ஆடு)
தெய்வதூஷணைசெய்து - தெருவீதிகளில்வாழும்
  தீயனையோடியோடித்தீண்டுபாம்பே. (நீ ஆடு)
கைப்பொருட்கெருவத்தாற் கவிஞனைமதிக்காத
  கருமிகளையோடிக்கடிபாம்பே. (நீ ஆடு)
நீதிநெறியுணர்ந்தே ஈயமுன்றதெரிந்த
  நேமிகள்பாதந்தனைநினைபாம்பே. (நீ ஆடு)
ஜாதிமுறைவிடுக்கச் சாற்றிமறிக்குமந்த
  சாமிகள்வார்த்தைகேட்டால் ஜாடுபாம்பே. (நீ ஆடு)
தீனரிச்சந்திரன செய்யுளிதைப்பாடிய
  திண்புயன்பேரைச்செப்புதினம்பாம்பே. (நீ ஆடு)
வீரமோங்கியோரும் வினோதசபையோர்வாழ்க
  வேண்டியரனைக்கோரியாடுபாம்பே (நீ ஆடு)

## பண்டாரங் கண்ணிகள்

இராகம் ஆனந்தகளிப்பு-தாளம்-சாப்பு.

பாவஞ்செய்யாதிருதினமே - குல
  நேமம்விட்டாற்றுபர்தான்வரும்மனமே. (பாவ)
குருமொழிதனைமறவாதே - மனங்
  கூசாமலேபொய்யை லேசாய்ச்சொல்லாதே. (பாவ)
பெருமைபடைத்திருக்காதே - ஒன்றும்
  பேசாமற்போய்விடுமோவிநில்லாது (பாவ)

---

இச்சரிதையில் உக, உச - வது பாரத்தில் பேஜ் நெம்பர்மாறுதலெ ற்றிக.

மதங்களையிகழ்ந்துபேசாதே - யிது
 மாயப்பிரபஞ்சம் மயங்கித்துள்ளதே
சதமென்றுவாழ்வைநம்பாதே - லோகாச்
 சாரவிதிகளைத்தடுத்துச்செல்லாதே. (பாவ)

திருநீற்றையிகழ்ந்துபேசாதே - யதில்
 தீராக்கொடும்பாவந்தீண்டுஞ்சிக்காதே
திருமணிதனைப்பழியாதே - வெகு
 தீமைகள்சூழ்ந்திடுந்தெளிவுமில்லாதே. (பாவ)

மூத்தோர்சொல்வார்த்தைதட்டாதே - நீ
 முறைதப்பிமாதரைக்கருதிப்பாராதே
பார்ப்போர்நகைக்கத்திரியாதே - யந்த
 பதிவிரதாசொல்வாக்குப்பலிக்கும்பொய்யாதே. (பாவ)

நீர்க்குளத்தருகினில்லாதே - துயில்
 நீங்கிடுமாதர்மேனிகண்வைக்காதே - சன்
மார்க்கத்திற்கிதுவும்பொல்லாதே - திரேக
 மடிந்தாலும்நரகத்திலழுந்திப்போகாதே. (பாவ)

பெண்ஜாதிவார்த்தைகேளாதே - யதில்
 பெரியசிறுமைகள்வருதற்பொய்யாதே
தன்குலவிதியைவிடாதே - பிறர்
 தாக்கும்பொய்மார்க்கத்திற்றுனுழையாதே. (பாவ)

பணங்கண்டுகனம்படையாதே - யது
 பலித்திடும்பாவிக்கேபார்ம்கிழாதே
குணங்கெடுமதுக்குடியாதே - நாளுங்
 கோட்சொல்லுமாந்தரைகோரிச்சேராதே. (பாவ)

மதிகெட்டுக்கெர்வம்படையாதே - நாளு
 மனோதுக்கங்கொண்டுமேமடிந்துபோகாதே
விதித்தமொழியைமறவாதே - நாளும்
 விநோதசபைவாழவேண்டிக்கொள்கோதே. (பாவ)

தாசரி கண்ணிகள்

இராசம்-புன்னாகவராளி, தாளம்-ரூபகம்.

ரா ரா போதாமு மனமு அரிச்சந்த்ர
ராசு வாரிசமுக மூனக்கு. (ரா)

இக்கடுண்டேதியாலரா இந்துகலுகுட்டேமிரா
சக்கதனமுகலுகுவாடு மிக்கிலிமனக்கிவ்வகலடு (ரா)

சரசுடவுகனத்ரிஸங்குனி வரசுதுடௌவாடுகானி
அரிச்சந்த்ருடனுதியாகரூப அந்தரதனிசேவசாய. (ஈா)
கவமனுலனுகுலதெகலு காணுவிதபட்டுமனுலு
அவஸ்யமிச்சுமனகுவாடு அந்தடிகனுடெவடுலேடு (ஈா)
ராகதாளகியானசுருதி ரகிதுடைதாகொலுலோனுண்டு
போகவ்ரோதசபனுமனமே பொகடிச்சாலநடிஞ்சுதாமே()

பயிராகி கண்ணிகள்.

இராகம்-பரஸ் இந்துஸ்தான், தாளம்-ஆதி.

சலோபயிராகி யஹர்நயிக்கோயி சலோபயிராகி.

சாயேப்ரபூஆரிச் சந்தரடேவடி
ஆயே அம்பூகா வயிரேதாதா. (ச)
காமக்குரோதமன காயசேதூர்ஹோா
காமஹ்ரிக்கேலே நாச்சத நாச்சத. (ச)
தானதரமபர ஸாயிஹோதேகா
மானச்சலோகுரு மனபஜத்ததுமி. (ச)
ரூச்காடீக்கா நயி ஆயேதரக்கா
பாக்கரோ ஆத்தம பரமனபாவத. (ச)
பாட்டகஹோவே நாட்டகாச்சே
டேட்டரஇசபா டீக்கவிநோதக்கி. (ச)

ஜோகி டோம்ரி.

இராகம்-பரஸ் இந்துஸ்தானிமெட்டு, தாளம்-ஆதி.

அரேஜோகி ஜாநா ஜாநா ஜாநாரே.

தானதரமபல ஸாச்சமன்மோத்தி
மானிச்ந்த்ரஜே மன்பரப்பூரே
பாநா பாநா பாநாரே
தேரநஹோவே பேரனஜாவே
கோரநபாவே மேவனக்காவே
ஆநா ஆநா ஆநாரே
மோத்தியனஹாரே தோத்தியனசாரே
மேத்திமிலகாரே ரோட்டிபரப்பூரே
லேநா லேநா லேநாரே
காவதடோம்ரி பாஜதககரி
விநோதபகிசாரி பாசன ஆசிரி
தேநா தேநா தநாரே.

ஹரிதாசர் கண்ணிகள்

இராகம்-இந்துஸ்தான், தாளம்-காப்பி-சாப்பு.

மனமேசத்குருபாதந் தேடு - இந்து
கனமேமிபிரபஞ்சம்விடசிநா டூடு (மன)
சுக்லசுரோணிதஞ்செய்த கூறு - நீ
ஸ்தூலம்நிலுவதுகுருபாதங் கோரு - யேதும்
விக்கினமணுகாது பாரு - செர்வம்
விடசி அணசிமவுனநிட்டலோ சேரு. (மன)
எண்ணிக்கையில்லாத கீலு - அந்து
ஈனக்கிரிமிலயிதேபதி பாலு - உடல்
உன்னிப்பார்சதைவெறுந் தோலு - மனுசா
ஓ ஒ ஓ இகவிடுநீமோகஞ் சாலு (மன)
ஒன்பதுவாயலின் வீடு - அந்து
உண்டேட்டிபூதாலுசேசெட்டி பாடு - நீ
நன்மையறிந்துகொண் டாடு - லோன
நாட்யமாடேவானிபாட்டலோ கூடு. (மன)
மநோதுக்கங்கொண்டு சாகாதே - ஒட்டி
மாயமுயிதியந்தமர்ம முகாதே - நாளும்
விநோதசபைமற வாதே - வேறே
வேடுக்கலந்தாவினுலுட்டி பாதே. (மன)

(யாசகர்-வ-ம்) போற்றி போற்றி எங்களாண்டவனே! எங்கள் மிடியைப்போக்கி ஆண்டாதரிக்கவேண்டும் சுவாமி.

(அரி-வ-ம்) அப்பா மந்திரி? மூவாசையில் பொருளாசையைமுக்கியமென எண்ணிவந்த யாசகருக்கு அவாளவாள் மனக்குறைநீங்கதாராளமாக எமது களஞ்சியத்தைத்திறந்து அபரிமிதமாய்கொடுப்பாய்.

(சத்-வ-ம்) அரசே? தாங்க ளடியேனுக்குக்கட்டளையிட்டவாறேதானத்தில்நிதானமேபெரிதென உட்கொண்டுவந்தவர்கள்மனங்களிக்கும்வாறுகொடுத்த னுப்புகின்றேன் அரசே.—(கானமீதல்)

அயோத்தியா காண்டம்.

சம்பூரணம்.

சுப்ரமண்யன் சகாயம்.

---

மதுகொலுவாயவினிடம் வந்திருக்கிறாராம், நாம் எதிர்கொண்டுபோய்க் கண்டுவரவழைத்துவரலாம் வருவாயப்பா பாலகா.

(சத்-வ-ம்) அப்படியே வருகின்றேன் பிதாவே.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

மனைவியேமானேதேனே மைந்தனேதேவதாசா
வினைபதையறுக்கவேண்டி விசுவாசமனதினுடி
யிணையிலாவிஸ்வாமித்ர ரெழிலுறுபாதந்தன்னைத்
துணையெனநம்பிநாமே தொழுகுவோம்வருவீர்தானே.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரவதி ? அப்பா தேவதாசா ? நம்மைச்சூழ்ந்த வினைகளகன்றிட அதிவிஸ்வாசத்துடன் வந்திருக்கும் விஸ்வாமித்திர முனிவரைப்பணிவோம் வாருங்கள்.

(சந்-தேவ-வ-ம்) அப்படியே வருகின்றோம்.—(போய்க்காணல்)

## அரிச்சந்திரராஜன் தரு.

இராகம்-நாதனுமக்கிரியை, தாளம்-சாப்பு.

பல்லவி.

அடிபணிகின்றோம் ஐயா உந்தன் (அடி)

அநுபல்லவி.

முடிமிசைசடையணி மூர்த்தியின்போதத்தை
பிடிவாதமாய்நாளும் பேணியுன்பாதத்தை. (அடி)

சரணங்கள்.

இருவினையகற்றிய விறைவனேயெளியரின்
கருமத்தைத்தொலைத்திடக் கனிவுபுரிவீருன் (அடி)
மும்மலவழுக்கதை மூளையறக்கிள்ளிட
செம்மலாவடியரின் தீவினைதள்ளிட. (அடி)
தத்துவநிலைதனைத் தாழ்வன்றியறிந்தவா
சித்துசத்தானந்தச் சிவத்தையுணர்ந்தவா. (அடி)

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

மாதவப்பொருளேபோற்றி மணிமந்த்ரரூபாபோற்றி.
வேதத்தினுருவேபோற்றி விண்ணவர்மகிழ்வோய்போற்றி
தீதறுங்குணத்தோய்போற்றி திகழுளபலத்தோய்போற்றி
பாதகங்களைவோய்போற்றி பணிந்தனம்போற்றிபோற்றி.

(அரி-வ-ம்) நாங்கள் தெரியாமற் செய்தபாவங்களைப்போக்கி, எங்களை ஆண்டருளவேண்டும் சுவாமி.

## விஸ்வாமித்திரன் விருத்தம்.

இன்னகரயோத்தியாளு மிறைவனேசத்யபாஷா
மன்னனேயரிச்சந்த்ராவுன் மாதுடன்பாலன்மந்த்ரி

வன்னமாமலர்போனுளும் வாழுலகதனில்வாழ்வீர்
தன்மனேயிதுவேசத்யக் கானறிந்தெழுந்திடீரே.

(விஸ்-வ-ம்) மகாராஜனே ? நீயும், சந்திரவதியும், தேவதாசனும், சத்தியகீர்த்தியும் சுபமாகவாழி, எழுந்திருங்களப்பா.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

நான்செய்தபலனேவன்றி நாயகிதவமோநீருந்
தானுவந்தெங்களுக்கே தரிசனந்தரலுமானீர்
மேன்மையிவ்வாசனத்தில் மேவியேயிருந்துவந்த
பான்மையைத்தெரியச்சொன்னுற் பரிவுடனடப்பிப்பேனே.

(அரி-வ-ம்) சுவாமி ? நான்செய்ததவமோ, என் தேவி நோற்ற நோன்போ, தங்களுடையபாததரிசனங் கிடைத்தது, இந்த ஆசனத்தில் எழுந்தருளி வந்த காரியந்தெரிவிக்கவேண்டும் முனிநாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

நல்லதோவரிச்சந்த்ராநீ நான்வந்ததறியான்போலச்
சொல்லவேகேட்டாயுந்தன் சொரூபமுந்தெரிந்ததப்பா
நல்லதோர்விண்ணோர்முன்யான் நவின்றதோர்யாகஞ்செய்யச்
செல்லவேபொன்றான்வேண்டுஞ் செல்வனேயீகுவாயோ.

(விஸ்-வ-ம்) இராஜனே ? நான்வந்தகாரியம் தெரிந்துகொள்ளாமல் என்னைக் கேட்ட சொரூபந்தெரிந்தேன், ஆகிலும் பெரிதல்ல, நான் தேவர்கள் முன்னிலையில் சொல்லிவந்த யாகஞ்செய்வதற்குக் கொஞ்சம் பொன் வேண்டியிருப்பதால், கொடுப்பாயோ அலது இல்லையோ சொல்லும் பிள்ளாய் அரிச்சந்திரா.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அடியன்மேற்கோபமாமோ வண்ணலேயுமக்குநாதா
மிடியனான்காப்பீர்வேணு மிணங்கிடும்பொருளீதென்றால்
முடியினசவைத்தேதாங்கி முன்னடிதனிலேவைப்பேன
கடுகியேயெனக்குத்தோற்றக் கழறுவீர்போற்றிசுவாமி.

(அரி-வ-ம்) சுவாமி ? அறிவில்லாத பாமரன்மேல் கோபஞ் செய்யப்போமோ, வேண்டியபொன்னைத் தெரியப்படச்சொன்னால் தடையின்றி தருகின்றேன் முனிநாதா.

(விஸ்-வ-ம்) அப்பா இராஜனே ? ஒருமதங்கொண்டயானையின்மேரில் ஒருவாலிபன் ஏறி நின்று கவுண்டெறியுமுயரம் பொன்வேண்டியிருப்பதால் உன்னால் கொடுக்கக்கூடுமோ சொல்லுவாயப்பா.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

நல்லறிவினிலுயர்ந்த நயமுளசத்தியகீர்த்தி
வல்லவர்கேட்டவாறே வன்பொருளீயவேண்டி

கல்லவில்லாதவெந்தன் களஞ்சியந்திறந்தேநீயும்
சொல்லருங்காளையானைச் சுருக்கெனவரச்செய்வாயே.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி ? முனிவர்கேட்டவாறே பொன்னைக்கொடுப்பேன், ஆனகால் ஜடுதியில் யானையும் ஆளுங்கவுண்டும், வரச்செய்து நமது களஞ்சியந்திறப்பாயப்பா மந்திரி.

(சத்-வ-ம்) அப்படியே செய்கின்றேன் அரசே.—அடா கட்டியனே? நமது யானைக்கூட்டத்தில் பெருத்தயானை ஒன்றும், நல்லவாலிபனையும், கவுண்டும் கல்லூர், சீக்கிரங்கொண்டு வருவாய் பிள்ளாய்.

(கட்-வ-ம்) அப்படியே கொண்டுவருகிறேன் சுவாமி.

## விஸ்வாமித்திரர் விருத்தம்.

வேந்தனேயானையேறி விடுகவுண்ணுயரம்பொன்னை
வேந்தனேகொடுப்பேனென்று மென்மனங்குளிர்ந்தேனப்பா
வேந்தனேயாகத்திற்கே வேண்டியபோதுவாறேன்
வேந்தனேகாத்தேயன்று வினையமாய்த்தருவாய்வாழி.

(விஸ்-வ-ம்) அப்பா இராஜனே ? நான் கோரியபடி பொன்னைக்கொடுப்பேனென்றாய், மெத்தசந்தோஷம், நான் யாகஞ்செய்யுங் காலையில் வந்துவாங்கிக்கொண்டுபோகின்றேன், அரிச்சந்திரபூபனே.

(அரி-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே என்வசம் வைத்திருந்து தங்களுக்கு வேண்டியகாலத்தில் கொடுக்கின்றேன் சுவாமி.

## விஸ்வாமித்திரன் விருத்தம்.

நல்லதுமன்னுநீதான் நயமுடன்வாக்களித்தாய்
நல்லதுவேண்டும்போது நண்பனேகொடுப்பேனென்றாய்
நல்லதுபொன்றுன்மெத்த நாயகாபின்னிடாமல்
நல்லவாறியத்தாரை நாட்டிடில்நம்புவேனே.

(விஸ்-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நான்வந்துகேட்கும்போதுகொடுப்பேனென்றது சரியே, மொத்தம்பெரிதானதாலும், இராஜரீகத்தெய்வீகம் எப்படியிருக்குமோ தெரிகிலேன், ஆனதால் எல்லோர்களுமறியக்கொடுப்பதாய் தாரைவார்த்தால் ஒப்புவேன் மகாராஜனே.

அரி-வ-ம்) ஏ ! முனிநாதா ? தங்களுக்குக்கொடுத்துவிட்ட பொருளைச் சந்திரசூரியாள்களிரண்டிலும் அடியேன்வாக்குப் பொய்க்காது, ஆகிலும் தாங்கள்கேட்டவாறு இன்னிமிஷமே தாரைவிட்டுத்தருகின்றேன் கிருபைகூர்ந்து ஒப்புக்கொள்ளுவீர் சுவாமி.

(விஸ்-வ-ம்) அப்பா அரிச்சந்திரபூபனே ? யான் இவ்விதமாகக்கேட்டேனென்று மனக்களர்ச்சிவேண்டாம், காலத்தையுமனுசரிக்க வேண்டுமாக்கும், ஆனதால் சீக்கிரம் சீக்கிரம் பூபனே.

# தத்தஞ்செய்தல்.

---

அரிச்சந்திரராஜன் விருத்தம்

முனிவரேகிலேசம்வேண்டா மும்மதுபொன்னெடுக்கமாட்டேன்
முனிவரேவேண்டும்போது மொழிப்படித்தருவேன்கண்டீர்
முனிவரேயிதற்குச்சாக்ஷி முதல்ரவிவிண்ணுமண்ணு
முனிவரேதாரைவார்த்தேன் முகந்துநீரேற்றுக்கொள்வீர்.

(அரி-வ-ம்) சுவாமி? அடிமைவிஷயத்தில் சஞ்சலத்தைவிடும், யானே ரவிகுலத்திலுதித்து இதுகாறும் நிலைபிசகாதவனென்றும், பொய்யைக் கனவிலும் நினைக்காதவனென்றும், தன் இல்லாளைவிட்டுப் பரநாரிகளின் இச்சையைக்கோராதவனென்றும், பெயரெடுத்திருக்கிற விஷயந் தங்களுக்கும் உலகின்கண்ணுள்ளோர்யாவருக்குந் தெரிந்தவிஷயமே, அப்படியிருக்க தாங்களிவ்வடிமையைச் சோதிக்கும்பொருட்டோ அல்லது ஏதுகாரணத்தினாலேயோ இவ்வாறு கேட்கலானீர், சரி ஆகிலும் தாங்கள்கேட்டதுபோலடிமைபஞ்சபூதங்கள் அறிய முழுமனதுடன் இதோ ஆகாயவாணி, பூமாதேவி, சூரியசந்திரர்கள்சாக்ஷிகமாகத் தாரைவார்த்தேன், ஏற்றுக்கொண்டு என்னிலும் அறியாமல் யாதுகுற்றஞ் செய்திருந்தபோதிலும் மன்னித்து ஆட்கொள்ளவேண்டும் சுவாமி, இதோபோற்றிசெய்தேன் ஆண்டவா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

சத்தியமன்னனென்றால் சாந்தனேநீயேயன்றி
சத்தியமன்னரிந்தச் சாரலிற்கண்டதில்லை
சத்தியநீயேயாகுஞ் சதியிவள்பத்னியாமே
சத்யனேவேண்டுங்காலைச் சார்ந்துமேகொள்வேன்வாழி.

(விஸ்-வ-ம்) மகாராஜனே? நீயே சத்தியன், சந்திரவதியே மகாபதிவிரதை, உன்பாலனோ அதியுத்தமன், உன் மந்திரியோ மகாநீதிமான், ஆகையால் உங்களைவிட வேறுயாரையுங்கண்டதில்லை, சபாஷ்ரொம்பவும்மெச்சினேன், அப்பா அரிச்சந்திரபூபா? எனக்குவேண்டும்போது வந்துபெற்றுக்கொண்டுபோகிறேன் மகாராஜனே.

(அரி-வ-ம்) அப்படியே தங்கள்சித்தம் ஆண்டவா.

விஸ்வாமித்திரன் மீதன்புறு தரு.

இராகம்-கேதாரகௌளம், தாளம்-ரூபகம்.

பல்லவி.

மாட்டிக்கொண்டானே - அரிச்சந்திரன்
மாட்டிக்கொண்டானே என்மாயவலைக்குள். (மாட்)

அநுபல்லவி.

காட்டினிற்பசியாய்க் களைத்தவேங்கைபால்
தாட்டீகமாய்மேஷந் தான்வந்துபட்டாற்போல். (மாட்)

சரணங்கள்.

பலவின்பிசினாலே பாரீக்கூட்டமதாய
தலமெனமேவிக்கால் தான்படும்வாறதாய். (மாட்)
தீபவொளிவைதீ தென்றறியாமலே
சாபமாய்வந்தீசற் றுன்படுவதுபோலே. (மாட்)
ஆனைதன்மதத்தை யணைக்கத்தெரியாமல்
தானேமண்சிரசிட்டுத் தவிக்குமாறுபோல். (மாட்)

(பொது-வ-ம்) சபையோர்களே? விஸ்வாமித்திரமுனிவர் ஏதோ ஒரு சூதைக்கருதி, தான் தந்திரமாய்வாங்கிய பொன்னை அரசனிடத்திற்றானே யிருத்திவிட்டுக் கானகத்தினுள்பிரவேசித்து அங்குள்ளமிருகங்களை வருவிக்கிறவிதமறிவீர்கள்கனவான்களே.

விஸ்வாமித்திரர் விருத்தம்.

காட்டினில்வாழுஞ்சிங்கங் கரிபரியாளிச்செந்நாய்
தாட்டிகவானைகோணன் றுரையெலிகுயிலுங்காடை
மேட்டியாமெருமைபன்றி மிகத்துடிகோழிமான்கள்
நீட்டியகாராயிங்கே நிமைகனில்வருகுவீரே.

(விஸ்-வ-ம்) இந்தக்காட்டில் வாழாநின்ற ஏ ஆனை, குதிரை, சிங்கம், கரி, கோணன், எருமை, எலி, கழுகு, காடை முதலாகியமிருகங்களே! பட்சிகளே? இங்கோடிவாருங்கள்.

(மிருகங்கள்-வ-ம்) சுவாமி? எங்களை யழைத்தகாரியந் தெரியச்சொன்னால் தடையின்றி செய்கிறோம் முனிநாதா.

(விஸ்-வ-ம்) மிருகாதிபக்ஷிகளே? நீங்கள் கூட்டமாக அயோத்தி நாட்டையடைந்து, குடிகளிட்டிருக்கும் பிரபலமான பயிர்களையழித்து இங்குவந்து எனக்குத்தெரிவிப்பீர்கள் மிருகங்களே பட்சிகளே.

(மிருகங்கள்-வ-ம்) இதோ நாங்கள் சென்று பயிர்களையெல்லாம்துவம்சம் செய்து உமக்குவந்துதெரிவிக்கிறோம் சுவாமி.

(விஸ்-வ-ம்) சரி, சீக்கிரம் போய்வாருங்கள்.

பொது தரு.

இராகம்-தர்பார், தாளம்-ரூபகம்.

பல்லவி.

வந்ததுபார் மிருகங்கள் வந்ததுபார்.

அநுபல்லவி.

அந்தவன்செப்பிய வனியாயஞ்செய்திட
இந்திரனுலகைப்போ லிருக்குமயோத்திகெட. (வந்)

சரணங்கள்.

கூட்டமாய்க் கூடியே - ஒன்றேடொன்று
நாட்டமா யாடியே
காட்டகம்விட்டுமே கௌசிகன்மொழிப்படி
ஓட்டமாயோடியே ஒருநொடிக்குளப்படி. (வந்)
வாலைத் தூக்கியே - செவிநீட்டி
காலைத் தாக்கியே
சாலைவழியெல்லாஞ் சார்ந்தேபொடியாக்கி
ஓலைகிழிவதை யுணருமதிபோக்கி. (வந்)
நஞ்சையிற் றாவியே - யழித்துமே
புஞ்சையில் மேவியே
நெஞ்சையொடித்திட்ட நீள்விளைவைபோக்க
பஞ்சைக்காற்றிலிட்ட பாவனையாயாக்க. (வந்)
கொந்துதுபார் தரைதனை கொந்துதுபார்
குடிமனம் நொந்துதுபா ரிதோவிதோ
வந்ததுபார் மிருகங்கள் வந்ததுபார். (வந்)

பொது விருத்தம்.

மிருகத்தின்கூட்டம்வந்தே மேயியபயிரையெல்லாங்
கருவழித்திடவேகண்ட கனிவுளகுடிகள்தானுங்
கிருகிருவென்றேகல்லே கிடாசியுமுறும்பக்கண்டு
வறுமையுட்கொண்டேவேந்தன் வளர்சபைவருகின்றரே.

(பொது-வ..ம்) சபையோர்களே ? விஸ்வாமித்திரனேவிய மிருகங்கள்பயிர்களை நாசஞ்செய்யக்கண்டகுடிகள், கற்களைவிட்டெறிந்தும்போகாமல் மேல்விழுந்து முன்வருவதைக்கண்டியாவரும்வருத்தமடைந்து அரசனிடத்தில் தெரிவிக்க வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

குடிகள் வருகிற தரு.

இராகம்-கல்யாணி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

குடிகள் நாங்களே பயிரிடுங் குடிகள் நாங்களே.

அநுபல்லவி.

படிமிசைநாளுமே பறப்பவர்க்கறமீய
பாக்கியம்பெற்றதோர் பண்புளோராகிய. (குடி)

சரணங்கள்.

அந்தணர்வேந்தர்க ளோத்தவர்வந்தாலும்
ஆகாரஞ்செய்தே காப்போம் - யார்
அண்டிகேட்டாலுமே யில்லையென்னமலும்
அன்பாயவர்பசி தீர்ப்போம்
சுந்தரமூர்த்தியின் சுவாகனமாகிய
நந்தியைநாளுமே நாடுவோராகிய. (குடி)

காலையெழுந்துமே ஸ்நானபானஞ்செய்தே
கைலையனைத்தினம் வாழ்த்துவோம் - ஒரு
காரணமில்லாமல் காலத்தைவீணாகக்
கழிக்காமல்பத்தி யேத்துவோம்
வேலைசெய்தானையின் விசித்ரச்சாலைதாவும்
நூலைப்படித்துமே நுண்ணிதத்தைமேவும். (குடி)

சீவகாருண்யத்தைக் கைக்கொண்டேநாங்களுஞ்
சிவமதிற்கிட்டிட நாடுவோம் - இந்த
ஜெகத்திற்றுஷ்க்ருத்யஞ் செய்திடுமாந்தரை
சேராமலவரைச் சாடுவோம்
பாவத்தொழில்களைப் பற்றிப்புரிந்திடோம்
காவலன்க்ஷேமத்தைக் கருதாதிருந்திடோம். (குடி)

(குடிகள்-வ-ம்) அப்பா கட்டியனே? எங்கள்வரவை அரசருக்குத் தெரிவித்துக் காணக்கூடுமோ என்று தெரிந்துவந்துரைசெய்வாயா?

(கட்-வ-ம்) அப்படியே தெரிவித்துவருகின்றேன், சற்று நிதானியுங்கள்.—சுவாமி? நமது நாட்டில் வாழாநின்ற குடிகளெல்லோரும், தங்களைக்காணவேண்டி வந்திருக்கிறார்கள் சுவாமி.

(அரி-வ-ம்) அப்படியா! சீக்கிரம்வரச்சொல்லும் வீரகட்டியனே.

(கட்-வ-ம்) புத்தி ஆண்டவா,—குடியான்மார்களே? உத்தரவாயிற்று போகலாம் யாதொருதடையுமில்லை.

(குடி-வ-ம்) நல்லது கட்டியனே,—போற்றி போற்றி மகாராஜனே.

(அரி-வ-ம்) ஆ! இதென்ன விபரீதம்! ஆ! ஈசா!—மருதம், முல்லை, நெய்தல், குறிஞ்சி, பாலை, எனும் க்ஷேத்திரத்தலங்களை யுணர்ந்தே மேன்மைத்தொழில்புரியாநின்ற குடிகளே? நீங்கள்வந்தவலக்கயை விபரமாய்த்தெரியச்சொல்லுங்களப்பா.

குடிகள் விருத்தம்.

ஏதெனச்சொல்வோமையா வெங்களாலிட்டவேபெற்ற
நிலைப்பயிரையெல்லாம் இன்னியமிருகம்வந்தே

போதரவழிக்கக்கண்டே புண்ணியனேமாறவேண்டி
யோதிடவந்தோஞ்சுவாமி யுகந்துமேகாப்பீர்கோவே.

(குடி-வ-ம்) ஆ! ஆ! ஆ! இராஜபரமேஸ்வரா? நாங்கள் என்ன சொல்லப்போகிறோம்! என்றும் நடக்காத காரியம் இன்றுநடந்ததினால் பின்னுக்குப் பிழைக்கும்வகையில்லாமல் முழுமையுங்கெட்டோம்! ஐயையோ! இவ்வனீதம் மூதாதைகளாலுங்கேட்டறியோம்! யாதுசெய்வோம்! குடிகளுக்குப் பலவிததுன்பங்கள் நேரிடுங்காலை செங்கோல் பிடித்த அரசரன்றி மற்றவர் யாரிருக்கிறார்கள், ஆனதால் நாங்களிட்டபயிர்களைக்காட்டுமிருகங்கள்வந்து அழிப்பதைக்கண்டு எங்களால் கூடுமானவரையிற்போராடி முடியாமல் தங்களிடம் முறையிட்டுக் கொண்டோம், ஆனதுபற்றி அவைகளைத் துவம்சம்செய்து எங்களைக் காக்கவேண்டும் நாதனே, அபயம் அபயம் பூதேவனே.

(அரி-வ-ம்) ஆ! அப்படியா !-! !—நல்லது.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

குடிகளேநீங்கள்சொன்ன கொடியதோர்வார்த்தைகேட்டேன்
குடிகளேயிதோநாம்வந்த கோரஞ்செய்மிருகந்தன்னை
குடிகளேவேட்டையாடி கொப்பெனமடிப்பேனீங்கள்
குடிகளேதுயரம்விட்டே கொள்ளுமும்மிடம்போவீரே.

(அரி-வ-ம்) குடிகளே? இனியுங்கள்துயரத்தைவிடுங்கள், இதோ நான் அம்மிருகங்களைவதைக்கவருகின்றேன், நீங்கள் உங்களிருப்பிடம்போய் சேருங்கள் இதுவுமன்றி நீங்கள் இட்டபயிர்கள் அழித்ததாலே வருகிற இரண்டுவருஷத்திய தீர்வையைக் கண்டிப்பாய்க் கொடுக்கவேண்டுவதில்லை, சந்தோஷமாய் உங்கள்வீடுதிகளுக்குப்போவீர்கள்.

(குடி-வ-ம்) மகாசந்தோஷம், அப்படியேபோய்வருகிறோம் மகாராசே.

வஞ்சனை காண்டம்

சம்பூரணம்.

சுப்ரமணியன்சகாயம்.

---




ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோத சபை.

# வேட்டைசெய்காண்டம்.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

சத்தியகீர்த்தியென்ன சகிக்கொணுக்காலங்கண்டோம்
நத்தியகுடிகள்நோவ நம்பனைருளோகாணும்
வெற்றியாய்வேட்டையாட வேண்டியதாலேயப்பா
சுற்றியவேடர்தம்மைச் சுருக்கினில்வரச்செய்வாயே.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி ? குடிகள்வந்துமுறையிட்டுப்போனதை கேள்விப்பட்டிருந்தும் நாம் சும்மா இருப்பது அடாதல்லவா, ஆகையால் நாம் வேட்டைக்குச்சென்று அம்மிருகங்களைத் துவம்சம் பண்ணினலொழிய குடிகள் மனக்குறை நீங்காது, ஆனதுபற்றி நாம் வேட்டைக்குப்போகவேண்டும், சீக்கிரத்தில் வேட்டைக்காரர்களைவரச்செய்வதுடன் நீயும் சர்வசித்தமாயிருக்கவேண்டும் பாலகா.

(சத்-வ-ம்) அப்படியே நாம்போய் அம்மிருகாதிகளைத்துரத்தி குடிகளைக்காக்காவிடில் மகாதோஷம் சம்பவிக்குமென மநுநீதிசாஸ்திரங்கள்முறையிடுவதா லவசியம்போகத்தான்வேண்டு மானதால்தாங்கள் கட்டளையிட்டபடி சகலமுஞ்சித்தப்படுத்துகின்றேன் ஆண்டவா.—அடாகட்டியனே ? என்றுமே வாராத துஷ்டமிருகங்கள் அத்துமீறிவந்து வளர்த்தோங்கிய பயிர்களையழிப்பதாகக் குடிகளிட்டமுறையால் அரசருக்குத்தெரிந்தகால் வேட்டைக்குப்போகப்போகிறார், நீ சீக்கிரஞ்சென்று வேடர்முதலானவர்களைவரச்செய்வாய் வீரகட்டியனே.

(கட்-வ-ம்) அ ! அப்படியா ! புத்தி ஆண்டவனே, அப்படியே வரவழைக்கின்றேன். — இதென்னவிபரீதகாலம் !

(பொது-வ-ம்) சபையோர்களே ? விஸ்வாமித்திரன் ஏவியமிருகங்களை அதஞ்செய்து வெகுமதிபெறவேண்டிய நிமித்தம் கட்டியன் உத்தரவின்படி வேடர்கள் அரசனிடம் வருகிறவிதங்காண்பீர்களாக.

## வேடர் வருகிற தரு.

இராகம்-தன்னியாசி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

வேடர்நாங்களே ஐயே மலை வேடர்நாங்களே.

அநுபல்லவி.

தேடரும்விநோத சபையோரின்புகழ்
பாடுவோம் யாவருங்களிக்கவே
தினைகுத்தியே நனைவிட்டதில்
மதுவிட்டுமே யதைநெட்டிடும். (வே)

சரணங்கள்.

ஆனைபுலிசிங்கம் யாளிக்கூட்டத்திலே
அஞ்சாமலேபாய்ந்து குதிப்போம்-அதை
பூனைகள்போலெண்ணி யிட்டியாற்சதையைப்
புட்டுபுட்டெறிந்தே மிதிப்போம்
சானைபிடித்திட்டக் கத்தியைத்தாங்கியே
சண்டாளச்சென்னையைத் துண்டாகவோங்கியே
சாய்ந்து காய்ந்து பாய்ந்து மாய்த்திடும். (வே)

காட்டுஎருமைக ளோட்டமாய்வந்திடில்
கைக்கோலினாலதை வட்டுவோம்-ஐயே
கரடிகலைமான்கள் முள்ளம்பன்றிவந்தால்
காலினாலெத்தியே மாட்டுவோம்
வீட்டுநாயைப்போல வெண்ணிக்கடம்பையை
விரல்களால்தாக்கியே யுயிருடன்தசையை
வெட்டியே கட்டியே சுட்டியே நெட்டிடும். (வே)

கொக்குக்குயில்காக்கை பக்கிகளைக்கண்டால்
இரக்கைகளைப்பற்றி நெளிப்போம்-ஐயே
குருவைப்பணிந்துமே யிச்சபையோங்கிட
கும்பிட்டுடன்மனக் களிப்போம்
திக்குதிக்கெல்லாம் புகழ்பெறப்பாடியே
தீவினையெண்ணிடும் பாவியைச்சாடியே
தேய்த்திடுந் தீய்த்திடும் மாய்த்திடுங் காய்த்திடும். (வே)

(தலைவே-வ-ம்) சரணம் சரணம் ஆண்டவனே? அழைப்பித்தகாரியந் தெரியச்சொல்லவேண்டும் சுவாமி.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

வேடனேயடவிவாழும் விலங்குகள்நட்டிறபாய்ந்தே
வேடனேகுடிகளிட்ட விலைகொளும்பயிரையெல்லாம்



வேடனையழிப்பதாலே விரைவினில்வேட்டையாடி
வேடனேவிரட்டபாலும் வேண்டியேயழைத்தேன்காண்பாய்.

(அரி-வ-ம்) அப்பா தலைவேடனே ? காட்டுமிருகங்கள் நாட்டில் பிரவேசித்து, குடிகளிட்ட பயிர்களையெல்லாம் அழிப்பதால் வேட்டையாடவேண்டி அழைப்பித்தேன் தெரிகுவாயப்பா.

(தலைவே-வ-ம்) மகாசந்தோஷம் வருகிறேன் சுவாமி.

அரிச்சந்திரராஜன் வெண்பா.

மந்திரிநீ கேளாய் வனவேட்டை யாடுதற்கு
முந்திப்போய் நீயே முனைவாக —சுந்தரமாய்
சேனைதள வாரந் திசைகளெட்டுந் தானடங்க
யானைபரி மற்று மமை.

(அரி-வ-ம்) அப்பா பாலகா ? இனி தாமதம்செய்யப்போகாது, நாம் சீக்கிரம்போகவேண்டும், நீ ஜாக்கிரதையாயுடித்திக்கொண்டு யானை, குதிரை, தளமுதலானதுஞ் சேகரிப்பாய் அப்பா சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) மகாராஜனே ? தங்களுத்தரவின்படிக்கு எல்லாஞ் சேகரித்திருக்கின்றேன் ஆண்டவா.

(அரி-வ-ம்) அப்படியா சந்தோஷம்.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

தேன்மொழிமாதேகேளாய் திகழிலாமிருகக்கூட்டம்
மான்விழியாளேவந்து மழிக்குதாம்பயிரைநாட்டில்
தேன்மொழிபெண்ணேசென்று தெறிக்கவேவேட்டையாட
மான்விழிகண்ணேபோறேன் மகிழுடனீயும்வாராய்.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரவதி ? காட்டுமிருகங்கள் பயிரையழிப்பதால் வேட்டையாடப்போகிறேன், நீயும் வருவாய்கண்ணே.

சந்திரவதி விருத்தம்.

கானகந்தனிலேசென்று கருக்கலேமிருகந்தன்னை
தானரேயோட்டவேண்டி தாம்புரிவேட்டைமற்றும்
பானரேயங்குதோன்றும் பலமலைவிருட்சமுஞ்சன்
மானரேயடியாள்காண மகிழுடன்வருகுவேனே.

(சந்-வ-ம்) பிராணநாதா ? தாங்கள் வேட்டையாடுகிற நேர்மையும், வனத்திலுள்ள வுன்னதங்களையுங்காணவேண்டி நானும்வருவேன்நாதா.

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

காட்டினிற்குடிகளிட்ட நல்லதோர்பயிரையெல்லாங்
காட்டில்வாழ்மிருகம்வந்தே கலக்கியதாகக்கேட்டே

வீட்டினிலிருக்கப்போகா வீரரேவேடமாரே
தாட்டிகமாயென்கூட தாவியேவருகுவீரே.

(அரி-வ-ம்) வேடரே? பயிரையழிக்கும்படியான மிருகங்களைவிரட்டவேண்டியதால், சாக்கிரதையாய்வாருங்கள் போவோம்,

(வேடர்-வ-ம்) புத்தி, அப்படியேவருகின்ருே மகாராஜனே.

அரிச்சந்திரராஜன் வேட்டை தரு.

இராகம்-அடாணு, தாளம்-திரிபுடை.

பல்லவி.

வேட்டையாடுவோம்வாரீர் ஓ வில்லியரே சல்லியரே - நாம்
வேட்டை யாடலாம்வாரீர்.

அநுபல்லவி.

காட்டைவிட்டேமிருகம் நாட்டினிலுமிதோ
காராய் பாராய் நீயே சேராய் நேரா யிதோ. (வேட)

சரணங்கள்.

அம்பெடுத்தே யிதோ விடுத்தேன்-அந்த
யானைக்கூட்டமதைக் கெடுத்தேன்
கொம்புமுறிந்திட வடித்தேன்-பன்றிக்
கூட்டத்தையுமிதோ விடித்தேன்
தும்புவலைகளா லோடுமிருகத்தை
சுத்திவந்தேயப்பா நத்திமடக்குங்கள்
வெம்புலிசென்னுய்கள் முன்னிடுங்கூட்டத்தை
வேடா வாடா நாயைச் சூடா போடா வன. (வேட்)

கோரைப்பன்றிகளைக் கண்டே-நான்
கோணுமறக்கத்தியைக் கொண்டே
வேறேயெண்ணமதை விண்டே-யிதோ
விட்டேனம்பு பன்னிரண்டே
நாரைகொக்குபக்ஷி பயிர்மேற்றுவுதே
நாட்டமாயுண்டுவில் போக்குக்கள்வலையை
தேரைத்திருப்புகிறேன் சிங்கங்கள்போகுதே
சேராய் பாராய் சுற்றிக் காராய் நேராய் வன. (வேட்)

எருமைக்கூட்டத்தை மாட்டினேன்-அதோ
எதிரிற்கலைகளை யோட்டினேன்
பெருமையுடனம்பை மீட்டினேன்-பொல்லா
பெரியகாண்டாவிழ நாட்டினேன்

அருமைதெரியாம விச்சைபைதன்னையே
அகஸ்யஞ்செயும்பர தோஷிகளைத்தினம்
முருகனருளதை மனதினிலெண்ணியே
முட்டு திட்டு பல்லை தட்டிக் கொட்டு வன. (வேட்)

(அரி-வ-ம்) வேடர்களே? என் அம்பினால்நொந்து பின்னிட்டோ மெப்படியான மிருகங்களைப்பின்பற்றிவதைத்து வருவீர் வேடர்களே.

(வேடர்-வ-ம்) மகாசந்தோஷமப்படியே பின்பற்றிச்சென்று உமது மனங்களிக்கும்படி மிருகங்களையொடுக்கியிதோவருகின்றோ மெங்கள் திராணியைப்பாருமகாராஜனே.

## வேடர் தரு.

இராகம்-நாதநாமக்கிரிகை, தாளம்-ரூபகம்.

பேசாரடையே பருங்கிவா பேசாரடையே
வேசாரிபக்கி போகுதே போகுதே. (பே)
நாயைச்சூனையே வாய்மூரி நரந்துவாரையே
டாயைச்சேருதுபுலி ராக்குடா அம்பித்தோ. (பே)
கரடியைநோரே ராக்கியே காளையைச்சேரே
விரட்டியேமாஞ்சதை வீபவே ராக்குடோ. (பே)
வலையீசுடையே விசைகநீ வருகிறாரையே
கொலைசெய்யேமையே கும்பத்தே ராக்குடோ. (பே)

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

வேடரின்மூனதாய்மந்திரி வினைவினிற்றளங்களோடே
காடதைப்பற்றிச்சென்றே களிப்புறநீங்கள்தானும்
நாடதையழிக்கவந்த நமதாக்கினைக்கடந்த
கூடமாமிருகமெல்லாம் கொப்பெனவதைசெய்வீரே.

(அரி-வ-ம்) சேனாதிபதிகளே? மந்திரிகளே? வேடர்கள் முன்னே நீங்களுஞ் சென்று நமதாக்கினா சக்கரமீறி நடந்தமிருகங்களைவதை செய்வீர்களப்பா வில்லாளிகளே.

## சத்தியகீர்த்தி விருத்தம்.

அயவலையீட்டியம்பு மறுக்கண்ணியுண்டைவில்லு
நயமுடன்றாங்கிநிற்கும் நல்வேட்டைக்காரரோநாம்
பயமின்றிமிருகந்தன்னைப் பற்றிப்பின்சென்றேமாய்த்தால்
ஜெயமுளவரசர்கண்டே செப்பொணாமகிழ்கொள்வாரோ.

(சத்-வ-ம்) வேடர்களே? நாமும் பின்பற்றி மிருகங்கள் திரும்பாத படிக்கு வதைப்போமாகி லரசர்கண்டு களிப்படைவார் வாருங்கள்.

## சத்தியகீர்த்தி தரு.

இராகம்-நாதநாமக்கிரிகை, தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஓடிவாருங்கள் ஐயே ஐயே ஐயே ஐயே ஐயே யைய ஓடிவாருங்கள்,

அநுபல்லவி.

ஓடியிருபக்கம் நாடிவலைவீசி
தேடிமிருகங்கள் கூடிடவுமேசி. (ஓடி)

சரணங்கள்.

எதிரேநேருங்கள் அப்பா அப்பா-அப்பா அப்பா
அந்தவிடுக்கில் பாருங்கள்
சதிராய் வாருங்கள் அப்பா மிருக
ஜாடையைக் காருங்கள்.
விதிகிழிந்ததுமானுக்கே பற்றுங்கள்
வீரிட்டோடுகிறயானையைக் குத்துங்கள்
வேகமாய்நோக்கிடும் புலிகளைப்பாரீர்
வெட்டினேன் தட்டினேன் குட்டிச்சென்னாய்களை. (ஓடி)
சுற்றிக் கூவுங்கள் அப்பா-நாயைச்
சுறுக்கா யேவுங்கள்
கத்தியைப் பாவுங்கள் கடம்பை
காடியைத் தாவுங்கள்
எத்திசையும்நோக்கு மெருமையைச்சுற்றுங்கள்
ஈட்டிகளினாலே யூட்டியிற்குத்துங்கள்
இருமாப்புடன்வரும் பெரியசிவிங்கையை
எற்றுங்கள் தொத்துங்கள் பற்றுங்கள் ஓடாமல். (ஓடி)
வலையைப் போடுங்கள்-அப்பா பறவை
வாட ஜாடுங்கள்
குலையை நாடுங்கள்-அப்பா அட்டர்மனங்
கொல்லத் தேடுங்கள்
விலைமதியாத விநோதசபைதனை
வெற்றியாயோங்கிட வேண்டுவீர்வேலனை
வித்தையிகழ்ந்திடும் லுத்தப்பிணந்தனை
வேடாமல் நாடாமல் தேடாமல் நீங்களும். (ஓடி)

## சத்தியகீர்த்தி விருத்தம்.

வேந்தனேமிருகந்தானும் வெகுவாகமாண்டுபோச்சு
வேந்தனேமிருந்ததெல்லாம் வெருண்டுகண்காணுத்தூரம்

வேந்தனேமறைந்ததாலே வில்லியன்றனேநிறுத்தி
வேந்தனேபாதத்திற்கே விளம்பிடவந்தேன்போற்றி.

(சத்-வ-ம்) மகாராசனே? மிருகங்க ளனேகமாக மாண்டுபோச்சுது தப்பினதுகள் மலைச்சாரலுக்கு ளோடிப்போய் விட்டது, ஆனதால் இச் சங்கதியை தங்களுக்குத் தெரிவிக்கவந்தேன் சுவாமி.

(அரி-வ-ம்) அப்பா பாலகா? வேட்டையாடி மிருகக் கூட்டத்தை யதஞ்செய்து விட்டோமானதாலினி சேனைகள்நாடுசேருவதற்காக ஒன்ருகச் சேர்ப்பிப்பாய் சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) அப்படியே சேர்ப்பிக்கின்றேன் மகாராஜனே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

தலைவேடாசொல்லக்கேளாய் தகைமையாய்நீதானேடி
தலைவேடாசேனைதன்னை தடையன்றியொன்ருய்க்கூட்டி
தலைவேடாவிங்கேதோன்றுந் தண்மைபூஞ்சோலைக்கேதான்
தலைவேடாவழைத்துநீயுந் தாவியேவருகுவாயே.

(சத்-வ-ம்) அப்பா தலைவேடனே? நீ ஜாக்கிரதையாய்ச் சென்று சேனைகளையெல்லா மொன்ருய்க்கூட்டி யிந்தபூஞ்சோலைக்கு அழைத்துக்கொண்டு வருவாயப்பா வீரனே.

பொது விருத்தம்.

மன்னனரிச்சந்திரனும் வேடருடன்காடுறைந்துவனவிலங்கையெல்லா
சன்னபின்னமாய்வதைக்க நிலைகெட்டேவந்தவழிசார்ந்தேயோட [ம்
என்னரும்பேர்தவமுனியு மிதையறிந்தேயேனமொன்றை யேவிவிட
இன்னமுடன்கருதுபடைமேல்விழுந்தேபலபேரைச்சிதைத்ததன்ருே

(பொது-வ-ம்) சபையோர்களே? அரிச்சந்திரமகாராஜர் வேட்டையாடி மிருகங்களை வதைக்கத் தரிக்க நிலையில்லாம லோடிவந்ததை விஸ்வாமித்ரன் கண்டு ஒருபன்றியை உண்டுசெய்து அனுப்ப அது வந்து படைகளைவதைசெய்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

பொது தரு.

இராகம்-தர்பார், தாளம்-ரூபகம்.

பல்லவி.

வந்ததுபார் பன்றி யிதோ வந்ததுபார்.

அநுபல்லவி.

இந்தச்சபைதனே நிந்தையாய்ப்பேசிடும்
மந்திகளின்சதை கொந்தியேயேசிடும். (வந்)

சரணங்கள்.

இயமமிதோவென்று எண்ணித்துடித்திட
சமயம்பார்த்தேபடை சாகமடித்திட. (வந்)
கோரையைத்திட்டியே கோபத்தீமூட்டியே
தாரையாயுதிரந் தாவிடமாட்டியே. (வந்)
வேடர்கள்பாலையர் வெட்டவுமெண்ணுமல்
ஜாடப்படைகளுஞ் சார்ந்திடநண்ணுமல். (வந்)
முனிவன்போதித்த மோனத்தைவாய்ந்துமே
தனிமையில்லாமற் முண்டியும்பாய்ந்துமே. (வந்)

(பொது-வ-ம்) சபையோர்களே ? பன்றியின்வாதையினுல் சேனைகள் சின்னுபின்னப்பட்டு ஓடுவதைக்கண்ட தலைவேடன் இராஜருக்குத் தெரிவிக்க வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

## தலைவேடன் விருத்தம்.

அரசரேசேனைதன்னை யமரிக்கைசெய்தேநானும்
அரசரேயழைப்பதற்கு ளகோரமாம்பன்றியொன்று
அரசரோவந்தேதாக்கி யனேகமாஞ்ஜனத்தைக்கொன்றே
அரசரேநேருநோக்கி யடியேனைத்துரத்திற்றையா.

(தலைவே-வ-ம்) ஆண்டவா ? நான் சேனைகளைக்கூட்டிக்கொண்டிருக்கும்போது ஒருபன்றி மலையைப்போல்வந்துசேனைகளின்பேரில்பாய்ந்து அனேகரைமடித்தும் என்பேரிலும்பாய நான் தங்கள்பாதத்தில் அறிக்கைச்செய்ய வந்தேன் சுவாமி.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

தலைவேடாவுந்தன்வார்த்தைத் தைத்துதென்னெஞ்சிலப்பா
தலைவேடாமாண்டோர்போகத் தனித்தவருயிரைக்காக்கத்
தலைவேடாநானேவந்து தகாதவப்பன்றிதன்னைத்
தலைவேடாவதைப்பேன்றேரைத் ததியினில்வரச்செய்வாயே.

(அரி-வ-ம்) அப்பா தலைவேடனே ? இறந்தவர்போக இருப்பவரைக் காக்கவும் அப்பன்றியைக்கொல்லவும் நானேவருகிறேன், என் இரதத்தைச் சீக்கிரத்தில் கொண்டுவரச்செய்வாய் அப்பா.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

மந்திரிபன்றியொன்று மடித்ததாம்வெகுஜனத்தை
மந்திரிநாமேசென்று மடக்கியேயதையொடுக்கி
மந்திரிசேனைதன்னை மகிழுறக்காக்கவேண்டும்
மந்திரிவாராய்போவோம் மனமினித்தரிக்கிலேனே.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி? ஒருபன்றிவந்து நமதுசேனைக ளின்பேரில் விழுந்துகொல்லுகிறதாம், நாம்போய் அதையொடுக்கிப் பாலயங்களை இரக்ஷிக்கவேண்டுமாதலால் நீயும் வருவாயப்பா.

(சத்-வ-ம்) அப்படியேவருகின்றேன்சுவாமி.—அப்பா தலைவேடனே நீ சொன்னபன்றியின் ரூபமெப்படிக்கொத்ததோ தெரிவிப்பாய்.

தலைவேடன் விருத்தம்.

நாலுகால்களுமேவெள்ளை நவிலுவேன்சிரசோபச்சை
கோலமாம்விழிகளிரண்டுங் கூறுறுவுதிரமொக்குஞ்
சாலவேதிரகமானுற் சரியிலாப்பொன்னுய்க்காட்டுந்
தூலமோவிமயமொக்குந் தொடுகொம்புவயிரமாமே.

(தலைவே-வ-ம்) ஓ மந்திரியாரே? என்னென்றுசொல்லுவேன், அப்பா! சொல்லுவோமென்றால் நான் அதைப்பார்த்திருக்கும் பயப்ராந் தியின்கொடுமையால் என்கண்முன் நிற்றல்போற்காணுகின்றது, ஆகிலும் தாங்களருகிலிருப்பதால் யாதொருகிலேசமுமில்லை, — கேளும் நாலுகாலும் வெள்ளை, தலை பச்சை, கண்கள் உதிரநிறம், திரேகம் பொன்மயம், கொம்புகள் வயிரம்போலிருக்கும், காத்திரமோ இமயமலைக்கொத்திருக்கும் சுவாமி.

அரிச்சந்திரராஜன் விருத்தம்,

என்னதான்காலங்காணே னிவ்விதக்கோரமாக
உன்னதமானபன்றி யுற்பித்ததேனோபிரமன்
தன்னதுநினைவுயாதோ தயாபராகைலைவாசா
பன்னவரேற்றுங்கோவே பயந்திரவருள்வாய்போற்றி.

(அரி-வ-ம்) ஆ! ஆண்டவனே! கைலைவாசா! இவ்விதமான விகாரரூபமுடைய பன்றியை பிரமன் ஏன் படைத்தானோ! அறியேன் எனக்கும் என் சேனைகளுக்கும், யாதொரு துயரமின்றிக்காப்பாய்.

(பொது-வ-ம்) சபையோர்களே? தலைவேடன் சொன்னபன்றியை இதோ கண்டிக்கிறேனென்று இராஜன் காலருத்திரனைப்போல் சீறி தேரேறி அந்தரமார்க்கத்தில் நடத்திப் பன்றி இருக்குமிடத்தை நாடி வந்தனரென்றறிவீர்கள் கனவான்களே.

அரிச்சந்திரராஜன் வேட்டை தரு.

இராகம்-தர்பார், தாளம்-ரூபகம்.

பல்லவி.

எதோகாட்டடா வந்த பன்றி எதோகாட்டடா.

அநுபல்லவி.

இதோநீசொன்ன வேணமதுவேடா
இப்போதே வாட்டுவேன் தப்பாமலே வாடா. (எ)

சரணங்கள்.

நூலம்பெரிதுதா னுனக்குமே தோன்றினதுமிதுதான்
காலகதியல்லோ காட்டினில்வந்ததும்
கண்டநீபயத்தைக் கொண்டிடத்தந்ததும். (எ)
கோரரூபமாய்ச் சேனைபேரில் குரூரகோபமாய்
தீரமுள்ளபடை திகைத்துவாடிட
தேகம்நடுங்கியே தேவனைநாடிட. (அ)
தனுசுந் தாவினே னிதோ சரந்தனையுந் தூவினேன்
அணுவணுவாக வதைச்சதைத்திட்டேன்
அப்பா இப்புரத்தை யண்டாதுதைத்திட்டேன்
அதோபோச்சுதடா பன்றியோடி. (௯)

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அப்பனேசத்தியகீர்த்தி யகோரமாம்ரூபத்தோடே
செப்பவேசக்யமின்றி சீறியபன்றிதன்னை
கப்பவேதாக்கியம்பால் கலக்கமிட்டோடச்செய்தேன்
இப்படைதனையழைத்தே யென்பின்னேசோலைவாராய்.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி? அகோரமான பன்றி என் அம்படிக்குத் தாளாமல் ஓடிவிட்டது, இனி நாடாது, ஆனதால் நமதுசேனைகளைப் பூஞ்சோலைக்கழைத்து வருவாய் அப்பா பாலகா.

(சத்-வ-ம்) அப்படியே அழைத்துவருகிறேன் தந்தையே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

அரசரேநீர்தானிட்ட வாக்கினைப்படியேநானும்
அரசரேசேனைதன்னை யழைத்தேபூஞ்சோலைவந்தேன்
அரசரேயினிநடத்து மருள்தனைப்பெறுகவென்றே
அரசரேயுமதுதிவ்ய வடியிணைப்பணிந்தேன்போற்றி.

(சத்-வ-ம்) இராஜபரமேஸ்வரா? உமது ஆக்கினையின்படி சேனைகளைப் பூஞ்சோலைக்குக் கூட்டிவந்தேன், இனி நடத்துங்காரியம் அருள்புரியவேண்டும் மகாராஜரே,

அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அப்பனேசத்தியகீர்த்தி யடவியில்வேட்டையாடி
கப்பியமிருகக்கூட்டங் கலங்கிடவதைத்ததாலே
இப்பவுமேதோசோம்ப லிளைப்பதுந்தோன்றுதப்பா
ஒப்பியிச்சோலைதங்கி யுதயத்திநகர்செல்வோமே.

(அரி-வ-ம்) அப்பா பாலகா? வேட்டையாடினகளைப்புதீர இந்த இரவில் உன்னதமானசோலையில் தங்கியிருந்து உதயத்தி நமது நாட்டிற்குப் போகலாம் சுதனே.

(சத்-வ-ம்) மகாபராக்கிரமம், ஆண்டவா.—(யாவத்திராஜும் நித்திரைக்கேகுதல்)

## கனவுகாணல்.

(பொது-வ-ம்) சபையோர்களே ? அரிச்சந்திரமகாராஜரும், சந்திரவதியம்மனும், பூஞ்சோலை யருகில் நித்திரைசெய்யும்போது அரிச்சந்திரமகாராஜர் கனவுகண்டெழுந்து தன் தேவிக்குத்தெரிவிக்கிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

### அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அன்னமேகுயிலேயென்ன வகாதமோகாலங்காணேன்
அன்னமேநித்திரைதன்னில் யான்கண்டகனவினாலே
அன்னமேயேதாமோதா மறிகிலேன்றுயரமீறி
அன்னமேநோகலானே னரனடிகதிநமக்கே.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரவதி ? நான் நித்திரையில் கண்டகனவினால் மெத்த மனம் வருந்துகின்றது, என்னநேரிடுமோ ! தெரிந்திலேன் ! ஏதுக்கும் நமக்குத் துணை பரமசிவந்தான் என்கோதே.

### சந்திரவதி விருத்தம்.

நேசரேயெனதுபிராண நித்தரேதுயிலிற்கண்ட
நேசரேகனவின்சேதி நிகழ்த்துவீரெனக்குத்தோன்ற
நேசரேயெதுவந்தாலும் நிலையதுதவறப்போமோ
நேசரேவந்தாற்றுன்பம் நிற்குமோவழியிற்றுரேன.

(சந்-வ-ம்) என் பிராணநாதரே ? தைரியத்தை விடலாகுமோ, மனைத்திடப்படுத்தி அடியாளுக்கு நீர்கண்ட கனவைத் தெரியச்சொல்லவேண்டும், வரும்விதி வழிதங்குமோ துரையே.

(அரி-வ-ம்) ஆனல் சொல்கிறேன் பெண்ணே.—(வெளியிடுதல்)

### அரிச்சந்திரராஜன் அகவல்.

அன்னமேகேளா யறைகுவேனுனு ம்
என்னருந்தந்தையி னெழிலுறுதிரேக ம்
சொர்க்கமடைந்தபின் றேகையரைவ ரை
மிக்கவேநானு மேவியேமணந்தே ன்
ஐவரிலொருத்தியை யந்தணர்க்கீந்தே ன்
னொய்யமற்றொருத்தியும் நோக்கியேசென்றன ள்
மற்றொருநாரியோ மலரொளியிழந் தே
எற்றோர்திசைதா னேகினள்கண்டா ய்
ஒருத்தியாகாரத் துணவுடன்மற்றது ம்
வெறுத்துமேசென்றனள் மெல்லியற்கர சே

கடைப்பிடிமாதுமென் கைதனைப்பற்றி யே
இடைவிடாதிருந்தன ளென்னமோதெரிகிலே ன்.

(அரி-வ-ம்) ஆ! சிமோட்டி? என் பிதா சொர்க்கம் சென்றபின், ஐந்துமாதுசிரோன்மணிகளைமணந்ததாகவும், அந்த ஐவரில் ஒருத்தியை யந்தணருக்குக் கொடுத்ததாகவும், மற்றொருத்தி எனைப்பார்த்தவாறே என்னைவிட்டுச்சென்றதாகவும், மூன்றும் மாதுக்கோவெனில் தன்கண்ணொளியிழந்து எற்றிசைபோசென்றதாகவும், நான்காம்மாது ஆகாரம் நித்திரைமுதலியவைவை வெறுத்துச் சென்றதாகவும், கடைப்பிடி மாது (அதாவது ஐந்தாம்மாது) மாத்திரம் என்னையிடைவிடாமல் என்பின்பற்றியே இருந்ததாகவும் கண்டேன் சந்திரவதனு.

சந்திரவதி விருத்தம்.

மன்னரேநீர்தான்கண்ட மகத்துவக்கனவின்சங்கை
மன்னரேயானோமாது மகிழுடனுணரக்காணேன்
மன்னரேயெதுவந்தாலும் மங்கையோர்பாகன்காப்பான்
மன்னரேமதியுயர்ந்த மந்திரிக்குரைசெய்வீரே.

(சங்-வ-ம்) பிராணநாதரே? யானோ பெண்பால் நீர்கண்டகனவு சிலேடையாக இருப்பதால் விபரமாய்ப்புகல என் தரமல்ல, ஆனதால் திரிகாலங்களும் அறிந்து சொல்லப்பட்ட நமது பேரறிவுடைய சத்தியகீர்த்தியை வரவழைத்து வெளியிடவேண்டுகிறேன் நாதா.

(அரி-வ-ம்) சரி அப்படியே மாதே.—அப்பா கட்டியனே? சீக்கிரம் நீ சென்று நான் கோரியதாகச்செப்பி நமது அறிவிலுயர்ந்தமந்திரியை யழைத்தோடிவருவாய் அப்பா வீரனே.

(கட்-வ-ம்) இதோ அழைத்தோடிவருகின்றேன் சுவாமி.—பராக் மந்திரியாரே? மகாராஜர் உம்மை அழைத்துக்கொண்டுவரக் கட்டளை இட்டார் சீக்கிரம் வருவீர் சுவாமி.

(சத்-வ-ம்) அப்படியே வருகிறேனப்பா கட்டியனே.—அரசே? அடிமையைவரவழைத்த காரியத்தைச் சொல்லவேண்டும் ஆண்டவா.

அரிச்சந்திராராஜன் விருத்தம்.

என்னுயிர்க்குயிரதான வின்பனேசத்யகீர்த்தி
முன்செய்தபழியாலிங்கு முற்றும்நாம்நித்திரைசெய்யப்
பன்னுதற்கரியதான பலன்தராக்கனவுகண்டேன்
அன்னமுங்கேட்டயர்ந்தா ளறைகுவேன்கேட்டிடாயே.

(அரி-வ-ம்) பாலகா? இன்றையதினம் துட்டமிருகங்கள் வாதனையைப்போக்கு நிமித்தம் தேகமலுத்ததால் என்னையும் மறந்து சற்றுமூத்தாளுக் கிடந்தந்தேன், அந்தோ! அந்நிமிஷம் யான்கண்டசொர்ப்பனத்தைவெளியிட நா குளறுகின்றது காணுறுபோல்தேகத்தினின்று

வியர்த்து நீர் பெருகுகின்றது, யாதுசெய்வேன்! ஆ! யான் * கருவிலமைந்தவன்குடலிலூறுமலுதித்து, ஓர் காரணார்த்தமாக மகாநீதிமானுகிய திரிச்சங்குமகாராஜாவினது கண்முன்தோன்றி எனை ஈயெறும்பு தீண்டாமல்வளர்த்து அறிவுவிளங்கின நாள்தொட்டு இதுகாறும் இவ்வாறான தீங்கனவைக்கண்டதுமில்லை, பிறரால் கேட்டதுமில்லையே! ஆ! ஆபத்பாந்தனுகிய சத்தியகீர்த்தி! இனி ஏதுசெயமாட்டுவேன்! இகன்றியில் உன் தாயும் எனக்கு மனைவியுமாகிய சந்திரவதிக்கும் வெளியிட்டேன், அவளும் கேட்டு அயர்ந்து உன்னிடந்தெரிவிக்கச்சொன்னுள், உஸ்.—(அயர்ந்து சோகமுறல்)

(சத்-வ-ம்) ஆ! உலோகாதிபதியாகிய பூதேவ இந்திரரே? ஈதென்னவிபரீதம்! ஏ! மனமே? நமது மன்னர்திருமுகத்தைப்பார்த்தனையா! ஐயோ!!! இப்பாடுபடவா இப்பூஞ்சோலையின்கண்வந்தடுத்து சோகத்தால் நித்திரைசெய்தனர்! உற்றுப்பார்க்கில் நமது தேசிகர் தேஜசுவேறாகவுந்தோற்றப்படுகின்றது, யாது கெடுதிக்கோ தெரிந்திலேன்! இதுவும் வினைப்பயனு! அந்தோ! அந்தோ!— சீ வெறி மனமே? சத்தியபாஷை அரிச்சந்திரபூபரிடத்திலிருந்து ஊழியஞ்செய்த திறமை இதுதானு! "எற்றுயர்வரினும் அத்தன்றிருவடி நற்றியுன்னிடில் நகன்றிடுமறிக". ஆனதால் இவ்வாக்கியத்தையுட்கொண்டு அதைரியப்பட்டவர்கட்குத் தைரியமொழிகளைச்செப்பி சந்தோஷிப்பிக்கச்செய்வது அமைச்சனுடையகடமையலலவா, சரி—அரசே? சத்தியமெனுஞ்செங்கோலைத்தாங்கிய மன்னவராயிருந்தும் ஏனிப்படித்தியங்கலானீர்? இது தங்களைப்போலொத்த அரசருக்கு நீதியல்லவே, தைரியமே புருஷலக்ஷணமுதலியவைபாம் ஆனதால் இவ்வடியேன்பேரில்கிருபைகூர்ந்து அக்கனவைவெளியிடில் என் சிற்றறிவிலெட்டியவாறுபுகலமாட்டுவேனரசே.

(அரி-வ-ம்) அப்படியே பாலகா.—(கனவைவெளியிடல்)

---

* ஓர்காலத்தில் அயோத்தியாநாட்டு வளப்பத்தைக்கண்ணுற்றுவந்த அரியும் சந்திரனும் அங்ஙனே தோன்றிய இரண்டுதடாகத்தைக்கண்டு மனதினிடத்தே சற்று உற்சாகங்கொண்டு ஒரு தடாகத்திற்சென்று நீரை ஸ்பரிசிக்க சந்திரன் பெண்ணுருவானதை அரிநோக்கி மோகித்ததினுல் ஓர் ஆண்குழந்தை யுதிக்கச் சந்திரன் தனக்குவந்தவிபத்தை அரியிடத்தில் முறையிட, அரி மற்றோர் தடாகநீரை ஸ்பரிசி எனச்சந்திரனுக்குக் கட்டளையிட, அவ்வாறே ஸ்பரிசிக்க சுயரூபங்கொண்டு தம்தம்பதிக்குச் சென்றனர், பின்னர் வேட்டைக்குவந்ததிரிச்சங்குமகாராஜர் பரமனருளால் அவ்வாண்குழந்தையைக்கண்டெடுத்துப்போய் அசரீரியால் அரிச்சந்திரமகாராஜனென்றுபெயரிட்டனன், ஆனதால் சாதாரணமானவர்போல் அரிச்சந்திரமகாராஜர் கருவிலுதிக்காமையால் இங்ஙனங்கூறுன்பிற்று. இது சிலருக்குச் சந்தேகமுறில் அவைகளைக்களைக.

அரிச்சந்திரராஜன் கண்ணிகள்.

இராகம்-பியாகடை, தாளம்-சாப்பு.

என்னசொல்லுவேனப்பா ! என்ன சொல்லுவேனையா !
என்னசொல்லுவேன் நான்றான் மந்திரி ! மந்திரி !
வன்னமிச்சோலைதனில் மாதுடன்நானுமித்திரை
வகுத்திட்டேன்கேளாயப்பா மந்திரி ! மந்திரி !
என்தந்தைசொர்க்கமேவி யிருந்தவாறதுபோல
இங்கென்முன்றோற்றக்கண்டேன் மந்திரி ! மந்திரி !
கன்மத்தாலிவ்வுலகிற் கன்னியரைவரைநான்
கலியாணஞ்செயக்கண்டேன் மந்திரி ! மந்திரி !
ஐவரிலொருத்தியை யாதுலர்க்கீந்துபின்
அடுத்தொருத்தியும்போனாள் மந்திரி ! மந்திரி !
கையிலுற்றமூவரில் கண்கெட்டேயொருமாது
காட்டினிடமோடினாள் மந்திரி ! மந்திரி !
இருந்தவரிலொருவ ளினியபொசிப்பைவிட்டே
யேங்கிப்பிரியக்கண்டேன் மந்திரி ! மந்திரி !
பெருமையாயொருமாது பிணங்கியென்னுடனும்
பிரியாதிருக்கக்கண்டேன் மந்திரி ! மந்திரி !
இக்கென்றெழுந்திருந்தே திகைதப்பிமனம்வாடி
தேவிக்குரைத்தேனப்பா மந்திரி ! மந்திரி !
பக்குவமறிந்துரைக்கப் பகரும்மந்திரிக்கென்றே
பன்னவுரைத்தேனப்பா மந்திரி ! மந்திரி !

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி ? இந்த இரவில் இப்படிக்கொத்த சொர்ப்பனங்கண்டேன், இதன்பலாபலத்தை எனக்குத்தெரிய தீவரத்தில் சொல்வாயப்பா பாலகா.

(சத்-வ-ம்) ஆ ! ஈசா ! சம்போ ! சங்கரா ! எனது அசர் யாதொருதீங்குஞ்செய்ததில்லையே ! இனி எவ்விதத்துயர்வரினும் காப்பது நின்கடமையே பரம்பொருளே—(சத்தியகீர்த்திசோகமுறல்)

சத்தியகீர்த்தி கண்ணிகள்.

இராகம்-முகாரி, தாளம்-சாப்பு.

ஆ ! மன்னவா ! ஈதென்னகாலம் அமைந்ததே மன்னவா !
பாவிபாம்பிரமன் இவ்விதியிட பகைவைத்தானோமன்னவா !
தேவேயாதுலன் கௌசிகனெனத் தெரிந்துகொள்வீர்மன்னவா !
அளித்தமாதுமே நின்றுடென அறிந்திடுவீர்மன்னவா !
கூடச்சென்றவளோ நின்னிடியெனக் குறிப்பறிவீர்மன்னவா !

ன்னைம்வெறுத்தவளே "நின்மாதுதான்" அகன்றிடுவாள்மன்னவா !
கண்ணிழந்தவள்தானே நின்பாலனும் கைவிடுவான்மன்னவா !
உடனிருந்தவளே சத்தியமெனக் கொண்டிடுவீர்மன்னவா !
அவளாற்பேரன்னவையெலாம்பேருங்கீர்த்தியடைந்திடுவீர்மன்னவா !

(பொது-வ-ம்) சபையோர்களே ? அரிச்சந்திரமகாராஜர் சத்தியகீர்த்தியினிடத்தில் தான்கண்ட கனவைவெளியிட சத்தியகீர்த்தி அதன பலனைத்தெரிந்து அரசருக்குத்தெரிவிக்கக்கண்ட சந்திரவதி தான் அதிதுக்கக்கிரந்தவளாகி தனது பத்தாவைநோக்கி பிரலாபிக்கிறவிதங்காண்பீர்கள்கனவான்களே.

சந்திரவதி கண்ணிகள்.

இராகம்-சஹானா, தாளம்-ஆதி.

இந்தகதியுமக்கே யெய்திடிலையையோ !
என்னநான்செய்குவேன் சதியே ! ஓ ஹோ ! பதியே !
மந்திரிகனவதின் வாறுகவிடிவித்த
வண்மைக்கெவ்விதஞ்செய்வேன் விதியே ! சிவங் கெதியே !
நாடுகெகிழந்து நாயகாதனியாகி
நகன்றெங்கேதவிப்பீர் ! நாதனே ! யதி நீதனே !
பாடுபடவேயும்மை பரமன்விடவுமநாட்டில்
பலர்க்கு கைகுவிப்பீரோ ! பாதனே ! கலை போதனே !
அடியாளும்பிரிவேனே ! அருமகன்றனிப்பானே !
அயன்விதியெதுவாமோ ! ஐயனே ! வாய் மெய்யனே !
படிமிசைநானென்ன பழிபாவஞ்செய்தேனோ !
பத்தாவைத்தனிப்பேனோ ! பையவே ! மனம் நொய்யவே !
நாட்டுமங்கையர்போல நான்வாழுங்காலத்தில்
காதாவுனைப்பிரிய நாடுமோ ! மனங் கூடுமோ !
காட்டுளலைந்திடினுங் கருமமேயெய்திடினுங்
கைவிடிலேனுரிய காடுமே ! மதி தேடுமே !
பெருமைசிறுமையுறும் பெண்ணுனுமக்கானதால்
பிரியாதிருப்பீரேகெம் பீரரே ! கலை வீரரே !
வருமைவந்தெய்கினும் வணங்கிடிற்கணவரை
வாய்க்கும்பரகதிசம் மாரரே ! யதி சூரரே !

(அரி-வ-ம்) அடி மாதே ? சுகத்தைவிட துக்கத்தை நலமாயெண்ணி நடக்கவேண்டும், என்னகாலம் நேரிட்டாலும், உன்னையும் பாலகனையும், நமது சத்தியகீர்த்தியையும், மறந்து கைசோரவிடேன், நீ சந்தோஷமாய் அயோத்திக்குவருவாயடிகண்ணே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

காதலனுலேவிந்தக் கலகமுந் துன்பம்வந்தே
[illegible] னும் பனிபோலநீங்கியார்க்குஞ்

சாதகமாவதர்க்கே சக்கியமில்லாக்கீர்த்தி
போதவேபெறுவீர்விண்ணோர் புகழ்ந்திடப்பதியாள்வீரே.

(சத்-வ-ம்) அண்ணலே ? இதெல்லாம் நீர்மேற்குமிழி, நிலையில்லா வாழ்வேயாம் ; ஆனதால் கந்தையே ? அந்தவிஸ்வாமித்திரனால் இப்பேர்க்கொத்தத் துன்டங்களையனுபவித்து, பின்பு இந்தபூலோகத்தின்கண் யாவருக்குங் கிட்டாதபெருங் கீர்த்தியையடைந்து திவ்யபதவியிற்சேருவீர் மகானுபாவா.—ஓ ! பரம்பொருளே ! என்னகோலங்காட்டப்போகிறாய் ! ஐயையோ ! யாதுந்தெரிந்திலேனே !

## சத்தியகீர்த்தி கண்ணிகள்.

இராகம்-எதுகுலகாம்போதி, தாளம்-ஆதி.

இந்தவிதிகாணவோ அடவியில்வந்திருந்தோம்
என்னகெதிவருமோ ஓ சிவமே ! சிவமே !
சந்தமகிழ்வதாய்த் தானிருந்தோமரைத்துயர்
சாரமதிதருமோ ஓ சிவமே ! சிவமே !
மன்னுதிமன்னர்சூழ மகுடராய்வீற்றிருந்தோர்
வருந்தத்தகுமோநீதி ஓ சிவமே ! சிவமே !
என்னுலிங்காவதேது இறையவர்வருந்தவும்
இருப்பேனேவுனையோதி ஓ சிவமே ! சிவமே !
என்றும்பொய்வசனிக்கா வேந்தலுந்துயருற
எளியேன்காணவுமாமோ ஓ சிவமே ! சிவமே !
வென்றுவெற்றிபெருவேன் வேற்றரசனெதிர்த்தால்
வினைத்தொடர்க்கேதுவாமோ ஓ சிவமே ! சிவமே !
தருமதேவதைமெத்தத் தாஷ்டீகமாகவே
தானேங்கவைத்துமெய்யா ஓ சிவமே ! சிவமே !
வறுமையினிமேலென்ன வாய்க்குமோவேந்தருக்கே
வஞ்சகனுலேயையோ ! ஓ சிவமே ! சிவமே !
ஆதிசிவமேநீதா னருள்புரிந்தேயெங்களை
அன்புடன்காக்கவேணும் ஓ சிவமே ! சிவமே !
சோதித்தாலுங்கிருபை ஜோதிமனமகிழ்ந்தே
சுபம்பெறமனம்பூணும் ஓ சிவமே ! சிவமே !

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

வரும்விதிவந்தேதீரும் வழிதனிற்றங்குமோதான்
தருமமேகாக்குநம்மைத் தனையனே துயரம்வேண்டாம்
கருக்கலுநீங்கிப்போச்சுக் கடுகிநாம்நாடுசேர
விருப்பமாய்ச்சேனையெல்லாம் வெளிப்படச்செய்வாய்மந்திரி,

(அரி-வ-ம்) பாலகா ? வருவதெல்லா மனுபவிக்கவேண்டியல்ல[illegible] இந்த தேகம் எடுத்திருக்கின்றோம், இது உனக்குந்தெரிக்[illegible] ஆகிலுஞ் சிந்தையில்லை, இப்போது பொழுதும் விடி[illegible]

அயோத்திக்குப்போகவேண்டுமாக்கும், சேனைகளைச் சித்தப்படுத்தி பிரயாணப்பேரிகை யறையச்செய்வாயப்பா.

(சத்-வ-ம்) அப்படியே சித்தப்படுத்துகின்றேன் சுவாமி,—(சித்தப்படுத்தல்) ஆண்டவனே ? உமது ஆக்கினைப்படி சேனைகளையெல்லா மொருமுகச்சேர்த்தன் மகாராஜனே.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

அப்பனேசத்தியகீர்த்தி யருமையாங்குடிகள்வந்து
செப்பவேவே டையாடி சிதைத்ததால்விலங்கைநாமே
இப் வேநாட்டிற்கேகு மெண்ணமும்வதைத்தவாறும்
ஒப்பவேயவர்களகேழ்க்க வொலிப்பிப்பாய்பேரிதானே.

(அரி-வ-ம்) அப்பா பாலகா ? மிருகங்களால்வருந்திய குடிகள் கேட்டுச் சந்தோஷிக்கும்படிக்கு ஜயபேரிகைபடிப்பிப்பாய் சத்தியகீர்த்தி

(சத்-வ-ம்) புத்தி, அப்படியே செயவிக்கின்றேன் அரசே.

## அரிச்சந்திரராஜன் விருத்தம்.

மந்திரிநாம்வந்தோம் மனக்குறையகன்றேயப்பா
மந்திரிசேனையெல்லா மவரவர்விடுதிங்கேக
மந்திரிவிடைநீயீந்தே மகாபலவேடருக்கே
மந்திரிபொன்பட்டாடை மகிழ்ந்திடவளிப்பாயப்பா.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி ? காட்டுமிருகங்களைவென்று நாம் நாடு வந்தோம், இனி சேனைகளையவரவர் விடுதிக்குப்போகச் செய்து வேடர்களுக்குநல்லவெகுமதிகொடுத்தனுப்புவாயப்பா பாலகா.

(சத்-வ-ம்) அப்படியேகொடுத்தனுப்புகிறே னரசே. (கொடுத்தல்)

(பொது-வ-ம்) சபையோர்களே ? விஸ்வாமித்திரன்விட்டபன்றி அரிச்சந்திரமகாராஜன் அம்பால் அடிபட்டு நொந்து கௌசிகனிடம் முறையிடவருகிற விதங்காண்பீர்கள்கனவான்களே.

## பன்றி விருத்தம்.

அறமுனியேநீர்விடுத்தபடியேயெருட்பலத்தாலடைவிதன்னில்
உறமானைபரிசேனைகளைக்கோட்டாலிடித்திட்டேனுதிரமெங்கும் [ன்
பரவியதனாரியைப்போற்சாய்ந்துவிழபார்த்துநான் பதைக்கக்கொன்றே
புரமெரித்தபரமனைப்போலரிச்சந்திரனெனையெய்தான்புனிதாகாப்பீர்.

(பன்றி-வ-ம்) முனிநாதா ? உமது ஆக்கினைப்படி அரிச்சந்திரன் சேனையின்பேரில் விழுந்து மடித்தே னதற்குள் அரசன் காலருத்திரனைப்போல வந்து என்னை வருத்தித் துறத்தினான் காப்பீர் சுவாமி.

(விஸ்-வ-ம்) அப்படியா பன்றியே, ஆ !! உன்னை வருத்தியபாதகன் செருவத்தை யொடுக்குகிறேன், நீ சுகமாயிருப்பாய் பன்றியே.

வேட்டஞ்செய்காண்டம்,

சம்பூரணம்.

சுப்ரமண்யஸ்சகாயம்.




ஸ்ரீசாமுண்டீஸ்வரி துணை.

பெங்களூர் ஆதி விநோத சபை.

# சூழ்வினை காண்டம்.

பொது விருத்தம்.

ஏமமுறையிடக்கேட்ட முனிதான்மெத்த
யெறிசுடரைநாசிமுனை தனிலெழுப்பி
வாமனனும்பூசுரரும் முனிவர்போகர்
வாடிமனம்நிலைகுலைந்து மயங்கிவீழ
தாமதம்போலிருநீச்சத் தையன்மாரை
தற்செயலாயுற்பித்து ஆவலோடு
காமனுடைப்பெண்களென வரிச்சந்த்ரன்பாற்
களிப்புடனேயனுப்புவிதங் காணுவீரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? புன்றிபட்ட துன்பத்தைக்கண்ட கௌசிகன் கோபங்கொண்டு, நாசிசுவாசத்திலிருந்து இரண்டு புலைச்சியர்களையுண்டுபண்ணி அரிச்சந்திரனிடம் ஏவுகிறவிதங்காண்க.

பாணப்பெண்கள் விருத்தம்.

திங்களுங்கங்கைபூண்டுந் திரிபுரமெரித்தோன்றன்னைப்
பொங்கமாய்த்துதிக்கும்நாதா புனிதனேநின்றாள்போற்றி
யெங்களையிட்சணத்தி லெண்ணியேபடைத்ததேனோ
புங்கவாதெரியநன்றாய்ப் புகன்றிடிற்புரிகுவோமே.

(பாணப்பெண்கள்-வ-ம்) சுவாமி? எங்களைப் படைத்தக் காரியத்தை தெரியச்சொல்லவேண்டும் முனிநாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

மயிலினைப்பூட்டும்பெண்களேநீங்கள்மலைகளுங்கரையச்சங்கீதம்
ஜெயம்பெறப்பாடியயோத்திபன்மனதைச்சீக்கிரமுறிந்திடச்செய்தும்
பயமதுகடிந்தேமோகமதூட்டிப்பாவைகாள்சரசமும்காட்டித்
தயவுடனழைப்பீர்தடுத்திடுங்குடையைத்தானமாய்வாங்கிவேகமாய்

(விஸ்-வ-ம்) ஏ! பெண்களே? நீங்கள் அரிச்சந்திரனைக்கண்டு அவன்மோகிக்குபடிக்கு நாட்டியஞ்செய்து பாடி, உங்களை சேரச்செய்து சுகிப்பீர்கள்; தடைசொல்வானாகில் பூச்சக்ரகுடையை வெகுமதியாகக்கொடுக்கச்சொல்லிவாங்கிவருவீர்கள் என் கண்மணிகளே.

(பாண-வ-ம்) சுவாமி? உங்களருளால் உதித்த நாங்கள் நீர் சொன்னபடியேசென்று காரியத்தைமுடித்துக்கொண்டு சீக்கிரத்தில் வருகிறோம் முனிநாதா, சரணம் சரணம், போய்வருகிறோம் ஆண்டவா.

(விஸ்-வ-ம்) அப்படியே போய்வாருங்கள் என் மக்களே.

பொது விருத்தம்.

புவனமெலாமொருகுடைக்கீழாளும்வீரர்
புண்ணியநெறிதவறாதோரழகில்மாரர்
கவதியும்படைத்தகுணசீலர்சூரர்
நாற்றிசைவாழ்ப்ரஜைகளையுங்காக்குத்தாரர்
தவம்புரியுமுனிவருக்கேயினியசாரர்
தயைபொருமைநீதிதனையுணர்ந்ததீரர்
பலமனுகாநடையுடையோர்பகைவறத்தாரர்
பரிதிகுலவரிச்சந்திரர்கொலுவாராரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இராஜாதி இராஜரான அரிச்சந்தி மகாராஜர் கொலுவிற்குவருகிறார் என்றறிவீர்கள் கனவான்களே.

அரிச்சந்திரராஜன் வருகிறபொது தரு.

இராகம்-அடாணா, தாளம்-ஆதி.

பல்லவி.

மன்னர்மன்னருக்கெல்லாம் மன்னரரிச்சந்திர
மஹாராஜரிதோ வந்தார் - கொலுவிருக்க
மகுடவர்த்தனர் வந்தார்.

அநுபல்லவி.

அன்னநடைவஞ்சிய ராடச்சவரிபோட
அந்தணர்சித்தர்யோகி ராசியதனைப்பாட
நன்னகர்மாந்தர்களும் நாடிப்பணிந்திட
நாற்றிசையிலுங்கீர்த்தி நயமுடனணிந்திட
நல்லுளந்தங்கியே நவிலொணாமகிமையாய்
அல்லும்பகலும்சிவ னடிதுதிநேமியாய். (மன்)

சரணம்

நெத்திப்பட்டமிலங்க நிகழுமுடியுந்துன்ன
நேராய்முத்துவடயமும் நீண்டவலயமின்ன
சத்தியகொடிதுலங்கச் சாமரைபேரிபன்ன
சான்றோரிவரேயெனச் சகலருந்துதிசெய்ன

நித்தியகருமநெறி நிலைபிசகாதநேயன்
நிகருண்டெனவெவரும் நினைக்கப்போகாததூயன்
பத்தினிமாதுபாகம் பண்பிருத்திடுங்காயன்
பலகலைநீதிப்பத்தி பாரிற்சத்தியவாயன்
பம்பையினொலி பம்பம்பம்மென
ஜம்பையின்ஜாலர் ஜம்ஜம்ஜம்மென
கொம்புகள்தொனி கும்கும்கும்மென
தம்புருஇசை தொம்தொம்தொம்மென
ஜொலிக்க பகைவரை கெலிக்க தவனிலே
பலிக்க சத்தியம் ஒலிக்க புகழுடன்
சொல்லொணாதகீர்த்தி சூழ்ந்திடவந்தவன்
மெல்லொணாதசித்து மேன்மைகள்தந்தவன். (முன்)

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி ? நமது நாட்டின் ஆலயங்களில் கிரமப்படி பூஜைகள் நடந்துகொண்டும், மாதமும்மாரி பெய்துகொண்டும் வருகின்றதா ?

(சத்-வ-ம்) யாதொருகுறையின்றி நடந்துகொண்டுவருகிறது பிரபூ

பொது விருத்தம்.

மாதர்கள்கண்டுநாண மானுக்கள்மையல்பூண
ஆதவர்மனமும்நாட வமரருமபங்கித்தேட
நீதறமுகத்தின்காந்தி நிரேகமதெங்குங்கப்ப
பாதகன்விட்டபாணப் பரத்தையர்வருகின்றூரே.

(பொது-வ-ம) சபையோர்களே ? விஸ்வாமித்திரன் ஏவிய பாணப்பெண்கள், அரிச்சந்திரமகாராஜனிடம் வருகிறவிதங்காண்பீர்களாக.

பாணப்பெண்கள் வருகிற இயல்.

இராகம்-பியாக், தாளம்-ஆதி.

தந்திரமாய் தனிர்த பாணமாதர் வந்தார்.

கந்தகளபம் பூசி கன்னியர்தமையேசி
சுந்தரமாகப் பேசி சொகுசாய்கைகளைவீசி. (தந்)
கொங்கைகுலுங்க ஆட்டி குறிப்பாய்பரதங்காட்டி
செங்கைவளையற் பூட்டி சீவிக்கொண்டையுநாட்டி. (தந்)
அண்டத்துளோர்களுவை அனைவரொளிகண்மேவ
கொண்டைக்குயிலுங் கூவ கோரிச்சபையைத்தாவ. (தந்)
வானத்தமரர் வாடி வருந்திமனங்களுாடி
கினைவொலிகள் பாடி கிடத்தத்தித்தோமென்றூடி. (தந்)

(பாண-வ-ம்) பராக், பராக், வீரகட்டியனே.

(கட்-வ-ம்) பெண்களே ? நீங்கள் யார் ? எங்கிருப்பவர்கள் ? இங்குவந்த காரியம் தெரியச்சொன்னால் இராஜசமுகத்தில் தெரிவிக்கின்றேன்பெண்களே.

பாணப்பெண்கள் விருத்தம்.

இருப்பதுமிமயச்சார லிறைவர்தன்புகழைக்கேட்டு
விருப்பமாய்வந்தோநாங்கள் விநோதமீநடனமாதர்
வெறுப்பதுகொண்டிடாமல் வேந்தன்பாலுரைத்தேயெங்கள்
கருத்தனைமுடிக்கச்செய்வீர் கழலடிபோற்றியையா.

(பாண-வ-ம்) நாங்களிருப்பது இமோத்கிரி பருவதச்சாரல், நாங்கள் நாட்டியமாதர்கள், இராஜருக்குத்தெரிவித்து எங்கள் கோரிக்கையை ஈடேறச்செய்யும் வீரகட்டியரே.

(கட்-வ-ம்) அப்படியே தெரிவிக்கின்றேன் பெண்களே.—ஆண்டவனே ? இமயச்சாரலிலிருந்து இரண்டுநாட்டியமாதர்கள் தங்களைக்காணவேண்டியநிமித்தம் வந்திருக்கிறார்கள், உத்தரவாகில் வரச்செய்கின்றேன் மகாராஜனே.

(அரி-வ-ம்) அப்படியா, வரச்சொல்லும்பிள்ளாய்கட்டியனே.

(கட்-வ-ம்) புத்தி ஆண்டவா —பெண்களே ! அரச ருத்திரவாச்சுது, உங்கள்மனம்போல் போவீர்கள் யாதொருதடையில்லை.

(பாண-வ-ம்) சந்தோஷம் வீரகட்டியரே—(சபைக்கேகுதல்.)

பாணப்பெண்கள் கவி.

தீராபராக்கு மாராபராக்கு
சூராபராக்கு துரையேபராக்கு
நேராபராக்கு வீராபராக்கு
காராய்பராக்கு கழலேபராக்கு.

(பாண-வ-ம்) இராஜாதிராஜ ராஜபரமேஸ்வரா பராக்கு.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மேகத்தைப்பழிக்குங்கூந்தன் மேவியபெண்களாரோ
நாகமங்கையரோதேவ நாட்டில்வாழ்நங்கைமாரோ
மோகமங்கையரோமாரன் மொய்த்திடுகன்னிமாரோ
வேகமாயிங்குவந்த வினையதையுரைசெய்வீரே.

(அரி-வ-ம்) பெண்களே ? நீங்கள் யார் ? தெய்வலோகத்துப்பெண்களோ ! நாககன்னிகளோ ? இரதிமாதர்களோ ? இங்குவந்த காரியம் யாது ? தெரிவிப்பீர்கள் பெண்களே.

(பாண-வ-ம்) மகாராஜரே ? நாங்களிருப்பது இமயமலைச்சாரல், எ

ங்கள் தொழிலோ நடனம்புரிவது, குலமோ நீச்சக்குலம், தங்கள் கீர்த்தியைக்கேட்டு ஆடிப்பாடி வெகுமதிபெறவந்தோம் பிரபூ.

(அரி-வ-ம்) அ! இதென்ன விந்தை! சரி, எக்குலமாயிருந்திடினும் கல்விப்பொருளே மேன்மையாதலால் இவர்களது திறத்தைப்பார்ப்போம்,—நல்லது நீங்கள் கற்றபதத்தையும், நாட்டியத்தையும்பார்ப்போம் ஆரம்பிப்பீர்கள் பெண்களே.

(பாண-வ-ம்) மகாபாக்கியம், அப்படியே பாடி நடிக்கிறோம் மகாராஜனே, சற்று கியாபகம்வைக்கவேண்டியது.

பாணப்பெண்கள் ஜாவளி.

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ரூபகம்.

சாமியுந்தன்முகக்காந்தி சாமாய்த்தைக்குதே ஓ
காமியாகிவட்டவிதி கண்டேனெனைக்காருமே, (சா)
தனியாய்வந்துவேண்டுமாதை தடுப்பதுமேதர்மமோ
இனிவாயெனைச்சேராவிடில் ஏதேதினித்தாளேனே, (சா)
எங்களைப்போற்பெண்களிலே யிறைவனேகண்டதுண்டோ
கொங்கைதொட்டுப்பார்த்தாலிந்தக்குமரிசுகங்காணுமே, (சா)
சரசவிலாசாரியுடன் சையோகம்வீணலவோ
கரத்தாலெனையணைத்தால்செல்லகட்டிரசந்தோணுமே, (சா)
கோபக்குறிநீக்கியெனைக் கொஞ்சிமுத்தமிடுமே
பாபமாகும்நீர்தடுக்கில் பழியேதுமில்லைதேவனே, (சா)

(அரி-வ-ம்) சபாஷ், வெகுநேர்த்தியாயிருக்கின்றது, இன்னம் ஒரு பதம் பாடி நடிப்பீர்கள் பெண்களே.

(பாண-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே பாடி நடிக்கின்றோம்பிரபூ.

பாணப்பெண்கள் ஜாவளி.

இராகம்-வசந்தா, தாளம்-ஆதி.

வாடிநின்றோமையனே கூட வாராதென்னமெய்யனே
தேடியிங்குற்றனம் திகழுடனெங்களைத்
தீண்டாதிருக்கப்போமோ தேவாவிதோ. (வா)
பேடியோநீரன்றி பெண்களில்லாதோ
பிடித்தென்பெருமுலை பேணவிதோ. (வா)
ஆண்மையிருந்திடில் அணைந்திடுமெங்களை
அலியாகிலெங்களுக்கு அரையுமிதோ. (வா)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மந்திரிகேளாயிந்த மாதர்கள்புரிந்தநாட்யங
தந்தனர்செவிக்கேயின்பம் தனையனேயிவர்க[illegible]

சிந்தையாய்ப்பட்டுமோடை வெள்ளிபொன்பணியுமீந்து
சுந்தரர்சத்தியகீர்த்தி சுருக்கெனவிடையீவாயே.

(அரி-வ-ம்) அப்பா மந்திரி ? இந்தப்பெண்கள் பாடியபதங்கள் செவிகளுக்கு இன்பந்தந்தன், ஆனதால் நல்ல ஆடையாபரணங்கள் கொடுத்தனுப்புவாயப்பா பாலகா.

பாணப்பெண்கள் விருத்தம்.

வேந்தரேகேட்பீர்நாங்கள் வேண்டிலோம்பொன்பட்டாடை
சாந்தரேயெங்களுக்கே சம்பத்துமெத்தவுண்டு
தீந்திடவெங்களாசை தேவேபூச்சக்ரமென்னும்
காந்தியாங்கொடையளித்தாற் களித்துளங்கொள்ளுவோமே.

(பாண-வ-ம்) இராஜபரமேஸ்வரா ? நாங்கள் பொன்,பொருள்,பட்டுகள் வேண்டோம்,எங்களுக்கு மெத்தவுண்டு ; ஆதலால் உமது பூச்சக்கரக்கொடையைக்கொடுத்தால், சந்தோஷமடைந்துபோவோம் பிரபு.

(சத்-வ-ம்) அ ! ! ! என்னவிபரீதகாலம் ! சிவசிவா !

சத்தியகீர்த்தி விருத்தம்.

படபடப்பின்றிச்சொன்ன பாவைகாளுரைக்கக்கேளீர்
கடனமும்புரிந்தீர்ராஜர் நற்பணிபரிசுமீந்தால்
விடமெனத்தடுத்தீர்கிட்டா விருதெனுங்கொடையைக்கேட்டீர்
இடமுளபொருளைக்கேட்டாற் றிண்புயரளிப்பார்தானே.

(சத்-வ-ம்) ஏ ! பெண்களே ? கிட்டும்பொருளைக் கேட்டால் கிடைக்குமேயன்றி, கிட்டாப்பொருளாகிய கொடையைக்கேட்டால் அகப்படாதென்றறிவீர்கள் மாதர்களே.

பாணப்பெண்கள் விருத்தம்.

தேடியேவந்துகாட்டியந் தேவனேபுரிந்தோமெத்தப் [னே
பாடியேயர்கொடையைக்கேட்டோம் பார்வேந்தேயெங்கள்தன்
கூடியேசுகித்தால்மெத்தக் குணமதாங்கொடையும்வேண்டோம்
ஓடியேசெல்வோம்நாங்க ளூற்றதோர்பதிக்குத்தானே.

(பாண-வ-ம்) மகாராஜரே ? நாங்கள் வந்து பாடியாடி, சந்தோஷப்படுத்தியதற்கு வெகுமதியாக ஒரு சிறியகொடையைக்கேட்டோம்,தடுத்தீர், பெரிதல்ல எங்கள் மனஞ் சந்தோஷப் படும்படியாகவாவது எங்களில் ஒருத்தியைச்சேர்ந்தாலதுவேபோதும் மகாராஜரே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

வழுத்தியவார்த்தைகேட்ட வலுமைசேர்கட்டியக்காரா
இழுத்திவர்காத்தைப்பற்றி யிவ்விடம்நின்றிடாமல்
கழுத்தினைப்பிடித்துத்தள்ளு கரேமாம்வார்த்தைசொன்ன
கொழுத்தவர்தம்மைநீயே கொப்பெனநீக்குவாயே.



(சத்-வ-ம்) அடா கட்டியனே? அடாதவார்த்தையாடிய இந்தப் பெண்களைக் கழுத்தைப்பிடித்து நெட்டி நமது நாட்டைவிட்டப்புறந்துறத்திவிடுவாய் கட்டியனே,

(கட்-வ-ம்) நல்லது ஆண்டவா,—நடவுங்களடி துன்மார்க்கிகளே, கழுத்தைப்பிடித்து இதோ தள்ளினேன், ஓடிப்பிழைத்துப்போங்கள்; இல்லாவிடில் கொடியதெண்டனைக்கு ஆளாவீர்களடி பெண்களே.

பாணப்பெண்கள் கண்ணிகள்.

இராகம்-காபி, தாளம்-ஆதி.

அடி வாடி போகலா மினிநாமே.

நாடி நாடியே நயந்து பேசிப்
பாடி னாலும் பாரான் தோஷி
கூடிலேது குணமாகுமடி. (அடி)

கோடி கோடியாய் கும்பி டிட்டும்
வாடி பாதம் வணங்கித் தொட்டும்
யோடியாக முனிந்தானடி. (அடி)

மெத்த ஆடி மெலிந்தோமென்று
கத்த இதோ கடிந்தா னின்று
மத்தன்சுத்த மட்டியாமடி. (அடி)

வேறு.

இராகம்-காபி, தாளம்-ஆதி.

அடிமானேயென்ன அவதிப்பட்டோமடி
அயோத்திபனடித்திட லானதுமிப்படி. (அ)
முடிமிசைமதியணி மூர்த்தியின்பாதத்தை
மூற்றுமறிந்தமித்திர முனிசொன்னபோதத்தை
படிதனிலெவர்களும் பணியநடித்துநம்மை
புலவாநிகழ்ந்துபேசி பதரவடிக்கலானான். (அ)
மண்ணிலுள்வேந்தரு மமரர்முனிவர்களும்
மனமதுருகிநம்மை மருவுவரெவர்களும்
கண்ணிமைதன்னிலுங் கனிவுகாட்டாமலே
கடிந்துவவமதித்தே கட்டியன்தள்ளிட. (அ)
பேடிப்பிறப்பாயினும் பேதையேயென்மொழியால்
பிரியமீறுவான்மாரைப் பிசைந்திடுவான்கையால்
மோடியாயிருந்தனன் மொழியொணுச்சத்யவான்
முனிவற்கிதையுரைத்து முறையிடுவோமடி. (அ)

(பாண-வ-ம்) அடி தங்கா? இப்படியும் ஒருமனிதனிருப்பானோ?

ம்மைப்பார்த்த ஒவ்வொருபேடிகளும் சொக்கிரார்கள், இதென்ன காரணமாயிருக்கும், நமது முனிவர்சொன்னகாரணம் ஒருபக்கமிருக்கட்டும், இப்படி கட்டியனால் டிபட்டு அவமானமடைந்தபோதிலும், எனக்கு அவன்பேரிலிருக்கும் மோகம் அளவிடக்கூட இல்லையடி.

(மற்றொரு பாண-வ-ம்) அடி அக்கா? நீ சொன்னமொழிகள் யாதேனும் பிசகென்பதில்லை, எனக்கும் உன்மனம்போ லவனியாபகமே, என்ன நினைவுகொண்டோ நம்மைப்படைத்து இதரபெண்களைநாடா விரதம்பூண்ட மன்னனிட மனுப்ப, நாமும் கட்டியனால் படாதபாடும் பட்டோம், இனி சிந்திப்பதில் பலனில்லை, தேகமோ வருந்துகிறது, சீக்கிரம் பின் பற்றிவருவாயடி அக்கா.—(முனிவனிடமேகுதல்)

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாகப் பாணப்பெண்கள் அடிபட்டோடிவந்து விஸ்வாமித்திரனிடமுறையிடுகிற விதங்காண்க.

பாணப்பெண்கள் விருத்தம்.

நீருரைத்தபடிசென்றேயரிச்சந்திரன்பா
னேர்மையுடனடித்திட்டோமகிழ்வுகொண்டே
தேறுபட்டுமுத்துவடம்பொன்கொடுக்கத்
தீரனுமேதானுரைக்கக்கொடையைக்கேட்டோம்
பேருடைமந்திரிதகாதெனத்தடுக்கப்
பேசினோமரசனையேசேரச்சொன்னோங்
கூறுகெட்டவார்த்தையென்றேகோபங்கொண்டான்
கொய்யெனக்கட்டியன்றள்ளிக்குத்தினானே.

(பாண-வ-ம்) முனிநாதா? நாங்கள்பேயய் பட்டபாட்டை என்னென்றுசொல்லுவோம்! தங்கள்சொற்படிசென்று அரிச்சந்திரன் முன் சங்கீதத்துடன் நாட்டியஞ்செய்தோம், அதிக சந்தோஷப்பட்டு வெகுமதிகொடுக்கச்சொன்னான், அதை நாங்கள் மறுத்துக் கொடையைக் கேட்டோம், பக்கலிலிருந்த மந்திரிதடுத்தான், அரசனைச் சேரவாவென்றோம், அதன்பேரில் கட்டியன் கழுத்தைப்பிடித்து அடித்துத்தள்ளினான், நாங்கள் இன்னம் சற்று நேரமிருந்தால் பிழைப்பதரிது, இதோ பாரும் அடித்தழும்புகளை, ரொம்பவும்வருத்துகின்றது நாதா.

விஸ்வாமித்திரன் கோபிக்கிற தரு

இராகம்-அடாணா, தாளம்-ஆதி,

பல்லவி.

இப்படியடிப்பித்தானா! என் பெண்களே கண்களே உங்களை
இப்படியடிப்பித்தானா!

அநுபல்லவி.

கைப்பிடித்திழுத்தேயுங்கள் காலடிபணியச்செய்வேன்
கள்ளனவனுடைய வுள்ளங்கலங்கச்செய்வேன். (இ)

சரணங்கள்.

கொண்டகெருவமெல்லாம் போக்கிறேன் - நீங்கள்
கோரியபடிநடக்கப்பார்க்கிறேன்
கண்டவுடனுங்களைக் கைப்பிடித்தாலாச்சு
கருதேனென்றாலவன்மேற் காட்டுவேன்வெகுயேச்சு. (இ)
மாதைத்தொடவேயுண்டோ நீதியே - அவன்
வமிசத்திற்செல்லா நானே ஆதியே
வேதைசெய்தவன்கரம் வெட்டவைக்கிறேனீங்கள்
விடுத்துத்துயரமென்பின் விரைந்துபோவோம்வாருங்கள். (இ)
அரசன்றனக்கிதுவுந் தகுமோ - யாசித்தோரை
யடித்துத்துறத்தநியாம்புகுமோ
சரசரவென்றேவாங்கள் சாடுவேனவனை
தாழ்ந்தாலுங்களைமணந் தாடச்செய்வேன்பினை. (இ)

(விஸ்-வ-ம்) அடா கட்டியனே? அந்த அரிச்சந்திரனுக்கு நான் வந்திருப்பதாகத் தெரிவியும் பிள்ளாய்.

(கட்-வ-ம்) நல்லது சுவாமி — இராஜபரமேஸ்வரா? விஸ்வாமித்திரமுனிவர் இச்சமுகமிருந்து தன்னுண்டை நீச்ச மாதரை யழைத்துக் கொண்டு வெகுகோபங்கொண்டு வந்திருக்கிறார் ஆண்டவா.

(அரி-வ-ம்) அ! அப்படியா! இதோ வந்தேனப்பா கட்டியனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தவத்தினிலுயர்ந்தவென்றன் குருவேயுன்றாள்போற்றி
பவத்தினையொழிக்கவிவ் பண்பனேயுன்றாள்போற்றி
இவரிருமாதரோடு மினையிலாக்கோபங்கொண்டே
அவதியோடிங்குவந்த தடியனுக்குரைப்பீர்போற்றி.

(அரி-வ-ம்) போற்றி போற்றி எம்முண்டவனே? தாங்களிவ்வளவு கோபங்கொண்டு இந்த நீச்சமாதரை யழைத்துக்கொண்டுவந்த காரியம் அடியேனுக்குத் தெரிவிப்பீர் முனிநாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

அலைகடலுள்ளதோரிந்த வவனியையாளுமன்னர்
நிலைமையுந்தய்யுநீதி நேர்மையுமுன்னிற்காணேன்
கொலைபுரிதொழிலுங்கெட்ட குணங்களுமிரப்போர்மேல்
தலைமையும்புரிந்தாயன்றித் தகைமைவேறுண்டோ சொல்வாய்.

(விஸ்-வ-ம்) அடா அரிச்சந்திரா? ஆ! ஆ! டளா! பளா! நன்றாயிருக்கிறது! அரசர்களுக்குரிய பூததயவு, பச்சாத்தாபம், ஈவு, இரக்கம், நீதி, இவைகளிலொன்றேனும் உன்னிடங்காணேன், ஆனால் கொலைபுரிவது, கெட்டநடக்கை, ஏற்பவர்க்கில்லையெனலாகிய குணங்கள் மாத்திரங்கண்டேன், இவைகளுக்கு நீதான் குரு, சொல்லடாசொல்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

இப்புவனங்களெல்லா மேத்திடுமுனியேநாதா
ஒப்புமைவேறுமுண்டோ வுரைக்கவுமுமக்குளானேன்
தப்புமோவெனதுஅன்பு தனையனையிழிவதாகச்
செப்புவதறியேனீருஞ் சீருடன்வெளிசெய்வீரே.

(அரி-வ-ம்) சுவாமி? உமதுவாக்குக்கு வேறுசொல்ல இவ்வுலகோரில் யாவருளர், இதன்றி எனது நெறியைத்தாங்களும் தங்களைப்போன்ற மகான்களும் கொண்டாடியிருக்க, இப்போது இவ்வாறு கோபிப்பதர்க்குக்காரணந்தெரியவேண்டும் நாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

தவஞ்செய்வோர்க்குதவுமத்த தன்மையைநீக்கிநீதான்
பவமுறக்காட்டிலேகிப் பலமிருகத்தைக்கொன்றாய்
சுவமுளசோலைவாழும் நல்பன்றியைவதைத்தா
யவமதுவன்றோநீயு மடித்ததுமிவரைத்தானே.

(விஸ்-வ-ம்) அடா அரிச்சந்திரா? நன்றாயிருக்கிறது, உன்னைரொம்பவும்மெச்சினேன், ஏனெனில் செய்தகாரியங்களை மறைத்து அஞ்சாநெஞ்சுடன் என்னையே கேள்விகேட்கலானாய், இதுவும் விந்தையே, துஷ்டா? தவசிகளுக்குத் துணையாயிருக்கு மிருகங்களைக் கொன்றாய், எனது சோலையில்வாழ்ந்திருந்த பன்றியை வதைத்தாய், அதன்றி என் பெண்களாகிய இவர்களையுமடித்தாய், இதுவும்நீதியோ.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

நீதியாமன்னர்வேட்டை நீடித்தன்முறையேயாகு
மாதிமிலுதித்தவேத மறைவதுமறிந்திலீரோ
கோதிலாமனத்தோய்மாதர் கூறியமொழியால்மந்திரி
யோதினன்றன்ளச்சொல்லி யும்பனேபொறுத்திடாயே.

(அரி-வ-ம்) சுவாமி? தங்களுக்குத்தெரியாததொன்றில்லை, கோபஞ்செய்யாமற் செவிகொடுக்கவேண்டும், அதாவது ஆதியில் தாங்களசெய்யுங்கால்குடிகளுக்குற்ற இடர்களைத்தமதெனவெண்ணி அவ்விடர்களைப்போக்கி காக்காதிருந்திருக்கமாட்டீர், அவ்வாறே உமது அநுஷ்டானிய யானும் இந்நாட்டுள் பிரவேசித்த மிருகங்களையும், உட

ன் வந்த பன்றியையும் அடித்துத்தூக்கினது நீதியே, இதன்றியில் இம்மாதர்கள் அடாதவார்த்தைகள் ஆடினதை மந்திரி நீதியோதேதே த்தும், மென்மேலும் அக்கிரமத்திற்குப்பிரவேசித்ததால் கட்டியனைக் கொண்டு தள்ளச்செய்தான், இதுகள் குற்றமென்றுதோன்றிடில் மன்னித்தாள வேண்டும் ஆண்டவனே.

(விஸ்-வ-ம்) அடா சண்டாளா? அச்சமின்றி எனக்கே நீதியுரைக்க வாவந்தனை, சபாஷ், நன்றாயிருக்கிறதடா துரோகி.

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம் - சுருட்டி, தாளம் - ரூபகம்.

பல்லவி.

கோபஞ்செய்குவதேனையா என் குருவே மருவே திருவே நீர் (கோ)

அநுபல்லவி.

பாபந்தீர்த்தென் தந்தைக்கேசுகம் பாலித்தேயந்த மேலிட்டநாதா
தாபமேது அடியேனுக்கருள் தருகவேணுஞ் சகியேன்பாதா. (கோ)

சரணங்கள்.

சாமியானை மீறியொன்றுஞ் சாற்றச்சக்ய மல்லநாதா
பூமியில்நான் வந்தபோதேயுன் பொன்னடிக்காளானேன்வேதா ()
பாந்துபரந்து பட்சிகளெலாம் அடர்ந்தவிருட்ச மடையுமோநாதா
பிறந்தநாளா யுன்றன்பாதம் பெருமையைக் கொண்டிருந்தேன்பாதா ()
வனத்திலுமிந்த நாட்டிலுள்ள வகையோருக்கிடம் வேறேநாதா
எனக்குக்கெதி யுன்றன்பாதம் என்றேநம்பி யிருந்தேன்வேதா, ()
சிறியன்செய்த பிழைகடன்னைச் சிந்தைபொறுத்தல் பெரியோர்நாதா
அறியேனென்றும் புரியேன்வேறு அடியேனுன்றன் சேயேபோதா. ()

# திருமுடியுதைத்தல்.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

மனமதுகலங்கவுன்றன் மணிமுடியுதைத்தேன்மெத்தச்
சினங்கொண்டேன்தடுத்துச் சொன்னாற்செபித்திடவினைவுங்கொ [ள்வேன்
கனமுடனானைபெற்றக் கன்னிகைமாரைநீதான்
மனமுறச்செய்தவேலை மன்னிக்கலாகாதன்றே.

(விஸ்-வ-ம்) அடா துஷ்டா? இதோ தேசதேச அரசர்களும் மற்றேனையோர்களுங்கண்டு வணங்காநின்ற நவரத்தினங்களிழைக்கப்பட்ட அழகிய உன் திருமுடியையுதைத்துத்தள்ளினேன், வேறு தடுக்கில் தடையின்றி சபிப்பேன், அ! என்பெண்கள்பேரில் நீ நடாத்திய அக்கிரமத்தை ஒருக்காலும் மன்னிக்கப்படாதென்றறிவாய்துஷ்டா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அரசின்சபையில்வந்தே அடாததோர்வார்த்தைசொல்ல
த்ரமதேவிவர்கள்தம்மைத் தான்மேவவுரைத்தல்நன்றோ
பரபரப்புடனேவந்த பாவையர்தமக்கேயூறி
திரமுடனிங்குதட்டிற் றீயன்செய்மார்க்கம்பாதோ.

(அரி-வ-ம்) சுவாமி? கொடுத்தவெகுமதியைத்தடுத்தும், இராஜசபையில் அடாதசொற்களைப்பேச இவர்களுக்குத்தகுமோ நாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

தானத்திலுயர்க்தோனென்றே தான்கொண்டேன்மனதில்தோற்றம்
மானமும்பெருமைவேண்டில் மருவுவாயிவர்கள்தம்மை
யீனமென்றுரைப்பாயாகி லென்மனப்படிநீயீந்தால்
மோனகான்களிப்பேனீதான் மொழிசெய்வாய் விரைவாய்த்தானே.

(விஸ்-வ-ம்) நீ தானம்கொடுப்பதில் ரொம்ப தீரனென்றறிந்தேன், அது இருக்கட்டும், உனக்குப்பெருமைவேண்டில் இவர்களைக் கலியாணஞ்செய்துகொள்ளு, இல்லாவிடில் நான் கோரும்வாறுகொடுப்பாயா இல்லையா சொல்லடா அரிச்சந்திரா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஏதுநீர்கேட்டிட்டாலு மீவேனன்றடையிராது
மாதினைத்தழுவவெண்ணம் மனதினிலென்றுநாடேன்
வாதனையெதுவந்தாலும் வாங்கிடேன்மனம்பின்னுதா
சோதிக்கலாமோநாடிச் சொல்வதைக்கொடுப்பேன்கொள்வீர்

(அரி-வ-ம்) சுவாமி? நீர் எதுகேட்டபோதிலும் தருவேனன்றி இதராதர்க்சோரவிரதம் பூண்டிருக்கும் யான் (தேவரீருக்குப்புதல்விகளாக இருக்க இவ்வடிமைக்குத்தங்கைகளே) ஒருக்காலுஞ்சேரவிரும்பேன், எத்துயர்வரினும்தாங்குவனே அலது பின்வாங்கேன் நாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்

வேண்டியதெதுவோகேட்க விருப்பமாய்ச்சொன்னாய்நீதான்
ஆண்டிடுமரசுநாடு மதிலுளபொருள்களெல்லாம்
தாண்டிநீகர்த்திடாமல் தருமவானுவாயீந்தா
லீண்டிங்குசெய்தகுற்ற மினிப்புடன்பொறுப்பேன்காணே.

(விஸ்-வ-ம்) அடா கேட்டதைக்கொடுப்பேனென்ற துராங்காரியே உனது செங்கோல், அரசு, நாடு, நகரமுதலான வைகளை நின்றநிலையிற்கொடுத்தால் நீ வேணுமென்று செய்தகுற்றத்தைப் பொறுப்பேனடா அஷ்டப்பூச்சியே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மன்னவனுவேயாகும் மாமுனியுரைப்பேன்கேளீர்
சொன்னதோர்வார்த்தைதப்பேன் சுருக்கெனநீட்டுங்கையை

யிங்கராசும்வாழ்வு மிறைவகின்றனக்கேயென்று
வன்னமாய்த்தாரைதானே வார்க்கிறேன்கொள்ளுவீரே.

(அரி-வ-ம்) இச்சடமோ நீர்மேற்குமிழி, நிலையில்லாமண்சுவர், ஆனதால் தாங்கள்கேட்டவாறே எனது அரசும், நாடு, நகரமுதலியவைகளும் யாதொரு பற்றுமில்லாமல் இதோ தத்தஞ் செய்கின்றேன் கைக்கொள்ளும் தயாபரா.

(விஸ்-வ-ம்) இது நிஜமானவார்த்தைதானு? சத்தியந்தானு? அல்லது ஏமாற்றலா? எனக்கோ நம்பிக்கையில்லை மன்னு.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தப்பிடேன்சொன்னவாக்கைத் தவமுனிசத்யஞ்சத்யஞ்
செப்புவாறிதரமாதர் சேர்க்கையைவிரும்பேனுவே
முப்புரமெரித்தோனுணை முனிவரேயரசையிந்தேன்
இப்புவிபுசமுநாட்டை யேற்றுநீராளுவீரே.

(அரி-வ-ம்) சுவாமி? நான் சொன்ன வாக்கைத்தப்பேன், சிறுநகைபூண்டு திரிபுரமெரித்தமுக்கண்ணன்பாதமறிய எனது அரசுமுதலியவைகளை உமக்கே கொடுத்தேன், கொடுத்தேன், கொடுத்தேன், ஆனதால் நீர் சுகமாக அரசுசெய்வீர், யாதொருதடையில்லை, இது நிற்க இதரமாதர்களை நான் கனவிலும் விரும்பேனென்றறிவீர் தேவா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

வேறேநானென்றுஞ்சொல்லேன் வேந்தனேசத்யனீயே
பாரையேயெனக்கன்பாக பண்புடனளித்தேனென்றாய்
நீரைநீகையிலள்ளி நினைவதையென்மேல்வைத்தே
தாரைதான்வார்ப்பாயாகில் சத்யமென்றுணருவேனே.

(விஸ்-வ-ம்) இராஜனே? நீ நாடு, நகரமெல்லாங்கொடுத்தேனென்றாய், இது சரியென்று நம்பப்போகாது, ஆனல் உன்கையில் ஜலமுதலியவைகளையள்ளி என்கையின் பேரி லிருத்திமுழுமனதோடுதாரைவார்த்தால் நம்புவதற்குத் தடையேயில்லை, வேந்தனே.

## தத்தஞ்செய்தல்.

(அரி-வ-ம்) என்ன ஆளவந்த தயாபரா? தேவரீர் கேட்டதும் வியப்பே, ஆகிலும் பெரிதல்ல, தங்கள் திருக்கரங்களை நீட்டும், இதோ என்முழுமனதோடு இந்த அரசைச்சார்ந்த நாடு, நகரமுதலியவைகளில் எனக்குள்ள சுதந்திரத்தை எள்ளும் ஜலத்தைக்கொண்டு, இரவி, மதிகள், தேவாதிதேவர், மும்மூர்த்திகள் அறியவும், தத்தஞ்செய்தேன், இனி சந்தேகப்படவேண்டாம் ஒப்புக்கொள்வீர்நாதா.

(விஸ்-வ-ம்) சரி, சரி, அப்படியே ஒப்புக்கொண்டேன், இனி வேறு வேண்டாம், ஆனதால் அரசாக்ஷிக்குரிய உனது கிரீடம், புஜகிருது, வாகுவலயங்கள், முதலானதும் உனதுதேவியணிந்திருக்கும் பணிமுதலானதுகளும் கொடுப்பாயப்பா இராஜனே.

(அரி-வ-ம்) முனிநாதா? இவைகளெல்லா முமக்கேசேர்ந்ததுதான் ஒப்புக்கொள்ளும், தேவா? ஆனால் எங்களுக்கு உடுத்திக்கொள்ள வேறு வஸ்திரமாத்திரம் நீரே ஒப்பிக்கொடுக்கவேண்டும் முனிநாதா.

(விஸ்-வ-ம்) அப்படியா, சரி, நீ கேட்டுக்கொண்டவாறு என்மனமகிழக்கொடுக்கும் இவ்வற்புதக்காவி வஸ்திரங்களை யணிவீர்கள்.

(அரி-வ-ம்) சல்லதாண்டவா,—பெண்ணே சந்திரவதனு? அப்பாசுதனே? சமதாண்டவராகிய குருநாதரால் கொடுக்கப்பட்ட இக்காவி வஸ்திரங்களை யணிந்துகொள்ளுங்கள், இதன்றியில் நீங்களணிந்திருக்கும்படியான ஆபரணங்கள் யாவும் கழட்டி முனிவர் பாதத்தருகில் வைத்துவிடுவீர் அறிவுடையோர்களே.

(சந்-வ-ம்) அப்படியே கொடுத்துவிட்டு குருநாதரால்கொடுத்த இந்தக் காவிவஸ்திரத்தையணிந்துகொள்ளுகிறோம் பிராணநாதா.

(அரி-வ-ம்) மகாசந்தோஷம் (மூவருங்காவியுடுத்தல்)

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

கந்தைகள்தரித்துக்கொண்டோம் கனகமுங்களைந்துவைத்தோம்
தந்தையேயேற்றுக்கொள்வீர் தயாபராநாங்களேக
விந்தையாய்வாக்களித்தால் வேறிடமபோறோம்நாதா
நிந்தைகள்பொறுப்பீர்நாங்கள் நின்னடிபணிந்தோம்போற்றி,

(அரி-வ-ம்) சுவாமி? நீர் கொடுத்தக் காவிவஸ்திரங்களை யாதொரு வருத்தமுறாமல் உடுத்திக்கொண்டதுமன்றி முன் பூண்டிருந்த ஆபரணங்களை அதோ கழட்டிவைத்துவிட்டோம், ஆனதால் இனி நாங்கள் வேறுதேயம்போய் பிழைக்க வாக்களிக்கவேண்டும் நாதா.

(விஸ்-வ-ம்) சரி, ஆனால் அப்படியே சுகமாய்ப்போய்வருவீர்கள்.

## சத்தியகீர்த்தி கண்ணிகள்.

இராகம்-புன்னாகவராளி, தாளம்-ரூபகம்.

மாமுனியேயுந்தனிட மனமுங்கருங்கல்லோ - இந்த
வஞ்சம்வைத்தேதானம்வாங்க வந்ததுநீயல்லோ. (மா)
பாவிபுந்தன்மோசவெண்ணம் பாராமல்போனேன் - இந்த
பஞ்சைவேடமன்னனைச்செய்யப் பார்க்கவுமானேன். (மா)
தவமுனியென்றுதாள்பணிய தாக்கியவிவ்வெண்ணம் - நான்
தானறிந்தொறுக்கப்படி, தானடப்போமுன்னம். (மா)

என்னமோசவெண்ணங்கொண்டா யிக்கெதியாக்கப்-பாவி
இதுவோநீதான்றவஞ்செய்தகன மியம்புவாய்க்கேட்க. (மா)
மன்னவனுங்காவிகட்ட மகிழ்ந்தாயோபாவி-சந்திர
வதியென்ருயித்துயிலுடுத்த வைத்தாயோதாவி. (மா)
பாலன்றுயரங்கண்டுமுன்மனம் பதைக்கவில்லையோ-இந்த
பாதகங்களுனைவிட்டப்பால் பற்றுமோசொல்லையோ. (மா)
தெய்வமுனைக்குத்துணையாய்நின்ற தென்னமோமாய-மிந்த
வையகத்திலுனைப்போல்வஞ்சம் வகுப்பரேஞாயம். (மா)
பாழுந்தெய்வமிக்கோலஞ்செய்ய பார்த்துதேயிசைய-நீ
ஏழுசென்மமேடுத்தாலும்பழி யேகுமோவசையே. (மா)
செங்கோனீதிசெயவுனக்குச் சிறதோமுனியே-பாவி
எங்கள்தாயையிப்படிச்செய்தா லேற்குமோ இனியே. (மா)

விஸ்வாமித்திரன் விருத்தம்.

என்னடாசத்தியகீர்த்தி யேசியேபேசுகின்ருய்
என்னடாபோகும்ராஜ னிவர்களைப்புணர்வானகில்
என்னடாகுறைவதாகு மெனக்குமிவ்வரசுவேண்டாம்
என்னடாநீதான்சொல்லி யிணையவேசெய்குவாயே.

(விஸ்-வ-ம்) அடா சத்தியகீர்த்தி? ஏண்டா மிகவும் ஏசி பேசுகிருய், நன்ருயிருக்கிறது, ஆகிலும்பெரிதல்ல, இப்போதாகிலும் உனது இராஜன் இந்த அதி சௌந்தரியமுள்ள பெண்களைச் சேர்ந்தால் என்ன குறைவாகும், நீ அவனுக்குத்தெரியப்படச்சொல்லி சம்மதிக்கச் செய்தால் யாவற்றும் இங்கனே கொடுத்துவிட்டுப்போகிறேனடா.

சத்தியகீர்த்தி விருத்தம்.

நாடதுமிழந்திட்டாலும் நற்பணிதோற்றிட்டாலும்
காடதேயுறைந்திட்டாலுங் கட்டமேதினிவந்தாலும்
வேடமேகுன்றினாலும் வேந்தனுமிதரமாதின்
கோடதைவிரும்பார்நீயுங் கொள்ளுவீர்மனதிற்ருனே.

(சத்-வ-ம்) விஸ்வாமித்திரமுனியே? நாடுமுதலான தும்போய், காடுசேர்ந்து இன்னமதிகமான துன்பங்கள் நேரிட்டாலும், எனது அண்ணல் பரஸ்திரி கவனங்கொள்ளா ரென்றறிவீர் இரிஷியே.

(விஸ்-வ-ம்) அப்படியா, சரி, சரி, போகப்போகப்பார்க்கிறன்.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரவதி? அப்பா தேவதாசா? இனி நாம் இங்கிருக்கப்போகாது, சீக்கிரம் வெளியேருவோம் வாருங்கள், இதுகளெல்லாம் சிவன்செயலேயாம்.

(தேவ-வ-ம்) தந்தையே? தாங்கள்சொன்னது சரியே, நாம் சீக்கிர

மாகந்தாம்போகவேண்டும், ஏனெனில் ஒருவருக்குத் தானங்கொடுத் தனல்லியிலிருக்கப்போகாது, பிதாவே? தோஷமாகும், அம்மணி? சீக்கிரம் வருவீர் போவோம.

(சங்-வ-ம்) அப்படியேவருகின்றேனப்பா.

(விஸ்-வ-ம்) ஓய் ஓய் இராஜனே? இன்னமொருகாரியம், மறந்து போனீர், இப்படி ஓடிவாரும், இராஜனே.

(அரி-வ-ம்) இதோ வந்தேன் சொல்லும் முனிநாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

இரைகொளுமன்னுமோசம் தீட்டிநீபோகப்போமோ
மறையவன்பொன்னைநீதான் மறைப்புதுநீதிதானே
நிறையுளயானைமீதில்நெறிகவுண்டெறிந்ததூர
மிறைவனேயளித்ததுண்டோ வில்லையோசொல்லுவாயே.

(விஸ்-வ-ம்) இராஜனே? இப்படியும் மோசஞ்செய்யலாமா! வேதாந்திகளின்சொத்தைமறைப்பது நீதியோ, முன்னம் நீ எனக்குயானையின்பேரில் வாளிபனின்று கவுண்விடுதூரம் பொன் கொடுத்ததுண்டா? இல்லையா? சொல்லு மப்பா இராஜனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

யாகத்திற்களித்தபொன்னை யமிழ்ததிநான்மறைத்ததுண்டோ
யோகத்திலுயர்ந்தநாதா வுண்மைநீருணராதேனோ
பாகத்தில்யாதுமுண்டோ பரிந்தெனைக்கேட்டீரென்றன்
றேகத்தையன்றிவேறு தீயனுக்கிலைகாண்பீரே.

(அரி-வ-ம்) முனிநாதா? உமக்குக்கொடுத்தபொன்னை நான் மறைத்துவைத்திருக்கின்றேனோ, அன்று வைத்த இடத்திலேயே இருக்கிறதைத் தாங்களறிந்திருந்தும் சமயோசிதத்திற்குத்தக்கவாறு கேட்கலானது என்காலவித்தியாசமே, இப்பவும் எங்கள்தேகந்தவிர வேறுபொருள்காண்கிலோம், நாதா.

(விஸ்-வ-ம்) ஏ இராஜனே? நீ எனக்கு அரசாக்ஷிமுதலானதுந் தாரைவார்த்தபின், உனக்கிவ்விடத்திலிருக்கும் யாதொரு பொருள்களில் உனக்குச்சுதந்தரமுண்டா, அப்படியிருக்க கையைக்கொண்டு கண்ணைக்குத்துவதுபோல் என் சொத்திலிருந் தெடுத்தெனக்குக்கொடுப்பது நீதியோ மன்னா, சபாஷ் நன்றாயிருக்கிறது.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

முன்தானமளித்தபொன்னை முனிவரேயவனானாலும்
பின்தானமளிப்பதோடு பேதறச்சேர்ப்பதுண்டோ
நன்மதியுடையாயென்ற னுடைதைக்கொடுத்தேனென்றீர்
தன்னல்லையுயிருமுன்பொன் தானீங்கலாகத்தானே.

(அரி-வ-ம்) சுவாமி? முன் தானங்கொடுத்தபொன் உம்மிடமொக்கிஷத்திலிருக்க, பின்பு அரசையும், அதிலுள்ளதுந்தாரைகொண்டால் முன்னிருப்புத்தவிர என்றுணரப்போகாதோ நாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

அரசேகேள்யாகத்துக்கா யன்றுநீயளித்தபொன்னை
அரசேநீநீக்கித்தாரை யன்புடன்வார்த்ததுண்டோ
அரசேகேள்ரவிகுலத்தோ ரறைந்தரோபொய்தானென்றும்
அரசேயன்னெறியுமுன்பா லடுத்ததோவிலையோசொல்வாய்.

(விஸ்-வ-ம்) இராஜனே? நீ எனக்குத் தாரைவார்த்தகாலத்தில்பொன்னை நீக்கித்தாரைவார்த்ததுண்டா? சூரியகுலத்தரசர் பொய்பேசினதுண்டா? அந்நெறி யுனக்குண்டோ இல்லையோ சொல்வாயப்பா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தடுத்தெனைக்கேட்கவந்த தயாபராவுரைக்கக்கேளீர்
தடுத்தெனைக்கேட்டபோதே தடையின்றிகொடுக்கவேணும்
தடுத்திடுங்கோபம்வேண்டாம் தனையன்வேறாரடைந்து
தடுத்திட்டகடனைத்தீர்ப்பேன் தானுவேவிடையீவீரே.

(அரி-வ-ம்) சுவாமி? நான்சொன்ன நீதியைத்தடுத்து நீர் கேட்கப்போகாது, அப்படிக்கேட்டபோது கொடுப்பதே யெனக்குச்சத்யமாகும், நீர் கோரியபொன்னை வேறுதேசம்போய் கொடுக்கின்றேன் செலவுதாரும் ஆண்டவா.

(விஸ்-வ-ம்) சபாஷ், மெத்தசந்தோஷம், சரி, எந்தநாட்டில் போய்க்கொடுக்கின்றாய்? அது எப்படி எனக்கு வருகிறவிதம் அரிச்சந்திரா.

(அரி-வ-ம்) சுவாமி? நான் காசிமாநகரத்திற்குப்போய்ச்சேர்ந்து கொடுக்கிறேன், என்பேரில் கிருபைசெய்து என்னுடன்கூட உமது ஆளையனுப்பித்துக்கொடுக்கவேண்டுகிறேன் தேவா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

அப்பனேகேளுமெந்த னாளினையனுப்பிவைப்பேன்
இப்பதிவிட்டேகாசி யெய்ததோர்நாள்துவக்கி
கப்புநாள்நாற்பத்தெட்டுங் கடக்குமுன்கொடுக்கவேண்டும்
தப்பிடிலேதுவாக்குத் தானுரைசெய்வாய்மன்னா.

(விஸ்-வ-ம்) மொழிதவராக்கோவே? நீ கோரியபடியே ஆளையனுப்புகிறேன், இந்த நாடுவிட்டு நீ புறப்படும் நாள்துவக்கி நாற்பத்தெட்டு நாளுக்குள் கொடுக்கவேண்டும், அப்படி கொடுக்கவாறிருக்க ஒரு உறுதிமொழிசொல்லுவாய் மன்னா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயனேநீர்தான்சொன்ன வன்புள்ளதவணைதப்பேன்
ஐயனேதவறுவேனே லாண்டவன்றனைமறந்தே
ஐயனேபுலைபுன்செய்தே யன்னியமாதைச்சேர்வோர்
ஐயனேபோகுமங்க வருங்கதிக்காளாவேனே.

(அரி-வ-ம்) சுவாமி ? நீர் இட்ட கெடுவை ஒருக்காலுந்தவறேன், அப்படித்தவறில் பொய், களவுசெய்து, அன்னியமாதரைச் சேர்வோர் அடையுங்கதி சேர்வேனென்றறிவீர் முனிநாதா.

(விஸ்-வ-ம்) அப்படியா ! நல்லது, போய்வாரும், எனக்குக்கொடுத்த வாக்கைத்தவறாமல் நிலைநிறுத்தும் வேந்தனே.—(மூவரும் பிரயாணப்பட்டேகுதல்) ஓய் இராஜனே ? இப்படிவாரும், இன்னமொருசேதிமறந்தேன், மறந்தேன்,—(மூவரும்மறுபடியும் வருதல்)

(அரி-வ-ம்) இதோ தடையின்றிவந்தேன் தெரியச்செல்லும் நாதா

விஸ்வாமித்திரன் விருத்தம்

தாரைநீவார்த்தநாட்டில் தனித்துநான்சென்றுலென்றன்
பேரையார்கண்டோமென்றே பேசுவார்குடிகளப்பா
ஆரைநீகொடுத்தாக வுரைத்தவற்கெதிரிற்செப்பி
பாரைநானாளச்செய்திப் பதிவிட்டுச்செல்வாய்மன்னா..

(விஸ்-வ-ம்) இராஜனே ? நீ எனக்குத்தத்தஞ்செய்த நாட்டில் நான் தனியே செல்லில் என்னைக்குடிகள்முதலியவர்கள் மதிப்பார்களா, நீ என்கூடவந்து இந்த நாட்டிலுள்ள குடிகள் யாவருக்கும் இன்னவிதமென்று விபரமாய்த்தெரியப்படச்சொல்லுவதுடன் எனக்குக்கீழ்ப்படிந்து நடக்கத் திட்டஞ்செய்துவருவாய் மன்னா.

(அரி-வ-ம்) அப்படியே யாவருக்குந்திட்டஞ்செய்கின்றேன் சுவாமி.

பொது விருத்தம்.

பாவியாங்கௌசிகனு மரிச்சந்திரன்றன்
பட்டணமும்பாக்கியமும் பறித்துக்கொண்டே
தாவியதேரேறிப் பட்டங்கொள்ளத்
தான்செல்லவயோத்திபன் றாளடியிரண்டும்
கோவிடவேப்பூமியின்மேல் பின்னேயோட
நோக்கொணுப்பஞ்சைகளாய்ப் பனுவுமீபோல
தாவியுமேசந்திரவதி தேவதாசன்
தானடக்கச்செங்கோலைத் தான்கொள்வானே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? நாட்டை தானேப்புக்கொள்ள வி

ஸ்வாமித்திரன் இரதமேறிச்செல்ல, பனுதிகளைப்போல அரிச்சந்திரம காராஜனும், சந்திரவதியும், தேவதாசனும், பாதங்கள் நோவப் பின் தொடர்ந்து கைகட்டிவாய்பொத்தி அதிவணக்கத்தோடு அரசாக்ஷியை ஒப்புவிக்கிற விதமறிவீர்கள்கனவான்களே.

அரிச்சந்திரமகாராஜன் அரசை ஒப்புவிக்குந் தரு.

இராகம்-சாவேரி, தாளம்-ஆதி.

பல்லவி.

ஒப்புக்கொள்ளும் சுவாமி - என்னரசதை
ஒப்புக்கொள்ளும் சுவாமி.

அநுபல்லவி.

கப்பியகரிபரி கட்டுக்கூடங்களிது
கருதிகீரேறுமிரதக் காவிடும்மடமிது
தப்பிதமில்லாபொக்கிஷத் தலைவரிடமிது
தயாபராபொருளிடுந் தனவரையாகுமிது. (ஒ)

சரணங்கள்.

நீரிருக்கக்கட்டிய நிகரிலாமாடமிது
நிகழும்பள்ளியரையாம் நீர்தூங்குமிடமிது
நாரிகள்ஜலக்கிரீடை நடத்திடுக்கூடமிது
நத்திவேறுமன்னர் நாள்போக்குமிடமிது. (ஒ)

ஈசா? அரண்மனைமுடிவிது அரிசிவப்பணியது
ஐபாவாயுதச்சாலை அறிவண்டசாலையிது
துறவிகள்கூடியாகந் தொகுத்திடுஞ்சோலையது
சுத்தமனத்தோய்மாது சொருகுசுறஞ்சாலையிது. (ஒ)
சதுரங்கசேனைகளுஞ் சஞ்சரிக்கவிடமிது
தக்கப்பட்டாடைமற்றுந் தான்யக்கிடங்காமது
இதுவெந்தனுட்டினெல்லை யிவர்களென்னமைச்சமார்
ஏற்றுக்கொள்ளுமீசனே யெல்லாமுமக்கேசுமார். (ஒ)
குடிகளுக்கேயுரைப்பேன் கும்பிட்டுமைப்பணிவார்
கொலுச்சீரவடியிதாகுங் கோதைவிலாசம்பாரீர்
அடிகடுறனியான வாதிசிவத்தைக்கோரும்
ஈசாவென்மேற்கோபமேற்றிடாதருட்பாரும். (ஒ)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மந்திரிமார்களேகுடிகளேபொருளில் மகிழ்ந்ததோர்வணிகரேயென்றன்
றந்திரச்சேனுபதிகளேகேளீர் தணிவுடன்யானுமேயிவற்கே
யிந்தநல்லரசுமிதிலுளபண்ட மிரக்கவேயீந்தனன்கனிங்கே
முந்தியென்போலிவரைமதித்து முறைவழுவின்றியேநடப்பீர்.

(அரி-வ-ம்) அப்பா மந்திரிமார்களே ? அருமைக்குடிகளே ? வர்த்தகர்களே ? இந்த விஸ்வாமித்திரமுனிவர் தனது மனம்போனவாறுகேட்டபடி, யாதொரு ஆக்ஷேபனையில்லாமல் எனதரசும், அதைச்சேர்ந்த பண்டபதாதிகளையும், தானமாகக்கொடுத்துவிட்டேன், ஆனதால் இன்றுதொட்டு இவரை என்னைவிட அதிகமாகப் பாவித்து வரன்முறைபிசகாமல் நடந்து கொள்ளுவீர்களப்பா.

குடிகள் விருத்தம்.

ஐயனேயரசேயெங்க ளண்ணலாயாண்டதேவே
தய்யினேயுமதுவாக்கின் றூமொழிமீறுவோமோ
மெய்யினேமுனிக்கேகீர்தான் மேவியிந்நாடளிக்கக்
கையனேயுமக்கேவந்தக் காரணமுரைசெய்வீரே.

(குடி-வ-ம்) இராஜபரமேஸ்வரா ? நீரிடுங்கட்டளைக்குத் தடுத்துச் சொல்பவர் இவ்வுலகிலுள்ளரோ, இது நிற்க, தாங்கள் இந்த இராஜாங்கத்தை இந்த இரிஷிக்குத் தாரைவார்க்கும்படி நேரிட்ட காரணத்தை தெரியச்சொல்லவேண்டும் தந்தையே.— [அடடா என்னகாலம் ! !]

(அரி-வ-ம்) அப்படியே சொல்லுகின்றேன் கேட்பீர்கள் குடிகளே,

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம் - கலியாணி, தாளம் - சாபு.

பல்லவி.

சொல்லுவேன்கேளீர் குடிகளே சொல்லுவேன்கேளீர்.

அநுபல்லவி.

வல்லமையிலிவ ருயர்ந்தோரானதால்
வாக்களித்திட்டேனதைக் காக்குங்கடனுங்களால். (சொ)

சரணங்கள்.

நீச்சமாதரைப் பெற்றே - என்னிடம்
நிகழ்த்தினார்மனமொத்தே
ஆச்சர்யமாயவ ராடல்பாடல்புரிந்தார்
அடியேன்பரிசளிக்க வதைவேண்டாமலிருந்தார். (சொ)

பூச்சக்ரக்குடைகேட்டார் - சத்தியகீர்த்தி
புகழல்லவென விட்டார்
தாச்சண்யமில்லாமற் றங்களைச்சேரவென்றே
சாற்றவென்மனம்நொந்து சாடச்செய்தேனன்றே. (சொ)

செச்சுறவர்களுரைக்க-விம்முனிகோபஞ்
சீறினவராயுரைக்க
கண்டென்னை தூஷித்தே கயவரைப்பற்றென்றார்
கருதிலேனுனெனக் கானிதாவென்றார். (சொ)

சத்தியம்பொய்க்காமல்-என்னரசதை
சாதித்தேன்சிக்காமல்
நித்தியநிராமய நிரூபனருளைப்பாரீர்
நீங்களென்வாக்கைப்போல் நிகழ்ந்திவர்தமைக்காரீர். (சொ)

குடிகள் விருத்தம்.

ஐயையோவிதிதானென்ன வடாதகோர்காலங்கண்டோம்!
ஐயையோசத்யபாஷ வரிச்சந்த்ரன்றனைவிட்டு
ஐயையோகுரூரங்கோப மடைந்தவிம்முனியைப்போற்ற
ஐயையோசிவமேநீதா னமைத்திட்டவிதியோநாதா!

(குடி-வ-ம்) ஓ பரமுந்தெய்வமே! சத்தியம் வழுவாத அரசனைப்பிரித்து கோபத்தையே பூஷணமாகக்கொண்டிருக்கும் விஸ்வாமித்திரமுனியை வணங்க எங்களைச்செய்ததும் உன்னுடையதிருக்கூத்தோ!

குடிகள் அழுங் கண்ணிகள்.

இராகம்-எதுகுலகாம்போதி, தாளம்-ஆதி.

என்னவிதிவந்தது எங்களரசனுக்கே
இவ்வேடந்தரித்திட ஓ சிவமே!
மன்னனெங்களைச்சொந்த மக்களைப்போனினைத்தே
மடிமேல்வைத்தேவளர்த்தார் ஓ சிவமே!
தாயீன்றதந்தைகுரு தாமிவரென்றேமதித்து
தாளடிக்காத்திருந்தோம் ஓ சிவமே!
சேய்தனைப்பிரிந்தாவு செல்லுவாறிவருக்குச்
செய்தநின்னருள்தானோ ஓ சிவமே!
பாதகமுனிவன்சொற் படிசெய்யவேமனம்
பற்றுமோவெங்களுக்கே ஓ சிவமே!
காதகனிவனிருந்தால் கன்மாரிபொழிவதன்றிக்
கனமாரிபெய்வதுண்டோ ஓ சிவமே!
கோவைப்புலிகடித்தே கொண்டேகுங்காலமிதோ
கூத்தாயமைத்திட்டாயோ ஓ சிவமே!
பாவையாந்தாயிவள் பத்தினிநாட்டைவிட்டால்
பறப்பாளேலட்சுமிதேவி ஓ சிவமே!
எத்துயர்வந்திட்டாலு மெங்களரசன்சத்யம்
இழிவன்றிருக்கக்கண்பார் ஓ சிவமே!
பற்றும்மாதுடன்பாலன் பழுதின்றிவாழ்ந்திட
பரமனேயருள்செய்வாய் ஓ சிவமே!

(குடிகள்-வ-ம்) ஐயையோ! நமது அரசர் தன் மாதுடன் பாலனோ

மே தள்ளாடித் தத்தளித்துச் செல்கின்றீர்களே! இவ்வாறு இவர்கள் இவ்வயோத்தி நாட்டைவிட்டுச் செல்வதற்குக் காரணம் அத்தீக்குணத்தோனாகிய விஸ்வாமித்திரனது கொடுமையென்று மறிந்தோம், அந்தோ! இறைவ! ஏழைகளாகிய எங்களைக் காத்திருந்தவர் எல்லோரையும்விட்டு எங்ஙனம்செல்லப்போகின்றீர்கள்! ஆ! அரசே! நீர் தருமத்திலேதானேவிருப்பமுடையீர், ஆதலால்தருமத்தைக்கடைப்பிடிக்க எங்களையும் அழைத்துச்செல்லுவீராக, அந்தோ! போய்விடப்பார்க்கின்றீர்களே! உங்கள் திருமுகத்தாமரையினினிமைத்தேனையெங்கள்கண்வண்டு சற்று விருந்துகொள்ளுமாறு ஒரு முகூர்த்தமாகிலும் நில்லுங்களே, அந்தோ! மென்மேலுஞ் செல்லத்துரிதப்படுகின்றீர்களே, உலகத்தின்கண்ணுள்ள யாவத்தரசர்களும் வணங்கியேவல்கேட்டுப் பின்றொடரச்செல்லவும், யாவத் பரிசனங்கள் முன்னிருந்து பணிவிடைசெய்துவரவும், உலாவும் இந்தசத்திய பாஷபெருமான் இப்போது தனியே காலால் நடந்துசெல்லப் பின்றொடர்ந்து செல்வாரும், உபசரிப்பாருமின்றியும் இந்த அருந்ததிக்குச்சமானமாகிய மனைவி ஒருத்தியே இனியமகனை எடுக்கத்தெரியாமல் நடத்திச்செல்லப்புகுங்காரியம் எங்கள்கண்ணாலகாண என்னகருமமோ தெரிந்திலோம்! ஆ! வேந்தே! இவ்வளவுகோமளமும், அழகும்பொருந்திய உங்கள் முகங்கள் வழியில் தூசுபடிந்தால் என்னுமோ! குடிகளைக்காப்பது அரசருக்கு உரியகடைமையல்லவா, ஆனதால் எங்களைக்காத்திடும், தாங்கள்கடன்படாமல் பட்ட கடனை யாங்கள் ஒருங்குசேர்ந்து எங்களுக்குள்ள ஆஸ்திதியை அப்பாதகனாகிய முனிவனுக்குக்கொடுத்துவிடுகிறோம், அப்படிகொடுத்தாலும் அச்சண்டாளன்பெறுன்போலுங்காண்கின்றதே, இனி மனைவி, மக்கள், பொன், மணி, நெல்முதலியவை என்னிருந்தால் என்னே! அவைகளையொழித்து உமது திருவருண்ணிழலைஎங்கள்கண் குளிரப்பார்த்தேயிருப்போம், ஆனதால் உம்மோடுகூடவேயிதோதொடர்ந்தோம் தடைசெய்யாதீர் அருள்பொருளே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

என்னருங்குடிகளே நா னியம்பிடும்மொழிதான்கேட்பீர்
வன்னமாய்ச்சிலநாட்சென்று வருவனான்றுயரம்வேண்டாம்
இன்னகர்தனிலேநீங்க ளிருந்துமேசுகமதாக
நன்னயப்பயிர்களிட்டே நாளுமேவாழ்வீர்வாழ்வீர்.

(அரி-வ-ம்) ஆ! என்னருமைகுடிகளே? இப்படியும் வியசனசாகரத்தில் ஆழ்ந்தப்போமா! வேண்டாம், வேண்டாம், மகானுபாவராகிய விஸ்வாமித்திரமுனிவர் யாதோ சிலகாரணத்தையுட்கொண்டு எங்க

ளைச்சோதிக்கும்வண்ணம் இவ்வாறு செய்தனர்போலுங்காட்டுகின்றது, இல்லாவிடி லிப்படிசெய்யத்துணிவுகொள்ளார், மேலும் ஆதியில் அரசியற்றி சகலநீதிகளுந்தெரிந்து கடைசியாக தனது மக்கள் சம்பத்தால் சாம்பரானதன்மையைப்பற்றி முழுதுந்துறந்து துறவறமே மேலெனவெண்ணித் தவமியற்றி மகான்களால்புகழப்பெற்ற பேரின்ப ஞானமூர்த்தியை அகங்கையிற்காட்டவல்லவராகிய விஸ்வாமித்திரமுனிவரை நீங்கள் என்னிடம்வைத்த அன்பின்மிகுதியால்நிந்திக்கப்போமா; ஆனதால் இனி அவரா லனுப்பவிக்கவேண்டுவனவற்றை யெல்லா மனுபவித்து நீங்கள்காண சீக்கிரம் இந்நாடுவந்து சேருவோம், குடிகளே? என்பேரில் விசுவாசமிருக்குமாகில் நான் சொல்லும்வாறுதடையின்றி கேட்பீர்களாக; அதாவது எவ்விதசிறுமைவரினும் மந்தியெனும் மனதை யங்குமிங்கு மோடவிடாமல் ஞானமென்னுங்கயிற்றால் கட்டி இம்முனிவருக்குப்பணிந்து யானிருப்பதுபோலபாவனைபண்ணி, இவரது திருவாயினின்றுவருந்தொனியின்குறிப்பறிந்து நடப்பது உங்கள் மேலானகடமையாக்கும், இதைவிட எனக்கு நீங்கள்செய்யுங்கைம்மாறு வேறுகாணேன், இதுநிற்க இச்சட்டமோ நீர்மேற்குமிழி நிலையில்லாமண்சுவர், இதை யார்தானடைந்திருந்தா ரழியாமற்பார்மீதில் இல்லவே இல்லை, மக்களே? எவ்வளவுசந்தோஷமாயெங்களையனுப்புகிறீர்களோ அவ்வளவுசீக்கிரம்வரத்தடையிரா, நல்வாக்குக்கொடுங்கள், துயரத்தைவிடுங்கள், மூதறிவுடையோர்களே.—ஏ மனமே? நமது குடிகளின் மனோதிடத்தைப்பார்த்தனையா! ஆ! என்ன அறிவு மேலும் "அரசனெவ்வழி யவ்வழிகுடிகள்" என்னுஞ் சான்றோர்மொழிக்கிணங்க இவர்கள் நம்மைத்தொடர எண்ணங்கொண்டதும் நீதியே, இப்போது இவர்களை இனியமொழிகளால் நிறுத்தினதும் சரியே

(குடி-வ-ம்) ஆ! ஜெகதீசா? எங்களரசருக்கு என்னபெருமையானகுணமமைத்தீர்!!! சரி, அரசே? தங்கள் வாக்கினுறுதியால் சற்றுதிடச்சித்தமானோம், மகாபாக்கியம், உமதுசொற்படியே நடக்கக்காத்திருக்கிறோம், சீக்கிரம் பாததரிசனந்தந்து ஆளவேண்டும், சுகமாய் போய்வருவீர்கள் சத்தியவுருவுகளே.

(அரி-வ-ம்) மகாசந்தோஷங் குடிகளே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அப்பனேசத்யகீர்த்தி யறிவுள்ளசுகுணமந்திரி
அப்பனேமுனிவர்வாக்கை யசட்டையாய்மீறப்போகா
அப்பனேயிவரோமெத்த வறிந்தவர்ஞானம்நீதி
அப்பனேயிவர்பாலுற்றேயடிபணிந்திருந்திடேரே.

(அரி-வ-ம்) அப்பாசத்யகீர்த்தி ? சற்குணா ? நீங்கள்முனிவர் வாக்கைக் கடவாமல்பணிந்து நடந்துகொள்ளுங்களப்பா மந்திரிகளே.

(சத்-வ-ம்.) நேர்த்தி, நேர்த்தி, எங்கள்விதியின் பயனென்றறிந்தோம், ஆண்டவனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

சேனாதிபதிகளேநான் செப்பும்வாறின்றுகேளீர்
வானதிபொய்க்கினும்மென் வாக்கதையழித்திடாமல்
தானதிப்பொருளையெண்ணித் தவமுனிமகிழும்வாறு
மோனதிபதிசொற்கேட்டே முற்றிலும்பணிந்துவாழ்வீர்.

(அரி-வ-ம்.) அப்பா தளபதிகளே ? இந்தத்தவமுனிவரினுக்கினைகடவாமலு மெனதுவாக்குப் பொய்க்காமலும், பணிந்து நடந்து கொள்வீர்களப்பா தளபதிகளே.

(சேனா-தளபதி-வ-ம்) ஆண்டவனே ? விதியைநொந்து நீங்கள் சொலியவாறே நடந்து கொள்ளுகிறோம் மகாராஜனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

இந்நகர்தனிலேநானு மினிதுடன்வீற்றிருந்தே
உன்னதவணிபஞ்செய்யு முத்தமகுணரேகேளீர்
மன்னவனாகவிந்த மாமுனிவாய்த்ததாலே
தன்னறம்வழுவிடாமற் றவியேநடப்பீரப்பா.

(அரி-வ-ம்.) அப்பா வர்த்தகர்களே ? இந்நாட்டுக்கு கௌசிகமாமுனி அரசனாகவந்தமையால், நீங்களவருக்குப் பணிந்து சத்யம்பிசகாமல் தர்மத்தை நிலைநிறுத்தி நடந்து கொள்வீர்களப்பா.

வர்த்தகர் விருத்தம்.

ஏந்தலேயுமக்குமிந்த விழிவுறக்காலந்தானும்
ஏந்தலேவாய்த்ததெல்லா மெங்களின்கொடுமையாகும்
ஏந்தலேமுனிவன்சத்ய மெவ்விதமறியப்போறான்
ஏந்தலேநீர்தான்கொண்ட வெண்ணத்தைக்கடந்திடோமே.

(வர்த்தகர்-வ-ம்.) கேளும்மகாராஜனே உமக்கிந்தகெதிவந்தது நாங்கள்செய்த கொடுமையாக்கும், இந்த முனிவன் சாந்தமும் பொறுமையைக் கைக்கொண்டு சத்தியத்தைப் பாலிப்பானா ! நீர்சொன்ன வுத்திரவின்படிக்கே நடக்கின்றோமையா எங்களாண்டவனே.

(அரி-வ-ம்) மகாசந்தோஷம் வர்த்தகர்களே.

சந்திரமதி விருத்தம்.

என்னரும்பாங்கிமாரே யிழிவிலாத்தோழிமாரே
மன்னருமரசும்நாடும் மாமுனிதனக்கேயீந்தார்
பன்னருங்காசியேக பதிமனங்கொண்டார்செல்வேன்
அன்னுநற்சுபமாய்வர்க்குத் தோகைகாள்கொடுப்பீரம்மா.

(சந்-வ-ம்.) அம்மா தோழிமார்களே? அரசர் செங்கோலை விஸ்வா மித்திரமுனிக்குத் தாரைவார்த்து காசிக்குப்போகின்றார், நானுங்கூட ப்போகின்றேன் நீங்கள் நல்லவுத்திரவுகொடுங்கள் தாதிமார்களே.

## தோழிகள் விருத்தம்.

அம்மணிதாயேயெங்க ளரசியேபஞ்சைவேடம்
அம்மணிகொள்ளக்கால முடைந்ததோவுமக்குத்தானே
அம்மணியினிமேனுங்க ளடிமையாயொருவருக்கே
அம்மணியணிந்திருக்கோ மடியாரும்வருகுவோமே.

(தோழிகள்-வ-ம்) உமக்கிப்பேர்க் கொத்தகாலம் வந்ததா! இனி நாங்களொருவரைப் பணியோம், நாங்களுங் கூடவருகின்றோந்தாயே

## முதலாவது, தோழி-கண்ணிகள்.

இராகம்-பைரவி, தாளம்-ஆதி.

இந்தவிதிவிட்டாயோ தெய்வமே! எங்கள்
இறைவிதனைப்பிரிய தெய்வமே!
வந்தகதியறியோம் தெய்வமே! யாரின்
வஞ்சமென்றுந்தெரியோம் தெய்வமே!
தாயைப்போற்காத்தவளை தெய்வமே! நாங்கள்
தான்விடவும்விதியோ தெய்வமே!
நாயைப்போலலைந்திட தெய்வமே! தலை
நடுவிலெழுதினையோ தெய்வமே!
மாமுனிசொற்படியே தெய்வமே! நாங்கள்
வணங்கினின்னருள்தானே தெய்வமே!
தாமதமிலாததாயை தெய்வமே! யின்று
தானகல்விட்டாயோ தெய்வமே!

## இரண்டாவது தோழி தரு.

இராகம்-காம்போதி, தாளம்-ஆதி.

பல்லவி.

தங்கையிதென்ன காலமோ! நமதுதேவி
தயங்கவிட்டதுங் கோலமோ!

அநுபல்லவி.

மங்கையுமையாள்பாகன் வஞ்சம்மனதிலிட்டே
வகுத்தவிதியிதுவோ மனதிலித்துயருற்றே (தங்)

சரணங்கள்.

ஆதிலட்சுமிபோல வழுகிலுயர்ந்ததேவி
ஐயோ பணதியாகி யரையிற்காவியணிந்தே

நீதிபிசகாமன்னன் நிருடிக்கிவ்வரசதை
நிமைக்குள்ளளித்துப்பதி நீங்கிடவும்பணிந்தே (தங்)
பெற்றதாயையும்விடப் பெருத்தவாசையைக்காட்டி
பிரியத்துடனேநம்மை பேணிவளர்த்தவனே
உற்றவித்துயர்கண்டு மூரிலிருக்கவென்றன்
உள்ளம்படைக்கேனேயோ உண்மையித்வேமுன்னே (தங்)
வேறையொருவர்பணி வேண்டிப்புரியலாகா
வீடுஞ்சுற்றமும்விட்டே யிருண்டவடவிபோவேன்
ஆரையினித்தாயென்று அழைப்பேனிவ்விதியாகா
அயன்பாவிகருதிய தழகோஐயோசாவேன் (தங்)

(சங்-வ-ம்) அம்மா தோழிகளே ? சிவத்தின் கூத்திற்கு விசனப்படுவதில் பயனென்ன, நீங்கள்துயரம் விட்டிருங்கள், நானும் நமதரசரும் குழந்தையும் சீக்கிரத்தி லிவ்விடத்திற்கு வருகிறோமடி பாங்கிகளே.

தோழிகள் விருத்தம்.

நீவருங்காலமட்டும் நிலைகளை யுணர்ந்ததாயே
தாவருமடவிபுக்குத் தான்வாழ்ந்தேயிருப்பதன்றி
பாவத்திற்கஞ்சாதிந்த படுபாவிமுனிவனண்டை
சேவகமிருக்கமாட்டோஞ் செந்திருவடிக்கேபோற்றி,

(தோழி-வ-ம்.)தாயே ? நீங்கள் வருகிறபரியந்தம், நாங்கள் காடுறைந்து வாழ்ந்திருக்கின்றோம், இந்தகாதகமுனிவனிடஞ் சேவிக்கோம், சுகமாய்ப் போய்வருவாயம்மா சந்திரவதித்தாயே.

(சங்-வ-ம்) அப்படியா ! சரி.

தேவதாசன் விருத்தம்.

என்னுடனுடிப்பாடு மிளைஞரேதோழமாரே.
மன்னவனரசையிந்த மாமுனிகவர்ந்ததாலே
பின்னகர்விட்டேகாசி யேகவேசித்தமானோம்
சின்னவன்போகநீங்கள் செலவதுகொடுப்பீரப்பா.

(தேவ-வ-ம்,) அப்பா தோழர்களே ? விஸ்வாமித்திர முனி உபாயத்தினால் எங்கள் இராஜாங்கத்தைக் கைக்கொண்டதால், எனது பிதா காசிக்கிப்போக வெண்ணங்கொண்டார் நானும்போய்வருகின்றேன், செலவுகொடுங்களப்பா நேசர்களே.

சிறுவர்கள் விருத்தம்.

மெய்பதாயியங்காச்சி மென்செவிதனிலேசாய்த்த
வைப்கமுறையைப்போல வழுத்திடலானையப்பா
கொய்யுறவெங்கள்தேகம் நோவிடமனமும்நீதான்
பையவேயுரைத்தவார்த்தை பாவிகள்கேட்டனன்றோ.

(சிறுவர்-வ-ம்) அப்பா தேவதாசா? நீசொன்னவார்த்தை யெங்கள் மனதை மெத்த வுருக்கிவிட்டது இதுவுமெங்கள் விதிதானப்பா.

சிறுவர்கள் கண்ணிகள்.

இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஆதி.

எப்படிப்பிரிவோமுன்னை - எப்படிப்பிரிவோம்-நாங்கள்
எப்படியுயிர்தரிப்போம் தோழனே!
இப்படிப்பிரமன்தானு மெழுதினனேயறியோம்
இறைவனைப்பிரியலாச்சே தெய்வமே!
ஆண்டுமெங்களுடனே யழகாய்க்காற்றுடிவிட்டே
அன்பாய்ப்பரிசீவாயே தோழனே!
வேண்டும்பணிநிகளும் விதத்தோருணவுகளும்
வினயங்கள்செய்வாயே தோழனே!
பள்ளியிலெங்களுடன் படித்தநாண்முதற்கொண்டு
பாலித்தாயெங்களையே தோழனே!
துள்ளிபம்பரஞ்செண்டு துண்டுக்கோலாட்டமெல்லாம்
தூயாமறந்திட்டாயே தோழனே!
உன்நேசரென்றெங்களை யூரார்கணப்படுத்தும்
உரிமையின்றுடன்போச்சே தோழனே!
நன்மைபெறலாமென்றே நம்பியிருந்தவெங்கள்
நாட்டமகலலாச்சே தோழனே!
தெய்வம்பிரிக்கப்பாவத் தீமைசெய்தோமோவேறு
திசைகாணேம்மதிதோணேம் தோழனே!
கைதவப்பலனிதோ கண்டோம்வேறுகதி
காணேமன்னும்பூணேம் தோழனே!

தேவதாசன் விருத்தம்.

அழுவதைவிடுவீரெங்க ளன்பரேதோழமாரே
வழுவதுசெய்யபிரமன் வகைகொண்டானுமென்செய்வோம்
பழுதது முனிவனாலே பலித்திடக்காலங்கண்டோம்
தழுவிடக்கொஞ்சநாளிற் றன்வாரேன்மகிழ்ந்திடீரே.

(தேவ-வி-ம்.) அப்பா சினேகிதர்களே? பிரமன் எழுத்தை மாறப்போமா, இதற்குக்காரணம் முனிவனாயிருந்தான், நீங்கள்துயரத்தைவிடுங்கள், நான்கொஞ்சநாளில் வருகின்றேனப்பா.

(சிறுவர்-வ-ம்.) நல்லது எங்களரசே? சந்தோஷமாய்ப்போய் சீக்கிரம்வருவாயப்பா தேவதாசா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தாதவிழ்சடையன்கோமான் தாமரைச்சரணமேற்றும்
மாதவமுனிவேயுன்றன் மலரடிபணிந்தேனுதா

காதலியுடனும்பாலன் காசிக்கேயானும்போக
பேதமதன்றிசுவாமி பிரியமாய்விடையீவீரே.

(அரி-வ-ம்) சுவாமி முனிநாதா? நானும், என்மனைவியும், எம்பாலனும் காசிக்குப்போக விடைதரவேண்டுந் தேவே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

ஏனப்பாநீதான்மெத்த விழிவுறுந்துன்பங்கொண்டாய்
நானப்பாதவத்தாலிந்த நாரிகடனைப்படைத்தேன்
தானப்பாவிவர்கள்தம்மைத் தனிமணஞ்செய்வாயாகி
லீனப்பாடொன்றில்லாம லெல்லாமுன்வசஞ்செய்வேனே.

(விஸ்-வ-ம்) அப்பா இராஜனே? துயரமேன்? நான்தவஞ்செய்து பெற்ற இந்தப்பெண்களை, நீ கைக்கொண்டால் விவையாவற்றும் முனக்கே கொடுத்துப்போகின்றேனப்பா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

விழியினில்நீர்தான்சோர வெம்புறுவார்த்தைகேளே
னழிந்துமென்றேகம்போயி னன்னியமாதைநாடேன்
மொழிந்தவித்தாரணிபண்ட முள்ளதும்வேண்டேனுதா
வழிபற்றிச்செல்வேனுனை வரச்செய்வீரினிவாழ்த்தானே.

(அரி-வ-ம்) சுவாமி? நீர்சொல்லுங் கெட்டமொழி, என்செவிக் கேறுது, அழிந்தாலுமுடல் அன்னியமாதை நாடேன், நான் காசிக்குப் போகிறபடியா லும்முடைய ஆனையனுப்பிவையும் முனிநாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்

இத்தினம்நீதான்சென்றே யிருந்திடுசரயுதீர்த்தம்
நத்திடியேகாளையெந்த னுளினையுன்பின்னுகப்
பத்தியேவரவிடுப்பேன் பண்புடன்கெடுவுதன்னில்
வித்தியாசங்களின்றி விரைவினிற்கொடுப்பாய்த்தானே.

(விஸ்-வ-ம்) அப்பா அரிச்சந்திர மகாராஜனே? இன்றையதினம் நீ சரயு நதியருகிலிரு, நாளையதினமென்னுடைய ஆளையனுப்புகின்றேன், கெடுவுதப்பாமல் கடனைக் கொடுத்து விடுவாயப்பா.

(அரி-வ-ம்) மகாபாக்கிய மப்படியே கொடுக்கின்றேன் சுவாமி.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

பதிமொழிபிசகாமாதே பால்காதேவதாசா
விதிபிதுகமக்கேகஞ்சர் வெளியுமுள்ளொத்ததாக
சதிமனமில்லாதிவ்ய தவத்தினிலுயர்ந்தநல்ல
மதியுள்முனிவர்பாதம் மகிழுடன்வணங்குவீரே.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரமதி? அப்பா தேவதாசா? இது நம

க்கு விதிப்பயனென்றறிந்து, முனிவரிடத்தில் பணிந்து செலவுபெற்றுக் கொள்ளுங்கள் நாமினிப்போவோம்.

சந்திரமதி விருத்தம்.

நனிமதிகங்கைதும்பை நாகமும்பூண்டவந்த
தனிநிகரில்லாநாதன் தாளடிநாளுமேற்றும்
முனிவரோ நாங்கள்செய்த முப்பிழையகற்றியுன்றன்
கனிவுளம்மகிழ்ந்தேசெல்லக் கடையருக்கருளுவீரே.

(சந்-வ.ம்) சுவாமி? நாங்கள்செய்த குற்றங்களையெல்லாம் மன்னித்துக் காசிக்குப்போக செலவுகொடும்நாதா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அத்தனேயுமதுதிவ்ய வடியிணைப்பணிந்தேனுதா
கத்தனேயேழைசெய்தக் கடும்பிழைபொறுக்கவேண்டும்
சுத்தனேயெனக்கேவெற்றி சூழ்ந்திடவாழ்த்தியென்னை
பத்தியாய்காசிபோகப் பரிந்துமேவிடையீவீரே.

(அரி-வ-ம்) சுவாமி? நான்செய்த பிழைகளைப் பொறுத்து, காசிக்குப்போக செலவுகொடுப்பீரெங்கணுண்டவனே.

(விஸ்-வ-ம்) அப்படியே போய்வாருங்கள் போய்வாருங்கள்.

சூழ்வினைகாண்டம்,

சம்பூரணம்.

சுப்ரமண்யன்சகாயம்.

---

ஆரியரேயர்களே? அயோத்தி நாட்டின்கண்ணே சதா இருந்து கண்ணுற்ற விசுவதேவர் (அதாவது தேவதாபூசை பிதுர் பூசைக்குரிய த்திரயோதச தேவகணங்களில் ஐவர்) அரசன்மேல் தயவுடையவராய் அவர்பிரிவாற்றுது ஆ!!! வேள்விசெய்பவரிற் றலைமைபெற்ற இவ்வரசன் இராஜ்ஜியத்தினின்றும் விலக்கச்செய்து இக்கொடுமைசெய்யும்விஸ்வாமித்திரன் எத்திக்கடைவானோ! என்றுநிந்திக்க, இதைக்கண்ணுற்றும்கேட்டுமிருந்தவிஸ்வாமித்திரன் ஆற்றுச்சீற்றங்கொண்டு ஏ! விசுவதேவர்களே? யான் ஏதோ சிலகாரணார்த்தமாகச்சோதிக்கும்பொருட்டு இவ்வாறுசெய்யு அதையுற்றுப்பாராமல் தவத்திலுயர்ந்தோனாகிய என்னை அறியாமல் நிந்திக்கலானீர்களல்லவா! சபாஷ், ஆனதால் நீவிரனைவரும் மானிடரேயாகுக என்றுசபிக்க, அப்போது அவ் விசுவதேவர் மெய்நடுங்கி அம்முனியைப்புகழ்ந்துகொள்ள, முனமிரங்கியான் செப்பியவாக்குப் பொய்க்காது, ஆயினும் உங்களுக்கு மனிதத்தன்மைவரினும், மணவினையும், சந்ததியுமில்லாதொழிந்து காமம், வெகுளி, வன்மமில்லாதவர்களாய்மீட்டுந்தெய்வத்தன்மையை யடைவீர்களென அனுக்கிரகித்தனர், (பின்னர்விசுவதேவர் துவாபரயுகத்தில் குருவமிசத்தில் துரௌபதியின் கருப்பத்தில் இளம்பாண்டவ ரெனவராகப்பிறந்து பாரதம் முடியுநிமித்தம்பதினெட்டாம்போரிரவில் அச்சுவத்தாமன் வாளால்சிதைக்கப்பட்டனர்கள், இக்காரணத்தாலே மகாரதரான அப்பாண்டவமக்க ளைவருக்கும் மணமும் சந்ததியுமில்லையாயின.)

தி-தி-அப்பாவு பிள்ளை.



ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோதசபை.

# நகர் நீங்கியகாண்டம்.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-காம்போதி, தாளம்-ஆதி.

சரிகைகிரிகையோகச் சார்புஞானங்கொண்ட
தவசிகளேநாங்கள் போய்வாறோம்
வரிசையுலகையாளும் வலுமையுளோரேசேனை
வதிபதியேநாங்கள் போய்வாறோம்
என்னைவிட்டகலாம லிருந்தமந்திரிகளே
யிதோகாசிபட்டணம் போய்வாறோம்
பொன்னைவிளைவுசெய்யும் புனிதமாங்குடிகளே
புகழ்பெறக்காசிக்கே போய்வாறோம்
சத்தியவணியஞ்செய் சர்ஜனகுணத்தோரே
சாற்றுங்காசிக்கிதோ போய்வாறோம்
நத்தியென்னாட்டில்வாழ் நண்பரேமைந்தரே
நாங்கள்காசிக்கிதோ போய்வாறோம்
நீதிவழுவுறாமல் நின்றிவீர்மொழிப்படி
நெறியுடன்வாழ்குவீர் போய்வாறோம்
பாதிமதிபுனைந்த பரமன்வளருமந்தப்
பதிகாசிக்குநாங்கள் போய்வாறோம்.

நகர்நீங்கியகாண்டம்,

சம்பூரணம்.

சுப்ரமண்யன் சகாயம்.




ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதிவிநோதசபை.

# ஆரண்யகாண்டம்.

(பொது-வ-ம்) சபையோர்களே? அரசனுமனைவியும் தேவதாசனும் நாடுவிட்டுச்சென்றபின்பு, மந்திரியாகிய சத்தியகீர்த்தி ஆவிழந்த கன்றைப்போல் பரிதவித்து, இங்கிருப்பது சதமலவென எண்ணி, மனங்குன்றி, அரிச்சந்திர மகாராஜனிடம் வருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

### சத்தியகீர்த்தி விருத்தம்.

சற்குணமந்திரியொன்று சாற்றுவேன்கேளாயப்பா
நற்குணமுடையவேந்தன் நாடியேசரயுதீர்த்தம்
விற்பனரங்குசென்றார் விரைவினிற்கண்டுவாறேன்
தற்பராவிங்குநீதான் றனிக்கொலுபுரிகுவாயே.

(சத்-வ-ம்) அப்பாசற்குண? நமது அரசன் சரயுநதியருகிலிருப்பதால் நான்போய்க்கண்டு வருகிறேன், நீயிவ்விடத்தில் தனிக்கொலுவு புரிந்துக்கொண்டிருப்பாயப்பா.

(சற்குணன்-வ-ம்) அப்படியே போய் வாருமையா.—(செல்லுதல்)

(பொது-வ-ம்) சபையோர்களே? சத்தியகீர்த்தி சரயுநதியினிடமிருக்குந் தனதரசனைக்கண்டு வாடுகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

### சத்தியகீர்த்தி விருத்தம்.

அத்தனேவெகுநாளாக வடிமையைக்கனிந்தேகாத்த
கத்தனேயடியேன்றன்னைக் கைவிட்டுவருதனன்றோ
சுத்தனேயுமைப்பிரிந்தே சொகுசுடனாட்டில்வாழேன்
பத்தனேநானுங்கூடப் பற்றுவேன்விடையீவீரே.

(சத்-வ-ம்) இராஜபரமேஸ்வரா? என்னை நாளதுவரையில் பாதுகாத்து, இப்போது அடியேனைக் கைவிடுதல் நன்றோ, நான் தங்களைப் பிரிந்து நாட்டில் வாழேன், நானுங்கூட காசிக்குவரச் செய்யவேண்டும் நாதனே,

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தொழுதீவிஸ்வாமித்ரன் துரைத்தனம்புரிவதாலே
பழுதன்றிவனைச்சனுகப் பரிந்துமேவிற்றிருந்து
தழுவியேவாழ்ந்திடாமற் றாழ்ந்துகேயேகுமென்பி
னிழுவுறவாறேனென்றே யிசைவதுமடுக்காதப்பா.

(அரி-வ-ம்) அப்பா சத்யகீர்த்தி? முனிவனைப்பணிந்து நீதிவழுவா மனட்பபதைவிட்டு, நீயென்பின் வருவேனென்பது சரியல்ல, நான்து யரமுறுங்காலையில் நீவருவதுதகுதியல்லவென் றுணராததேன்பாலகா

சத்தியகீர்த்தி விருத்தம்.

உந்தனைப்பணிந்தகையா லொருவரைப்பணியமாட்டேன்.
எந்தனைப்போகச்சொன்ன விறைவனேயுயிரைமாய்ப்பேன்
சொந்தமென்பெண்டீர்பிள்ளை சோறுடன்சுகமும்வேண்டேன்
இந்தநற்றுயிலைப்போக்கி யிதோகாவிபணிந்திட்டேனே.

(சத்-வ-ம்) என் னாண்டவனே? தங்களைப்பணிந்தும் இனி மற்றொருவரைப் பணியமாட்டேன், நான் சோறு, சுகம், பெண்டீர், பிள்ளை, நாடு, நகரமும் வேண்டேன் இதோ நானுங் காவியணிந்துகொண்டேனறிவீர் வேந்தனே.

சத்தியகீர்த்தி தரு.

இராகம்-கருட்டி, தாளம்-சாப்பு.

பல்லவி.

எப்படிதனிப்பேன் உமைப்பிரிந்து எப்படிதனிப்பேன்.

அநுபல்லவி.

இப்படியுமய னெழுதினவிதிதானோ
கைப்பிடிகிளிபோல காத்தோரைப்பிரிவேனோ (எப்)

சரணங்கள்.

பட்சியவயங்காக்கும் பாலனையைத்தொட்டே
ரட்சித்தெனையிடிக்கி யிருந்தவண்ணலைவிட்டே. (எப்)
விழியையிமைகாக்கும் விதமாகவிதுமட்டே
இழிவன்றெனைவளர்த்த வெந்தைவண்ணலைவிட்டே. (எப்)
சேயைத்தாய்பாலிக்குஞ் சீரிற்கதியாயுற்றே
காயத்தைவளர்த்திட்டக் கருணைக்கடலைவிட்டே. (எப்)
பரவுகுஞ்சியைக்காக்கும் பான்மையதனைவிட்டே
கரத்திலெந்தனையேந்திக் காத்தவண்ணலைவிட்டே. (எப்)
உலகினிலாழ்வதை ஓ! ஓ! வேண்டேனயம்
அலவெனில்மாய்குவே னரசேயுனக்கபயம். (எப்)

சந்திரமதி விருத்தம்.

அப்பனேசத்யகீர்த்தி யாசரைப்போற்றினாளு
மொப்பவேயிருந்தாய்நீங்கி லுயிருடனிருக்கமாட்டா
யிப்பவேநமக்குவந்த விடர்நீக்கும்வரையில்நீதான்
கப்பியேயெங்களோடு கனமுடன்வருவாய்மந்திரி.

(சந்-மி-ம்) அப்பா சத்யகீர்த்தி ? நாளிதுபரியந்திரம் அரசருடன்வர
முந்திருந்தாய் இப்போது பிரிந்தாலுயிர் தாளமாட்டாய், வந்தகஷ்ட
மெல்லோரு மனுபவிக்கலாம் கூடவே வருவாயப்பா மந்திரி.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-சங்கராபரணம், தாளம்-சாப்பு.

உந்தன்செயலிதுவோ ஓ சிவமே நீ தந்தவருளிதுவோ (உந்)

வந்தகெதிகளெல்லா முந்தன்தயவென்றெண்ணி
சிந்தைமகிழ்வுகொண்டே னெந்தனையாளுமென்னி(உந்)
நதிக்கரையோரம்வந்து சதியுடன்மகனுடனே
விதியைநினைந்தேதலை கெதியெனப்பள்ளிகொள(உந்)
அமைச்சனுநீங்காவென்று வழுதேபரதேசியாய்
அடுத்தெனைக்காக்கவேநீ யனைமத்தாதுவுஞ்சுசியா (உந்)
இன்னமெனைக்குத்துன்ப மேதுவந்தெய்தாலுந்தானே
என்னைக்காப்பதுநீயே யேந்துமான்கரத்தோனே (உந்)

(பொது-வ-ம்) சபையோர்களே ? அரசனும் தேவியும், பாலனும்,ச
த்தியகீர்த்தியும், சரயுநதிக் கரையருகிலிருக்க விஸ்வாமித்திரமுனி சு
க்கிரபகவானை நட்சத்திரத்தாரகனாய் வருவிக்கும்விதம் காண்பீர்களாக

விஸ்வாமித்திரன் தரு

இராகம்-தோடி, தாளம்-ஆதி.

பல்லவி.

சமயமிதுவேவருவீர் சுக்கிரமூர்த்தி சமயமிதுவேவருவீர்

அநுபல்லவி.

இமயாதேகர்கள்முன்னே யெனக்குவரக்களித்ததேவே. (ச)

சரணங்கள்.

வேதியனாகவேபட்டு வேட்டியரையிற்கட்டி
சாதுர்யவார்த்தைகளாடி சமர்த்தடன்குதித்தோடி. (ச)
திரிசங்கின்பாலநாடுந் திகழும்பணிகளெல்லாம்
பறித்துமேகாசிவழி பற்றச்செய்தேனெல்லாம். (ச)
கையிற்பிடியுந்தானுங் கனத்தபிரம்புங்கொண்டு
ஒய்யிலாய்நடைநடந்து ஒப்புர்தாரகனென்று. (ச)

(விஸ்-வ-ம்) போற்றி போற்றி, சுக்கிரபகவானே போற்றி.

(சுக்-வ-ம்) கௌசிகமுமுனியே ? நீயென்னை யிந்தவேடம் பூண்டுவ
ரும்படி கோரினதை தெரியச்சொல்லவேணும் இருஷியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

சுக்கிரமூர்த்திகேளாய் சொல்லரிச்சந்த்ரன்றன்பா
லுக்கிரமுடனேகாசி யுடன்சென் றுன்இறத்திறைலே
சக்கிலுப் பூத்திப்பொய்யைக் கதறிடச்செய்யவேண்டும்
புக்கிலெனென்றால்பொன்னைப் போடெனவருத்துவாயே.

(விஸ்-வ-ம்) சுக்கிரமூர்த்தியே? அரிச்சந்திரனுடன் காசிக்குத்தாக
ளுய்ச்சென்று அதிக இம்ஸிப்படுத்தி அவனைப் பொய்சொல்லச் செய்ய
வேண்டியது, அப்படிக்குச் சொல்லாவிடில் சு-எ-நாள் கெடுவில்பொ
ன்னை வாங்கவேண்டுஞ் சுவாமி.

விஸ்வாமித்திரன் விருத்தம்

இன்னமுஞ்சொல்வேன்கேளீ ரிடுமவன்குருமேலானை
வின்னமாக்தாளுங்கிட்டி வேந்தனுக்கணிந்துங்கல்லே
பன்னரும்நுதலில்வைத்தே பலுக்கடாபொய்யென்றோது
மன்னவனுரைப்பானுகில் மகிழுடனழைத்தேவாராய்.

(விஸ்-வ-ம்) இன்னமுங் கேளுஞ்சுவாமி? அவன்குருவாகிய வசிட்
டன்மேலானையிடும், அண்ணுந்தாளுங் கிட்டியுமாட்டும், நெற்றியிலே
கல்லைத்தாங்கச்செய்யும், பொய்சொல்லச்செய்யும், சொன்னால் சந்தோ
ஷமாயிவடமழைத்துவாரும் இல்லாவிடில் பொன்னைவாங்கி வருவீர் சு
க்கிரபகவானே.

சுக்கிரபகவான் விருத்தம்.

பொய்யதும்பேசச்செய்வேன் பூபனேபுலேச்சிமாரை
மைபலால்புணரச்செய்வேன் மறுத்திடில்வறுத்தெடுப்பேன்
ஐயனேயரசன்மெத்த துடித்திடவிம்சைதன்னில்
செய்யவேயிறத்திப்பொன்னை நொடிக்குளேவாங்குவேனே.

(சுக்-வ-ம்) முனியே? பொய்பேசச் செய்வேன், நீச்சமாதைப் புண
ரச்செய்வேன், அனேகவிதமானகோரங்களுஞ்செய்து அவனையுமவன்
தேவியையும் பாலனையும், வருத்தப்படச்செய்து பொன்னைக்கொண்டு
வருகின்றேன்பாரும், அவனெங்கே யெனக்குக்காட்டும், விஸ்வாமித்
திர முனியே.

(விஸ்-வ-ம்) அப்படியே காட்டுகின்றேன் வாரும்பகவானே.

(சுக்-வ-ம்) மெத்தசந்தோஷ மிதோவந்தேன்.

நட்சத்திரேசன் தரு.

இராகம்-கல்யாணி, தாளம்-ஆதி.

பல்லவி

நட்சத்திரகன்வந்தான் நற்குணம்போக்கிய
தந்திரனை மேவிய (நக்ஷ)

அநுபல்லவி.

அட்சயகின்னர ரனைவரும்சமேந்திட
தட்சணத்தோன்கூடத் தான்கண்டுமொழிந்திட (கசூ)

சரணம்

கவடுஞ்சூதும்பொய்யுங் கற்றவனிந்திரஜாலன்
கல்விலும்நாருரியக் கருதிக்கிழிக்குஞ்சிலன்
தவிடுபொடிபோனெஞ்சம் தகைத்திடுமெமகாலன்
தாழ்ந்திடினுந்தயவு தன்னைக்காட்டாதகோலன்
சாட்ட துன்பமதைக் காட்ட நிலையதனை
யோட்ட வரசனையும் வாட்ட விதோ
தகதகதகதக திகுதிகுவெனவே
தத்தளிக்கவனல் கொப்புளிக்கவிழி
தாண்டிவரிச்சந்திரனை வேண்டிதுடித்தேயோடி
ஆண்டிதுடருவாருய் நோண்டிவசையைப்பாடி. (கசூ)

(விஸ்-வ-ம்) இதோ இருக்கின்றானே யிவன்தான் கடன் கொடுக்க வேண்டியவன், இவன்தான் அரிச்சந்திரனென்று சொல்லப்பட்டவன், தெரிந்துக்கொள்ளுமையா தரகரே.

(தரகன்-வ-ம்) இவனெவ்வளவு பொன்கொடுக்க வேணும்? விஸ்வாமித்திர முனியே.

(விஸ்-வ-ம்) ஐயா தரகரே? ஓர்வாலிபன் ஆனையின் பேரில்நின்று கவுண்டெறிந்தவுயரம் பொன்கொடுக்க வேணுஞ்சுவாமி,

விஸ்வாமித்திரன் விருத்தம்.

அரசனேகேளாயிந்த வாதவர்தரகர்கண்டாய்
வரிசையாய்பொன்னைநீதான் வழுவின்றிக்கொடுக்கவேண்டும்
சரசனேயன்னந்தண்ணீர் சார்வறயளிக்கவேண்டும்
பிறகிவர்வருகும்போது பெருமைசெய்தனுப்புவாயே.

(விஸ்-வ-ம்) இராஜனே? இவர்தான் என்னுடைய ஆள், இவரை யுன்னுடன் தரகராய்க் காசிக்கனுப்புகிறேன், இவருக்கு வேளைவேளைக்கு அன்னங்கொடுக்கத் தடைசெய்யப்போகாது, கெடுவில் பொன்னைக் கொடுத்து அவருக்குஞ் சந்தோஷஞ்செய்து, அனுப்பவேண்டும், அரிச்சந்திரனே.

(அரி-வ-ம்) அப்படியே நடந்து கொள்ளுகிறேன் முனிநாதா.

தரகன் தரு.

இராகம்-ஆரபி-தாளம்-ஆதி.

பல்லவி

நீதானு அரிச்சந்திரன் அந்தவிருடியின் பொருளனை
தருபவ னிவ (தோடு)

அநுபல்லவி.

தருதக்கூடுமோ மன்னு-முனி
சாத்தியபடிப்பணம்-கேத்தியதாகவே. (நீதானு)

சரணங்கள்.

எப்போதளிப்பாய்ரொக்கம்-அடா
இம்பிசேடுதியில்-நயமுடன்தெரிய. (நீதானு)
எந்நாட்டினில்கொடுப்பாய்-அடா
என்மனங்களித்திடப்-பண்ணுவாய்யன்னு. (நீதானு)
ஆலதூரம்நடக்கலாகேன்-என்
அலளும்மெலித்திடுங்-கால்களும்வலித்திடும். (நீதானு)
பசிபொறுத்திடமாட்டேன்-என்னுல்
பராக்ரமமில்லையே-அதற்கேதுசொல்லையே. (நீதானு)
நம்பிவரவோவுன்னை-அடா
நட்டாற்றில்கையை-விட்டிடுவாயோசொல். (நீதானு)

(தாகன்-வ-ம்) ஓய் ஓய் இராஜனே ? நீதானு அரிச்சந்திரன் ? நானுன்பின் வரட்டுமோ ? கூலிகொடுப்பையா ? அது.எவ்வளவு மொத்தம் ? எவ்விடங்கொடுக்கிறாய் சொல்லும் பிள்ளாய் இராஜனே ?

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயனேதாகரேகேள் யானையின்மீதிலேதான்
ஐயனேவீரனேறி யரிகவுண்டெறிபுமுச்சம்
ஐயனேபொன்தான்நானே யருமுனிக்களிக்கவேண்டும்
ஐயனேகாசிசேர்ந்தே யடியனுங்கொடுப்பேன்வாரீர்.

(அரி-வ-ம்) ஐயா தாகரே ? ஒருவாலிபன் யானையின் பேரிலேறி கவுண்டெறிந்தவுயரம் பொன்கொடுக்கவேண்டும், காசிக்குச்சென்றுதடையன்றிகொடுக்கின்றேன் கூடவாருமையா.

தாகன் விருத்தம்.

என்னைநீயழைக்கவேண்டு மிழிவன்றிகாக்கவேண்டும்
அன்னைபோல்பேசவேண்டு மீறிங்கெனைப்புகழவேண்டும்
பொன்னைநீகெடுவுதன்னிற் பொட்டெனக்கொட்டவேண்டும்
பின்னைவேறுரைப்பாயாகில் பேசினன்பொய்யென்பேனே.

(தாகன்-வ-ம்) இராஜனே ? என்னை நீயபழைக்கவேண்டும், வெகுஜாக்கிரதையாய்க் காக்கவேண்டும், சந்தோஷமாய்ப் பேசவேண்டும், என்பெருமையைக் கொண்டாடவேண்டும், கெடுவில் ரொக்கத்தைக் கொடுக்கவேண்டும், வேறு சொன்னுல் பொய்பேசினு னென்பேன் இராஜனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

பொன்னையுங்கெடுவிற்குள்ளே போமெனக்கேட்பதற்கு
மென்னைதெண்டிப்பதற்கு மெந்தையேயுமக்கேசொந்த
முன்னையென்குலத்திலேற்றி யோதிடுந்தெய்வம்போலுன்
தன்னையேபணிந்துநிற்பேன் தயாபராபோவோம்வாரீர்.

(அரி-வ-ம்) சுவாமி தாகரே ? உம்மையென்குல தெய்வத்தைப் போலெண்ணி நடப்பேன், கெடுவில் பொன்னைக்கொடுப்பேன், அதற்காகவென்னை தண்டிக்கும்படியான பாத்தியதை யுமக்கேயுண்டு, வாரும் காசிக்குப்போவோம் சுவாமி.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

இன்னமோர்சேதிசொல்வே னிதையுளந்தனிலேவைப்பீர்
நன்னயக்கறியுஞ்சாதம் நவிலொணுநெய்யும்பாலும்
வன்னமாயளிக்கக்கேளும் வழங்கியும்பொன்னையெல்லாம்
மன்னவன்கொடுத்தால்வந்த வழிக்கூலிவாங்குவீரே.

(விஸ்-வ-ம்) தாகரே ? இன்னமொருசேதி சொல்லுவேன்நல்ல கறியுஞ், சாதமும், நெய்யும், பாலுங்கேளும், கொடுத்தால், தாகுக்கூலியையுங் கேட்டுவாங்குமையரே.

தாகன் விருத்தம்.

இதுதானுசெய்வேன்சொல்லே யிரும்புபோற்சிவக்கக்காச்சி
மதுவனுதுகர்வான்போல மனமதுபதைக்கச்சொல்வேன்
ததும்பியேகுழையும்போது தாவெனப்பொன்னைக்கேட்பேன்
பதுமனேபொய்யைமெள்ள பகன்றிடப்புரிவேன்பாரீர்.

(தாகன்-வ-ம்) விஸ்வாமித்திரமுனியே? இதுதானு செய்வேனென்றிருக்கிறீர், பேசுகின்றவார்த்தைகளே சிவக்கக்காச்சிய இரும்பைப் போலாக்கி கள்ளு குடிப்பவனுடல் நடுங்குவதைப்போல் நடுங்கவுரைத்து, மனந்தளர்ந்து நிற்கும்வேளை ரொக்கத்தைக் கொடடா வென்பேன், ஏதாகிலும் ஏதார்த்தம்பேசினுல் பொய்சொன்னு னென்பேன், எப்படியாகிலு மும்முடைய பந்தயங்கெலிக்கச் செய்வேன் முனிநாதா நீர்யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம்.

தாகன் விருத்தம்.

தருகுவேனென்றுயப்பொன்னை தயவுடன்மனமகிழ்ந்தேன்
வருகவுஞ்சொன்னுயென்னை வழிபற்றிநானேபாலன்
கருகவுமென்னுலாகா தனப்பசிதாவுமுன்னே
தருகவேவேண்டுமென்னந் தானுமைசெய்வாய்மன்னு.

(தாகன்-வ-ம்) இராஜனே ? பொன்கொடுக்கிறே னென்னுய் சர்

தோஷம், காளே சிறுவன்; பசிபொறுக்கேன், பசிக்குமுன் அன்னங் கொடுக்கவேண்டுமிதில் தடையுண்டோ சொல்வாய் மன்னு.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

உன்பசிமுன்னேதீர்த்து வுணவதுயானேகொள்வேன்
வன்மமுஞ்செய்யேனுந்தன் வாக்குக்கேயிடையூர்சொல்லேன்
தன்மனங்கொண்டுபோறேன் காத்துமேயும்ஸமவாறேன்
தன்மதங்கொண்டாதா தாவுவோம்காசிவாரீர்.

(அரி-வ-ம்) சுவாமி? உம்மை முன் போஜனஞ்செய்யப்பார்ப்பேன், உமதுவாக்கைமீறேன், கெட்டமனதுடன் நடக்கேன், தவிர உமது தி ரேகத்தை குறைவின்றி பாதுகாப்பேன், ஆதலால் காசிக்குப்போகலா ம் வாருஞ் சுவாமி.

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-சங்கராபரணம், தாளம் அடதாளம்.

பல்லவி.

போவோம்வாரீர் போவோம்வாரீர் புகழுங்காசி
மகிழ்வதாக போவோம்வாரீர்.

அநுபல்லவி.

நாடுவிட்டேவந்தோமிங்கு காடுதாண்டிச்செல்வோமங்கு
கோடிமெனும்பொன்னைத்தேடிகொப்பெனவளிக்கவேண்டி. ()

சரணங்கள்.

நாணமென்பதையும்போக்கி காமிருந்தஸ்திதியும்நீக்கி
வானவர்களேற்றுங்காசி வாசனைப்பணிவோம்நாமே. (போ)
கவுசிகன்செய்மாயைக்கண்டோம் கணமதில்வறுமையுண்டோம்
பவுசுளக்காசிசேர்ந்தே பாதகன்கடனைத்தீர்க்க. (போ)

சந்திரவதி தரு.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி.

பல்லவி

நடந்துவாடாவெந்தன் நற்றவத்தாலுற்றபாலா! (நட)

அநுபல்லவி.

கடைந்தவெண்ணெ யேகனியே
கனுவிலாச்செங் கரும்பேதேனே. (நட)

சரணங்கள்.

மல்லிகைமுல்லையேவர்சம் மருவியமருக்கொழுந்தேகுமிழே
சொல்லிடுமெந்தியேதாழை சொர்ணமேசுறுக்கதாக.(நட)
முப்பழமேகானின்ற மொழியொணுநவரத்தினமே
தப்புதமேதகளிபலா கரும்கேகதிர்பச்சையே.(நட)

இருவாட்சிசெண்பகமே யெங்குங்கிட்டாமாணிக்கமே
அருமையாய்வளர்த்தவெந்த னாசைமிகுந்தேவதாசா. (வட)

தேவதாசன் தரு.

இராகம்-துஜாவந்தி, தாளம்-ஆதி.

பல்லவி.

எப்படி நான்நடப்பேன் இம் மணல்மீதில். (எப்)

அநுபல்லவி.

அப்பப்பாவெந்தனுட லடிமுணியெறியுதே
அருமையாயெனைப்பெற்ற வன்னைதந்தையேவாரீர். (எப்)

சரணங்கள்.

கொப்பளிக்குதேயெந்தன் குளிர்ந்தபாதங்கள்வாரீர்
கொடுமையிதைச்சகிக்க கூடவில்லையேபாரீர். (எப்)
நாவுமுலர்ந்துமெந்தன் நடையுஞ்சோருதேயம்மா
நடக்கவினிமேலென்றால் நாட்டம்போதாதேசம்மா. (எப்)
கோவுமிருந்துங்கன்றை குழையப்பார்ப்பதுமுண்டோ
கிருபைபுரிந்துமென்மேல் கிட்டவருவீர்கண்டோ. (எப்)
மாருந்துடிக்குதெந்தன் மனமும்நடுங்குதையா
மயக்கமாகுதேபசி மாறுதென்றறியையா. (எப்)
வேறுதடைகளொன்று மெளியேனுக்கிலையெந்தன்
வேதனைநீக்கவாரும் வேந்தையேயென்னையா. (எப்)
உச்சியெறியுதெந்த னுள்ளங்காலெறியுதே
ஓடியென்கிட்டவாரா யுத்தமாசரியுதே (எப்)

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம் - சாமா, தாளம் - சாப்பு.

ஐயோமைந்தனே! அடவிதன்னிலே
அலையவும்விதியோ!
அயன்சதியே! காலகெதியோ! அடாமகனே!
அப்பனே! அழுகாதேடா சுதனே!
என்னசெய்குவேன் எந்தனற்பாலனே!
ஏங்கவும்விதியோ!
ஏமன்சதியோ! காலகெதியோ! அடாமகனே!
இன்பனே! இழையாதேடா சுதனே!
பாரில்காரியும் பதைக்கவும்நம்மையே!
பற்றவும் விதியோ!
பரன்சதியோ! காலகெதியோ! அடாமகனே!
பாலனே! பதைக்காதேடா சுதனே!

மன்ஞுனவாயென்ற மகனே ! யென்மனம்
மாறவும் விதியோ !
மாயஞ்சதியோ ! காலகெதியோ ! அடாமகனே !
மைந்தனே ! மயங்காதேடா சுதனே !

(சந்-வ-ம்) அப்பா தேவதாசா ? இந்தமணல்மீதில் வைத்ததால், உனதுபாதங்கள் நோந்ததோ, பயப்படாதே, என்றோளின்பேரிலே றிக்கொள்ளும் கண்மணியே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

பஞ்சணைமெத்தைதாக்கின் பாதநூநோகுதென்பாய் !
கொஞ்சருங்கிளியேதேனே கொதிமணல்மிதிக்கலாச்சே !
நஞ்சதுவுடையபாம்பு நாடியேதுரத்தவெந்தன்
வஞ்சியேகளைத்தாய்தோள்மேல் வருந்தாமலேறிக்கொள்ளே.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரமதி ? பஞ்சணைமெத்தை மிதிக்க பாதம் நோகுதென்பாயே ! அடிகிளியே ! இப்போது மணலின்மீது நடக்கவும் பாம்புமுதலானதுகளுந்துரத்த ஓடினதாலும் வெகுவாய்க் களைத்தாய், ஆனதால்என்தோளின்பேரிலேறிக்கொள்ளும் பெண்ணே.

சந்திரமதி விருத்தம்.

தவமுனியும்வஞ்சகத்தை மனதில்நாட்டித்
தானிரக்கத்தயாபரனே தடைகளின்றி
அவமதித்தேதுசெனவே யரசும்நாடு
மதிலுள்ளநவமணியுந் தனமும்நாதா
வுசும்பலவுமுமைபேற்றிப் புகழ்கொண்டாட
வுத்தமனேசுண்மையெனவே யளித்ததேவே
பவமடைவேனாகுறவே னடியாளேரில்
பதிவிரதையெனுநெறியும் பூலிக்காதன்றே.

(சந்-வ-ம்) என் பிராணநாதா ? வஞ்சகமேவுடைய விஸ்வாமித்திர மகாரிஷி யாசித்ததற்கு, உமது நாடு நகரமுதலானதும் லட்சியமில்லாமல் கொடுத்துவிட்ட தயாநிதியே ? உமதுதோளில் நானேறுவேனாகில் பாவத்துடன்பதிவிரதையெனும்நெறிமாறும்மன்னிப்பீர்பிராணநாதா

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மட்டிலாமதிதயேந்திரன் மகிழ்பெறுந்தவத்தில்வந்து
மட்டிலாமதிவகுத்த மாதேயுன்கற்பினேர்மை
மட்டிலாத்துயர்வந்தாலும் மாறியேபனிபோல்நீக்கும்
மட்டிலாகெதியாளான மங்கையேநடந்துவாராய்.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரமதி ? உன்னுடைய கற்பின்பலத்தி

னுல் நமக்கு ஏதுதுயர்வந்தாலும், பனிபோல் நீக்குமாதலால்; நடந்து வருவாயென் மனோரஞ்சிதமே.

தாகன் விருத்தம்.

சுடுமணல்மிதிக்கச்செய்தாய் சொக்கிடமேனிசெய்யாள்
கடுமனத்தேனுங்கொட்ட கருகிடஜலமிலாமல்
நெடுவழிவந்தேனுன்பின் நேக்குமித்துயரம்போரும்
விடுவிடுபோவேன்பொன்னே வேண்டிலேனரசேநானே.

(தாகன்-வ-ம்) ஓய் ஓய் இராஜனே ? நேக்கு இந்தவெய்யலில் நடப்பதினுலும், விஷப்பூச்சிகள் கடித்ததினுலும்,குடிக்கஜலங் கிட்டாதபடியினுலும், மெத்தவருத்தமானேன்,இனிநடக்கமாட்டேன், ரொக்கமும் வேண்டேன், போகிறேனப்பா வேந்தே.

(அரி-வ-ம்) சுவாமி ? தாங்கள் வேதநெறி பிசகாதிருக்கிற பக்ஷத்திலிந்தப் பூச்சிகள் திருகளைத் தீண்டுமோவேதியரே.

(தாகன்-வ-ம்) ஓய் ஓய் இராஜனே ? அது இருக்கட்டுங்காணும்என் ஞலினியெடுத்து ஓடிவைக்க லாகாதுவேந்தனே.

(அரி-வ-ம்) நானெடுத்துக்கொண்டு நடக்கின்றேன் என்றேளின் பேரில் தயவுசெய்து ஏறிக்கொள்ளுஞ்சுவாமி.

(தாகன்-வ-ம்) வெகுசந்தோஷம், இப்போது தெரிந்தேன், நீ சத்தியவான்தான்காணும் இராஜனே.

அரிச்சந்திரமகாராஜன் தரு

இராகம் - உசேனி, தாளம் - சாப்பு.

பல்லவி.

நடந்தேநீவாராய் பெண்ணே பெண்ணே
தொடர்ந்தேநீவாராய் கண்ணே கண்ணே (நட)

அநுபல்லவி.

நடந்ததாற்பாதம் நாயகிவனத்தினில்
படர்ந்தகல்முள்ளதினுல் பந்தத்தடிகொந்தையோ. (நட)

சரணங்கள்.

தடத்திற்றங்காதே ரவிபோய் தங்கும்பொழுதிதே
படத்திலெழுதொணுப் பாவையென்னுவிந்தப்
பாடுபடவயன் பதித்தவிதியாமுந்த. (நட)
துக்கங்கொள்ளாதே பின்னேபின்னே துயராயில்லாதே
அக்கிரமமென்ன ஷுவனியிற்செய்தோமோ
விக்கெதிநமக்கே யிசைந்திடப்போமோ. (நட)
விலங்குவாழிடம் பெண்ணேயவை வெறுண்டேமோடிடம்
ஜலங்கண்டவிடம் சங்காணப்போற்கே
கலங்கலில்லாமல் கண்ணீக்கிட்டேறு. (நட)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

கடுமணல்படர்ந்திருந்த சுரந்தனைக்கடந்தேயையா
னொடுமையாம்பவத்தைப்போக்குங்கோமதியாற்றைக்கண்டோம்
படுமென்றன்றுயரைப்பார்த்த பரிதியுமஸ்தமானான்
நடுத்திடுமிரவுதங்கிக் காலையில்முன்செல்வோமே.

(அரி-வ-ம்) சுவாமி தாகரே? இதோ கோமதியாற் றருகில்வந்தோம் சூரியனுமறைந்தான், பாவிகள்நெஞ்சம்போன்ற விருள்கப்பியது, இந்தஇரவை யிவ்விடத்திலேயே போக்கியுதயத்திலெழுந்து முன்னுக்கு நடப்போம்சுவாமி.

(தாகன்-வ-ம்) அப்படியே செய்யலாமகாராஜனே, ஆனாலெனக்கு மெத்தவும் பசியாயிருக்கின்றதே யென்னசெய்வேன் இராஜனே.

(அரி-வ-ம்)சுவாமி? தற்காலம்தங்கள்பசியைத் தீர்க்கவேண்டியவை வரவழைக்கின்றேன் வேதியரே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அப்பனேசத்யகீர்த்தி யந்தணர்பசியைப்போக்க
அப்பனேநடந்தலுத்த வருந்துயரதைமறந்து
அப்பனேசென்றுகொஞ்ச மருங்கனிகிழங்குதன்னை
அப்பனேதீவரத்தி லறிந்துமேகொணருவாயே.

(அரி-வ-ம்) அப்பனே சத்தியகீர்த்தி? நடந்துவந்த அலுப்பைமறந்து நமதுவேதியரின் பசிதீரவேண்டி நல்லகனிவர்க்கங்கள் பறித்து வருவாய்மந்திரி.

(சத்-வ-ம்) ஆண்டவனே? அப்படியே நான் போய்க்கொண்டு வருகிறேன் வேந்தனே.

(அரி-வ-ம்) அப்பா மந்திரி? விஷப்பூச்சிகள், மிருகங்கள், முதலானவைகளின் கண்ணிற்சிக்காமல், பத்திரமாய்ப் போய்வருவா யப்பா.

(சத்-வ-ம்) அப்படியே போய்வருகின்றேன் வேந்தனே.

சந்திரவதி விருத்தம்.

நஞ்சதுவுடையபாம்பு நாடிடாச்செய்யான்பூரான்
நெஞ்சதிவிரக்கமில்லா கிர்மூடமிருகக்காட்டில்
பஞ்சைபோல்மந்திரிதானும் பலகனிபறிக்கச்சென்று
னஞ்சவென்றழுதேன்காசி யையனேயலனேக்காரே.

(சந்-வ-ம்) ஒகாசிவாழும் விஸ்வநாதனே? பலமிருகங்களும் விஷப்பூச்சிக ளுலாவும்படியான காட்டில் வேதியர்பசிதீர்க்க மந்திரி கனிபறிக்கச்சென்றான், இருளோகப்பியது, என்முறைக்கிரங்கி அவனுக்குயாதொரு துன்பும்வாராமல் காப்பாய் காசிநாதா.

பொது விருத்தம்.

மந்திரியும்விடைபெற்று நெடுந்தூரந்தாண்டி
யடவில்வரவிருள்கப்பமனந்தள்ளாட
சந்திரவதிமுறை கேட்டகைலைநாதன்
சாரமல்விஷப்பூச்சிமிருகம்யாதும்
வந்திடாதிருக்கவருள் செய்தேகாந்தி
வீசுவிக்கசோலையொன்றவமைச்சன்கண்டே
சுந்தரன்றன்பதந்துதித்தே யுள்ளேபுக்குச்
சொகுசானபழம்பறிக்கும்விதங்காண்பீரே.

* (பொது-வ-ம்) சபையோர்களே! பதிவிரதாசிரோன்மணியாகிய சந்திரவதி முறைக்கிரங்கி, பரமனிருளைப்போக்கி, மிருகங்களும், விஷப்பூச்சிகளும், வழியில்நாடாமல் செய்யவும், மந்திரி ஒருபழவர்க்கச்சோலையைக்கண்டு கனிகள்பறிக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

சத்தியகீர்த்தி கண்ணிகள்.

இராகம் - பிலஹரி, தாளம் - ஆதி.

கனிகள்பறிக்கிறேனே அந்தகலை முற்றிலுமுணர்
நிலைமைக்குரியதோர் தலைமைவேந்தனிட களைய தபோக்கிட (க)

பலவின்கனிபறித்தேன் - இதோ
பற்றியமாங்கனி நற்றியேதேங்கனி
சுற்றியகளைதனை முற்றிலும்நீங்கிட (கனி)

கோவைக்கனிபறித்தேன் - எந்தன்
கொத்தவன்மகிழ்ந்திட அத்தனும்புகழ்ந்திட
சித்தான்மகிழ்ந்திதோ வுத்தமரம்வாழை (கனி)

இளநீரிதோபரித்தேன் - என்
னெந்தையின்பின்வருஞ் சாந்தமிலாஅரும்
நீந்தைபுரிபவன் தீந்திடப்பசியிதோ (கனி)

காட்டின்விளாப்பறித்தேன் - என்னை
கருதியேயாண்டிட்ட பருதிபன்கொண்டிட்ட
தரும்குணமாதும் பெருமைபாய்ப்புசித்திட (கனி)

கிச்சிலியும்பறித்தேன் - இதோ
கிளரொணுவிலந்தையுந் தளரொணுநெல்லியுந்
டலமுளதிராட்சியும் குலமகனருந்திட (கனி)

சத்தியகீர்த்தி விருத்தம்.

எந்தையேயெனதுகோவே யெளியருக்கிரங்குந்தேவே
சொந்தமாயடியேன்சென்று சொகுசுளகனிகொணர்ந்தேன்
வந்தவிவ்வடவிதன்னில் வருந்தியகளையைப்போக்க
விந்தையாயிதைப்புசித்தே விடாய்தணித்திடுவீர்போற்றி.

(சத்-வ-ம்) மகாராஜனே? நடந்துவந்த அலுப்பினாலுண்டாகிய பசியைத்தணிக்கவேண்டி கனிவர்க்கங்கள்கொண்டுவந்தேன், அந்தணரும், நீரும், என்தாயும், பாலனும், புசித்திடில் களைப்புநீங்கும் மகாராஜனே.

(அரி-வ-ம்) வெகுசந்தோஷமப்படியே செய்யலாமப்பா மந்திரி.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயரேநக்ஷத்திரேச வன்பரேயுரைப்பேன்கேளீர்
வெய்யனில்நடந்தேவந்த வெம்பசிதீரவேண்டி
ஐயநாமந்திரிசென்று சோணவேகனிகொணர்ந்தான்
மெய்யரேபுசித்தேசித்திரை மேவுவீர்காப்பேன்சுவாமி.

(அரி-வ-ம்) சுவாமிதாகரே? உமதுபசிநீங்க மந்திரிசென்று திவ்யமதாமுள்ள பலவகையான கனிகள்கொண்டுவந்தான், தேவரீர்களிப்புடன்புசித்து சற்று நித்திரைசெய்வீர், தங்களை நான் காத்துக்கொண்டிருப்பேன் வேதியரே.

தாகன் விருத்தம்.

பாலன்னத்தயிருவெண்ணெய் பசிக்குண்டதல்லால்வேறு
சீமையில்லாதவிந்த செங்கனிபுசித்ததில்லை
காலமும்வந்ததோயிக் கருமத்திற்கென்னசெய்வேன்
ஞாலமுட்கொண்டநாத னருளிதென்றறிந்தேன்வேந்தே.

(தாகன்-வ-ம்) ஓய் ஓய், இராஜனே? நாம்பசித்தகாலத்தில் பால்தயிர், வெண்ணெய், சாதம், பச்சடிகள் சாப்பிட்டதேயன்றி யிப்போர்க்கொத்த குரங்குகள் பட்சிகள் தின்னும்படியான காய்களைபுசித்ததில்லை யிப்படிக்குவாய்த்தது விதிதான்வேந்தனே-

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

காய்பழமுமக்களித்தே காதகனோநான்முன்
தோயுறுதயிருஞ்சோறுந் துண்ணனேவுரைப்பீரையா
நோய்பெறக்கால்கள்சோர நுனிதமாங்கண்பஞ்சாட
காய்படாத்துன்பங்கண்டு நவில்வதுசரியோநாதா.

(அரி-வ-ம்) சுவாமி? உமக்குக்கனிகள் கொடுத்து நான்வேறுபுசித்தேனு? நாம்வழியிற்பட்டபாடு பார்த்திருந்து மிப்படிக்குரைப்பது தர்மமோ ஐயரே.

சந்திரவதி விருத்தம்.

அரசராபுலகையாண்ட வண்ணலும்வருந்திக்கேட்க
பிரசுளமொழியுரைத்தே பிரியமதகற்றலானீர்
கரந்தனிற்றயிரும்பாலுஞ் சோறுண்டோவுமதடிக்கே
ராமதுகுவித்தேனையா களிப்புடன்புசித்திடீரே.

(சந்-வ-ம்) சுவாமி? காட்டில் தயிரும்பாலுங்கிட்டுமோ, இந்தக்கனிகளைப் புசித்து இளைப்புதீர சற்றுநித்திரைசெய்யும் வேதியரே.

(தாரகன்-வ-ம்) ஓய் ஓய், இராஜனே ? உன்னைவிட வுன்பெண்சாதி மெத்தப்சப்பிகொணும், உன்னுடைய பிள்ளைவரய்திறந்தா லென்னமெப் படியாகுமோ, ஆகட்டும் ஆகட்டும் இதுவும் என்கர்மவசந்தான் வேந் தனே.—(தாரகன் முதலியவர்கள் கனிகளைப்புசித்தல்.)

(அரி-வ-ம்) சுவாமி ? சற்றே சயனித்துக்கொள்ளு மிவாளுங்கொஞ் சம் நித்திரை கொள்ளட்டும் வேதியரே.

(தாரகன்-வ-ம்) ஓய் இராஜனே ? நீயெனக்கடங்கி நடக்கும்போது உ ன்னைச்சார்ந்தவாளு மெனக்கடங்கி நடக்கவேண்டியதா ? இல்லையா ? சொல்லும்பிள்ளாய்.

(அரி-வ-ம்) சரி, சுவாமி ? இவாளெல்லோரு மும்மக்கடங்கின வாளெ ன்றறிவீர்நாதா.

(தாரகன்-வ-ம்) ஆம், ஆம், எனக்கும் நித்திரைவருகிறது, சயனி த்துக்கொள்ளுகிறேன், ஆனால், நீருமும்மிட ஆம்பிடையாளும் என க்குநித்திரை வருமட்டும் தாலாட்டவேணும், இந்தப்பயல் கால்பிடிக்க வேண்டும், இந்தஅடியன் யாதொரு மிருகமுமென்னருகில் வாராதபடி க்கு காவல் செய்யவேண்டும் பிள்ளாய்.

(அரி-வ-ம்) அப்படியே செய்கின்றோம் சுவாமி வேதியரே.

(தாரகன்-வ-ம்) ஓய் ஓய் இராஜனே ? நீகால்மாட்டிலேயும், உன்னு டைய ஆம்பிடையாள் தலைமாட்டிலேயுமிருந்து, வெகுசாய் தாலாட் டவேணும் வேந்தனே.

(அரி-வ-ம்) அப்படியே செய்கின்றோம் சுவாமி.

சந்திரவதி தாரகனுக்குத் தாலாட்டல்.

இராகம்-நீலாம்புரி.

ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ. (ஆரா)

சீரார்ரவிகுலத்து செம்மலரிச்சந்திரனை
பாராதே தூக்கவைத்த பண்பினரேகண்வளரீர். (ஆரா)
சூதுங்களவுடனே சொல்லொணுப்பொய்மொழியும்
வாதுகளுமேயுணர்ந்த மறையவரேகண்வளரீர். (ஆரா)
பட்டபாடெல்லாம் பார்த்திருந்துங்கானகத்தில்
சட்டமுடன்பால்கேட்ட சகலகுணகண்வளரீர் (ஆரா)
வேதமுறைக்கும் விதியறிந்துமெங்களை
சோதனைசெய்யுஞ் சுந்தரனேகண்வளரீர். (ஆரா)
அப்பப்பாவென்றே அபிநயத்தேமன்னவர்மேல்
ஒப்பித்தானேறிவந்த வுத்தமனேகண்வளரீர். (ஆரா)
பாலனழுதாலும் பைங்கொடியாள்கொந்தாலும்
காலனைப்போல்வருத்துங் கருத்துடையோய்கண்வளரீர். ()

கனிபருக்தேனென்றே காட்டிக்கொணர்ந்ததெலாம்
இனிப்புடனே தான்புசித்த விதக்கமிலேயாய்கண்வளரீர்.(ஆ)

பொது விருத்தம்.

மாதுமிவ்வா றதாலாட்டத்தாகனுன
மாபாவிவிழித்திருக்கவமைச்சன்காக்க
சாதுவுறுகுணமுடையபாலன்காலேச்
சருவிவரக்கரம்நோவசக்கிரவர்த்தி
ஏதிந்தவிதிநமக்கேயிட்டாயென்று
மீசனடிதனைநினைந்தேயிருக்கும்வேளே
வாதுமெத்தப்புரிந்திடவேயெண்ணியந்த
வஞ்சகனுமுனிவஞ்செயும்வகைகாண்பீரே.

(பேசுது-வ-ம்) சபையோர்களே ? இவ்விதமாய் சந்திரவதி தாலாட்டத் தாகன் விழித்துக்கொண்டேயிருக்க, மந்திரிகாவல்செய்ய, தேவதாசன் கால்பிடிக்க, இவைகளைக்கண்ட அரசன் விதியைநொந்துகொண்டிருக்க, பாதகத்திற்கஞ்சாத விஸ்வாமித்திரன் யாகஞ்செய்யும் விதங்காண்பீர்கள் கனவான்களே.

விஸ்வாமித்திரன் அகவல்.

ஆதிபராசக்தி யம்மணிரேணு கா
கோதில்லாக்குணத்தி குமரிநீகௌ ரி
உம்பர்க்குவிரி யுலகர்க்குமா ரி
அம்புறுகாத்தி படங்காப்பிடா ரி
நீலிவிமலி நிகழ்த்தொணுச்சூ லி
பாலியென்னுள்ம் பணிந்திடுங்கோம லி
பேச்சிபிணத்தி பிங்களிஜகத் தி
ஆச்சிபைரவி யறியொணுமாத வி
பேய்ப்படையாளே பெரும்பூதத்துரைச் சி
வாய்க்கவுன்னருளிதோ வருந்தினேனடியே ன்
இரிசிகாட்டேரி யெக்காளிருத்தி ரி
சரிவுனக்கெவரையுஞ் சாற்றிடப்போ மோ
சமயமீதம்மா சாம்பவியெனக்கு ன்
அபயமேதருக யருள்புரிவா யே
பூதகணத்தில் பொல்லாததுஷ் ட
வேதாளமொன்றை விடையதுவளித் தே
என்முனேவருக விறைவியேபுரிவா ய்
கன்னமயாயுண்டியும் ஈனதிற்களிப்பே ன்

தவிர்க்காதென்முறை தயாபரிபோற் றி
அவிர்ப்பாகமிதோ வளித்தனன்சரண ம்.

பொது விருத்தம்.

பாம்புபோற்சீறிச்சீறி பற்களைமிகக்கடித்தே
தேம்புறுசுடரைவாயால் தேக்கியேவிகாரரூபம்
கோம்புளபல்லைக்காட்டி குறுமுனிமுன்னதாக
வீம்புகள்பலவாய்ப்பேசி வேதாளந்தோன்றிநின்றதே.

(பொது-வ-ம்) சபையோர்களே ! இவ்விதம் விஸ்வாமித்திரன் தோத்திரஞ்செய்ய, அம்பிகைமனமகிழ்ந்து தன்னுடைய பூதப்படைத்தலைவரி லொருவனையனுப்ப, அவன் முனிவன்முன் தோன்றுகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

(வேதாளம்-வ-ம்) சுவாமி ? என்னையழைத்தகாரியந் தெரியச்சொல்லவேண்டும் இரிஷியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

புவனமதையதஞ்செய்புவலுமைபூண்ட
பூதமேகோமதையின்கரையிற்காண்ப
புவனமதையாண்டவரிச்சந்திரன்பாலன்
பூதேவிக்கொப்பானமாதினோடு
புவனமதிற்றனுக்குமிகசில்லாமந்திரி
பூசுரனுஞ்சயனிக்கக்காக்கிறார்கள்
புவனமெலாநடுங்கவுநீமிரட்டிமன்னன்
பொரிகலங்கிப்பொய்யுரைக்கப்புரிகுவாயே.

(விஸ்-வ-ம்) வேதாளமே ? கோமதை ஆற்றின்கரையருகில் லோகித்தாசன் சயனிக்க, அவருக்குக்காவலாக சத்தியந்தவறா அரிச்சந்திரனும், சந்திரமதி, தேவதாசன், சத்தியகீர்த்தி யிவர்கள்காவல் புரிகிறார்கள், நீசென்று உன்திராணி யெல்லாங்காட்டி வெருட்டி மிரட்டி மன்னனால் பொய்பேசும்படியான விதஞ்செய்வாயப்பா வேதாளமே.

(வேதா-வ-ம்) முனிநாதா ? இது ஒரு பெரிய காரியமா ! இதோபாரும் என்வல்லமையை, போய்வாறேன்.

பொது தரு.

இராகம்-மோகனம்-தாளம்-ஆதி.

பல்லவி.

வேதாளம்வந்ததே முனிவிடுத்த வேதாளம்வந்ததே

அநுபல்லவி.

பாதாளத்தினில் பதுங்கிமறைந்திடுவது
பத்தியெழுத்துதிரம் பரிவாய்க்குடிப்பேனென்று. (வே)

சரணம்.

புவனமெங்கும்புகழ் போன்றவரசேயுனை
பொடிப்பொடியாக்கி யேவிசுவேனென்
கவனமறந்தேயென்முன் கருதிவந்திடிலுனை
கண்டித்துதிரமென் மேல்பூசுவேன்
சவமாயுனைவதைத்தே சதைவேறெலும்பாக்கி
சாதித்தென்பசிதீர சாங்கமாய்க்கொள்வேனென்றே. (வே)

வேதாளம் விருத்தம்.

ஆடாவிவ்வனத்தி லச்சமும்பயமில்லாமல்
சேதாய்வரவும் நீயார் சிறக்கியார்பயலாராளார்
வீரமாய்ப்படுத்திருக்கும் வேதியக்கள்ளனுரோ
கூட்டாவுன்னோராணுங் கொப்பெனவிழுங்கத்தானே.

(வேதாள-வ-ம்) அடாசற்றுமஞ்சாம லிந்தவனத்தில் வந்திருக்கும் நீ யார்? அவன்யார்? பயலார்? ஆளார்? பாப்பானர்? சொல்லடா சொல்லு? நான் அதோர்படுத்துக்கொண்டிருக்கிற வேதியனைத்தின்று என்பசியைத் தீருவேண்டாபயலே.

(தாகன்-வ-ம்) ஓய் ஓய் இராஜனே? அப்பாமந்திரி? அம்மாசந்திரவதி? இதென்ன! இதென்ன! ஐயோ! ஐயோ! எப்படியெனக்கு அந்தவார்த்தைகேட்டே பாதிபிராணன் போய்விட்டது, என்னைக்காவுங்கள் காவுங்கள்.

(அரி-வ-ம்) சுவாமி வேதியரே? நீரொன்றுக்கும் பயப்படவேண்டாம், நானிருக்கின்றேன் பொறும் அந்தவேதாளத்தை நான்விசாரிக்கின்றேன் ஐயரே.

(தாகன்-வ-ம்) ஆனல் நீர் சீக்கிரம் விசாரித்து விரட்டிவிடுவாய், போக்கென்னமோ மிகவும் பிராணவஸ்தையாயிருக்கின்றது.

(அரி-வ-ம்) ஐயா தாகரே? நீர் யாதொன்றுக்கும் கிலேசப்படவேண்டாம், சற்று நிதானியும்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

உரமுடனென்னைக்கேட்ட வுத்தமா கேள்வேதாளா
அரசநாமயோத்தியாண்டோ னவளெந்தன்தேவிபாலன்
திரமுடனித்திரைசெய்வோர் திகழ்பெருந்தாகராகும்
காமதுபணிவோன்மந்திரி காணுவாயப்பாநீயே.

(அரி-வ-ம்) வேதாளமே? நானயோத்திராஜன், இவளென்பத்தினி; இவனென்குமாரன், இவனென்மந்திரி, இவரோ கௌசிகராலே ஏவப்பட்ட தாகரென் றறிவாயப்பா.

(வேதா-வ-ம்) அடா இராஜனே? நீமெய்பேசினுய் சந்தோஷமானு

ல், என்பசிதீர்க்க மாமிஷந் தரகன் தேகமென்றறிவாய் இராஜனே.

(தரகன் வ-ம்) சத்தியந்தவறாத அரிச்சந்திரமகாராஜனே ? வேதாள மென்னை தின்னுவேனென்கிறானே ! ஆவிசோருதே ! அடியேனுன்னு டையவாக்கைநம்பி பின்வந்தேன் இரக்ஷியுமையா வேந்தனே.

(அரி-வ-ம்) சுவாமி ? அடியேனிருக்கின்றேன், நீரொன்றுக்கும்பய ப்படவேண்டாந் தரகரே —கேளாய் வேதாளமே ? உன்பசிதணிக்க இ ந்தவேதியர் மாத்திர முதவாரென் றறிந்துகொள்வாயப்பா.

(வேதா-வ-ம்) அடா ஆ ! ஆ ! என்ன ஆங்காரமாய்த் தரகனைக்கொ டுக்கேனென்றாய், உன்னையிந்தவாளினால் எறிந்து அந்தக்கொழுத்த வேதியனைப் புசிக்கிறேன் பாரடா பார்.

(தரகன்-வ-ம்) ஐயையோ ! வேதாளந் கிட்டவருகிறதே ! என்ன செய்வேன் என்னசெய்வேன் !

(தேவதாசன்-வ-ம்) சுவாமி ? இந்த ஒருவேதாளத்தைக்கண்டா இப் படி நடுங்குகின்றீர், பயப்படாதிரும், அந்தவேதாளமாகுங் கெதியைப் பாரும், தரகரே ? உமக்கு முன்னிதோ நானிற்கின்றேன்.

(சந்-வ-ம்) சுவாமி ? இதோ தேவதாசனுக்குமுன் அடியாளும் நிற் கின்றேன், யாதொருசிந்தனையும்வேண்டுவதில்லை.

(சத்-வ-ம்) வேதியரே ? பயப்படாதேயு மிதோநானென்தாயாருக்கு முன்னிற்கின்றேன் திடமாயிருஞ்சுவாமி.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அடவிபூதத்தின்மிக்க வங்கபாரம்படைத்தோய்
அடவியிலென்பின்பற்றி யையரும்வந்தார்கண்டாய்
அடவியிற்றடமறித்தே யடஞ்செயத்தகுமோநீதான்
டவியிலிவரைநீக்கி யடியனைப்புசிப்பாயப்பா.

(அரி-வ-ம்) அப்பா வேதாளமே ? என்னை நம்பிவந்தஜபரைமாத்தி ரம்விட்டு என்னைப்புசித்துப் பசிதீருவாயப்பா.

(தரகன்-வ-ம்) அப்படியே செய்யச்சொல்லும் சத்தியவந்தரே.

வேதாளம் விருத்தம்.

உங்களைக்கொல்லவெண்ண மொவ்வலேன்மன்னகேளாய்
தங்கமாய்ஜொலிக்குந்தேகத் தரகனைப்புசிப்பேனென்னு
மெங்களினெஜமானுக்கே யிவன்தலைகொண்டேயேகி
பொங்கமாய்ப்பாதத்திட்டே போற்றிடில்மகிழுவாரே.

(வேதா-வ-ம்) அரசனே ? உங்களைநான் புசிக்கமாட்டேன், தரகனை யே புசிப்பேன், அவனுடையசிரசையென் எஜமான்முன்னேகொண்டுபோ ய்வைத்தால் மெத்தமகிழ்ச்சி யடைவார் மன்னனே.

### தரகன் விருத்தம்.

அரசனேகேளேயுன்னை யண்டினோர்தன்னைக்காத்தாய்
அரசனேயுனைநம்பி யடவியிற்கூடவந்தேன்
அரசனேயிங்கேயென்னை யருந்திடப்பூதந்தன்னை
அரசனேவரச்செய்தாயா ஆ! ஆ! ஆ! இதுவுநன்றே.

(தரகன்-வ-ம்) இராஜனே? உன்னை நம்பினோரை யெல்லாங்காத்தாய், அதைக்கேட்டு நானும்வந்தேன், என்பேரிலேதோ கபடுநினைத்து என்னைப்புசிக்க இந்தபூதத்தையும் வரவிட்டாய், சரி சரி வேந்தனே.

### அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

நான்வரவிட்டேனென்று நவின்றிடுமையாகேளுந்
தானுமுஞ்சத்தியநீதித் தன்மையுமறிந்தோர்நீரோ
வேனிந்தவெண்ணங்கொண்டீ ரேழைமேற்கோபமானீர்
மானமுந்தரித்தோனுனை மாயமதறியேன்போற்றி.

(அரி-வ-ம்) சுவாமி? நான்வரவிட்டே னென்பதுதருமமா, சிவனறி யவெனக்கு இந்த பூதம்வந்தமாயந் தெரியாதுவேதியரே.

### தரகன் விருத்தம்.

அறிகிலேனென்றுசொன்ன வரசனேயுரைக்கக்கேளாய்
விரிசடைமுனிவன்பொன்னை வேண்டிடாதிருக்கவல்லோ
சரிமொழிசொல்லிப்பூதந் தீர்ந்திடவிட்டாயென்மேல்
தெரிந்ததேயுனதுசதயந் திண்புயாவோட்டுவாயே.

(தரகன்-வ-ம்) அப்பா அரிச்சந்திரா? நீகொடுக்கவேண்டிய பொன்னைத் தப்பித்துக்கொள்ள இந்தப்பூதத்தை வரவிட்டாய், நான்பொன்னைவேண்டேன், போய்விடுகிறேன், இல்லையென்றால் இந்த பூதத்தை வதைசெய்வாய் இராஜனே.

### சந்திரமதி விருத்தம்.

கள்ளமுமோசவெண்ணங் கருதியேமன்னர்தன்னை
வள்ளலென்றுணர்ந்திடாமல் வஞ்சகரென்றுசொன்னீர்
கொல்லவந்ததுவேபூதங் கொடுமைதான்செய்ததேது
நல்லதோவுமக்கேநீதி நாதரேயிறப்பீர்சும்மா.

(சந்-வ-ம்) சுவாமி? கள்ளங்கபடுதெரியாத அரசரை வஞ்சகரென்று சொல்வதுதகுமோ வேதியரே.

### சத்தியகீர்த்தி விருத்தம்.

வேந்தனேயடியேன்செப்பும் விண்ணப்பமொன்றுகேளீர்
சாந்தமதெண்ணப்போகா சண்டாளன்சூதிதாகும்
பாந்தளேவேதாளத்தைப் பதைத்திடவதைப்பீர்நாமுஞ்
சேர்ந்திடவிங்கிலே சேரப்படுவோம்நாதா.

(சத்-வ-ம்) சுவாமி? இனித்தடைசெய்வதினுற் பிரயோசனமில்லை இந்தப்பூதம்விஸ்வாமித்திரனுடைய மாய்கையாக்கும் இதைத் தீவரத்தில் வதைத்து நாம் முன்னுக்குப்போக வெத்தனப்படவீர் வேந்தே.

(அரி-வ-ம்) அப்படியே செய்கின்றேனப்பா சத்தியகீர்த்தி.

வேதாளம் விருத்தம்

ஆயுதமில்லாபேயா ஆண்மைகள்படைத்தேயென்னைப்
பேயென்றும்பூதமென்றும் பேசுருய்தகுதியன்றே
நாயதுதோலைப்பற்றி நறிக்கிடும்வாறுபோல
சேயுறேன்பாய்பான்றன்னை சீக்கிரம்பாராய்மன்ன.

(வேதா-வ-ம்) அரசனே? நீ மெத்த ஆங்காரமாயென்னைப் பூதமென்றும், பேயென்றும், பேசுகின்ருய், நாய் தோலை மெல்லுவதுபோல அந்தத் தரகனை மென்று தின்கிறேன் பாராய்.

பொது விருத்தம்.

இவ்விதம்பேசிப்பூத மெரியனலுடனேகிட்டி
கவ்விடத்தரகன்தன்னைக் கருதியேவரவேகண்ட
செவ்விளமுலையாள்தானுஞ் சின்கதொறுபுல்லைத்தாங்கி
யொவ்வியேகணவற்கீய வொருங்கும்வாறறிகுவீரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? பூதமானது தரகனைப்பிடிக்க அருகில்வரக்கண்ட சந்திரவதி, தன் பதியினிடத்தில் யாதொருபிசகில்லாமல் நடப்பது உண்மையாயின் ஓர் தரும்பையெடுத்து பரமனைத்தியானித்து அரிச்சந்திரமகாராஜன் கையிற்கொடுக்க அதனல் பூதம்மடியும் விதங்காண்பீர்கள் கனவான்களே.

சந்திரவதி விருத்தம்.

மன்னிப்பீரரசேயந்த மாமுனிவிடுத்தபூத
மின்னிமைதனில்மரிக்க வேந்தியீத்தரும்பைநீரு
முன்னதவெழுத்தையோதி யுருவேத்திற்ருக்கில்நாதா
சென்னியும்பிளந்தேவந்த செறுக்கெலாமழியுந்தானே.

(சந்-வ-ம்) என் பிராணநாதா? ஆயுதமில்லையென்று இகழ்ந்துபேசிய மிருகத்தண்மைபூண்ட பூதத்தின்பேரி லடியாள் தருமித்தரும்பை தங்கள் கையாற்ருங்கி பிரணவத்தை ஒதித்தாக்கில் மடிந்துபோகுஞ் சுவாமி.

(அரி-வ-ம்) அப்படியே செய்கின்றேனென் பிராணநாயகி.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

பூதமேவுனக்கேபுத்தி புகலுவேனினிவாய்க்கேளு
காதகமுள்ளவுந்தன் கருத்ததையகற்றிநீயிப்
போததிகாலமோடில் புந்தியுநிலைக்கலாகும்
வேதனைபுரிவேனென்ருல் வீசுவேன்தரும்பாற்பாரே.

(அரி-வ-ம்) துஷ்டவேதாளனே? உன்னுடையவுயிர் பிழைக்கவே ண்மோகில் வந்தவழியைப்பார்த் தோடிப்போவாய், இல்லாவிடி லுன்னை யிந்தத்துரும்பினல் வீசுவேன்கண்டாய் துஷ்டனே.

(வேதா-வ-ம்) அடாபயலே? உங்களை நான் அற்பமாய் மதித்திருந்தும், என்னைத்துரும்பால் வீசுகிறேனென்ருய், இதோபா ரந்தவேதியனை கறகறவென்று மென்றுதின்கிறேன்.

(தர-வ-ம்) அரிச்சந்திரமகாராஜனே? நீர் செய்வதைப்பார்த்தாலெனக்குப் பயமாயிருக்கின்றது, வேதாளத்தின்கையில் வாளாயுதமிருக்கின்றது, ஒருபுல்லைத்தாக்கி ஜெயிக்கப்போகிருய், நீ யிறப்பதுடனென்னையுங் கொல்ல யோசிக்கிருய், ஐயையோ! என்னசெய்வேன் சிவமே!

(சங்-வ-ம்) ஐயரே? நீர் பயப்படவேண்டாம், வல்லவருக்குப் புல்லே ஆயுதமென்பது தெரியாதா, பயப்படாமலிரும் வேதியரே.

(சத்-வ-ம்) மகாராஜனே? தன்னைக்கொல்லவந்த பசுவைக் கொல்லவிதியிருக்கத் தாங்கள் வேதாளத்தின்பேரில் தயவுகாட்டுவதில் குணங்காணேன், சீக்கிரத்தில் வதைப்பீரென்ருண்டவனே.

(அரி-வ-ம்) அப்படியாகு மிதோ தாக்கினேனப்பா சத்தியகீர்த்தி.

(பொ தி-வ-ம்) சபையோர்களே? வேதாள்மானது வேதியன்பேரில் பாயக்கண்ட அரசன் சினந்து புல்லுக்கு மந்திரமோதித் தாக்கினவுடன், பூதமானது மடிந்ததென் றறிவீர்கள் கனவான்களே.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தரகரேயும்மைநாடித் தாவியேயிங்குவந்த
பரபரப்புடையபூதம் பதைத்துமேதரையிற்சாய்ந்தே
யரவமுமடங்கிப்பிரேத மானதேயருக்கன்ருனுந்
திரமுடனுதித்தான்திவ்ய திருக்காசிபோவோம்வாரீர்.

(அரி-வ-ம்) தரகரே? உம்மைக்கோறிவந்த பூதமுமடிந்தது, பொழுதும் விடிந்தது, காமினி முன்னுக்குச்செல்வோம் வாருமய்யரே.

(தர-வ-ம்) அப்படியா! பார்த்தீரா! நான் ஒரே ஒரு மந்திரத்தை மனதில் சொன்னேன் வேதாள்மடிந்தது மன்னனே.

(அரி-வ-ம்) ஆம், ஆம், எல்லாந் தங்களால் நடந்த மகிமைதான் சுவாமி.

(தர-வ-ம்) அடா இராஜனே? இனி முன்னுக்கு நடக்கமாட்டேன், பொன்னைக்கொடும்பின்னாய் கொடும்.

(அரி-வ-ம்) சுவாமி? இந்த ஆரணியத்தில் பொன்கிட்டுமா! நான் முனிக்குச்சொன்ன வாக்கின்படியே காசிக்குப்போய்த் தருகிறேன் வேதியரே.

தாகன் தரு.

இராகம்-மோகனம்-தாளம்-சாப்பு.

பல்லவி.

தாரேன்தாரேனென்று சாதிக்கிறாயல்லால்
தரும்வழியேதுசொல்லடா அடாசந்தாய
தரும்வழியேதுசொல்லடா.

அநுபல்லவி.

வீரமாகப்பேசி நேரமதாய்க்கைவீசி
காரடவியிலேபசி கோரஞ்செய்கிறாய்தோசி (தா)

சரணங்கள்.

நரிகளும் பதருதே - அடாசந்தா
நாய்களும் வதறுதே
கரிநாயும்வருகுதே காக்கையும்கதறுதே
சரீமனம்வெறுக்குதே சங்கட்டம்பெருகுதே (தா)
இன்னமெங்குபோரா - யிக்காட்டினில்
ஏதுசெய்வையோ கூறாய்
பொன்னைக்கொடுத்தாலாச்சு போவென்றாலொருபேச்சு
என்னையிழுப்பதேச்சு என்சேஷிசுகம்போச்சு (தா)

(அரி-வ-ம்) சுவாமி? இதுதான் காசிக்குப்போகும்வழி, இந்த பகற்காலத்திலேன்றிகிலடைகிறீர், காசிசேர்ந்து பொன்னைக்கொடுக்கிறேன். வேதியரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இந்தப்பிரகாரம் தரகன் பேசியதைக்கேட்ட அரிச்சந்திரன் முதலானவர்கள் தியங்கிநிற்கும் சமயத்தில் விஸ்வாமித்திரமுனி வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

விஸ்வாமித்திரன் தரு.

இராகம்-கரகாப்பிரியா, தாளம்-சாப்பு.

பல்லவி.

என்னசெய்வேன்நானே யினி யினி யேதுசெய்வேன்நானே.

அநுபல்லவி.

முன்னமேயிவன்சேதி முழுதுந்தெரிந்திருந்தும்
மூர்க்கத்தால்தேவர்முன் மோடியாயாடிக்கெட்டேன் (என்)

சரணங்கள்.

தேளும்பூரான் விடுத்தேன் - விதவித
தீண்டும்பாம்புந்தொடுத்தேன்
வாளும்பாலன்தேவி - வமைச்சனுங்கூடவே
வண்ணமாய்மனதிநில் வாக்குக்கெட்டியாடவே (என்)

பொடிமணல் சூடவிட்டேன் - வதைத்திட
பூகந்தன்னை விட்டேன்
காதகமறியாதான் கையிற்றரும்பதனல்
வேதாளந்தன்னையே வீசினுன்மறித்ததால் (என்)
இப்போதவனெதிர் செல்வேன் - தேவிமந்திரி
யிணக்கமுறை சொல்வேன்
எப்படியாகிலு மிவர்கடனைப்பிரிப்பேன்
அப்போவரசனும்பொய் யறைந்திடவுஞ்சிரிப்பேன் (என்)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

படபடத்திடவேமேனி பனிநீர்போல்வேர்வைசோர
தடமதில்நடந்ததாலே தாளடிமெத்தநோவ
வடவியிலென்னைநாடி யையனேகோபமிஞ்சிவ்
விடமதுவந்தவெண்ணம் விளம்புவீரெனக்குத்தானே.

(அரி-வ-ம்) சுவாமி முனிநாதரே? தாங்கள் பாதம்நோக இந்தக்காட்டில் அடியேனைக்காண கோபமுடன் வந்தவாறு தெரியச்சொல்லும் முனிநாதரே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

மன்னனேசத்யமோங்க மகிழ்ந்துநீயரசுசெய்வாய்
கன்னநன்னடவிசார்ந்து கனிந்துபஞ்சாக்னிமத்யே
நன்வருந்தவத்தினின்று நாதனைப்பணியப்போறே
னென்னவுன்கருத்தெனக்கே யெடுத்துரைசெய்வாயப்பா.

(விஸ்-வ-ம்) அரிச்சந்திரமகாராஜனே? நான் தவஞ்செய்யப்போகிறேன், உனது நாடுசேர்ந்து அரசுசெலுத்தி சுகமுடன்வாழ்ந்திருப்பாயிதற்குன் கருத்தென்ன தெரியச்சொல்வாய் வேந்தனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

உனக்குநானளித்தநாட்டை யுத்தமாகருதிடேனே
தனக்குமேவேண்டுமானல் தரணியையாள்வீரல்லா
லெனக்கிந்தகுதுசெப்பி லேற்றிடேனெறியுமாறேன்
மனத்திடமினதக்கனைந்தே மாதவாநடப்பீர்போற்றி.

(அரி-வ-ம்) முனிநாதரே? நான் தங்களுக்குத் தாரைவார்த்த நாட்டை நானும் விரும்பேன், நீரிவ்விதசூது செய்வதற்குடன்படேன், தங்களாசிரமத்திற்கு எழுந்தருளுஞ் சுவாமி.

(விஸ்-வ-ம்) அப்படியா அரிச்சந்திரமகாராஜனே; கொஞ்ச மிப்படி வாரும் தரகரே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

தரகரேநீர்தான்செய்த தாட்டீகமேதுங்காணேன்
அவ்வரபலத்துக்கொண்டான் வாய்மிஞ்சிப்பேசவானுன்

கிரகிரவென்றேசுத்தி கிளிமொழியாளும்வாட
வுரமுளகோரஞ்செய்தா லுன்னிப்பொய்சொல்லுவானே.

(விஸ்-வ-ம்) சுக்கிரரே? நீரிவாள்பேரில்மெத்தவுந்தயவுவைத்திருப்பதாகத் தெரிகின்றது, அரசன் மிகவுந் தைரியசாலியாகிவிட்டான், இவன்பெண்ஜாதிபிள்ளை வாடும்படிசெய்வீராகில், பொய்சொல்லுவானல்லது வேறில்லை பகவானே.

(தர-வ-ம்) முனியே? நீ ரொன்றுக்கும்யோசிக்கவேண்டியதில்லை, நான்வேண்டிய சித்திரவிம்சைகள்செய்து பொய்பேசச் செய்கிறேன் முனிநாதா.

(விஸ்-வ-ம்) எனக்கு மெத்த வியசனமாயிருக்கிறது, இனியென்ன செய்யப்போறே னும்மால் பந்தயங்கெலிக்கவிருந்தேன், என்னெண்ணம்வீணாய்விட்டது, சுக்கிரமூர்த்தியே.

தரகன் விருத்தம்.

உரல்தனிற்றலையையிட்டு முலக்கைக்குநடுங்கப்போமோ
திரமுளதைரியத்தைத் திட்டாமற்றியங்கலாமோ
வரசனைநீயேகோரு மரும்பொய்யைபேசச்செய்வேன்
பரமனையறிந்தோயுன்றன் பதியினுக்கேகுவாயே.

(தர-வ-ம்) விஸ்வாமித்திரோ? தைரியத்தைவிடப்போமா, உமது மனமகிழ நான்வேண்டிய விம்சைகள் காசிசேர்ந்தவுடனடத்தி பொய்பேசச்செய்வேன், நீரிருப்பிடஞ்சேருஞ் சுவாமி

(விஸ்-வ-ம்) மெத்த சந்தோஷம், உம்முடைய வார்த்தையை நம்பிப்போகின்றேன், எப்படியாகிலும் அரிச்சந்திரன்வாயில் ஒருபொய் வரவழைத்து என்னைக் காப்பாற்றவேண்டும், சுக்கிரமூர்த்தியே.

(விஸ்-வ-ம்) அப்பா அரிச்சந்திரமகாராஜனே? கொஞ்சம்போதிப்படிக்கு வருவாயப்பா ராஜனே.

(அரி-வ-ம்) அப்படியே வருகின்றேன் குருவே

விஸ்வாமித்திரன் விருத்தம்

நான்சொன்னபுத்திகேட்க நாட்டாமற்போனுயெண்ணந்
தான்செய்தபலனையெல்லாந் தனையனைமறந்துவிட்டாய் [
வானென்ணங்கொள்ளப்போகா வள்ளலேபொதுவாய்ச்சொன்
தீனனேநீதாணிந்தத் திருவெலாங்கைக்கொள்வாயே.

(விஸ்-வ-ம்) அப்பா அரிச்சந்திரமகாராஜனே? நானுன் தந்தைக்குச்செய்த வுபகாரத்தை மறந்தாய், என்வார்த்தையுங் கடந்தாய், நான் ஒருவருக்கும்வெளியிடுகிறதில்லை, நீமுன் எனக்குக்கொடுத்த அரசையும், செல்வத்தையும், வாங்கிக்கொள்ளும் வேந்தனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அந்தணர்சூடிகள்வேந்த ரறியவேயளித்தநாட்டை
யிந்தளான்வாங்கினுலென் பெருமையுஞ்சத்யமுண்டோ
வந்தறங்கேட்பேர்க்கீந்த வன்பொருளடைவேனகி
லுந்தனுலிந்ததுன்ப முறுவனேவுணர்வாய்நாதா.

(அரி-வ-ம்) முனிநாதரே ? ஒருவருக்குகொடுத்த பொருளை மறுபடியும் கேட்குமெண்ண மெனக்கிருக்குமாகி லிந்த துன்ப மனுபவிப்பேனு; அது என்னுலொருக்காலமு மாகாதென்றறிகுவீர் சுவாமி.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

அயனரியுந்தேவர்களுமென்றன்சொல்லை
யணுவளவும்பிசகார்களன்றிச்செய்தால்
நயவன்றிசபித்திடுவேன்பொல்லாங்கெல்லாந்
தான்வரவேயேவிடுவேன்தரணிதன்னில்
புயமறந்தவரசர்களைப்பஞ்சுபோல
பறக்கவைப்பேனிபயலேபதட்டமின்றி
நயம்விடுத்தேயெதிர்த்துரைக்கவுமாமானாய்
நன்றுநன்றிம்மகதர்தமைநாடுவாயே.

(விஸ்-வ-ம்) அரிச்சந்திரா ? மன்னர் மண்டலீகர் முதலானவர்களும் என்வார்த்தைக்குத் தடைபேசார்கள் அப்படிப்பேசினுலுடனே அவாளை யதோகெதியிலாழ்ந்தச்செய்வேன், அப்படிக்கிருக்க நீயென்னுடனெதிர்வார்த்தையாடத் துணிந்தாயாகிலுஞ் சிந்தையில்லே, நீசெய்த குற்றம்பொறுப்பே னிந்தப்பெண்களைக்கூடிவாயப்பா வேந்தனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தேவர்களுமுனிவர்களும்பாலர்தாமுந்
தெய்வமெனவுனைப்பணிதல்மெய்யானாலும்
பாவமிலாச்சத்தியத்தைப் பிடித்தநானும்
பணிந்தன்றோநாடளித்தேன்பகன்றவாறுபோல்
தாவமுடனக்கிரமம்புரியச்சொன்னால்
தாவியும்நான்செயத்தகுமோதனையன்றனைக்
கோவமுடன்சபித்திடினுஞ்சகிப்பேன்காசி
கொண்டவுடன்பொன்கொடுப்பேன்குருவேபோற்றி.

(அரி-வ-ம்) சுவாமி ? தங்களையெல்லோரும் பணிவதுசரியே, அடியேனும் பணிந்தன்றோ நாட்டையுமரசையுங்கொடுத்தேன், சத்தியத்திற்கொவ்வாத செய்கைசெய்யச்சொன்னு லெப்படி ஒப்புவேன் முனிநாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

காசியிற்சென்றுநீதான் கைதனிலோட்டையேந்தி
யாசித்தேபொன்னைவாங்கி யளிப்பதேயன்றிவேறு
யோசிப்பதுண்டோமன்னா வுலகத்தார்வசைபேசாரோ
யேசிப்பேகொடுப்போனாய மெடுத்தலும்நீதியன்றே.

(விஸ்-வ-ம்) அப்பா இராஜனே? நீ காசிக்குப்போய்பொன்னையாசகஞ்செய்துதானே கொடுக்கவேண்டும், கேட்போருக்குகொடுக்கத்தகுந்தவன் போயிரப்பது இகட்சியென்றறிவாய் மன்னவா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அருந்தொழிற்புரிந்துயங்கே யய்யனேயுமதுபொன்னை
வருந்திடாதளிப்பேனன்றி வறியநானிரக்கமாட்டேன்
தருமமுமறிந்தோயென்னை தகாததோர்செய்கைசெய்ய
கருதிடுமுனியேபோற்றி காசிக்கேயேகுவேனே.

(அரி-வ-ம்) சுவாமி? ஏதாகிலுந் தொழிற்புரிந்து உமது கடனைத்தீர்க்கின்றேன், சத்தியத்திற் கடுக்காதகாரியஞ்செய்யேன், தாங்களிருப்பிடஞ்சேருவீர் நான் காசிக்குப்போகின்றேன் ஈசா.

(விஸ்-வ-ம்) அம்மா பதிவிரதாசிரோன்மணியாகிய சந்திரமதி? கொஞ்ச மிப்படிக்கு வருவாய்தாயே.

(சந்-வ-ம்) அப்படியே வருகின்றேன் முனிநாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

மதிதயன்றவத்தில்வந்த மாதேயித்துயரங்கொள்ள
விதியதோதந்தைநாட்டை விரும்பியேசேர்ந்துநல்ல
பதியினிலிருந்திடாமற் பரதேசிவேந்தன்பின்னே
கதிதப்பித்திரியுமுன்றன் காரியந்தகைமையன்றே.

(விஸ்-வ-ம்) அம்மா சந்திரமதி? மதிதயமகாராஜனுன்னைப்பெற்று வளர்த்தபெருமையென்ன! நீ இந்த தரித்திர அரசன்பின் போகுங்கெதியென்ன! ஐயையோ! இதுவும் உனக்கு எழுத்தா! இனியாகிலும் உன் தாய்வீடுசென்று நீ சுகத்திலிருப்பாய் அம்மணி.

சந்திரமதி விருத்தம்.

தந்தைதாய்குருவுந்தெய்வந் தையலர்தமக்கோநாதா
விந்தையாங்கணவனன்றி வேறுண்டோகருதப்போமோ
வந்தையோமதிமயக்க வழிதனைமறித்துமேதான்
நிந்தையிவ்வார்த்தைகேட்டால் நிருபருமகிழார்யோகீர்.

(சந்-வ-ம்) முனிநாதரே? சமயந்தக்கவாறு தெரிந்தும் தெரியாமல் போதிக்கலானீர், விந்தையே! புலிபசித்தால் புல்லைத்தின்னுமா! ஏழைபிழைக்கட்டும் கையையும், காலையும், வாங்கிவிடுங்கள் என்பது

போல் பாவனைக்காட்ட வந்தீர், மேலும் கற்புடைய மங்கையர்கட்குக் கணவனே தாய், தந்தை, குரு, தெய்வம் எனும் நெறிதெரிந்தவராயிருந்தும், இப்படிப்பேசுவது தகுதியல்ல, சுவாமி ? எனக்கு விடைகொடுப்பீர் தேவா.

(விஸ்-வ-ம்) அப்படியா ! சரி, ஆனால் போய்வருவாயம்மா.—அப்பா மந்திரி ! கொஞ்சம் இப்படி வருவாயப்பா.

(சத்-வ-ம்) அப்படியேவந்தேனென் ஆண்டவனே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

அரசனைதகாணேகொண்டே னமைச்சநீதானெனக்கு
வரசையாய்நீதிசொல்லி வாழாமல்வம்பனாகி
சரசதிபுசித்தேகாட்டிற் சாருதல்தகுமோவப்பா
காமதகுவித்தேயென்முன் கனம்பெறவருகுவாயே.

(விஸ்-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி ? நீ என்னுடன்கூட இருந்து அரசுக்குரியநெறிகளைச் செலுத்தாமல் இப்படி காட்டில் சஞ்சரிப்பது தகுதியா ! என் பின்னதேயாத்திருகுவருவாயப்பா.

சத்தியகீர்த்தி விருததம்.

சிரனேமுனியேநீதான் செப்பியவுரைகளெல்லாம்
வீரனேயிவ்வுழியின்பம் விரும்பினோர்க்கெல்லால்வேனின்
மாரனைப்பழிக்குமென்றன் மன்னனைவிடுத்தேவாழ
சாரவேநாடேன்வேறு சாற்றுதலொழிப்பீர்போற்றி.

(சத்-வ-ம்) முனிநாதரே ? நீர் சொல்வதெல்லாம் அனித்தியவுடலைப்போஷிப்பவனுக்கேயன்றி, என்னைப்போன்றவனுக்கு வேண்டுவதில்லை, ஆனதால் எத்துயர்வரினும் என் அண்ணலுக்கு ஊழியஞ்செய்திருப்பேனேதவிர, வேறொருகாரியம்புரிய மனம் நாடாது தேவா.

(விஸ்-வ-ம்) அப்படியா ! ஆனால் போய்வருவாயப்பா சத்தியகீர்த்தி,—ஐயா நரகரே ? இப்படிவாருஞ் சுவாமி.

(நரகன்-வ-ம்) இதோ வருகின்றேன் விஸ்வாமித்திரமுனியே.

(விஸ்-வ-ம்) ஐயா சுக்கிரமூர்த்தியே ? நான்போய்வருகின்றேன், எப்படியாகிலும் அரிச்சந்திரன்வாயினிடம் ஒரு பொய்வரும்படியாய்ச் செய்வீர் பகவானே.

(சுக்-வ-ம்) விஸ்வாமித்திரரே ? எனது நாமம் கெடாமல் வந்தவேலையைப்பார்க்கவே முயலுகின்றேன், நீர் போய்வாரும்,—(நீங்கல்)

விஸ்வாமித்திரன் கண்ணிகள்.

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ரூபகம்.

மோசம்வந்ததையே பழி மூட்டையாச்சே. விதியே !
நேசம்வின்மேசெய்த மொழி நீங்கிடுமோ விதியே !

இந்திரன்முன்மூர்ந்திச் சொன்ன வென்றன்மொழி விதியே!
பிந்திப்போகுமோதான் காணேன் பிரபஞ்சத்தில் விதியே!
துயரம்வந்தாலுமே தளராமல் தூஷிக்கிறான் விதியே!
அயரவென்னபுரிவே னின்ன மறியேன்யாதும் விதியே!
மன்னன்மந்திரிமனைவி பாலன் மதியொன்றுனு் விதியே!
என்னவிதங்கெலிப்பே னினி யென்செய்குவேன் விதியே!

(பொது-வ-ம்) சபையோர்களே? கோமதையாற்றைவிட்டு சற்று தூரம்வந்து, விஸ்வாமித்திரன் வாய்க்கொழுப்பு சீலையில் வடியுமென்னும் வாக்கியத்தை தன் மனதினிடத்தே யுன்னி, அரிச்சந்திரமகாராஜனை மென்மேலும் வருத்தமுறச்செய்வதற்குப் பிரயத்தினப்பட்டு ஐம்புலனை யடக்கி உருத்திரமந்திரத்தைச்செபித்து அக்கினியையெழுப்பி, அரசன் முதலியவர்களைத் தகிக்க அனுப்புகிறவிதங்காண்க.

விஸ்வாமித்திரன் அகவல்.

அம்சிறீம்ரூபா ஆனந்தமூர்த் தி
சம்றீம்தேவே சரணம்முன்வருவா ய்
சிறிநசியென்றேன் சித்தங்குளிர்வா ய்
சரியிதுகாலம் சாமியேயிங்க னே
கோரினேனுன்னை கொப்பெனவருவா ய்
வீரியம்படைத்த வெந்தணல்சுட ரே
சமயமீதையா சம்புவேகாத்திடு ம்
அபயமிட்டேனு னக்கினிதே வே
வேண்டினேன்மெத்த விரும்பியேபணிந்தன ன்
ஆண்டிடவென்மு னன்புடன்வருவீ ர்.

(அக்கினிபகவான்-வ-ம்) ஏ விஸ்வாமித்திரமுனியே? என்னை இவ்வேளையில் வரக்கோரியகாரணமென்ன? சீக்கிரம்சொல்லும்முனியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

தேயுவேயிந்தக்காட்டைத் திக்கெனவெரித்துக்கொண்டே
நோயுறவரசன்தேவி நுண்ணியமந்திரிபாலன்
காயுறவனலாற்சுட்டு கருக்கியேசாம்பராக்கி
வாயுறவெனக்கேநல்ல வார்த்தைவந்தியம்புவீரே.

(விஸ்-வ-ம்) அக்கினிபகவனே? கோமதையாற்றங்கரையிலிருக்கிற செடிகளின்மேற்பாய்ந்து, அண்டமளாவத்தணலெழுப்பி, அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்தியகீர்த்தி, இவர்களைக்கிட்டிச் சுட்டு, சாம்பராக்கி, எனக்குத்தெரிவிக்கவேண்டும், மேலும் தேவசபையில் சமயம்போல்சகாயஞ்செய்வதாகக்கொடுத்த வாக்கை நீர் இச்சமயம் யான் வேண்டுமாறு செய்தேமுடிக்கவேண்டும், தடைசெய்யப்போகா.

அக்கினிதேவன் விருத்தம்.

அரசனைவழுவாச்சத்திய வணங்குமோபத்னிகண்டாய்
சரசமாயெரிக்கவென்னால் சக்யமோவவள்நெருப்போ
சுரமதிலெனைவளைத்தே சுட்டிடும்லோகமெல்லாம்
வரிசையாய்சூழ்ந்தேகெஞ்சம்வருத்துவேனுனக்காய்த்தானே

(அக்-வ-ம்) முனியே? ஈதென்ன விந்தை! அன்று முக்கண்ணன் நெற்றிக்கண்ணால் கருப்புவில்லோனை தகித்ததுபோல், சத்தியபாஷன் நிலைமையும், அருந்ததிக்குச்சமானமாகிய சந்திரமதியின் கற்புநிலைமையும், பாலன் தேவதாசன், மந்திரி சத்தியகீர்த்தி நெறியும் ஒன்றுசேர்ந்து என்னை யெதிர்க்கில் என் பாடு என்னமோ! தெரிந்திலேன், ஆயினும் வரும்விதி வந்தேதீரும், நீர் கோரியபடியே என்னால் கூடியபரியந்திரம் பார்க்கிறேன், நீர் போய்வாரும்.

(விஸ்வ-ம்) ஆஞவப்படியே போய்வருகின்றேன் அக்கினிபகவானே.

பொது விருத்தம்.

பூதத்தைவென்றமப்பாற் பூமியாண்டரசன்மற்றோர்
வேதனைதரகன்செய்ய வெறுப்பின்றிநடக்கக்காட்டிற்
காதகமுனிவன்றானுங் கனலினால்வருத்தவெண்ணி
போதவேயேவவக்னி பொருமியேசூழ்ந்ததன்றோ

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாய் வேதாளத்தை வதைத்தபின், தரகன் செய்யும் வேதனைக்குள்ளாகி காட்டில் அதிககஷ்டப்பட்டுநடந்துவருவதைக்கண்ட விஸ்வாமித்திரன் அவர்களின்பேரில் அக்கினியையேவ அக்கினிச்சுவாலை சூழ்ந்துகொண்டதென்றறிவீராக

(தரகன்-வ-ம்) ஓய். ஓய் இராஜனே? இது நல்லவிந்தை காணும்! நீர் மாந்திரிகனோ! அல்லது உமது மாதின்சூதோ! இதோபாரும் அக்கினி இக்காடெல்லாம்பற்றி மரமுதலியவைகளை தகித்துக்கொண்டு நமதுமுகம்நோக்கிவருவதிலும் என்னையேநோக்கிவருகிறது, ஐயையோ யானோ சிறுவன், எனதாம்பிடையுள் அலைந்துகெட்டு சாவேனே, என்னசெய்வேன்! என் தேகத்தை வருத்துகின்றதே இராஜனே.

(அரி-வ-ம்) பொறும் பொறும், நீர் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்,

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அண்டகோளத்தையெல்லா மளாவியேபொறிகள்வீச
கண்டவர்மனங்கலங்க காற்றுடன்சேர்ந்தேமந்திரி
கொண்டல்போல்வருகுந்தீயின் குறிப்பதையறிந்துநீதான்
விண்டிடவேண்டுமேனி வியப்புறுமுன்னமப்பா.

(அரி-வ-ம்) அப்பா மந்திரி? இதேது விபரீதமானபுகையுடன் அ

கஸ்மாத்தமாய் நெருப்பு காட்டை வளைத்துக்கொண்டு வருகின்றதே, இதனுது விபரத்தை யறிந்துசொல்லுவாயப்பா.

சத்தியகீர்த்தி விருத்தம்.

அடவியில்வி[illegible]வ மித்திர னனுப்பியபுதுமையாகுந்
திடம்விடவோண்டாங்கோவே தீயினல்மடிந்திட்டாலும்
புடமதாயெறிந்திட்டாலும் பொய்யுரைபுகலாச்சத்யம்
படமதாயெழுதிவைப்பீர் பண்புடன்மனதிற்றனே.

(சத்-வ-ம்) அரசே? நீர் தைரியத்தைவிடப்போமா! இதுகளெல்லாம் அப்பாதகனுகிய முனிவன்சூதாக்கும், இப்போது இந்த அக்கினியிலெரிந்து சாம்பராய் போய்விட்டாலும், சத்தியம்பிசகாமல் எண்ணம் நிலையாகக்கொள்ளுவீரரசே.

(அரி-வ-ம்) இப்படிக்கொத்த அளவிறந்த துன்பம் அனந்தம் வரினும், என்சத்தியம் பிசகாதென்றறிவாய் பாலகா.

தாரகன் விருத்தம்.

மன்னனேசுவாலைவீசு மக்கினிபுவியாள்மாந்தர்
வன்னமாய்க்காப்போர்தம்மை வதைத்திடுமுமக்கேன்துக்கம்
முன்னதாய்நெருப்பில்நானே மூழ்கிறேனுமக்குவேதை
தின்னமாய்நீங்குமென்றே தெளிவுடனிருப்பாயப்பா.

(தாரக-வ-ம்) ஓய் இராஜனே? அரசனைநம்பி புருஷனைக்கைவிட்டதுபோல உம்மை நம்பிவந்ததால் இனி என்னும்படையாள் முகதரிசனஞ் செய்யப்போகிறதேயில்லை, ஆனதால் வரும் அக்கினியோ தொடர்ந்தானைத் தகிக்குமே ஒழிய உமக்கு யாதொரு சிந்தனையும்வேண்டாம், இதோ நீங்கள்காண வரும் தீயில் விழுந்துவிடுகிறேன், என்னுலடைந்துவரும் தொந்தரவும் நீங்கும், வியசனப்படாதே அப்பா.

(அரி-வ-ம) சுவாமி? தாங்களடிக்கடிக்குச் சுட்டிக்காட்டுவதால் அடியேன்மனதிற்கு மெத்தவருத்தமாகிறது, இனி இப்படிபேசாதிருக்கவேண்டுகிறேன் வேதியரே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

எந்தன்றபெண்ணேமானே யிணையிலாமந்திரிபாலா
வந்ததோரனலில்நானே வருந்தாமல்முன்னேசெல்வேன்
வெந்தபின்நீங்கள்தானும் வெறுப்பின்றிகடன்கழித்தே
இந்தவேதியனைக்கூட்டி யேகுவீர்காசிதானே.

(அரி-வ-ம்) மாதே சந்திரவதி? அன்னியர் தயவைத் தனதென எற்றி எக்காரியத்தின்பேரிலும் மனதைச்செலுத்தாமல் எனையேநம்பிவந்த தன்னியனுகிய மந்திரி? அடா சுதனே? இப்போது நம்மைச்சூழ

வரும் நெருப்பில் நான் முன் சென்று விழுகிறேன், நீங்கள் மாத்திரம் இவ்வேதியரைப் பதனமாய் அழைத்துக்கொண்டு காசிசேர்ந்து முனிவனுக்குக் கொடுக்கவேண்டிய தொகையை முயற்சிசெய்து கடனைத்தீர்த்துவிடுவீர்களப்பா.—ஆ! என்ன காலம்! என்ன கோலம்!

சத்தியகீர்த்தி விருத்தம்.

மன்னருக்கிடுக்கண்வந்தால் மந்திரிகாக்கவென்றே
சொன்னதோர்நீதியான சுருதியையுணர்ந்தநாதா
முன்னமேவிளையுந்தீயில் முந்திநான்பாய்ந்துவிழுவே
னன்னையேகாசிசென்றே யருங்கடன்றீர்ப்பீர்நாதா.

(சத்-வ-ம்) அரசே! மநுநீதிமுறைப்படிவ்வாறு அடியேன் மந்திரியானதால் வருகிற தீயில் நானே வீழ்கின்றேன், தாங்கள்காசிசேர்ந்து முனிவன் கடனைத்தீர்த்துவிடுவீர் கோவே.

(அரி-வ-ம்) அப்படியா! வேண்டாம் வேண்டாம்.—அடி மாதே?

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-தேசியதோடி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

என்ன மாயமோ! மாதே! என்ன மாயமோ.

அநுபல்லவி.

அன்னவாகனமீதேறும் ஐயன்சாபமோ மாதே. (எ)

சரணங்கள்.

நாடுவிட்டுக் காடடைந்து
நல்லபாம்பு தேளும்பூரான்
கோடுகோ டென்றழுநம்மை
கொத்தவந் ததுங்கோதே. (எ)

பூதமொன்று நம்மைக்கண்டு
பொல்லங்க வாளைக்கொண்டு
வேதனைசெய் ததைமீண்டு
வேகமாய்வந் ததுங்கோதே. (எ)

வடமுகவக் கினிபோல
வகையுடனெதி ரெறிந்து
அடவியில் நம்மைதகிக்க
ஐயோவருகு தேகோதே. (எ)

சந்திரமதி விருத்தம்.

கற்புடைமாதராகிற் கணவனுலிறத்தல்மேன்மை
முற்பிறவியினேய்ந்கு மொழிந்திடநூலிற்கண்டேன்
சற்பனைசெய்யவெண்ணிச் சண்டாளன்விட்டதீயில்
தற்பரா வீழ்ப்பேன் றயாநிதிசத்தியங்காப்பீர்.

(சந்திரமதி) பிராணநாதா? கணவருக்காகப் பெண்சாதியானவள் பிராணனை விடுவது கற்புடைய மாதர்க்கழகென்று சுருதி முறைமையிடுவதை யறிந்தேயிருக்கிறேன், ஆதலால் முனிவனனுப்பிய தீயில் அடியாளே முந்திவீழ்வேன், தாங்கள் சத்தியத்தைக் காப்பீர் ஆண்டவா.

தேவதாசன் விருத்தம்.

தந்தைதாயொருகாலத்தில் தான்மனந்தளர்வாராகில்
மைந்தனுயுதித்தோன்சத்ய மறிந்துள னுகிற்றுனே
முந்ததாய்ச்சென்றுவந்தே மொய்த்ததோர் துயரைத்தீர்ப்பன்
எந்தையேநான்போய்வீழ்வே னினிசத்தியங்காப்பீர்நீரே.

(தேவ-வ-ம்) என் பிதாவே? மாதாபிதாக்கள் துயரை நீக்கவல்லவோ ஒருமைந்தன் பிறப்பது, ஆகையால் இத்தீயில் நானேவீழ்கின்றேன், நீர் சத்தியத்தைமாத்திரங்காப்பீர் தந்தையே.

சந்திரமதி விருத்தம்.

என்றவப்பொருளேயப்பா வென்குலக்கொழுந்தேபாலா
உன்மனந்தியங்கவேண்டா முத்தமகுணனேகேளாய்
வன்மமுஞ்சூதும்பொய்யும் வழுத்துவர்தமையல்லாது
நன்மையுள்ளோரைக்கொல்ல நாடாதித்தீதானப்பா.

(சந்-வ-ம் அடா என் கண்மணியே இந்தத்தீயானது அசத்தியவாளைக் கொல்லுமேதவிர, நம்மை ஒன்றுஞ்செய்யாது மகனே.

தேவதாசன் விருத்தம்.

தாயேநீவயிற்றிற்றுங்கி தயவுடன்போஷித்தென்னை
நேயமாய்வளர்த்தவம்மா நீவிழாமுன்னம்யானே
தீயதிற்செல்வேன்பாராய் தெளிவுளதந்தைவாக்யம்
ஞாயமாய்நிறத்திநானும் நாட்டுவேன்கீர்த்திதானே.

(தேவ-வ-ம்) என்னைப்பெற்று வளர்த்ததாயே? நான் இந்தத்தீயில் வீழ்ந்து என் தந்தையின் வாக்கியம் பிசகாதிருக்கும்படி கீர்த்தியை நாட்டுவே னம்மணி.

சந்திரமதி சந்தவிருத்தம்.

அப்பாமகனேகண்மணியேயமிர்தாசமேசெழுந்தேனே
இப்பேறறியுந்தீரமுமேயென்னுனைக்குவாய்த்ததடா
செப்பாய்பால்வாய்மாறலையேசிறுந்தணல்வீழ்வேனென்றாய்
யொப்பாகுமோடாகுலத்திற்கேயொளியாய்வந்தகிளிவிளக்கே.

(சந்-வ-ம்) அப்பா மகனே? இப்பேர்க்கொத்த துணிவு எந்த நாளில் வந்ததடா! நீ இந்த தீயில் வீழ்வேனென்பது தகுமோடாகிளியே! கண்மணியே! ஆ! என்ன ஆச்சரியம்!

தாகன் விருத்தம்.

சீலங்கள்செய்தேமெத்த சமத்துகள்பேசிநீங்கள்
கோலங்கள்புரிவதெல்லாங் கொல்லவேயன்றியென்னை
ஞாலமேலிருத்தச்செய்யுஞ் ஞாயமோநானுங்கண்டேன்
கூலனே கூகூபொன்னைக் கோரிலேன்போறேனப்பா.

(தாக-வ-ம்) ஓய் இராஜனே! நீங்கள் சாமார்த்தியத்தால், என்னை நெருப்பில்தள்ள நினைப்பதன்றி வேறல்ல, எனக்குப்பொன் வேண்டாம், காடோடிப்போகிறேன் கூ. கூ, கூ.

சந்திரமதி விருத்தம்.

வேதவிதிகடந்தவரும்நீதிதப்பிவித்தகனைமறந்தவரும்பதியின் வார்த்தைக், காதலின்றிப்புரிந்தவளுமறிவுள்ளோரைக்கனிவின்றியிகழ்ந்தவருங்கருணையற்றே,தீத்திரியாவிலங்குகளைவதைசெய்தோருந்திக்கில்லார்தாம்வருந்ததீங்குசெய்த, பாதகரைத்தகிக்குமென்றியித்தீநம்மேற்படராது என்பின்னேபற்றிவாரீர்.

(சந்-வ-ம்) சுவாமி? எஜமான்வாக்கை மீறிநடப்பவர்களையும், கொலை, புலை, புரிபவர்களையும், வருகின்றதீயானது வருத்துமேயன்றி, நம்மை பொன்றுஞ்செய்யாதாகையால், என் பின்னேதொடர்ந்துவாரும்வேதியரே

(தாக-வ-ம்) அப்படியா! ஆனால் வருகின்றேன் அம்மா.

சந்திரமதி தரு.

இராகம்-முகாரி, தாளம்-சாப்பு.

பல்லவி.

தேயுவே வழிவிடுவீ ரெங்களுக்கு-திக்குநீவரங்கொடுப்பீர்.

அநுபல்லவி.

ஆயுள்காரகனுட னவதிதனிலேசிக்கி
தாயில்லாப்பிள்ளையைப்போற் றவிக்கின்றோமேநெக்கி. (தே)

சரணங்கள்.

சுவாலாசுவாஹாகளு மிருபுரஞ் ஜொலிக்கவேதான்மகிழும்
தேவாகானுமேசத்திய தேசன்மனைவியானால்
ஆவாளைத்தைவிட்டே யடங்குவீர்முன்செல. (தே)
மெத்தத்துயரடைந்தோம் ஓதேவே மேதினியரசிழந்தோம்
சத்தியம்வழுவாதோன் சருவுந்தேவிநானானால்
சித்தங்குளிர்ந்துநீதான் செல்லவெங்களுக்கானால். (தே)

(அரி-வ-ம்) சுவாமி தாகரே? இதோ அக்கினியைக்கடந்துவந்தோம், இனி உமது திருக்கண்களைத்திறந்து பார்த்து நடப்பீர் ஆண்டவா

(தாக-வ-ம்) அடா சந்தாய்? பார்த்தையா நமது மந்திரத்தின்பலத்

தை ! பாதிசுலோகமுடிவதற்குள் அக்கினி யடங்கிவிட்டது, நீங்கள் இனி திகிலேவிடுவீர்கள் விடுவீர்கள்.

(அரி-வ-ம்) சுவாமி ? எல்லாம் தங்களனுக்கிரகமேயாம், வாரும்.

விஸ்வாமித்திரன் தரு

இராகம்-கேதாரகவுளம், தாளம்-சாப்பு,

பல்லவி.

வருணனேவந்திடுவா யுன்னைக்கோரினேன் வருணனேவந்திடுவாய்

அநுபல்லவி.

கருணைகோரியகாலங் கனிவாக்களித்தநாதா
காக்கவேயடியேனைக் கடுகியோடிவாயிங்கு. (வ)

சரணம்.

மேகத்திற்கதிகாரி யுலகிலே மேருவுக்குபகாரி
யாகத்திற்கதிபதி முனிவர்மற்ற வடியவற்குங்கெதி
தேகத்தைபோஷிக்குந் தேவேயுனையழைத்தேன்
தீவரத்திலென்முன் தெரிசனமளித்திட. (வ)

(பொது-வ-ம்) சபையோர்களே ? அக்கினிதேவனையனுப்பியும், பலனில்லாமல் போனதைப்பற்றி, அரசன்முதலியவர்களை மேன்மேலும் வருத்தமுறச்செய்ய நினைந்து வருணபகவானைத்தோத்திரிக்க, மனமகிழ்ந்து முனிவனிடம் வருணதேவன் வருகிறவிதங்காண்க.

வருணதேவன் தரு.

இராகம்-தன்யாசி, தாளம்-ஆதி.

பல்லவி.

மேகநாதன்வந்தான் முனியைக்காண மேகநாதன்வந்தான்.

அநுபல்லவி,

ஆகமவேதத்துறை யறிஞர்கட்கெல்லாமேட்டி
அனைத்துயிர்களுக்குமே யமுதமளிக்குங்கெட்டி. (மே)

சரணம்.

தவமுனிமுறைகேட்டு ஓடோடியே தங்காமற்றினசையெட்டே
புவனமுஞ்சூழவிட்டு பூலோகத்தில் போகுமன்பரைத்தொட்டே
நவகுணனயோத்தியாம் நாட்டையரசுசெய்தோன்
தவங்கெடச்செய்வோர்களிற் குணமொருவனுக. (மே)

(வருண-வ-ம்) ஏ விஸ்வாமித்திரமுனியே ? என்னையழைத்தகாரணம் யாதோ தெரியச்சொல்லும், இரிஷியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

திட்முடனேயரிச்சந்திரன்தேசிபாலன்
திகழ்பெருகுமந்திரியுந்தாரகேனுடு

தடம்புற்றிக்காசிநகரருகிற்போகுர்
தயாபரனேயுன்மாய்கைதன்னைக்காட்டி
படபடெனுந்தொனியுடனேயிடியுமின்னல்
பார்மீதில்நீர்சொரிந்தேநவோருக்கி
கடந்திடவேயவரிறக்கில்நால்வர்தம்மைக்
காசிவிட்டுநெடுந்தூரங்கடத்துவீரே.

(விஸ்-வ-ம்) சுவாமி ? இப்போது அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்தியகீர்த்தி, தாகரென்று நாமதேயம்பூண்ட சுக்கிரமூர்த்தி, ஆக ஐவரும் காசிக்கருகில்போகிறூர்கள், உமதுமாய்கையால் பேரிடி மின்னலுடன் மழைசொரிந்து அவாள் நடக்கும்வழிமத்தியில் ஒரு காட்டாறு உண்டாக்கி; அதிலிறங்க தாகர்தவிர மற்ற நால்வரையும் காசிவிட்டு நெடுந்தூரம் கொண்டுபோகச்செய்வாய் பகவானே.

வருணபகவான் விருத்தம்.

முனிவனேயுனக்காய்நானு முன்னிருள்கப்பச்செய்தே
பனியதைபெய்யவைப்பேன் பகரிடிமின்னல்காட்டி
தனிமைநீர்பெருகியாறுய்த் தானேடச்செய்வேனன்றி
கனிவுளபத்னிவாக்கைக் கடந்திடசக்யனன்றே

(வருண-வ-ம்) முனியே ? உமக்காக இடிமின்னலுடன் மழையைப் பெய்யச்செய்வேன், காட்டாறுமுண்டாக்குவேன், ஆனல் பத்தினியாகிய சந்திரமதி வாக்கைக்கடக்க என்னாலாகாது இருஷியே.

(விஸ்-வ-ம்) சுவாமி வருணபகனே ? நீர் இவ்வளவுசெய்தேபோதுமானது, அதற்குள் தாகர் அரசனைமிரட்டி பொய்பேசச்செய்வார், பிறகு உம்மால் எனக்குக்கீர்த்திகிடைக்கும்.

(வருண-வ-ம்) அப்படியே செய்கின்றேன், போய்வருகின்றேன்.

தாகன் விருத்தம்.

அப்பப்பாவிதேதுகால் மடாதவிண்ணிருள்தான்வந்து
கப்பவேகண்கள்ரெண்டுங் காண்பதுமருமையாச்சே
செப்புமுன்னிடியுமின்னல் சிறுதேதுதிக்கைபோலக்
கொப்பவேவானநீருங் கொட்டுதேயையோமன்று.

(தாக-வ-ம்) ஓய் இராஜனே ? இடிமின்னலுடன் ஆனைத்துதிக்கைபோல மழைகொட்டுகின்றதே, ஐயோ ! தேகம் நடுங்குகின்றதே, என்ன செய்வேன் ! ஐயையோ ! தெரியாமல் வந்துவிட்டேனே !

(அரி-வ-ம்) சுவாமி ? சற்று பொறும்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அருமையிலுயர்ந்தபெண்ணே யக்கினிகடந்துவந்தோம்
கருமேகங்கவிழ்ந்தேயிங்கு கலங்கிடமழையுந்தூவ

வறுமைபுமுயர்த்தமின்னல் வாட்டிடவிடியிடிக்கச்
சிறுமையேகொண்டாரையர் செய்யும்வாறறிகிலேனே.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரமதி ? இதென்னகாலமோ தெரியவில்லை ! இப்போது இடியும், மின்னலும், பெருமழையும், சேர்ந்து அடிப்பதால், ஐயர்கலங்குகின்றார்; இதற்கென்னசெய்வேனடி மயிலே !

சந்திரமதி விருத்தம்.

ஐயரேநக்ஷத்திரேச வன்பரேயஞ்சவேண்டாம்
ஐயரேயென்னைக்கிட்டி யாலத்தின்கீழேநிற்பீர்
ஐயரேமழையின்வேக மடங்கிடத்துதிப்பேனும்
ஐயரேதணிந்தபின்னை ரப்புரஞ்செல்வோம்சுவாமி.

(சந்-வ-ம்) சுவாமி தரகரே ? சற்று இந்த ஆலமரத்தின் கீழ் என் அருகில் நிற்பீர், மழைபடங்கவேண்டி நான் வருணனைத்துதிப்பேன், மழை நின்றபிறகு முன்னுக்குச்செல்லுவோம் வேதியரே.

(தரக-வ-ம்) ஐயையோ ! வெருமே ஜலங்கொட்டுகின்றதே ! இடியோ இடிக்கின்றதே ! மின்னுவதினால் கண்முழி வெளிவருகின்றதே ! நானோ இனி நிற்கமாட்டேன், ஙகெப்ராணை பொன்னையுங்கேழ்க்கிறதில்லை, ஓய் இராஜனே ? நானோடிப்போறேனப்பா விட்டுவிடுவாய்.

(அரி-வ-ம்) சுவாமி ? பயப்படாதேயும், ஒரு நொடிக்குள்ளேமழையும், மப்பும், நீங்கிவிடும் பாரும் நாதனே.

(தரக-வ-ம்) அடாய், அடாய், இராஜனே ? நீ என் முன் நில்லடா, அடாய் மந்திரி ? நீ பின்னே நில்லடா, அடா பயலே ? இடது பாரிசத்தில் நில்லடா, அம்மா தாயே சந்திரமதி ? நீ வலது பாரிசத்தில் நிற்பாய், நேக்கு மெத்தகுளிராயிருக்கிறது, ஓ, ஓ, ஓ, ஊ, ஊ, ஊ.

(சந்-வ-ம்) சற்று பொறும் தேவா.

சந்திரமதி வருணபகவானைத்துதிக்குந் தரு.

இராகம்-உசேனி, தாளம்-சாப்பு.

பல்லவி.

வரமருள்வாய் வருணா வருணா கருணா. (வ)

அநுபல்லவி.

வரமருள்வாயுன்னைப் பரமெனநான் மதித்தேன். (வ)

சரணங்கள்.

காலமல்லவேயிதுவே நீர்சொரிய
கோலம்வந்ததுஞ்சதியே !
சீலமுனிவன்செய்யுஞ் செய்கைக்குநீயுள்ளாகி
பாலனுடனேநாங்கள் பதைக்கவருத்தலாமோ ! (வ)

உத்தமிராணுமாளுல் - ஓ! ஓ! சுவாமி
சித்தமுநயப்பாஞல்
பெற்றவாகான்சொலும் பிரீதிமொழிக்கிரங்கி
கர்த்தனேயெங்களுக்குக் கருணைமொழிகாட்ட. (வ)
காசிக்குப்போகவே - ஐயனே!
கோசிகன்கடனையிகலே
ஆசித்தனைப்பணிந்தே னடியாள்குறையகல
நேசித்திங்கனேவந்து நிகழுன்பணியடக்க. (வ)

(அரி-வ-ம்) சுவாமி தரகரே? இதோ நின்றுவிட்டது பாரும். இனி முன்னுக்கு நடக்கலாம் வாரும் ஆண்டவா.

(தரக-வ-ம்) அடாய் சந்தாய்? பார்த்தையா! நானுங்கள் மத்தியிலிருந்தே கண்ணைமூடி மானதபூசைசெய்துமுடிவதற்குமுன், வருணன் தனது எண்ணத்தைமறந்து பறந்துபோய்விட்டான்! பார்த்தையா நமது வல்லமையை! ஆ! ஆ! ஆ!

(அரி-வ-ம்) ஆம், ஆம், ஆண்டவா, எல்லாம் உம்முடைய அருள்தான், யாதொருசந்தேகமுமில்லை, தேவே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாய் மழை நின்று முன்னுக்கு நடக்கும்வழியில், விஸ்வாமித்திரமுனிவனுக்கு வாக்களித்தபிரகாரம், வருணன் பெருக்செய்த காட்டாற்றைக்கண்டு அரசன் மனங்கலங்க, தரகன் பயப்படுகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

## தரகன் விருத்தம்.

அரசனேபோதும்போது மப்பப்பாவென்னலாகா
தரகனுய்வந்துகண்ட தாபங்கடனைப்பார்க்கில்
கரையதுபிரண்டேயோடுங் காட்டாற்றைக்கடக்கப்போமோ
விரைவுடனோடிப்போவேன் வேண்டிலேன்பொன்னைத்தானே

(தரக-வ-ம்) ஓய் இராஜனே? நான் தரகனுய்வந்து அனுபவித்தத் துன்பம் போதும், போதும், இந்தக்காட்டாற்றைக்கடக்க என்னுலாகாது, பொன்னும் வேண்டாம், நான் ஓடிப்போகின்றேன் வேந்தனே.

(அரி-வ-ம்) சுவாமி தரகரே? ஏனிப்படிப் பயப்படுகின்றீர், நான் முன்னேபோகின்றேன், நீர் பின்பற்றி வாரும் வேதியரே.

(சத்-வ-ம்) அரசே? என்னதுணிவுகொண்டீர்! இப்பெரியகாட்டாற்றில் ஆழந்தெரியாமலிறங்கப்போகுமா! இதனது ஆழத்தை தெரிந்துகொள்ளுகிறவரையில் சற்றுபொறுப்பீர் மகாராஜனே,—(ஆழம் பார்க்கல்) அ! ஒரு சிறிய கல்லைப்போட்டேன், அது அடிபோய்ச்சேரவில்லையே, ஆனதால் இதன் ஆழம் சற்றேறக்குறைய யா

னையுபாம்போற் காணப்படுகின்றது; சரி, அரசே ? சற்று பொறுத்தால் நீர் வடிந்துபோகும், பிறகு உமதிஷ்டம், போகலாம் ஆண்டவா.

சந்திரமதி விருத்தம்.

அப்பனேசத்தியகீர்த்தி யாண்டவனருளிருந்தால்
அப்பனேயிதுதானென்ன வகாதமோநான்முன்போறேன்
அப்பனேநீயும்பால னண்ணலுமையர்தானும்
அப்பனேயெனைத்தொடர்ந்தே யன்புடன்வருகுவீரே.

(சந்-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி ? ஆண்டவனருளிருந்தா லிவ்வாற்றைக்கடப்பது ஒரு பெருதா, இப்போது நான் முன்செல்கின்றேன் நீங்கள் எல்லோரும் யாதொருசிந்தனையில்லாமல், பின்பற்றி வருவீர்கள், மேலும் இதுவரையில் வந்த இடர்களைத்தீர்த்து வழிகாட்டிய கடவுள். இப்போது எங்கு சென்றனர், ஆனதால் பாரத்தை அவன்பேரில் சாட்டி நாம் நடப்பதே திண்ணம்.

சந்திரமதி தரு.

இராகம்-ஆரபி, தாளம்-ஆதி.

பல்லவி.

வழிவிடுகெங்கா நான் போக வழிவிடுகெங்கா.

அநுபல்லவி.

அழிமுனிசெய்திடு மகந்தைக்குள்ளாகி நீ
பழிபதும்புரிவது பத்தினிக்கொவ்வாது. (வ)

சரணங்கள்.

நாளுமுனைத்துதித்தே நாட்டில் நயமுடன்வீற்றிருந்தேன்
கோளுமுனிவன்செய் குறையாலிக்கேயுற்றேன்
கோமளிசாமளி கிருபைசெய்தோங்கி நீ. (வ)
உன்னைப்பணிந்தேனே பெண்ணுறு முரைப்பதைத்தடுக்காதே
கண்ணைமூடிப்பின் காண்பதற்குள்ளாக
கங்காயிருபுறங் கால்செலநன்றாக. (வ)
பத்தினிநீயாச்சே அம்மா பராமுகங்காட்டாதே
யெத்திசையிலுமுனை யேத்திப்பணிந்தேனே
யீஸ்வரிபொய்க்காம லெங்களைக்கா மானே. (வ)

(அரி-வ-ம்) ஐயா தரகரே ? காட்டாற்றைக்கடந்துவந்தோம், இதோ காசிபட்டணம் தெரிகின்றது, இனிபயமில்லை சுவாமி.

(தரக-வ-ம்) ஓய் இராஜனே ? உங்கள் நிமித்தமாக நான்சுருதிசுலோகத்தில் ஒன்றில் பாதிதான் சொன்னேன், அதற்குள் கங்கை பயந்து இருபிளவாய் விட்டனள், பார்த்தியா ! நானொருவனில்லாவிட்டால் உ

ங்களை கெதியென்னமாய் முடியுமோ ! நீங்களெல்லோரும் இந்த வெள்ளத்திற்கே இரையாய்விடுவீர்கள், ஆனதால் இந்நன்றிமறவாமல் சீக்கிரத்தில் ரொக்கத்தைக்கொடுத்து, என்னையும் மனமகிழ அனுப்பிவிட்டு மறுவேலைபார்க்கவேண்டும்.

(அரி-வ-ம்) சுவாமி ? எங்களுக்குநேரிட்டதுன்பமெல்லாந் தங்களனுக்கிரகத்தினால் நிவர்த்தியாயிவ்வளவு தூரம் வந்தோம் அன்றி வேறில்லை, அதன்றியில் நீர் கோரியவாறு சீக்கிரமே அனுப்புகிறேன்.

பொது விருத்தம்

பனியுடனேநெருப்பதனைக்கடந்துகாட்டில்
பைங்கொடியாள்பின்பற்றிகாட்டாந்தாண்டி
முனிவனிடுந்துயரமெலாம்நன்மைக்கென்றே
முகத்தெளிவாய்மன்னவனுமனமகிழ்ந்து
கனிவுடனேகாசிநகர்தோற்றங்கண்டு
கண்ணேக்கிக்கரங்குவித்தேகரும்பேநீதான்
இனியபரன்வாழ்நகரைத்தரிசியென்றே
யியம்பியிருவருமபணிந்தேயேற்றுவாரே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? காசிக்குவரும் வழியில், முனிவனால் வந்த அனேகதுன்பங்களை பரமனருளால் போக்கிக்கொண்டு ஆற்றங்கரையேறினவுடன் அரிச்சந்திரமகாராஜன் காசிகோபுரந்தோற்றத்தைக்கண்டு குதூகலத்துடன் தன் பத்தினிக்குக்காண்பித்துக் கரங்கூப்பித் தொழுகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

## காசிகோபுரதரிசனம்.

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-தோடி, தாளம்-ஆதி.

பல்லவி.

கரங்குவிப்பாய்மயிலே இதோக்காசி காணுதுபார்குயிலே.

அநுபல்லவி.

பிரமனன்றெழுதிய பெருவிதிகருமங்கள்
பிந்தித்தொடராதாளும் பெருமான்வாழ்நகர். (கர)

சரணங்கள்.

நால்வகையோனிகளில் நாட்டிலெழுதோற்றமாய்
சமன்வதைக்காளாக நாடிப்பிறந்ததுன்பம்
கால்மேற்றலைகீழாய்க் கருதினின்றுழுலுமந்தக்
கபவர்தமக்கேதுயர் கடக்கவருமோவின்றம். (கர)

கண்டவர்மகிழுற வண்டர்பதவிபெற
கொண்டவருமையுற வெண்டிசைபுகழ்தர
கொற்றவன்பிரணவ முற்றவனரிதலம்
பெற்றவன்தெரிசவச் சுத்தவன்வாழ்நகரிதோ. (கர)

அரனடிநினையாம லங்கத்தையொடிக்கியே
அண்டியமாதினையே யகற்றிநிலைவிடுத்தே
சரகினையேபுசிக்கச் சார்ந்துயடவிபுக்குசர
சாற்றுங்குருமொழியைச் சாராநெறிவகுத்தே. (கர)

தன்னுளேயாணவ மென்னதெனும்பவும்
முன்னமதின்கனம் வன்னதாகுந்தவம்
வேறுபடாமலே நேருவிடாமலே
பேருகெடாமலே சாரும்பரமன்னகரி. (கர)

தீராத்துயர்கள்போக்குந் திவ்யபதவியாக்கும்
தேஜோன்மயத்தைக்காணத் தெரியுமருளைத்தாக்கும்
ஆரானபவமது வகற்றியேயடிமானே
அன்பர்கள்வாழுமந்த வருஞ்சபைதன்னில்சேர்க்கும். (கர)

அடவியிற்சென்றதுந் திடமுட்னின்றதும்
புட்மிசைவிண்டது மிடரதுகொண்டதும்
அற்றிடபலதுயர் பெற்றிடசற்கதி
உற்றிடநற்பெயர் நத்திதோசிவநகர். (கர)

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்வாறு காசிநகர்கோபுரத்தைக் கண்டு அரிச்சந்திரமகாராஜன் முதலானவர்கள் சந்தோஷித்தார்கள் நாட்டுக்குள் நடந்தனர்; இப்பால் அயோத்தியாபுரியில் அரசுநடத்திவரும் சற்குணமந்திரி தன் அரசனுக்கு நேரிட்டகாலக்கதியை மதிதயமகாராஜனுக்குத் தெரிவிக்கிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

## சற்குணமந்திரி விருத்தம்.

ஆரடாகட்டியக்காரா வரிச்சந்திரமகிபன்றனும்
பாரடாவரசும்பாக்கியம் பண்புடன்முனிக்களித்தே
தேர்டாமந்திரியோடுந் திகழ்பெருங்காசிக்குப்போ
னாரடாசேதிபோக்க நற்றூதன்வரச்செய்வாயே.

(சற்கு-வ-ம்) அடா கட்டியனே? நமது இராஜர் காசிக்குப்போன சங்கதியைமதிதயமகாராஜருக்குத் தெரிவிக்கவேண்டியதால், ஒரு நல்ல தூதனை அழைத்துவருவாயப்பா கட்டியனே.

(கட்-வ-ம்) அப்படியே அழைத்தோடிவருகின்றேன் சுவாமி,—ஐ

யா தூதரே? சற்குணமந்திரியானவர் உன்னைக்கோரினதால் சீக்கிரம் வரவேண்டும், தாமதிக்கப்போகாது.

(தூதன்-வ-ம்) அப்படியே வருகிறேனப்பா,—(போய்க்காணல்) அடியேனை அழைப்பித்தக்காரணந்தெரியச்சொல்லும் ஆண்டவனே.

சற்குணமந்திரி விருத்தம்.

தூதனேநமதுவேந்தன் துன்மதிகவுசிகற்கே
தூதனேயரசையீந்தே தொலையாதகடனைத்தாங்கி
தூதனேகுடும்பத்தோடுந் துணைவனுஞ்சத்தியகீர்த்தி
தூதனேகாசிசென்றார் தொடரவேதாகன்றானே.

(சற்கு-வ-ம்) அடா தூதனே? நமது இராஜர் விஸ்வாமித்திரனுக்கு இராஜ்ஜியத்தைக்கொடுத்ததுமன்றி, அவனுக்குக்கடன்காரராகி குடும்பத்தோடு கடனைத்தீர்க்க நாற்பத்தெட்டுநாள் தவணையிட்டுக்கொண்டுதாரனுடன் காசிக்குப்போனார், இன்னங்கேளடா தூதனே:

சற்குண மந்திரி விருத்தம்.

ஆனதால்தூதர்கேளா யரைநொடிபோக்கிடாமல்
மானனுமதிதயேந்திர மகாராஜன்கொலுமுன்சென்று
நானுரைத்ததாகவிங்கு நாதனுக்குற்றதெல்லாம்
நீனுய்நின்றுசெப்பித் தீவரம்வருகுவாயே.

(சற்கு-வ-ம்) ஆனதால் தூதனே? இந்த சங்கதி உனக்குத்தெரிந்திருக்கிறதானகயால், நமது இராஜாவின் மாமனாராகிய மதிதயமகாராஜருக்கு விபரமாகத்தெரிவித்து விஸ்வாமித்திரன் வருவதற்குமுன் இவ்விடம் வந்துசேரவேண்டுமடா தூதனே.

(தூத-வ-ம்) அப்படியே தெரிவித்தோடி வருகின்றேன். (செல்லல்)

(பொது-வ-ம்) சபையோர்களே? சற்குணமந்திரி உத்திரவுபெற்ற தூதன் ஓட்டமும், நடையாய்நடந்து, கன்னமாபுரியையாளும் மதிதயமகாராஜன் கொலுமுன் சேர்ந்து அயோத்தியில் நடந்தவாறுரைக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

(தூத-வ-ம்) ஏ கட்டியனே? அரிச்சந்திரமகாராஜர் தூதன் ஏதோ தெரிவிக்கவேண்டி கொலுச்சாவடியில் வந்திருக்கிறனென்று இராஜாவுக்குத் தெரிவியுமையாகட்டியனே.

(கட்-வ-ம்) அப்படியே தெரிவித் தோடிவருகின்றே னப்பா தூதனே—இராஜபரமேஸ்வரர்? இப்போது அயோத்திமா நகரத்திலிருந்து ஒரு தூதன் வந்திருக்கின்றான், உத்திரவாகில் வரும்படிசெய்கின்றேன் ஆண்டவா.

(மதித-வ-ம்) அப்படியா! வெகுசந்தோஷம் சீக்கிரம்வரச்செய்வாய்

(நட்-வ-ம்) புத்தி ஆண்டவா,—ஐயா தூதனே? அரசர் வரும்படி கோறினர் இனி தடையில்லை.

(தூ[illegible]-ம்) அப்படியே போகின்றேன் கட்டியனே,— போற்றி, போற்றி, கன்னமாபுரியாளும் ஆண்டவரே, போற்றி.

மதிதயமகாராஜன் விருத்தம்.

என்னடாதூதாநீதா னிரங்கியமுகத்திஞேடு
என்னடாவிரைப்புமீற வேக்கமாய்நாவுலர்ந்து
என்னடாவோடிவந்தா யென்மகள்மருகன்சேதி
என்னடாவெனக்குத்தோன்ற வெடுத்துநீயுரைசெய்வாயே.

(மதித-வ-ம்) அடா தூதனே? நீ முகவாட்டத்தோடும் ஏங்கிய குரலாய் இங்கு ஓடோடியும் வந்ததென்ன! என் மகள், மருகன், பேரன், மந்திரிகள், குடிகள் முதலியோர்கள் சுகமா? அல்லது ஏதாவது உண்டா? மேலும் உன்முகத்தைப்பார்க்குபோதே மனதில் திகிலடைந்துவிட்டது; என்செய்வேன்! சீக்கிரஞ்சொல்வாயடா தூதனே.

தூதன் விருத்தம்.

மன்னவனேகௌசிகனுமயோத்திவந்தே
மகராஜன்தனைமயக்கிமாயமாக
வன்னமுளயாகம்தபுரியப்பொன்னே
வாங்கியவர்பாலிருக்கவருவேனென்று
சொன்னவனும்விலங்கைவிட்டுப்பயிரழிக்கச்
சுரயேவிவதைபுரியக்கண்டபாவி
யென்னசொல்வேனிருநீச்சமாதர்தம்மை
யேவினனினிநடந்தவியப்பைக்கேளீர்.

(தூத-வ-ம்) மகாராஜனே? என்னசொல்லப்போறேன்! விஸ்வாமித்திரமுனிவன், அரிச்சந்திரமகாராஜனிடம்வந்து, யாகஞ்செய்வதற்காக ஆனையின்பேரில் ஒரு வாலிபனின்று கவுண்டெறியுமுயரம் பொன்கேட்டான், வேந்தன் அவ்வாறே கொடுக்க, உமதிடமேவைத்திரு, வேண்டும்போது வருகிறேனென்று சொல்லிப்போய், மிருகங்களையேவி பயிர்களையழிக்கக்கண்ட குடிகள் முறையைக்கேட்ட மன்னர் வேட்டையாடி அவைகளை நாசஞ்செய்யக்கண்ட படுபாவி இரண்டு நீச்சமாதரை அனுப்பினான், இன்னமுங்கேளும் ஆண்டவா.

இருமாதுமரசனிடம்நடிக்கப்பூரி
யீந்தாலுந்தடுத்தரசையிணங்குவென்றார்
கருமமெனநீக்கிடவுமவர்சென்றோதக்
கௌசிகனுங்கோபமுடனோட்டில்வந்து

ஒருமமக்கமனைதிலிட்டுவரசும்நாடும்
வாங்கினன்மன்னவரையாண்டியாக்கி
தருமமிட்டபொருளத்தனைக்கடன்சுமத்தித்
தாரகனுடன்காசிசெலத்தான்விட்டானே.

(தூத-வ-ம்) ஆண்டவனே? கௌசிகனனுப்பிய நீச்சமாதர்கள் அரசர் முன் வெகுநேர்த்தியான ஆடல் பாடல்புரிய, அவாளுக்குவேண்டிய வெகுமதிகள் கொடுக்கச்சொன்னார், அவைகளைமறுத்து பூச்சக்கிரக்கொடையைக் கொடுமென்றும், இல்லாவிடில் எங்களைச்சேருமென்றார்கள், இவ்வார்த்தையைக்கேட்ட அரசர் சபையைவிட்டு வெளியாக்க, அம்மாதர்கள் முனிவனிடஞ்சென்று முறையிடக் கேட்டபாவி, அதி தீவரத்துடன்வந்து அரசரை தந்திரமாய்மிரட்டி நாடுமுதலியவைகளைப் பறித்துக்கொண்டு வேந்தரை'ப்ரதேசியாக்கி, முன் தானம்வாங்கி இருந்திபோனபொன்னைக் கடனாகச்சுமத்தினதின்பேரில் அக்கடனைக் காசிமாநகர்சென்றுதருவதாகத் தாரகனோடு குடும்பத்துடன் போயிருக்கிறதாகச் சற்குணமந்திரிதெரிவிக்கச்சொன்னார் ஆண்டவா.

மதிதயமகாராஜன் விருத்தம்.

என்னநான்செய்வேன்மந்திரி யெப்படிதரிப்பேனவி
மன்னவர்மன்னருக்கே மருவியதுயரைப்போக்க
வின்னகர்விடுத்தேயிப்போ தேகிறேனயோத்தியப்பா
வுன்னதவரசைநீதா னுரிமையாய்நடத்துவாயே.

(மதித-வ-ம்) அப்பா மந்திரி? தூதன் சொன்னதைக் கேட்டாயல்லவா! நான் அயோத்திக்குப்போய் சங்கதிதெரிந்துவருகின்றேன், அதுவரையில் நீ அரசைக்காப்பாயப்பா மந்திரி.

(மந்-வ-ம்) மகாபாக்கியம், அப்படியேபோய் அவ்விடம் ஆகவேண்டிய காரியாகாரியங்களை முடிவுசெய்துகொண்டு வருவீர் ஆண்டவா.

மதிதயமகாராஜன் ஆசிரிய விருத்தம்.

அன்னமேயென்பிராணநாயகியயோத்திபன்
ஆனகெதிகேள்கவுசிகன்
அருகிருலேயிரக்கவுமரசதை
யளித்துமேகடன்காரனாய்
மன்னவன்மாதுமந்திரியுடன்பாலனும்
மாமுனிதாரகனேவ
மாறுரிதரித்துமேகாசிநகர்போய்க்கடன்
மாற்றவேசென்றசேதி
யுன்னுசற்குணந்தெரிவித்தனனானேகி
யூடாடறிந்துவாறே

ஹுத்தமிநீயிங்குபத்திரமாயிரு
யொருவேளைசமயமாகில்
மன்னருங்கடனதையீந்துமென்மருகனைப்
பற்றியேயிங்குவாறேன்.
பார்வையேநீயுமானடிகளைத்துதித்திடு
பண்புடன்வாழிவாழி.

(மதித-வ-ம்) அடி என்பிராணநாயகி ? நமது மருகன், செங்கோலை கௌசிகனுக்குக்கொடுத்துவிட்டு, அவனுக்கு முன் தானங்கொடுத்த பொன்னைக்கடன் சுமத்திக்கொண்டு, காசிக்குத் தாரகனோடு போன தாகத்தெரிந்தேன், நான்போய் கடனைத்தீர்த்து அழைத்துக்கொண்டு வருமளவும், பரமனைதியானம்பண்ணிக்கொண்டு இருப்பாயடியிலே

(சுந்திரரேகை-வ-ம்) ஆ ! ஜெகதீசா ! தவமா தவமிருந்துபெற்ற என்மகளுக்கும், இராஜ இராஜாக்கள் பணிந்து ஏவல்செய்து அரசாண்ட மன்னவராகிய என்மருகருக்கும், தவக்கொழுந்தாகிய பேரப்பிள்ளைக்கும், திரிகாலங்களும் உணர்ந்து சொல்லத்தக்க அதிநீதிமானாகிய சத்தியகீர்த்திக்கும், வாய்ந்த விதியே விதி ! ஐயையோ ! என்னசெய்வேன் ! ஜெகதீசா ! காரும், காரும், அவர்கள்வினையைத் தீரும், தீரும் —பிராணநாதா ? சீக்கிரம்போய் அடியாள்மீது தயவுடன்சென்று வேரொருகாரியத்தின் மீதிலு மனதைச்செலுத்தாமல் மேற்படி கடனைத் தீர்த்து அதிவினயத்துடன் அவர்களை யழைத்துக்கொண்டுவரும்படி இதோதங்கள் பாதம்போற்றினேன் நாதா.

(மதித-வ-ம்) அடிமானே ? அக்காரியத்தை முடிவுசெய்ய நானிருக்கும்போது நீ வியசனசாகரத்தி லாழ்ந்தப்போகுமா, வேண்டாம், வேண்டாம், என்மனம்போல் உன்மனமுமிருப்பதால் அவ்வாறே அழைத்துக்கொண்டுவருகிறேன் நாயகி.—(அயோத்திக்கேகுதல்.)

(பொது--வ-ம்) சபையோர்களே ? மதிதயமகாராஜன் அயோத்தியிலிருந்துவந்த தூதனுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டு, அதிதீவரத்தில் அயோத்தியாபுரிகொலுச்சாவடிக்குவரக்கண்ட சற்குணனெழுந்துவணங்க, ஆதரித்து அரிச்சந்திரமகாராஜனுடைய வரலாறுவிசாரிக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

மதிதயமகாராஜன் விருத்தம்.

மின்னொளிர்வேலைத்தாங்கி மெய்மொழிதவறுச்சீலன்
மன்னருக்கிடிவேறன்னுன் மாகிலம்புகழுந்தூய
வென்னருமருகன்பால னெழில்தவப்புதல்வியோடு
சென்னெல்சூழயோத்திவிட்டுச் சென்றவாறுரைசெய்வாயே.

(மதி-வ-ம்) அப்பாசற்குணமந்திரி? வலுமைதங்கிய என்மருகனுகிய அரிச்சந்திரனுமழகுபொருந்திய மகளானசந்திரவதியுமினிய வசனமுள்ளபேரனும், போனமார்க்கந் தெரியச்சொல்வாயப்பா மந்திரி.

சற்குணமந்திரி விருத்தம்.

ஆதாரமுடையவெந்த னண்ணனும்விஸ்வாமித்திரன்
போதனைக்குள்ளாகாமற் பொன்மலர்பொழியுநாட்டை
யேதமிலொழிக்கே யிணையலவெனத்துறந்தே
யோதறம்பெரிதென்றுள்ளி யொளிநகருற்றார்வேந்தே.

(சற்கு-வ-ம்) மகாராஜனே? அசத்தியனான விஸ்வாமித்திரன் செய்த வல்வகளுக் குடன்படாமலரசுமுதலான யாவத்துஞ் சத்தியத்திற்கீடல்லவெனத்துறந்து கவுசிகன்கடனைத் தீர்க்கக் காசிக்குப் போனாரென்றுண்டவனே.

மதிதயம்காராஜன் விருத்தம்.

நல்லதுவமைச்சாநானும் நாடிப்போய்காசியப்பா
வல்லவன்றனைநான்கண்டு வண்பொருளீந்துமீட்டே
யெல்லவரினைச்சிரேற்ற யேந்திழைப்பாலனேடு
சொல்லருங்களிப்பாய்வாறேன் சுருக்கினிலறிகுவாயே.

(மதி-வ-ம்) நல்லதப்பா சற்குணு? நான்காசிக்குப்போய், அரசனைக்கண்டு கடனைத்தீர்த்து அழைத்துக்கொண்டு சீக்கிரம் வருகிறேன் மந்திரி.

(சற்கு-வ-ம்) மகாபாக்கிய மப்படியே செய்யக்கோருகின்றேனரசே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இந்தப்பிரகாரஞ் சொல்லிவிட்டு அரிச்சந்திரமகாராஜனைப்பார்க்க மதிதயமகாராஜன் காசிக்குச்சென்றானென் றறிவீர்கள் கனவான்களே.

ஆரண்யகாண்டம்,

சம்பூர்ணம்.

சுப்ரமண்யன் சகாயம்.



உ

ஸ்ரீ. ஸ்ரீ. அப்பாவு பிள்ளை.



ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோதசபை.

# காசிகாண்டம்.

---

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்விதமாக அரிச்சந்திரன் முதலானவர்கள் காசிமாநகரம் சேர்ந்தபிறகு தம் தம் வினைகளை போக்கிக்கொள்ளவும் காசிவிஸ்வேஸ்வரனுடைய அருளைப் பெறுநிமித்தம் அரிச்சந்திரமகாராஜன்; தரகனுகவந்த நட்சத்திரேசனை உத்திரவுகேழ்க்கிறவிதங் காண்பீர்கள் கனவான்களே.

(அரி-வ-ம்) சுவாமி தரகரே ? இப்போது நாம் காசிமாநகர்வந்தோம், இனி முன்னுக்கு நடக்கவேண்டிய காரியம் பூர்த்திசெய்துகொள்ள வேண்டியிருப்பதாலும், எங்களிலும் அறியாமற்செய்த வினைகள் யாதேனுமிருந்தபோதிலும், அதை நிவர்த்திசெய்துகொள்ளுமாறு, காசிநாதனைத் தரிசிக்கவேண்டியிருப்பதால், இவ்வேழைகளின்மீது கிருபை கூர்ந்து விடைதரவேண்டும் ஆண்டவா.

(தரக-வ-ம்) ஓய் ஓய், இராஜனே ? இது என்னவிந்தைகாணும் ! உன்னை சரயுநதிக்கரையில் நான் கண்டபோது நீ சொன்ன சொற்களுக்கெல்லாம் மாருகவேநடந்து விட்டாய், ஆகிலும் பெரிதல்ல, இப்போது என்ன நினைவுகொண்டுவிட்டாயோ தெரியவில்லை ! யானினைப்பது யாதெனிலோ இக்காசியில் நீ ஏந்த வேலைசெய்து கடனைத்தீர்ப்பதென்று திகிலடைந்து என்னை விட்டு, காசிநாதன் சாக்கிட்டு, எங்கேனுபோய்விடப்போகிறதாகத்தெரியவருகிறது ; ஐயையோ ! இதுவும் ஞாயந்தானு ! இப்பதிக்குவந்து உன்னறிவும் இப்படியாகுமா ! அந்த விஸ்வாமித்திரனுக்கென்ன சொல்வேன், அல்லது அப்படிப்போய் ஈசனைப்பணிவதில் உன் கடனுக்கும், உன் வினைக்கும், அவர் என்னசெய்யக்கூடும் ; ஆனதால் இக்காரியம் பயித்தியன்கூட செய்யத்துணியான், இந்த வீண்பிரயத்தினத்தையெல்லாம்விட்டு, தர்க்காலம் கடனைக்கொடுக்கமுடியவில்லையென ஒரு வார்த்தைசொன்னால் ஓடிப்போகிறேன், இதொரு கஷ்டமா.

(அரி-வ-ம்) சுவாமி ? இரவி, மதி, கதிபுரண்டிடினும், நான் சொல்

லைமாறேன், மேலும் நீர் எண்ணியவாறு போகவுமாட்டேன், ஆண்டவனைத் தரிசித்து வந்தவுடன் தங்கள் கடனை யெவ்விதத்திலுந்தீர்த்துவிடுகின்றேன், தயவுசெய்து போய்வர [உத்திரவு] அளிக்கவேண்டும் ஆண்டவா.

(நரக-வ-ம்) ஆனால் உமதிஷ்டம், உனதுவாக்கின் உறுதியால் அனுப்பச்சம்மதித்தேன், சீக்கிரம் போய்வந்து சேருவீர்கள்.

(அரி-வ-ம்) புத்தி, புத்தி, ஆண்டவா. (நரகன்தவிர யாவரும் தரிசனத்துக்கேகுதல்)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

புவனத்திற்பெருங்கீர்த்தி பொருந்தியமதிதயேந்திரன்
தவமதாலிநற்குணங்கள் தங்கியேயுதித்தமாதே
பவனியிற்பிறந்தமாந்த ரமைத்திடும்பவங்களெல்லாம்
கவனிக்கிலோடச்செய்யுங் காசிநாமடைந்தோம்பாராய்.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரவதி ? பூலோகத்தின்கண்ணுள்ள மானிடர்கள் ஒவ்வொருவம் செய்யும்படியான சகலபாவங்களையும் இரவியைக்கண்ட பனிபோல் நீக்கச்செய்யும்படியான திவ்யமகிமைபூண்ட காசிநாடு இதோ நாம் வந்தோம் பாராய் பெண்ணே.

(சந்-வ-ம்) ஏ பிராணநாதா ? இப்போது மகாசந்தோஷமடைந்தேன், ஆயினும் என் மனதினிடத்தே சற்று இருள்கொண்டோங்கியிருக்கும் பவபந்தத்தளையை நீக்கவேண்டியிருப்பதால், அடியாள்மீது தயைபுரிந்து இக்காசிக்ஷேத்திரமகிமையை முழுதுங்கேட்க ஆவலுடையவளாக இருக்கின்றேன், ஆனதால் விசிதமாய்த் தெரிவிப்பீர் நாதா.

(அரி-வ-ம்) அடிசந்திரவதனை ? அப்படியே சொல்கின்றேன்.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-பைரவி, தாளம்-ஆதி.

பூலோகத்தினிலெங்கும் புகழ்கொண்டோங்கிடுந்திவ்ய
புண்ணியம்விளைக்குங்காசி பாராய்பெண்ணே.
சாலோகசாமீப சாரூப்சாயுச்யஞ்
சாரவிடுக்குங்காசி பாராய்பெண்ணே.
அயனரியறியாத வுண்ணல்விஸ்வநாதனு
மாச்சியுடன்வாழ்காசி பாராய்பெண்ணே.
ஜெபம்பெறமுனிவர்கள் சின்மயானந்தங்கோரி
சிவயோகஞ்செய்புங்காசி பாராய்பெண்ணே.
தொலையுடன்புலைபதைக் கோரிச்செய்தவர்வந்தே
குப்பிடத்தொலைக்குங்காசி பாராய்பெண்ணே.

கலையுணர்ந்தவர்களைக் கருதாகிர்மூடர்களி
கன்மழ்விலக்குங்காசி பாராய்பெண்ணே.
பஞ்சமாபாதகங்கள் பரந்தேபுரிந்தவர்கள்
பரிந்தே துதிக்குங்காசி பாராய்கண்ணே.
நெஞ்சில்நினைக்கப்பாவம் நீங்கியோடிடச்செயும்
நேர்மைதங்கியகாசி பாராய்கண்ணே.
தினதயாளாவென்றே தினமுந்தொழுவேகிருபை
திகட்டாதளிக்குக்காசி பாராய்பெண்ணே.
மோனநிலையறிந்தோர் மூலக்கனலெழுப்பி
முத்தியடையுங்காசி பாராய்கண்ணே.
பெண்ணே நமைச்சார்ந்த பெருங்கடன்போக்கிட
போணக்கிடைத்தகாசி பாராய்பெண்ணே.
கண்ணேயினிநமக்கே காசிபனருளாகக்
கருதிக்கரங்குவிப்பாய் பாராய்கண்ணே.

(சங்-வ-ம்) நாதா ? இக்காசிமாநகரின்கண்ணே எழுந்தருளியிருக்கும் ஈசன் பெருமையே பெருமை ! இன்றே நாம் புனிதர்களானோம்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

பத்தினிநாமுன்செய்த பலத்தினாற்காசிவந்தோம்
சுத்தியவுலகுமந்தச் சுரர்பதியிதற்கீடாமோ
நத்தியதுயரைவிட்டே நாதனைமனதில்நாட்டி
யித்திசைதனின்வளப்பை யினிப்புடன்பார்ப்போம்வாராய்.

(அரி-வ-ம்) மாதே சந்திரமதி ? நாம் முன்செய்த தபோபலத்தினால் இந்தக்காசிக்ஷேத்திரத்தைக்காணலாயினோம், ஆனதால் இந்தக்காசிபட்டணத்திலுள்ள வளப்பத்தைப்பார்ப்போம், வருவாயடி கோதே.

(சங்-வ-ம்) மகாசந்தோஷம், அப்படியேவருகின்றேன் நாதா.

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-தனாசரி, தாளம்-ஆதி.

பல்லவி.

நடந்துவாரடியன்னமே அடி பெண்ணே
தொடர்ந்துவாடி சொன்னமே. (நட)

அநுபல்லவி.

படர்ந்தவிக்காசியுறும் பதிகளைத்தரிசிப்போம். (நட)

சரணங்கள்.

வந்ததுயரைப்போக்க அடிகண்ணே
தந்தமாய்கையைநீக்க
பிந்துமாதவமிது சந்திரமதிகாண்பாய். (நட)

(அரி-வ-ம்) பெண்ணே ? நமக்குவந்த துயரை நீக்கவேண்டியிந்தபி க்ஷமாதவத்தை தெரிசிப்பாயடிமாதே.

அண்டினோரைக் காக்கும்-அடியேமன்
தெண்டனேவராமற்றேக்கும்
துண்டிக்கணபதியைக் கண்டிதோசேவித்தேமுன் (நட)

(அரி-வ-ம்) பெண்ணே ? அண்டினவரைக்காத்து; காலனுடைய பாதையணுகாமற்காக்குந் துண்டிக்கணபதிமூர்த்தியைத் தெரிசிப்பாயடிமாதே.

சந்தேகத்தைப் போக்கும்-அடிபெண்ணே
வந்தவறுமைநீக்கும்
ஒங்தேகாசியாமிது சந்திரவதிபாராய் (நட)

(அரி-வ-ம்) பெண்ணே ? நமது மனக்குறைகளையெல்லாம் நீக்கும் படிக்கிந்த ஓங்தேகாசியெனு மிடத்தைத் தெரிசிப்பாயடிமாதே.

நேமமுயர்ந்த மாதே-அடிவேத
சாமமுரைப்பதிந்த
சாமிபயிரவனைக் காமினிதொழுதேமுன். (நட)

(அரி-வ-ம்) பெண்ணே ? சாமமுதற் சதுர்மறையும் புகழாநின்ற நீலம்பமிம் வழித்துணைவனாகிய வயிரவனைத் தெரிசிப்பாயடிமாதே.

அண்டமெலா புகல-பெண்ணே நாம்
கொண்டசிறுமை யகல
தண்டபாணீஸ்வரனைக் கண்டுபணிந்தேமுன் (நட)

(அரி-வ-ம்) பெண்ணே ? நம்மைப்பார்த்து இந்தலோகத்தா ரிகழும்படிக்குற்ற சிறுமையை யகற்றும்படிக் கிந்த தண்டபாணீசனைப் பணிவாயடிமாதே.

கருமமனைத்தும் நீங்கி-பெண்ணே நாம்
பெருமையுறவே யோங்கி
கருணைவைகுந்தவாசற் கருணித்துநோக்கியேமுன் (நட)

(அரி-வ-ம்) பெண்ணே ? நமது துன்பமகல விந்த சுவர்க்கவாயிலெனுங் குகையைத் தெரிசிப்பாயடி மாதே.

திங்களணிந்தோன் தூக்கும்-அடிபெண்ணே
பங்கமதற்றிக் கர்க்கும்
கங்கையாடியேவிஸ்வ சங்கரனைப்பணிவோம் (நட)

(அரி-வ-ம்) பெண்ணே ? பரமசிவன் சிரசிற்றங்கி லோகத்தில் பிரவேசித் தடியர்கள்பாவம் போக்காநின்ற விந்த கங்கைநதியாடி விஸ்வேசரைத் தெரிசிப்போம் வருவாயடிமாதே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

என்னருங்கிளியேமானே யியம்புவேன்கனியேகேளாய்
வன்னமாங்காசிவந்தோம் வளம்பெறுபதிகள்கண்டோஞ்
சின்னமாய்வினைகளோடச் செய்யுமிக்கங்கையாடி
யின்னகரேற்றும்விஸ்வ நாசனைப்பணிவோம்வாராய்.

(அரி-வ-ம்) பெண்ணே? இந்த கங்கையில் ஸ்நானஞ்செய்து காசி விஸ்வலிங்கத்தைத் தெரிசிப்போமடி பிராணநாயகி.

(சந்-வ-ம்) மகாபாக்கிய மப்படியே செய்வலாமென் பிராணநாதா

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-வராளி, தாளம் மிசுரம்.

பல்லவி.

ஆடவாராய் கங்கையென் கூடவாராய்-மாதே

அநுபல்லவி.

தேடரியசிவத்தோடின் னுடதனிலேமேவுந்
திவ்யப்பலத்தைத்தரு மொவ்யமாயோங்குநதி (ஆட)

சரணங்கள்.

செய்தபாவங்களெலாங் கொய்திடுங்கங்கையிது
செப்பும்வேதங்களெலா மொப்பிப்புகழ்வதிது
சித்தங்களிப்புட னுத்தமியென்னுடன் (ஆ)

ஜெனனமரண துன்பந் தனையறுந்திடுமாதே
சீறுங்கோரங்களெலாஞ் சூறையிடுமேகோதே
சீரிலுயர்ந்ததாம் பாரிலமர்ந்ததாம் (ஆ)

தேவர்முனிவர்சித்தர் மூவர்பணியுமந்த
திகழாய்ப்பரசிவந்தான் திங்களுடனணிந்தப்
பாசவினையிருந்தால் நாசம்புரியும்பார் (ஆ)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

பேருறுவயோத்திவிட்டே பெண்ணேயிக்காசியுற்றே
சீருறுகங்கையாடி சித்தமுங்குளிர்ந்தோமாதே
யாருறுங்கண்ணேநீயு மமைச்சனுஞ்சுதனுங்கூட
நேருறுவாகக்காசி நேயனைப்பணிவோம்நாமே.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரவதி? நாமயோத்திவிட்டு காசிவந்து திவ்யகங்கையு மாடினோம், இனி நாமெல்லோருஞ்சென்று மறலியை யுதைத்த மகானுபாவனாகிய காசிவிஸ்வநாதனை தெரிசிப்போம் வருவாயடி பெண்ணே.

(சந்-வ-ம்) அப்படியே தெரிசிக்கலா மென் பிராணநாதா,

## அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-உசேனி, தாளம்-ரூபகம்.

காசிலிங்கமிங் கிருக்குதாம்-கேளாய்பெண்ணே
கண்டவர்மனக்கவலை போக்குதாம்-போவோம்வாராய் (கா)
வாசிதுனியோகந் தாக்குதாந்-தெரிசிப்போர்க்கு
வறுமையெல்லாமகல நோக்குதாம்-போவோம்வாராய் (கா)
அண்டமெல்லாமொன்றாய் நின்றதாந்-கேளாய்பெண்ணே
அடியர்களிடரைக் கொன்றதாம்-போவோம்வாராய் (கா)
ஒன்றிரண்டுமூன்றைக் கொய்வதாந்-கேளாய்பெண்ணே
ஒன்றுதிகொண்டோருளங் களிப்பதாம்-போவோம்வாராய் (கா)
மார்க்கண்டரையன்று காத்ததாந்-கேளாய்பெண்ணே
யடிபணிந்தோரின்மாய்கை தீர்த்ததாம்-போவோம்வாராய் (கா)
காலனைக்காலாலுதைத்த தேவனுங்-கேளாய்பெண்ணே
கண்டவர்கருத்தருளும் பர்வனும்-போவோம்வாராய் (கா)
அமரர்க்காய்நஞ்சையன்று வுண்டதாந்-கேளாய்பெண்ணே
அபயமென்போர்க்கருளாய் நின்றதாம்-போவோம்வாராய் (கா)
ஆதியில்ஜோதியகண்ட மானதாங்-கேளாய்பெண்ணே
அடுத்தவரினிடுக்கண் போனதாம்-போவோம்வாராய் (கா)
திக்கில்லார்க்குத்தெய்வ மாகுதாங்-கேளாய்பெண்ணே
தெரிசித்தோர்மனக்குறைகள் போகுதாம்-போவோம்வாராய் (கா)
கௌரிதன்கடன்திர வேண்டியே-கேளாய்பெண்ணே
கழலடிகளைப்பணிவோந் தாண்டியே-போவோம்வாராய் (கா)

(அரி-வ-ம்) இதுதான் காசிவிஸ்வலிங்கமடி பிராணநாயகி.

(சந்-வ-ம்) அப்படியா! சிவசிவா! சம்போ! அன்பர்களைக்காக்கும் அரும்பொருளே! காரும்! காரும்.

## காசிவிஸ்வேசன் தரிசனம்.

---

## அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-இந்துஸ்தான்பியாக், தாளம்-ஆதி.

பல்லவி.

அம்பாபணியீரதியே யருள்செய் ததிஜோதியே

அநுபல்லவி.

வெம்பியுடல்வருந்த வெஞ்சதிவாடவே
வேதனைமுனிவனால் விளைந்ததுமோடவே. (அ)

சரணங்கள்.

எங்கும்நிறை தேவனே யெளியோர்க்கருள்நாவனே
மங்கையிடப் பாகனே மாய்கைகொயுங்கோவனே
லொங்கிமனம் வாட லோகமுமிசைசொலத்
துங்கவர்முனி செயுந் துயரறவருளருள் (அ)
தக்கன்சாபம் போக்கியே தனிமதியைத்தேக்கியே
அக்கந்தமா நோக்கியே யடங்காப்புலிதாக்கியே
பக்கிடைத் துயிலாகப் பற்றியபொருளே
இக்கண மடியேனை யேந்தியாளருளருள் (அ)
மாயன்மதம் போகவே வயிரவனையேகவே
பாயமச்சஞ் சாகவே பற்றிமணியாகவே
நேயதேவரைக் காத்த நிர்மலப்பொருளே
காயமுனைக் கடிமை காத்தருளருளருள். (அ)
முனிவன்கடன் நாடியே முனைந்திங்குற்றேன்தேடியே
தனியாயிவசை பாடியே தீரகன்வாறுன்கூடியே
இனிவேறொருவர் துணை யிங்கிலைப்பொருளே
பனிமதிசடை யாளா பார்த்தருளருளருள். (அ)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

காரணமேதென்றறிகிலேனந்தக் கவுசிகன்வலையதிற்றேய
வாரணமுலையாளிடப்புறமேவ வாழ்விடைமேலுறுபவனே
நாரணனயனுங்கண்டிடாவுருவே நல்லுளமெனக்குநீகனிந்தே
பூரணப்புனிதாமுனிகடன்றீர்த்தேபுனிதனுக்கிடவருள்புரியே

(அரி-வ-ம்) ஓ! பரமசிவமே! நான் விஸ்வாமித்திர முனிமாய்கையிற் சிக்கிய காரணமறியேன், அந்த முனிநாதன் கடனைத்தீர்த்தென்னைப் பவித்திரனாகச் செய்யும்தேவே.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-சஹானா, தாளம்-ரூபகம்.

அண்டபிண்டமொன்றாய் நின்றவா-ஓமரோ ஹரோ ஹரா
அடியார்களையடிமை கொண்டவா ,,
குண்டலிநுனிவாசி யுத்தவா ,,
கோரினோருக்கரு ளளித்தவா ,,
இரவும்பகலுமேக மானவா ,,
எங்கண்மீதிற்கருணை யாகவா ,,
தூயர்களின்சிர மணிந்தவா ,,
தூரவிகளானாலும் பணிந்தவா ஓமரோஹரோஹரா

## தேவதாசன் கண்ணிகள்.

இராகம்-தன்யாசி, தாளம்-ரூபகம்.

அணுவிலணுவாக நின்றவா-ஓம் குரு பரசிவா
அருமறைநாலும்புகழைக் கொண்டவா ,,
அரிமுதலோரு மகிழ்ந்திடு சிவமே ,,
அடியோர்க்குனின்று துதிபெறுந் தவமே ,,
ஆலமமுதாக வுண்டவா ,,
அன்புடனிடர்தீர்க்க வின்றேவா ,,
ஜாலஞ்செய்தானியு மையனே ,,
சகிக்கவசமில்லை மெய்யனே ஓம் குருபரசிவா

## சத்தியகீர்த்தி கண்ணிகள்.

இராகம்-சாவேரி-தாளம்-ரூபகம்.

எதுக்குந்துணைநீயென்று வந்தோம்-ஓம் திகமொளிபவா
எங்கள்குறைநீக்கிடப் பணிந்தோம் ,,
பாதுகாத்தெங்களை நீயுமே ,,
பக்ஷம்வைத்துன்னருளை யீயுமே ,,
உன்றனைவிடவேறு யெங்குமே ,,
உற்றதுணையறியோ மிங்குமே ,,
சந்திரனைச்சடையி லிட்டவா ,,
சரணமெங்களையின்று கிட்டவா ஓம் திகமொளிபவா

## அரிச்சந்திரமகாராஜன் தேவாரம்.

ஆதியாவருளுமாகி யடிமுடிநடுவுமாகிச்
சோதியாயங்கிங்கென்றே சோரமலெங்குமாகி
வேதியாய்விரும்புவோரின் வினைதனைக்களைவோனைக்
கோதில்விஸ்வநாதா குறைதீரவருள்செய்வாயே.

(அரி-வ-ம்) ஆதியாய் எங்கும் நிறைந்த பரம்பொருளே! எத்தேவர்க்கும் தேவனே! எவ்வுலகுக்குங் காரணனே! வேதங்களின் சாரமே! நித்தியனே! நிமலனே! நான்குவேதங்களாலுங் காணுதற்கு அரிதெனில் இந்த பாமரன், எவ்வாறு கண்டேப்வேன், உலகவாசிகள் யாவரும் காசிகெங்கையாடி அதிபக்தியினையத்துடன் உம்மைத்தரிசித்த மாத்திரத்தில் நற்பதவியடைவதுடன் சற்கீர்த்தியும் வருமென புராணிகள் முறையிடக் கேட்டிருக்கிறேனேயொழிய பேணிப்பார்த்தறியேன், ஆனதால் எவ்வுயிரையும் தாசுமுனைபோல்பாதுகாக்கும் கல்யாணகுணனே! இதுசமையம் யான்பட்டாமறபட்ட கடனை அதிசீக்கிரத்தில் எவ்விதத்திலாகிலும் தீர்த்து என்னிலு மறியாமல்செய்த வினை

கள் யாதேனுமிருந்திடினும், அவைகளையும்போக்கி இரக்ஷித்து என் சத்தியமென்னும்பொருளை சதாமனதினிடத்தே யுட்கொண்டிருக்க வரந்தந்து ஆட்கொள்ளவேண்டும் ஜெகதீசனே!

சந்திரமதி தேவாரம்.

நாகபூஷணனேயோக நாதனேயுமையாள்மேவும்
போகநாயகனேஞானப் புநிதனேகாசிநாதா
வாகமவிதியினாலுன் றடிதொழவறியேனிப்போ
வேகமேயெனையாட்கொண் டேவினைதீரவருள்செய்வாயே.

(சந்-வ-ம்) நாகங்களை பூஷணமாகக்கொண்டும், உமாமகேஸ்வரியை இடபாகமாகக்கொண்டும், அஞ்ஞான இருளைப்போக்கி மெய்ஞ்ஞான போகத்தைத்தருபவனும், இக்காசிமாநகரத்தின்கண்ணே யெழுந்தருளியிருக்கும் பரம்பொருளே? உமது மகிமையைப்புகழ ஆயிரம்பணாமுடியையுடைய ஆதிசேஷன் புகல்வதரிதெனில், பெண்பாலாகிய அடியாள் புகழத்திறமோ! ஏ! ஈசா! இப்போது தொடர்ந்திருக்கும் இடரைத்தீர்த்து சத்தியத்தைநிலைநாட்டி எங்களையாட்கொள்ளுங் காருண்யக்கடவுளே.

தேவதாசன் தேவாரம்

அரியயன்தேடிக்காணா வன்பனேகைலைவாசா
கரியுரித்தோனேயந்தக் காலனையுதைத்தபாதா
விரிசடைமதியுங்கங்கை விளங்கிடத்தரித்தோய்நின்பா
லுரியனாய்விஸ்வநாதா வுள்ளம்வைத்தருள்செய்வாயே.

(தேவ-வ-ம்) கைலையங்கிரியில் பார்வதிசமேதராயெழுந்தருளிய முதலே! அரி அயனும் தேடிக்காணாமலுலுக்கச்செய்த தயாநிதியே! மார்க்கண்டனுக்காய் தென்திசைக்கோனை விழவுதைத்த திருப்பாதனே! இப்போது எங்களுக்கு வந்திருக்கும் இடர்களைத்தீர்த்து, முனிவன் மாய்கைக்குள் சிக்காமல் ஆட்கொள்ளவெண்டுமென்று சரண் புகுந்தேன், காரும் காரும் ஈசனே.

சத்தியகீர்த்தி தேவாரம்.

அமரர்கள்வாழவன்று ஆலத்தையமுதாய்க்கொண்டோய்
குமரனையளித்துத்தேவர் கொஞ்சிறைபறக்கச்செய்தோய்
சமரசசராசரத்திற் சார்ந்துமேபரவிநின்றோய்
தமரகன்விஸ்வாமித்ரன் தன்சூதைவிலக்குவாயே.

(சத்-வ-ம்) தேவர்கள் வாழ எண்ணங்கொண்டு திருப்பாற்கடலினிடத்தேயுதித்த ஆலகாலவிஷத்தை அமிர்தமாகக்கொண்ட கடவுளே! அன்று சூரபத்மன்முதலிய இராக்ஷசர்களைவாட்டி புலகம்மென்மேலு

மூய்யும்வண்ணம் கையில் வேலைத்தாங்கிய சிவசுப்பிரமணியக்கடவுளை மகிழ்ந்தளித்த புண்ணியனே! என்னன்னலின்கடனை நிவர்த்திசெய்து முனிவன் சூதுக்கிடங்கொடாமல் ஆண்டருள்புரியவேண்டும், சிவசிவா! சம்போ! மகாதேவா! காரும் காரும்.

அரிச்சந்திரமகாராஜன் தேவாரம்.

முப்புரமெரித்தகண்ணா முனிவர்கள்பணியுமன்னா
விப்பிறப்பதனிற்கொண்ட விடாகன்றிடவேநான்ருன்
கைப்பொருளியாதுமின்னேன் கடன்தீரவகைநீகாட்டிச்
செப்பிடவேண்டுங்காசி சிலனேநமசிவாயா.

(அரி-வ-ம்) ஓ ஜெகதீசா? அன்று முப்புரத்தை இலேசில் சிரித்தெரித்த முக்கண்ணா! இப்போது நாழிகை ஏற ஏற இப்பாவி மனதில் திகிலதிகரிக்கின்றதே! இதற்குச்செய்யும் மார்க்கம் ஏதுந்தெரிந்திலேனில்லை, அந்தோ! என்னசெய்வேன்! எப்பாடுபட்டு அக்கடனைத்தீர்ப்பேன்! அப்படி பாடுபடத்துணிவோமெனில், ஏதொருதொழிலும் கற்றேனுமில்லை! கெடுவுநாளும் வெகு நெருக்கமாகவேயிருக்கிறது. இக்கடனைத்தீர்க்க ஒருவகைகாட்டி எத்துயர்வரினும் சத்தியம் பிசகாதிருக்க அருள்செய்யவேண்டும், சம்போ! மகாதேவா!

அரிச்சந்திரமகாராஜன் அகவல்.

சிவசிவசிவமே சீரருட்தவமே
தவமுனிவோர்பணி தனிமறைமுதலே
யம்புலிகங்கையு மணிசடையாளா
சம்புவேதின சர்ச்சனத்தாளா
திரிபுரதகனு தெளிவுளவேதா
வரியயனறியா வழகுளபாதா
மான்மழுவேந்தும் மலர்கரத்துயா
தேன்மொழியுமைசேர் திண்புயநேயா
வேமனையுக்தத்த வென்றுணைபாதா
நான்மனங்களிக்க நாடினேனீதா
பேதைநான்கொண்ட பெருந்துயர்கேட்பாய்க்
கோதையும்பாலனுங் கோணிடாமந்திரியும்
மனமதுகனிந்தே மாமுனிதனக்கே
கனமுளவரசை களிப்புடனளித்தோந்
தானமாயிந்த தனிப்பொருடாவெனா
மோனனுங்கேட்க மூதையேயடியேன்
கடனதைத்தீர்க்கக் காலேயோயிங்கே

தடமதுவைத்தேன் தயாபராங் கை
வருகிறவழியில் வருத்திடவிஷங் க
ளுருகுமண்மீதி லுறுத்திடப்பதங்க ள்
பூதமுந்துரத்த பொரியனல்மிரட் ட
வேதனைமிருகம் விஷப்புழுவிரட் ட
பனியதுபெய்யப் பதறிடவிடிதர
னினிவிலாக்காட்டா றெய்திடமனந்தா ன்
மெத்தவும்பயந்தே மேனியுங்குழு இ
யத்தனேயுன்னடி யண்டினேமறு இ
யிக்கடன்தீர்க்கவே யெண்ணுவாய்நீ யே
கக்கிஷத்தரகனால் களிப்புறேன்சே யே
முனியவன்மெத்த முஷ்கரம்புரிந்தா ல்
களிவுளமனத்தோய் காருமுன்னருளா ல்
சத்தியம்நிலைக்க சம்புவேசரண ம்
நத்தியேயுன்மனம் நாட்டுவாய்சரண ம்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மான்மழுதரித்தோய்காசி மகாநகர்விஸ்வநாதா.
வேன்புறுவடிக்கேதொண்டு விரும்பியேவந்தோம்வேதா
நான்முகன்களிக்கப்பாவி நாடியேமுனிதான்செய்யுந்
தேனடாத்துயர்தவிர்த்தே திருவருள்தந்தாள்வாயே.

(அரி-வ-ம்) ஓ! காசிநாதனே! எங்களுக்கு ஒரேகாலத்தில் பிரமன் விதித்த விதியையும் கௌசிகமுனி மனமகிழச்செய்யுந் துன்பத்தையும் நீக்கி இரட்சிக்கவேண்டும் விஸ்வநாதா.

சந்திரவதி விருத்தம்.

எப்புவியுயிர்களெல்லா மீன்றதோரம்பாபோற்றி
செப்புறுஞ்சுடலைதன்னில் சிறுநடிநடித்தாய்போற்றி
முப்புரமன்றெரித்த முக்கணன்மகிழ்வேபோற்றி
வெப்புறுங்கவலைநீக்கி வேணதையளிப்பாய்தாயே.

(சந்-வ-ம்) அம்பா திரிபுராந்தகத்தாண்டவி? அரன்பாலொக்குந்தேவி? அடியாள் கோரிக்கையை ஈடேற்றி ஆண்டருள்வா யம்மணி.

தேவதாசன் விருத்தம்.

காலனையுதைத்தபாதா கைலைவாழ்மருவேபோற்றி
வேலனையளித்தகோவே விமலியின்பாகாபோற்றி
சீலமேதறியேனீதா சேவடிபணிந்தேன்போற்றி
பாலனைவருத்தமின்றி பாலிப்பாய்தேவேபோற்றி.



(தேவ-வ-ம்) சுவாமி ? காலனையுதைத்தபாதனே ? பாலனைக்காருந் தேவனே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

மதிசடையணிந்தேகையில் மான்மழுதரித்தாய்போற்றி
சதிபுரிவிஸ்வாமித்திரன் சார்பதையறுப்பாய்போற்றி
விதனைத்தடுக்கவன்று வேண்டியேபாலனுக்காய்
ததிம்பிடவுதிரக்காலன் றன்னையேயுதைத்தோய்போற்றி.

(சத்-வ-ம்) ஓ ! பரமசிவமே ? யாதொரு துன்பமும் விஸ்வாமித்திரனால் வாராதபடிக்கு ஆண்டருள்வாய் நாதனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

இந்திளமயிலேபாலா வினிவுளசத்தியகீர்த்தி
நந்தியைத்தொழுவீர்ஞானம் நாடிடவையனீன்றத்
தந்திமாமுகனுமந்த தயாபரன்குகனையேற்றிச்
செந்திருமாலுமற்றை சித்தரைப்பணிவீர்தாமே.

(அரி-வ-ம்) பெண்ணெ சந்திரவதி ? அப்பர்மகனே ? மந்திரி சத்தியகீர்த்தி ? முதல் நந்தியைத்தொழுது, மூலாதாரனாகிய கணபதியையும், ஞானமூர்த்தியாகிய வேலாயுதக்கடவுளையும், திருப்பாற்கடலிற்றுயின்ற மாயனையும், மற்று மிங்குளவடியார்களையும் பணிவீர்கள்.

(யாவருஞ்சொல்-வ-ம்) அப்படியே பணிந்தோ மெங்கள் கோவே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தன்னிகருவமையில்லாத் தாணுவைப்பணிந்தோமாதே
நன்னகரிருக்கும்நேர்ப்பும் நாட்டில்நீர்வளமுங்காண்போ
முன்னதமாஞவாழு முக்கமர்தமையுங்கண்டே
யென்னருங்கருமந்தீர வேற்பாடுஞ்செய்வோம்வாராய்.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரவதி ? காசிநர்தனைத் தெரிசித்தோம், இனி நாட்டைப்பார்த்து நாம்வந்த் கருத்தீடேறவேண்டிய வேற்பாடு புரிவோம் வாராய் மாதே.

(சந்-வ-ம்) அப்படியே வருகின்றே னென்பிராணநாதா.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-செஞ்டா, தாளம்-சாப்பு.

வித்தைபுத்திதருஞ் சித்திவிநாயகன் — வீதியிது பெண்ணே
வேண்டிநம்மையாளும் காசிவிஸ்வேசன்வாழ் — வீதியிது பெண்ணே
அத்திசிவகாமி காளியம்மையின் — வீதியிது பெண்ணே
அருமையுளவேத மோதுமந்தணர் — வீதியிது பெண்ணே
வெற்றியாயறம்நடத்தும் வேளாளர் — வீதியிது பெண்ணே
வேண்டச்சூரனைவதைத்த வேலவன். — வீதியிது பெண்ணே

எத்திசையும்புகழ்கொண்ட விறையவர் வீதியிதுபெண்ணே
எழிலுறும்வைசியர்வாழு மின்புள வீதியதுபெண்ணே
பற்றறப்பணிகள்செயும் பஞ்சாளர் வீதியிதுபெண்ணே
பாரினில்பாண்டங்கள்சுடும் பரமர்கள் வீதியதுபெண்ணே
நத்தவேசேர்வைபுரியும் நாய்க்கர்கள் வீதியிதுபெண்ணே
நாட்டியம்செய்வேசியர்கள் நாளும்வாழ் வீதியதுபெண்ணே
கச்சையிணைசேணியர்கள் கப்பிடும் வீதியிதுபெண்ணே
களங்கமற்றேயிழிகுலத்தோர் களித்திடும் வீதியதுபெண்ணே
பச்சைக்கிளியேயரவணைப் பதியைநீ பாராய்பெண்ணே
பண்புடன்றங்கிநாம்கொண்ட பசிதீர்ப்போம் வாராய்பெண்ணே

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தீதறவேதநான்குந் தெரிவிக்கும்நெறியுணர்ந்தப்
போதரோதரகரோநான் புகலுமோர்வார்த்தைக்கேளீர்
வேதனைப்பசிதணிக்க வேண்டியிம்மண்டபத்தில்
காதலாச்சமையற்செய்வோங் கருத்தினையுரைசெய்வீரே.

(அரி-வ-ம்) சுவாமி வேதியரே ? நமது பசியைப்போக்க இந்தச்சத்திரத்திற்றங்கி சமையல்செய்ய உமதுகருத்தை வெளியிடுவீர்சுவாமி ?

(தரக-வ-ம்) ஓய் இராஜனே ? இது நல்லவிந்தைகாணும் ! நீர் உமது ஆம்படையாள் கீச்சான், தடியன், இவர்களோடு கேளிவிலாசமாக ஊரொங்குந்திருந்து உங்கள் மனோபிஷ்டையைத்தீர்த்துகொண்டு உல்லாசமாய் இன்னேரஞ்சென்று வரலானீர்கள், இவ்விடத்தில் நான்பட்டபாடு ஈசனுக்கல்லோதெரியும், அதுவரையில் என்னுத்திரவுபெற்றுக்கொண்டு போனவர்கள் சட்டிசுட்டது கைவிட்டது என்று அப்படியே செல்லாமல் இந்த ஏழைப்பார்ப்பான்மீதில் தயவிட்டுவந்துவிட்டதே நான்செய்த பாக்கியம் இது இருக்கட்டும், உன் மனமென்ன கல்லா, இரும்பா, என்னேரம்வரையில் பசியாயிருக்கிறது, அந்தோ! யேக்கு மிகவும் பசிக்கின்றதே ! நான் என்னசெய்யக்கூடும் ! ஆகிலும் காலத்தையறிந்து நடக்கவேண்டுமாதலால் சீக்கிரம் சமையல் ஆகட்டும் வேந்தனே.

(அரி-வ-ம்) இதோ சீக்கிரமே முடிவுசெய்துவிடுகிறேன் சுவாமி !

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

என்னுடனீயுந்துன்ப மேந்திடவெண்ணிவந்த
பன்னருங்குணத்தோய்மந்திரி பகருவேனினிவாய்க்கேளாய்
யின்னகர்வாழ்வோர்தம்பா லிரந்துநீவேணதெல்லாம்
நன்னலாய்க்கொணர்வையாகி லும்பசிதணிப்போமப்பா.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி? நமது ஐயரின் பசிதீரும்படிக் இந்த நாட்டிலுள்ளவர்களிடஞ்சென்று ஏதாகிலுமிரந்துகொண்டு வருவாய் மந்திரி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

ஐயனைபரசேநீரு மடியனேக்கருதியிங்கு
மெய்யனேயன்பாய்ச்சொன்ன மெழிலுறுமொழிபோற்சென்று
துய்யனேநகரிலுள்ள தூய்மையாமனத்தோர்தம்பால்
கைபதைநீட்டித்தர்னங் கடிகியேவாங்கிவாறேன்.

(சத்-வ-ம்) சுவாமி? தங்களுத்திரவின்படி யாசித்து சீக்கிரம் வருகின்றேன், தரகனை பத்திரமாய்ப் பாதுகாத்துக்கொள்வீர் வேந்தே.

சத்தியகீர்த்தி யாசகஞ்செய்யுந் தரு.

இராகம்-முகாரி தாளம்-ஆதி.

பல்லவி.

என்னவிதிவிதித்தாய் மெய்யா - என்
இறைவன்வாழ்வைக் கெடுத்தாய் துய்யா (என்)

அநுபல்லவி.

மன்னனரசிழந்து மாமுனிகடனேத்தாங்கி
மாதுடன்பாலனு மறையோன்துயராலேங்கி (என்)

சரணங்கள்.

பத்தினிமுகம்வாடிப் பதறியயர்ந்தேசோர
பாலன்பசியால்வெம்பி பருவாய்மனம்வேசார
நத்தித்தரகாய்வந்த நயமிலான்வருத்திட
நாயகன்மனங்குழைப நான்பாவிகருத்திட (என்)
அண்டமுகடுமட்டு மரசன்றன்கீர்த்திபொங்க
ஆதலர்வேதியர்க்கு மளித்தார்திகழ்தங்க
கொண்டபெருமையாவுங் குலையவிடுத்தாயுன்றன்
கூற்றேருசனியன்செய்யுங் கோளோவறியேனெந்தன் (என்)
என்னமிடிவந்தாலு மீசாநீகதியென்று
எண்ணியிங்குற்றேருமே யிரங்குவாய்மனமின்று
பன்னகபூஷணுப் பார்வதிகனிலோலா
பாவந்தொலைத்தெங்களை பாலிப்பாய்குணசீலா (என்)

பொது விருத்தம்.

மந்திரியரசன்சொன்ன வாக்கினைசிரமேற்கொண்டு
சுந்தியைவிடையாய்க்கொண்ட நாதனேநோக்கிநொந்து
கந்திகள்சோருமுல்லை கப்பியகாசிநாட்டில்
புந்தியிலுயர்ந்தோர்தன்பால் போயினனிரக்கத்தானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இந்தப்பிரகாரமாக சத்தியகீர்த்தி தன்னுடைய அரசனுக்கு நேரிட்ட மிடிமையைக்குறித்து மெத்தவும் விலேசப்பட்டுக்கொண்டு, காசியில்வாழும் சதாப்ர்த்திகளிடம் வந்து யாசகங்கேட்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

காசியில்வாழுந்தர்மக் கையனேயுரைப்பேனய்யத்
தேசிகளிங்குவந்தோந் திவ்வியாபசிதணிக்க
யோசித்தோமானுற்கையி லுதவிடப்பொருளுமில்லோந்
தேசிகாகளையைப்போ தீர்த்திடவருள்செய்வாயே.

(சத்-வ-ம்) சுவாமி? நாங்கள் அன்னிய தேசவாசிகள், காலவித்தியாசத்தினால் இங்குவரலானோம்; எங்களுக்கு மெத்தவும் பசியாயிருக்கின்றது, தாங்கள் அப்பசிதணிக்க ஏதாகிலும் உதவிசெய்யவேண்டும் தர்மவானே.

சேர்மாஜி விருத்தம்.

ஆரப்பாநீதானிங்கே யடைந்திடவிதிதானேதோ
கூரப்பாநாடுன்பேருங் கூடவந்தவர்களியாரோ
தேரவேயெனக்கேசொன்னால் தெளிவுடனளிப்பேனுண்டி
தீரவேகுகூறிபாதைத் தீவர்மதனிற்றுனே.

(சேர்மாஜி-வ-ம்) அப்பா நீ யார்? உன்னைப்பார்த்தால் வெகுமேன்பாட்டோடுங்கூடியிருந்தவனாகவுமிருக்கின்றது, ஆகிலும் அயன் எழுத்தை விலக்க ஒருவராலும் முடியாது, என்னசெய்யலாம், நீங்கள் எத்தனைபெயர்வந்தது? நீங்கள் எந்தநாடு? இங்குவந்தகாரணமென்ன? தெரியச்சொன்னால் போஜனத்திற்கு வேண்டியது கொடுக்கலாமப்பா.

சத்தியகீர்த்தி விருத்தம்.

இதற்குவடமூலைநானிருக்குந்தேசம்
எளியேனுமெஜமானுந்தேவிபாலன்
சதிர்கொளரசதனையுமேதாரைவார்த்துச்
சாமிமுனிகடன்தீர்க்கப்பொருளைவேண்டி
விதர்ப்பருளவின்னகரிலடையவேதான்
விரும்பியேதாகனுடன்விளங்கிவந்தோம்
கதிர்குலனைமண்டபத்தேயிருத்தித்தானக்
கையனேயிங்குற்றேன்காண்பாய்போற்றி.

(சத்-வ-ம்) சுவாமி? நாங்களிருப்பது இதற்கு வடக்கு, என் எஜமான் இரவிகுலத்தில்வந்தவர், காலவித்தியாசத்தினால் முனிவனுக்குக்கடன்காரராகி எஜமானும், என்தாய்க்கொப்பான அவர்தேவியும், பா

லனும், தாரகனுமிவர்தோம், அவர்கள் யாவரும் முனிவன் கட்டளைத்தீ ர்க்கச் சத்திரத்தில் வந்திருக்கிறார்கள் சுவாமி.

சோமாஜி விருத்தம்,

இந்நகர்தனிலேமெத்த விருக்கிறார்தனத்தில்மிக்கோர்
தன்னிடஞ்செல்வையாகில் தானீவார்கடையிராது
உன்னிடபசியுமற்று மூனநால்வர்க்களிக்கப்பாலுந்
துன்னியநெய்யும்வெல்லந் தோழனேரவையுங்கொள்ளே.

(சோமாஜி-வ-ம்) அப்பா? இந்தக்காசியில் அனேகதனவான்களிருக்கின்றார்கள், வேண்டியபொருளுதவிசெய்வார்கள், பயப்படவேண்டாம், ஆனால் காலத்தையும் அனுசரிக்கவேண்டும், பெரிதல்ல, இதோ உங்கள் ஐந்துபேருக்கும் வேண்டிய கோதுமைநொய், பால், வெல்லம், நெய் முதலானதுகளுங்கொள்ளுவாயப்பா ; இதுவுமன்றி, சமயல் செய்ய எரிகரும்பும், இலை பாத்திரமுதலானதுங்கொடுத்தேன், நீங்கள் போஜனஞ்செய்தபுண்பு இந்த ஆள்வசம் கொடுத்தனுப்பினால் எனக்கு வந்து சேரும் அப்பா.

(சத்-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே இந்த ஆளின்வசமே அனுப்பித்தருகின்றேன் சுவாமி,—போய்வருகின்றேன் தர்மப்பிரபு. (அரசனிடம் போய் மந்திரிதெரிவித்தல்) இந்தக்காசியில்வாழாநின்ற சோமாஜியிடத்தில் சமயலுக்குரியதைப் பெற்றுவந்தேனண்டவனே.

(அரி வ-ம்) மகாசந்தோஷம் மந்திரி.—பெண்ணே சந்திரமதி? மந்திரி அதிககஷ்டப்பட்டுக்கொண்டுவந்ததையெல்லாம் வாங்கி உனக்குத்தெரிந்தவரையில் சீக்கிரத்தில் சமயல் செய்து தாகர் திர்ப்தியாகும்படி சாதிப்பாயடி கண்ணே.

(சந்-வ-ம்) பிராணநாதா? தங்கள் சித்தத்தின்படியே நம்மோடுகூட வந்தவர்பசிதீவினையைபோக்க என்னாலியன்றவரையில் வெகுசீக்கிரமேசமயல்செய்து உண்ணச்செய்கின்றேன்,—ஏ மனமே? பார்த்தனையா! சுகதுக்கத்தின்பெருமையை, அச்சோ! உலகத்தில் யாதொருசெல்வந்தர் வீட்டில்பிறக்கும் ஒவ்வொருபெண்ஜென்னமும், சேடிகள்முதலியவர் அனந்தம்பேர் ஊழியஞ்செய்யக்காத்திருந்தபோதிலும்இல்லறத்திற்குரிய தர்மங்கள் அனந்தமறிந்திருந்தாலும் பிரயோசனமொன்றுமேயில்லை. ஆனதால்கூடவேசமையல்நூற்குரிய கற்பனைகளும், கைத்தொழில்களும் தெரிந்திருக்கவேண்டும. அவைகளைவிட்டு நீ இப்போது என்பிரயோசனமடைந்தாய், சமயல்செய்யுந்தொழிலைக் கற்றுணர்ந்திடாமல், தாய்விட்டிலிருந்தபோது சேடிகளுடன்பந்துமுதலியவை ஆடிப்பாடிசந்தோஷமேமேலென எண்ணியிருந்ததும்போக, மாலைசூட்டியபின்பும் பத்தாவிடத்தில் ஆடிப்பாடிக்குலாவி யிருந்துகெட்

டாய், இதற்குளென்செய்யலாம், சரி, எந்தெந்தகாலத்தில் எவ்விதகோலமாகநடக்கவேண்டுமோ அதை தெரிந்தவரையில் செய்து முடிப்பாய்

## சந்திரமதி சமையல் செய்யுந் தரு.

இராகம் - நாதநாமக்கிரியை, தாளம் - சாப்பு.

பல்லவி.

சமையல்செய்கின்றேன் தாதியைப்போல
சமையல்செய்கின்றேன்.

அநுபல்லவி.

நிமைதனிற்றாகன்றன் நீள்பசிதணிந்திட. (ச)

சரணங்கள்.

அடுப்பைக்கூட்டித்தீயிட்டு மக்கினிபூஜைபண்ணி
துடுப்புக்கைக்கோலேத்தாங்கி தோகைவிதியைநண்ணி (ச)
உலைதான்கொதியெழும்ப வோங்கிநொய்பதைத்தூவி
நிலைதான்றெரிந்தபாலே நேரயதினுள்பாவி (ச)
பாலும்பாயசத்தைப் பண்பாய்முடித்தேனே
மேலுமப்பங்கடனே மெதுவாய்சமைத்திட்டேனே (ச)

## சந்திரமதி கவி.

ஐயரோகக்ஷத்திரேச வன்பரேசமையலாச்சு
வெய்யமுன்பசியைநீக்க வேண்டினேன்வருகுவீரோ.

(சந்-வ-ம்) சுவாமி தரகரே ? சமையலாச்சுது போஜனத்திற் கெழுந்துவாருந் தேவனே.

(தர-வ-ம்) மகாசந்தோஷம், இராஜனேயும் பிள்ளையுந் திடியனேயுமொருமிக்க வழைப்பாயம்மா சந்திரமதி.

## சந்திரமதி விருத்தம்.

என்னருங்கோவேபாலா வினிமொழிமந்திரிகேளாய்
நன்னயப்படியேபாகம் நானுமேவினாவிற்செய்தே
துன்னதவையர்தானு முங்களையழைக்கச்சொன்னார்
வன்னமாயெழுந்திருந்தே வருகுவீர்புசிக்கத்தானே.

(சந்-வ-ம்) என் பிராணநாதா ? சமையலாச்சுது, பசிதீர்க்க ஐயரழைக்கிறார், நீரும், பாலனும், மந்திரியும், வருவீர்கள்.

(அரி-வ-ம்) அப்படியே வருகின்றேனென்பிராணநாயகி.

(சந்-வ-ம்) சுவாமி தரகரே ? இதோ எல்லோரும் வந்தார்கள், தங்களுக்கு வேண்டியவைகள் வட்டித்திருக்கிறேன் புசிப்பீர் வேதியரே.

## தரகன் விருத்தம்.

இவ்விதவுணவையானு மெப்போதுங்கண்டதில்லை
செவ்விளவதனுள்மெத்த சீக்கிரந்தனிலேபாலில் .

கொவ்வையுமடைபாபாசங் கொப்பெனமுடித்தாளுண்டேன்
கவ்வியபசிதணிந்தேன் காசிவாழ்விஸ்வநாதா.

(தர-வ-ம்) காசிநாதனே ? இவ்விதமானவுண்டி நானெப்பவும் புசித்தறியேன் ! வெகுநேத்தி ! வெகுநேத்தி ! சமையல் செய்வதில் சந்திரமதியம்மனே தெளிந்தவளென்றறிந்தேன். ஆ ! என்ன இனிப்பு !

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரமதி எங்கள் பசிதீர்ந்தது, நீயும்போசனஞ்செய்து, மீந்ததை யிந்த ஆளுக்கிட்டுயனுப்புவாய் மாதரசே.

(சங்-வ-ம்) அப்படியே செய்கின்றே னென்பிராணநாதா.—(புசித்தல்)—அப்பா ? இதில் மிகுந்திருப்பதை நீபுசித்து, பாத்திரங்களை யெயெல்லா முனது எஜமானிடம் எங்கள் வந்தனைத்துடன் செலுத்துவாயப்பா சேவகனே.

(சேவகன்-வ-ம்) மகாபாக்கிய மப்படியே செய்கின்றேன் தாயே.

பொது விருத்தம்.

மண்டபந்தனிலிறங்கி மன்னனுமற்றுளோரு
முண்டுமேகளிக்கக்கண்ட வுக்கிரத்தாகனேயோ
கொண்டதன்னெண்ணமாகக் கொடுந்துபர்டைத்தவக்கு
செண்டெனத்தாண்டித்தாண்டி செய்யும்வாறினிக்காண்பீரே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? பசிதீர்ந்து கொஞ்ச மனக்களிப்புடனிருக்கும் இராஜனைக்கண்ட தாகன் தான் கொண்டுவந்த எண்ணமுடிக்கவேண்டிச் செய்யும்வாறறிவீர்கள் கனவான்களே.

தாகன் விருத்தம்.

மருமலர்மாலைமார்பா மன்னனேயயோத்திவேந்தே
தருமமோவுனக்கேநன்றோ தரகனேவெகுநாளாக
வருந்தியேவாடச்செய்தல் வண்ணமோகுணமோவுன்றன்
குருவின்மேலாணையிட்டேன் கொடுத்துப்பொன்னெழுந்திராயே

(தர-வ-ம்) ஓய் ஓய் இராஜனே ? நான்வந்து வெகுநாளாச்சுது, இப்படிச்செய்வதும் நீதிதானோ, உன் குருவின்மேலாணையிட்டேன், பொன்னைக்கொடுத் தப்புறம் யெழுந்திருப்பாயப்பா வேந்தனே.

(அரி-வ-ம்) சிவசிவா ! சிவசிவா ! ஓ ! பரமசிவமே !

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஜம்பை.

ஐயரேயடியேனை யணுவணுவாய்க்கொய்வீரன்றி
மெய்யுன்குருமேலாணை மேவலழகாமோ
முனிவர்சடன்தீரவென்னை முஷ்கரங்கள்புரிவீரன்றி
இனிபத்குருமேலாணை யியம்பலழகாமோ

வேதனையுஞ்சோதனைகள் வேண்டியெலனச்செய்வீரன்றி
போதகுருமேலாணை புகல்வதழகாமோ
கற்றகொடுந்தீமையெலாங் காட்டுவீரொன்மேலன்றி
உற்றகுருமேலாணை யுரைத்தலழகாமோ
என்னைநீரொன்னபடி யெண்ணிச்செயலாகுமன்றி
அன்னைகுருமேலாணை யறைதலழகாமோ
உன்றனுக்குக்கவுசிக னுரைத்தபடிநடப்பீரன்றி
எந்தன்குருமேலாணை யிசைதலழகாமோ
கத்திகொண்டுசினமெழுந்தால் கடிந்துதசைசிதைப்பீரன்றி
சத்தியகுருமேலாணை சாற்றலழகாமோ
ஆனமட்டுமெனைவருத்த லாகுமேதானீரன்றி
மோனகுருமேலாணை மொழிதலழகாமோ

## தாரகன் விருத்தம்.

தொல்லையுள்ளாகுஞ்சத்யத் தோன்றலேயாணைவிட்டே
னில்லைபோவென்றேநீதா னியம்பினலதுவேபோதுஞ்
சொல்லவதேபொன்னுமன்றிச் சோர்வுறவண்ணுந்தானும்
வல்லலம்புயமுனக்கே வகையுடன்மாட்டுவேனே.

(தா-வ-ம்) ஓய் ஓய் இராஜனே? இதோ ஆணையை விடுவித்தேன் பொன்னைக் கொடேனென்று சொன்ன லதுவேபோதும் இல்லாவிடி லுனக்கிந்த அண்ணுந்தானுங் கைவல்லயமுமணிந்து என் கண்குளி ரப் பார்ப்பேன் வேந்தனே.

## அரிச்சந்திரமகாராஜன் கவி.

இரவிமதிமாறினலு மெழுகடற்பொங்கினலும்
வரமதுபொய்த்திட்டாலும் வாயிற்பொய்யுரையேன்சுவாமி.

(அரி-வ-ம்) சூரிய சந்திராள் கதிதப்பினலும், கடல்கள்பொங்கின லும், திரேகம் அழிய நேரிட்டாலும் நான் கடைப்பிடியாகப்பிடித்த சத்தியமென்னும்பொருளை நீக்கி தாங்கள் கோரி சொல்லச்சொல்லு ம்மொழியை நான் சொல்லேன் சொல்லேன் சுவாமி.

(தா-வ-ம்) அப்படியா, இவ்வளவு கேடுகெட்டும் நான்சொல்லும்வா ர்த்தையை சற்றேனும் கவனிக்காமல் ஓரேபிடிவாதமாய் இருக்கிறாய ல்லவா, சபாஷ், உன் திறத்தை மிகவும்மெச்சினேன், இப்போது என் கையினிடமாகயிருக்கும் அண்ணுந்தானை உன் கழுத்திற்கும் கால்பெ ருவிரலுக்கும் பூட்டிக்கொள்ளுவாய் முறட்டுப்பயலே, தகடிமகனே.

(அரி-வ-ம்) சுவாமி? உமது திருவாக்குக் கெதிர்வாக்குண்டா? இ தென்னவிந்தை, அடியேனை எவ்விதவுயரத்திலிருத்தி பார்க்க மனமி ருந்தபோதிலும் இங்கு தடுப்பிப்பவர்யாவருளர், உமதுசித்தம்தேவா.

# அண்ணாந்தாளிடல்.

(தா-வ-ம்) அப்படியா! இதோமாட்டினே னிதோமாட்டினேன், தகடிமகனே.—ஆ! இப்போது நான்செய்த நன்றிக்கு கைம்மாறு யாதுசெய்யத் துணிந்தாயோ தெரிந்திலேன், அதாவது மாலைசூட்டி கையிற்கோலைத்தாங்கி செங்கோல் செலுத்திய பிடிவாதனாகிய உனக்குப் பூட்டிய அண்ணாந்தாளேமாலை ஆ! ஆ! ஆ! (குதித்து நகைத்தல்)

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-காம்போதி, தாளம்-ஆதி.

மாலையணிந்தேயுள மகிழ்ந்ததற்கோவண்ணாந்தாள்
மறையவன்பூட்டச்செய்தாய் ஜெகதீசா!
நாலையுணர்ந்தோரைக்கண் ணேக்காதிருந்தேனோதான்
நோன்பென்னைவகுத்தேனோ ஜெகதீசா!

இராகம்-சங்கராபரணம்.

அடுத்தவர்குடும்பத்தை யளியாயஞ்செய்தேனோ?
அவதியெனக்கேயிட்டாய் பவநாசா!
தடுத்தேநீதிமுறையைத் தரணியையாண்டேனோ
தான்செய்தகர்மமேதோ பவநாசா!

இராகம்-பைரவி.

பத்தினிமாரைநோக்கிய பாராக்குறியிட்டேனோ!
பாரிற்கொலைசெய்தேனோ உமைநேசா!
நித்தியவிதிநெறியை நேமமாய்ப்புரியாமல்
நினைவின்படிசென்றேனோ உமைநேசா!

இராகம்-சஹானா.

பிடரிநோகவுமென்றன் பின்னரம்புந்துடிக்கப்
பெரும்வெய்யல்கொளுத்துதே விசுவேசா!
படபடென்றுமேகால்கை பதறுதேவதறுதே
பக்ஷம்வைப்பாயென்மீதே விசுவேசா!

(அரி-வ-ம்) ஏ! ஜெகதீசா! எத்தேவர்க்குந்தேவனே! எவ்வுலக உயிர்கட்குங்காரணனே! வேதத்தின்சாரமே! ஆதிநேய! அனாதியே! நித்தியனே! எங்குநிறைந்தபொருளே! எவற்றுள்ளும் கரந்துறைந்து எவற்றையும் நின்வயிற்றின்கண் ணடக்கினவனே! இக்காசிக்ஷேத்திரத்தின்கண் எழுந்தருளிய பெம்மானே! கழுத்தின் கண்டங்கள் வலிக்கின்றதே! கால்நரம்புகள் இழுக்கின்றதே! இத்தருணம் என்னைத்தடுத்தாட்கொள்ள உன்னைஅட வேறொருதுணையுங்காணேன், ஆந்

தோ ! யாதுசெய்வேன் ! அம்முனிவனுக்குப்பயந்து என்னை ரட்சிப்பது தகுதியல்லவென்றுஎண்ணி எங்கனுகிலும் ஓடிவொளித்துக்கொண்டோரோ ! அச்சோ ! வீணில் காலபாசத்திற்கு ஆளாக்க அந்தப்பாவி அயன் விதித்தவிதியா ! ஓ ! அன்பர்கள்சகாயா ? காரும் காரும்.

## சந்திரமதி விருத்தம்.

செக்கினிலென்னையிட்டுச் சீருடன்றிருகும்வாருய்
இக்கணம்வேதியோரோ யிறைவனைக்கசக்கலானீர்
பக்குவமிதுவோவேதை பண்ணிடிற்கவுசிகன்பொன்
கைக்குளேவருமோகோபங் காட்டாமலாட்கொள்வீரே.

(சங்-வ-ம்) கேளுஞ்சுவாமி தரகரோ ? அரசர்க்கு இவ்விதத்துன்பஞ்செய்யப்போமோ ! இதனுல் பொன்வருமா ? பொறுப்பீர்வேதியரே.

(தா-வ-ம்) அடாசந்தாய் ? நீகொடுக்கவேண்டிய பொன்னை ஓரேமூட்டையாய்க்கட்டிக் கொடுக்கும்படியா யிதோ கிட்டிக்கோல் சாதித்தேன் இராஜனே.

(அரி-வ-ம்) இப்படிக்கடியேனை வருத்துவதினு லேதுபலன், நான் கவுசிகன் பொன்னைக் கெடுவிற்குள்ளே கொடுக்கிறேன், மனம்பொறுப்பீரென்னையனே.

(தா-வ-ம்) இருக்கட்டும் பிள்ளாய் பொன்னைக்கொட்டு.

## அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-எதுகுலகாம்போதி, தாளம்-ஆதி.

பல்லவி.

ஐயையோகாசிவாழ் விஸ்வேசா ! இந்த
அவதிப்படவிட்டாயோ சர்வேசா !

அநுபல்லவி.

கையினிற்கிட்டியிடக் கடுக்குதேயுடலது
கைலையாயோடிவந்தே காத்தருள்தயிது (ஐ)

சரணங்கள்.

கணையாழியிட்டதற்கோ கையிற்கிட்டிமாட்டிஞய்
கர்மவிதியோவிந்தக் காலத்தெனைவாட்டிஞய்
துணைவேறுகாணேனையோ தோணவுதிரம்விம்மி
துடிக்குதேநரம்பெல்லாந் தூயாவாடுதேகம்மி (ஐ)
நகக்கண்ணுமெரியுதே நற்கணுக்கணேவுதே
நாவுமுலர்ந்தமேனி நடுங்கியுனைக்கூவுதே
மகனழத்தேவிசோர மந்திரிமுகம்வாடி
மறையவன்செய்கோரத்தை மாற்றுவருவாயோடி (ஐ)

அரைமுழக்கயிற்றிஞ லண்ணுந்தாள்சூட்டினர்
அங்கம்பதறிமெத்த வலைந்திட்டவாட்டினர்
துரைநீயென்றுமேயிதோ துதிசெய்தழைத்திட்டேன்
தங்காவுமையாள்பங்கா துணைவரந்தித்திட்டேன் (ஐ)

(அரி-வ-ம்) இந்தவருத்த மென்னுற்படமுடியுமோ ! கிருபாநிதியே இரக்ஷியும் ஜெகதீசா.

(தர-வ-ம்) இதோ பொய்சொன்னன், நானொன்றுஞ் செய்யக்கூடா தென்று மறுத்தான் பாருங்கள்.

அரிச்சந்திரமகாராஜன் கவி.

இதுவன்றியின்னந் துன்ப மேதுநேர்புரிந்திட்டாலும்
சதுர்மறைபொய்த்திட்டாலுஞ் சாமிநான்பொய்சொல்லேனே.

(அரி-வ-ம்) சுவாமி ? ஒருக்கால் நான்குவேதங்களும் பொய்த்திட்டாலும், இன்னம் அனேக துன்பங்கள் தங்களால் நேரிட்டாலும், அடியேன் ஒருபோதும் பொய்பேசேன் ஆண்டவா.

(தரக-வ-ம்) சரி சரி, நீ என்னை அண்ணுந்தாள் பூட்டக்கூடாதென்றும், என்னுக்கினைக்குள்ளாகேனென்றும் சொல்வது பொய்யல்லவடா நன்றியற்ற முரடா.

(அரி-வ-ம்) அடியேனுக்குவந்த துயரை நீக்கக் காசிநாதனை துதித்தேனேயன்றி வேறல்லவே ஆண்டவா.

தேவதாசன் விருத்தம்.

ஐபரோக்ஷத்திரோசா வன்பரோயொருவிண்ணப்பஞ்
செய்கிறேனதையாட்கொண்டே சித்தம்நீகரைந்துமெந்த
னையன்மேலிட்டதாளு மணிந்திட்டகிட்டிநீக்கு
முய்யுமுன்பொன்கொடுக்கு முயற்சிநான்புரிகுவேனே.

(தேவ-வ-ம்) சுவாமி ? என் தந்தையை வருத்தும்படிக்கு நீரிட்ட வண்ணுந்தாளும், கிட்டியும், நீக்கும், உமக்குப் பொன்வரும்படியான மார்க்கம் நான் செய்கிறேன் வேதியரே.

தரகன் விருத்தம்.

மேஷத்தின்வயிற்றிற்குட்டி மேன்புலியானற்போல
ரோஷத்தைக்காட்டவந்த ருணபாவிபயலேவாடா
காசதைத்தருவேனென்ற கருத்தினைப்பார்ப்பேன்றந்தை
வேஷத்தைப்போலுனக்கும் விரும்பியேசாதித்தேனே.

(தர-வ-ம்) ஆ ! ஆ ? ஆட்டின் வயிற்றில், புலி பிறந்ததுபோலப்பேசவந்த சிச்சா உனக்கும் ? இதோ கிட்டிமாட்டினேன் இப்போ பேசடாபேசு, துஷ்டப்பயலே,

(தேவ-வ-ம்) சிவசிவா ! சிவசிவா ? காசிவிஸ்வேசா ! நீயேகெதி.

## தேவதாசன் கண்ணிகள்.

இராகம்-சாமா, தாளம்-சாப்பு.

ஐயையோ ! ஐயனும் நொய்யும்படிக்கிட்டி
கையில் பிகித்தனனே
அணையரனே துணையரனே
அலையவே மதி-குலையவே மதிகுலையவே கு-கு.
கந்தனையளித்த சந்த்ரனைத்தரித்த
சுந்தரனே வாராய்
கனிபாராய் சனிதீராய்
கைலையா அருள்-செய்லையா அருள்செய்லையா செ-செ.
மான்மழுதன்னையே தாங்கரமேந்தி
மனோன்மணி யுல்லாசா
மருவாசா அருளீசா
மறையவா என்-துரையேவா என்துரையேவா-து து.
அஞ்சலென்போர்களைத் தஞ்சமென்றேகாக்குஞ்
செஞ்சடை மாதவனே
அரியவனே தெரிதவனே
ஆதியே பரஞ்-ஜோதியே பரஞ்ஜோதியே ஜோ ஜோ
காலனையுதைத்தக் கோலனேபார்வதி
கருது மனோஹரனே
கதியரனே மதியரனே
முக்-கண்ணனே நிர்-வண்ணனே நிர்வண்ணனே வ வு.

(அரி-வ-ம்) ஆ ! ஆ ! பரமசிவமே ! இதென்ன கொடுமையான்காலம் ! பசுவின்முன் கன்றுதுடிக்கவும், நான் பார்க்கவும் விட்டாய் ! சுவாமி ? தரகரோ ? பாலனை வருத்துவது உமக்குத்தருமமாவேதியரோ.

## தரகன் தரு

இராகம்-அடாணா, தாளம்-ஆதி.

பல்லவி.

ஏண்டாமெத்தப் பிதற்றுகிறாய் - அடாசந்தா
ஏண்டாமெத்தப் பிதற்றுகிறாய்.

அநுபல்லவி.

வேண்டாமுனக்கேதுன்பம் விடுவேனடைவாய்மன்று
சான்றோனேநீயின்பம் சாற்றிலோர்பொய்யின்று (ஏ)

சரணங்கள்.

தரணியாண்டவனென்றுமே யுன்கழுத்தினிற்
றுள்சாத்தினே னின்றுமே

வரணிக்கவென்பெருமை வாயாயிரம்வேணும்
கருணித்துனேவிடுவேன் கடுகிப்போயிலேயெனும் (ஏ)
இச்சான்சேஷியும்விட்டு துலேதூரம்
கிட்டினேனுனே யிட்டு
வாச்சாரீபிடிவாதி வஞ்சிபசப்பிதாவி
ஆச்சாதகடிபெற்ற வறிவில்லாப்படியாவி (ஏ)
கொட்டிவிடடாபொன்னே ஏதோபார்ப்போம்
கோவிக்கேனினி யுன்னே
கெட்டியாய்க்கூவினுற் இளறுவேன்பொய்பனென்றே
அட்டிசெய்யத்தகாது அளித்திடுபோவேனின்றே (ஏ)

(அரி-வ-ம்) சுவாமி ? பசுவின்முன் கன்றைவதைப்பதுபோல் என்முன் பாலனே வருத்தாதேயுமென்றால் இப்படிப்பேசலாமா, நான்சொல்லத்தகாத காரியத்தை நீர்பன்னியுரைப்பதினுல் பயனென்ன, நீரினமேது செய்தாலும் நீர் சொன்னவார்த்தை யென்னாலாகாது நாதா.

## தாகன் விருத்தம்.

பாம்புதன்பசியைநோக்கும் பற்றுண்டதேரையப்பா
தேம்பித்தன்விதியையெண்ணுந் திறமைநீயறிந்தகன்றே
சோம்புமுன்றுயரைப்பார்த்தால்சொல்லுமென்பொன்போமன்றே
வீம்புசொல்லாதேநெற்றி மேல்வைத்தேன்கல்லேத்தானே.

(தா-வ-ம்) அடாசந்தாய் ! பிடிபட்டதேரை விதியை யெண்ணினுல் பாம்பு பசியைக்கோருமல்லவா ? உன் வருத்தத்தைப்பார்த்தால் கவுசிகன்பணம்வருமா, நீ பணங்கொடுக்கிறவரையில் இதோ நெற்றியின்பேரிலும் ஒருகல்லேயிட்டேன், சுமப்பாயடா இராஜனே.

(அரி-வ-ம்) சிவசிவா ! ஓ ! காசிவிஸ்வேசா ! இதுவுந் திருக்கூத்தா,

## அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-சஹானு; தாளம்-சாப்பு.

ஐயோவெப்படி யிருப்பேன் - கல்லேத்தாங்கி
யடியேனெப்படிப்பொறுப்பேன்

பொய்யோவேதம்பொய்த்ததோ போச்சுதோவுன்னருளும்
பொறுக்கிலேனிந்தத்துன்பம் புனிதனேவந்தருளும் (ஐ)
கழுத்தும்விம்முதேநெற்றிக் கல்லேத்தாங்கியநொந்து
கண்ணிரண்டும்பிதுங்கக் கால்களுந்தான்தளர்ந்து (ஐ)
பாலன்கைக்கிட்டிதொட்டே பதைக்கிறனெதிராகப்
பத்தினிமெய்தளர்ந்தும் பதறவமைச்சனேக (ஐ)
மணலும்நெருப்பைப்போல மாறியெரிக்கப்பாதம்
பரிக்குதேஸ்மரணேயும் மறையவர்பிடிவாதம் (ஐ

### சத்தியகீர்த்தி தரு.

இராகம்-அடாணா, தாளம்-ஆதி.

பல்லவி.

உன்னைவிடுமென்று எண்ணாதே ஓ-ஓ-தாரகா விந்தப்பழி (உன்)

அநுபல்லவி.

மன்னனேசத்தியராஜன் மாதோபதிவிரதைபார்
மகனுஞ்சிறுவனுச்சே மனங்களாந்தினியேகார் (உன்)

சரணங்கள்.

இப்படிக்கொடுமைசெய்தா லேர்க்குமோதெய்வந்தாவி
தப்பிதம்புரிந்ததேதோ தயவில்லாப்படுபாவி (உன்)
தொண்டுவேலைசெய்தாகிலுந் தொலைப்போங்கவுசிகன்பொருள்
கொண்டுபோய்க்கொடுப்பாயிங்கக் கொடுமைநீக்கிடவருள் (உன்)
அறியாதபாலன்கையி லணிந்திட்டாய்கிட்டியும் பூகி
சரியோநீசெயுந்தீது சண்டாளத்துரோகிதுரோகி (உன்)
மன்னன்முகம்பார்த்தாலுள மயங்கித்தடங்குதையோ
அன்னம்போலென்றுயும்மழ வரும்பாவிகல்நீச்சாயோ (உன்)
ஒப்பிநான்கவுசிகன்மொழி யுண்மையென்றுநம்பினேனே
இப்படித்தெரிந்திருந்தா லென்வாளுக்கிரைசெய்வேனே (உன்)

### சந்திரமதி வெண்பா.

வேந்தனுக்கேயிட்ட விதியுனக்கும்வாய்த்ததுவோ
என்றானுதித்திட்டா யென்வயிற்றில் - நான்றானே
பாவியென்றாலித்தரகன் பாவியிலுமாபாவி
தாவியுனேப்பார்ானே தான்.

(சந்-வ-ம்) அப்பாமகனே தேவதாசா? நான்தான் பாவியென்றால் இந்தத்தரக னென்னிலுமாபாவியாயிருக்கின்றான், நீ யென்வயிற்றில் பிறந்தகொடுமையினால் இந்தத்துன்பம் படுகிறாய் என்னசெய்யலாமப்பா யென்னிருகண்மணியே.

### தேவதாசன் கண்ணிகள்.

இராகம்-கெண்டா, தாளம்-ரூபகம்.

அம்மா! அம்மா! அம்மா! அம்மா! அம்மா! அம்மா! இதோ
அழியுதென்றன்விரல்களெல்லாம் பழிகாரனாலே.
கணுக்கையுமணிக்கட்டுங் கடுக்குதேயம்மா!
விணுவிணென்றுநரம்புகளும் வீங்குதேயம்மா! (அ)
விரல்களெல்லாமுராய்ந்திரத்தம் விம்முதேயம்மா!
மறையவரின்மனமிரங்க மன்றாடுமம்மா! (அ)
புறங்கையும்வீங்கியிதோ பொருமுதேயம்மா!
இரங்கவிவரிருதயம்நீ யேற்றுவாயம்மா! (அ)

உள்ளங்கையுந்துள்ளிவீக்க முற்றுதேயம்மா !
மெள்ளவலிமேனேக்கிச்சதை மீட்டுதேயம்மா ! (அ)
நாவுலர்ந்தாவிசோர்ந்து நடுக்குதேயம்மா !
ஏவுதைத்தவாறுபோல விடிக்குதேயம்மா ! (அ)
தாயிருக்கச்சேய்க்குத்துன்பந் தாவிற்றேயம்மா !
வாய்திறந்துஐயர்பாதம் வணங்குவாயம்மா ! (அ)

(சங்-வ-ம்) அப்பா மகனே! அப்படியே செய்கிறேனென்கண்ணே.

## சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-காம்போதி, தாளம்-சாப்பு.

மறையவரோயிந்த மதலையின்மேனிதான்
மர்மஞ்செயத்தகுமோ வையாவே !
முறையிடுகிலுமுன்றன் முகத்தினயங்காட்டாமல்
மூர்க்கஞ்செயநியாயமோ வையாவே !
கல்லாயுன்றன்மனது கரையாப்பெரும்பாரையா
கபடஞ்சிசுமேலாமோ வையாவே !
எல்லாவேதியர்களு மிப்படிக்கிருப்பாரோ
விதக்கமில்லாமனத்தோ டையாவே !
இரும்பாகிலுமுருகு மிரங்காதேயுன்றன்மன
மிக்கொடுமைதானுண்டோ வையாவே !
பெருந்துயருனக்கென்னபிள்ளைசெய்தானோகாணேன்
பெற்றவள்முகம்பாரு மையாவே !
ஐயாவிவ்வருத்தஞ்செய் தவர்நீரல்லாதுலகி
லாரும்வேறறியேனு மையாவே !
பொய்யாமிப்புவிவாழ்வு பொருளுமகங்காரம்நீர்
பொருந்தற்றகுதியன்றே மையாவே !
இக்குழந்தையழுகு மேழ்மையைக்கண்டுமன
மிரங்காதென்னமாயமோ வையாவே !
திக்குநீயென்றேயுன்றன் றிருவடியைப்பணிந்தேன்
திருவுளமிறக்குவா யையாவே !
அஞ்சினேஞ்சஞ்சலங்க ளடுத்தோமேநின்னடியை
ஆதரித்தாட்கொள்வா யையாவே !
பிஞ்சகன்றனக்காய்நீர் பிரீதிவசனமொழிப்
பேசித்துயரைநீக்கு மையாவே !

## சந்திரமதி விருத்தம்.

வஞ்சமுங்கொடுமைசூது வன்மமுமிகவுணர்ந்த
நெஞ்சதிலிரக்கமில்லா நேமியேகக்ஷத்திரோசா
கொஞ்சமுங்குறைவில்லாமல் குலமுனிகடனேயீவோ
மஞ்சலிமிவர்களென்ப மதற்றுவாயகற்றுவாயே.

(சந்-வ-ம்) ஐயா? வஞ்சகம், கொடுமை, நெஞ்சிரக்கமில்லாத தாரகரே? விஸ்வாமித்திரமுனிக்குச் சேரவேண்டிய மொத்தத்தைக் கொஞ்சமுங் குறைவில்லாமல் கொடுக்கின்றோம், என்னாயகரும் பாலகனும் படுந்துயரத்தை நீக்குவீர் சுவாமி.

## தாரகன் விருத்தம்.

சற்பினிலுயர்ந்தவம்மா கன்னியாபுரியையாளும்
விற்பனனளித்ததாயே வேண்டிநீயுரைத்தவாறு
சற்பனைபுரியவெண்ணஞ் சற்றேனுங்கருதேனின்னம்
நற்குணவதியேநீதான் நவின்றவாறிதோசெய்தேனே.

(தர-வ-ம்) அம்பாசந்திரமதி? நீ சொன்னபடியே இராஜனுக்கும், பாலனுக்கும் அணிந்த கிட்டிகளையு மண்ணுந்தாளையுங் கல்லையும் நீக்கிவிட்டேன், பொருளைக் கொடுக்கவேண்டிய முயற்சி சீக்கிரத்தில் செய்வாயம்மணி.

## சந்திரமதி விருத்தம்.

என்னுயிர்த்துணைவரான வேந்தலேயொருவிண்ணப்பம்
பன்னுவேனையர்கையிற் பலதுயரருந்தலேனோ
வின்னுநாமழிந்திட்டாலு மிவர்மனங்கனிவுகாட்டார்
மன்னரேகடனைத்தீர்க்கு மார்க்கத்தையோசிப்பீரே.

(சந்-வ-ம்) ஆ! என் பிராணநாதா? இவ்விதத் துன்பங்கள் படுவது சரியோ, கடனைத்தீர்க்க யோசனைசெய்வீர் நாதா.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அன்னமேகிளியேமானே யறிவினிலுயர்ந்ததேனே
வன்னமாமரசுநாடும் வாழ்முனிதனக்களித்தே
யின்னகர்வந்தோமின்றி யென்கையினீயுங்காணு
மின்னமும்பொருடானுண்டோ வேந்திழாய்தெரிவிப்பாயே.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரமதி? நமது நாடுநகர் முதலியவற்றை விஸ்வாமித்திரமுனிக்குத் தாரைவார்த்து பரதேசிகளாய்போ லிவ்விடம்வந்தோமே! நீயறியாத வேறுபொருளுண்டோ மாதரசே!

## சந்திரமதி விருந்தம்.

அதிபதிகன்னிநாட்டை யாள்பவனாவந்த
மதிதயன்மகிழ்ந்தளித்த மாதுமேநானிருக்க
விதியினால்வந்ததற்காய் வேந்தனேகளைப்படதேனோ
பதியினிலெனைவிற்றந்த பாதகன்கடன்தீர்ப்பீரே.

(சந்-வ-ம்) ஏ! என்பிராணநாதா? உமது கையைப்பற்றிய அடியாளிருக்க நீர் துயரப்படப்போமோ! இந்தக்காசிநாட்டிலென்னை அங்காடியிலேயாய்விற்றுப் பொருள்வாங்கி இந்தவேதியரின் துயர்தீர்ப்பீரென்கோவே.

### அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மாதரிலுயர்ந்தபெண்ணே மதிதயனளித்தகண்ணே
நீதறிவன்றேபொன்னைத் தேடநாம்வந்தநாட்டில்
பேதறகடனுக்காக பெண்டினையயோத்திவேந்த
னேதறவிற்றுனென்றே பேசுவாரென்னையன்றே.

(அரி-வ-ம்) பெண்ணே? நாமெல்லோருங்கூடிவந்த இந்நாட்டிலேகட னுக்காய் மாதைவிற்றுனென் றெல்லோரும் என்னை வசைபேசுவார் கள் இதற்கென்னசெய்வேனடிமானே.

### சந்திரமதி விருத்தம்.

மின்னிபவைவேலேந்து மிறைவரோவிஸ்வாமித்ர
ருன்னியவினைவைநீரு முணரா மற்றயங்கலாமோ
வேன்னையின்னசரிதன்னி லேதேதுமெண்ணிடாமல்
மன்னரோவிற்றேயந்த மாமுனிகடன்தீர்ப்பீரே.

(சந்-வ-ம்) சுவாமி? விஸ்வாமித்திரருடைய வெண்ணமுங் கபடுந் தெரிந்துந் தயங்கலாகுமோ, என்னைவிற்று அந்த முனிவன்கடனைத்தீ ர்த்துவிடும் பிராணநாதா.

### அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அன்னமேகுயிலேபெண்ணே யனியாயமிதற்கென்செய்வேன்
தன்னகமுடையவந்தத் தவமுனிநீங்கிறைலே
யுன்னைநான்விலைக்குவிற்றே யொழிப்பதுகடனையன்றி
பின்னமோர்மார்க்கங்காணே னிதுவுமென்விதியாந்தானே.

(அரி-வ-ம்) பெண்ணே? விஸ்வாமித்திரமுனியின் கடனுக்காக உ ன்னைவிற்று தீர்க்கவேண்டுமேதவிர வேறுவிதி யாதுங்காணேன் இது வுமென் தலையெழுத்தாகுமடி கண்ணே,

### அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-காம்போதி தாளம்-திரிபுடை.

எள்ளுமெண்ணெய் போலவும் - குயிலே
இருந்தோமன்றே சாலவும் -மயிலே
கொள்ளவிலைகூறவும் - மயிலே-மயிலே-மயிலே
கொடுமைசெய்தேனேபாவி.

(அரி-வ-ம்) அடிமாதே? எள்ளும் எண்ணெய்போலும் பாலும் நீ ரும்போலும், மனமொத்து வாழ்ந்திருந்த உன்னை இக்காசிநகர்வீதியி ல்விற்க என்னபாதகஞ் செய்தேனே! (தலையின்மீது கையைவைத்து வியசனமுறல்.)

சந்திரமதி—கள்ளஞ்சூது போக்கினீர்-பதியே
காசினிபைத்தேக்கினீர்விதியே

உள்ளபடிகடத்திடும்-பதியே-பதியே-பதியே
உகன்றெனை விற்பீர்தானே.

(சங்-வ-ம்) ஆ! பிராணேசா? இதென்னமாய்கை! கள்ளஞ்சூது கனவிலுமறியாத நிஷ்களங்கரோ? மனதில் யாதொரு கிலேசமும்வையாமல் அடியாளை விற்றுவிடுவீர் பத்தாவே.

அரிச்சந்—சகையுநிகழும்போலவுங்-குயிலே
சாரியாய்வாழ்ந்தோஞ்சாலவும்-மனம்
பதைக்கவுனை விற்கவும்-மயிலே-மயிலே-மயிலே
பாவமென்னசெய்தேனோ.

(அரி-வ-ம்) அடி யில்லறக்கிழத்தி? உன்னைத்தொட்டு மாலையிட்டநாள்முதல். இதுகாறும் நிகழும் சகையுமாக வெகு மகிழ்ச்சியோடு என்னோடு மனதொத்து வாழ்ந்த உன்னைக்கடனுக்காக விற்க என்னபாதகஞ்செய்தேனோ! தெரிந்திலேன்! (மோவாக்கட்டையின்மீது ஆள்காட்டுவிரலைவைத்து துக்கித்தல்.)

சந்திரமதி—விதியைநினைந்துருகுவீர்-அரசே
விப்பிரன்கடன்தருகுவீர்-பதியே
சதிநானுனக்கானதால்-பதியே-பதியே-பதியே
சரியாமென்றனை விற்பீர்.

(சங்-வ-ம்) ஆ! சத்தியசொரூபரோ? நமக்குவந்தவிதியை நினைந்து மகாதபோதனராகிய முனிவர் கடனுக்காகத் தங்களுக்குச் சொந்தமாகிய அடியாளைவிற்று அக்கடனுக்குச் சரிவரச்செய்தனுப்பிவிடுவீர் கோவே.

அரிச்சந்—வேணுந்தொழில்புரிந்துமே-சகியே
வேண்டும்பொன்னைப்பரிந்துமே-யிந்த
மானுபநுவன்களிக்கவே-மயிலே-மயிலே-மயிலே
மாதேகடனைத்தீர்ப்பேன்.

(அரி-வ-ம்) அடி சந்திரவதனு? எவர்களிடமாகிலுஞ்சென்று அவர்கள் காலாலிடும்வேலையை நான் தலைவணங்கிச்செய்து பணத்தைச்சம்பாதித்து நம்மோடுகூட வந்திருக்கும் வேதியருக்கு நாணயத்தைச்செலுத்தியனுப்பலாமென்று எண்ணுகிறேனடி கிளியே.

சந்திரமதி—தவணைநாளுமாச்சுதே-பதியே
தரகன்றுயர்வாச்சுதே-விதியே
தெய்வமும்பொய்க்கலானதே-பதியே-பதியே-பதியே
தெளிவாயென்றனைவிற்பீர்.

(சங்-வ-ம்) என்துரையே? தாங்கள் சொல்லுவதுபோல் செய்வதற்கு இதுகாலமல்லவே, ஏனெனில் தாங்களிட்ட தவணைநாள் சமீபித்து

விட்டபடியாலும், தெய்வமும் வேதியருக்குச்சகாயமாயிருந்து நம்மை வருத்தமுறச்செய்வதாலுமே, ஆனதால் என்னைவிற்றுக் கடனைத்தீர்த்து சத்தியத்தை நிலைநாட்டமுயல்வீர் பத்தாவே.

அரிச்சந்—என்னைவிலைசெய்குவாய்-சகியே
இருடிகடனீக்குவாய்-மகன்
தன்னுடனேநீயுமுன்-மயிலே-மயிலே-மயிலே
தாய்மனைபோயிருப்பாய்.

(அரி-வ-ம்) அடிமாதே? நான் சொல்வதை மனம்வெறுப்பில்லாமல் கவனமுடன்கேட்பாய், அதாவது அந்த இருடியின் கடனுக்காக நீ என்னைவிற்று கொடுத்துவிட்டு நீயும், பாலனும், கொஞ்சகாலம் உன்தாய்வீடுபோயிருப்பாய் கோதே.

சந்திரமதி—அன்னைகுருஅப்பனும்-அரசே
ஆளெனைஒப்பினும்-பதியே
என்னைப்பரிசுநிப்பதேன்-பதியே-பதியே-பதியே
இனிவாய்விலைகூறுவீர்.

(சங்-வ-ம்) அ! சத்தியவுருவே? அடியாளுக்கு இவ்விதபோதனை செய்வது தங்களுக்கு யாதோ குற்றம்செய்திருப்பதாகக் காட்டுகின்றது, யான் தங்களை அன்னை, பிதா, குரு, தெய்வம், பத்தா என மதித்திருக்க என்னையும் இப்படியும் சோதிக்கலாகுமா! வேண்டாம், வேண்டாம், மகிழ்வுடன் என்னை விலைகூறுவீர் சுவாமி.

அரிச்சந்—நானுமன்னனாகவே-சகியே
நாட்டில்வந்தும் நோகவே-என்
சானுடலுங்குன்றவே-மயிலே-மயிலே-மயிலே
சதியைவிற்கவுமாமோ.

(அரி-வ-ம்) மதிதயமகாராஜன் அருந்தவத்தில்வந்த அன்னமே! யான் எவ்வளவு எடுத்துச்சொன்னபோதிலும் நியாயமென்னுங்கயிற்றால் கட்டிவிடுகிறாயே என்னசெய்வேன்! பாராண்ட மன்னாதிமன்னனாயிருந்தும், இத்திவ்யக்ஷேத்திரமடைந்து பாரியாளை விற்க விதிவசம்வந்ததல்லவா! உஸ், (தாழவிழல்)

சந்திரமதி—தானுவேநீர்துடிக்கவும்-அரசே
தனையன்றுயர்பிடிக்கவும்-பதியே
காணும்படிவந்தபின்-பதியே-பதியே-பதியே
கடனுக்கென்தனைவிற்பீர்.

(சங்-வ-ம்) பிராணநாதா! இத்தரகரால் தாங்கள்பட்ட துன்பங்களும், பாலன்பட்ட துன்பங்களும் யான்கண்ணாரக்கண்டிருந்தும் அம்முனிவன் கடனுக்கு முன்பின் பாராமல் தாராளமாய் என்னை விற்றுவிடுவீர் தயாநிதியே.



அரிச்சந்—இரதியுமதன்போலவே-சகியே
யிருவர்வாழச்சாலவே-பாவி
சதிநினைந்தேபிரமனும்-மயிலே-மயிலே-செய்த
சற்பனையோவறியேன்.

(அரி-வ-ம்) மாதே? நாமிருவரும் இரதி மதனும்போல வாழ்ந்திருக்க நம்மை அந்தப்பாழும்பிரமதேவன் என்னநினைவுகொண்டோ இவ்விதச்சதிசெய்து பிரிக்கத்துணிந்ததை அறியேனே!

சந்திரமதி—விதியேவேலனுந்தும்-மரம்
விமலனையமெடுத்ததும்-பதியே
கதிகல்லதில்மேவவே-பதியே-பதியே-பதியே
கடுகிவிற்பீரெனையே.

(சந்-வ-ம்) வேலாயுதக்கடவுள் வேங்கைமரமானதும், சிவபெருமான் பிச்சையெடுத்ததும் விதிவசமே. முனிவர் கடன்தீர்த்து இத்தாகன் படுத்தும் பாட்டை ஒழிக்க சீக்கிரமாக மனத்துணிவுடன் என்னை விற்பீர் பிராணநாதா.

அரிச்சந்—நாரும்பூவைப்போலவே-மயிலே
நாட்டில்வாழ்ந்தோஞ்சாலவே-யின்று
வேறுபடவந்ததோ-காலம்-சகியே-சகியே
வினையின்கதியறியேன்.

(அரி-வ-ம்) நாரும் பூவும்போல நாமிருவரும் பூமியில் ஒருமித்து வாழ்ந்திருந்தோம். இப்போது ஒருவரைவிட்டொருவர் பிரியகாலம் நேரிட்டது. இனியும் வினையின்பயனென்ன கூட்டிவைக்குமோ தெரியவில்லை மாதே.

சந்திரமதி—காருஞ்சத்தியவாக்கையே-அரசே
கருமுற்றிமோக்கையே-நானும்
வேறுறினுமன்புமே-பதியே-பதியே-பதியே
விரதம்பொய்க்கேனுதா

(சந்-வ-ம்) எடுத்தசனனமீடேற, சத்தியவாக்கைக் காப்பாற்றுவீர், பத்தாவே. நான் விலைபோய் வேறுபட்டாலும் என்விரதத்திலிருந்து தவிரேன், என்பிராணநாதா.

சந்திரமதி விருத்தம்,

எத்திசைபுகழும்வேந்தே யென்னையிக்காசிதன்னிற்
சித்தமஞ்சாமல்விற்றுச் சீருடன்பொருளைவாங்கி
முத்தனுக்களித்திடாமல் முகம்வாடியேன்வீணாக
வித்தனைதுயரங்கொள்ள லேற்குமோவென்றன்கோவே.

(சந்-வ-ம்) ஆ! என் பிராணரக்ஷகா? என்னைவிற்று விஸ்வாமித்திரர் கடனைத்தீர்க்காமல், முன்பின் யோசிப்பதனால் யாதொரு பலனுங் காணேன் சுவாமி.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

கற்பினிலுயர்ந்தமாதே காசியாம்புண்யநாட்டில்
விற்பனன்றயரினாலே வெம்பினேனுனதுநீதிக்
கொப்பியேயுளந்துணிந்தே யுன்முடிமேற்புல்லிட்டுக்
கப்பியேவிற்கவெண்ணங் கருதினேன்காலந்தானே.

(அரி-வ-ம்) ஆ! ஆ! பெண்ணே? பதிவாக்குமீறாத என்கண்ணே? உன்முடிமீது புல்லைவைத்து விலைகூறக் காலம்வந்தது, முன்செய்த கருமவசந்தான் மாதே. சரி, இனியென்னசெய்யலாம், ஈசனே. துணையிருப்பார் அடி பெண்ணே சந்திரமதி? நீசொன்னவாறே முனிவருடைய கடன்தீர்க்கவேண்டி யுன்னை யிக்காசித்தெருவில் விலைகூறி விற்கின்றேன் பெண்ணரசே.

சத்தியகீர்த்தி கண்ணிகள்.

இராகம் - பரசு, தாளம் - ஜம்பை.

ஐயனேயிந்தவெண்ண　　மாகவேயாகாது
கையிலேநானிருக்கக்　　கவலையுறலேது
சத்தியத்தைவிடுக்காமல்　　சக்கரந்தாங்கியிருந்தீர்
பெற்றவளேயித்துணிவு　　பேணுதலைவிடுவீர்
சாந்தமேயோருருவான　　சற்குணியாமென்தாயை
நீந்துமனந்தனியேநீ　　யிருப்பதுண்டோவையா
தரகுவந்தபாதகனுந்　　தான்றொடுக்கப்பலகோரம்
பரமனுந்தான்செயுங்கூற்றோ　　பாவமதோவையா
மாதைவிற்றார்மன்னரென்றுமாநிலத்தோர்வசைமொழிவார்
வேதையுண்டோவென்னைவிற்க வெறுப்பதுண்டோவையா
உடலுமதுவுயிருமது　　வூனுமதுநானுமது
புடமிசையில்வெறுமையுண்டோ　　புகலுவீரென்னையா
பெற்றபிள்ளைதன்னைவிட　　பிரியமகனுனிருக்க
உத்தமரேமனங்கலக்கு　　முறக்கமேதோவையா
பாவியெனையிக்கோரம்　　பார்க்கவயனேன்படைத்தான்
தாவிநீரென்றனையைவிற்கத்　　தான்பார்க்கேனையா
இவ்விதியைநானுக்க　　விருந்தேனோவுயிருடனே
செவ்வலனேயான்மரித்தால்　　க்ஷேமம்விஸ்வநாதா

(தரகன்-வ-ம்) ஓய் ஓய் இராஜனே? மந்திரியை விற்க வுனக்கு நீதி

புண்டா, இது சத்தியத்திற் கொவ்வாதவார்த்தை அந்தப்பொன்னை நா
ன்வாங்கமாட்டேன் வேந்தனே.

(அரி-வ-ம்) கேட்டாயா அப்பாமந்திரி? நீ யுன்றுயரத்தைப் போக்கி
வந்த விதியை நோக்குவாயப்பா சத்தியகீர்த்தி.---பெண்ணே சந்திரவ
தி ஐயர் சொன்னதைக் கேட்டாயா? உன்னைவிற்று கடன்தீர்ப்பதே
யுறுதியாச்சுதுமாதே.

(சந்-வ-ம்) சத்தியந்தலைகாக்குந் தைரியம்விடாமல் சந்தோஷமாய்
விற்பீரென் பிராணநாதா.

(அரி-வ-ம்) அப்படியே செய்கிறேன் மாதே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

கற்பினி லுயர்ந்தாள்தெய்வங் கணவனேயென்றிருந்தா
ள்றபுதகடைகுணனி யாந்தர்யசுத்திபூண்டாள்
விற்பனள்விவேகசாலி வேண்டியென்கடனைத்தீர்க்க
தற்பரனருளாலிங்கு தான்விற்கவந்தேன்கொள்வீர்.

(அரி-வ-ம்) இவளோ பதிவிரதாசிரோன்மணி, வேதமறிந்தவள், வி
வேகி, இவளை நான் முனிவனிடம் பட்டகடனைத் தீர்க்கவிற்கின்றேன்
வாங்கவருவீர்கள் கனவான்களே.

---

## சந்திரமதியைவிலைகூறல்!

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-நீலாம்புரி, தாளம்-ஆதி.

வினையான்மனைவியையும்விஸ்வா மித்திரன்கடன்தீர
விற்கின்றேனுன்கனவான்களே வேண்டில்வருவீரோ

(அரி-வ-ம்) என்விதிப்பயனாலமைந்த கடனைத்தீர்க்க என்மனைவி
யை விற்கின்றேன், வாங்கமனமுடையவர்கள் வருவீர் கனவான்களே.

துணையானவளெனக்கும்பொய்யைச் சொல்லாதவள்பாரீர்
இணையாய்வந்தேயிவளைக்கொள்ள விங்கேயோடிவாரீர்

(அரி-வ-ம்) இம்மாதோ எனக்குயிர்த்துணையா யிருந்தவள், என்று
ம் பொய்பேசாதவள் இவளைக் கொள்ளவாருங்கள்.

எஜமான்மொழிகடவாதவ ளிரக்கமுள்ளமனத்தாள்
நிஜம்போன்றவள்கொலைவிட்டவள் நேராய்க்கொள்ளவாரீர்.

(அரி-வ-ம்) என்றும் எஜமான்வார்த்தையைக் கடவாதவள், கொலை
க்குப்பயந்தவள், கொள்ளவாருங்கள்.

நலமன்னவர்குலம்வந்தவள் நல்லநெறியுடையாள்
தலம்விட்டயலேகால்விதி தாண்டாளிவள்வாரீர்

(அரி-வ-ம்) நல்ல இராஜகுலத்திற் பிறந்தவள், என்றும் அயல்வீடு போகாதவள், தனக்குத் துன்பஞ் செய்தோரையு மின்பமா யழைக்கத் தக்கவள், வாங்க வாருங்கள், கனவான்களே.

தரகன் விருத்தம்.

அடாஅடாபார்க்கப்போறே னையையோபுத்திகெட்டே
படபடப்புடனீயாதைப் பற்றிகைகூவினுலிவ்
விடமதில்வருவோராரோ விலையெவர்கொடுக்கப்போருர்
அடம்விடுஇதற்காது ஆண்மையுமல்லவேந்தே.

(தா-வ-ம்) ஓய் இராஜனே ? இன்னேரங் கத்தியும் இவ்விடத்திற்கு யார்வந்தார்கள், இவளை யார்வாங்கப்போகிறார், உன்னுடையபிடிவாதத் தைவிட்டுவிடு, இதுவுமொரு ஆண்பிள்ளைத் தனமல்லகாணும்வேந்தே

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மாதுகேளுன்னையிந்த மாநகர்காசிமேவுங்
கோதுறுவீதிவீதிக் கொண்டோடிவிலைதான்கூர்வேன்
தீதுண்டோநாணமுண்டோ தெரிவிப்பாய்கண்ணேமெத்த
ஓதுறுன்றாகன்றுனு மொடுக்குதென்மனமும்பெண்ணே.

(அரி-வ-ம்) அடிபெண்ணே ? தரகர் சொன்னதைக் கேட்டாயா ! ஐயோ ! ஜெகதீசனுக்கு என்னகுற்றம் செய்தேனோ ! அடி கிளியே ! ஆதியில் காமிருவரும் யாத்திரைப்பிராமணர்கள் போதனைக்குட்பட்ட காலன்றோ நீ எனக்குமனைவியானதும், நானுனக்குப்பத்தாவாக ஆனதும் வினையின்சேட்டையே, அடி சந்திரவதனு ? என்னை அன்று அதி பேரானந்தத்தோடு நீ கைப்பற்றியதினுல் வந்தபலனைப் பார்த்தனையா! மேலும் ஆதியில் நீ என்னை நீக்கி வேறொருவனைக் கைப்பற்றியிருப் பையாகில் இவ்விதமானக்குறைவு வாராதே, ஆ ! உன்முகத்தைப்பார்க்கப்பார்க்க வயிறுபற்றி நெட்டுயிர்வாங்குதே ! உன்னை இக்கோலமாக் கக்காரணம் பாவியாகிய நானே! இனியென்ன செய்யலாம்; ஆகவேண்டியகாரியத்திற்காக நானுன்னைக் கைப்பற்றி வீதிகள்தோறுஞ் சென்று விலைகூறப்போகின்றேன், ஏதாகிலும் துக்கமும், வெட்கமுமுண்டா சொல்வாயடி கண்ணே.

(சங்-வ-ம்) ஆ ! என்ன பிராணநாதா ? அடியாளை யிப்படிசோதிப்ப தடாது, உலகில் கணவருக்குவந்த சுகதுக்கங்களை மனைவியானவள் சமரசமாய்பாவித்து நடக்க எண்ணத்துணிபவளே கற்புக்கரசியாவளென புராணுதிகள் முறையிடுவதைத்தெரிந்திருக்கிறேனுதலால் அம் முனிவன் கடனுக்காக என்னை எங்கு கொண்டு விற்பனைசெய்தபோதிலும் சம்மதியே, வேறுயோசனைவேண்டாம் என்னுயகரே.

(அரி-வ-ம்) அப்படியே விற்கின்றேன் பெண்ணே.

# வீதிகள்தோறும் சந்திரமதியை

விலை கூறல்.

## அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-சவாய், தாளம்-ரூபகம்.

பூசுங்களபஞ்சேர்க்கப் புஷ்பங்தொடுக்கமெத்தப்
புனிதவிதமறிவாள்பாரீர்-எந்தப்
புவியாளும்ராஜாக்களானாலுந்தடையில்லைப்
பொருளீந்திவளைக் கொள்ளவாரீர்.

(அரி-வ-ம்) இவளோ களபஞ் சேர்ப்பதிலும், புஷ்பந் தொடுப்பதிலும், மெத்தசிறந்தவள், இராஜாக்களானாலும் விற்கத்தடையில்லை வாங்கவருவீர்கள் வேந்தர்களே.

வீணிற்காலங்கழிக்காள் வேண்டுந்தொழில்புரிவாள்
விதிநெறிதவறிடாள்பாரீர்-குல
வேதியரானாலும் வேண்டும்பொருளீந்தே
விலைக்கேயிவளைக் கொள்ளவாரீர்.

(அரி-வ-ம்) வேதவிதிதெரிந்தவள், வீண்காலம் போக்காதவள், வேண்டிய பணிவிடை செய்யத்தக்கவள், குலத்தி லந்தணரானாலும் விற்கத்தடையில்லை, வாங்கவருவீர்கள் குணவான்களே.

வாய்மொழியெதிரிடாள் வணங்கிப்பாதம்பணிவாள்
வருக்காநிஜமுடையாள்பாரீர்-குல
வைசியரானாலும் வருந்தும்பொருளளித்தே
வாகாயிவளைக் கொள்ளவாரீர்

(அரி-வ-ம்) எதிர்மொழிபேசாதவள், வணங்கித்தொழில் செய்யத்தக்கவள், நிஜமிலைபிசகாதவள், குலத்தில் வைசியரானாலும் விற்கத்தடையிராது, வாருங்கள், வாருங்கள் தனவான்களே.

கவிவாணருக்குதவி காலமுஞ்செய்தவள்
கல்வியிற்சிறந்தவள்பாரீர்-இந்த
காசியின்வேளாள ரானாலும்பொருளீந்துக்
கருமுடனே கொள்ளவாரீர்.

(அரி-வ-ம்) இவளோ, வித்தையிற்சிறந்தவள், வித்வான்களுக்கு வெகுமதிசெய்தவள், உயர்ந்த குலத்தோரான வேளாளராகினும் விற்கத்தடையிராது, வாருங்கள் புண்ணியவான்களே.

சாத்திரமுறைகளில் சற்றும்பிசகாத
சன்மார்க்கமுணர்ந்தவள்பாரீர்-அந்த

சூத்திரராளுலுஞ் சுருக்கெனவேபொருளைச்
சொரிந்தேயிவளைவாங்கவாரீர்.

(அரி-வ-ம்) நீதிசாத்திரநெறி தெரிந்தவள், சூத்திரராளுலும்விற்கத் தடைபிராது, வாருங்களப்பா வாருங்கள்.

(பொது-வ-ம்) சபையோர்களே? அரிச்சந்திரமகாராஜன், பதிவிரதாசிரோன்மணியாகிய சந்திரமதியம்மனை விலைகூறிவருவதைக்கண்ட கவுசிகன், காலாக்கினிக்கொப்பாகிய கற்புடையவளைக்கொள்ள மற்றியாருமகாதென அக்கினிதேவனை யழைக்கிறவிதங் காண்பீர்கள் கனவான்களே.

## விஷ்வாமித்திரன் தரு.

இராகம்-கமாஸ், தாளம்-ரூபகம்.

பல்லவி.

அக்கினிபகவானே-வாரும்-வாரும்-அக்கினிபகவானே.

அநுபல்லவி.

திக்குநீசென்றன்று தேவாமுறையிடவுந்
தேவேந்திரன்சபைதனில் திகழும்வரமளித்த (அ)

சரணம்.

காசிவேதியனுக மடியுடுத்திக் கையிற்பஞ்சாங்கமோங்க
வீசிகடையதாக அறநூலும் விளங்கிமெய்யினிலோங்க
மாசிலாதவிந்த மன்னனரிச்சந்திரன்
மாதைவிலைகூவுகிறு னடியேன்முன்னிதுகாலம் (அ)

## அக்கினிதேவன் விருத்தம்.

அன்னமேசொல்லக்கேளா யமரர்கோன்சபையிலன்று
வன்னமாயரிச்சந்த்ரன்றன் வாயிலோர்பொய்யைநாடி
பன்னாவும்விஸ்வாமித்திரன் பந்தயங்களித்தேகூறி
யுன்னதசகாயஞ்செய்ய வுற்றெனைக்கேட்டான்பாரே.

(அக்-வ-ம்) பெண்ணே சுவாலா? நான் தேவேந்திரன் சபைக்குப் போயிருந்தகாலையில், அரிச்சந்திரமகாராஜன் வாயிற் பொய்பேசச்செய்வேனென்று விஸ்வாமித்திரமுனிபந்தயங்கட்டியதைக்கேளாய்மாதே

(சுவாலா-வ-ம்) அ! அதென்னபந்தயம்?

## அக்கினிதேவன் விருத்தம்.

அவனெனையேவணங்கியன்று போற்றிநிற்க
யனுமதித்தேன்வருவேனென் றளித்தேன்வாக்கு
தவமுனியுமின்றெனையே வேதியனுகத்
தான்வரவுங்கோரியிட்ட துதிலைபக்கேட்டேன்

இவடமிருப்பதுமினியே தகாதுநான்போய்
இட்டமுறைப்படியவனை யினியச்செய்வேன்
கவனமுடனீயும் பிராமணத்திபோலக்
காசிநகர்வந்திடுவாய் கடுகிற்றனே.

(அக்-வ-ம்) பெண்ணேசுவாலா? என் சகாயத்தைக்கோரியன்று விஸ்வாமித்திரன் வணங்கிநிற்க, நானுங்கோரியபோது வருவதாய்வாக்களித்தே னிப்போது என்னை பிராமணவேடமாய் வரும்படி யழைக்கிறான், போகின்றேன், நீயும் இப்போது என்னுடன் பாப்பாத்திவேடமெடுத்துக்கொண்டு காசிநகர் வருவாயென்கண்ணே.

சுவாலாதேவி விருத்தம்.

நாதனேகாசிதன்னை நாடியேவருவேனங்கு
நாதனேநாமுந்தங்க நலமுளவளைவுமுண்டோ
நாதனேநாட்டோர்கண்டால் நம்மையெவ்வகைமதிப்பார்
நாதனேயதுதான்தோற்ற நயமுடனுரைசெய்வீரே.

(சுவா-வ-ம்) பிராணநாதா? நான் தங்களுத்திரவின்படி காசிபட்டணம் வருகின்றேன், அவிடம் நாமிருக்க விடமேது? ஊரார் மதிப்பாரோ, இதற்கொரு வுபாயஞ்சொல்லுவீர் சுவாமி.

(அக்-வ-ம்)—(யோசித்து உரைத்தல்) ஆ பெண்ணே?

அக்கினிதேவன் விருத்தம்.

காசிநகர்வேதியர்வாழ் சேரிதன்னிற்
காலகண்டனெனுமையன் விடுதியுண்டு
ஆசித்தேயவன்மனைவி யுடனேயாத்திரை
யகன்றிட்டான் குமரிதனைநாடிக்கண்ணே
யோசிப்பாயவன்றிரும்ப நெடுநாட்செல்லு
முற்றவனைப்போலுருவை யெடுப்பேனுனும்
மாசின்றிநீயுமவன் றேவிரூப
மாறிவோய்வரும்போது மானேபோறேன்.

(அக்-வ-ம்) பெண்ணே சுவாலா? காசி அக்ராரத்தெருவில் காலகண்டனெனு மோர்பிராமணனிருந்தான், அவனும் அவன்தேவி காலகண்டியும், யாத்திரைபோயிருக்கிறார்கள்; அவாள் திரும்ப நாள்செல்லும், நானவனைப்போலுருவெடுத்துப் போகின்றேன், நீ யவன்தேவியைப்போ லுருவெடுத்துவருவாய் அவாளிருந்த மனையில்நாமுஞ் சிலகாலமிருந்து வருவோமடி கண்ணே.

(சுவா-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே போவீரென்பிராணநாதா நானுந்தங்களுத்திரவின்படி வந்து சேருகின்றேன் சுவாமி.

(பொது-வ-ம்) சபையோர்களே? கௌசிகமுனியிட்ட முறையைக் கேட்ட அக்கினிதேவன் பிராமணவேடமெடுத்து முனிவன்முன் தோன்றினனென்றறிவீர்கள் கனவான்களே.

(விஸ்-வ-ம்) போற்றி போற்றி, அக்கினிபகவானே போற்றி.

(அக்-வ-ம்) என்னை யிந்த வேஷத்துடன் வரக்கோரிய காரியத்தை தெரிவிப்பாய் முனியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

மன்னவன்றன்னரசதனைக் கவர்ந்திட்டேன்
    சூதாலே மகிபன்றானும்
பொன்னதனைக்கேட்டதற்குக் காசிதனிற்
    றருவேனென்றே புகலச்சுக்ரன்
தன்னையுமேயின்தரக னாய்விடுத்தே
    னவன்புரிந்த தாழ்வுதன்னால்
இன்னகரில்பெண்டைவிற்க வெண்ணினா
    னரிச்சந்திர னியம்பக்கேளே.

(விஸ்-வ-ம்) சுவாமி? கபடமாக அரிச்சந்திரனிடம் பொன்னைத்தானம்வாங்கி யவனிடமேவைத்து, அவ்வரசைக்கைக்கொண்டு முன்னிருந்துப் போனபொன்னைக் கடனாகச் சுமத்திகொடுவெனக்கேட்கக் காசியில் தருகிறேனென்றான், சுக்கிரபகவானைத் தரகனாய் விடுத்தேன், அவர் செய்ததுன்பம் பொறுக்கமாட்டாமல் தன்மனையாளை விற்கின்றான் கேளுஞ் சுவாமி.

(அக்-வ-ம்) ஆ! அப்படியா!

விஸ்வாமித்திரன் விருத்தம்.

நீர்சென்றேவேதியராய் மாதுதன்னை
    நிகழ்விலைக்கேகைக்கொண்டுபாலனோடு
பார்தனிலேபடியாள்செய் பணிகளெல்லாம்
    பத்தினிதான்புரிந்திடவே பகர்வீர்மற்றுஞ்
சீர்பெருகுமைந்தனையே மாடுமேய்த்துஞ்
    செப்பருநற்சமித்தையெலாங் கொணரச்செய்வீர்
பேர்பெருகவெனை நாளுங் காத்தளிக்கும்
    பிரபலனேநின்னிருதாள் பேணினேனே,

(விஸ்-வ-ம்) சுவாமி? நீர் வேதியராகச்சென்று, அந்தச்சந்திரவதியை விலைக்குக்கொண்டு, பாலனையுங் கைப்பற்றி, பாங்கிகளுஞ் செய்யத்தகாத தொழில்களை பத்தினியால் செய்யச்செய்து, பாலனை மாடுகன்றுகள் மேய்த்து சமித்துகள் கொண்டுவரச் செய்வதுட னதிகதுன்பப்படுத்தி யென்கோரிக்கை யீடேறச்செய்யும் நாதா.

(அக்கினிபகவான் தன்னந்தனியே யோசித்தல்) ஆ! இதென்னகொடுமை, சாக்ஷாத் அந்த அருந்ததிக்குச்சமானமாகிய சந்திரவதியைப் பலவித இம்சைச்செய்யச்சொல்லுகிறான், அவளோ கற்பிலுயர்ந்தவள் மனம் நொந்தால் எவ்வாறாகுமோ! நாம் ஏன் அன்று தேவசபைக்குப்போயிருந்தோம், உஸ், சரி, இனி என்னசெய்யலாம், நாமும் அன்று வாக்களித்தபிரகாரம் இவ்விடம் வந்துவிட்டோம், தப்பிக்குமார்க்கம்காணேம், எதுவந்தாலும் வரட்டும், இது எல்லாம் வீண்பிரயத்தினமே,—சரி, கேளுமுனியே? நீ சொன்னபடிநடத்த இதோ நான் போகின்றேன், வாழி, வாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே? சந்திரவதியம்மனைவிலைக்குக்கொண்டு அதிகதுன்பங்கள் புரியவேண்டி அக்கினிபகவான் காலகண்ட ஐயராக வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

காலகண்டன் தரு-

இராகம்-காம்போதி, தாளம்-ஆதி.

பல்லவி.

அருமறையுணர்ந்தநதி-யழகுபடைத்தகாசி
அந்தணரிதோவந்தார்-காலகண்ட
ரந்தணரிதோவந்தார்.

அநுபல்லவி.

பெருமையொளிவிளங்கிப்-பேசுந்தெளிவுள்ளோங்கித்
தருமநினைவுபொங்கித் தகிக்குமருளைத்தாங்கி
பேணியதேவரும் பெருநிதியாவரும்
பூணியமுனிவரும்-புகழ்ந்திடவனைவரும்
போற்ற-பகுதிகளை-யேற்ற
பொற்புருகமலயன் வெற்புறுவடியினில்
தற்பரநிலைகொளு மற்புதனாகிய
புனிதன்சகலசுரர் கினிதனசுராபணி
வனிதைநற்சுவாலையுடன் மனிதருபந்தரித்தே (அ)

சரணம்,

காசித்தெருவிலோடியே
கனிவுடன்கவுசிக னினிதுடன்வேண்டிட
ஆசித்தரசைத்தேடியே
கருமுகில்சிறுவிடை வருமதிமுகமுடை
பெருமையாமழகுடை பொருமைதருகுஞ்சடை
காளையேறுபவன் ருளையடையவென
நாளைவலுமைசெயும் வேளையறிந்துதுதி

கற்புடையமாதுதனை விற்பனவிலைக்கேகொண்டு
பற்பலரீகாரங்களுடன் சற்பனைகளும்புரியக்
காண-அரசன்வெட்கம் பூண-அமைச்சனுடல்
நாண-விருவனைக்கொள-வேண-வெனத்தாண்டியே (அ)

## காலகண்டன் விருத்தம்.

ஐயனேசுக்கிரமூர்த்தி யடியன்றன்வந்தனங்காண்
மெய்யனும்விஸ்வாமித்ரன் மிகக்கோரிநின்றவாறு
துய்யநன்னடையாளோடுந் துயருறச்சுதனைக்கொண்டே
வெப்பருங்கொடுமையெல்லாம் விளைவித்தேபார்க்கவந்தேன்.

(கால-வ-ம்) சுக்கிரரே? விஸ்வாமித்திரன் கோரியபடி யிந்தமாதையும் பாலனையுங் கைப்பற்றி யனேகேர்ரங்கள்புரிய விதோ வந்தேனையா.

(சுக்கிரமூர்த்தி-வ-ம்) அப்படியா! இப்படிவாரும் அக்கினிதேவரே? யான் சரயூநதிமுதற்கொண்டு இந்நாடடைந்த இன்னிமிஷவரையில் இவரைச்செய்த துன்பங்களைச் சொல்லத்தரமல்ல, அப்படியிருந்தும், ஒருவராகிலும் பிசகினவர்களல்ல, இவர்களோ மஹாசத்தியவான்கள், நெறிபிசகாதவர்கள், அந்த விஸ்வாமித்திரன் எப்படி இவர்களைவென்று அந்த வஸிஷ்டமூர்த்தியைக் கெலிப்பாரோ, ஏதேது அக்கினிதேவரே.

(அக்-வ-ம்) ஐயா சுக்கிரமூர்த்தியே? நீர் சொல்வதில் யாதேனும்பிசகில்லை ஆயினும் சற்று முயற்சி செய்யவேண்டும்.

(கா-வ-ம்) ஆனால் சரி, இப்படி வந்துவிடும்,—மகாசந்தோஷம்.

## காலகண்டன் விருத்தம்.

கங்கையைச்சடையிற்றாங்கும் காசிவிஸ்வேசநாட்டில்
மங்கையைவிலைகொண்டுகூறு மறிவிலானூர்காண்பிள்ளாய்
நங்கையின்நாமமென்ன நாயகனு னூர்பேரு
மிங்கையேயெனக்குநீதா னெடுத்துரைசெய்வாயப்பா.

(கால-வ-ம்) நீ ஆர்காணும்பிள்ளாய்? ஆம்பிடையாளை விலைகூறிவிற்கின்றவன்? இவள் பேரென்ன? உன்பேரென்ன? உன் தேசமெதுவோ தெரியச்சொல்லுவாயப்பா.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

இத்தலம்புகழயோத்தி யெழிலுறதிரிச்சங்கின்ற
சத்யரிச்சந்த்ரனென்றே சாற்றுவாரென்பேர்மாதோ
பத்தினியெனக்கேயாகும் பரமன்றனடியன்விஸ்வா
மித்திரன்கடனைத்தீர்க்க மெய்யனேவிற்கின்றேனே.

(அரி-வ-ம்) சுவாமி? நானயோத்தியாண்ட திரிச்சங்கின்ற சத்திய

பாஷனெனும் அரிச்சந்திரன், இவளென்தேவி, இவள்பேர்சந்திரவதி, விஸ்வாமித்திரமுனிவர் கடனைத்தீர்க்கவேண்டி விற்கின்றேனையா வேதியரே.

## காலகண்டன் விருத்தம்.

கடனுக்காய்மாதுதன்னைக் காசினிதனில்விம்மட்டு
முட்ன்பட்டுவிற்றபேர்க ளுனையன்றிவேறுகாணேன்
தடதடத்திடவோநீதான் தருகிலேனென்றுனுன்னை
படபடத்திடவுமன்செய் பழுதேதுபகருவாயே.

(கால-வ-ம்) அப்பா இராஜனே? கடனுக்காக ஆம்பிடையாளை விற்றவர்களுனையன்றி வேறுகாணேன், கடனைக்கொடுக்கிறதில்லையென்றுனுன்னை அந்தமுனி யேதுசெய்வானப்பா.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயரேநீர்தான்சொல்வ தடாதகாரியமேயாகும்
மெய்யுமென்னுவிபெண்டீர் மித்திரர்மைந்தர்சுற்றம்
கையைவிட்டகன்றிட்டாலுங் கடனிலையெனவேவாயால்
பொய்யுரைமொழியவுள்ளம் பொருந்திடேன்புவிதாபோற்றி.

(அரி-வ-ம்) சுவாமி? நீர் சொன்னதற்கொப்பேன், என் பெண்ஜாதி, பிள்ளை, சுற்றம், முதலானவைகள் போனாலும், கடனில்லையெனப் பொய்யை வாயாற்சொல்வதைவிட வென்னுவியைக் கைசோரவிடப் பின்னிடேனென்றறிவீர் வேதியரே.

## காலகண்டன் விருத்தம்.

படத்தினிலெழுதவொண்ணுப் பாவையாமிவளைக்கொண்டால்
மடத்திலேவாழுமென்றன் மனைவியுமிவடனக்கே
யுடன்பட்டேயேவற்செய்ய வொக்குமேபலாவிவள்தான்
படபடப்புடனேவேலை பணிந்துமேசெய்வாளோடா.

(கால-வ-ம்) ஓய் இராஜனே? இவளழகைப்பார்த்தால் இவளுக்கென்னுடைய ஆம்பிடையாள் வேலைசெய்யவேண்டி யிருக்குமேயன்றி யிவளெந்தன் ஆத்துவேலை செய்வாளோ சொல்லுங்காணும் பிள்ளாய்.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

நீரிடும்வேலையெல்லாம் நின்றுமேவணங்கிச்செய்வாள்
பாரினிலியாருமெச்சப் பண்புடன்மலர்தொடுப்பாள்
சீரிடுக்களபந்தன்னைச் சிறப்புடனமைப்பாள்பின்னும்
வேறிடம்போகாளையா வீணுரைபுரியாள்காண்பீர்.

(அரி-வ-ம்) சுவாமி? நீரு மற்றெல்லோரு மெச்சும்படி நடப்பாள், களபகஸ்தூரி பூச்செண்டுகள் மெத்தவிநோதமாய் முடிப்பாள், அசல் வீடுபோகாள், வீண்வார்த்தைபேசாள் வேதியரே.

## காலகண்டன் விருத்தம்.

வேலைகள்செய்வாளென்றாய் விளம்புவேன்மன்னாகேளாய்
காலையிலெழுந்தேசாணங் கரைத்துமேதெளித்துப்பின்னும்
பாலைநான்கறக்குமுன்னே பசுத்தொட்டிபெருக்கிச்சாணஞ்
சாலவேதட்டிநெல்லைச் சரியாமற்குத்துவாளோ.

(கால-வ-ம்) ஓய் இராஜனே? காலையிலெழுந்து சாணந்தெளித்து முத்தம்விளக்கிப், பசுக்கொட்டடம்பெருக்கி, முட்டைகள்தட்டி, நெல் லுக்குத்துவாளோ சொல்லும் பிள்ளாய்.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐய்யமாமறையுணர்ந்த தோன்றலேகேட்பீர்சொல்வேன்
மெய்யினையறிந்தேசத்ய மேவிடும்விதிகள்கற்று
ளையமோயுகந்துசொல்லு மருந்தொழிலெலாம்புரிந்தே
யுய்யநீர்மெச்சநாளு முண்மையாய்நடப்பாள்சுவாமி.

(அரி-வ-ம்) சுவாமி இவளோ நீதியுணர்ந்தவள், நீர்சொல்லும்படி யான வேலைகளெல்லாந் தடையின்றிச்செய்து தங்களுடைய மனங்க ளிப்புற நடந்துகொள்ளுவாளையமோ.

## காலகண்டன் விருத்தம்

இல்லறமதனைச்சார்ந்தே யிடுந்தொழிற்றன்னையெல்லாம்
வல்லமையுடனிவள்தான் வணங்கியேசெய்வாளென்றாய்
நல்லதுபிள்ளாய்நீதான் நாடியேவிற்குமொத்தஞ்
சொல்லவேவேணுமிங்கு சுருக்கெனவளிப்பேன்றனே.

(கால-வ-ம்) ஓய் இராஜனே? மெத்த சந்தோஷம், இவளை நீ விற்கு ம்படியான மொத்தத்தைச் சொன்னால், நான்கொடுத்து வாங்கிக்கொள் ளுகிறேன் பிள்ளாய்.

## அரிச்சந்திரமகாராஜன் கவி.

கரிமிசைமேலொரு காளையேறியே
யெறிகவண்விடவது பேகுயரம்பொன்
தருகினீருமே தடைபுரியாமலே
யரிதிக்கிளையமா யளிப்பேனிவளையே.

(அரி-வ-ம்) சுவாமி? ஒருயானையின்பேரில் வாலிபன் ஏறிகவண்டெ றிந்தா லதுபோகுந்தூரம் பொன்கொடுத்தால் உமக் கிவளை அறிதிக் கிளையமாய் விற்கிறேன் சுவாமி.

## காலகண்டன் விருத்தம்.

இப்புவிதனிலென்னாளு மிப்பெருங்கடனைப்பட்டோர்
செப்பவுமொருவராலென் செவியதாற்கேட்டதில்லை

அப்பனேதொகையோமெத்த வாகிலுஞ்சிந்தையில்லை
ஒப்பினேன்கொடுக்கயானு மோதுவாயெவர்க்குத்தானே.

(கால-வ-ம்) ஓய இராஜனே? நீ சொல்லிய மொத்தமோவதிகம், ஆகிலும் யோசிக்க வேண்டியதில்லை, நானுரிடங் கொடுக்கவேண்டியது சொல்லும் பிள்ளாய்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தயவுளமனத்தோயென்றன் தயாபராவின்னருள்போற்றி
யுத்தினிலிருந்தவென்னைப் பாலிக்கவந்தோய்போற்றி
ந்துடன்றாகாய்வந்த நாயகன்றனக்குநீரோ
யப்பின்றிபொருளளித்தே வேதியாயிவளைக்கொள்வீர்.

(அரி-வ-ம்) சுவாமி? என்மனோவியாகூலத்தை நீக்கவந்தநாதா? இந்தத் தரகருக்கு அந்த மொத்தத்தைக் கொடுத்துவிட்டு இவளைக்கைக்கொள்வீர் வேதியரே.

காலகண்டன் விருத்தம்.

வாக்கதுபிசகாமன்னு வழுத்துவேனொன்றுகேளாய் [றேன்
நோக்கேதுந்துயரம்வேண்டாம் நொடிக்குமுன்பொருளைத்தா
தாக்கியித்தரணிமூரந்தர் தான்செயும்வாறுபோல
நேக்குநீமுறிச்சீட்டொன்று நெறியுடனெழுதித்தாராய்

(கால-வ-ம்) ஓய் இராஜனே? நோக்கேதும் விசனம்வேண்டாம், நானப்படியே யிவருக்கு கொடுத்துவிடுகின்றேன், நீ நாட்டின்வாடிக்கைபோ லெனக்கு முறிச்சீட்டெழுதிக்கொடும் பிள்ளாய்.

(அரி-வ-ம்) மகாசந்தோஷ மப்படியே யெழுதிக்கொடுக்கின்றேன், ஓலையுமெழுத்தாணியு மருள்செய்யவேண்டும் வேதியரே,

(கால-வ-ம்) ஓய் தரகரே? உம்மிடத்தில் ஓலையுமெழுத்தாணியுமிருந்தாலிவனுக்குக் கொடுப்பீர்காணும் பிராமணு.

(தர-வ-ம்) இதோ அப்படியே கொடுத்தேனையரே.

அரிச்சந்திரமகாராஜன் ஆசிரியவிருத்தம்.

திங்களுடன்கங்கைமருகொன்றையுந்தும்பையணி
தேவனும்விஸ்வநாதன்
திகழ்பெருகமேவுநகர்காசிவாழய்யராந்
தெரிகாலகண்டருக்கே
தங்கைவளரயோத்தியையாண்டரவிகுல்வேந்தன்
தரணிபுகழ்திரிசங்குமே
தான்செய்தநற்றவப்பாலனுமரிச்சந்திரன்
தவமுனியின்கடனீதவே

முன்கையெனதானநற்குணம்வளருமதிதயன்
மகிழ்ந்தீன்றசந்திரவதியை
மாமுனிதவனேபோற் கரியேறிகவனெறியு
மட்டியரம்பொருள்வாங்கியே
சங்கையைவிலக்கியேயறிதிவிலையாகவென்
சதியாளைமனதொத்துமே
சாக்ஷியம்மந்திரியுந்தரகனுங்காணவே
சாதித்தேன்வழக்கில்லையே.

இப்படிக்கு,

அயோத்தியையாண்ட திருச்சங்குமைந்தன் அரி[illegible]திரன்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயரோக்ஷத்திரேசா யன்பனேசத்தியகீர்த்தி
நொய்யுறுமம த்தோடிந்த நணிமுறிச்சீட்டிலேதான்
கையடிற்றுங்கிச்சா[illegible]ண்கண்டவாறுய்நீங்கள்
மெய்யரோகையைநாட்டி மிகக்களிப்புடனீவீரே.

(அரி-வ-ம்) சுவாமி தரகரே? அப்பாமந்திரி? இந்தமுறிச்சீட்டி லுங்கள் சாக்ஷிகைநாட்டிக் கொடுப்பீர்க ளென்பர்களே.

(தர-வ-ம்) மகாசந்தோஷம், இதோ நான்சாக்ஷியிட்டேன்.

சத்தியகீர்த்தி விருத்தம்.

ஐயோநான்செய்வதென்ன வரகாசிவமேசம்போ
மெய்யொளிதாயைவிற்று மிம்முறிச்சீட்டுக்கென்னை
கையிடச்சாட்சியாகக் கதியெனக்கெழுதினேயோ
மையரவுதனைப்பூண்ட பரமனேகாசிநாதா.

(சத்-வ-ம்) ஐயையோ காசிநாதா? என்தாயைவிற்ற முறிச்சீட்டிற்கு சாட்சியெழுதும்படி யெனக்கு விதித்தாயோ! ஓ தெய்வமே!!

சத்தியகீர்த்தி தரு.

இராகம்-தேசிக சங்கராபரணம், தாளம்-ரூபகம்.

பல்லவி.

காசிநாதனே விட்ட கதியிதுதானே ஓ! (கா)

அநுபல்லவி.

மாசிலாகுணனை மதிதயன்பெற்ற
மாதானவென்றாயை மழுங்குறவிலை செய்ய. (கா)

சரணங்கள்.

என்னக்கொடுமையோ முன் ஏதுவருமையோ
இன்னகர்தன்னி லிவரவர்வேறுற
மன்னரொன்றியாகி மாதும்பிரிந்திட. (கா)

எப்போகாண்பேனோ வுட லென்றிப்பேனோ
தப்பிலியப்பிரமன் தானிவ்வாறுய்விதி
அப்போதெழுதிட வறிவுமிழந்தானோ. (கா)
உடலுஞ்சோருதே என்றன் உதிரமாறுதே
சடன்பட்டாலுமிக் கஷ்டிசெய்வதுண்டோ
விடமுண்டவாவுன் விளையாட்டோவிது. (கா)

சந்திரமதி விருத்தம்.

அப்பனேமந்திரிநீதா னறியாததொன்றுமுண்டோ
மெப்பவென்சாமி துன்பம் நீங்கியவாறுபோதும்
தப்பிலியென்றன் ஜன்மந் தன்னியமாயிற்றன்றோ
வொப்பிநீசாக்ஷிகாட்டி யுறுதியாயளிப்பாய்பாலா.

(சந்-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி? நீ துயரப்படலாமோ, இன்றல்லவோ என் ஜன்மம் பெருமைபெற்றது, நீ துயரத்தைவிட்டு மனதொத்து சாக்ஷிபோடுவாயப்பா.

(சத்-வ-ம்) அம்மணி? இப்படிநேரிடுமென்று ஒருபோதுமறியேனே! ஆ! ஜெகதீசா! (தலையின்மீது கையைவைத்துத் துக்கித்தல்) சி, வெறிமனமே, யாரைவிட்டது விதி, ஆகையால் தாய்சொல்லும் வாக்கியத்தை சிரசிலிட்டு நடப்பாய், சரி, தாயே? தங்கள்சொல்லுக்குமாறுதலுண்டா, இதோ தாயைநீங்கும்பாவியாகிய யானும் சாக்ஷிகைகாட்டிட்டேன்,—அடடா இந்தஞாலந்தனில் இக்கோலம்பார்க்க என்னபாதகஞ்செய்தேனோ தெரிந்திலேன், ஈசா!—சுவாமி? இதோ உமது ஆக்கினைப்படி என் தாயைவிற்ற முறிச்சீட்டில் என்விதியைநொந்து நானும் சாக்ஷிகைகாட்டு இட்டேன் ஆண்டவா.

காலகண்டன் விருத்தம்.

செப்பியவாக்குப்பொய்க்கா செம்மலேநீதானிப்போ
வொப்பியேவரைந்தவந்த வோலையிங்களிப்பாய்பார்ப்பே
னெப்படியாகிலந்த விருடியின்தாகனுக்கே
கைப்பொருளீந்தேயுன்றன் கடனைதீர்ப்பேனப்பா.

(கால-வ-ம்) இராஜனே? நீ எழுதிய சீட்டைக்கொடு, நான் வாசித்துப்பார்த்து உன் கடனைக்கொடுத்துத் தீர்த்துவிடுகிறேன் வேந்தனே

(அரி-வ-ம்) மகாபாக்கியம், சுவாமி? இதோகொடுத்தேன், வாசித்துப்பார்த்து இம்மகானுபாவரை சீக்கிரம் அனுப்பிவைக்கக்கோருகின்றேன், இவர் என்னோடுவந்து வெகுகஷ்டப்பட்டார் சுவாமி.

காலகண்டன் விருத்தம்

அவனியிற்கீர்த்திபோன்ற வண்ணலின்றாகனுக்குத்
தவமுனியனுப்பவந்த தயாபராநக்ஷத்திரேசா

கவலைகொண்டிங்கேமெத்தக் கதறினன்பொருளின்றேரே
னிவனைநீகேட்கொணுதா வியம்புவீரினிவாய்த்தானே.

(கால-வ-ம்) சுவாமி தரகரே ? நோக்கு இந்த அரசன் கொடுக்கவே ண்டியதொகையை நான் கொடுக்கின்றேன், நீர் மன்னனைக்கேட்கப் போகாது வேதியரே.

(தரக-வ-ம்) மகாசந்தோஷம், அப்படியே உமதுசொல்லே எனக் குப்போதும், அப்பா, சனிதொலைந்தது, இனி இவனைப்பொன்னைக்கே ட்கேன். கேட்கேன், சுவாமி.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தவனைப்பொற்பணத்தைத்தண்ட தரகராய்வந்ததிவ்ய
நவகுணக்ஷத்திரேச நாதனேநின்றாள்போற்றி
பவமதைத்தொலைக்கவெண்ணி பாவையைவிற்றமொத்த
மிவருனக்களித்திட்டாரோ வியம்புவீரினிவாய்த்தானே.

(அரி-வ-ம்) ஐயா தரகரே? நான் கொடுக்கவேண்டிய முனிவர்கடன் உமக்குவந்துசேர்ந்ததா தெரியச்சொல்லும் சுவாமி.

தரகன் விருத்தம்.

நீர்வளமோங்குங்காசி நிலையுளகாலகண்டர்
சீர்பெறுமுனிவன்பொன்னைச் செலுத்தினர்கைக்கொண்டே
பார்புகழ்வேந்தேயுற்றன் பாரியாங்கற்பினளைச் [னே
சோர்வின்றியிவர்பின்னேகச் சுருக்கெனவிடையீவாயே.

(தரக-வ-ம்) ஓய் இராஜனே ? எனக்குச்சேரவேண்டியபொன்வந்து விட்டது, இனி உனக்குத்துயரம்வேண்டாம், விஸ்வாமித்திரன் கடனு ம் இப்போதுதான் தீர்ந்துவிட்டது, இனிதாமதிக்காமல் சந்திரமதி யை இவ்வேதியர்பின் அனுப்பித்துக்கொடுப்பாய் இராஜனே.

(அரி-வ-ம்) மகாபாக்கியம், அப்படியே அனுப்பிவித்துக்கொடுக்கி றேன் மகானுபாவா.

காலகண்டன் விருத்தம்.

வேந்தனேயுனக்குவந்த வேதனைத்துன்பமெல்லாஞ்
சாந்தமாய்விலக்கிவிட்டேன் சற்குணியெனுமுன்றேவி
மாந்தையுமகனைக்கூட மனைக்கேகவென்றன்பின்னே
சேந்துமேவருகநீதான் செப்பியேவிடையீவாயே.

(கால-வ-ம்) அப்பா இராஜனே ? உனக்கு வந்தபொல்லாங்கைநீக்கி விட்டேன், ஆனதால் இனி நான்போகவேண்டும், என்பின் இந்தப் பெண்ணையும், இந்தச்சிறுவனையும் அனுப்பிப்பாய் வேந்தனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மாதைநான்விற்றதன்றி மகன்றனைவிற்றதுண்டோ
வேதையாவிந்தமோச மெண்ணிடக்கருத்திற்கொண்டீர்
சூதையேமனதிலிட்டே சொல்வதுமடுக்காதையா
பேதையையழைத்தேசெல்வீர் பிள்ளைநானனுப்பிலேனே.

(அரி-வ-ம்) சுவாமி ? நான் என்பெண்சாதியை விற்றேனல்லால், பிள்ளையைவிற்றேனா! ஏனிந்தமோசமெண்ணங்கொண்டீர், மாதையழைத்துக்கொண்டுபோம், பாலகனை யனுப்பேன் வேதியரே.

காலகண்டன் விருத்தம்.

அனுப்பவுமாட்டேனென்றே யறைந்ததோர்மன்னாகேளாய்
கனப்பசுவதனைக்கொண்டால் கன்றுக்குவிலைவேறுண்டோ
புனைப்பட்டதன்றோநீயும் போக்குநீக்கறிந்திடாமல்
சினுக்கிறாய்வாடிசந்தி சிறுவனோடென்பின்றானே.

(கால-வ-ம்) வேந்தனே ? பசுவைவாங்கினால் அதின்கன்றுஞ் சேர்ந்ததல்லவா, அடிசந்திவாடி ? அடேபயலே ஓடிவாடா ? ஓடிவாடா ? போவோம்.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-முகாரி, தாளம்-சாப்பு.

இப்படிவழக்கதை-யொப்பிநீர்புரிவது
என்னமோ-நான்செய்த-கன்மமோ
கைப்பிடிமாதைநான்-கடனுக்காய்விற்றதல்லால்
காளையையும்விற்றேனோ சொல்லுவீர்
மெய்யை-மெல்லுவீர்.

(அரி-வ-ம்) தேவா ? என்விதியின் கொடுமையால் கடனுக்காகக் கைப்பற்றியமாதை அரிதிக்கிரயமாக விற்றேனேயொழிய, என்குழந்தையையும் விற்றதுண்டா ! இப்படி வீண்வழக்காடுவது நீதியா ! வேண்டாம் சுவாமி.

காலகண்டன் கண்ணிகள்.

இராகம் - தனாசரி, தாளம் - சாப்பு.

சத்தியம்பிசகாமல்-சார்ந்துலகாண்டமன்னா
தகுமோ-கீர்த்தியது வருமோ
நத்திப்பசுவைக்கொண்டா-நற்கன்றுக்குமேவேறு
நல்விலையீவதுண்டோ மன்னவா
வீணாய்ச்-சொன்னவா.

(கால-வ-ம்) ஓய் இராஜனே ? நீ சத்தியம் பிசகாமல் உலகையாண்ட மன்னனாயிருந்தும் இப்படிக்கு நீதிமறந்துபேசுவதழகா ! அடா இ

து தப்பானகாரியமே, அதாவது பசுவைவிலைக்குக்கொண்டால் கன்றுக்கும் வேறுவிலை கொடுப்பாருமுண்டோ! ஏன்மறந்து வீணாய் பேசுகின்றாய்.

அரி—பால்மறந்திட்டகன்றைப்-பசுவுடன்சேர்த்துவிற்றல்
பாரிலுண்டோமுறைதான் சொல்லுவீர்
மெய்யை-மெல்லுவீர்.

(அரி-வ-ம்) சுவாமி? உலகில் பால்மறந்திட்ட கன்றைபசுவுடன் சேர்த்து விற்பாருமுண்டோ! இது தங்களுக்கு தெரியாதா, வேண்டாம் சுவாமி.

கால—மரத்தைவிலையாய்க்கொண்டால்-மன்னுவதின்பிஞ்சுக்கு
மாறுவிலையுமுண்டோ மன்னவா
வீணாய்ச்-சொன்னவா.

(கால-வ-ம்) சரி, சரி, இராஜனே? நாட்டல் மரத்தை விலைகொடுத்து வாங்கினால், அதனது பிஞ்சுக்கும் விலைகேட்பாரும், கொடுப்பாரும் உண்டோ? ஏன்வீணானவார்த்தை பேசுகின்றாய், இது சரியல்ல.

அரி—மரமென்பதியானல்லாமல்-மாதாவாளோநீர்தான்
மார்க்கந்தனையுணர்ந்தே சொல்லுவீர்
மெய்யை-மெல்லுவீர்

(அரி-வ-ம்) சுவாமி? தாங்கள் சொல்லுவதுபோல் மரம் என்பது யானல்லாமல், என்மாதாவாளா! ஆனதால் தாங்கள் சரியானமார்க்கத்தை யனுசரிக்கவேண்டும் நாதா.

கால—வாழ்மனையைவிலையீந்தே-வாங்கிலதினுட்கேணி
வசமாகத்தடையுண்டோ மன்னவா
வேறு-சொன்னவா

(கால-வ-ம்) இராஜனே? நீ ஏதோ தவிக்கிறாய் என்று, முன்பின்பாராமல் ரொக்கங்கொடுத்துவிட்ட தோஷத்திற்கு அப்பளம், வடையை எண்ணெயிலிட்டு பிரட்டுவதுபோல் என்னை உருட்டுமெரட்டு பண்ணுகிறாய், நல்லது இருக்கட்டும், ஒருவீட்டைக்கொண்டால் அதினுள் இருக்கும் கிணறும் சொந்தமல்லவா, இதுதானு அராஜடாத்திய திறமை! ரொம்பவும் மெச்சினேன்.

அரி—மனையடியேனல்லாமல்-மங்கைக்குமந்தமொழி
மாறநீதியுமுண்டோ சொல்லுவீர்
மெய்யை-மெல்லுவீர்

(அரி-வ-ம்) சிரசின்மீது கையிட்டு வருத்தமுறுங்காலையில் அன்னியிஷமேலந்து காத்த தயாநிதியே? நீர்சொல்லும்வாறு மனையென்பது

அடியேனல்லது என்மதாவாளா ! இது என்னவிந்தை ! மெய்ப்பொருளைக் கைப்பற்றுவீர் ஆண்டவர்.

கால—அரசையொருவன்கொண்டா-லதிலுற்றபொருளெல்லா
மவனுக்கேசேர்ந்ததன்றோ மன்னவா
வேறு-சொன்னவா

(கால-வ-ம்) சமயந்தக்கவாறு வாய்மொழியாடுமன்னனே ? ஒருவன் அரசைக்கொண்டால் அதிலுள்ளயாவத்பொருளும்வாங்கினவனுக்குச் சுதந்தரமேதவிர வேறுநியாயமுண்டா, சொல்லும் மன்னுசொல்லும்.

அரி—அரசென்பதானல்லாம-லடாதுமாதுக்குரைக்க
லதின்கருத்தையுணர்ந்தே சொல்லுவீர்
மெய்யை-மெல்லுவீர்

(அரி-வ-ம்) சுவாமி ? அரசு என்பது அடிமையே, என்மாதுக்கு ஒக்கவே ஒக்காது, இதனது கருத்தை நன்ருய் தெரிந்து நடப்பீர் ஆண்டவா.

கால—மகனைக்கண்டேயிவளை-மன்னுவாங்கினேனன்றி
மாதுமெனக்குவேண்டா மன்னவா
வேறு-சொன்னவா.

(கால-வ-ம்) ஓய் அதெல்லாமிருக்கட்டுங்காணும், இச்சிறுவனைப்பற்றியல்லவோ ரொக்கத்தைக்கொட்டிவாங்கினேன், பெண்பாலைநம்பிவாங்கினவன், பேதமைகுணத்தோனென நம்புவாய்மன்னு, நான்வேறு ஒப்பேன், ஒப்பேன், ஐயோ ! ஆரம்பத்தில் இவ்வளவுவருத்தம் நானடைகில், இனிச்செல்லச்செல்ல என்னபாடுபட இருக்கிறேனோதெரிந்தேனில்லையே ! அடடா ! என்ன இப்படிவிருதாவில்கெட்டுவிட்டேன்.

அரி—இதுவுமயனன்று-எழுதிவிதியொக்கும்
இருவரையுங்கைக்கொள்வீர் ஐயரே
வெகு-பொய்யரே.

(அரி-வ-ம்) ஆ ! ஜெகதீசா ! இப்படியும் என்னைப்பிரிக்கவைத்தனையல்லவா ! எப்படி உயிர்வைத்து இருப்பேன் ! ஐயையோ ! நினைக்கும்தோறும் இந்தப்பாவி ஆவியானது மேல்தாவி விணில்போய்விடும்போலுங்காணுகின்றதே ! இதற்கென்னசெய்வேன் ! இப்படியுந்தெரியாமல் கடன்படுவேனு ! சி, வெறிமனமே, ஏன்வீணில் காலங்கழித்து வெறுத்துக்கொள்ளுகிருய், இதுசரியல்ல, ஐயர்மனம்போல்நடப்பதே சரியானமார்க்கம், நீ மனந்துணிந்து பாலகனைதாயுடன் அனுப்பிக்கில் உன்னை பிரிந்த கொடுமையை நினைந்து மனமுருகுங்காலையில் பின்னையின்முகத்தைப்பார்த்தாவது ஒருவாறு மனந்தேருதளவடைவள், ஆனதால் யாதொன்றும் யோசிக்காமல் வந்தவிதியை எண்ணி மன்னியனு

ப்பித்துக்கொடுப்பாய், சரி, சுவாமி ? உமது மனம்போல இச்சிறுவனை யுங்கொண்டேகுவீர், இதோ பாதம் போற்றினே னுண்டவா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மந்திரிகேளாயென்ன மதிமோசம்வந்ததிந்த
தந்திரிவேதியன்றான் தானுரைத்ததுவுங்கேட்டாய்
மைந்தனையனுப்பச்சொல்லி மாதவன்வழக்கெடுத்தான்
தந்திடேன்பொன்னையென்றான் தவறிடிலெதுசெய்வேனே.

(அரி-வ-ம்) அப்பா மந்திரி ? என்னவிபரீதகாலம் ! பாலனை யனுப்பாவிடில் சந்திரவதிவேண்டாவென்கிறார், நானும் வாக்களித்துவிட்டேன், இதற்கு யோசனைசொல்லுவாய் சத்தியகீர்த்தி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

வேந்தையேநமக்குவந்த வினையுடன்சனியுங்கூடச்
சாந்தமேவரத்தொடங்கிச் சார்ந்ததால்மனங்களித்தே
யேந்தலேதாய்பின்பிள்ளை யேகினுலிருவரொத்து
நீந்தியேதுக்கவாரி நிலைமையாய்வாழ்வார்சுவாமி.

(சத்-வ-ம்) மகாராஜனே ? இதுவும் நம்முடையகாலகெதியன்றி வேறல்ல, தாயுடன்கூடப் பிள்ளையையனுப்பினால் தாய் தனக்கு நேரிட்ட துயரை மறக்கவும் வொருகாரணமாயிருக்கும் நாதா

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? நீ சொன்னகருத்துஞ் சரிதான், யானும் ஐயருக்கும் வாக்களித்துவிட்டேன், இதோ அப்படியே யனுப்பித்துக் கொடுக்கிறேனப்பா சத்தியகீர்த்தி.—சுவாமி ? நீர்கோறியபடியே மாதையும் மதனையுங்கைக்கொள்வீர் வேதியரே.

காலகண்டன் விருத்தம்.

வேந்தனேநீதான்சத்தியன் வேந்தனேநீதாநித்யன்
வேந்தனேநீதானுற்றோன் வேந்தனேநீதான்கற்றோன்
வேந்தனேநீதான்மெய்யன் வேந்தனேநீதான்றுய்யன்
வேந்தனேயுனதுகீர்த்தி விளங்கிடும்வாழிவாழி.

(கால-வ-ம்) மகாராஜனே ? நீயே சத்யன் உன்கீர்த்தி சதாவாழிவாழி அரிச்ந்திரமகாராஜனே.—அடா பயலே ? வாடா நாம் ஆத்துக்குப் போவோம் சீக்கிரம், சீக்கிரம்.

தேவதாசன் விருத்தம்.

ஐயருமென்னைக்கூட யழைக்கிறார்வரவேசொல்லி
ஐயனேநீருமென்னை யன்புடன்விற்றதுண்டோ
ஐயருஞ்செய்வழக்கு மடாததால்நானுமிப்போ
ஐயரின்வேலைசெய்ய வடியனும்போகேன்போற்றி.

(தேவ-வ-ம்) என்பிதாவே ? என்னை நீர் விற்றதுண்டா? வேதிய ரக்

கிரமமாயழைக்கிறார், நான்போயவரிடம் வேலைகளைச் செய்யமாட்டேன் தந்தையே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அப்பனேதேவதாசா வறிவுள்ளமகனேகேளாய்
கப்பியேநம்மைச்சூழ்ந்த கடனிருள்தொலைந்ததிங்கே
யொப்பியென்பாலாயன்னை யுண்மையாய்விற்றதில்லை
தப்பிநீமறையோன்வார்த்தை தடைசெயிற்கடன்தீராதே.

(அரி-வ-ம்) அப்பா மகனே? நானுன்னை விற்றதில்லை, இப்பொழுதுன்னையனுப்பத் தடைசெய்தால், கடன்றீராதப்பா கண்மணியே, நீயுன் தாயுடன்கூட போவாயடா புத்திரசிகாமணியே.

தேவதாசன் கண்ணிகள்.

இராகம் - செண்டா, தாளம் - ஆதி.

தாயுடன்கூடவென்னைத்-தான்போகச்சொன்னீருன்றன்
தாளடிகாண்பதெப்போ-ஐயாவே-என்னையா.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-முகாரி, தாளம்-ஆதி.

நேயமாயுன்னிடம்-நித்தம்நான்வருகுவேன்
நீயொன்றுக்குமஞ்சாதே-மகனே-என்மகனே.

தேவ—ஐயரின்வீட்டினி-லடிமைத்தொழில்புரிய
ஆகாதெனச்சொல்லும்-ஐயாவே-என்னையா.

அரி—பையனென்றேயுனக்குப்-பணிசெப்பார்விளையாடி
பண்புடன்வீற்றிருப்பாய்-மகனே-என்மகனே.

தேவ—அடிமைகொண்டவனுக்கே-யருந்தொழிற்செய்யாவிடில்
யடிப்பான்தொழுவிடுவான்-ஐயாவே-என்னையா.

அரி—முஷ்டிவேதியர்போல-மூர்க்கரல்லவிவரு
முனைந்துநீகூடப்போவாய்-மகனே-என்மகனே.

தேவ—தந்தைசொல்வாக்யத்தைத்-தடுத்தற்குமோநாதா
தனையனைநாளுங்காப்பீர்-ஐயாவே-என்னையா.

தேவதாசன் விருத்தம்.

பாலனையுனக்கேமெத்தப் பணியொன்றும்விதிக்காரென்றே
சாலவேயெனக்கெடுத்து சாற்றியகோவேகேளீர்
காலமோநமக்குமிந்தக் காசியிற்பிரிந்துநிற்கத்
தாளடிவிட்டேயேகத் தயங்குதென்னுள்ளமையா.

(தேவ-வ-ம்) தந்தையே? எனக்கிவர் வேலையிடாரென்று சொன்னீர்சரியே, இக்காசியிற்றம்மைப் பிரியவிட்டதும் விதியே, ஆனாலெனக்குப் போகமனம்வரவில்லை யென்பிதாவே என்செய்வேன்.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஜென்மத்தில்செய்ததொல்லை சேர்ந்திடச்சனியன்தொட்டான்
வன்மமாமுனிவன்ருனும் வகையறிந்துருவாய்வந்தான்
கன்மத்தின்வாறுக்கோம் கலங்குதலடாதுமைந்தா
வுன்மனங்கனிந்தேநின்று யுறந்துயரகற்றிக்காரே.

(அரி-வ-ம்) அப்பாமகனே? முன்செய்தவினையானது முனிவனாய் வந்துதலையிட்டது, நீயுன்றாயுடன்சென்று அவனுக்கு வேண்டிய தை ரியஞ்சொல்லிக்கொண்டிருப்பாயப்பா வென்கண்மணியே.

## தேவதாசன் விருத்தம்.

தந்தையேயெனக்காய்மெத்த தவமதுசெய்துபெற்ற
மைந்தனுமெனையுமென்றன் மாதாவைக்காசிதன்னில்
வந்தபின்தாங்கும்பார வன்சுமையிறக்கியாச்சோ
வுந்தனைக்காண்பதெப்போ வுரைசெய்வாயெனதுகோவே.

(தேவ-வ-ம்) பிதாவே? இக்காசியில்வந்தபின் இதுவரையில் நீர்தா ங்கிக்கொண்டிருந்த பெருஞ்சுமையாகிய என்னையுமென்தாயையு மிற க்கிவிட்டீர், இனி யெப்போ தமது பாதத்தை காண்பேனையாவே.

## தேவதாசன் கண்ணிகள்.

இராகம் - முகாரி, தாளம் - ஆதி.

என்னையேயீன்றெடுத்த ஐயாவே! ஐயா! நான்
எப்போதுந்தனைக்காண்பேன் ஐயாவே!
இன்றைக்குக்காசிவந்தே ஐயாவே! நீர்
எங்களைப்பிரிந்தீரோ ஐயாவே!
உலகத்தையாளப்பெற்ற ஐயாவே! என்னை
ஒலேக்குமுறியாய்ச்செய்தீர் ஐயாவே!
பலகலையுணர்வித்த ஐயாவே! என்னை
பாப்பான்பின்னேகச்சொன்னீர் ஐயாவே!
சிம்மாதனத்திருத்தி ஐயாவே! நீர்
சித்தங்குளிர்ந்திடாமல் ஐயாவே!
இம்மானிலத்தோரோச ஐயாவே! என்னை
யீனவடிமைசெய்தீர் ஐயாவே!
சீராகவேவளர்த்தே ஐயாவே! இங்கு
சிறுமைப்படவேவிட்டீர் ஐயாவே!
பாராமலுமையானும் ஐயாவே! தனிப்
பரதேசியாகச்செய்தீர் ஐயாவே!

இன்றைக்குப்பார்த்தவும்மை ஐயாவே! நான்
இனியென்றுகாணப்போறேன் ஐயாவே!
கொன்றைபுனைந்தோனிட்ட ஐயாவே! விதி
குறையிதுவோதெரியேன் ஐயாவே!
தந்தையென்றழைத்தவாய் ஐயாவே! யாரைத்
தானழைப்பது இனி ஐயாவே!
விந்தையாகவளர்த்த ஐயாவே! காசி
வேதியனுக்களித்தீர் ஐயாவே!

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

காலத்தையெண்ணியந்தக் கடவுளை துதித்திடாமற்
பாலகாநீயுமிப்போ பதறியேயழுதன்னீ்ரே
சாலவேநீதிகற்ற சாந்தனேமகனேகூட
மேலதாய்நடப்பாயையர் மெத்தவும்புனிதர்காணே

(அரி-வ-ம்) அப்பா என்னருமைமகனே? நமது காலத்தையெண்ணி காசிநாதனைத் துதித்துக்கொண்டு, ஐயர்பின் செல்லுவா யுனக்கவர் வேலையிடார் கண்மணியே.

தேவதாசன் தரு.

இராகம்-தர்பார், தாளம்-ரூபகம்.

பல்லவி.

போய்வருவேன்-ஐயா நான்-போய்வருவேன்.

அநுபல்லவி.

பொன்னேபெற்ற அண்ணேநற்-பொருளேவாக் கருளேநான் (போ)

சரணங்கள்.

அண்டமெலாந்துதிகொண்டேயிருந்தவென்
ஒண்டவனேகனிவாயா என்
அன்னையுமென்னையும் விட்டுனையொண்டியா
யாக்கினதே சனிமாயா
கண்டம்புகழ்சேவகனே காசிநாதர்நேசவனே
தென்றல்மலர்வாசவனே திகழுநிஜபாஷகனே (போ)

பாதகன்செய்திட்ட காதகத்தாலேநீர்
பரதேசியானீரோ ஐயா-யாரைப்
பக்ஷமாய்தந்தையென் மெச்சிமனதொத்து
பாவியழைப்பது மெய்யா
வேதனையும்விட்டதுவோ வினைத்துயரமற்றதுவோ
பாதகனைப்பெற்றதுவோ பன்னுமக்கேயுற்றதுவோ (போ)

மதலைச்சொற்கேட்டு மிதங்கொண்டமனம்
மாறுபடக்காலமாச்சோ-நாளும்

மாதுபணிவிடைசெய்யவிற்றிருந்த
வன்புமின்றுடனேபோச்சோ
பூதலம்நீரிழந்ததுவும் பொற்கொடிவேறானதுவும்
பாதகனுன்பிரிந்ததுவும் பணிவிடைக்காளானதுவும் (போ)

அருந்தவனைப்புரிந்து மென்றனை
யன்புடனீன்றிட்டமெய்யா-விந்த
அந்தணன்பின்னேநானடங்கிச்சென்றிட
வருள்வாக்களித்திட்டதய்யா
வருந்தலாகுமோநானே வாய்த்தவிதிக்குத்தானே
சிறந்தபாதம்பணிந்தேனே சேவடிநான்மறவேனே (போ)

(அரி-வ-ம்) அப்பா தேவதாசா ? நீதுயரமின்றி சுகமாய்ப்போவாயப்பா. உங்கள் நிமித்தம் காசிநாதன் துணையிருப்பார்.

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-ஆகிரி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஆ! சிவமே! ஐயையோ! சிவமே! (ஆ)

அநுபல்லவி.

பாவிநானென்ன பாவங்கள்செய்தேனோ
பாலனென்கண்முன்னே பதறியழுதிட (ஆ)

சரணங்கள்.

உலகையாளுவனென்றே ஓங்கிற்தவமிருந்து
யுருகிப்பெற்றெடுத்தவென்பாலன்-ஐயோ!
பலதரம்பன்னிப்பன்னி-பதைத்துப்போய்வாறேனென்ற
பாஷையைக்கேழ்க்கவிட்டாய் காலம். (ஆ)

சின்னஞ்சிறுவயதில்-சீரதாய்க்கல்வியுஞ்
செங்கோன்முறையுணர்ந்த சீலன்-ஐயோ!
என்னென்னமோவெண்ணி-யேங்கிஞன்றேங்கிஞ
னித்துயர்பார்க்கவிட்டாய் கோலம். (ஆ)

என்றன்முகத்தைப்பார்த்தே-யேங்கித்தந்தையெனவே
யெண்ணிக்கதறிஞனே லொலன்-ஐயோ!
உன்றனைப்பணிந்தகா-லுற்றபலனேகரி
யுரித்தவாநீயிட்டஜாலம். (ஆ)

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரமதி ? இந்த ஐயர்பின் கூடப்போவாய் இனியே.

## சந்திரமதி விருத்தம்.

பொற்புறுகிளியேமானே பூவையேமயிலேயென்று
கற்பனையிட்டழைத்தே கனிவுடன்பேசுமந்த
வற்புதமொழிகளின்றே டகன்றதோதெய்வங்கூட
சற்பனைசெய்ததோநான் சகிப்பனோபிராணநாதா.

(சந்-வ-ம்) அடிமானே ? தேனே ? மயிலே ? கிளியே ? பூவையே ? மருவே ? நாயகமே என்று விதவிதமாகப் பெயரிட்டழைத்து முகமலர்ச்சியோடு பேசுகின்ற என்சுவாமி ? இன்று உம்மைப்பிரியலாச்சுதா ! இனி யெக்காலத்தி லுமது திருமுகத்தைக் காணப்போறேன் பிராணநாதா.

## சந்திரமதி தரு.

இராகம்-ஆகிரி, தாளம்-சாப்பு.

பல்லவி.

எப்படிப்பிரிவேன்-என்சுவாமி யுமை-எப்படிநான்பிரிவேன்.

அநுபல்லவி.

இப்படியும்பாவி யெழுதியிருந்தானோதான்
கைப்பிடிக்கணவரின் கழலடிவிட்டுநான் (எ)

சரணங்கள்.

வேந்தர்மனைவிகளும் வேண்டித்தொழில்செய்வாரோ
விந்தையென்றென்வாழ்வை விரும்பித்தவஞ்செய்வாரோ
சாந்தமோருருவான சத்யரேவேறுனீரோ
தையலாளைவிட்டுத் தானென்றியாய்ப்போனீரோ. (எ)

உம்மைப்பிரிந்துமண்ணி லுயிருடனிருந்திட
ஓகோகோவென்னகால முற்றதுபிரிந்திட
நன்மைசெய்தாற்குத்துன்பம் நாடுமோதெரிந்திட
நாயகரேகிலேசம் நாட்டுதேவருந்திட. (எ)

என்பிராணநாதாவும்மை யென்றைக்கினிகாண்பேன்
ஏங்குதென்னுடலாவி யெவ்விதம்நான்சகிப்பேன்
நன்னடிகள்பாராமல் நானெப்படித்தரிப்பேன்
நாதாவுமக்குதவி நாட்டிலாரென்றிருப்பேன். (எ)

அரைக்கணமென்னைவிட் டகன்றிருந்த நாளுண்டோ !
ஆளனன்றியேமாது அவனியில்வாழ்வதுண்டோ !
மறையவனுக்குத்தொண்டு மானனேநானின்றே
மனதிற்றுயரம்வேண்டாம் மாறலுந்தீதன்றே (எ)

(சந்-வ-ம்) சுவாமி ? அடியாளை யாட்கொண்ட பாதாம்புயங்களைவிட்டு எப்படிப்பிரிவேன் சுவாமி.

(அரி-வ-ம்) அ ! என்னகாலம் ! ! !

## சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-துஜாவந்தி, தாளம்-ஆதி.

விதியின்வசமோவிதுவே ஓ! பிராணநாதா!
வேறுபடவந்ததுவே ஓ! பிராணநாதா!
சதியோமுனியாலிதுவே ஓ! பிராணநாதா!
சரியோதேவர்க்குமதுவே ஓ! பிராணநாதா!
உம்மைப்பிரிந்தென்றுமே ஓ! பிராணநாதா!
உண்டறியேனென்றுமே ஓ! பிராணநாதா!
தம்மையடுத்தகன்றுமே ஓ! பிராணநாதா!
தான்வேறானேனின்றுமே ஓ! பிராணநாதா!
பாதகியுமென்னைப்போலவே ஓ! பிராணநாதா!
பாரிலுண்டோதான்சாலவே ஓ! பிராணநாதா!
வேதனைத்துயராற்றுமுவே ஓ! பிராணநாதா!
வெள்ளாட்டியாகிவாழுவே ஓ! பிராணநாதா!
சத்தியம்நிறுத்தக்காருமே ஓ! பிராணநாதா!
சாயுச்யமடையப்பாருமே ஓ! பிராணநாதா!
நித்தியமல்லவேதேறுமே ஓ! பிராணநாதா!
நிலையிலிருப்பீர்நீருமே ஓ! பிராணநாதா!
நீதிமானென்னவேமாந்தரே ஓ! பிராணநாதா!
நேமமாய்த்துதிப்பார்சாந்தரே ஓ! பிராணநாதா!
பாதியாமதியோன்வேந்தரே ஓ! பிராணநாதா!
பதமாயருள்வான்காந்தரே ஓ! பிராணநாதா!

## சந்திரமதி விருத்தம்.

பஞ்சணைமீதிற்பாதம் பட்டிடில்வருந்துமென்றே
யஞ்சலிகரத்தாற்றாங்கி யருமையாய்மடிமேல்வைத்த
நெஞ்சமுமறந்துபிள்ளை தன்னையுந்துறந்துநீரும்
பஞ்சையானீரோவெங்கள் பாவத்தான்முநியானோமே.

(சங்-வ-ம்) சுவாமி? என்பாதம் பஞ்சணைமீதிற்பட்டால் வருந்துமென்று, அரவணைத்த என் துரையே! இப்போது என்னையு முமது ஆசைமகனையும் பிரிந்து பஞ்சைபோலானீரோ, இதுவுங்கதியா என்கோவே.

## சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-சாப்பு.

என்றுநாம்பிரியோமென்றே யெண்ணியேயிருந்தோமையோ!
விந்தவிதிவந்ததேதான் மன்னவரே!

இன்றுஇந்தகாசிதனில் ஏந்தலேநாம்வேறாக
விதுவுமென்பாக்கியந்தான் மன்னவரே!
வேதியருக்கடிமையாய் வேந்தரேயுமைப்பிரிய
விட்டகதியையுரைப்பீர் மன்னவரே!
பாதிமதிதானணிந்த பரமனருளிதாமோ
பசுமறவாதிருப்பீர் மன்னவரே!
கன்றைப்பிரித்துப்பசு கதறப்பால்கறந்தேனே
காரணமெதுவாமோ மன்னவரே!
கொன்றைதும்பையுமணி கோமலனுமகிழ்ந்து
கொடுத்தபதியிதுவாமோ மன்னவரே!
கவிவாணர்தமைக்கண்டு கருதிமதித்திடாமற்
கடுத்துரைசெய்தேனோநான் மன்னவரே!
புவியேற்றும்விசுவேசன் பொறுமையுறவளித்த
புதுமைத்தொழிலிதோதான் மன்னவரே!

சந்திரமதி விருத்தம்.

ஐயருக்காளராக வடியாளுமகனோடேக
ஐயரேயன்றுசெய்த வரும்பழிப்பயனிதாகும்
ஐயன்றனெழுத்தைமீற லாகுமோவவனிமாந்தர்
ஐயரவற்றுவேக வடியாளுக்கருளீர்வேந்தே.

(சந்-வ-ம்) சுவாமி? பிரமனெழுதியதைமீறப்போகாது, இன்று உம்மைவிட்டுப்பிரிந்து இந்த வேதியரினடிமையாகித் தொழில்செய்யுங் காலம்நேரிட்டது விடைகொடுத்தனுப்பும் சுவாமி, நானெப்படிப்பிரிந்துபோவேன், என்னுசைமணவாளரே.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-சாமா. தாளம்-ரூபகம்.

அன்னமேநான்தொட்ட சொன்னமேநீமெத்தத்
துன்பப்படப் போமோ
அறமாமோ தரமாமோ
ஆறையோ-மனந்தேறையோ-மனந்தேறையோ-தே-தே

(அரி-வ-ம்) அடி அன்னமே? இப்படியும் துயரமுறப்போமா, மனந்தேறுவாயடி கண்ணே.

சந்.—ஆகமவேத யோகவஜ்ஜிர
போககுணபதியே
அணிமதியே - மணிநிதியே
ஆசையே-குயி-லோசையே-குயி-லோசையே-ஓ-ஓ.

(சங்-வ-ம்) ஆ! என்பிராணவல்லபா? ஆகமவேதபுராணங்கள் எங்கமறக்கற்றுணர்ந்தயோகவஜீகரா? என்னசெய்வேன் என்மனதைத்தேற்ற ஒருமார்க்கமுங்காணுதவளாக இருக்கின்றேனே, ஆ! காதா.

அரி.—என்னைமணந்துமே யுன்னைப்பெற்றதந்தை

அன்னைதனைமறந்தாய்

ஏதவறிந்தாய் - மாதுபிரிந்தாய்

ஏற்றுவாய்-சிவம்-போற்றுவாய்-சிவம்-போற்றுவாய்-போ-போ.

(அரி-வ-ம்) அடிமாதே? என்னை மணந்தபின், உன் தாய்தந்தையர் ஆசைமறந்து என்றால் என்ன அறிந்தாய், வேண்டாம், வேண்டாம், இனி சிவனேகதியென்று நம்பி போற்றி யேற்றுவாயடி கண்ணே.

சங்.—அண்டமெலாம்புகழ் தண்டபராயெனைக்

கொண்டமனோகரனே

அதிபரனே - மதிதரனே

ஆளனே-மண-வாளனே-மண-வாளனே-வா-வா.

(சங்-வ-ம்) ஆ! என்பத்தாவே? உலகமுழுதும் புகழ்கொண்டோங்க கையிற்செங்கோல்பிடித்து நீதிவழுவாமல், அரசாண்டமன்னனே உமது பாதமேதுணையென நம்பியிருந்த அடியாளுக்குப்பிரமன் என்ன துணிவுகொண்டு இப்படிப்பிரியவைத்தான்! தெரியவில்லையே! உஸ், (தாழ்விழல்.)

அரி.—பத்தினிமார்களில் முற்றியபாவையே

இத்திக்குந்தேன்மொழியே

பதிகிளியே - மதியளியே

பாக்கியே-வாறே-ஞேங்கியே-வாறே-ஞேங்கியே-ஓ-ஓ.

(அரி-வ-ம்) உலகில் பதிவிரதநோன்புபூண்டொழுகும் பத்தினிமார்களிற்சிறந்த பேருங்கீர்த்தியும்பெற்ற உத்தமகுணத்தாளே? நீ இந்த ஐயருடன் மனமொத்துச்செல்கில், சமயம்தக்கவாறு உன்னைக்கண்டுவருவேனடி கோதா. அ! ஆ! என்னகாலம்!

சங்.—அன்னைதந்தையாசை தன்னைமறந்திட

என்னைவைத்தலோலனே

அனுகூலனே - தனுசீலனே

அன்பனே-மன-இன்பனே-மன-இன்பனே-இ-இ.

(சங்-வ-ம்) என்னை அரியதவம்செய்து பெற்ற தாய்தந்தையரின் ஆசையை, நீர்கைப்பிடித்த நாள்முதல் மறக்கச்செய்து பத்தா அன்பையே மேலெனப்புகட்டிய லோலனே! என்மனோபிஷ்டப்படி நடந்த அனுகூலனே? என்னன்பனே! ஏன்னசெய்யப்போறேன்! ஆ! ஜெகதீசா! காரும், காரும்.

வந்து கண்டுவருவேன், துயரம்வேண்டாம்.

அரி.—உன்னைப்பிரிந்திட முன்னமெனக்குநீ
　　சொன்னமொழிவிடுத்தே
　　உளங்கடுத்தே - வளர்ந்தடுத்தே
　உரைகிறாய்-ஏன்-கரைகிறாய்-ஏன்-கரைகிறாய்-உ-க.

(அரி-வ-ம்) அடி சந்திரவதனா? பத்தாவுக்குவந்த துயரை பத்தினி தாங்குபவளே, உத்தமியென்றும், இப்போது இக்கடனுக்கு என்னை விற்றுக்கொடுப்பதே மேன்மைதங்கிய மார்க்கமென்றும், நீ பலவாறு எடுத்தோதிய நீதியைபற்றிவிற்றேனே ஒழிய வேறொன்றுமில்லையே! அதைவிட்டு, என்மீதுவைத்த அன்பின் மிகுதியால் இப்படியும் மனந் தளரப்போகுமா! வேண்டாமடி கண்ணே.

சந்.—மாரனைப்பழிக்குந் தீரனேஜீவவுத்
　　தாரனைபரனே
　　மணிகரனே - பணிவரனே
　மன்னனே-மைக்-கண்ணனை-மைக்-கண்ணனே-உ-க.

(சந்-வ-ம்) ஆ! துரையே? என்னை விற்றதினால் ஒருபோதும் வருந்தமாட்டேன், ஆனால் உம்மைப்பிரிவதை என்மனமானது இன்னவிதமாகத் தேறுதல்படுவதற்கு யாதொரு முகாந்திரமுங்காணாதவளாகத் தத்தளிக்கின்றேன் மாரனை நிகரொத்த மன்னவரே.

அரி.—ஆவியுள்ளமட்டுந் தேவிகேளுன்னையிப்
　　பாவிமறப்பதுண்டோ
　　அறிவுண்டோ - குறிகண்டோ
　அப்பவும்-வருவே-னப்பவும்-வருவே-னப்பவும்-எ-எ.

(அரி-வ-ம்) அடி கற்புக்கரசியே? என்முடி மண்மீது சாய்ந்து, ஆவிபோகுமளவும் உன்னையும், பாலனையும் மறப்பதுண்டோ? அடிகண்ணே? சமயவாறு அப்போதைக்கப்போதுவந்து பார்த்துவாறேன், நீகிலேசம் விடுவாயடி கற்புக்குவித்தே.

சந்.—சத்தியமாதுமே நித்தமும்வாழ்த்திடும்
　　உத்தமவொய்யாரா
　　சதிமாரா - ரதிவீரா
　சார்வையோ-எனைச்-சேர்வையோ-எனைச்-சேர்வையோ-சே-சே

(சந்-வ-ம்) ஆ! பிராணநாதா? பிறரால் சத்தியமாதென்று என்காதால் கேள்விப்பட்ட அடியாள் நித்தமும் தங்கள் பாதமே சாயுச்சிய பதவி தருமென நம்பியிருந்த எனக்கு அடிக்கடிவந்து பாததரிசனம் கொடுத்து ஆள்வீர் துரையே.



அரி.—உன்னைப்பிரிந்தாலு மன்னமேயன்பது
என்னைவிட்டுப்போமோ
உறமாமோ - அறமாமோ
உய்யுவேன்-கவனஞ்-செய்யுவேன்-கவனஞ்-செய்யுவேன்-செ-செ.

(அரி-வ-ம்) அடிமாதே? சனியன்கோளால் உன்னைப்பிரிந்தாலும், உன்மீது என்மனதினிடத்துவைத்திருக்கும் அன்பானது ஒருக்காலும் என்னைவிட்டு நீங்காதடி சொர்னமே, அப்படி மறக்கில் தர்மமாகுமா! தைரியப்படுவாயடி தேனே.

சந்.—என்றும்பிரியாம லின்றுபிரிந்திதோ
நின்றேன் விதிவசமோ
எதுவசமோ - விதுவிசமோ
எப்பவோ-கண்ட-திப்பவோ-கண்ட-திப்பவோ-இ-இ

(ச-ந்-வ-ம்) ஆ! காசிவிஸ்வேசா! என்பத்தாவைத்தொட்டநாள்முதல் இன்னிமிஷம்வரையில்பிரிந்ததேயில்லை, அப்படியிருக்க இப்போது என்னுயகரைப் பிரியுங்காலம் நேரிட்டதே! இதுவும் விதிவசமா! ஏன்செய்வேன்! கருணாகரக்கடவுளே.

அரி.—பிரமனெனும்பாவி மர்மத்தெழுதிய
கர்மத்தினாற் பிரிவேன்
பெண்ணேமறவேன் - கண்ணேயிறவேன்
பேதையே-என்கோதையே என்-கோதையே-கோ-கோ.

(அரி-வ-ம்) பெண்ணே? சதுர்முகன் மர்மத்தையிட்டு நமது கர்மத்தையொட்டி யெழுதிய விதியாயிருந்திடினும், உன்னை ஒருக்காலும் மறந்து பிரியேன், நம்புவாயடி கானக்குயிலே.

சந்.—சப்பிரமஞ்சத்தில் கப்பித்தனிமொழி
செப்புவதும் போச்சோ
சதியாச்சோ - விதிவாச்சோ
காமியே-என்-காமியே-என்-காமியே-கா-கா.

(சந்-வ-ம்) சரி, பிராணநாதா? சப்பிரமஞ்சத்தின்மீது நாம்மனமொத்து மகிழ்ந்து ஆடிப்பாடிய குலாவலெல்லாம் இன்றுடன்போச்சே! இதுவும் விதிவசமா!

அரி.—அடிக்கடியுன்பாற் குடிக்கொழுந்தேசொல
விடித்திட வாறேன்
அன்புமீறேன் இன்புமாறேன்
அன்னமே-பசுஞ்-சொன்னமே-பசுஞ்-சொன்னமே-சொ-சொ.

(அரி-வ-ம்) அடி மதியவன் பெற்றெடுத்த கண்ணே? நீ இருக்கும் இடத்தேடி அடிக்கடி உன்னைநாடி அன்புமிகுந்து இன்பமேமேவிட்டு வந்து கண்டுவருவேன், துயரம்வேண்டாம்.

சந்.—அன்னமேகிளியே சொர்ன்னமென்றழைக்கும்
உன்னதமும் போச்சோ
அசையேச்சே - வசையாச்சே
ஆனீரே-வேறு-போனீரே-வேறு-போனீரே-போ-போ.

(சந்-வ-ம்) ஆ! என் பத்தாவே? என்னை அதியுன்னதமாக அன்னமே, கிளியே, மானே, தேனே, பெண்ணே, குயிலே, மயிலே என்று வண்ணப்பெயரிட்டழைக்கும் வார்த்தைகளின்றுடன் நீங்கிற்றல்லவா அல்லது நாமிருவருமிருக்கும் ஒற்றுமையைக்கண்டு மனந்தாளாமல் யாராகிலும் என்னசெய்துவிட்டார்களோ! ஏதுந்தெரிந்திலேன்!

அரி.—இந்தவிதியன் தந்திடவும்பாவி
எந்தமனங் கொண்டான்
ஏதுகண்டான் - தீதுஉண்டான்
ஏங்காதே-துய-ரோங்காதே-துய-ரோங்காதே-ஓ-ஓ.

(அரி-வ-ம்) அடி சந்திரவதனு? நீ சொல்லும் வார்த்தைகள் யாவற்றும் வீணே, அதாவது அந்தப்பாவியாகிய நான்முகன் நமக்கு ஏககாலத்தில் ஓரேவிதியாயமைக்க என்ன துணிவுகொண்டான் பார்த்தனையா! மேலும் பின்னுக்கு அவன் பங்கப்பட்டேபோவான், ஆனதால் நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம் மாதே.

சந்.—பக்குவமறிந்து தக்கபடிக்கன்னம்
புக்குபவராரோ
பணியாரோ - மணிவேறே
பாஷியே-நான்-தோஷியே-நான்-தோஷியே-தோ-தோ

(சந்-வ-ம்) பிராணநாதா? காலமறிந்து உமது மனம்போல் அன்னம்படைத்து ஆதரிப்பவராரோ தெரிகிலேன்! பசிநோய்வருங்காலையில் என்னசெய்யப்போகிறீர்! ஐயோ! ஒருவிஷயமாயிருந்தால் மனந்துணிவுகொள்ளலாம், பலசங்கையாயிருக்கின்றதே! நாதா.

அரி.—சத்தியமுனைக்கே வித்தாயுதித்திட்ட
வுத்தமப் பெண்ணுளே
சதியாளே - விதிகேளே
சம்புவே-சதா-நம்புவே-சதா-நம்புவே-ந-ந.

(அரி-வ-ம்) அடி சத்தியம் என்னும் பொருளுக்கு ஓர்வித்தாயுதித்த மங்கையர்க்கரசியாளே? எவ்வுயிரையுங் காக்கும் ஈசன் ஒருவனிருக்கின்றானல்லவா, அவ்வுயிரில் யானும் ஒன்றெனத்தீர்மானித்துவிடுவாய், மேலும் கல்லுக்குளிருக்குந்தேரைக்கும், முட்டைக்குளிருக்குங் கருவிற்கும் ஜெகதீசன் படியளக்கவில்லையா, ஆகையால் தீர்க்கயோசித்து தைரியப்படுவாய் பெண்ணே.

சந்.—இன்னமெப்போதென்றன் மன்னவுமைக்காண்பேன்
என்ன விடைதாரீர்
எனைப்பாரீர் - வினைத்தேறீர்
ஈசனே-என்-னேசனே-என்-னேசனே-நே-நே.

(சந்-வ-ம்) ஆ! ஈசனுக்கொப்பாகிய நேசனே? உமது திருமுகத்தை எப்போதுகாண்பேன், தெரியவில்லையே! இப்படியும் அமைந்ததல்லவா! அ! இஞ்ஞாலந்தனில் என்னகோலம் அமைக்கப்பட்டோம்!

அரி.—எனக்கேமாலையிட வுனக்குமேயிவ்விதி
எழுதியிருந்தான்பாவி
என்றன்றேவி - பங்கமேவி
எண்ணாதே-துயர்-நண்ணாதே-துயர்-நண்ணாதே-ந-ந.

(அரி-வ-ம்) அடி அன்னமே? எனக்கெனமாலை உனையிட எழுதினவன் எவனோ, அவன் கண்டிப்பாய் பாவியாவன், ஆனதால் நீவந்த துயரைக்குறித்தும் இனியேது துயர்வரினும் மனங்கலங்காமல் தைரியத்துடன் துயரைவிடுவாய் கோதே.

(கால--ம்) ஓய் ஓய் இராஜனே? இதென்னகாணும், வேடிக்கை செய்கிறாய், மெத்த நேரமாய்விட்டது, எனதாம்பிடையாள் உருமைவைவாள், இவளை நிறுத்திக்கொள்கிறாயா? ஓதுங்காணுமரசே?

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? ஐயர் மெத்தநேரமாயிற்றென்று முகங்கடிந்து நிற்கிறார், நாமுன்னுக்குச்செல்லலாம் வருவாயப்பா.

(சத்-வ-ம்) அரசே? நாம் இவ்விடமிருக்கவிருக்கத்துயரம்திகரிக்கும் நீருரைத்தபடி செய்வதே யுத்தமமென்வேந்தே.

(அரி-வ-ம்) ஆனால் வருவாயப்பா மந்திரி (இருவரும் விலகல்)

சந்.—இன்னமொருதரம் மன்னவுன்முகத்தைக்
கண்ணாற்பார்த்துப்போறேன்
இனிவாறேன் - கனிதேறேன்
ஏந்தலே-மறவா-வேந்தலே-மறவா-வேந்தலே-வே-வே.

(சந்-வ-ம்)—(காலகண்டருடன் சந்திரமதியும்பாலகனும் தொடர்ந்து செல்லுகையில் அரிச்சந்திரமகாராஜனிடம் சந்திரமதி யோடோடியும் வந்து அதிதுக்காக்கிரந்தளாகி வியசனமுறல்) என்னை சதா உமது மனதினிடத்தே அன்புகூர்ந்தாதரித்த அரசரேறே? இன்னமொருதரம் இந்தப்பாதகியாகிய யான்கண்குளிரப்பார்த்துப்போறேன் சற்றுதயவு செய்து என்முன் திரும்புவீர், ஐயையோ என்னகொடுமை!

அரி.—வாக்குநிலைக்கவும் யோக்கியனுக்கவும்
பாக்கியம் நீயளித்தாய்
வரந்தரித்தாய் - கரங்குவித்தாய்
வாழிநீ-பிராண-தோழிநீ-பிராண-தோழிநீ-தோ-தோ

(அரி-வ-ம்) அடி சந்திரவதனு? ஏனிப்படி அடிக்கடிக்குத் துயரங் கொள்ளுகிறாய், வேண்டாம், வேண்டாம்; இப்போது என்வாக்கை நிலைக்கவைத்து, மகாசன்மானியாக்கி, என்னையாவரும் புகழும்படிச்செய்த ஆணிமுத்தே? அடி பிராணவல்லபி ? நீ சதா வாழி, வாழி.

சந்.—நத்தியென்கரத்தை பற்றியகைக்கொரு
முத்தமிட்டுப்போவேன்
நாடித்தாவேன்-கூடிவாவேன்
நாதனே-பொற்பாதனே-பொற்பாதனே-பா-பா.

(சந்-வ-ம்) பத்தாவே ? மாலைசூட்டிய நாள்தொட்டு, இன்னிமிஷவரையில் என்கரத்தைப்பற்றிய உமது திருக்கரத்திற்கு ஒருமுத்தமாகிலு மிட்டுப்போறேன், சற்று தயவுசெய்யவேண்டும் துரையே, (அரசன்கரத்திற்குச் சந்திரமதி முத்தங்கொடுத்தல்.)

அரி.—சின்னக்குமாரனையுன்னிச்சுகமாக
வன்னமே நீகாப்பாய்
சீர்சுரப்பாய்-பேர்சிறப்பாய்
செல்லுவாய்-சுபஞ்-சொல்லுவாய்-சுபஞ்-சொல்லுவாய்-சொ.

(அரி-வ-ம்) அடிமாதே? நீயும், நானும், இங்ஙனேநின்று வருத்தமுறுவதில் என்னபிரயோசனப்போகிறோம், ஆனதால் விதியையெண்ணி உன்னைவாங்கிய இந்த ஐயருடன்சென்று அங்கு இவராலும், அல்லது இவரது தேவியாராலும் இட்டபட்டவேலைகளை அதிஜாக்கிரதையோடு செய்வதுடன், நமது குமாரனை அதிமேன்மையுடன் காப்பாயடி சொர்னமே.

சந்.—ஆதுலர்மாதவ ரோதுவோரேற்றிடும்
பாதமதைப் பணிந்தே
னடியணிந்தேன்-முடிகுனிந்தேன்
அண்ணலே-சுபம்-வண்ணலே-ஜயம்-வண்ணலே-வ-வ.

(சந்-வ-ம்) துரையே ? ஆதுலர், மாதவர், ஓதுவர் ஏற்றிடும் உமது பாதமதை என்முடிகுனிந்து இதோபணிந்தேன். ஏ ! உமாமகேஸ்வரி ? எனதுபத்தா, எத்திசைநோக்கிச் சென்றிடினும், யாதொருவருத்தமுறாமலும், சத்தியம்பிசகாமலிருக்க வரந்தந்து காப்பாய்தேவி.—நான்போய்வரவா ! என்னுசை மணவாளா !

(அரி-வ-ம்) பெண்ணே ? ஏனிவ்விதமாய் துயரங்கொள்ளுகிறாய், காசிநாதனருளை நாடுவாயடிகண்ணே.

## சந்திரமதி அகவல்.

ஏந்தலேயயோத்தி யெழிலுடனாண் ளோ
சாந்தனேயிதுவுஞ் சனியன்றிக்கோ

சள

மதிதயனெனக்காய் மனமதுவுரு இ
பதிதனைக்கோறி பாக்கியமடை ய
வெகுதவம்புரிந்தே வேந்தனெரிஷிக ளா
லகுதிகளோம மனைத்தையுஞ்செய வே
மான்மழுவேந்து மறைமுதலோனு ந்
தானமர்ந்தொருபெண் தாலியைத்தாங்கி யே
பிறப்பனனுனக்கே பேருநற்கீர்த்தியு ம்
சிறப்பொடுமென்றே செப்பியேசிவனு ம்
தாலியுண்டென்று தானெவனுரைக்கி ன்
பாலியைப்பெண்டாய் பண்புடனளியெ ன
நானுமுதித்தே காளொருமேனியாய் த்
தானுமேவளர்ந்தே தைலர்க்குரி ய
மங்கைப்பருவ மடைந்திடக்கண் டே
சங்கையில்லாமலே சாற்றுவேன்றந் தை
சுயம்வரமென்றே சூட்டிடவோலதா ன்
நயமுடனீர்வர நாடினேன்பரத் ந்தை
மன்னுதிமன்னரும் மகுடவர்த்தன ரு
மென்னுசையாலே யேங்கிவந்திருக் க
தோழியுமவரவர் தோள்வலுவீரமு ந்
தாழ்ந்திசைபன்ன தமியனுமுணர்ந் தே
யுமதுநல்லுறவு முராமுளபெருமையு ஞ்
சமமுடனிருசெவி சார்ந்திடக்கேட் டே
னனந்தமாகி யங்குற்றவே ளை
மானனேநீர்தான் மங்கையின்கழுத்தி ல்
தாலியுண்டென்று தயாபராவுரைக் க
மேவிதுசமயமெனக்களிப்பும் றே
மணமாலைதனை மகிழுடனும தா
கணமுளோர்வாடக் கழுத்தினிலணிந்தே ன்
தேவர்களாசி தீற்றினார்முனிவ ர்
பாவகதுலைந்திட பாவலர்வாழ்த்தி ஞ
ரதமுந்தலிதுல்லை யடியாளுநீரு ம்
சதிருடன்வாழ்ந்தே சகலருமேற் ற
விருந்ததோர்சுகத்தை யேற்காமலயனு ம்
வருந்திடமனமு மன்னனோகாசிபி ஸ்
பிரித்தனன்யாவி பேன்தகர்ன்வேறு ய்

தரித்திரமுறவே தயாபராநீரும்
வேறுவேறாக விதிவந்ததையே
தேறுதலுமக்கே தீட்டுவேராரோ
வுமதுநற்பணிவிடை வொதுக்கினான்வேதியர்
தமதடிபணியத் தந்ததேதெய்வம்
விடைதருவீரிவ் வேதியருடனே
கடைமனையேகக் கழலடிகதியே.

**அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.**

இராகம்-தனுசரி, தாளம்-சாப்பு.

ஏனிந்தக்கலக்கங்கண்ணே
ஏ! மங்கையர்க்கரசியாளே. (ஏ)
நீ-தானிந்தமார்க்கஞ் சொல்லி - பின்
தயங்கத்தகுமோ மெல்லி (ஏ)
பெற்றபாலனுங் கூடவே - உன்
பேதமையகன்றே யோடவே (ஏ)
இந்த-வேதியருத் தமரோ - உனை
வினையணுகாது பாரோ (ஏ)
நீ-சத்தியம்நிலைக்க மாதே - நிதி
சாம்பசிவத்தைக் கோதே. (ஏ)

**சந்திரமதி விருத்தம்.**

அப்பனைசத்யகீர்த்தி யன்புள்ளபாலாகேளாய்
இப்பவேயடிமைகொண்ட விறைவன்பின்னுனும்போறேன்
கப்பிய துயரையெண்ணிக் கணவரின்கையையிதோ
வொப்பியுன்கரத்திலிட்டே னுண்மையாய்க்காப்பாய்மைந்தா.

(சங்-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி? கவுசிகன் சர்ப்பனையா லிக்கதிநேரிட்டது, நான் வேதியருடன்செல்லுகின்றேன் இதோ என்னுடைய பத்தாவின் கையைப்பற்றி யுன்கையிற்கொடுத்தேன், கூடவேயிருந்து காப்பாயப்பா மந்திரி.

**சத்தியகீர்த்தி விருத்தம்.**

அம்மணிநீர்தான்சொன்ன வாக்கினைமீறமாட்டேன்
அம்மணிநம்மையிவ்வா றயன்பிரித்திட்டான்பாவி
அம்மணிபாசரைவிட் டணுவேனுமகலமாட்டேன்
அம்மணிபாலன்றன்னை யன்புடன்காப்பீர்போற்றி.

(சத்-வ-ம்) என்னைவளர்த்ததாயே? தங்கள்வாக்கை மீறேன், தேவதாசனை பத்திரமாய்க் காப்பீரொன்னம்மணி.

(சங்-வம்) சரி, இனி போய்வருகிறேன், என்னாசை மணவாளரோ? அடியாள்செய்த குற்றங்களிருந்தால் மன்னித்து அடிக்கடி யுமதுபாத தரிசனங்கொடுப்பீர் பத்தாவே, சரணம் சரணம் சரணமென்கோவே.

## அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

என்னவிதியென்றன்விதி மன்னனாய்ப்பிறந்தபலன்
இட்டதே-யெனைத்-தொட்டதே
பன்னகபூஷணாகாசி யண்ணலேயென்னுடலது
பற்றுதே-துயர்-நற்றுதே.
வேணப்பணிதாதிமார்கள் தோணச்செயவீற்றிருந்த
வேந்தியை-குண-சாந்தியை
நாணமுற்றவேதியற்கு காணடிமையாகச்செய்தேன்
நத்தியே-விதி-பத்தியே.
மாதுமெனைக்கண்டேயழ தீதமுனிமகிழவு
மாச்சுதே-சுகம்-போச்சுதே
ஏதுஇனிசெயப்போறேன் வாதுதரகன்சிரிக்க
இட்டையே-சனி-தொட்டையே.
தொண்டுவேலைசெய்யவுமே கண்டுகண்டேவிற்கச்செய்தாய்
தோகையை-என்-வாகையை
திண்டுமஞ்சமுற்றமேனி குண்டுபோலுருளவிட்டாய்
தீங்கதோ-மன-வாங்கதோ.
வேறுபடவெங்களுக்கே யாருடையசாபமோதான்
வித்தனே-மனச்-சுத்தனே
பேருபெற்றேவாழ்ந்ததற்கோ ஆருக்கெனையாளாய்ச்செய்தாய்
பித்தனே-யருள்-நித்தனே.
வேதியர்க்கடிமையென வோதிடவென்றேவினை
விட்டையா-துய-ரிட்டையா
பாதிமதிதரித்தவா சோதினையகற்றியென்கை
பற்றையா-வெனை-நற்றையா.
நீலவிழிமாதுபோனாள் காலகண்டன்வாழ்மனைக்கே
சேருமே-யருள்-பாருமே
ஞாலமீதிலென்றன்சத்யஞ் சாலவோங்கவந்தேயெனை
நாடுமே-வினை-ஓடுமே.
சிறியபாலன்கூடப்போறான் முறியாய்த்தொழிற்றான்புரிய
சித்தனே-யருள்-முத்தனே
அறியவுன்றன்கூத்தையிங்கு தெரியலாகுமோஓநாதா
அத்தனே-வாரும்-சித்தனே.

காலகண்டன் விருத்தம்.

அல்லவோயரசேயுன்னை யழுதிடச்செய்திட்டேனோ
நல்லதுன்குடும்பந்தன்னை நாடிநீநிறுத்திக்கொள்வாய்
செல்லவோவாத்துக்கோகான் சீட்டையும்வாங்கிக்கொள்ளும்
வல்லமையுமதுசத்ய வகையும்நானறிந்திட்டேனே.

(கால-வ-ம்) ஓயரசனே? நீயழுகிறகாரணமென்ன? உன்பெண்டையும், பிள்ளையும், நிறுத்திக்கொள்ளும், இதோ சீட்டையும்வாங்கிக்கொள்ளும் நான்போய்விடுகிறேன் வேந்தே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மிகமறையுணர்ந்தவேத மித்திரனேயுன்றன்போற்றி
ஜகமதில்சொன்னவாக்கை சற்றெனும்பிசகேன்போற்றி
யகமதிலெனக்கேப்ரம னமைத்ததோர்விதியையேற்றி
பகவனைத்துதித்தேனன்றி பதிலுனைபகரேன்போற்றி.

(அரி-வ-ம்) சுவாமி? நான்சொன்னவாக்கை தவறேன், சிவனிட்டகதியை யெண்ணித்துதித்தேன் இதோ பாலனையும் மாதையுஞ் சுகமாயழைத்துக்கொண்டுபோவீர் ஐயரே.

(கால-வ-ம்) இராஜனே? இதுவேசரி, உமதுவாக்குக்கும் வீரத்தன்மைக்கு மெச்சினேன், போய்வருகின்றேன் வேந்தனே வாழிவாழி.

(அரி-வ-ம்) போய்வாருஞ் சுவாமி? இவாளிருவரேதாகிலுங் குற்றஞ்செய்தால் மன்னித்தாட்கொள்வீர் உமதுபாதங்களுக்குச் சரணஞ் சுவாமி.

(கால-வ-ம்) சரிதான், போய்வாரும் (காலகண்டன், சந்திரமதி, தேவதாசன் இம்மூவரும் ஏகுதல்.)

(அரி-வ-ம்) சூரியன், சந்திரன், துட்டர் முதலானவரும், காற்றும் கண்ணுற்றறப்பாராது வாழ்ந்த உன்னை நடுவீதியிலிழுத்துவந்து விலைகூறி பணத்திற்காக உன்னைவிற்ற தோஷத்தால், அடி, யென்பிராணனுக்கு மதிகமான இல்லறக்கிழத்தி! பாலனோடு அதோ என்மனம்வருந்தச்செல்கின்றாயே! இதை பார்த்தும் மனந்துணிந்து நான் இன்னும் பிராணனோடிருக்கின்றேனல்லவா! சீ, சீ, யான் கொடுநெஞ்சன் ஆ! தெய்வமே! ஆ! என்பிராணநாயகி! ஓ! என்மகனே! என்கொடுநீதியால் தெய்வாதீனதிசையை என்கண்முன் அடைவிக்கப்பட்டீர்களே! உங்களுக்கிவ்விதகாலம் வருமென கனவிலுமெண்ணிலேனே. ஓ! என்நாயகி! நான் உன்னைத்தொட்டு நீயும் பாலனும் இந்தவிதியனுபவிக்கலானீர்களா!

### அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம் - சஹாநு, தாளம் - ரூபகம்.

பல்லவி.

அப்பாமந்திரி-அப்பாமந்திரி-அப்பாதுணையார்
அப்பா வினி மந்திரி.

அநுபல்லவி.

ஒப்பாரில்லாதவென் னுத்தமியைப்பிரிந்து
சுப்பியதுயரினால் கரைந்துவுடல்சரிந்து (அ)

சரணங்கள்.

வேதியருரைக்கவே விரகமாய்த்தூதறிந்தே
விட்டுமுலைமவரத்தால் விரும்பிமணம்புரிந்தே
பாதிமதியணிந்த பரமனையனுட்டித்தே
பணியவுதித்திட்ட பாலனைநான்விடுத்தே. (அ)

தொட்டநாள்முதலென்றன் றுணையாயிருந்தமாதும்
துயராய்வேதியர்பின்னே தொடரக்கண்டேன்போதும்
கெட்டவிதியெனக்கே கிட்டிடச்சனியனும்
கெடுதிவிளைக்கவானுன் கிளறுவேன்முனிவனும். (அ)

எக்காலமோவினிநா னென்றேவிஷயபார்ப்பது
ஏதுஉறுதிகொள்வே னென்றுடலைக்காப்பது
திக்கானபாலனுந் தேம்பியழுதுசென்றான்
திரோகமுங்களைக்குதே தென்பாய்த்தாகனின்றான். (அ)

### சத்தியகீர்த்தி விருத்தம்.

நித்தியமோவரசுபெண்டீர் நிகழ்சுதன்சுற்றம்பொய்யே
சத்தியந்தன்னைநாளுஞ் சாதிப்பதொன்றுமெய்யே
புத்தியைவசமாக்காமல் போக்குதற்குமோவையே
யெத்திசைதனிலுங்கீர்த்தி யெய்திட்டீரொன்றன்கோவே.

(சத்-வ-ம்) ஆண்டவனே ? அரசு, பெண்டீர், பிள்ளை, சுற்றமிவைகள், நிலையாகுமா ? சத்தியம் நிலையாகும், என்னாளுமழியாத கீர்த்தியைக் கைக்கொண்டீர் துயரத்தைவிட்டிருப்பீர் வேந்தனே.

### அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

சத்தியம்போமோவென்றன் சன்மார்க்கம்போமோமந்திரி
பத்தினிதனையென்வாக்கை பாலிக்கவலவோவிற்றேன்
கத்தியேவிஸ்வாமித்ரன் காட்டிடுஞ்சூதுக்கஞ்சேன்
வித்தியாசங்கொள்ளேனென் விமலனேகெதியெனக்கே.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி ? சத்தியத்தை நிறுத்தவேண்டி பெண்டைவிற்றேன், கவுசிகனினிச்செய்யுஞ் சூதுக்கஞ்சேன், இனி பரமசிவமே யெனக்குத் துணையப்பா மந்திரி.

தாரகன் விருத்தம்.

அழுகிறாய்பெண்டுபிள்ளை யனைத்தையுந்தோற்றேனென்றே
யொழுகிறாய்முனிவன்பொன்னை யுன்னையார்கொடுக்கச்சொன்னார்
பழுதுண்டோவில்லையென்றால் பாக்யமும்பாலன்மாதும்
பொழுதுவிறங்குமுன்னே பூசுராயளிப்பேன்கொள்ளே.

(தர-வ-ம்) ஓய் இராஜனே ? முனிவன்கடனுக்காக பெண்டுபிள்ளை போச்சுதென்றுருகிறாயே, இல்லையெனச்சொன்னால் பொழுதுபோகுமுன்னே, அவாளை வரவழைத்துக் கொடுக்கின்றேனப்பா அரிச்சந்திர மகாராஜனே..

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மனைவியும்வேண்டேனென்றன் மகனையும்வேண்டேன்ராஜ்யந்
தனையும்நான்வேண்டேனுதன் தயைதனைத்துதித்தேனல்லால்
வினையதேயுறுவாய்வந்த வேதியாபொய்யான்பேசேன்
முனைவனேயினிவேறுண்டோ மொழிகுவாயெனக்குத்தானே.

(அரி-வ-ம்) ஐயா தாரகரே ? நான் பெண்டுபிள்ளை இராஜ்யமுதலியவைவேண்டேன், என்வாயால் நெறிபிசகிடும் வார்த்தையைப் பேசேன், உமக்குக்குறைவின்றி பொன்வந்ததா, இன்னமேதாகிலுமிருந்திடிற் சொல்லும் வேதியரே.

தாரகன் விருத்தம்.

தவமுனிகடனைத்தீர்த்தாய் தருமவானீயேயாகும்
பவமில்லைபற்றிக்கொண்டேன் பழுதின்றியுன்பின்னாக
வவதிநானுற்றேவந்த வருங்கூலிதருகுவாயோ
சவலமாயில்லையென்றேதான் சாற்றிடில்போறேனப்பா.

(தர-வ-ம்.) ஓய் இராஜனே ? முனிவனுக்குச் சேரவேண்டிய கடன் வந்துவிட்டது, குறைவில்லை, நானுன்கூடவந்த கூலியைக்கொடுப்பாயா ? இல்லையா ? சொன்னால் ஓடிப்போறேன்வேகத்தே.

தாரகன் தரு

இராகம்-மத்தியமாவதி, தாளம்-சாப்பு.

பல்லவி.

கொடுப்பாயாவில்லையா-என்கூலிப்பொன்னை.
கொடுப்பாயாவில்லையா.

அநுபல்லவி.

அடுத்தவந்தேனுன்னே யரசனென்றெண்ணியே
கடுத்தேநீயில்லையென்றால் காசிவிட்டோடிப்போறேன். (கொ)

சரணங்கள்.

காடுசெடி தன்னிலே-நான் கடுகிவந்தேன் முன்னிலே
காடிநீவரச்சொல்ல நான்வந்தேனல்லாமல்
ஓடிப்போவெனச்செப்பில் ஒருகோடியுமில்லாமல், (கொ)
போவென்றால்போதுமடா-அது ஒரு-பொய்யல்ல ஓதுமடா
பாவிமுனிவினாலே பகுவேலைதக்குள்ளானாய்
தாவியொருபொய்சொன்னாற் றரணியையாளுந்தானாய். (கொ)
என்வார்த்தைகேளப்பா-அரிச்சந்திரா-வித்துயர், பெரிதப்பா
உன்மனைவியும்பாலன் ஓடிவரச்செய்கிறேன்
சொன்னவாக்கின்படியே சூட்டிடவுஞ்செய்கிறேன். (கொ)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

வரும்விதிதக்காதென்றே வழுத்தும்வாறிதுவேயாகுங்
கருதிநீர்தரகாய்வந்தே காட்டிலேபலவாய்நொந்தீர்
தருமமேயுமக்கேகூலி தான்றரக்கடமையாகும்
மருமத்தைவிட்டேமொத்தம் மகிழுடனுரைசெய்வீரே.

(அரி-வ-ம்) சுவாமி ? உமக்குக் கூலி யகத்தியங்கொடுக்கின்றேன், மொத்தத்தைத் தெரிவிக்கவேண்டும் வேதியரே.

தரகன் கவி.

மன்னனேகூலிதான் பொன்பதினாயிர
முன்னிநீயீந்திடி லென்மனங்களிப்பேன்.

(தர-வ-ம்) இராஜனே ? நேக்குக்கூலி பதினாயிரம்பொன் கொடுப்பீராகில், மெத்த சந்தோஷத்துட னுமை வாழ்த்திப்போகின்றேன் வேந்தனே. ஓய் இராஜனே ? இதுவோ அல்பதொகை.

(அரி-வ-ம்) சுவாமீ அப்படியே கொடுக்கின்றேனையா வேதியரே.

தரகன் விருத்தம்.

கொடுக்கிறேனென்றுசொன்ன கோதிலாவெந்தன்பெண்டை
விடுத்துகாணிக்கிருக்க வேந்தனேதாளேன்கண்டாய்
தடுத்திடாதிவையாகிற் றங்குவேனின்றுஅந்தி
தொடுத்திடிலோடிப்போவேன் தோன்றலேயிலையென்பாயே.

(தர-வ-ம்) இராஜனே ? கூலிகொடுக்கிறேனென்றாய், நேக்கு மெத்தசந்தோஷம், ஆனால் என் ஆம்பிடையாளின்பேரில் ரொம்பவும் ஞாபகமாகின்றது, போது போகாமுன்னமே கொடுக்கிறதானு லிருக்

கின்றேன், தடைப்படுத்துவதாகில் இல்லையென்றுசொல் ஓடிப்போகின்றேன் வேந்தனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

சொன்னதையில்லையென்றே சொல்லிடேனடிக்கடிக்குப்
பன்னிநீர்கேட்பதாலே பயனென்னகண்டீரையா
இன்னிமைதனிலுன்கூலி யீகுவேன்தடையிராது
தன்னிகரில்லாவேதந் தான்கற்றநாதரவாரீர்.

(அரி-வ-ம்) சுவாமி? சொன்னசொல்லை இல்லையென்று எப்போதுஞ் சொல்லேன் சொல்லேன், அப்படியே அந்தியாகுமுன் கொடுக்கின்றேன் வாரும் தரகரே.

(தர-வ-ம்) அப்படியானால் மெத்தசந்தோஷம் வருகின்றேன்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

நிகழ்காலஞ்சென்றகாலம் நினைக்குமுன்வருங்காலம்
மகிழுறத்தெரிந்தேசொல்லும் மந்திரியுலர்க்கக்கேளாய்
புகழ்பெறச்சத்யமோங்க புனிதன்றன்கூலிக்காகத்
திகழுடனென்னைவிற்றே தீவரமளிப்பாயப்பா.

(அரி-வ-ம்) அப்பா? திரிகாலமுந்தெரிந்து சொல்லும்படியான சத்தியகீர்த்தி? நமது சத்தியம்நிலைக்க இந்தத்தரகருடைய கூலிக்காக என்னை விற்றுகொடுப்பாயப்பா மந்திரி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

மழுவதைக்காய்ச்சியென்றன் மன்னவாசெவியிற்றூக்கித்
தழுவியவாறுபோலத் தோன்றலேவார்த்தைசொன்னீர்
புழுகுபோற்றுடிக்குதுள்ளம் புனிதன்றன்றரகைத்தீர்க்க
பழுதன்றியென்னைநீர்விற்றே பாங்குடனளிப்பீர்போற்றி.

(சத்-வ-ம்) சுவாமி? மழுவைக்காய்ச்சி யென்செவியிலிட்டாற்போலிந்தவார்த்தையைச் சொன்னீர், இவர் கூலிக்காக அடியேனைவிற்றுக் கொடுத்தனுப்புவீரென்கோவே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

உன்னைநான்விற்றேயீந்தா லுசிதமோசத்யமாமோ
என்னைநீவிற்கலாகு மென்மொழிதகேகாமந்திரி
முன்னம்நான்செய்தபாவம் மூண்டதின்னாளிலப்பா
பின்னையொன்றுன்னைநின்று பிரியமாய்விலைசெய்வாயே.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? உன்னை நான்விற்பது தகுதியன்றே,நான் முன்செய்தவினை யிப்போது மூண்டதாலே, என்னை நீ யாதொன்றும்யோசியாமல் மனதொத்து விற்றளிப்பாயப்பா சத்தியகீர்த்தி.

சத்தியகீர்த்தி தரு.

இராகம்-ஆனந்தபைரவி, தாளம்-ஆதி.

பல்லவி.

இவ்விதிகாண்வோநா னிருந்தேனுடந்தையாக
ஈசனருளிதுவோ ஏந்தலே. (இ)

அநுபல்லவி.

ஒவ்விநானின்னகரி லும்மைவிலைதான் கூற
ஓகோவென்விதிமோ ஏந்தலே. (இ)

சரணங்கள்.

அன்னைதந்தையுமென்னை யாண்டகுருவென்றுமே
அகத்தின்மகிழ்ந்தேன்பாவி ஏந்தலே
உன்னைப்பிரித்தேயென்னை யொண்டியாயிருந்திட
உமைபாகனிட்டான்தாவி ஏந்தலே. (இ)
தாயைப்பிரிந்ததுன்பந் தான்சற்றுந்தளராமுன்
தந்தையைவிற்கலானேன் ஏந்தலே
காயைப்போலேரியாய் நாட்டினனலையவே
நலமிலாமதியானேன் ஏந்தலே. (இ)
அரசனைவிற்றுன்பாவியமைச்சனென்றுமேலோகம்
அறையும்பழிக்காளானேன் ஏந்தலே
வரிசையாயொன்றோடொன்றுவருகுதேதுன்பமையோ
வஞ்சன்றுபரைத்தாளேன் ஏந்தலே. (இ)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

சூதுபொய்வஞ்சமில்லாச் சுகுணனேசத்தியகீர்த்தி
யேதுநீகலக்கமுற்றே யிப்படித்தயங்கலானாய்
வாதுசெய்தாகன்கூலி வைப்பதுந்தகுதியன்றே
நீதுகள்தலையவிற்றே திசமுடனளித்திடாயே.

(அரி-வ-ம்) அப்பா மந்திரி ? நீ யிப்படிக் கலங்கலாமோ ! நீதிநெறியறிந்தவனுச்சுதே, என்னைத்தொடர்ந்த துயர்நீங்க நீ சந்தோஷமாய்விற்று பொழுதுபோகாமுன் இவர்தாகைக்கொடுத்தனுப்புவாயப்பா மந்திரி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

முன்னைநான்செய்திருந்த மொழியொணப்பழியிதன்றி
பின்னையார்சாபமோவப் பிரமனினெழுத்தோவையா
வன்னையாய்தந்தையாகி வாண்டவென்குருவுமான
மன்னனைவிற்கவென்றன் மனம்வராதென்செய்வேனே.

(சத்-வ-ம்) சுவாமி ? எனக்கு அன்னையுந்தந்தையுமான வும்மைவிற்கவெனக்கு மனம்வராதே என்செய்வேன் ! என்செய்வேன் ! தெய்வமே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அவரவரிழைத்தகாம மவரைவிட்டயவிற்போமோ
பவமதைத்துலைக்கவல்லோ பாரினிற்பிறந்தோமந்திரி
தவமதிலுயர்ந்தவந்த தன்யராகிலும்விடாதே
யிவர்கடன்றீரவென்னை யிக்ஷணம்விற்பாயப்பா.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? அவரவர்செய்தவினை யவரையேசாரும் அதையனுபவிக்கவல்லவோ மானிடதிரேகமெடுத்தோம், நீயறியாதல்லவே, இந்தத்தரகருடைய கூலிதீர இந்தக்ஷணமே யென்னைவிற்பாய் சத்தியகீர்த்தி.

தரகன் விருத்தம்.

மன்னவனமைச்சனான மந்திரிசொல்லக்கேளா
யென்னருந்தரகுதானு மிறைவனாலவருகவேண்டு
முன்னையேவிற்றுமிந்தா லொப்பிலேனரசன்வாயாற்
பன்னவோர்பொய்யைச்செய்யின் பாருகூலியைவேண்டேனே.

(தர-வ-ம்) அப்பாமந்திரி? நீயேன் துயரப்படுகிறாய், என்தரகு இவ்வரசனால் வரவேண்டுமேயன்றி, உன்னைவிற்றுக் கொடுத்தால் நான் வாங்கேன், ஆனால் நீயரசன்வாயா லில்லையெனச் சொல்லிவித்தால் கூலிவேண்டேனப்பா மந்திரி.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

விண்டுதோசத்தியகீர்த்தி வேதியருரைத்தவார்த்தை
கொண்டுதேயென்னுட்டுன்பங் கொதிக்குதேமேனியெல்லாம்
பண்டுநானுவேநீதான் பக்ஷமாயென்னைவிற்றே
கண்டுளமகிழக்கூலி கைவிட்டேபோவென்பாயே.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? வேதியர் சொன்னதைக் கேட்டையா, இனித் தடையின்றி யென்னைவிற்று இவர்தரகைக் கொடுத்தனுப்புவாய் மந்திரி, சீக்கிரம், சீக்கிரம்.

சத்தியகீர்த்தி விருத்தம்.

தேசதேசாதிமன்னர் திகழுடன்ஜெயமென்றோத
மாசதையறுத்தயோகர் மகிழ்தாயாசிகூற
வாசமாமாலைத்தாங்கி வஜ்ஜிரமுடிபுனைந்த
பாசனின்சிரமேற்புல்லை பாவிநான்வைப்பேனோபோ.

(சத்-வ-ம்) ஓ! பாழுந்தெய்வமே! நீயெங்கள் பங்கிலில்லாமல் முனிவனுடன் கலந்தையா! என்னை.ராஜாராஜாக்க ளடிபணியும்படி மகுடம்பூண்டிருந்த என்னாண்டவன் முடிமீதில் புல்லைவைக்க விட்டாய தெய்வமே! ஐயையோ! என்னகாலம்!!!

### சத்தியகீர்த்தி விருத்தம்.

ஏந்தலேயென்னசெய்வே னென்றலேவிதியிதாச்சோ
ஏந்தலேயுனைப்போற்பாவி யெங்கனுங்காணப்போமோ
ஏந்தலேயும்மைவிற்க விதோபுல்லேமுடிமேலிட்டேன்
ஏந்தலேயர்விமுன்னே யிசைந்துமேநடப்பீர்நாதா.

(சத்-வ-ம்) என்னாண்டவனே ? உம்மைவிற்க இதோநான் புல்லேயும முடிமீதுவைத்தேன், இந்தப்பாதகனுகிய என்முன்னே நடந்துவருவீரென் கோவே.

(அரி-வ-ம்) மகாசந்தோஷமப்படியே வருகின்றேன் பாலகா.

## மந்திரி, அரசனை விலைகூறல்.

### சத்தியகீர்த்தி கண்ணிகள்.

இராகம்-ஆகிரி-தாளம்-ரூபகம்.

முன்செய்ததீவினை முனிவனுலுற்றதின்
மூளையக்களெங்தெறியத்தானே-யிதோ
நன்மையில்லாத்தாகன் நாடுங்கூலிக்காக
நாயகனைவிற்கலானேன்.

(சத்-வ-ம்) விதிவசத்தால் முனிவனுக்குக் கடன்காரனுகி யரசன் தன்மனைவியை விற்றுக் கடனைத்தீர்த்துந் தர்கன்கூலிகேழ்ப்பதாலிதோ நானென்னரசனை விற்கின்றேன் சிவமே !

சத்யமெனுங்குடையைச் சற்றும்வழுவுறுமற்
சார்ந்தேசெங்கோல்புரிந்ததீரர்-ஐயா
நித்யமும்மாதவ நெறியுஞ்ஜபதபமும்
நீடித்தோங்கச்செய்தசீரர்.

(சத்-வ-ம்) சத்தியம்பிசகாமல் குடிகளைக் காத்தவர், ஆலயப்பூஜைகள் தடையின்றி நடக்கச்செய்தவர், அழகில் மன்மதனைப் பழிக்கத்தக்கவர் தெய்வமே ! விற்கத்தொடங்கினேன் !

மன்னுயிர் தன்னுயிர்போல மாநிலத்தினிலெண்ணி
மதித்தேநீதி யளித்தராஜர்-இவர்
பன்னுஞ்சராசரத்தின் பலவுடல்களிலாடும்
பரமன்பத மறவாநேசர்.

(சத்-வ-ம்) இவரோ, ஜீவகாருண்ய முடையவர், நீதிவழுவாதவர், பஞ்சாசத்கோடி பூமண்டலத்திலுள்ள ஜீவராசிகளும் ஆடாநின்ற பரம்பொருளை மறவாதவர் தெய்வமே ! விற்கத்தொடங்கினேன் !

ஆபத்துவேளையிலாதரித்தோரைகுரு
அன்னைதந்தையெனுங்கருத்தார்தருகள்
கோபத்திமுட்டியே கோரம்புரிந்துமோர்பொய்
கூறேனென விவர்மறுத்தார்.

(சத்-வ-ம்) ஆபத்திற்குதவினவரைப் பிதாவைப்போலெண்ணத்தக்கவர், தரகன்றலதிக துன்பங்களை யனுபவித்தும் பொய்சொல்லாதிருந்த மகானுபாவர். தெய்வமே!

எதிரிட்டபகைஞர்கள் ஏங்கிப்புரமிட்டோட
ஏருங்கணைதொடுக்குஞ்சூரர்-கொள்ளும்
பதியிடம்வேலைகள் பலவண்ணமாயினும்
பண்பாய்வணங்கிச்செய்யும் வீரர்.

(சத்-வ-ம்) போரில் எதிரிட்டவர்களை வெல்லத்தக்கவர், தன்னைக் கொள்பவர்களிடம்வேலை யாதாயிருக்கினும் பணிந்துசெய்யத் தக்கவர் தெய்வமே! ஓ! பரமசிவமே! இன்னேரங் கத்திக்கத்தி கூவியும்பருக்கமவரக்காணேன், இனி யென்னுண்டவனை யொவ்வொரு வீதியாயழைத்துக்கொண்டுபோய் விலைகூறுவேனாக, இதுவுமுன்செய்த வினைப்பயனோகாசிநாதா!!!

ஆதிமூலப்பொருளாய் ஜோதிவொளியவர்ன்
அரனடிமறவாதோர்பாரீர்-குல
வேதியராகிலுஞ் சாதிப்பேதங்களில்லை
வேந்தலைக்கொள்ளவேவாரீர்.

(சத்-வ-ம்) பரம்பொருளாகிய பரமசிவனடியை மறவாதவர், குலத்தில் வேதியராலுங் தடையில்லை வாங்கவருவீர்கள் குணவாளர்களே

எத்திசைதன்னிலே சுத்தினுமிவரைப்போல்
இன்புளர்சிக்கிலர் பாரீர்-குல
க்ஷத்திரியராலும் விற்றிட்டதடையில்லை
சாங்கமாய்க் கொள்ளவேவாரீர்.

(சத்-வ-ம்) எந்ததேசங்களிலு மிவருக்கிணையான வுத்தமரில்லை, இராஜாக்களாலும் விற்கத்தடையில்லை கொள்ளவாருங்கள் கனவான்களே! சிவ சிவா!

கணிதமுறையில்வெகு நுணிதமறிந்தவர்
கருந்தார்மோசங்களென்றும்பாரீர்-குல
வணிபாராலுமிவர் பணிவார்பொருளளித்தே
வாங்கிக்கொள்ளவேயோடிவாரீர்.

(சத்-வ-ம்) கணித நூலிற்சிறந்தவர், மோசக்தருக்தில்லாதவர்குலத்தில் வைசியராலும் விற்கத்தடையில்லை, வாங்கவருவீர்கள் குணவான்களே! ஈசா! ஈசா!

வர்ரக்கிதியோகச் சாரஞ்சேஷத்திரதர
வகூறந்தெரிந்தவர்பாரீர்-தானத்
தீரச்செல்வமுடைய காராளராகினும்
திவ்யரைக்கொள்ளவேவாரீர்.

(சத்-வ-ம்) நாள் நக்ஷத்திரங்கள் தெரிந்தவர், பூமிகளின்சாரம் நன்குணர்ந்தவர், குலத்தில் வேளாளராயினும் பொன்கொடுத்தால், விற்கத்தடையிராது வாருங்கள் புண்ணியவான்களே!

கோணார்தொண்டவர்வாக்குப் பூணார்பிறர்வார்த்தை
குணமிலாவுரைசெய்யார்பாரீர்-ஐயா
காணுவிதவருண ராகினும்விற்றிட
நான்றடைபுரிகிலேன் வாரீர்.

(சத்-வ-ம்) எஜமான்வாக்கியமீறார், பிறர்வார்த்தைகேளார், வீண்வார்த்தை பேசார், எந்தஜாதியாகிலும் விற்கத்தடையிராது, வாருங்களன்பர்களே.

பொது விருத்தம்.

சத்தியகீர்த்திபுல்லைச் சற்ஜனன்முடி மீதிட்டே
வித்திடவீதிதோறும் விரும்பியேவருகுங்காலை
நத்திபேவிஸ்வாமித்திரன் நவிலொணாக்கொடுமைசெய்ய
கத்தியேகாலன்றன்னைக் கருதியேயழைப்பான்குனே.

(பொது-வ-ம்) சபையோர்களே? சத்தியகீர்த்தி தரகனுடைய சூரியவம்ச அரிச்சந்திரமகாராஜன் முடிமீதில் புல்லைவைத்து வீதிதோறும் விலைகூறிக்கொண்டு வரக்கண்ட கவுசிகனின்னமனேக துன்பஞ்செய்யக்கருதி எமதர்மராஜனை யழைக்கிறவிதங்காண்பீர்கள் கனவான்களே

விஸ்வாமித்திரன் தரு

இராகம்-சஞ்சாரி, தாளம்-சாப்பு.

பல்லவி.

காலனேவாரீர்-இதுவேளை-காலனேவாரீர்.

அநுபல்லவி.

கோலமாக்கறைக் குழைத்தநுதலிற்பூசி
சாலகம்பிளம்போற்றி சட்டியுங்கோலேந்தி. (கால)

சரணங்கள்.

கறுத்தமேனியுடனே-புன்னத காதலியாளுடனே
பெருத்ததொனியினாட்டி சிறந்தபார்வையாய்க்காட்டி
வெறுத்தசுடலைக்கும் திருத்தமானவன்போல. (கால)

காசிநகரைநாடி என்முறை கவனித்தேநீபோடி
தேசிகா சொன்னவாக்கின் வாசினையைநோக்கின்
யோசித்தேனிவ்வேளை நேசித்தென்முன்பாக (கா)
எந்தன்றுயராறுக்க-மன்னவன் ஏகமாய்ப்பொய்யுரைக்க
வந்திடுவாய்நிருபனே அந்தரதருடனே
பந்தயங்கெலித்திட தந்திடவுன்னருள் (கா)

ஏமதர்மராஜன் விருத்தம்.

தேன்மொழியேயடிகுயிலேசாணுமொன்று
தெரிவிப்பேனீயறிவாய்தேவராஜன்
தான்புரிந்தகொலுவில்கவுசிகனுமென்றன்
தாள்பணிந்தேயபயஸ்தந்தருகவென்றான்
நான்கனிந்தேவாக்களித்தேனிப்போதென்னை
நாடியேவெட்டியன்போற்காசியுக்க
மான்வடிவேதுதிக்கின்றானும்போறேன்
மாதரசேநீயுடனேவருகுவாயே.

(எமதரு-வ-ம்) பெண்ணே சாமலா ? தேவேந்திரன் சபையில் விசுவாமித்திர னென் சகாயத்தைக்கோரினான், நானும் வாக்களித்தே னிப்போது பறைவேடமெடுத்து, காசிக்கு வரும்படி துதிக்கிறான் கேளாய்மாதே.

இதுவுமது.

வெட்டியனைப்போனானுங்கேளாய்கண்ணே
வேடத்தோடவன்முன்னேமேவுகின்றேன்
வட்டமதுக்கனிச்சுவையேகொஞ்சம்போது,
காலமதைநீதேக்கிபறச்சிபோல
கிட்டிடுவாயயினியித்தேயுருவைமாற்றிக்
கிளிரியேகொச்சைமொழிகிளியேநீதான்
அட்டியின்றிவந்திடுவாய்காசிநாடு
அடிமாதேநான்போறேனறிகுவாயே.

(எம-வ-ம்) பெண்ணே ? நான் பறைவேடந் தரித்துக்கொண்டுபோகின்றேன், நீயும் வெட்டிச்சியைப்போ லுருதரித்து கொஞ்சகாலம் போக்க காசிநகர் வருவாயடி கண்ணே.

சாமலாதேவி விருத்தம்.

கல்லதுகுவாமிநாம்தான் நாடியிவ்வேடங்காசி
வல்லவா சென்றுற்றங்க வளமானவிடுதியுண்டோ
வல்லவக்குற்றதோட்டி யறிந்திடினம்மைகாதா
தொல்லலும்வசையுமாகத் தோற்றுதேயெனக்குநாதனே.

(சாம-வ-ம்) சுவாமி? நாம் தோட்டி தோட்டிச்சிபோற் காசிசேர்ந்தா விருக்க விடம்வேண்டுமே, காசிதோட்டி கண்டால் வசையாகுமே இதற்கேதுவழிநாதா.

எமதருமராஜன் விருத்தம்.

அறிமாதேகாசிவளர்வீரவாகு
யவன்மனைவிதன்னுடனேமாயமாகத்
தெரிமாதேயிமயமலைச்சாரல்புக்கத்
திவாத்திறஞ்செய்கின்றேனவன்றன்ரூபந்
தரிமாதேயெடுத்தவர்வாழ்குடிசைபுக்குத்
தானங்குமில்காலந்தக்கிக்கண்ணே
சரியாகமுனிக்களிக்கநாம்நடாத்திச்
சாருவோமிப்பதிக்கேசாற்றினேனே.

(எம-வ-ம்) பெண்ணே? காசியில் * பக்கணமென்னுஞ் சேரியில் வாழுந்தோட்டி வீரவாகுவையும், அவன் மனைவியையும் இமயச்சாரல்போய் சேரச்செய்கின்றேன், நாமவர்களைப்போல் வயதும் ரூபமுந்தரித்து அவர்குடிசைசேர்ந்து, முனிவன்மனங் களிக்கச்செய்து நமதிருப்பிடம்வருவோ மிவரடிமாதே.

(சாம-வ-ம்) அப்படியானால் போகலாம், நீர்போம், நானுமதுகட்டளைப்படி வருகின்றேன் சுவாமி.

பொது விருத்தம்.

தருமனுமேயிவ்வாறுபேசிநோக்கித்
தானேவத்தூதர்களுமோடிவந்தே
யருமறைகள்புகழ்காசிச்சுடலைத்தோட்டி
யவன்மனைவியிருவரையுமிமயச்சாரல்
கருதியேயெடுத்தேகிவிடுத்தாரங்கே
கனிசருகுபுசித்துமவர்களிப்பினோடே
பருவதத்தையடைந்திருக்கக்காலன்றானும்
பறையனைப்போல்முனிவனெதிர்பற்றுவானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்வாறு எமதருமனேவற்தூதர்களோடி, காசிப்பறைத்தோட்டியையு மவன்தேவியையுந் தூக்கிக்கொண்டுபோய், இமயச்சாரலில்விட, அவர்களங்குள்ள கனிசருகு புசித்திருந்தார்கள், இப்பால் காலனும் வெட்டியானைப்போல் வேடம் பூண்டு விஸ்வாமித்திரன் முன்பாகத் தோன்றுகிற விதங்காண்பீர்கள் நல்லோர்களே.

---

* பக்கணம்-என்பது காசிநகரில் பறையர்கள் வசிக்கும் கிராம மெனவும் பாடம்.

(விஸ்-வ-ம்) போற்றி போற்றி; எமதருமராஜனே போற்றி.

எமதருமராஜன் விருத்தம்.

வஞ்சகந்தனையகற்றி வாக்கினில்நாளுழுந்த
வைஞ்செழுத்ததனையோதி யறிவொளுப்பொருளைநோக்கும்
விஞ்சனேவிஸ்வாமித்திர வீரனேயெனையழைத்த
பஞ்சகமதனையிங்கே பகருவாய்விரைவிற்றனே.

(எம-வ-ம்) முனியே ? என்னையிந்த வேடமாய் வரத்துதித்த காரணத்தை தெரிவிப்பாய் முனியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

தருமரேயுரைக்கக்கேளீர் தரணியிற்சிறந்தமன்னன்
வருந்தியேசுக்கிரன்கூலி வீழக்கிடவிலையாகின்றான்
பொருந்திநீர்சுடலைகாக்கும் புலையனுய்க்குசென்றே
பருந்துபோற்கொண்டுநான்தான் பகரும்வாற்புரிகுவீரே.

(விஸ்-வ-ம்) சுவாமி ? நரகன் கூலிக்காக அரிச்சந்திரனை மந்திரிவிற்கின்றான், நீர் அவனைவாங்கி, நான் சொல்லும்படி செய்யவேண்டும், அதாவது கேளும் நாதா.

விஷ்வாமித்திரன் விருத்தம்.

மாட்டையறுக்கச்செய்வீர் மாமிஷமுரித்தும்பிரேதக்
காட்டைகாக்கச்செய்வீர் கருதொளுபுலையனைப்போல்
வேடமுந்தரிக்கச்செய்வீர் வித்தகாதயுரமீறி
நாட்டில்பொய்யைப்பேச நயமுடன்வலுத்துவீரே.

(விஸ்-வ-ம்) சுவாமி ? அவன்கையால் மாடு உரித்து மாமிஷந்தாக்கவும், சுடுகாடுகாக்கவும் பறையனைப்போலுடுத்தவும், இன்னம் அனேககாரியங்களுஞ் செய்வித்து, அவனைப் பொய்பேசச்செய்து என்னைக் காப்பாற்ற வேண்டுந்தேவே.

எமதருமராஜன் விருத்தம்.

அந்தரிச்சந்திரன்றன்னை யடிமையாய்நானேகொண்டு
சுந்தரன்மனமும்மெத்தச் சோர்வுறத்துன்பந்தன்னை
யெந்தனுலின்றமட்டு மிம்சையுங்கொடுமைகாட்டி
வந்தவன்பொய்யுரைத்தால் வழுத்துவேன்வாழிநீயே.

(எம-வ-ம்) ஓ முனியே ? நீகோறியபடி அவனைவாங்கி, பலவிதத்துன்பமும் படுத்திவைக்கின்றேன், அப்படி ஒருக்கால் பொய்சொல்லுவனாகில் உனக்குத் தெரிவிக்கின்றேன் போகிறேன், வாழி, வாழி.

(விஸ்-வ-ம்) மகாபாக்கியம், மகாபாக்கியம் சுவாமி.

பொது விருத்தம்.

ஜாதியிலே நூற்றிற்கு மொன்றேவேண்டும்
சமயமோராசியின்மேலொன்றதாகும்
நீதியிலேயிரமத்தின்நெறியைக்கொண்டோன்
நிலையிலேதனக்கு நிகரில்லாநேயன்
ஆதியிலேவேதத்தைப் பறையடித்தோன்
அரிச்சந்திரன்றனைக்கொள்ள ஆவல்கொண்டே
ஜோதியுளகாசிநகர் நாளும்வாழுஞ்
சுடுகாட்டுத்தோட்டியைப்போல் தோன்றினனே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? எமதருமராஜன் உருத்திரகளை பூண்டு, மயானங்காக்குந் தோட்டியைப்போ லுருமாறி அரிச்சந்திரமகாராஜனை வாங்க வருகிறவிதங் காண்பீர்கள் கனவான்களே.

தோட்டியென்று வழங்கும் வீரவாகு-தரு

இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஆதி.

பல்லவி.

தோட்டிநானுண்டே - காசிவாய்-தோட்டிநானுண்டே.

அநுபல்லவி.

மூட்டியேபுகைசுடு . காட்டினிற்பிணமதை
நீட்டியேதடிதனால் . மாட்டியேவாட்டிடும். (தோ).

சரணங்கள்.

செத்ததோர்மாடெடுப்பேன்-மனஞ்
சிவத்தினிநாட்டியேதினமிருப்பேன்
சுத்தமாய்நானிருப்பேன்-கேளுஞ்
சுயித்திரியில்மெய்த் தூக்கத்தினிலிருப்பேன்
சத்தியந்தன்னையே சற்றும்மறந்திடேன்
கத்தனையீன்றதினிற் கண்டேமகிழ்ந்திடும். (தோ)
இருகலையிணைத்திடுவேன்-மேல்
ஏகிடாமல் வாய்மூடிடுவேன்
கருவினையொடுக்கிடுவேன்-உந்திக்
கமலத்தின்பாலையூங்குடித்திடுவேன்
வரும்வினைகளையே வகையாய்த்தெரிவேன்
அறுத்திடப்பிறவியை அச்சாமறிந்திடும். (தோ)
வேதத்திறனறிவேன்-அந்த
வித்தகன் தங்கிடும்விடமறிவேன்
நாதத்தின்முதலறிவேன்-விந்து
நாடித்திரண்டிடும்விதமறிவேன்

ஜோதியொளினையுஞ் சூச்சத்திலறிவேன்
ஆதிநடுமுடிவையு யறிந்தவனாகிய. (தோ)
பணமதைமிகத்தேடி-புலகில்
படித்தோரைமதியாமல்வாயாடி.
குணமதிலோமோடி.-சாரி
கொள்ளைகவிடுத்திடப்பதம்பாடி.
மண்டிதாயிவர்கள் மடிந்திடுங்கட்டு
அனலினுல்வாட்டியே அடிமேலடியடிக்கும். (தோ)

## தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

ஆரையா ஆண்டை நீதான் ஆளையும்விலைபாய்க்கூறி
ஊரையேகோலமாக உளரியேவருவோய்வுந்தன்
பேரையும்வாய்ந்தவூரும் பிரியமாயாளைநீயே
தாரைவார்த்திடும்பணத்தை தான்சென்னால்வாங்குவேனே.

(வீர-வ-ம்) ஓ ஆண்டே ? ஆரடோ ஆண்டே ? ஆளை விக்கிறது, உன்பேரும் நீபொறந்த வூரும், விக்கிற விலையும், சென்னுக்கா வாங்குறேண்டா ஆண்டே.

(சத்-வ-ம்) ஆ ! ஜெகதீசா ! இதென்னகோரம் ! ஓடோடியும்வந்து நமது எதெர்நின்றுரேழ்க்கும்மானிடனைப்பார்த்தால், தோற்றம், அங்கப்புழுதுகொடியதன்மை, நீண்ட கோரமீசை, தயவில்லாமை, கருமைநிறம், பெருவயிறு, தடித்தவுடம்பு, பயந்தருமுகம், உரத்தசத்தமுடைய தாய்க்தண்டம் பிடித்துக்கொண்டு பேய்வாய்திறந்து. பார்க்கமுடியாத வடிவோடு ௦ நான்குசுவானக் கூட்டஞ் சூழ்ந்துவரத் திறந்த மெய்யினையுடையவனாய்க் கோலொன்றுபற்றி ஒருசேரிப் பறையனைப்போ லிருக்கின்றானே ! ஐயோ ! இதுவும் விஸ்வாமித்திரன் சூதாக இருக்குமா, அப்படி யிருந்திடினும் நாம்சாளப்போகாது, எதுவரினும் வரட்டும் சரி, இருக்கட்டும், வந்தவனை இன்னானெனத்தெருந்துகொள்வோம்.

## சத்தியகீர்த்தி விருத்தம்.

வாங்கவேயோடிவந்த வள்ளலேநின்றுள்போற்றி
யோங்குமுன்பேருமூரு முரியநின்தொழிலுஞ்ஜாதி
சாங்கமாயுரைத்தால்நீதான் சார்ந்துமேகேட்டதற்கே
யீங்கனேயுரைவேன்பொன்னை யீந்துநீகைக்கொள்வாயே.

(சத்-வ-ம்) ஐயா ? உனது பேருமூருஞ் ஜாதியுந் தொழிலுஞ் சொன்னால் இவரை விற்குமொத்தத்தை நான்தெரிவிக்கின்றேனையா.

---

௦ நான்கு சுவானம்-நான்கு வேதமெனவும் பாடம்.

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

இன்னகர்காணியாள னென்குலம்புலையனுண்டே.
வின்னமாஞ்சுடலைகாக்கும்வெட்டியான்பிணத்தைத்தீய்ப்போன்
வன்னமாமென்பேர்வீர வாகுவென்றழைப்பார்கண்டாய்
கன்னவாயுன துசேதி கழறுடன்செல்லுவாயே.

(வீர-வ-ம்) ஓ ஆண்டே ? நா சுடுகாட்டுத்தோட்டி, எம்பேர் வீரவா கு, உன்சேதி செல்லாண்டே செல்லு.

சத்தியகீர்த்தி விருத்தம்.

நாதனேகர்சிவாழும் நம்பனேயிருவர்காணப்
பாதனேமகிபன்றன்னை பறையனுக்கொள்ளச்செய்தாய்
நீதநுவெதுசெய்தோமோ தேவனேசெங்கோல்போக்கி
பாதகச்சனியன்செய்யும்பழியதோவறிகிலேனே.

(சத்-வ-ம்) ஓ கர்சிநாதா ! பதியும் அரசும்போக்கி, என்னை ஆண்ட தர்மதுரையை யிக்கெதிசெய்தும், பறையனுக்கு அடிமையாகச் செய்கிற து உன்னுடைய திருக்கூத்தோ ! அல்லது சனியன் மகிமையோ ! தெ ரியேன் நாதா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அப்பனேசத்தியகீர்த்தி யறிவிலாதவனைப்போல
இப்படித்தயங்கலாகு மிவான்றியென்னைக்கொள்ளச்
செப்புமுன்னோசைகேட்டுச் செழிப்புடன்வந்தோர்காணேன்
முப்புரமெரித்தோன்கூத்தே மூன்றிந்துநீவிற்பாய்பாலா.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி ? நீயிப்படித் தயங்குதல்சரியோ ! இவனைவிட்டால் என்னைக்கொள்ளுபவ ரொருவருங்காணேன், இதுவு ங்காலகெதியென்றெண்ணி மனக்களிப்புடன்விற்றிடுவாயப்பாமந்திரி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

ஐயரேயென்னையாண்ட வன்பரோகோவேந்தானக்
கையரேவுலகையாண்டக் கருணரேவாக்குமீறு
மெய்யரோபறையனுக்கே மேவிகான்விற்கச்சித்தம்
ஐயையோவரும்வெந்த னப்பனேயென்னசெய்வேன்.

(சத்-வ-ம்) ஓ ! பரமசிவமே ! என்னையாண்ட மன்னவனை, பறைய னுக்குவிற்க எனக்கு மனம்வருமோ தெய்வமே ! தெய்வமே !

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

வேந்தனேயெந்தன்சேரி விளம்புவேன்மெத்தத்தூரந்
சாந்தனேயானைவிற்குஞ் சத்தங்கேட்டோடிவந்தேன்
மாந்தளிர்மேனிபூண்ட மாதுவின்செல்விதானுங்
கூந்திலைப்போக்கியென்னைக் கூடிந்துணர்செய்வாள்போறேன்.

(வீர-வ-ம்) ஓ ஆண்டே ? என்சேரி ரொம்ப தூரத்திலே யிக்குது, என்பெஞ்சாதீ கோவிச்சகுவா, நா போறே ணண்டே.

(அரி-வ-ம்) அப்பா மந்திரி ? இனிகாலதாமிஷஞ்செய்யாம லிவருக்கே யென்னைவிற்றுவிடுவாயப்பா.

(சத்-வ-ம்) அப்படியே செய்கின்றேனிதுவும் விதிதானு ! ஐயா வீரவாகு ? நீ கேட்டதைச்சொல்லுகிறேன் தெரிந்துகொள்வாயப்பா.

(வீர-வ-ம்) என்னேரஞ் சீக்கிரஞ் செல்லாண்டே செல்லு.

சத்தியகீர்த்தி விருத்தம்.

புகழோங்குமயோத்தியாண்ட புனிதராமரிச்சந்திரன்பேர்
இகழோங்கும்வீரர்சூரர் திரண்மையாங்கல்விசற்றோர்
மகிழோங்கிநீதான்கொள்ளு மையனேகுறிக்கும்வேலை
யிகழோங்கவாறுசெய்வா ரிவர்கடன்றீர்ப்பாய்போற்றி.

(சத்-வ-ம்) அப்பா வீரவாகு ? இவர் அயோத்தியையாண்ட அரிச்சந்திரமகாராஜன், நீயிடும்வேலைகளை வணங்கிச்செய்வார், இந்தவேதியருக்குச் சேரவேண்டிய பொன்னைக்கொடுத்து இவரை வாங்கிக்கொள்ளுவாயப்பா.

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

அண்ணலேயானேன்கொள்வே னறைகுவேன்வேலைகேப்பாய்
திண்ணமாய்ச்சுடலைகாத்தே திரண்மையாய்மாடுறித்து
வண்ணமாமாமிசத்தை வகைவகைபீரிக்கவேணும்
நண்ணரும்பணிவேறுண்டு நயந்திவன்புரிகுவானே.

(வீர-வ-ம்) அய்யா ஆண்டே ? இவனை நானேவாங்கிறேன், ஆனுக்கா இவன் சுடுகாடுகாக்குணும், மாடுறிக்குணும், இன்னம்ரொம்பரொம்ப வேலைங்கோ இக்குது, இவனாலாகுமோ செல்லாண்டே செல்லு.

சத்தியகீர்த்தி விருத்தம்.

கொண்டிடிலிட்டவேலை குறைவறச்செய்வாரையா
வெண்டிசையிகழ்ந்திட்டாலு மிவர்மனங்கலங்கலின்றி
விண்டிடும்வார்த்தைமீறார் வெகுமனக்களிப்பாய்நீதான்
சண்டியின்தூரகையீந்தே சடுதியிற்கொள்ளுவாயே.

(சத்-வ-ம்) ஐயா ? நீரிடும்வேலைகளெல்லாஞ் செய்வார், இந்தத்தரகர் கூலியைக்கொடுத்து, இவரை விலையாய்க்கொள்ளுவீரையா வீரவாகுவே.

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

மறைமுதலேற்றும்நாதன் மருவுமிக்காசிநாட்டின்
பறையனுனீதான்கேக்கும் பணமதைகொடுயிற்றேறேன்



நிறையுள நாட்டாரொப்ப நீயுமோர் சாசனந்தான்
குறைவறஎயிதியாண்டே கொடுப்பையோ செல்லுவாயே.

(வீர-வ-ம்) ஆண்டே? இப்பவே பணங்கொடுத்துர்றேன், நீ ஆண்டைமாரைப்போல சீட்டு எயிதிகொடுப்பியா செல்லும் ஆண்டே.

(சத்-வ-ம்) ஐயா வீரவாகு? நீ கேட்டபடியே யிதோ சாசனமெழுதிக்கொடுக்கிறேனையா.

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

விடையதுகேட்டவாண்டே வீரமாயிவனேவிற்ற
யடையநீகோருமொத்த மன்புடனுரைப்பாயாகில்
தடையதுபுரிந்திடாமல் தங்கியவிடத்திற்குனே
யிடைக்தடிநகராமுன்ன மீகுவேனினிவாய்த்தானே.

(வீர-வ-ம்) ஆண்டே? இவனைவிக்ற மொத்தத்தை சென்னுக்கா இங்கே நின்னபடியே கொடுத்துவாங்கிக்கிறேன்.

சத்தியகீர்த்தி விருத்தம்.

கடனதைத்தண்டவேண்டி காசிக்கேயெங்கள்பின்னே
யுடற்பட்டுத்தரகர்வந்த வுத்தயாதனைக்கேகூலி
யட்வுடன்பொன்னேபத்து ஆயிரங்கொடுப்பையாகில்
கடந்திவர்செல்வார்மன்னர் நாடியுன்வசமாவாரே.

(சத்-வ-ம்) ஐயா வீரவாகுவே? இந்தத்தரகருக்கு நீர் பதினாயிரம் பொன் கொடுத்துவிட்டால் இவர் போய்விடுவார், அரசர் உமது பின்னே வருவாரையா.

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

ஆண்டேகேளுலுத்தரான வரும்பாவிப்பிணங்கள்மெத்த
மாண்டதாம்நாட்டினுள்ளே மயானத்திற்கேகவேண்டுந்
தீண்டோணுப்பிணங்குடன்னேத் தீய்த்திட்டபொன்னைத்தாறேன்
வேண்டிலென்சாசனத்தை விரைவினிலெயுதுவாயே.

(வீர-வ-ம்) ஆண்டே? லுத்தப்பிணம், பாவிப்பிணம், சண்டாளப்பிணம், மெத்தச் செத்துதாம், பிணஞ்சுட்ட காசுகளைத்தாறேன் சீட்டு எயிதிக்கொடு ஆண்டே.

(சத்-வ-ம்) அப்படியே யிதோ யெழுதிக்கொடுக்கிறேன், ஓலையும் எயுத்தாணியுங் கொடுப்பாயப்பா வீரவாகுவே.

(வீர-வ-ம்) டேசாமி? பாப்பாரையா? ஓலையும் எயுத்தாணியுங் குடுரா எங்கூத்திமவனே.

(தா-வ-ம்) அடே நீச்சத்தேவடியாள்பிள்ளாய், தூரம்நில்லடா தீண்டாதேடா, நாம் பிரமகுலம், ஓலையுமெழுத்தாணியு மிதோ மந்திரிகையிற் வைத்தேன், அப்புரம் போவாயடா நீச்சப்பயலே.

முறிச்சீட்டு அகவல்.

உன்னதகாசியி லோங்கியேசுட லை
தன்னினைக்காக்குந் தனத்தினிலுயர்ந் த
வன்னனும்வீர வாகுவென்றனக் கே
நன்னகரயோத்தி நாதனின்மந்தி ரி
தன்னறமில்லாத் தாகன்கூலிக்கா ய்
மன்னனரிச்சந்திர மகிபனைவிற் றே
யென்னவசரத்திற் கெழில்பதினாயிர ம்
பொன்னதைக்கொண்டே பூசுரர்க்களித் தே
னின்னதைக்கண்டவ ரிரவிமதிதாக ன்
பன்னவேசாட்சிநான் பதிந்தனன்கையெழு த்
துன்னவேசாசனந் தோய்ந்தவாறது போ
லின்னிவர்தன்மே லெதிர்வழக்கில்லை. யே.

காசுஷிகள். }
இரவிமதிகள் தாகன் } இப்படிக்கு, அ - மந்திரி-சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) இந்த சாசனத்தை மனதொப்பி எப்படி புலையன்கையி ற்கொடுப்பேன் சாமிநாதா! ஆ! கபாலமூர்த்தி! கைலயங்கரசே!!!

(அரி-வ-ம்) சிவசிவா! இப்படியுஞ் சொல்லப்போமா! பாலகா சத் தியம் பங்கமாகுமே, தடையின்றி குளிர்ந்தநினைவுடன் மனதொப்பிக் கொடுப்பாயப்பா சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) சுவாமி? நான் விதியை நொந்தேனேயல்லது வேறல்ல, அப்படியே கொடுக்கின்றேன் ஆண்டவனே. அப்பா வீரவாகுவே? பொன்னைக்கொடுத்து சாசனத்தையு மிவரையு மொப்புக்கொள்ளு வீரையா.

(வீர-வ-ம்) ஆண்டே? பொன்னை யார்கிட்டோ கொடுக்கிறது செ ல்லும் ஐயா.

(சத்-வ-ம்) இந்த புண்ணியவான் கையிற்கொடுத்து விடுவாயப்பா.

(வீர-வ-ம்) ஓ பாப்பறை ஆண்டே? இதோ பொன்வாங்கிக்கோ.

(தா-வ-ம்) அடே தூரமெட்டி நில்லடா நீச்சப்பயலே.

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

விலைப்படர்ஆண்டையான விதரணசாலிகேளாய்
புலையனுன்னரித்தோர்தம்மை யொசிக்கியகூலிக்காசை
தொலைக்கிறேனுனக்கோநானுந் தொடாமல்நீஎட்ட வேண்டாம்
கொலைக்குமோகாய்வித்தேகரன் கொண்டபேர்க்கூறுவாயே.

(வீர-வ-ம்) ஓ விலைப்படா ஆண்டே? பாப்பாரான்டே! பொன்

கட்ட காசிகொடுக்கிறேன், நம்பித்தகாசுகொலேக்குமா செல்லடா ஆ ண்டே செல்லு.

(தர-வ-ம்) அடே நீச்சப்பயலே ? தாமுவைய்டா வை.

தரகன் விருத்தம்.

பார்ப்பவர்மெய்க்கப்பந்தயம் பகர்ந்துமேபொருளேயெல்லாம்
தோர்ப்பவர்போலப்பொய்யைத் தொடேனென்னவேமயானங்
காப்பவனுனுயிந்தக் கண்ணாவியுண்டோவேந்தே .
கேர்ப்பிதோசரியோநீதான் நிகழ்த்துவாய்க்கருத்தைத்தானே.

(தர-வ-ம்) அப்பா அரசனே ? பார்ப்பவர்கள்மெய்க்கப்பந்தயம்வை த்துத் தோர்ப்பவன்போல், பிடிவாதஞ்செய்து, சுடுகாடுகாக்கும்பறை யனுக்கடிமையானுய் அந்தோ! அந்தோ! இந்தக்கோரம் பார்க்கப் போமா! இனியாகிலுமுன்னுடையகருத்துச்சொல்லுவாய் இராஜனே

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

கருத்தொன்றுங்கேழ்க்கவேண்டாங் கடவுளால்வந்ததெல்லாம்
பொருத்திடமனமுங்கொண்டேன் புனிதராம்விஸ்வாமித்திரர்
வருத்தியவாறையெண்ணேன் வழுவுறேனெனதுசத்யம்
பெருக்கிடச்செய்வேன்கூலி பெற்றீரோவுரைப்பீர்சுவாமி.

(அரி-வ-ம்) சுவாமிதரகரே ? என்கருத்தைக் கேழ்க்கவேண்டாம், விதியால் வருவதெல்லாம் அனுபவிக்க சித்தமாயிருக்கிறேன், உம்மு டைய கூலியைப் பெற்றுக்கொண்டீரா வேதியரே.

தரகன் விருத்தம்.

வையகந்தனிலேகீர்த்தி வகுத்திட்டவரசேகேளென்
கையினிற்சிக்கினோர்கள் கடிகினிற்பொய்யைச்சொல்வா
ரையனேநீதானித்ய மெய்யனேநீயேசத்யன்
பொய்சொலரக்குடையாநானும் போய்வாறேனுசீர்வாதம்.

(தர-வ-ம்) ஐயா வேந்தனே ? என்கையிற் சிக்கினவர்கள் அனேக மாகிய கோரபாதங்களுக் குடன்படுவார்கள், நீயே நிலேபிசகாதவன், பொய்பேசாக் குடைபிடித்தவன், நான்தரகுப்பொன் பெற்றுக்கொண் டேன் போய்வருகிறேன், ஆசீர்வாதம், வாழி வாழி வேந்தனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயரேசுஷத்திரேச வன்பரேயடியேன்போற்றி
மெய்யராம்விஸ்வாமித்ரர் துணையடியிரண்டும்போற்றிக்
கைபதைக்குவித்தேனென்றே கழறுவீர்கௌசிகற்கே
மைபலாயடிமைகொண்ட பதியுடன்போறேன்சுவாமி.

(அரி-வ-ம்) சுவாமிதரகரே ? உமது பாதங்களுக்குப் போற்றிசெய்

தேன், விஸ்வாமித்திரமுனியி னிருபாதங்களுக்கும் அடியேன் பணிந்ததாகச் சொல்வீர், என்னை யடிமைகொண்ட துரையின் பின்போக விடைதாருஞ் சுவாமி.

(தர-வ-ம்) மகாசந்தோஷம், அப்படியே கவுசிகமாமுனிக்குத் தெரிவிக்கின்றேன், நீ வாழி வாழி மகாராஜனே.

## பொது விருத்தம்.

தாரகனுமேவிடைபெற்றே யரசன்தன்பால்
தவமுனியினிடமேகிக் கவலைகொண்டு
பரபரப்பாய்தான்சொன்ன வாற்கெலிக்கப்
பார்த்ததெலாம்வீணுன பலன்தானென்று
துறவிமுன்னேயரிச்சந்திரன் தன்னைச்செய்த
துன்பமெலாந்தான்செப்பித் துக்கத்தோடே
யரசனவன்பொய்பேசா மெய்யனென்றே
யன்றந்திட்டானவன்மனதில் நிறைந்திட்டானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? அரசனைவிட்டு நக்ஷத்திரேசன் விஸ்வாமித்திரனிடம்வந்து, தான்செய்ததுன்பங்களெல்லாம் வீணுனதால், அவன்பொய்பேசா மெய்யனென்று சொல்லுகிறதைக்காண்பீர்கள் கனவான்களே.

## தாரகன் விருத்தம்.

அன்பனேவிஸ்வாமித்திர வருந்தவமுனியேகேளாய்
மன்னனையென்னுலான மட்டிலும்வருத்திப்பார்த்தேன்
தன்னிலைதவிரக்காணேன் தகுந்தகுமவனேசத்ய
னின்னமேன்விருதாவெண்ண மெடுக்குநீர்வீணதாமே.

(தர-வ-ம்) விஸ்வாமித்திரமுனியே? என்னுற்கூடிய இம்சைகளெல்லாம் செய்துபார்த்தேன், அரிச்சந்திரன் நிலைபிசகக் காணேன் சத்தியனவனே யாக்கும், அன்றியுமுன் பாதங்களுக்கு நமஸ்காரஞ் சொல்லச் சொன்னுன் இரிஷியே.

## விஸ்வாமித்திரன் விருத்தம்.

ஆகட்டுமின்னங்கொஞ்சூமாட்டமுமாட்டிப்பார்ப்பேன்
போகட்டுஞ்சுடலைக்கேதான் புரிவித்தேயதிகதுன்பம்
வாகட்டுஞ்சமர்த்தைநானே வழுவறவறிவேனையா
ஜேகோட்டுமுமதுதிவ்ய க்ஷேத்திரமடைவீர்போற்றி.

(விஸ்-வ-ம்) ஐயா சுக்கிரமூர்த்தியே? இன்னங்கொஞ்சம் ஆட்டி அவன் நிலையை யறிகிறேன், நீருமதிருப்பிட மேகுவீர், உதமடிக்கே போற்றி, போற்றி.

## தோட்டியென்னு வீரவாகு விருத்தம்.

அடிமையேயுரைப்பேன்கேளா யயகுளவென்சேரிக்கே
கடிகியேநடப்போமுன்னைக் காத்திருந்தவனுமிந்த
முடிகுனிந்தமைச்சனுன்பின் முனைந்துமேவருவானாகி
விடியுறவெந்தன்தேவி யேகுவாளேகச்செல்லே.

(வீர-வ-ம்) டா யடிமையே? நாம் சேரிக்குப் போகனும் இந்த முடிப்பட்டா ஆண்டையைப் போகச்செல்லு, எம்பெண்சாதி கோவிச்சுக்குவா, நீ யிந்த புலாக்காவடியை எடுத்துகினுவாடா அனிச்சா.

(அரி-வ-ம்) மகாபக்கிய மப்படியே மந்திரியைப் போகச்சொல்லி, புலாக்காவடியைத் தூக்கிக்கொண்டு வருகிறேன்சுவாமி.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மறைவழுவாதவெந்தன் மந்திரிசத்தியகீர்த்தி
நிறையுடன்நக்ஷத்திரேசர் நீங்கினார்தாருபெற்றே
பறையருமகழப்பதாலே பாவிநான்பற்றிப்போறேன்
துறையைப்போற்காசிதன்னில் துணைவனேவாழ்வாயப்பா.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி? யான் என்னசெய்வேன்! ஈசன் இன்றல்லவோ என்னைப்பிரித்தான், இதுவும் விதியா! உஸ், இனிநடக்கவேண்டிய காரியத்தைப்பற்றி யோசிக்க வேண்டும், அத்தாவது நக்ஷத்ரர் போய்விட்டார், நான் எஜமான் பின்பற்றிப்போறேன், நீ இந்தக் காசியில் சுகமாயிருப்பாயப்பா மந்திரி.

(சத்-வ-ம்) ஆ! பரமசிவமே! இதுவுமுன் திருக்கூத்தோ! காசி விஸ்வநாதா.

## சத்தியகீர்த்தி தரு.

இராகம்-ஆகிரி, தாளம்-சாப்பு.

பல்லவி.

எப்படிப்பிரிவேன்-என்னையனே- எப்படிப்பிரிவேன்.

அநுபல்லவி.

இப்புவிதனிலென்னை யின்புடனாண்டிட்ட
கைப்பிடிநாதாவுன் கழலடிதனைவிட்டு. (எ)

சரணங்கள்.

அன்னையுந்தந்தைநீ ஆனகுருவென்றே
அகத்தில்மகிழ்ந்தேகூட அண்டிவந்தேனின்றே
உம்மைப்பிரிந்தேநா னுலகிலலைந்திட
ஓ! ஓ! ஓ! இவ்விதி யுற்றதோகுலைந்திட. (எ)
அக்காலத்தினிலென்னை ஆண்டவென்தந்தையே
அடிமையையினிக்காப்போ ராருகும்வேந்தையே

திக்காளவும்புதர் திசைதப்பிலெனக்குமே
தெரியேன்வேறுகெதி தேவேதனக்குமே. (௪)
தாயைப்பிரிந்தசிசு தானுகிடவும்பாவி
தரணியிலிழைத்திட்ட தனிப்பழியோதாவி
நாயைப்போலநாட்டில் நானலைந்திடமெய்யா
நட்டாத்திற்கைவிட்ட நலமாச்சுதென்னையா. (௫)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மதிதனிலுயர்ந்தவெந்தன் மந்திரிசத்தியகீர்த்தி
விதியினால்வருவதெல்லாம் விரும்பியேசகிக்கவேண்டும்
பதியெனுங்காசிதன்னிற் பாலனென்தேவியுண்டே
நீதியதுவிளைத்தேகாத்து நீயுமேசுகிப்பாயப்பா.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி ? விதியால் வருவதெல்லாம், அனுபவிக்கவேண்டும், இந்தநாட்டு அக்கிராரத்தில் சந்திரமதியும், தேவதாசனுமிருப்பதால் நீயுமிருந்து வேண்டிய பொருளை சம்பாதித்து அவாளையும் பாதுகாத்துச் சுகமாயிருப்பாய், வாழி வாழி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

திங்களுங்கங்கைதன்னைத் திகழுடனணிந்துதிவ்ய
மங்கையோர்பாகங்கொண்ட மதிமன்னருளிதாமோ
பொங்கவேயரசேயுன்னைப் புலையனுக்கடிமைசெய்த
பங்கனும்போறேன்பாதம் பணிந்திட்டேன்வாழிகோவே.

(சத்-வ-ம்) சுவாமி ? அடியேனைத் தாங்கள் தந்தையைவிட அதிக அன்புவைத்து காத்ததற்காகத் தங்களைப் பறையனுக் கடிமைசெய்த கொடும்பாவி, தங்கள் பாதம்பணிந்தேன், நான் போய் வருகின்றேன் உமதிருபாதங்களும் வாழிவாழி என்னாண்டவனே.

(அரி-வ-ம்) அப்படியேபோய் சுகித்திருப்பா யென்னருமை தங்கிய புலா, சத்தியகீர்த்தி? நீசதா வாழிவாழி மைந்தனே.—(மந்திரிவிலகல்)

பொது விருத்தம்.

மன்னவனும்விடைகொடுக்கமந்திரிநின்றுன்
மயானத்தைக்காக்குமந்தவீரவாகு
தன்னருமைதங்கியதோர்மாதைக்காண
தான்விரும்பிபறையனைப்போலபிணுயித்தே
துன்னவனுமுன்னடந்துயடிமைகேழ்க்கத்
தொனியெடுத்துப்பலவாறுமொழிகளாடி
அன்னநடையாளானசாமலாவை
அன்புடனேயழைக்கும்வாரறிகுவீரே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்விதம்மந்திரி பிரியக்கண்டவீ

ரவாகு அரிச்சந்திரமகாராஜனை பின்வரச்செய்து தான் முன்சென்று பறையனைப்போல் அபினயித்து நீச்சமொழிகள் செப்பி தன்தேவியாகிய சாமலாவை அழைக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

(வீர-வ-ம்) கேள்ரா டோ அடிமை ? நாயின்னேபோறேன் நீ கூடவேவாடா டோ அனிச்சா.

(அரி-வ-ம்) அப்படியே வருகிறேனென் ஆண்டவனே.

தோட்டியென்னு வீரவாகு சிங்காரப்பாட்டு.

சிங்காரமெட்டு

நாநாநன்னூனே-நன்னன்னநன்னூனே-நாநாநன்னூனே.
நாரிசென்னவாக்குபோல சாரிவரக்காணேனே. (நா)

தெம்மாங்கு

திருமால்பதியோரம்-இருபிரிவாம்நீரோடை
கருமணியேவூக்திரைக்க-உருகுறண்டிபெண்ணூனே.
வருவாள்செல்லியென்று வயிபாத்துநானிருந்தேன்
தருவாளென்றுசுகம் சாராயம்நாங்குடித்தேன்
இருவியிசிறுத்தவள் எவனோடேபோனாளோதான்.
நாநாநன்னூனே-நன்னன்னநன்னூனே
நாரிகுட்டிதன்னைவிட்டு நானும்வேறேஆனேனே
நாநாநன்னூனே-நன்னன்னநன்னூனே
சேரிப்பையன்சின்னான்கையில் சிக்கி அவள்சொக்கினாளோ. (நா)

தெம்மாங்கு

காப்புங்கனகசமூங்-கைநிறைந்தமோதிரமூங்
கோப்பியமாப்பூணுமெந்தன்-குடும்பிவரக்காணேனே.
வேப்பம்பூவாசம்-வீசுமவள்மேனி
பாப்பரக்குட்டிகள் பத்திப்பிடித்தாரோ
ஆப்பக்கடைதன்னிலே-அலுத்துப்படுத்தாளோதான். (நா)

தெம்மாங்கு

நண்டுதிம்பாள்நத்தைதிம்பாள்-நாரைகொக்குபூச்சிதிம்பாள்
தொண்டுகாராளருக்கென்-தோகைவரக்காணேனே.
வண்டுகள்சேரா-வன்னத்தலைக்காரி
குண்டுபோல்நாசியும்-கோரைப்பல்லுக்காரி
தண்டுதனைப்பிடித்தே-தானடப்போனாளோதான். (நா)

(போது-வ-ம்) அடா தோட்டி ? நீயாரைக் கூப்பிடுகிறா யடா.

(வீர-வ-ம்) என்பெஞ்சாரியை கூவுரேண்டோ எங்கூத்தியாரே.

தோட்டியென்னு வீரவாகுசுந்தரக் கண்ணிகள்.

புதுமையுள்ள ஆத்தங்கரை புன்னைமரச்சோலை
புளியம்பூநிறத்தையொத்த பூவைவரக்காணேன்
வாசமலர்த்தோட்டத்திலே வந்திருக்கச்சென்னேன்நான்
வாறேனென்றுவார்த்தைசென்ன வஞ்சிவரக்காணேன்
அந்திப்படசந்திப்பட அலைந்துதவிப்பேனோ
அன்னமும்வாராவிட்டால் ஆவிவிடுவேனே.

(பொது-வ-ம்) அடாதோட்டி ? என்னடா இப்படிக் கத்துகிறாய், உன்மனைவியை நீ வரும்போதே கூடவே ஏண்டா கூட்டிக்கொண்டு வராமற் போய்விட்டாய், இங்குவந்து கத்துவதில் பயனென்னடா.

(வீர-வ-ம்) ஓ்டே எம்மவன், நண்ணுசென்னியே, உங்சஜாதியிலே புருசன் வேலைக்குப்போனக்கா பெஞ்ஜாரியும் கூடவே இஸ்துக்குனு போறதோ செல்லு ஆண்டே நல்லஜாதி ஆண்டே.

தோட்டியென்னு வீரவாகு ஓய்யாரக்கண்ணி.

கருங்குயிலொலியே பெருக்கிளிமொழியே
வருகயேதுதடைவந்ததோ அடிசெல்லியே. (வருக)
கண்டுவெகுநேரமாச்சே வண்டுகளுங்கூவலாச்சே
கொண்டுமையலெங்கநின்றாளோ அடிசெல்லியே.. (வருக)
வரும்வயிபாத்துமே இருவியிபூத்துதே
கருங்குயிலிவரக்காணேனே அடிசெல்லியே. (வருக)
மாறுவயியில்லையே கூறுசெல்லவல்லையே
யாருகூடஆடப்போனளோ அடிசெல்லியே (வருக)

(பொது-வ-ம்) அடாதோட்டி ? இன்னேரம் நீ கத்தியும் உன்மனைவியைக் காணோம், நீ வந்தவேலையைப் பார்த்துக்கொண்டு போடா தோட்டி.

(வீர-வ-ம்) அடா எங்கூத்தியாரே ? பாத்தா சனுக்குமனுக்குனு யிக்கிறியே, நெத்தியிலே என்னுபூச்சு யித்து இக்கிறியே, சாமியைபாத்து இக்கிறியா ? ஜம்பம்பண்றியே, இதோபார் நானு காசி சாமியை கூப்பிட்டு என்பெஞ்ஜாரியை யிட்டுக்குனு வரச்செல்றேன்.

தோட்டியென்னு வீரவாகு-தங்கச்சிந்து.

ஆதிசிவமே அறியாப்பெரும்பொருளே
சோதிச்சுடரே சுயித்தின்மூனேயே
அனாதிநிதியே அருமறையோனே
காசிவாய்விஸ்வநாதா என்பெஞ்ஜாரி
காணோமேயென்னசெய்வேன்.

(வீர-வ-ம்) கேள்ரா அடே அனிச்சா ? இந்த கரிக்காவடியை தூக்கிக்கினு எக்கூடவே வாடா.

(அரி-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே எடுத்துக்கொண்டு வருகிறேன் ஆண்டவனே, ஆ! விதியே! இதுவும் விந்தையே!

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஆட்சியாமுமையாள்தன்னை யன்புடனணைத்தபாதா
நீச்சனுக்கடிமைசெய்த நின்னருளதுபோதாதோ
தாச்சியாங்கோவிறைச்சி தங்கியகாவுமின்று
வாச்சிதேதாதூக்கியேக வைத்தையோகாசிநாதா.

(அரி-வ-ம்) ஆ! பரமசிவமே! அடியேனைப் பறையனுக்கு அடிமை செய்து பார்த்ததும் போதாமல் இந்தக் கோவிறைச்சிக்காவடியையுந் தூக்கி ஏகச்செய்தாயோ! காசிமருவே!

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-நாதநாமக்கிரியை, தாளம்-ஆதி.

கல்லோதானுன்மனது கரையாதோவெந்தனுக்காய்
காவடியைத்தாங்கவிட்டாய் சழலடியைத்தாதா
அல்லோநான்பாவிதோஷி யானுலுமிக்கொடுமை
அமைப்பதுநீதியன்றே யாட்கொள்பொற்பாதா
கங்கைசுமக்கானெனக் கிறியவிறைச்சியைக்
கிட்டியென்தோளிலிட்டாய் கதிசரியோவேதா
மங்கையுமையாளுமுன் மனமுங்குளிர்ந்ததோ
மாட்டிறைச்சிதூக்கவிட்டாய் மழுவேந்தியநாதா
கோவைவளராதோனெனக் கொய்தமாமிசத்தின்
கூடைசுமக்கவிட்டாய் கிருபையுடனீதா
பாவையுடனேயென் பாலனும்வேறானார்
பறையனுயெனைவிட்டாய் பரமேயருட்போதா
தொண்டரைக்காப்போனென்றே-துதிக்குஞ்சுருதிமொழி
தூரமறையச்செய்தாய் துணையாரினிவாதா
அண்டமெல்லாந்துதிக்கு மன்பனைக்காக்குமருள்
அடியேன்மேல்நீக்கிவிட்டா யறிந்தேனினிபாதா.

(அரி-வ-ம்) ஓ பரமசிவமே! இப்படிக்கொத்த காவடியுந் தூக்கச் செய்தது உன்திருக்கூத்தோ! அறியேன் காசிநாதா!

பொது விருத்தம்.

ஐவ்வுயிர்காக்கவென்றே யேமனுநடன்கலந்து
அவ்வுயிர்தழைக்கவன்பை யறிந்திடுந்தேவிதானுஞ்

சவ்வுடன்தோலையேந்தி சாமலாவரிச்சந்திரன்றன்
ஒவ்வியநிலையைக்காண வோடோடிவருகின்றாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே? எமதருமராஜன் சொல்லிவந்தப டி, சாமலாதேவி, பறைச்சி வேடமெடுத்து வருகிற விதங்காண்பீர் கள் கனவான்களே.

தோட்டிச்சி தரு.

இராகம்-தன்யாசி, தாளம்-ஆதி.

பல்லவி.

தோட்டிச்சிவந்தாளே சாமியைத்தேடி தோட்டிச்சிவந்தாளே.

அநுபல்லவி.

நாட்டமுடனேகால ஞருமகிழ்ந்திட
வோட்டமுநடையுாக வூராருமிசழ்ந்திட. (தோ)

சரணங்கள்.

கையிற்கூடைகொண்டு கறுத்தமேனிபூண்டு
பையநடந்து பறைச்சிவார்த்தைகள்விண்டு. (தோ)
கோணக்கொண்டைவிளங்க குலுக்கிநகைத்துநின்று
நாணம்வெட்கமும்விட்டு நானேவெட்டிச்சியென்று. (தோ)
பார்த்தவர்கள்நகைக்கப் பல்லைவிளித்துக்காட்டி
சேர்த்துக்கண்ணைச்சிமிட்டி சேரியைவிட்டோடி. (தோ)
நீண்டஸ்தனங்களுடன் நீறும்பெருக்கப்பூசி
ஆண்டமார்களேயென்று அதிசயவார்த்தைப்பேசி. (தோ)

(பொது-வ-ம்) நீ ஆரம்மா? உன் ஜாதியென்ன? நீ எங்கேவந்தாய் சொல்லுவா யம்மா.

(தோட்டிச்சி-வ-ம்) அப்படியே செல்றேன்.

தோட்டிச்சி தரு.

இராகம்-அசாவேரி, தாளம்-ஆதி.

பல்லவி.

எங்கள்சாரி பறைசாரி ஆண்டே
சாரிக்கெலாமேலாஞ்சாரி ஆண்டே. (எ)

அநுபல்லவி.

திங்களிளம்பிறை கங்கையுடனேபுனை
மங்களவுமைபாகன் தங்குங்காசிநாட்டில். (எ)

சரணங்கள்.

செத்துக்கிடக்கு மாட்டை எடுக்காமலேயிருக்க மாட்டோம், ஆ ண்டே - அதை - சீராய் அறுத்துக்குடலெலும்பு சேர்ந்திடும்படிய

தைக்கட்டோம் - ஆண்டே - பத்துபேருமாய்ச்சேர்ந்து பொங்கலிடா முன்னம் ஊட்டோம் - ஆண்டே - பத்திரகாளிபூசை செய்யாமலே நாங்கள் கள்ளைத்திட்டோம்

சித்தமுஞ்சிவண்டி நினைவினிலேற்றியே
நெறிபிசகாமலே நேமமாய்ப்போற்றியே
கெட்டுவோம்-கொடி- கட்டுவோம்-பறை
கொட்டுவோம்-வசை-திட்டுவோம் ஆண்டே. (எ)

நேமநிஷ்டையாகவெண் ணீறுமெங்களும்பூசிக்கொள்வோம்-ஆண்டே-இன்னம்-நித்தமொவ்வொருபூசை-நத்திச்செய்துமே துயர்-மீள்வோம்-ஆண்டே-சாம்மாகிலுஞ்சுபகாரியவரும்பிணத்தைக்கொள்வோம் தண்டாளனென்றறிந்தால்காலாலுதைத்தப்புரந்தள்வோம்

ஆம்டையானைநாங்கள் அடேபுடேசாமியெம்போம்
அவனுமெங்களைச்செல்லி அடிகுட்டிஅக்காளம்பான்
ஆடுவோம்-சிவம்-நாடுவோம்-பதம்
பாடுவோம்-சுகந்-தேடுவோம்-ஆண்டே, (எ)

சாம்பசிவம்படைத்த சகலகுலங்களுக்குமேட்டி - ஆண்டே-சாரி அந்தணருடன்சார்ந்த பலருக்குமே போட்டி-ஆண்டே-ஆம்போ-கோழைபட்டாதவேளாள-ஆண்டே-பாதம்நாட்டி - ஆண்டே-எங்கள் அங்கத்துடன்சிரசும் படியப்பணிவோங்கரம் நீட்டி

வீம்புடன்பதினெட்டு விருதுகள் பூட்டுவோம்
வேறொருவரணிந்தால் விரட்டியேமாட்டுவோம்
வெல்லுவோம்-மற்ற-செல்லுவோம்-சுரு
கொல்லுவோம்-அடி-மெல்லுவோம்-ஆண்டே. (எ)

## தோட்டிச்சி சிந்து.

இராகம்-நாதநாமக்கிரியை, தாளம்-ஆதி.

சபைதனில்வீற்றிருக்கும் ஆண்டமாரே
சாதிசெல்லுறேன் சற்றே கேளும். (சபை)

நால்வகையோனிதன்னில்-உதிக்கும்
நாலுவுருவுகளெந்தன்பிள்ளையே
வேலவனென்பிள்ளையே-சித்தி
விநாயகன்றான்பெற்றதலைப்பிள்ளையே. (சபை)

பிரமனைக்கண்டெடுத்தேன்-ஆதிப்
பிரணவத்தாலேகெர்ப்பமடைந்தேன்
அரனைநான்கைப்பிடித்தேன்-நாட்டியம்
ஆடவைத்தேனெனைத்தேடவைத்தேன். (சபை)

அச்சுதன்கூடவந்தான்-உலகில்
ஆடுங்கருவிகளையான்படைத்தேன்
தெச்சணத்தில்நானிருப்பேன்-உன்னைத்
திருமுலைபடைத்தவள்நானுண்டே. (சபை)
சுருதிகளுருவானேன்-பிணங்கள்
சூழுஞ்சுடலைதனில்நிலையானேன்
கருவமும்நானறிவேன்-துஷ்ட
சண்டாளப்பிணங்களைக் கண்டித்தடிப்பேன். (சபை)
மனோவாக்கின்நிலையறிவேன்-எந்தன்
மாயமெல்லாமெங்கும்பாயவைப்பேன்
விநோதசபையைப்புகழ்வேன்-நாளும்
வேண்டிக்கொள்வேன் பதம்பூண்டுக்கொள்வேன். (சபை)

## தோட்டியென்னும் வீரவாகு கண்ணிகள்.

இராகம்-ஆனந்தபைரவி, தாளம்-ரூபகம்.

எங்கேநீபோனாய் ஆ! ஆ! எந்தன்செல்வி
எங்கேநீபோனாய்.
கங்குல்வருமுன்னே காணமலேயெந்தன்
காமிநேமியுனை சாமிநான்தேடினேன்.

## தோட்டிச்சி கண்ணிகள்

இராகம்-நாதநாமக்கிரிகை, தாளம்-ஆதி.

ஊருக்கப்புறமேகாளி தேருவரும்பண்டசாட்ட
சேருடனேகினேனங்கு வேறுசெயலிலைதோட்டி.
வீர—கன்னலைப்போல-பேசுகின்ற-எண்ணமுள்ளானே
கன்னியேயுந்தனைக் கருதியேயென்மனம்
காத்து-வேர்த்து-எங்கும்பார்த்து-ஏங்கினேன். (எ)
தோட்டிச்—செத்தமரிக்கப்போன முத்தனுக்கேகியெடுத்து
நத்தம்பாடியேரிபண்டே யுக்தமனேபோயிருந்தேன்.
வீர—கொக்கதைப்போலே யுடுத்திய கொண்டையயகாளே
கொப்புகாப்புமிட்டு குண்டுபுலாக்கிடும்
கூவிக்கோதேயுனைப் பாவிநான்வாடினேன். (எ)
தோட்டிச்சி—ஆப்பக்கடைவீதிபோயி ஏப்புக்காட்டிபையனிடம்
காப்பணத்தைக்கொண்டுவந்தேன் நோப்பாளமேனேடாசாமி.
(தோட்டிச்சி-வ-ம்) தா மாமாச்சி? இதென்ன இப்படிகோவிச்சிகி
றியே, கா ஊரெங்குஞ்சுத்தி எம்பேர் முத்தியல்லவா, தெரியாதா.

## தோட்டிச்சி விருத்தம்.

கன்றுகள்மேச்சுக்கட்டி காச்சிகூய்பில்லும்வெட்டி
கன்றுளசேரிவிட்டு நடுவப்ல்கனக்கேயகி
நின்றுகான்காத்துநட்டு நிலுவைகாசுகளுந்தண்டி
பின்றமேவரனினோர மேன்கோபம்வேண்டாந்தோட்டி.

(தோட்டிச்சி-வ-ம்) கேளடா எம்மவனே? நான் கூழ்சாசி, பில்லு வெட்டி, காத்துநட்டுவர யின்னேருமாச்சு, உனக்கேண்டா கோப்பா ளக் தோட்டி சாமி.

## தோட்டியென்னும் வீரவாகு உல்லாசக்கண்ணிகள்.

| | |
|---|---|
| கொத்தவாணும் கூட்டவாணும் | தங்காச்சிகண்ணே-எனைக் |
| கூடிருந்தாபோதுமடி | பெஞ்சாரிகண்ணே |
| மாடு-மேய்க்கவாணும் தேய்க்கவாணும் | செல்லாத்தாகண்ணே |
| என்-பின்னிருந்தாபோதுமடி | பெஞ்சாரிகண்ணே |
| கூய்-காச்சவாணும் கறைக்கவாணும் | தங்காச்சிகண்ணே |
| என்-கால்பிடித்தால்போதுமடி | பெஞ்சாரிகண்ணே |
| கண்ணு-வெட்டவாணும் விரிக்கவாணும் | செல்லாத்தாகண்ணே |
| என்-கிட்டிருந்தாபோதுமடி | பெஞ்சாரிகண்ணே |
| கோல்-வாங்கவாணும் வைக்கவாணும் | தங்காச்சிகண்ணே |
| எனைத்-தாங்கிருந்தாபோதுமடி | பெஞ்சாரிகண்ணே |
| காத்து-நடவாணும் தொடவாணும் | செல்லாத்தாகண்ணே |
| கிட்ட-படுத்திருந்தாபோதுமடி | பெஞ்சாரிகண்ணே |
| நெல்-அறுக்கவாணும் அடிக்கவாணும் | தங்காச்சிகண்ணே |
| நீ-பெருத்திருந்தாபோதுமடி | பெஞ்சாரிகண்ணே |
| ஆடி-குந்திகுந்தி ஆடிஆடி | செல்லாத்தாபெண்ணே |
| கொஞ்ச-கொப்பிப்பாட்டு சொல்லவேணும் | பெஞ்சாரிகண்ணே. |

(வீர-வ-ம்) டியே குட்டி எம்மவளே? கொறப்பையன் மூத்தங்கிட்டே கொப்பிபாட்டு செல்லிகினியே அதை இப்போ நா கேக்கணுஞ் சத்தே செல்றி எம்பெஞ்சாரி கண்ணே.

(தோட்டிச்சி-வ-ம்) டே மாமச்சி எம்பாட்டை கேக்கவா வேணும், அப்படியே செல்றேன் கேள்ரா எங்கருத்தசாமி.

## தோட்டிச்சி கொப்பிப்பாட்டு.

கொப்பியள்ளோ-கொப்பியள்ளோ-கொப்பியள்ளோ.

கொ-முன்னேமுன்னேவிநாயகனே முருகாசரஸ்வதியே கொ
கொ-வேலனுக்குமுன்பிறந்த வேள்முகா எம்மவனே கொ
கொ-கணபதிக்குபின்பிறந்த கந்தவேளேஎம்மவனே கொ

கொ-ஆதியிலேமாயனைபன் அறியாக்குலத்தில்வந்தேன் கொ
கொ-ஜாதியெனும்சண்மதத்தைசாடிமேலாய்நானேநின்றேன் கொ
கொ-பறையரல்லநாங்கள்குல பண்பையிகழ்ந்தோன்பறையன் கொ
கொ-சின்னஜாதியல்லதெய்வம் ஒழிநடப்போர்சிறியர் கொ
கொ-பெரியஜாதிஆண்டேநீங்கள் பிறந்தகுலமேதுசெல்வீர் கொ
கொ-மாடுதிம்போம்பறையர்நாங்கள்மாட்டுதிரமார்குடித்தார் கொ
கொ-ஆதியிலேமாடுரித்த ஆடவன்பேரென்னசெல்வீர் கொ
கொ-ஆறுவர்க்கும்வேலைசெய்தஅண்ணல்பேரைகொஞ்சம்செல்வீர்.கொ
கொ-மாறிமாறிநீர்பிறக்க மண்ணில்வருமுறையேதோ கொ
கொ-பாப்பறையன்தொடுநூலை படைத்தவன்பேரதைச்செல்லும்.கொ
கொ-இன்னமத்தசேதியெல்லாம் எம்புருஷாநீசெல்லடா. கொ

(வீர-வ-ம்) டீதங்காச்சி ? என்னைச்சேதி செல்லச் சென்னையே செல்றேன் கேளடிபெண்ணே.

(தோட்டிச்சி-வ-ம்) அடா எங்கருத்தசாமி ? ஆண்டமார் சேக்கணுமா எல்லாம் நல்லா செல்ரா செல்லு.

(வீர-வ-ம்) அப்படியே செல்றேன், நண்ணுகேள்றி அம்மவளே, ஆண்டமாரை, கீண்டமாரை பாத்துக்குனு யிருந்திணு கணுக்காலை வாட்டிடுவேன் ஏம்மவளே.

## தோட்டியென்னும் வீரவாகு தென்பாங்கு.

தெந்திநானே தென்னானே தெந்தி
நாதந்தி நாதந்தி நானானே.
தெந்திநானே தென்னானே தெந்தி
நாதந்தி நாதந்தி நானானே.

நானேபெரியவண்டி-குட்டி-நாட்டோருக்கெல்லாம்எஜமாண்டி
தானேபிறந்தவண்டி-வீர-சாம்பவனென்பெயராண்டி. (தெ)
பூணு நூல்என்னுதடி-பலர்-பூசிக்கொள்வெண்ணீறுமென்னுதடி
வேணுநாதம்என்னுதடி-நாலு-வேதந்துதிப்பதுமென்னையடி. (தெ)
தெவமறிந்தவனுன்தாண்டி-லோகந்-தெரியச்சென்னபறையேண்டி
தவமறியாதவன்தாண்டி-என்னை-தாய்ந்தவனென்பார்நீகேளேண்டி.
காடுகளைஎன்னுதடி-ஆண்டே-கட்டிக்கொள்விருதுமென்னுதடி
காடுபடைத்தவர்மாண்டுவந்தால்-தக்க-நலங்கொடுப்பவனுன்தாண்டி.
கோவைஅறுத்தவனுன்தாண்டி-கரி-குட்டிவுரித்தவனுன்தாண்டி
தாவைக்கண்டோனுன்தாண்டி-என்-தனக்குயெந்தவள்நீதாண்டி. (தெ

(தோட்டிச்சி-வ-ம்) அடா எஞ்சாமி ? ஆண்டமார் ஜாதிக்குந் அதுக்குமேல் நம்முதேயிக்குதடா, எனக்குநீபேசரி, உனக்குநானேசரி

தோட்டியென்னும் வீரவாகு வீராயி மெட்டு.

மதனவில்லடி நீயெனக்கு-குட்டி
மாரன்கணையடி நானுக்கு
மதனவில்லுக்கும் மாரன்கணைக்குமே
மாற்றலுண்டோடி செல்லாத்தா.

தோட்டிச்சி:—தாமரைப்பூவடா நானுனக்கு-சாமி
தழைக்கும்வித்தடா நீயெனக்கு
தாமரைப்பூவுக்கும் தழைக்கும்வித்துக்கும்
தாய்மையுமேதடா வெட்டியானே.

வீர—மட்டிப்பழமடி நானுக்கு-குட்டி
மதனப்பூவடி நீயெனக்கு
மட்டிப்பழத்துக்கும் மதனப்பூவுக்கும்
மாறுதலேதடி செல்லாயி.

தோட்டிச்சி—மல்லிகைப்பூவடா நானுனக்கு-சாமி
மருக்கொழுந்தடா நீயெனக்கு
மல்லிகைப்பூவுக்கும் மருக்கொழுந்துக்கும்
மாறுசெல்லப்போமோ வெட்டியானே.

வீர—வன்னமயிலடி நானுனக்கு-குட்டி
வானப்பேடடி நீயெனக்கு
வன்னமயிலுக்கும் வானப்பேடுக்கும்
வகைவேறுண்டோ செல் லாயிக்கண்ணே.

தோட்டிச்சி—வானக்கிளியடா நானுனக்கு-சாமி
வன்னக்குயிலடா நீயெனக்கு
வானக்கிளிக்கும் வன்னக்குயிலுக்கும்
வகையுமுண்டோடா எம்மவனே.

வீர—ஆதிபரமடி நானுக்கு-குட்டி
அநாதிஒளிவடி நீயெனக்கு
ஆதிபரத்துக்கும் அநாதிஒளிக்கும்
அகம்புறமுண்டோ செல் லாயிக்கண்ணே.

தோட்டிச்சி—பாதகிலேயடா நானுனக்கு-சாமி
பணியுக்குறிப்படா நீ எனக்கு
பாதகிலேக்கும் பணியுக்குறிக்கும்
பச்சம்வேறுமோடா வெட்டியானே.

(தோட்டிச்சி-வ-ம்) தா எம்மவனே ? உன் அயகுக்கும், என் ஒயிலுக்கும், சரியாயிக்குதடா, இப்படி ஆர் இருப்பாங்கோ.

(வீர-வ-ம்) டீ குட்டி தங்காச்சி ? நண்ணு அறிஞ்சி சென்னுயே, சவ் வாச், டீ எம்மவளே, — ஆ ! ஆ ! ஆ ! (சிரித்தல்)

(பொது-வ-ம்) அடாதோட்டி ? இவளாரடா.

(வீர-வ-ம்) அடா கேள்டோ வவுத்தியாரே.

தோட்டியென்னும் வீரவாகு-டப்பா.

தோம்தர-தோம்தரனா-கேள்ரா அண்ணே-தோம்தர-தோம்தரனா.

வாறுகண்ணி-மாறுவயதி-கேள்ரா அண்ணே
வந்திருப்பாளெந்தன்பரம்-சுந்தரக்கண்ணுள். (தோ)
ஆட்டைடிறச்சி-மாட்டுக்கறியும்-கேள்ரா அண்ணே
ஆசையுடனேபுசிக்கும்-நேசியாம்பெண்ணுள். (தோ)
கொள்ளுத்தண்ணி-கள்ளுத்தண்ணியும்-கேள்ரா அண்ணே
கொண்டுவரிலண்டிடாத-சண்டியாம்பெண்ணுள். (தோ)
சிற்றிடையுமுற்றகுணமும் கேள்ரா அண்ணே
சேர்ந்திருக்குமெந்தனுடன் சார்ந்திடுங்கண்ணுள். (தோ)
தன்னையறிவுன்னதத்தையும் கேள்ரா அண்ணே
தாயிருக்குமிடந்தெரியேயுள்ளகண்ணுள். (தோ)

(தோட்டிச்சி வ-ம்) அடா எஞ்சாமி ? செத்த எருமை யெடுத்தவ ர பாப்பாரச் சேரிக்கிப்போனவ னின்னேர மெங்கேபோயிருந்தே பண் மெங்கடா செல்ரா .எம்மவனே.

தோட்டிச்சி-ஆனந்தக் கண்ணிகள்.

காசிருந்தாகொண்டுவாடா-கறுத்ததலையா
காசிருந்தாகொண்டுவாடா.

சல்லாவாங்கிகட்டவேணும்-சாந்துபொட்டுதீட்டவேணும்
மல்லிகைப்பூவாங்கவேணும்-மாருமேலேவைக்கவேணும்
கள்ளுவாங்கிகுடிக்கவேணும்-கைகலந்துஆடவேணும். (க)
கடைத்தெருவேபோகவேணும்-கடலைவெல்லம்வாங்கவேணும்
விடப்பயலைப்பாக்கவேணும்-வெள்ளைக்கொடிபோடவேணும்
படுத்துகுனுஆடவேணும்-பக்கத்திலேநீயிருடா. (உ)
சேரிவிட்டுஓடவேணும்-சீமைசுத்திபாக்கவேணும்
வாரிவாரிகுடிக்கவேணும்-வந்தவனைஏய்க்கவேணும்
காரிமேலேஏறவேணும்-கண்சிமிட்டிப்பாரடாநீ. (௩)

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

ஒன்றும்நாஞ்செய்யவில்லை யுரைக்கிறேன்கேளாய்மாதே
கன்றைநான் தூக்கிச்சேரிக் கனுப்பியேவருகும்போது
தொண்டுமேமக்குச்செய்ய தொகைகொஞ்சமீந்துகொண்டேன்
கண்டுநீயிட்டவேலை கடிகியேசெய்வாள்பெண்ணே.

(வீர்-வ-ம்) அடி குட்டி ? நான்செத்த கணியெடுத்து சேரிக்க னுப்பிவிட்டு வரவயிலே, இவனை உனக்கு வேலைசெய்ய கொஞ்சங்காசு கொடுத்து வாங்கினேனடி.

தோட்டிச்சி விருத்தம்.

குணமதாய்நடப்பானோதான் குறையின்றிவேலைசெய்தே
பிணமதைச்சுமேபாணம் பிசகின்றிகாக்குவானோ
பணந்துண்டேயரிசியெல்லாம் பயமின்றியனுப்புவானோ
வணக்கமாநமதுகாணி வாய்வனோநம்பிலேனே.

(தோட்டிச்சி-வ-ம்) டாசாமி ? இவன்நிஜமுடையவனா ? சுடுகாடுகாப்பானா ? துண்டுவாய்க்கரிசி பணம்முதலானது சரியாயனுப்புவானா ? சொல்ரா எம்மவனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

எனக்கிவராண்டையாகு மெஜமானியாகும்நீயென்
றனக்குமேதாயதாகுந் தாளடிக்கடிமைநானே
மனக்குறைவேண்டாஞ்சத்யம் மாறிடேன்விளம்பும்வேலை
சினக்கின்றிச்செய்வேனம்மா சீரடிசரணந்தானே.

(அரி-வ-ம்) அம்மா ? இவரெனக்கு ஆண்டவன், நீரெனக்குத்தாயருகும், நானுங்களுக்கடிமை, சத்தியந்தவறுமல் நீங்களிடும் வேலைகளைக் குறைவின்றி செய்வேனம்மணி.

(தோட்டிச்சி-வ-ம்) டா மாமா ? இவன்ரொம்ப வயக்கமாப் பேசிகாண்டா, இவனுக்குத்தக்க வேலை செல்லடா மாமா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

எளியவரையிகழ்ந்துபேசி யினிப்பிலாப்பொருளடைந்த
பழிஞரைப்புகழ்ந்தேவாழ்ந்த பாவியரம்பிணங்கடன்னை
வழியுடன்சுட்டுநீறாய் வகுத்திடுமென்றனாண்டே
களிப்புடனெனக்குவேலை கழறினாற்செய்குவேனே.

(அரி-வ-ம்) எளியோரைக் கடிந்து, மோசத்தாற் பொருள் சேர்த்த பாவிகளையு மவரை அண்டிப்பிழைத்திருந்த துஷ்டப் பிணங்களையுந் தகித்து நீறுக்கும் ஆண்டையே ? எனக்கு ஏதாகிலும் வேலையிருந்தால் சொல்லுவீரையா ?

(வீர-வ-ம்) அடா அடிமைத் தோட்டி ? இதுதான் நான் வாயுங் குடிசை, குனிஞ்சிவந்து காலடியை கீயேவைச்சி, என்காலு ரொம்ப நோவுது பிடிடா பக்கலாம்.

(அரி-வ-ம்) அப்படியே பிடிக்கிறேனையா.

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-தன்யாசி, தாளம்-ஆதி.

பல்லவி.

எங்கேபோனாயோ ! ஓ ! ஓ ! சிவமே ! எனைமறந்தாயோ !

அநுபல்லவி.

மங்கையோர்பாக மமைத்திடுங்கரமே
திங்களேதீதாங்கிடுந் திகழ்சடைப்பரமே. (எ)

சரணங்கள்.

லோகங்களைவைத்தாயோ-என் லோகம்விட்டாயோ
போங்கரவதனைப் பூணாரம்பூண்டவா
கங்கைதரித்தவா கருத்திதோ ஆண்டவா. (எ)
ஆண்டைமனஞ்ஜோலிக்க-என் அங்கமதுக்ளிக்க
நீண்டகரங்கொண்டே பேயன்கால்நோய்நீங்க
வேண்டிப்பிடித்திட விட்டாய்விதியோங்க. (ஏ)
உத்தமர்மாண்டாலே-யதி யுருக்கமாய்ச்சுடுகாலே
மத்திமப்பிணத்தை மாறிவுதைத்திடுங்
சத்தியன்காலது சவுக்கியமடைந்திடும். (ஏ)

தோட்டி யென்னும் வீரவாகு விருத்தம்.

காலையேபிடித்தாயப்பா களிப்புற்றேனினிநீசெய்யும்
வேலைகளுனக்குநானே விளம்புவேன்பசுக்களுக்கே
பாலையுஞ்சுரக்கப்பண்ணும் பசும்பில்லையறுக்கவிந்தக்
கோலையுமருவாள்தாங்கிக் கொப்பெனக்கொணருவாயே.

(வீர-வ-ம்) அடா அடிமைத் தோட்டி? நீகாலை அமுக்கி புடிச்சே, நோவெல்லாம் போச்சி, நீபோய் நம்ப பசுவுக்கு, நல்ல பச்சைபில்லா யறுத்துக்குனு ஜல்தியாவாடா.

(அரி-வ-ம்) என்னுண்டவனே? எனக்குப் பில்லறுக்கும் வகைதெரியாது, கருணைகூர்ந்து காட்டினு லப்படியெ அறுத்துக்கொண்டுவருகிறேன், அபசாரம் மன்னிக்க வேண்டிய தையா.

(வீர-வ-ம்) டா அரிச்சா? இப்படித்தா னறுக்கிறது, தெரிந்துக் கொள்வா யடிமையே.

(அரி-வ-ம்) அப்படியே யறுத்துக்கொண்டு வருகிறேனையா.

சாமலா-கவி.

அரசனேயிந்த வடிமையின்சரிதை
வரிசையாயெனக்கே வுரைத்துவீர்சுவாமி.

(சாம-வ-ம்) சுவாமி? நமக்கு அடிமையானவனுடைய சரித்திரம் என்ன தெரியச் சொல்லும் பிராணநாதா.

எமதருமராஜன் விருத்தம்.

மாதேகேளிவன்சூரியவம்சத்துற்றோன்
மழுவேந்திதனக்கினியனயோத்தியாண்டோன்.

திதேதுமறியாதோனேபத்தினி.
தெளிவுற்றநல்லறிவோன்வஜிட்டனுக்கே
ஏதேதுங்குறையின்றிச்சீடனுனே
னிவன்சத்யனெனவிளம்பஇந்திரன்முன்னோ
கோதேயக்கவுசிகனுந்தியனென்றே
கூறினனிதிடங்கவாறுகாணே.

(எம-வ-ம்) பெண்ணே சாமலா ? இவ னயோத்தியாண்ட திரிசங்கி ன்ற சத்தியபாஷ அரிச்சந்திரனென்பேர்ன் இவனுக்கு இணை யிமையவ ரை சொல்லப்போகாது. இந்திரன் சபையில் வதிட்ட னிவனையுத்தம னென, கவுசிகன் மறுத்திவனை அசத்யனுக்கிறே னென்றுன்கோதே.

இதுவுமது.

இராஜரிஷிபிரம்மரிஷியிருவர்தானு
மேற்றினர்பந்தயங்கள்முன்னேபாவி
மோசமதுபுரியவேண்ணியாசகித்த
முடிப்பதனையிவன்பாலிலிருத்திநாட்டை
நாசகனுங்கைப்பற்றிக்கடனுந்தண்ட
நயமுடனேசுக்கிரனேஏவமாதை
பாசமின்றிவிற்றளித்தான்தரருக்காகப்
பாவைபேநமக்கடிமையானுன்கண்டாய்.

(எம-வ-ம்) ஏ ! பெண்ணே ? இவ்வாறு பந்தயமிட்டு யாகத்திற்குத் தானம்வாங்கிய பொன்னே கடன்சுமத்தி, நாடுநகரை பறித்துக்கொண் டு இந்தக் காசிவரச்செய்து சுக்கிரனைத் தரகனுக்கி, அவன்துயரா லிவ னி.பத்தினியை விற்றுக்கொடுக்க, தரகன்தன் கூலிகேட்க தான் நமக் கடிமையானுனென் றறிவாய் மாதே.

சாமலாதேவி விருத்தம்.

தெரிந்திட்டேநீர்தானிப்போ தெளிவுறவுரைத்ததெல்லா
மறிந்திட்டேனரசனம்ப னடிமையைநீக்கிச்செங்கோற்
புரிந்திடப்போவதெப்போ பெட்டெனவெனக்குத்தோண
யறைந்திடவேணுமென்றனுளனேதருமவானே.

(சாம-வ-ம்.) நீர்சொன்னதெல்லாந் தெரிந்தது, இனியிவன் மறுப டியும் இராஜனுவானு ? சொல்லுவீர் பிராணநாதா.

(எ-ம-வ-ம்). பெண்ணே ? இன்னங் கொஞ்சநாள்போனல், பின்பு சுகமடைந்து இராஜனுவானடி சாமலா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

சொல்வழுவாதயென்னை சுமங்கலிவுமைபாள்நேசா
அம்மனிகொண்டேநீதான் கடுந்துயர்விளைக்கப்போமோ

வல்வினையெதுவந்தாலும் வானவர்க்கிறையேகாப்பாய்ப்
புல்தனையறுக்கவைத்த புண்ணியனேகாசிநாதா.

(அரி-வ-ம்) ஓ! பரமசிவமே! உன்னடிகளே கெதியென நம்பியிருந்த என்னை புல்லறுக்கும்படி யெழுதிவிட்டாயோ! காசிநாதா!

## அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

### இராகம்-காம்போதி, அடதாளம்.

என்னவிதிவிட்டனே சிவமே!
ஏங்கிஅரிவாளைத் தாங்கிப்புல்லறுக்க. (எ)
முன்னாற்செய்தபழியோ சிவமே!
முற்றுமடியேனை நற்றாதிருந்திடில். (எ)
இன்னங்கோபமாகுமோ சிவமே!
எந்தன்மனைவியைத் தந்துமுறியாக. (எ)
கன்னல்மொழிபாலனுஞ் சிவமே!
கதறியலைந்திடப் பதறிச்செலமந்திரி. (எ)
உன்னையேற்றிப்பணிந்தோரை சிவமே!
ஊழ்வினைவந்துமே தாழுறச்செய்யுமோ. (எ)
என்னாலாவதேது சிவமே!
இறைவனெனப்பூமி துரையாய்நானண்டதும். (எ)
வின்னத்தோட்டிக்கடிமையாய் சிவமே!
விரலுமலுத்திடக்கரமும்வலித்திட. (எ)
வன்னப்பசுதின்னவே சிவமே!
வயலில்நின்றுபுல்லைக் கயவனைப்போற்கொய்ய. (எ)
நன்னதானபசும்புல்லாய் சிவமே!
நாயனறுக்கவுங் காயம்படவிரல். (எ)
என்னவலியிட்டனே சிவமே!
யீசாவுந்தன்கூற்றோ நேசாவெனைக்காரும். (எ)

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

கோவதிற்குணவுயீந்தாற் கோடியாம்புண்யமென்னும்
பாவமதெண்ணிநெஞ்சிற் பறையன்றனருட்படிக்கே
சாவதானங்களின்றிச் சடுதியிற்புல்லைக்கட்டி
யேவவுஞ்சிரமேற்றாங்கி யிட்டையோகாசிநாதா.

(அரி-வ-ம்) ஓ! காசிவாழும் விஸ்வலிங்கமே? பறையன் வீட்டிலிருக்கும் பசுக்களுக் கிதோ புல்லைக்கட்டிக்கொண்டுபோகின்றேன் இதுவுமுன் னருள்தான் சிவமே!

ரு௨

## அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-தர்பார்-தாளம்-ஆதி.

பல்லவி.

எப்படிநடப்பேன்-சுமைதாங்கி-எப்படிநடப்பேன்.

அநுபல்லவி.

இப்படியும்விதி யிட்டாயோயென்னையா
கைப்பிடித்தென்னையே காருங்காருமெய்யா. (எ)

சரணங்கள்.

உச்சியெரியுதே உள்ளங்கால்நோகுதே
ஓ! ஓ! ஓ! நாதா உடலெல்லாம்வாடுதே
மெச்சினையோவெந்தன் மேனிவதைங்கிட
மேட்டிதிக்கறிகிலேன் ஓ! சிவமே! (எ)
தோள்களும்நோகுதே தொடைகளும்விம்முதே
துடிக்குதேகால்களுந் தூயாகரஞ்சோருதே
நாள்களும்வந்ததோ நான்மனம்வாடிட
நம்பினேனுன்பதம் ஓ! சிவமே! (எ)
பிடரிவலிக்குதே பின்புறந்துடிக்குதே
பேசுநாவுலர்ந்தே பிரக்னையுமாறுதே
கடையனென்மேலுந்தன் கருணையைநாட்டுவாய்
கழலடிபோற்றினேன் ஓ! சிவமே! (எ)

(அரி-வ-ம்) ஐயா? இதோ வுமது கட்டளைப்படி புல்லைக்கொண்டு வந்தேன் சுவாமி.

(வீர-வ-ம்) அடா அரிச்சா? பில்லை பசுவுக்குப்போட்டு சீக்கிரம் வாடா.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயனேபடியேன்றன்னை யடிமையாய்க்கொண்டகோவே
துய்யனேபுல்லையெல்லாந் தோணவேபசுவிற்கிட்டேன்
மெய்யனேவேறுவேலை மேவும்வாறிருந்தாலன்பு
செய்யுவேவேணும்நாதா சீக்கிரம்புரிகுவேனே.

(அரி-வ-ம்) ஐயா? தங்களுத்திரவின்படி பசுவிற்கு, புல்லைப்போட்டு விட்டேன், இனிவேறுவேலை யேதாகிலும் செய்ய வுத்திரவு தாரும் என் அய்யாவே.

## தோட்டியெண்ணும் வீரவாகு விருத்தம்.

புல்லதைபசுவுக்கிட்டு புகழுடனோடிவந்தே
நல்லதாய்வணங்கிச்சொன்ன நண்பனேமகிழ்ந்தேனப்பா
வல்லையத்திகொண்டே வருந்தாமலிறந்தவன்றை
மெல்லவேயறுத்துத்தோல்மா மிசம்வேறுசெய்குவாயே.

(வீர-வ-ம்) அடா அனிச்சா? சந்தோசந்தான், இந்த செத்த கண்ணுக் குட்டியை அறுத்துரித்து கறிவேறு, எலும்பு வேறு தோல்வேருய்ச்செய்வாயடா அனிச்சா.

(அரி-வ-ம்) மகாபாக்கிய மப்படியேசெய்கின்றேனையா, ஓ! ஓ!! காசிநாதா! கன்றையு மறுக்கச் செய்தாயா!!!

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-காம்போதி, தாளம்-ஆதி.

பல்லவி.

மனது எப்படி துணிவேன் ஓ! காசிநாதா!
மனது எப்படித்துணிவேன்.

அநுபல்லவி.

கனமாயிருந்தவென்னை கன்றின்கழுத்தறுக்க
காசுகொண்டாயோவீசா கங்கைபுனைந்தகோவே. (ம)

சரணங்கள்.

காலனையுதைத்தவா கன்றின்தோலையுரித்தேன்
கரியுரித்தோனேவிதோ கையாற்குடலெடுத்தேன்
சீலமனைத்தும்விட்டு சிரசுவேருக்கினேன்
செப்புவதென்னவீரல் சிவனேநான்றூக்கினேன். (ம)
என்விதியெண்ணிப்பின் இருகாலைத்துணித்திட்டேன்
இடறேதுசெய்தேன்முன் னிருகால்களறுத்திட்டேன்
வன்மமுனக்குமென்மேல் வந்ததுவோபரமே
வாகாய்க்குடலுள்மலம் வாங்கிடவென்கரமே. (ம)
சிரத்தைப்பிளந்துதஞ் சிப்பியெலும்பும்போக்கி
சேர்ந்தவிறைச்சியுடன் செப்பும்மூளைவேருக்கி
பரமேயுமையாள்மேவும் பங்காகுரவனையை
பற்றியகன்றின்நாவை பாவிக்கையாலனைய. (ம)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மாண்டதோர்பசுவின்கன்றை மகிபனேயறுத்துத்தோலை
யாண்டவாவேறுசெய்தே யதினுளுமாமிசத்தை
வேண்டதையொருமையாக்கி வேணுதைவேறுசெய்தேன்
தாண்டவாவேறுவேலை தயவுடனுரைசெய்வீரே.

(அரி-வ-ம்) ஐயா? தங்களுத்திரவின்படி கன்றையறுத்து தோல்வேறு, மாமிசம்வேறு, எலும்புவேருகச்செய்தே னின்னம் வேறுவேலை அருள்செய்ய வேணுமையா.

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

அப்பனே யனிச்சாகன்றை யறுத்தவாற்மிகவுநன்றே
இப்படிப்பறையர்தன்னு ளெள்ளளவாகிலாகா

துப்பனேயுனக்குமிந்த துயருறவடிமையாக
வெப்படிவந்ததோதா வியம்புவாயெனக்குத்தானே.

(வீர-வ-ம்) அடா அனிச்சா ? நீ கண்ணுக்குட்டியை அறுத்தது ரொம்ப வேடிக்கையாய் இக்கிது, நா வாயும் இந்தசேரியில் இக்கும் எக்சாரியார் இப்படிசெய்யலே மாட்டார்கள், இது இக்கட்டும், நீ இதுக்குமுன் ராசாவா யிருந்த உனக்கு எப்படி இந்தமாதிரியா அறுக்கத்தெரியும் ! சவர்ஸ், உன்னே நண்ணு மெச்சினேண்டா, மெத்த கெட்டிகாரன், நல்லது, நீ அடிமையாயி இம்மாதிரி ஆனதம்கு வயியென்ன செல்லடா அனிச்சா, நா சற்றே கேக்குணும்.

(அரி-வ-ம்) என்னையடிமைகொண்டதுரையே? தாங்கள் கேட்டவாறு என்னு லியன்றவரையில் உண்மையாக வெளியிடுகிறேன்கேட்பீர்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தவமதுபுரிந்திடக்கௌசிகன்வந்துபொன்
தானமாய்ப்பெற்றுமென்றன்
றனிவசமிருத்தியேசென்றுமேபயிர்கெட்த்
தான்விடவிலங்கையெல்லாம்
கவகுணவோட்டினேன்பன்றியைமாட்டினேன்
கண்பிலாப்புலேச்சிமாரை
காடிடச்செப்பினூர்மறுக்கவேயெங்களுட
நாட்டையேதாரைகொண்டார்
கவனமில்லாமலேயோட்டினூர்வருகையிற்
கனத்தமுன்பொருள்தாவெனக்
காசியிற்மருவனெனதரகனையுமேவினூர்
கன்னிதனைவிற்றளித்தேன்
பவமிலாத்தரகனுந்தன்கூலிதாவெனப்
பற்றினனன்றிலோர்பொய்
பகரெனப்பேதையுன்னடிமைதானுகினேன்
பாவியென்றறிகுவீரே.

(அரி-வ-ம்) கேளுமெனே யாட்கொண்ட ஐயா ? தவத்தினிலுயர்ந்த விஸ்வாமித்திரரானவரென்னே, ஒரு பொய்வார்த்தைசொல்லச்சொன்னூர் யான். சொல்ல மாட்டேனென்றேன் இதனுலவருடைய் வஞ்சனையா லெனது நாடு நகரம் பெண்டுபிள்ளை முதலானதும் தோற்று, யானும் தங்களுக் கடிமையாகும்படி நேரிட்டது ஆண்டவனே.

(வீர-வ-ம்) அடா அனிச்சா ? ஒருபொய் செல்லிவிட்டால் இந்தமாதிரிகஷ்டம் வராதே செல்லிவிடுகிற தானே அடா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

இப்புவியழிந்திட்டாலு மிரவிமதிகப்பிட்டாலும்
கப்புமென்னுடற்போனாலுங் கனவிலும்பொய்யைச்சொல்லேன்
தப்புறேன்சத்யமீறேன் தயாபரா நீர்தான்சொன்ன
வொப்புறுக்கொடியசெய்கை யொருக்காலும்நாடேன்போற்றி.

(அரி-வ-ம்) ஐயா? பூலோகமழிந்தாலும், சூரியசந்திரர்கதிமாறினாலும், என்திரேகமழிந்தாலும், சத்யம்பிசகிபொய்பேசேனாண்டவனே

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

அப்பனேயனிச்சாவுந்த னுடையைக்கயட்டிவைத்தே
துப்பறுவென்குலத்தோர் தொடுத்திடும்வஸ்திரம்போல
இப்பயங்கம்பளத்தை யெகலிட்டுத்தட்டிபூண்டே
ஒப்பியுன்முடியிலேஞ்சை யுடுத்திமுன்வருகுவாயே.

(வீர-வ-ம்) அடா அனிச்சா? உன்துணியை யவிழ்த்துவைச்சி நம்பசேரியாரைப்போல் தட்டியிட்டு கம்பளிபோர்த்தி, தலைக்கு முண்டுகட்டி, என்முன்வருவாயடா அனிச்சா.

(அரி-வ-ம்) மகாபாக்கிய மப்படியே உடுத்திக் கொள்கிறேனையா.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-எதுகுலகாம்போதி, தாளம்-ஆதி.

| | |
|---|---|
| அரனேசங்காதரனேயுன்ற | னருளோவிது சிவமே! |
| அடியேனிந்தவேடங்கொள்ள | வமைத்தாய்விதி சிவமே! |
| துரைமன்னர்கள்பணிமகுடந் | தொட்டமுடி சிவமே! |
| துண்டுலேஞ்சுந்தான்கட்டிடத் | தொகுத்தாய்விதி சிவமே! |
| அம்புத்துணிதாங்குந்தோளி | லேயோயின்று சிவமே! |
| அருங்கம்பளியேற்றவைத்த | வருமைநன்று சிவமே! |
| வாளுங்கச்சைவலருமடி | வணிந்தவிடை சிவமே! |
| வருந்தக்கட்டிபூட்டவைத்தாய் | வகையறியேன் சிவமே! |

(அரி-வ-ம்) சுவாமி? நீர் சொன்னபடியே உடுத்திக் கொண்டேன் இதோ நான் பூண்டிருந்த துணிகளை, ஒப்புக்கொள்ளும் வேறுவேலை யாதோ சொல்லுமையா.

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

திடமுளவடிமைகேளாய் செரிவிப்பேனைதாங்காணி
சுடலைபோய்க்காக்கவேணுஞ் சோராமல்வருஞ்சவத்தின்
படலுளகொம்புநாரு பற்றியகாஷ்டமீதிற்
கடன்காசும்பிண்டந்துண்டுங் கவர்ந்திங்கேயனுப்புவாயே.

(வீர-வம்) அடா அடிமை? என் காணியாச்சியாகிய சுடுகாட்டுக்குப்

போய், தூங்காமல் வருகிறபொணங்களை சுட்டு, துண்டு சுடுகூலி வாய்க்கரிசி, பாடையிலிருக்கும் கொம்புமுதலானதை மோசஞ்செய்யாம லிவிட மனுப்பவேணும் அனிச்சா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

காருடன்கொம்புங்காசு நற்றுண்டுப்பிண்டமீய்ந்த
காருளகட்டையெல்லாங் கழலடிசேர்ப்பேனையா
விறடகாளேமேவ விடமொன்றுங்குகூபாதை
மீறிடாதனைக்கமார்க்க மினிப்புடனுரைப்பீர்போற்றி.

(அரி-வ-ம்) சுவாமி ? உம்முடைய ஆக்கினைப்படியே செய்கின்றேன், அவடத்தி லெனக்கிருக்க இடமும் போசனத்துக்கு மார்க்கமுஞ் செய்யவேண்டுமையா.

தோட்டியென்னும் வீரவாகுவிருத்தம்.

வாயிடுமரிசிகொண்டே வளர்பசிதணித்துக்கொள்வாய்
நோயுருக்குடிசைதங்கி நேரன்புடன்காப்பாயப்பா
நீயினியிறக்கலர்கா நீங்கியபணமுந்துண்டுந்
காயிதாப்படியெனக்கே கருத்துடனனுப்புவாயே.

(வீர-வ-ம்) அடா அடிமை ? வாய்க்கரிசியை நீ எடுத்துக்கொள், மற்றதை யெனக்கனுப்பு, அவ்விடத்திலிருக்கும் குடிசையில் வெகுஜாக்கிரதையாக இருக்க வேண்டியது.

(அரி-வ-ம்) மகாபாக்கியமப்படியே காத்துக்கொண் டிருக்கிறேன், செலவுதாருஞ் சுவாமீ, ஒருமனுவு சுடலைக்குவழிகாட்டவேணுமையா

(வீர-வ-ம்) ஆறு நா கூட வாறேன் வா அப்பா, அடிமை.

(அரி-வ-ம்) அப்படியே வருகிறேன் ஆண்டவனே.

(வீர-வ-ம்) இதோ பாத்தியா அனிச்சா ? இதுதான் சுடலை, இதோ பாணையிக்குதுபார் இந்த முத்திரைக்கோலை கையில்பிடிச்சிக்கொண்டு அதிகஜாக்கிரதையாய் காவல்செய்யவேணும் அடிமையே.

(அரி-வ-ம்) புத்தி, புத்தி, ஆண்டவா-சிவசிவா !!! சம்போ !!!

காசிகாண்டம்,

சம்பூரணம்.

சுப்ரமண்யன்சகாயம்.

---

ஸ்ரீ அப்பாவு பிள்ளை.



ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோதசபை.

# மயானகாண்டம்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஆண்டையேநின்வாக்கிற்கே யனுவெனும்பிசகுசெய்யே
னுண்டையேகாவல்சோரே னன்பதுந்தவிறேனையா
வாண்டையேயடியேனுக்கா யடர்ந்துபித்தூரம்வந்தீ
ராண்டையேயுமதுசேரிக் கன்புடன்செல்வீர்போற்றி.

(அரி-வ-ம்) சுவாமி ? தங்களுத்திரவின்படி சுடலையைக் காத்திருக்கிறேன், அடியேனுக்காக இவ்வளவு தூரம் நடந்தீர், தங்களுடைய திருப்பாதம் நோவிற்றோ தங்களிருப்பிடம் சேர்வீரையா..

(வீர-வ-ம்) டே அரிச்சா ? நீ சொன்னது நன்னா இக்குது, சரி, அப்படி போய்வாறேன் நீ நண்ணா காக்குணும்.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-நவரோஜ்-தாளம்-ஜம்பை.

ஆதிசிவமேயுனது யருளிதுவோஐயா !
அடியனிச்சுடலைபுக்க வமைந்ததுவேமெய்யா ! அரனே !
சோதிமதிதாணிந்த சுகுணமனமுடையா ! நின்
சொல்மறவாதடியனுக்கே சொன்னதிதுவிடையா ! சிவனே !
தந்தையும்நீதாயெனவே தான்மதித்தேனையா ! நின்
தனையனுக்கித்துயரருந்த தலைவிதியோதுய்யா ! அரனே !
இந்தகெதியிவ்வுலகி லெவருற்றாரறியேன் ! என்
இறையவனேவுனக்குச்செய்த விழிவெதுவோதெரிபேன் ! சிவனே,
காலனையன்றுதைக்கவந்த கருணையென்மேலிலையா ! உன்
கழலடியைத்துதித்துமவாராக் கருமமென்றன்றோலையா! அரனே !
யாரைவதைபுரிந்தேனோ வடுத்தவரைக்கெடுத்தேனோ!உன்
னடிநினைந்தாலருக்குமெனவுறைவதுதானோ ! சிவனே !
ஒருதரமுன்பேருரைத்தா லுகந்தருள்வோனென்றே ! தேவே !

ஓதுமொழியடியனுக்கா யொழிந்ததுவோவின்றே ! அரனே !
தருயமிதுவன் றனக்கே தயைபுரிவாய்நன்றே-இத்
தாரணியிலுனைப்பணிந்தேன் தனயன்ஞானமூர்த்தே ! சிவனே!

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-முகாரி, அடதாளம்.

சங்கராகங்காதரா நமசிவய சம்போசதாசிவனே ! அந்த
திங்களிளம்பிறையை-முடிமிசை தேக்கும்பரசிவனே !
நீதிமுறைபிசகி-வஞ்ச நேசருடன்கூடி - வெகு
காதகமதுபுரிந்த-கெட்ட கருமியோனோடி.
இந்தவிதியிட்டாய்-சுடுகா டிருக்கக்கெதிவிட்டாய் ! ஆதி
அந்தமாய்நீதிபெய்து-மூல காண்டபலன்தொட்டாய் !
வேதநெறியடைந்து-மநுநின் விதிபிசகாமன்றா ! மறை
ஓதவறமளித்த-பல னுதவினையோபாதா !
குறையெதுசெய்தறியேன்-ஏதுங் கோவித்துரைத்தறியேன்-உனை
பறையனும்நின்றிடவே-நீயும் பார்க்கப்போமோசிறியேன்
ஏதுக்குநீயெனவே-நம்பி யிருந்தவனையரனே ! மெத்த
வாதிக்கவுந்தகுமோ-என் வருமையைக்கொய்பரனே !

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அண்ணலேகயிலேவாசா வன்பனேயுமையாள்நேசா
விண்ணனேவிடைமீதேறும் வேந்தையேவநுவாயிங்கு
வண்ணனேயுனதுபாதம் வருந்தியேயழைத்தேன்மூன்று
கண்ணனேகாசிநாதா கடையனையாள்வாய்போற்றி.

(அரி-வ-ம்) ஓ! காசிநாதா! இதுவு முமது அருளாகும், அடியேனைக் காக்கவருவீர் பரமசிவமே.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ரூபகம்.

இன்னமும்நின்மனதிரங்காதென்னகொள்ளோயோ-ஐயா
இப்படிநானுனக்குச்செய்த விடரைச்சொல்லேயோ. (இன்)
மன்னவனுயெனையிருத்தி மகிழ்ந்தவனியே-இந்த
மயானங்காக்கவிட்டவர்வுன் மலரடித்தாயே. (இன்)
சிவம்பெரிதெனயோகவான்கள் சிந்திக்குறரே-நின்
சேவடிதொழுதாலேபல சிக்கறுமென்றுரே. (இன்)
தவமழைத்தனேசிறுவயதிலேதாழ்ந்தேனுன்னையே-நான்
தாவியழைக்கவந்தேகவலைத் தகிப்பாயன்னையே. (இன்)
பட்டபாடுமுற்றவறுமை பரமனேபோதும்-நான்
பாவிபாவிபதம்பணிந்தேன் பவமறவோதும். (இன்)

கெட்டநடத்தையிருக்கினுமுன்கிருபையால்நீக்கும்-ஐயா
கிரணம்வேதம்பொய்த்திடாமற் . . கெதியருள்தாக்கும். (இன்)

அரிச்சந்திரமகாராஜன் கலித்துறை.

பிறந்தநாமணமேலிறப்பதற்கென்றே பேசிடுமாற்
றாந்தநற்சுகமுந்துக்கத்திற்கீழெனுஞ் சொல்லுங்கண்டேன்
கரந்தனைக்கூப்பிச்சுடலையுங்காக்கக் கனிவுகொண்டேன்
வரந்தந்துமுன்னடிக்கீழாயிருத்தியே வாழ்விப்பையே.

(அரி--வ-ம்) ஓ ? பரமசிவமே ! துக்கஞ்சுகத்திற் கீடல்லவென்பதை யறிந்தேன், இப்போது சுடலையுங் காக்கின்றேன், உன் திருவடி காட்டி என்னையாட்கொள்வீர் காசிநாதா !

பொது விருத்தம்.

மன்னனைவிற்றபின்னர் மந்திரிவேறதாகி
நன்னகர்காசிதன்னி னொன்றேதங்கிநொந்தே
யென்னமோபலவாறெண்ணி யிறைவனைக்காணவேதான்
கன்னமாஞ்சேரிதன்னைக் கருதியேவருகின்றானே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? அரசனைப்பிரிந்த மந்திரி ஒருநாளெல்லாங் காசியிலிருந்து பலவாறெண்ணி, அரிச்சந்திரனைப் பார்க்க ஆசைகொண்டு தேடுகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

சத்தியகீர்த்தி தரு.

இராகம்-தர்பார், தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஆ! சிவமே ! நல்லகதியாக்கினாய் சிவமே !

அநுபல்லவி.

அண்ணா ! அருள் வண்ணா ! இது-நண்ணா ! முக்கண்ணா ? (ஆ)

சரணங்கள்.

அன்னை தந்தையென வெண்ணியிருந்தவென்
னரசனைப் பிரித்தாயே ! அந்த
ஆதிலட்சுமியைப்போ லொத்தவென்தாயை
யடிமையா விடுத்தாயே !
உன்னைக்கதியென்றதுவு முக்தமனைப்பிரிந்ததுவுந்
தன்னந்தனியானதுவுந் தனையன்வேறுபோனதும். (ஆ)
ஆனைக்கதியென விருப்பேனினி
யரசனைவிட்டு நேயா ! என்
அங்கம்பதறுது ஆவியுஞ்சோருது
அரியயன்றியாத் தூயா !
வேறேயாரைச்சாருவது வேந்தனையேன் தூருவது
பேரைத்தான்கோருவது பித்தகனைக்கூறுவது. (ஆ)

வேந்தர்வேந்தனே வினைநினைந்து-நீ
விட்டாய்பறையனுக் காளாய்-ஞான
வித்தகனேபரி சுத்தவனே-யுனை
விரும்பித்தொழுதுமே நாளாய்
சாந்தம்நீவிட்டதெனோ சதிபுரியத்தொட்டதெனோ
பாந்தமதையற்றதெனோ பாவியும்நான்கெட்டதெனோ (ஆ)
அரசனைமுறியக்கினு மென்றுமே
யவனியோரெனே யேச-பின்னும்
அரும்பாவியான வமைச்சனென்றுமே
யாவரும்வசைதனைப் பேச
சுரர்பதிநீதந்ததவுஞ் சுகுணனையேபிரிந்ததுவும்
வரமருளாதிருந்ததவும் வஞ்சகனுண்ணதுவும். (ஆ)

(சத்-வ-ம்) ஓ! ப்ரமசிவமே! என்னரசனைக்காண அருள்செய்ய வேண்டும் காசிநாதா; சி, மதிகெட்ட மனமே? ஏன் இல்லாத இடங்களெல்லாந்தேட முயல்கின்றாய், இதுசரியல்லவே, முன்புதரகனுக்கு பொன்கொடுக்க உன்னரசனை யாரிடம் வித்தனையோ, அம்மகானுபாவனிருக்குமிடமாகிய சேரியிற்போய் தேடுவையாகில் ஒருக்கால் உன்பிதாவையொத்த மன்னனைக் காணலாம், அதைவிட்டு ஏன் நாயைப்போல் அங்குமிங்கும், உழன்று திரிகிறாய், வேண்டாம் அங்கனேசெல்.

## சத்தியகீர்த்தி தண்ணிகள்.

இராகம் - முகாரி, தாளம் - சாப்பு.

எங்கெனைத்தேடுவேனீசா! மன்னனிருப்பிடமறிகிலேன் பவநாசா!
திங்களணிந்திடும்நாதா-நற்-றவனேகாக்கவா வேதா!
காய்கன்குலேக்குதே யையே! என்றன்-நாதனேவாட்டுமே. மெய்யே!
சேய்களுலாவுதே நாதா-கந்தை-சிற்றிடைவிட்டுமே போதா!
(சத்-வ-ம்) ஓ! ஐயா? என்னரசனைப் பார்த்தீர்களா? சொல்லுங்கள்
பருந்தும்பறக்குதே நாதா-சீதல்-பற்றிநாயிழுக்குதுமே நாதா!
வருந்துதென்னுள்ளமே நாதா-மன்னன்-வாழிடந்தெரியாமல் நாதா!
சுரைபடர்ந்திருக்குதே நாதா-வீட்டில்-சுந்தரரிருப்பாரோ நாதா!
அரைந்தாணிதோலுக்கே நாதா-சந்தி-னகல்முங்காயுதே நாதா!
(சத்-வ-ம்) ஓ! அம்மா? என்னரசனைப்பார்த்தீர்களா? சொல்லுங்கள்
சின்னக்கூழ்தீனி னுதா-ஈக்கள்-சேர்ந்துமேமொய்க்குதே நாதா!
வந்ததோவிவ்விதி நாதா-மன்னர்-வாழ்ந்திடவிவ்விடம் நாதா!
சேரியெல்லாந்தேட நாதா-நான்-சிக்கிமெய்வாடினேன். நாதா!
வீரியனென்வேந்தன் நாதா-எங்கும்-வீற்றிடக்காணே னைநாதா!



## சத்தியகீர்த்தி விருத்தம்.

பறையர்கள்வாழுமிந்தப் பண்பிலாச்சேரியெல்லாஞ்
சரைக[illegible]ந்தோலுஞ் சோக்குதேயன்றியெந்தன்
துரைதனையடிமைகொண்ட தூயன்றன்வளவைக்காணே
னுரைசெயவேண்டிக்கேட்டா லுண்டிலையெனச்சொல்லாரே.

(சத்-வ-ம்) ஓ! சிவமே? இந்தச்சேரியெல்லாந் தேடினேன், நாயும், கழுகும், தோலும், காணுகின்றதேதவிர, என்து அரச னிருக்குமிடந் தெரியேன், சொல்வோருங் கிடைக்கவில்லையே காசிநாதா!!!

## சத்தியகீர்த்தி விருத்தம்.

தேடினேனிங்குதானே தேவனைக்கண்ணுற்காணேன்
நாடிபேசுடலைகாக்க நாயகாவேணுமென்றே
பாடினுன்விற்றபோது பண்புடன்வீரவாகு
மோடினனங்குமுற்றே யும்பனைத்தேடுவேனே.

(சத்-வ-ம்) ஆ! காசிநாதா? இவ்விடத்தில் இராஜனைக் காணேன்! வீரவாகு வாங்கும்போது சுடலை காக்கவேணுமென் றல்லோசொன் ஞன், ஆனதால் அங்கும்போய்த் தேடுவேன் விதியே.

## சத்தியகீர்த்தி-தரு

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

தேடித்திரிகிறேன்-என்னண்ணலைத்-தேடித்திரிகிறேன்.

அநுபல்லவி.

தேடித்திரிந்துமே　　வாடிச்சேரிபார்த்தேன்
நாடிடச்சுடலையை　　யோடிநான்கண்டிட. (தே)

சரணங்கள்.

நாட்டைவிட்டேதனி　　பாட்டைதொட்டேசுடு
காட்டைக்காணவழி　　யோட்டமாய்க்காட்டிக்குள். (தே)
இங்குங்காணுததா.　　லொங்கிமனம்வாடி
எங்குந்தோணும்பூதர்　　தங்கிநான்பார்த்துமே. (தே)
பாலைவனம்விட்டு　　சாலைவழிதொட்டு
காலைவீசிருத்திர　　வாலையிடம்வந்து. (தே)
மண்டபம்வாவியுங்　　குண்டுசமாதியுங்
கண்டுமேமயானக்　　கொண்டுமகிழுடன். (தே)
நரிகள்கூவவுங்　　கரிகளோடவுங்
குரிகிப்பிணமது　　எரியுஞ்சுடர்கண்டே. (தே)
இராஜனுமிங்கையே　　வாசஞ்செய்வாரென்றே
நேசமாயெண்ணியே　　யாசையுடனோடி. (தே)

உற்றுப்பார்க்கிறேன், சுடலையை சுற்றிப்பார்க்கிறேன்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஆரடாபயலேயிந்த வடாதவிவ்விருளில்வந்த
தாரடாசுடலேதன்னிற் றங்கியவா றுதன்னைக்
கூரடாவுந்தன்பேரைக்கொப்பெனப்பேசாவிட்டாற்
பாரடாதண்டத்தாலே பதைத்திடமாட்டுவேனே.

(அரி-வ-ம்) ஆரடா? நீ யின்னேரத்தில்வந்து பார்க்கிறவன்? உன் பெயரென்ன? சொல்லாவிடில் இந்த தண்டத்தாலே உன்னை வீசியடிப்பேன் பாரடா.

சத்தியகீர்த்தி விருத்தம்.

ஆரெனவென்றுகேட்ட வன்புளகாவற்காரா
தீரனுமயோத்திமன்னன் திருவடிகாணவேண்டி
வீரமாயாவல்கொண்டு விரும்பியேயிங்குவந்தேன்
வேறதுவொன்றுமில்லே வெறுத்தெனைக்கோபிக்காதே.

(சத்-வ-ம்) அப்பா காவற்காரா? நான் வேறொன்றுக்கும் வந்தவனல்ல, எனது அரசனுகிய அரிச்சந்திரமகாராஜனைத் தேடிவந்தேன், கோபிக்க வேண்டாமப்பா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

உனக்கந்தவயோத்திமன்ன னுண்டிங்கனந்தானென்றே
கனத்துடனுரைத்தபேர்யார் கழிவுறுசுடலேதன்னில்
வனத்துடனவனிருக்கும் வாறுநீகண்டதேது
எனக்கதுதெரியநன்று யியம்பினுற்கோபிக்கேனே.

(அரி-வ-ம்) அடா? உனக்கவன் சுடலேயிலிருப்பானென்று சொன்னவர்யார்? அரசனிங்கு வரக்காரணமென்ன? தெரியச்சொன்னுற்கோபிக்க மாட்டேனப்பா.

சத்தியகீர்த்தி விருத்தம்.

மாமுனிகடனுக்காக மன்னனுங்காசிவந்தே
காமுனிமாதைவிற்றுக் கடன்றீர்க்கத்தரகன்கூலி
சாமியையன்றேகேட்கச் சத்தியகீர்த்திநானும்
நேமியைவிற்றேன்தோட்டி நிதிதந்துகொண்டான்காணே.

(சத்-வ-ம்) அப்பா? முனிகடன்றீர; என்தாயை விற்றுக்கொடுத்தபின், தரகன் கூலிக்காக எங்களரசனுன அரிச்சந்திரமகாராஜனை விற்றபோது, தோட்டிவாங்கினுன் அதினுலிங்கு தேடிக்கொண்டு வந்தேனப்பா காவலனே.

## அரசனும் மந்திரியும் வியசனமுறல்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அப்பனேசத்தியகீர்த்தி யரிச்சந்திரன்நானேகண்டாய்
யிப்படிநீயும்வாட வேற்குமோவென்றன்பாலா

தப்பவோமனுமேன்மை தவுமுனிகுறியாய்கின்று
கப்பவித்துன்பமுன்னைக் கருதியேவந்திட்டாயோ.

(அரி-வ-ம்) அப்பாசத்தியகீர்த்தி? நான்தான் அரிச்சந்திரன், எனக்கிந்த கதிவாய்த்தது, நீயுந்துயர மனுபவிக்கவேண்டி வந்தாயோ சத்தியகீர்த்தி.

## சத்தியகீர்த்தி விருத்தம்.

மன்னுதிமன்னர்போற்ற மகுடவர்த்தனர்கள்தாழ
த்ன்னதிசெங்கோலேந்தி தனிமையாய்நீதிபெய்த
வன்னரேநீருமிந்த வழுவுற்றமயானங்காக்க
பன்னகன்மகிழ்ந்திட்டானே பாவிசான்காணத்தானே.

(சத்-வ-ம்) என்னுண்டவனே? மன்னுதிமன்னர்சூழ வீற்றிருந்த என்சத்தியகோவே? நீ யிந்த சுடுகாடுகாப்பதுங் காலகதியோ? பாவியாகிய யானின்றுன் பணிந்தேன்சுவாமி.

## சத்தியகீர்த்தி தரு.

இராகம்-காம்போதி, தாளம்-ஆதி.

பல்லவி.

உன்னையுமிக்கதிசெய்தானே! பாழும்பிரமன்
உன்னையுமிக்கதிசெய்தானே!

அநுபல்லவி.

கொன்னைமாமலரோன்காசி கோமளனருளில்லையோ!
குணனே-மிக-கனனே-ஐயா!　(உன்)

சரணங்கள்.

தீரமும்பராக்ரமும்நின் வீரமுங்குன்றியேசுவாமி
கோரமானநீச்சவேடங்
கொண்டையோ-தூய-ருண்டையோ-ஐயா!　(உன்)

மெய்யனேநீதிசெலுத்துங் கையனேமாதைவிற்றே
பையனைப்பிரிந்தாயென்ன
பாவியா-கெட்ட-கோவியா-ஐயா!　(உன்)

தருமமும்பொய்த்ததோகால கருமமுமுற்றதோநாதா!
பெருமையுங்குன்றிடலானாய்
பேதையா-அநாதையா-ஐயா!　(உன்)

## சத்தியகீர்த்தி விருத்தம்.

ஐயனேயென்றுகோவே யடியனும்விற்றபின்பு
துய்யனேவில்லையாய்க்கொண்ட துரையின்பின்னேகினீரோ.
பையவங்கேதுசெய்தீர் பறைச்சேரிவிட்டேயிங்கு
மெய்யனேசுடலைகாக்க மேவியவாறைச்சொல்வீர்.

(சத்-வ-ம்) சுவாமி ? நான்தங்களை விற்றபின்பு, நடந்த சங்கதிகளையும், சுடுகாட்டுக்குவந்த காரணத்தையும், தெரியச்சொல்வீராண்டவனே

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-எதுகுலகாம்போதி, தாளம்-ஆதி.

என்னசொல்லுவேனப்பா ஏதென்றுபகல்வேனுன்தா
னெனக்குவந்தகதியை மந்திரி-மந்திரி !
பொன்னைக்கொடுத்தேகொண்ட புலையர்பின்னானேயப்பா
புலால்சுமந்தவிதியை மந்திரி-மந்திரி !
சேரியைக்கிட்டியபின்பு செம்மலுற்றநோயைப்போக்கி
செங்கையினாற்கால்பிடித்தேன் மந்திரி-மந்திரி !
கூரியவாற்வயல்புக்கி கோவுதின்னபுல்லறுத்துக்
கொண்டுமுடிதாங்கிவந்தேன் மந்திரி-மந்திரி !
பாவிகான்பசுக்கேயிட்டுப் பறையனைப்போல்மாண்டகன்றை
பற்றிக்கொய்தேதோலுரித்தேன் மந்திரி-மந்திரி !
தாவியேகாளதினுட தசைவேறெலும்புவேறாய்
தறித்தாண்டை முன்னேவைத்தேன் மந்திரி-மந்திரி !
கொண்டவர்மனமகிழ்ந்தே கொடுத்தனரிவ்வுடுப்பதை
கோரிப்பறைவேடம்பூண்டேன் மந்திரி-மந்திரி !
தொண்டனேநீயிச்சுடலைத் தோட்டியாய்க்காவென்றுசொல்லி
துரையிங்கிருத்தக்கண்டேன் மந்திரி-மந்திரி !
காசியில்வாழ்விஸ்வநாதன் கருணையதாமென்றுமெண்ணி
களிப்புடனிருக்கலானேன் மந்திரி-மந்திரி !
மாசிலாமணியோனுன மகுணன்பாதத்தைநாடி
மயானத்தைக்காக்கலானேன் மந்திரி-மந்திரி !

சத்தியகீர்த்தி விருத்தம்.

நாதனேநீருமிந்த நலிலொனுத்துன்பங்கொள்ள
காதகப்பிரமனென்ன க்ருத்துடனெழுதினானே
தோதகனுகக்காரி துணைப்படமுனிவனோடே
பாதகனுனுங்கண்டேன் பாவியினுயிர்வைக்கேனே.

(சத்-வ-ம்) சுவாமி ? உமக்கிந்த விதியிட பாவிபிரமனும், சனியனும், முனியு மொன்றானர்களோ ! இந்தக் கோரங்களைக் கேட்டு மென்னுயிர்வைப்பது சரியோ ! ஆண்டவனே !

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

இவனருளதனலல்லோ செல்வமுங்கண்டேனப்பா
இவனருளதனலல்லோ செல்வனைப்பிரியலானேன்

சிவனருளதனாலல்லோ செப்புருஞ்சுடலைவந்தேன்
சிவனருள்காக்குமென்றுன் சித்தத்தில்வைப்பாய்மந்திரி.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி ? சிவனருளா லரசுசெய்தேன், பெண்டு பிள்ளையைவிட்டு, அடிமையானேன், சுடுகாடும் காக்கலானேன், இது வும் சிவனருளே யென்றறிவாய் மந்திரி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

அப்பனேகோவேநீரு மடிமைபாய்ச்சுடலைவந்தீர்
இப்படியுமைநான்பார்க்க வெழுதியவிதியைநொந்தேன்
செப்பரும்பசிதணிக்கச் செய்தவாறெனக்குத்தோற்ற
வொப்பவும்கனிவுகூர்ந்தே யுரைசெய்வீருரைசெய்வீரே.

(சத்-வ-ம்) சுவாமி ? தங்களுடைய போஜனத்திற்கு எவ்வாறுசெய் துகொண்டீர், தெரியச்சொல்லும் சுவாமி.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அண்ணலாமடிமைகொண்ட வையனும்மனங்களித்தே
திண்ணவேசவத்தின்வாய்க்கே தேசத்தோர்விரும்பித்தூவும்
வண்ணம்ாமரிசிகொள்ள வாக்கதுவளித்தார்புத்திக்
கண்ணனேயரிசிதோஷங் கழிக்கும்வாறுரைசெய்வாயே.

(அரி.வ.ம்) அப்பா சத்தியகீர்த்தி ? என்னை யடிமைகொண்டவர்சவ த்திற்கிடும் வாய்க்கரிசியைமாத்திரமென்னையெடுத்துக்கொள்ளச் சொ ன்னா ரதின்தோஷம் நீக்கும் வகையைச் சொல்வாய் மந்திரி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

நல்லதுஎன்றன்கோவே நவிலுவேன்தோஷம்போக்க
வல்லவனளித்ததந்த வாய்க்கிடுமரிசியெல்லாம்
புல்லரும்பசுவிற்கீந்து புழுங்கிடுஞ்சாணந்தன்னை
வல்லவாகங்கையாட்டி வனமுடனருந்தலாமே.

(சத்-வ-ம்) சுவாமி ? அவ்வாய்க்கரிசியை பசுவுக்கிட்டு அதின்சாணத் தைக்கழுவிப்போக்கி அமுதைப் புசிக்கலாம் வேந்தே.

(அரி-வ-ம்) மெத்தசந்தோஷ மப்படியே செய்யலாமப்பா.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்வாறிருக்க, சந்திரமதியம்மனை ப்பார்க்க காலகண்டிவருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

காலகண்டி தரு.

இராகம்-மோகனம், தாளம்-ஆதி.

பல்லவி.

எங்கும்புகழ்நிறைந்தே அங்கக்குருவாய்நிற்கும்
மங்கைசுவாலைவந்தாள் காலகண்டியாய்
மங்கைசுவாலைவந்தாள்.

அநுபல்லவி.

திங்களொளியோவென வெங்குளோருந்திகைக்க
மங்கைசந்திரவதியின் மனநிலையைச்சோதிக்க.(எ)

சரணம்.

கறுத்தவளதமதை திருத்திக்கோதிமுடித்தே
கணவனுளங்களிக்கக் கண்ணிற்குமையிழுத்தே
பெருத்ததொடையுங்குஜஞ் சிறுத்தவிடையுங்குணம்
பேணியுடலமெங்கும் பூணிசுகந்தமணம்
பிடித்துதையினுலிலே மடித்துவெகுவிரைவாய்
கொடித்தகாலகண்டனேட் படித்துயாவருமேற்றும்
பெருமைநீறையணிந்து அருமைத்திலர்தந்தீட்டி
வறுமையுற்றமாதினே பொறுமையகற்றிநாட்டி. (எ)

(கால-வ-ம்) ஏதுகாணும் ? இன்னேரம் வரையிலும் நீ ரெங்கணம் போயிருந்தீர் ? இதென்ன வேடிங்கண்ணுமாக இழுத்துவந்தீர் காணு மையரே,

(காலகண்டன்-வ-ம்) அன்னுடிசேஷி, நேக்கிவளும், நோக்கந்தப் ப யலும், வேலேசெய்யக் கொண்டுவந்தேன்டி.

(கால-வ-ம்) நேக்கு ஏதுக்குங்காணு மிந்தப்பயல் ? நோக்கேஞே அவள், ஏதுனுணும், விசித்திரவார்த்தை சொல்கிறீர், வெறுமை கிடைத்தார்களோ சொல்லுமையரே.

(காலகண்டன்-வ-ம்) அன்னுடி, அன்னு, கொஞ்சம்போது காசு கொடுத்து வாங்கி வந்தேண்டி, நம்ம ஆத்து வேலேயெல்லாம் சீராய் செய்வார்களடி.

சந்திரமதி விருத்தம்.

தாமரைமலரைப்போன்ற தாயேயுன்பாதத்திற்கே
சேமமாய்சரணஞ்செய்தோம் நீதயைபுரிவாயிஷ்டே
காமியம்விடுத்துக்கால கதியதாலடிமையானேம்
தாமதம்புரியோமுன்சொல் கட்டிடோம்பணிவோந்தாயே-

(சங்-வ-ம்) சரணஞ் சரணமம்மா, காலகண்டித்தாயே! நீரேன் எங்களுக்காக ஐயர்பேரில் கோபித்துக் கொள்ளுகிறீர்கள், நாங்களே யடிமைப்பட்டு வந்தபடியினலே, தாங்கள் காலாலிட்டவேலேயை நாங்கள் தலேயாலே நடந்துசெய்கிறேமெங்களுக்குண்டான வேலேகளேச் சொல்லுமம்மா காலகண்டித்தாயே.

காலகண்டி விருத்தம்.

ஐயரேசுவாமிமிக்க வருந்தவந்தனிலுயர்ந்த
அய்யரேயிவளின்காக்ஷி தோணுதேபாரிதேபோலத்

தையலோவாதிலக்ஷுமி தனையனோதேசமாள்வா
னுய்யவென்வாயால்வேலை யுரைக்கவும்வருமோசொல்வீர்.

(கால-வ-ம்) ஓய் ஐயரே? இவளோமெத்த அழகியாயிருக்கிறாள், இவள் பிள்ளையைப்பார்த்தால் இராஜமகனாயிருக்கிறான், இவாள் வேலை செய்வார்களா நாதா.

(காலகண்ட-வ-ம்) அடிசேஷி? நீயிப்பேர்ப்பட்டயான வேலைகளைச் செய்வார்கள்.

காலகண்டி விருத்தம்.

ஐயரேயிவர்களுந்தா னடிமையாய்வந்தவாறுந்
துய்யவேவாழ்ந்தவூருந் தோஷங்கள்விளைந்தகூறும்
மெய்யரேயெனக்குத்தோன்ற மேவிட வேண்டுமுந்தன்
தையலாஞ்ஞன்களித்தே தகுந்தொழிலியம்புவேனே.

(கால-வ-ம்) ஓய் ஐயரே? இவாளடிமைப்பட்ட சங்கதிகளைத் தெரியச்சொல்லும் சுவாமி. (சற்றுவிலகிநின்று பேசுதல்.)

காலகண்டய்யர் இரட்டை ஆசிரியவிருத்தம்.

மாதேகேளிந்திரனுமுலகிற்சத்திய
மன்னனுண்டோவெனக்கேட்கவதிட்டமூர்த்தி
சூதேதுந்தெரியாதோன்பொய்பேசாதோன்
சொன்னமொழிதவறாதோனெனதுசீடன்
தாதேகேளயோத்திநகராள்வோனென்ன
தடித்துரைத்தேகவுசிகனும்பந்தயமிட்டுப்
போதேயவ்வரசன்பாற்பொன்யாசித்தே
புகழ்பெற்றவேயக்கிருத்திவிலங்கையேவ
வாதேதும்புரியாதோன்மடிக்கநீச்ச
வனிதைகளைத்தானனுப்பியணையவென்றான்
கோதேகேளவன்மறுக்கவரசைக்கொண்டான்
கொற்றவனையூர்விடுத்தப்புறமேசெய்து
ஈதேநற்றருணமெனச்சுக்ரன்றன்னை
யேவினன்பணந்தண்டத்தாரகனுக்கி
தீதேதுமறியாதோனிவனைவிற்றே
திகழ்பெருதமுனிகடனைத்தீர்த்திட்டானே.

(காலகண்ட-வ-ம்) பெண்ணே? தேவேந்திரன்சபையில், நாங்களிருக்குங்காலையி லிவ்வுலகில் சத்யனுண்டோவென இந்திரன்கேட்கவதிட்டன்தன்சீடனை அரிச்சந்திரனொருவனேயென்றான், அதிர்குலரிஷியாகியகவுசிகன் கடிந்துரைத்து அவனைப்பொய்யனாக்கக்கருதி, யாகத்திற்

குப்பொன்னிரந்து, அவன்பாலிருந்தி, மிருகத்தால் பயிரையழித்தான், அதை யரசன்வதைக்க, நீச்சமாகரையேவினன், அவாளரசனை மருவவரவெனக்கோரவே, அரசன்மறுக்க, முனிகோபித்து அவனரசைக் கவர்ந்து பரதேசிபாக்கி, முன்தானம்வாங்கி யவனிடம் வைத்த பொருளைக் கடனுகச்சுமத்தி, சுக்கிரனைத் தரகனுயமைத்து இங்கனுப்ப, மன்னனை யதிக தொந்திரவு செய்ததாலிவளைவிற்று முனிவன்கடனைத் தீர்த்தானென் றறிவாய்மாதே.

காலகண்டி விருத்தம்.

சொன்னதைத்தெரிந்தேனிந்த சுந்தரவதனுள்மைந்த
னென்னகாரணென்னுள்மட்டு மிருப்பர்களடிமையாகி
முன்னகர்தனையேயாள முனைவரோவிலையோநீரும்
பன்னவேவேண்ணும்பிராணை பதமானசுவாமிபோற்றி.

(கால-வ-ம்) என்பிராணநாதா ? இவாளிந்த அடிமை நீங்கி மறுபடியும் தங்கள் தேசஞ்சேர்வார்களோ இல்லையோ, தெரியச் சொல்லுஞ் சுவாமி.

காலகண்டய்யர் விருத்தம்.

இன்னமுங்கொடியதான விம்சைகள்கௌசிகன்றன்
வன்னமாய்புரியச்சொன்ன வாறதுபோலநாமு
மன்னமேநடத்தவேண்டு மனுபவித்திவர்கள்பின்னே
தன்னுலகாண்டுமெத்தகைமையாய்வாழ்வர்கண்டாய்.

(காலகண்ட-வ-ம்) பெண்ணே ? விஸ்வாமித்திரன் எனக்கு சொன்னபடி கொஞ்சம்போது, இம்சைகள் தரவேண்டும், இவாளனுபவித்து பின்பு தங்கள்தேசம்போய் சுகமாகவாழ்வார்களடி.

(கால-வ-ம்) அப்படியாசரி, இப்படிவந்துவிடு, ஓய் ஐயரே ? இவாளெல்லைவேலை நடக்குந் தெரியச்சொல்லும் பட்டுகெடப்பான்.

காலகண்டய்யர் விருத்தம்.

வீட்டினைவிளக்கிச்சாணந் விதமுடன்தெளித்துமுட்டை
தாட்டியாய்த்தட்டிநெல்லை தங்காமற்குத்திநாளும்
மீட்டிடுங்கூழையுண்டு மேவியேயிருப்பாள்பையன் [யே
மாட்டையுமேய்ப்பான்பெண்ணே மனதொத்துக்கைக்கொள்வா

(காலகண்ட-வ-ம்) அன்னுடி சேஷி ? இவள் நம்ப ஆத்திலுள்ள வேலைகளெல்லாம் செய்வாள், முட்டைதட்டுவள், மூத்தம் பெருக்குவள், நெல்லு குத்துவள், நீயிடுங்கூழைச் சாப்பிட்டுக்கொண் டிருப்பள் இந்தப்பயல் மாடுகன்னுகளை மேய்ப்பானடி சேஷி.

(கால-வ-ம்) இவன் பேரென்ன காணும் ?

(காலகண்ட-வ-ம்) இவள்பேரா சந்திரமதி.

(கால-வ-ம்) ஆமிவள்பேர் நேக்குத்தெரிந்தது இந்தப்பயல்பேரெ ன்னகாணும்.

(காலகண்ட-வ-ம்) இந்தப்பயல்பேரா நம்முடையதரசன்.

காலகண்டி விருத்தம்.

தேன்மொழிமாதேநீயுந் தெரிந்திடச்சொல்வேன்கேளாய்
நானுனக்கி நிமோர்வேலை நயந்துநீபுரியவேண்டும்
மேன்பொழுதியற்றப்போகா வெகுநேரந்தூங்கலாகா
தானிடுகூழையுண்டு தலைக்கடையுறங்குவாயோ.

(கால-வ-ம்) அடிசந்தி ? நானென்னவேலை சொல்லுகிறேனே, அதை க்காலதாமச மில்லாமற் செய்யவேண்டியது, பொழுது விடியுமுன் எ ழுந்திருக்க வேண்டியது, நான் சாதிக்கும்படியான கூழையுண்டு தலை க்கடையில் காவலாய் படுத்திருக்க வேண்டியது.

(சந்-வ-ம்) மகாபாக்கியந்தாயே, தாங்களிடும்படியான வேலைகளைமு டிகுனிந்து வணக்கத்துடன் அடியாள்செய்வேன், விவரமாய்ச் சொல் லவேணும் அம்மணி.

காலகண்டி விருத்தம்.

விடியுமுன்னெழுந்தேமுத்தம் விளக்கியேசாணமிட்டு
அடிமையேகோலந்தீட்டி யழுக்குளபாத்ரமெல்லாம்
படிமிசைதான்றுலக்கி பசுவிடுசாணந்தன்னை
நொடியினுள்வாரித்தட்டி நுணிதமாய்நெல்லைக்குத்தி
கடியுமிதவிடும்போக்கி கல்லையும்விலக்கியப்பாற்
குடித்திடப்பசுக்களுக்கே கோணமல்நீருங்கொட்டி
வடித்திடுங்கூழையுண்டு வதனமுந்தளர்ந்திடாமல்
திடித்துமேவிழித்துநீதான் றோகையேயிருப்பாய்தானே.

(கால-வ-ம்) அடிசந்தி ? விடியுமுன்னெழுந்து முத்தம்பெருக்கி, சா ணந்தெளித்து, கோலமிட்டு, பட்டிசாணமெல்லாம் வாரி பிசைந்துமு ட்டைதட்டி, மாட்டுத்தொட்டிகள் நிறைய ஜலங்கொட்டி, நான், சாதி க்கும்படியான கூழையுண்டு, தினமொன்றுக்கு பதின்கல நெல்லைக்குத் தி, உமிவேறு, தவிடுவேறு, கல்வேறாக்கி, அமுதுமுனை முறியாதபடி க்கும் அளவுகுறையாதபடிக்கு மொப்பித்து தலைக்கடையில் விழித்து க்கொண்டே உறங்கவேண்டியது சந்தி.

(சந்-வ-ம்) மகாபாக்கிய மப்படியே தாங்கள் காலாலிடும் வேலைகளை என்சிரசால் செய்துக்கொண்டு, தாங்கள் வார்க்குங்கூழை பஞ்சாமிர்த மாகவுண்டு தங்கள் சித்தத்திற்கு சந்தோஷமாகும்படி நடந்துக்கொள் ளுகிறேன் என்னம்மணி.

(கா-வ-ம்) சந்தோஷம், சந்தோஷமடி சந்திரமதி? நம்முடைய ஆத்துக்கும் போவோம் வாடி.

(காலகண்ட-வ-ம்) அடாய் கீச்சான்? என்முன்னே நடடா, நம்முடைய ஆத்துக்கு வாழிகாட்டடா.

(தேவ-வ-ம்) சுவாமி? அடியேனுக்கு வழிதெரியாது.

(கால-வ-ம்) இந்தப்பாட்டை வழியைப்பற்றி நடடாபயலே.

(தேவ-வ-ம்) மகாபாக்கிய மப்படியே நடக்கிறேன் சுவாமி.

(பொது-வ-ம்) சபையோர்களே? இப்படியாகக் காலகண்டையர் சந்திரமதி யம்மனையும், தேவதாசனையும், வீட்டுக் கழைத்துக்கொண்டு போனபிற்கு வேலையிடுகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

(கால-வ-ம்) அடிசந்தி? ஏதோபார்ப்போம் முத்தத்துக்கெல்லாஞ் சாணந் தெளியடி சந்தி.

(சந்-வ-ம்) அப்படியே முத்தமுதலிய யாவற்றிடங்களுக்கும் தங்கள் மனம்போல் சாணந்தெளிக்கிறேன் என்னைக்காக்குந் தாயே.

சந்திரமதி விருத்தம்.

என்னதான்கொடுமையையோ வியற்றினேனுனேபாவி
மன்னரின்பார்தசேர்வை மதிப்பின்றிகுறைகள்சால
பன்னகாபுரிந்திட்டேனோ பதைக்கவென் னுடம்புகூச
வின்னகரையன்வீட்டி லிடச்சாணம்விட்டாய்நாதா.

(சந்-வ-ம்) ஓ! காசிநாதா! நானென்ன பாதகஞ்செய்தேனோ! என் புருஷர் பணிவிடையி லேதுகுறை புரிந்தேனோ! இந்த வேதியர் வீட்டில் சாணந்தெளிக்கவிட்டாய் பரமசிவமே.

## சந்திரமதிசாணந்தெளிக்கிறதரு

இராகம்-கெண்டா, அடதாளம்.

ஜென்மாந்திரத்திற்செய்தசதியோ சிவனே! கௌசிகன்புரிமதியோ
இன்னுளிற்சாணமிடுமெகதியோ வீசனருள்வாராதோவிதியோ
மண்ணாண்டவரிச்சந்திரன்பாங்கி மகிழ்ந்திருந்தேன்கரத்திலோங்கி
எண்ணுமெண்ணினேன்தேங்கி யிவ்விதசாணங்கையிற்றாங்கி
ஆளனுக்குப்புனுகுபூசுகை யருமையாங்களபங்கள்வீசுமெய்
தானும்பணத்திகளோங்கிச்செய் தகுந்ததொழிற்புரியவிட்டாய்நீ
கெட்டகவுலுநாற்றம்வீசுதே கிட்டின்மேனியுமுடற்கூசுதே
பட்டணத்துஜனங்கள்பேசுதே பாதகியென்றெனையேசுதே
அள்ளித்தெளிக்கவிரல்நோகுதே யகங்கைபுறங்கைதேய்ந்துபோகுதே
துள்ளியெனதுமனம்வேகுதே நூர்க்கந்தத்தால்மயக்கமாகுதே
காற்றும்பனியுமென்மேற்றாக்குதேகணவர்வைத்தசுகத்தைநோக்குதே

ஏற்றுக்கொள்வாரைத்தேடலாக்குதே யிதைப்பெருக்கூற்றுய்விதிபார் [க்குதே
என்னையன்றுளிற்கைதொட்டு மேவற்றெழில்புரியவிட்டு
தன்னைப்பிரிந்தார் துயருற்று தான்வருவது மெய்ப்போமற்று
காசிவிஸ்வேசாநீயேகதி கவுசிகன்புரிகிறுன்சதி
மாசிலாதரிச்சந்திரபதி மகிழ்ந்திருக்கவேயருள்மதி

(சந்-வ-ம்) அம்மா ? சாணந்தெளித்தாயிற்று, வேறுவேலைசொல்லுந்தாயே.

(கால-வ-ம்) ஏதடி சந்தி ? கட்டியு முட்டையுமாய் தெளித்திருக்கிறுய், அது இருக்கட்டும், நீ இந்த விளக்குமாறால் முத்தம் பெருக்கடி பார்ப்போம்.

(சந்-வ-ம்) அப்படியே பெருக்கிறேன் என் அம்மணி.

## சந்திரமதி முத்தம்பெருக்குந்-தரு

ஸ்ரீராகம்-தாளம்-ஆதி.

பல்லவி.

விதியே ! இதுயார்செய்திட்ட-சதியே ! ஐயையோ பாழும் (விதி)

அநுபல்லவி.

மதியுடனயோத்தி-மானிலம்வாழ்ந்த
சதியெனைத்துன்பஞ் சார்ந்திடவிட்டாய். (விதி)

சரணங்கள்.

சந்தனம்புனுகுதனைப்பூசி-என்
சரசனரிச்சந்திர-துரையுடன்கூட
பந்தன்பாடலுமொழிபேசி-பல
பாங்கிகளென்துயிற்-றுங்கிடவிருபுரம்
கந்தமலர்கள்கைய்ற்கோசி-அதிற்
கனவருத்தமெந்தன்-கரங்களுற்றதென
எந்தன்மணாளரெனையேசி-அடியென்கண்ணே
இருத்திடுகரமதை-விரித்துபயன்னீரினிற்
றெரித்திடும்வலியென-உரைத்ததும்போச்சே. (விதி)
மாறுகையினிற்றெடலாச்சே-அதி
மகிழுறவந்தண-னிகழுறுபட்டியை
நேருடன்விளக்கவுமாச்சே-என்
நெஞ்சுநோவவிர-லஞ்சும்வலித்திட்
சேரும்பாத்திற்றுக்கலாச்சே-அம்மன்
செப்பியபடியே-ஒப்பிநேயநானும்
நீருமிழ்கால்வாய்கூட்டலாச்சே-பாழுந்தெய்வமே !

நிலைகொள்வாச்சனை-தலைதனக்கேறிட
மலமும்நீரொழுகிய-நிலமதைவிளக்க. (விதி)
முத்தம்பெருக்கலானேனையா-இதோ
மூக்குநீர்வடித்ததும்-நாக்குநீருமிழ்ந்ததும்
மெழுத்தத்துடைக்கலானேன்மெய்யா-இந்த
மிணுக்கெறிமாடமு-முால்குழிகூடமுங்
கட்டைத்துடைப்பமேந்திகையா-நான்
கால்களும்நோவிட-சாளரமுழுமையும்
பற்றாத்துல்க்கலானேன்துய்யா-ஓ! ஓ! சிவனே!
பாதகிகாளென்ன-காதகஞ்செய்தேனோ
சோதனைசெய்கிறாய்-வேதனைசகியேன். (விதி)
விதிபெருக்கவிட்டாய்நீயே-நாதா!
வெம்புதுயென்னுடல்-நம்புதுவுன்னையே
மாதினைக்காக்கவருவாயே-நான்
மன்னவுன்வாக்கிற்கு-பின்னங்கள்செய்தேனோ!
பாதிரேழிகூட்டவிட்டாயே-இங்கு
பார்த்தவரெந்தனை சாற்றிடமுறியென
ஓதிச்செல்லவுமகிழ்ந்தாயே-ஓ காசிநாதா
உன்பதம்நம்பினே-னென்மணவாளருந்
தன்மையுறுதிட-நன்மைபுரிகுவாய். (விதி)

(சங்-வ-ம்) அம்மா! தங்களுத்திரவின்படி முத்தம், பட்டிமுதலான அவிழ்த்தித் தீர்ந்தது தாயே.

(கால-வ-ம்) சந்தோஷம், தண்டுகோணாமல் கோலமிடுவாயடி சந்தி.

(சங்-வ-ம்) மகர்பாக்கியம் அப்படியே கோலமிடுகிறேன் தாயே.

## சந்திரமதி கோலமிடுந் கரு

இராகம்-தர்பார்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கோலமிடுகிறேன் - விதியே - கோலமிடுகிறேன்.

அநுபல்லவி.

நீலவிழித்தாசி நேர்மையைக்கொண்டு
காலகண்டன்தேவி கருதியவாறுகண்டு. (கோல)

சரணங்கள்.

நின்றுகுனிந்துமே கால்நோகார்ந்துமே
கெண்டச்சந்தகோவ ளிரிடைமேவ
தண்டுகள்கோணமற றுன்றிட்டியேபாவ. (கோல)

முத்தந்தன்னிலும்-மலர் மொக்கைப்பார்க்கிலும்
சித்தம்வருந்திட சேரக்கொடியோட்டி
யுத்தமியம்மனு மொப்பமனம்நாட்டி.(கோல)
தெருவில்வந்தேனே-ரேழி தீத்தலானேனே
விரல்கஜௌரிய வேர்வைசொரிய
பிரமனெழுதிய பெரும்விதிக்குரிய.(கோல)

(சங்-வ-ம்) அம்மா ? அடியாளுந் தங்களுத்திரவின்படியே கோலந் தீட்டினேன் தாயே.

(கால-வ-ம்) அடிசந்தி ? பசுத்தொட்டியி லிட்டிருக்குஞ் சாணத்தை செத்தையு மூமியுங்கலந்து, விளாங்காய்ப் பிரமாணமுருட்டி பிழக்கடை குட்டிச்சுவற்றில் கோணாகபடிக்கு முட்டைதட்டிவாயடி சந்தி.

(சங்-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே முட்டைதட்டுகிறேனம்மணி.

சந்திரமதி-கவி.

பலபலசாணமும் பகருடன்செத்தையும்
கலமுடன் தீண்டவும் நாதன்றன்செயலோ.

(சங்-வ-ம்) ஓ ! காசிநாதா ! என்கையினால் பலசாணந்தொட்டு, முட்டைதட்ட நீ யிட்டவிதியோ பரமசிவமே ! ! !

## சந்திரமதி முட்டைதட்டுங் கண்ணிகள்.

இராகம்-சுருட்டி-தாளம்-ரூபகம்.

சாணமுருட்டி முட்டைதட்டலாச்சே-முன்
சம்பத்துஞ்சுகம் பெருமையுமின்றேபோச்சே
நானிலத்தினி லென்னைப்போலொரு
நங்கையுண்டோமனம் லொங்குதேயாரு.(சாண)
எருமையிட்டமலமுஞ் சேர்த்தேனே-இதோ
வீணைப்பசுவிட்ட சாணங்குவித்தேனே
சிறுமையிப்படி யருந்தினோருண்டோ
செம்மலாஞ்சுந்திரரை நம்பினைதைக்கொண்டோ.(சாண)
கன்றுகழித்ததுங் கையால்வாரினேன்-சாம்பசிவா !
கடாவெருந்து வினீருந்தூரினேன்
செண்டுமெல்லிகையை கொண்டுநாளுடியே
செழித்தகரமிதோ வலிக்கநான்வாடியே.(சாண)
சாணிக்கூடையிடையிற் ருங்கியே-தலைவிதி-பெண்ணணி
சார்ந்துபரீழுஞ்சுவற்றி லோங்கியே
கோணிடாமலே நாணிபோலவே
கொண்டவள்மெச்சிட நின்றுநான்சாலவே.(சாண)

| | |
|---|---|
| கெல்லின்புதல்ரையு | மள்ளலானனே-சிவசங்கரனே ! |
| கோரய்க்கூளமுஞ் | சேர்க்கவானனே |
| சொல்லியவாறே | நெல்லிக்கனிபோல |
| சுறுக்காயுருட்டியே | பெருக்காமற்சால.(சாண) |
| எழுந்துவாடா | அழகாதேபாலா-என்கண்மணியே |
| யிருசிகண்டா | லடிப்பாளேகோலால் |
| குழந்தாயேண்டா | விழுந்தாய்தவறியே |
| கூவிடாதேயப்பா | தாவுவாளறியே.(சாண) |
| கணவனேதெய்வ | மென்றிருந்தேனே-காசிநாதா ! |
| காலமுமவர்பாதம் | பணிந்தேனே |
| குணமிலாளையுன் | கொடுமையிற்பட்டு |
| கூப்பிட்டேன்மன்னவா | காப்பாற்றிடக்கிட்டு.(சாண) |

(சங்-வ-ம்) அம்மா ? தங்களாக்கினையின்படி முட்டைகட்டியாயிற்று இன்னமடிபாளுக்கிடும்வேலைகளிருந்தால் உத்திரவுசெய்யுமம்மணி.

(கால-வ-ம்) அடிசந்தி ? பசுமாட்டுகளுக்குக் குடிக்க ஜலங்கொண்டு தொட்டிகளில் நிறையக்கொட்டி வருவாயடி.

(சங்-வ-ம்) நல்லதம்மணி, அப்படியே தொட்டிகளில் தண்ணீர் நிரப்பிவருகிறேன்.

## சந்திரமதி ஜலந்திரட்டுங் கண்ணிகள்.

இராகம்-சுருட்டி, அடதாளம்.

| | |
|---|---|
| தண்ணீர்க்குடமுன் | தலைமேலிடவுந் |
| ததியோவலளிட்ட | விதியோகானறிகிலேன். (த) |
| மண்ணின்மீதுமெய் | மன்னவன்தேவியாய் |
| மகிழ்ந்ததுமென்றன்சி | ரிகழ்ந்ததுமறிகிலேன். (த) |
| உச்சியெரிந்திட | வுடலும்வருந்திட |
| உற்றதுமிவ்விதி | பெற்றதுமறிகிலேன். (த) |
| மதியன்செய்ததும் | மாதவத்தால்வந்தும் |
| மறையவனடிமையாய் | வரைந்ததுமறிகிலேன். (த) |
| நெற்றிநரம்புபுடை | னேர்விழிநோவிட |
| நிமைக்குள்ளேயித்துய | ரமைத்தவாறறிகிலேன். (த) |
| பிடரிவலித்திட | பின்னரம்பிழுத்திட |
| பெற்றவாயிற்துன்ப | முற்றவாரறிகிலேன். (த) |
| பத்தாவின்பணிவிட | பாப்பானடிதொட |
| பூதமுன்செய்த | காதகந்தெரியேநான். (த) |

(சந்-வ-ம்) அம்மா? பகுத்தொட்டிகளிலெல்லாம் தண்ணீர் நிரப்பி னேன், வேறுவேலை திருவாய் மலர்ந்தருளினால்செய்கின்றேன் தாயே.

(கால-கு-ம்) அடி சந்தி? இஷிடமிருக்கிறநெல்லு பதிங்கல மிருக்கிற து, கொஞ்சந்தான், இவைகளைக்குத்தி உமிவேறு, தவிடுவேறு, கல் வேறு செய்து அரிசிகள் நொய்யாகாமற் படிக்குச் சரியாய் கொண்டு வருவாயடி சந்தி.

(சந்-வ-ம்) அப்படியே குத்திக்கொண்டு வருகிறேன் அம்மணி.

## சந்திரமதி நெல்லுக்குத்துங் கண்ணிகள்.

இராகம்-அபரூபம், தாளம்-ரூபகம்.

காசிவிஸ்வநாதா-நின் கருணைசெயத்திதா
மாசிலாபொற்பாதா உன் மலரடியிப்போதாதா
மன்னன்கைதொட்டாரென்னை-வெகு மகிட்சிகொண்டேன்முன்னே
அன்னப்பேடென்றேயென்னை-ஐயோ அழைத்தவரும்பின்னே
சந்தனம்பூசிடுங்கையா-லென்னை சரணமிடவிட்டாய்மெய்யா
உந்தனருளிதோதுய்யா-நா னுலக்கைத்தாங்கவுமையா
பஞ்சணைமீதுற்றமேனி-யிதோ பதைக்கவேகையைக்கோணி
நெஞ்சங்கலங்கிடநாணி-யிந்த நெல்லைக்குத்தவைத்தாய்பூணி
காதகமுனிவனாலே-யிந்த கருமம்வந்ததென்மேலே
பாதகஞ்செய்தேன்முன்னாலே-யினி பாராயருட்கண்ணினாலே
தோழிகள்தாங்கிடுங்கையும்-ஐயோ துவளுதுடலாவிமெய்யும்
தாழிலாக்கருணைசெய்யும்-காசி தயாபராமனம்வையும்
சல்லடைமுறந்தைத்தாங்கி-நெல் சார்புடைக்கவிரல்வீங்கி
வல்லவாநோகுதே ஓங்கி-அருள் வையுந்துயரோடநீங்கி
ஆட்சிவிசாலியென்தாயே-நின் அருளிப்போகாட்டநீயே
காட்சிகண்திறந்துவாயே-உன் கழலடிக்குநான்சேயே
எந்தனைக்கைதொட்டமன்னா-என்னை யித்தொழில்செயவிட்டதென்னா
உந்தனையிகழ்ந்தேனோமுன்னா-ளெனக் குரைசெய்யவாருங்கன்னா
ஏனழுகிறாயப்பா-முன் எழுதினவிதிதப்பா
தான்வருந்தலேனிப்பா-சிவங் தனக்கிதுமனமொப்பா.

### சந்திரமதி விருத்தம்.

காலகண்டையர்மேவுங் கற்புள்மாதேயம்மா
சாலவேநீர்கொடுத்த சமமிலாத்தான்யந்தன்னை
மேலதியுமியைநன்றாய் மீட்டியேதவிடுகல்லு
ஞாலமேலரிசிசெய்தேன் நயப்புடன்கைக்கொள்தாயே.

(சந்-வ-ம்) அம்மா? தாங்கள்கொடுத்த நெல்லைக்குத்தி உமிவேறு,

நவிபேறு, கல்வேறாகப்பிரித்து, அரிசிசெய்தே னம்மணி.

(கால-வ-ம்) அப்படியா! எதோபார்க்கலாம், அரிசிகளைநொய்களாக்கி பாழாக்கினியோ கொஞ்சமெடுத்துக்காட்டுவாயடி சந்தி.

(சந்-வ-ம்) அம்மணி? கொஞ்சமும் நொய்யில்லாமல் குத்தியிருக்கிறேன் பாருந்தாயே—(காண்பித்தல்)

(கால-வ-ம்) இருக்கட்டு மடிசந்தி, நோக்குகொட்டத்தனை கூழ்போதும், சாதிக்கிறேன், வாங்கிக்கொள்ளடி சந்தி.

(சந்-வ-ம்) கூழானலுந் தேவாமிர்தமாய்ப் புசிக்கின்றேந்தாயே.

(காலகண்ட-வ-ம்) அன்னடிசேஷி? இந்தப்பயலுக்கு யேதாகிலும் வேலையிடடி பார்ப்போம்.

(கால-வ-ம்) ஓய் அய்யரே? நேக்கு இவள்போதும், இந்தப்பயலுக்கு நீரே வேலையிடுங் காணும்.

(காலகண்ட-வ-ம்) அப்படியானல் சந்தோஷம், அடா நம்மிடதாசா? இங்குவாடா பயலே.

(தேவ-வ-ம்) சுவாமி-இதோவந்தேன்.

(காலகண்ட-வ-ம்) அடாய்தாசா? நீ நம்முடைய அடிமைபன்னே ஆனதால் இந்தப் பசுக்களையும், கன்றுகளையும், மேய்த்துக்கொண்டு வாடாய் பயலே.

(தேவ-வ-ம்) மகாபாக்கியம், அப்படியே மேய்த்துக் கொண்டு வருகிறேன் சுவாமி.

## தேவதாசன் விருத்தம்.

ஐயையோவிதிதானென்ன வடர்ந்தோர்காலந்தானே
பொய்யுரைதனக்கேயஞ்சிப் புவிதனைத்தாரைவார்த்தோந்
தெய்வமும்பொய்த்ததோதான் திரிபுராந்தகனேநாங்கள்
வையகத்தென்னபாவம் வகுத்தமோகாசிநாதா.

(தேவ-வ-ம்) ஐயையோ! காசிநாதா! இதுவுமுன் திருக்கூத்தோ! அல்லது நாங்கள் செய்தபாவமோ! என்னை மாடுமேய்க்க விட்டாய் பரமசிவமே!

## தேவதாசன் மாடுமேய்க்குங் கண்ணிகள்.

இராகம்-சங்கராபரணம், தாளம்-ரூபகம்.

மாடுமேய்க்கவோ மன்னன்தவத்திலே
மகனாய்ப்பிறந்ததும் விதி-விதி. (மா)
ஆடம்பரம்பினை யணிந்தநாதனே,
காடுகள்முள்ளிலுஞ் சரி-சரி. (மா)
மன்னருஞ்சூழ மகிழ்ந்திருக்காமல்
கன்றும்பசுமேய்க்க கதி-கதி. (மா)

காற்றும்வீசுதே கனலுமிஞ்சுதே
ஓட்டிமடக்கி யினி-யினி. (மா)
தாகமீறுதே தனுவும்வாடுதே
வேகம்போக்குவாய் சனி-சனி. (மா)
களையுமீறுதே கால்கடுக்குதே
பழையதுமிடான் பாவி-பாவி. (மா)
கோவினமீங்கள் கூடிவாருங்கள்
போவோம்மனை புகழ்-புகழ். (மா)

(தேவ-வ-ம்) சுவாமி? அடியேன் பசுக்கூட்டத்தை மேய்த்துக்கொண்டு வந்தேனுண்டவனே.

(காலகண்ட-வ-ம்) நல்லது பிள்ளாய், நமது மடிவேட்டிகளை யெல்லாம் ஊருக்கப்புற மிருக்குங் குளத்திற்குச்சென்று நன்றாய்த் தோய்த்துக்கொண்டு சீக்கிரம் வருவாயடா பயலே.

(தேவ-வ-ம்) அப்படியே தோய்த்துக்கொண்டு வருகிறேன்சுவாமி.

## தேவதாசன் வேட்டிதப்புந் தரு.

இராகம்-தர்பார்-ஏகதாளம்.

பல்லவி.

வேட்டிதப்புறேன்-இதோ-தேவரீருனும்சாதித்ததோர். (வே)

அநுபல்லவி.

விமலா-யுன்றன்.செயலா இது-கமலா-வந்து-நிமலா வருள். (வே)

சரணங்கள்.

குறுக்கிற்சொய்துமே-யிதோ-அறுக்கமயலுமே
சுறுக்கதாகவே-வருகவென்றான்
சூராயதி-வீராகதி-தாராயினி-பாராயருள். (வே)
செட்டிற்சேர்த்துமே-கை-பற்றித்தோய்த்துமே
நில்லாமலேது-செல்லாம்போக
நேசாயினி-யீசாபர-வாசாயடி-தாசாயருள். (வே)
குளத்தைக்கண்டுமே-கால்-ஜலத்தில்நின்றுமே
கொண்டேகுளி-ருண்டேகிட
கோலாசதி-லோலாபணி-லீலாவெம்-காலாவருள். (வே)
மூலேசேர்த்துமே-கரை-நூலேக்காத்துமே
முதுங்காதிட-பிதுங்காமலே
முத்தாஞான-சித்தாபர-வித்தாவென-தத்தாவருள் (வே)
மடித்துக்கொட்டியே-நீர்-விடித்துத்தட்டியே
மாராமலும்-நோய்க்கரை
மண்ணுமுக்-கண்ணுவென-தண்ணுஜ்க்-வண்ணுவருள். ()

உடல்வருத்தவும்-கை-தொடையருந்தவும்
ஓடோடியே-காடேவிட
உம்பாசிவசம்பாபுள-கம்பாதநி-யெம்பாலருள். (வே)

(தேவ-வ-ம்) சரி, இனி வீட்டிற்குச் செல்லுவோம், சுவாமி ? தங்க ளுத்திரவின்படி வேட்டிகளைச் சுத்தமாய்த் தப்பிக்கொண்டு வந்தேன் ஆண்டவா.

(காலகண்ட-வ-ம்) அடாய்தாசா ? கால்நோக்கு மெத்தநோகிறது எ னக்கு மெத்தசௌகுசாய் நித்திரைவரும்படி கால்பிடிப்பாயடாபயலே.

(தேவ-வ-ம்) அப்படியே தங்கள்காலைப் பிடிக்கிறேன் சுவாமி.

## தேவதாசன் கால்பிடிக்குந் தரு.

இராகம் - கேதாரம், தாளம் - ரூபகம்.

பல்லவி.

கால்பிடிக்கிறேன்-ஐயனே உன்-கால்பிடிக்கிறேன்.

அநுபல்லவி.

பால்மறந்திடாப் பாலனென்றறிந்தும்
பட்டியே-திட்டியே-கொட்டியே-சொன்னுற்போற். (கா)

சரணங்கள்.

செங்கோம்ருங்கிடு-மென்கரங்க-ளிங்கேநோகிட
அங்கம்வியர்த்திட-வாவிதளர்ந்திட
ஆடியே-நாடியே-வாடியே-சொன்னுற்போற். (கா)

ஆதியோசித்தே-விசாரனை-நிநேசித்தே
நிதிலாமொழி தேறவெழுந்திடு
செங்கையா-லிங்கையே-லொங்கியே-சொன்னுற்போற்.()

எண்டிசையேற்றவே-யரசனுக்-கண்டவர்போற்றவே
அண்டியபேர்களை யன்புடன்காத்திடும்
அங்கையாற்-சங்கையா-லொங்கையாற்-சொன்னுற்போற்.(கா)

பொது விருத்தம்.

மாதுசந்திரமதியுடனேமகனுங்காசி
மகிதலத்துவேதியற்குவருந்திவேலை
ஏதவனுமியம்பிடினும்பணிந்துசெய்தே
யிருக்குமந்தநாடனிலேசனியன்கோளாற்
றீதுபுரியடவிக்கேபாலனேகித்
திகழிலாத்துயருறவேய்யலார்வீட்டு
ஓதுவர்தன்மைந்தர்களுங்கூட்டமாக
வோடிவந்தார்காட்டிற்குமேகத்தானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாய் சந்திரமதி யம்மனும், தேவதாசனும், காலகண்டய்யர் வீட்டில் கஷ்டமானவேலைகள் செய்துகொண் டிருக்குங் காலத்தில், காட்டிற்குப் போகவேண்டி அசலாத்துப்பிள்ளைகள் வருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

அசலாத்துப்பிள்ளைகள் வருந் தரு.

இராகம்-சுருட்டி, தாளம்-ஆதி.

பல்லவி.

அசலாத்துமைந்தர்வந்தாரே-இதோ-இதோ.(அச)

அநுபல்லவி

பிசகில்லாமலே வேதமந்திரம்
பேசிடு-மேசிடும்-வாசிக்கா மூடரை. (அச)

சரணங்கள்.

ஆதிப்பிராமணகுலத்தோராகுமே-யாருங்காணாத
வரும்பொருடனையறிந்தோராகுமே
ஜோதிப்பெருவெளி சுடரைநோக்குவோர்
துய்யராய்மிக்கவே வையகம்வாழ்த்துவோர்
சூடிடும்-பாடிடும்-வேதத்தை-காணுமே. (அச)
பட்டுவஸ்திரமிடையிற்கட்டியே-யாவரும்போற்ற
பாரமடிதனை முடியிற்சுற்றியே
எட்டுத்திசைகளு மதிரவேதவுரை
எடுத்துப்பேசுவோர் தடுத்துரைப்போரை
ஏங்கவே-தேங்கவே-எண்ணி-மதித்திடும். (அச)
அஞ்செழுத்தையனுட்டித்தோனாளும்-வெண்ணீற்தனை
யணிந்தேநெற்றியி லழகுடன்தாளும்
நெஞ்சிற்கபடு சூதறிகிலார்
நிர்தாக்ஷண்யமா யேதும்புரிகிலார்
நேராக-வீராக-காட்டுக்கேயேகிட. (அச)

(சாமாசாஸ்திரி-வ-ம்) அடாகுப்பா? நீ காட்டுக்கு வருகிறாயா.

(குப்பாசாஸ்திரி-வ-ம்) குருட்டோழிமகனே நான்வரமாட்டேன், அப்பாசாஸ்திரியை யழைத்துக்கொண்டு போடாய் சாமா.

(சாமா-வ-ம்) ஓய் அப்பாசாஸ்திரி? நீவருகுறாயோ காட்டுக்குசொல்லுங் காணும்.

(அப்-வ-ம்) நானும் வருகிறேண்டா தேவடியாள் பிள்ளாய்.

சுப்பாசாஸ்திரி விருத்தம்.

சீனுநீவருவாயோதான் செப்படாயிலேயோநேக்கு
மேனுவுகட்டத்தும்பு மிக்கணமாகவேண்டுங்

காருறுதாண்டிச்சென்றே கயருக்குநாருந்தேட
காருசப்போறேனின்னம் நற்சமித்துக்கும்பாரே.

(சுப்-வ-ம்) அடாய்சீனு? நான்சமித்துக்கும், பசுத்தும்பிற்கு நாரு முதலானவை கொண்டுவரக் காட்டிற்குப்போறேன், நீயும் வருகிறு யா சொல்லும் பிள்ளாய்.

(சீனு-வ-ம்) நேக்கு தேர்பை முதலானது வேண்டியதுதா னிதோ நானும் வருகிறேண்டா சுப்பாய்.

(பெர் து-வ-ம) சபையோர்களே? அசலாத்துப் பிள்ளைகள் காட்டிற்குப்போவதை விஸ்வாமித்திரனறிந்து சூதுசெய்யக் காலகண்டைய னிடம்வருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

விஸ்வாமித்திரன் தரு.

இராகம்-ஆரபி, தாளம்-ஆதி.

பல்லவி.

கல்லகாலந்தந்தது-வதிட்டனை-நான்கெலிக்கவே வந்தது.

அநுபல்லவி.

கள்ளமறிந்திடாத காளைதேவதாசனை
காட்டிற்கேயேகவிட்டுக் கபடுசெய்யயோசனே.(நல்ல)

சரணங்கள்.

வேதியருக்குச்செப்பி-சிறுவன்றன்னை
விரட்ட அடவிக்கொப்பி
நீதிமாதுரைக்கினும் நிக்ரகிக்கவேயண்ணி
நிமைக்குளென்சபதத்தை. நேராய்முடிக்கநண்ணி.(நல்ல)

காட்டிற்குமவனேக-மகன்பின்னல்
கதறியேதாயும்நோக
நீட்டிப்பலசகுனம் நிர்வஞ்சகிமனதை
நெருப்பிலிட்டமெழுகாய் நீற்றுவாட்டிடச்சதை.(நல்ல)

அடவியிற்பாலன்சேர-நாகந்தீண்டி
அங்கவனுவிசோர
தடங்கண்டுசந்திரமதி தாங்கிச்சுடலைபுக்க
தந்தையுங்கண்டழுதே தாவிப்பொய்மொழிகக்க.(நல்ல)

விஸ்வாமித்திரன் விருத்தம்.

திக்குநேரன்றேயெண்ணித் தெரிசிக்கவந்தேனுதா
பக்குவக்காலமின்றே பலித்ததுமெனக்குமையா
கைக்குள்ளேயிருக்கும்பாலன் காட்டிற்கேபோகச்செய்தா
லக்கினிதேவேயக்கு மடியன்வேற்புரிகுவேனே.

(விஸ்-வ-ம்) சுவாமி? அக்கினிதேவரே? நீர்செய்த முயற்சியினுல்

மெத்த சந்தோஷமடைந்தேன், இப்போது தேவதாசனை அசலாத்து ப்பிள்ளைகள் காட்டிற்குப் போகிறபடியால், கூடவே யனுப்பினால் க னவ்விடத்தில் சிலகாரியங்களைச்செய்துபந்தயங்கெலிக்கின்றேன்சுவாமி

(காலகண்ட-வ-ம்) முனியே? இதுவுந் தகுதியானயோசனைதான், அப்படியே உமது இஷ்டம்போல் அனுப்புகிறேன். அவாளோமிகவும் பிடிவாதக்காரர்களாக இருக்கிறார்கள், ஆகிலும் ஒருகைபார்க்கிறேன். நீர் போய்வாரும் முனியே.

(விஸ்-வ-ம்) நல்லது ஆண்டவா.—(நீங்கல்)

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாக விஸ்வாமித்திரமு னி சொல்லிப் போனதின்பேரில், காலகண்டையர் அசலாத்துப் பிள் ளைகளுடன் தேவதாசனைக் காட்டிற்கனுப்புகிற விதங்காண்பீர்களாக வான்களே.

(காலகண்ட-வ-ம்) அடா முரட்டுத் தேவடியாள் பிள்ளைகளே? எவ் விடம் போகிறீர்களடா.

சாமாசாஸ்திரி விருத்தம்.

சமிதைகள்கொணரவேண்டி சாங்கமாயடவிக்கேகி
சுமைத்தருந்தெர்ப்பைபுஷ்பஞ் சோர்விலாவிறகுமுஷ்டி
நிமக்குளேபறித்துக்கொண்டு நேரமுமாகாமுன்னே
நம்க்குளவாத்துக்கேதான் நாம்வரப்போறோமையா

(சாமா-வ-ம்) கேளுமையரே? நாங்கள் காட்டிற்குப்போய் தெர்ப் பை விரகு முஷ்டி முதலானதுகளைக் கொண்டுவரப் போகின்றோ மையா, நீர் கேட்கவேண்டிய காரணம் யாது?

(காலகண்ட-வ-ம்) நம்முடைய கீச்சானையும் அனுப்புகிறோம், கூட அழைத்துப்போவீர்களடா பயல்களே.

(சாமா-வ-ம்) ஆனால், சீக்கிரமா யனுப்பிக்கொடும் நேரமாகிறது.

(காலகண்ட-வ-ம்) அடிசந்தி? அசலாத்து மைந்தர்கள் காட்டிற்குப் போகிறதால், நீயுமுன்னுடைய மகனை அவாளுடனனுப்பி தெர்ப்பை முதலானதுகளைச் சேகரித்து சீக்கிரம் வரச்செய்வாயடி சந்தி. (சந்தி ரமதி இடிகேட்ட நாகம்போல் தியக்கல்)—(இதைக்கேட்டதேவதாச ன்துக்கித்தல்) அடே கீச்சான்? இப்படிவாடா! தொத்தபயலே, என துவார்த்தை சரியாக வெளிவராமுன்னமே ஏண்டாசிணுங்குகிறாய், ஏ ண்டா நேர்ப்பாளம், எனது உச்சியில் உரோமம் தோன்றிய நாள்தொ ட்டு, உன்னையும் உங்கோத்தாளையும் வாங்கின நாள்வரையில் சம்பா தித்த ரொக்கத்தை யெல்லாம் நடுவீதியில் தெரியாமல் கொட்டி விட் டதுபோல் வேலை செய்வதற்கு வாங்கினால், வேலையிருக்குஞ் சமயத்தி ல் குப்புறப்படுத்து என்னை யேய்க்கலாமென்று எண்ணுகிறாயோ உ

ன்னை விடுவேனு, இப்படி என்னருகில்வாடா—காலகண்டையர், தேவதாசனது இருசெவியும் பற்றிக்கிள்ளி (* கதுப்பில் புடைத்துக் கையைப்பற்றி இழுத்துவிடல்.)

(சக்-வ-ம்) அடா மகனே ? நீ விக்கவிட்டு அழவேண்டா மடா, என்னசெய்யலாம், (தேவதாசன் கண்ணீரைத் தன்முந்தானியால் துடைத்தல்) ஆ ! ஜெகதீசா ? வேதியருக்குப் புடைக்கக் கை எப்படி எழுந்ததோ ! மனம் எப்படி துணிந்ததோ ! அடா கிள்ளைமொழியொத்த சுதனே ? நீயோ குழந்தை ! வனமோ கொடிய விலங்குகள் சஞ்சரிக்கும் இடம் ! ஆனதால் பிராமண உத்தமனுக்கு என்கருணை இப்படியாயிற்று, யாவற்றிற்கும் ஊழ்வினையானது நமதுமுன் நிற்பதால் யாரைவெறுத்துக் கூறுவது, வேண்டாம், சற்று துக்கத்தைநீக்கு, யான் அய்யர்மன மிரக்கும்படி வேண்டிய வரையில் மன்றாடிப் பார்க்கிறேனடா கண்ணே.

(தேவ-வ-ம்) அப்படியே செய்யும் என்னைப்பெற்ற அன்னையே.

காலகண்டி விருத்தம்.

ஏதுகாணுமக்குமிந்த விருசியின்குணங்கள்தானிப்
போதுதான்வந்ததேதோ புதுமையாய்த்தோற்றுதிங்கே
யோதுறீர்பாலன்றன்னை வொடுக்கிலாமிருகஞ்சூழ்ந்த
தீதுளகாட்டிற்கேக தெரித்தலுந்தகைமைதானே.

(காலு-வ-ம்) இதென்னகாணு மையரே ? பலமிருகங்க ளிருக்கும்படியான காட்டிற்கு இந்த அறியாதபாலனை, யனுப்புவது தகாதகாரியமானதால் தடைசெய்யுஞ் சுவாமி.

காலகண்டன்-கவி.

இட்டதோர்வேலைசெய்ய விவர்களைக்கொண்டேனன்றி
வட்டமாய்மனையிற்றூங்க வன்னுடிதெரிகுவாயே.

(காலகண்ட-வ-ம்) அன்னுடிசேஷி ? நான்சொல்லும்படியான வேலைகளைச் செய்வதற்காக இவர்களைக்கொண்டேனன்றி வேறில்லைசேஷி.

(கால-வ-ம்) அப்படியா ! ஐயையோ ! மிகவுஞ்சிறுவனுயிற்றே ! உமதிஷ்டம், அந்த முனிவனுக்கு என்ன கெடுதிநேரிடுமோ காணேன்.

சந்திரமதி விருத்தம்.

மழலைச்சொல்மாறவில்லை மகன்பல்லோவிழவேயில்லை
தழைமுள்ளும்புலியும்யானை தனிப்பாம்புமலிந்தகாட்டிற்
குழந்தையையனுப்புதற்கென் குடலதுகலங்குதையா
பழமறையோரேயென்னைப் பிரிவுடனனுப்புவீரே.

(சக்-வ-ம்) ஐயா ? என்மகனுக்கு இன்னங் குதலைச்சொல் மாறுமனு

---

* கதுப்பில் என்பது, கன்னமெனவும் பாடம்.

ம், பாலில்லாத பல்லுவிழாமலு மிருப்பதால், நரி, புலி, கரடி, யானை, சர்ப்பமிருக்குங் காட்டிற்கனுப்ப என்மனம் வருந்துகின்றது, உத்திரவானால் நான்போய் வருகிறேன் சுவாமி.

## காலகண்டயர் விருத்தம்.

ஏதடிசொன்னாய்சந்தி யெண்ணிக்கையில்லாப்பொன்னை
பாதகிகொடுத்தேயன்றோ பயலையுமுனையுங்கொண்டேன்
நீதன்றிநான்சொல்வேலை தேவிநீதடுப்பாயாகிற்
போதவேரொக்கந்தன்னை பொட்டெனக்கொட்டுவாயே.

(காலகண்ட-வ-ம்) அடிசந்தி ? என்னசொன்னாய் ? கணக்கில்லாத பணத்தைக் கொடுத்து உன்னையுமிந்தத் தொத்தப்பயலையும் வாங்கினேனப்படிக்கனுப்ப வுனக்கு மனமில்லாத விஷயத்தில், ரொக்கத்தைக் கொட்டிவிடடி பார்ப்போம்.

(சந்-வ-ம்) சுவாமி ? தேவரீர் சித்தத்திற்குக் கோபம்வேண்டாம், விதியை வெல்லப்போகாது, என்மகனைக்காட்டிற்கு தங்களிஷ்டப்படி யனுப்புகிறேன் வேதியரே.

## சந்திரமதி விருத்தம்.

புவனத்தையாண்டவந்த புண்ணியன்பரத்தைக்கோரி
தவமதுசெய்துபெற்ற தனையனேயிங்குவாடா
நுவமிலரவையிரிந்தப் பாலர்பின்சமிதைக்காகக்
கவனமாய்ப்போகச்சொன்னார் கருத்தென்னவுரைப்பாயப்பா.

(சந்-வ-ம்) அடா என்கண்மணியே ? இந்த ஐயமாரோடு உன்னையுங்காட்டிற்கனுப்பச்சொல்லுகிறார்ப்பை, இலை, விறகுமுதலானவைகள் கொண்டு வரும்படி வேதியருத்திரவு செய்தார் என்ன சொல்லுகிறாயப்பா.

## தேவதாசன் விருத்தம்.

சுகத்தினிலிருந்தவாழ்வை சோர்வினில்நினைக்கப்போமோ
வுகத்தினில்வந்தநாளே யவதியும்பெருமையுண்டு
ஜகத்தினிற்சமமாயெண்ணிச் சாருதல்மெய்க்கேகித்யம்
மகத்துவமுள்ளோர்பின்னே வனமேக்விடையீவாயே.

(தேவ-வ-ம்) கேளுமம்மா ? தாழ்வுவந்தபோது வாழ்ந்ததை நினைக்கலாமோ, பூமியில்பிறந்தபோதே சுகமுந் துக்கமுஞ் சமமாயெண்ணியனுபவிக்கவேணு மானதால் நான் பின்போக விடைகொடு அம்மா.

(சந்-வ-ம்) அப்பாமகனே ? நான் ஐயரைக்கேட்டு உன்னைக் கொஞ்சதூரம்வந்து வழிகூட்டியனுப்பி வருகிறேனடா கண்மணியே.

(தேவ-வ-ம்) நல்லதப்படியே செய்யு மென்னைப்பெற்ற தாயே.

சந்திரமதி விருத்தம்:

பொய்யில்லாமெய்மைபூண்ட புண்ணியமூர்த்திகேளீர்
செய்யவென்மைந்தன்மெத்த சிறுவனாதலினாற்சுவாமி
யையுரவில்லாதந்த வசலாத்துச்சிறுவரோடு
பையவேயனுப்பிவாறேன் பரிந்துநீவிடையீவீரே.

(சந்-வ-ம்) சுவாமி ? என்மகன் சிறுவனாதலால் கொஞ்சந்தூரம்போய் அசலாத்துப் பிள்ளைகளுடன் வழிகூட்டியனுப்பிவர வுத்திரவு தரவேணுஞ்சுவாமி.

(காலகண்ட-வ-ம்) அப்படியே, சீக்கிரம் வருவாயடி சந்தி.

(சந்-வ-ம்) நல்லது சுவாமி—அடா என் கட்டிக்கரும்பே ? காட்டிற்குப்போக வருவாயடா கண்மணியே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? சந்திரமதியம்மன் தேவதாசனைக் காட்டிற்கனுப்ப, அசலாத்துப் பிள்ளைகளுடன் வரும்போது விஸ்வாமித்திரனனேக அபசகுனங்களைக்காட்டி அவள்மனதை நோகச்செய்கிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.—

## சந்திரமதி அவசகுனங் காணல்.

சந்திரமதி-கொச்சகம்.

வேதியரின்மைந்தர்களே விளங்குமெந்தன்பாலகனே
காதகமாயிவ்வினத்திற் காட்டிவருஞ்சகுனமதால்
வேதனைகளொதுவருமோ வென்றனுளம்வாடுதப்பா
பாதகிநான்பெற்றவயிற் பற்றுதடாகண்மணியே.

(சந்-வம்) பாருங்களப்பா அசலாத்துப் பிள்ளைகளே ? என்னருமைமகனான தேவதாசா ? இங்கவழியிற்காட்டும் கெட்ட சகுனங்களெல்லாங்கு மெத்தவருத்த மாகின்றதப்பா.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம் – ஆகிரி, தாளம் – ரூபகம்.

நீதிநெறியுணர்ந்த நெருடிகண்மைந்தரே, ஐயமாரே ! இந்த
நேரில்வருஞ்சகுனம் யாருக்குமாகாதே தம்பிமாரே
பாதிமதியணிந்த பரமனைமறவாதே தேவதாசா ! இதோ
பாம்புகுறுக்காகிபுதறிக்காக்கைகட்டுதே தேவதாசா
ஆந்தையுமலறுதே பூதாகருடனுங்கட்டுதே தேவதாசா-இது
ஆகாதசகுனங்க ளங்கமும்பதறுதே தேவதாசா
ஒற்றைக்குரலோசையோட்டியழுகிறனே . தேவதாசா ! அப்பா
ஒகோயெங்கிற தலைருவாறுகுதிவ்வேளே தேவதாசா
நெருப்பைத்தாங்கியொருத்திநேரினில்வாராளென்ஐயமாரே-ஏது
நீங்காவருத்தங்கணேரிடுமோரவறியேன் தம்பிமாரே

கட்டைச்சுமைமைத்தாங்கிகிடிகிவ்வா ராளொருத்தி ஐயமாரே-இதைக்
கண்டவிடத்திற்கப்பாற் காலிடப்போமோயுத்தி ஐயமாரே
தந்தையின்பாதத்தைதனையனேகவனிப்பாய் தேவதாசா! நமக்கு
தாவும்வினைதொலையத்தந்திடுமருளப்பா தேவதாசா
(சந்-வ-ம்) அப்பா தேவதாசா!
(தேவ-வ-ம்) சொல்லுமென்னைப் பெற்றதாயே.

சந்திரமதி விராய் கண்ணிகள்.

இராகம்-சாமா, தாளம்-சாப்பு.

என்னசெய்வேனடா என்மகனே யிதற்
கேதுசெய்வேனடா கண்மணியே
துன்பம்விளையுமோ விச்சனத்தினுஞ்
சோருதென்னுவி யடாமகனே.

தேவதாசன்-சிந்து.

இராகம்-இந்துஸ்தான்-காபி-ஏகதாளம்.

துன்பமனுகாதம்மா தூயன்திருவடியை
அன்பாகஈன்துதித்தே-என்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி-ஓ! ஓ! என்னம்மணி
அறுத்தேசமித்துவாறேன்.

சந்.—அருந்தவஞ்செய்தேண்டா என்மகனே அடா
அவதிக்குள்ளானேண்டா கண்மணியே
கருமவிதிதானோ-உன்னைத்தனிவிட
காலமும்வந்ததடா மகனே.

தேவ.—தனியாய்விடுத்தேனென்று தளராதேயுன்மனதில்
இனிவாரஅஞ்செழுத்தை-என்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி ஓ! ஓ! என்னம்மணி
எடுத்தோதிப்போயிவாறேன்.

சந்.—பெற்றநாள்முதலா யென்மகனேயுனைப்
பிரிந்தறியேனடா கண்மணியே
உற்றசகுனத்தாலே துவிளையுமோ
ஒன்றுமறியேன்டா வென்மகனே.

தேவ.—வந்தவினைவிலக்க வள்ளிசுவேசனுண்டு
தந்தையடிகளென்னை-என்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி-ஓ! ஓ! என்னம்மணி
தான்காக்கும்போய்வருவேன்.

சந்.—சின்னவயதடா வென்மகனே யெங்குஞ்
சென்றறியாயடா கண்மணியே

வன்னமூர்க்காட்டினி லெதுவாகுமோவென
வாடுதேயென்மனம் அடாமகனே.

தேவ—ஆவதுமொன்றுமில்லை யபன்விதிபோல்முடியுஞ்
சாவதுமீறலுண்டோ-என்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி-ஓ! ஓ! என்னம்மணி
சுருதியில்நான்வருவேன்.

சந்.—எப்படிப்போவேன்டா வென்மகனேமிருக
மெதிர்த்திடுங்காட்டினிற் கண்மணியே
தப்பீனாவேதிய னுன்னையனுப்பிட்த்
தான்துணிந்தான்மனம் அடாமகனே.

தேவ—விலங்கின்பயமுமில்லை விமலன்னருளுமுண்டு
கலங்கவுந்தகு[illegible]றே யென்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி ஓ! ஓ! என்னம்மணி
கடிகிப்போயிதோவாரேன்.

சந்.—கொஞ்சம்வயதடா வென்மகனே நரி
கூத்தாடுங்காடாச்சே கண்மணியே
நெஞ்சம்பதறி யருகில்நெருங்காதே
நீதனிக்காதேடா வென்மகனே.

தேவ—நரியும்பரியாக நம்பன்திருவடியை
கருதிப்பணிந்திடுவேன் என்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி ஓ! ஓ! என்னம்மணி
கவலைநீவிட்டிடுவாய்.

அசரீரத்துப்பிள்ளைகள் விருத்தம்.

பழுதுளசகுனமென்று பதறியதாயேநீதா
னழுவுதைநிறுத்திநாங்க ளட்விக்கேசடுதியேக
வழுவின்றிவிடைதானீவாய் வந்திட்டாய்மெத்ததூர
முழுவதைத்தரித்தோன்காப்பான் மனத்துயர்விடுவாயம்மா.

(அசலா-வ-ம்) கேளுமம்மா மெத்ததூரம் வந்துவிட்டாய், இங்கு கண்ட சகுனத்திற்காக வருத்தப்படவேண்டாம் ஈசனிருக்கிறான், நாங்கள் போகவிடை தாருந்தாயே.

சந்திரமதி விருத்தம்.

போவெனச்சொல்லநெஞ்சம் பொங்குதேதுயரமீறி
கோவதைப்பிரிந்தகன்று கூர்மைபோலெந்தன்பாலன்
தாவியேயடவிக்கேக தகுமதியின்னங்கொஞ்சம்
மேவியேயுரைத்தானு மெல்லநான்திரும்புவேனே.

(சந்-வ-ம்) கேளுமப்பா அசலாத்து மைந்தர்களே? இன்னங் கொஞ் சதூரம்வந்து என்மகன் தைரியப்பட சிலபுத்திகள் சொல்லித் திரும்பு கிறேன் அப்பா.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-முகாரி, தாளம்-சாப்பு.

கெட்டசகுனங்கள் முற்றுங்கண்டோமென மகனே!
உற்றமனதினில் நற்றிப்பயமுறாதே மகனே!
கட்டைசமிதைகள் பொட்டெனவேதேடி மகனே!
அட்டிசெய்யாமலென் கிட்டவருகுவாய் மகனே!
அடவிஜெந்துக்களை தொடர்ந்து தூரத்தாதே மகனே!
பட்புடத்தேயோடிப் பாதம்நோவுறாதே மகனே!
தோழர்கள்சொல்வதை தாழ்ந்தேபுரிகுவாய் மகனே!
ஆளனரிச்சந்திர னருளுனக்காகிடு மகனே!
புற்றின்மேற்செடிதனைப் பற்றியிழுக்காதே மகனே!
கத்தியரவமும் கொத்தத்துணிந்திடும் மகனே!
காசிநாதனடி நேசமாய்ப்போற்றிசெய் மகனே!
மாசிலாமணிபத மனதினிலுட்டுதினம் மகனே!

(சந்-வ-ம்) அடா நான்பெற்ற செல்வமே!!!
(தேவ-வ-ம்) சொல்லு மென்னைப் பெற்றதாயே.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-முகாரி, தாளம்-ஆதி.

உன்னைத்தனியனுப்பவும்-மகனே
ஓகோபிரமன்விதிக்கவு-அடடா
என்னைப்பிரிந்திருக்கவும்-மகனே-ம-ம
ஏதுசெய்வேன்பாலா.

தேவதாசன் சிந்து.

இந்துஸ்தான்-காபி-ஏகதாளம்.

ஏதுக்குமஞ்சாதே யீசன்றுணைவருவான்
நேசனருள்புரிவான் வாசன்சுகந்தருவான்
போதுபோகு முன்னமே-என்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி-ஓ! ஓ என்னம்மணி
பொன்னடிகாணவாறேன்.

சந்.—முன்னாள்நீபிறந்ததும்-மகனே
மறையோன்முறிபுரிந்ததும்-அடடா
என்னுடெண்ணிப்பிரிவது-மகனே-ம-ம
என்பாதகியோடா.

தேவ—பாதகியல்லவம்மா பகிவாக்குமீறாத
சதிமொழிசாறாத விதிவழிமாறாத
தேவிநீவாங்கொடுப்பாய்-என்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி-ஓ! ஓ! என்னம்மணி
தீவிரம்போய்வருவேன்.
சங்—மன்னர்தவமிழைத்த தும்கனே
மாறுதென்னுள்தழைத்தும்-அடடா
இன்னாள்மட்டும்வளர்த்தது-மகனே-ம-ம
இக்காட்டிற்கேகவோடா.
தேவ—காட்டிற்கேபோறேனென்று கலங்கிஇருந்தாதே
குலுங்கியருந்தாதே விலங்கும்நெருங்காதே
மேட்டிசிவனருளால் என்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி ஓ! ஓ! என்னம்மணி
முன்னோடிவாறேனம்மா.
சங்—அன்னம்விட்டுயிருக்கவு-மகனே
அப்பாகூழைகுடிக்கவும்-அடடா
வன்னகிரக்குறையவு மகனே-ம-ம
வந்தசதியறியேன்.
தேவ—சதியொன்றுமில்லையம்மா சத்தியம்நிற்கவென்றே
முத்திநாம்புக்கவென்றே பத்தியைக்காக்கவென்றே
விதியால்விளைந்த துன்பம் என்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி ஓ! ஓ! என்னம்மணி
விடுதிக்கேயேகுமம்மா.
சங்—கண்ணுக்குட்டிபேய்க்கவு-மகனே
கந்தைத்துணிதோய்க்கவும்-அடடா
மண்ணுள்ளோர்கணைக்கவு மகனே-ம-ம
மனதுநொந்தேனடா.
தேவ—கன்றதுவல்லவம்மா கைலையனேறும்விடை
மலைமகளும்படை நிலைபெறவேதுதடை
நின்றிவ்விடந்தன்னிலே என்னம்மணி
ஆ! ஆ! என்னம்மணி ஓ! ஓ! என்னம்மணி
நீவிடைதான்தருவாய்.

சந்திரமதி கொச்சகம்.

கட்டிக்கரும்பேயென்மகனே கருதும்பணியேசெழுந்தேனே
வெட்டிமருவேசெண்பகமே வேண்டிற்கிட்டாப்பசுங்கிளியே
குட்டிவிளாவினிதழ்மணியே குயிலேமயிலேகோமதமே
விட்டிக்குன்னான்றுன்பிரிய விதியோமுனிசெய்சதியோடா.

(சந்-வ-ம்) அப்பா? உன்னைவிட்டுப் போகமனம் வரவில்லையே!

இதுவுமது.

கண்ணேயொளிரேகுலவிளக்கே கணவரிழைத்தபெருந்தவமே
விண்ணேர்துலக்கும்ரவிமதியே வேந்தர்புகழும்விப்பிரனே
மண்ணேயாளவென்வயிற்றில் மகிழப்பிறந்தமருக்கொழுந்தே
நண்ணேன்விடுத்தேன்நான்போக நடுங்குதெந்தனுடல்மகனே.

(சந்-வ-ம்) அப்பா தேவதாசா? உன்னைப்பெறவேண்டி நானும்உன் தந்தையும், பரமனைக்குறித்து அருந்தவஞ்செய்து, பெற்றுவளர்த்து அடிமையாகி யிந்தக்காலத்தில் உன்னைத்தனித்துக் காட்டுக் கனுப்பமனம் பதறுதடா கட்டிக்கரும்பே.

(தேவ-வ-ம்) என்னசெய்யலாம், ஐயர்வாக்கு மீறனகுமா, போய்தான்தீரவேண்டும் நீ விசனப்படாதே அம்மா.

(சந்-வ-ம்) அப்பா தேவதாசா.

(தேவ்-வ-ம்) சொல்லுந் தாயே.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ரூபகம்.

பாலாவென்னகாலம்வந்ததடாமகனே-ஆ! ஆ! சுதனே!
பற்றுதேயென்வயிற் றற்றுதே துயரஞ்
சுற்றுதேவுடலும் பெற்றபலனிதோ. (பாலா)

தேவ—தாயேவீணுய்த்தயங்கியேயழுகாதே-ஆ! ஆ! அன்னையே!
தங்கநிறமேனி எங்கும்நீர்சொரிய
அங்கம்பதறுதே மங்களமாய்வாறேன். (தாயே)

சந்.—மன்னன்செய்ததவத்தால் வந்தாயேமகனே-ஆ! ஆ! சுதனே!
மாயமாய்வந்தவு பாயமறியேன்டா
நாயமெவனிடம் போய்முறைசெய்குவேன். (பாலா)

தே—அன்னையின்னமழுதுநீதவிக்காதே-ஆ! ஆ! அன்னையே!
ஐயனருளினுற் பையநான்சென்றிதோ
துய்யசமித்துடன் நெய்யுறுமல்வாறேன். (தாயே)

சந்.—கண்ணேயெப்போகாண்பேன்டாகட்டிக்கனியே-ஆ! ஆ! சுதனே
கலங்குதேநெஞ்சமும் விலங்குளகாட்டிலே
துலங்கநீசென்றுமே நலமாய்வருவாயோ. (பாலா)

தேவ—அம்மாமெத்தவழுதுமேதுடிக்காதே-ஆ! ஆ! அன்னையே!
அண்டினேனையாளுஞ் சண்டிகையாளனு
முண்டிதோதர்ப்பையை கொண்டோடிநான்வாறேன். (தாயே)

சந்.—என்னவிதியெழுதினனந்தபாவி-ஆ ! ஆ ! சுதனே !
எரியுதேயென்குடல் நரிகளுங்கூவுதே
தெரியுளலோகிதா சரியாமோநான்போக. (பாலா)
தேவ—தல்லிமனதுந்தயங்கியேபுலம்பாதே-ஆ ! ஆ ! அன்னையே !
தானேயுதித்தவன் மானேதரித்தவன்
கோனேதுணைசெய்வான் நானேபோயிவாறேன். (தாயே)
சந்.—காட்டைக்கண்டேன்மனங்கலங்குதேகண்ணே-ஆ! ஆ! சுதனே!
கட்டிக்கரும்பேநான் விட்டிருக்குனைச்செல
மட்டிலாப்புரதமும் அட்டிப்படுதேடா. (பாலா)
தேவ—ஆச்சிரமத்தநேரமாச்சுதிங்கேதாயே-ஆ! ஆ! அன்னையே!
அடவிதூரமாமே தெருட்டரில்வழிதாமே
நடக்கும்பொழுதில்லை தடம்பற்றிநான்போறேன், (தாயே)
சந்.—கண்ணெரிபுயங்குதே கட்டிக்கரும்பே-ஆ ! ஆ ! சுதனே!
காலமும்வந்ததோ பாலனைப்பிரிய
ஞாலத்தில்நான்பழி கோலமாய்நிற்பேனே. (பாலா)
தேவ—வாழ்த்திவழிவிடுகுவாய்பெற்றதாயே-ஆ ! ஆ ! அன்னையே !
வணங்கிதொடராமல் மனமும்வருந்தாமற்
றனம்போன்றவாயாற் கனம்பெறச்சொல்லி (தாயே)
சந்.—உடலுந்தலைவேறாய்க்காணுறாயேபாலா-ஆ ! ஆ ! என்சிலா!
உரையுங்குளறுது கரையும்வருகுது
தரையினில்யாருமே குறையென்னசெய்தேனே. (பாலா)
தேவ—கன்னைசத்தியந்தான் றுணைசெய்யுந்தாயே-ஆ ! ஆ! அன்னையே!
தாவியடியேனும் மேவியடவியிற்
றேவிசமித்தைகள் பாவியோடிவாறேன். (தாயே)
சந்—வாருமுன்றன்னைக்காத்திடவேந்தே-ஆ ! ஆ ! என்கோவே!
வாடுதேயென்மனந் தேடுதேயுந்தனை
காடுதனின்பதற் கூடுவீர்பாலனே, (வாரு)

சந்திரமதி விருத்தம்.

நல்லதுமகனேயென்றன் நற்றவப்பொருளேகாசி
வல்லவனருளுனக்கே வாய்த்திடுவனத்திலப்பா
சொல்லதுபிசகாத்தந்தை சுத்தமாம்பர்தநம்பு
அல்லலுமகற்றிலேக மாளுவாயறிகுவாயே

(சந்-வ-ம்) அப்பாதேவதாசா ? காசிநாதர் துணைவருவார், உன்தந் தையின் பாதாரவிந்தங்களைத் தியானித்துக்கொண்டே சமித்தெடுத் து சீக்கிரம் வந்துசேருவாய் கண்மணியே.

(தேவ-வ-ம்) அப்படியேவந்து சேருகிறேன் தாயே.

சந்திரமதி விருத்தம்.

மறையவர்மக்களேயென் மைந்தனேசிறுவன்கண்டீ
ரிறையவனமைப்பாலிங்க ணேகவுமானேனையா
வுறைசெயவறியேன்வேறு வொப்பித்தேன்காட்டில்யாதோர்
குறைகளுமணுகிடாமற் கூட்டியேவருவீர்போற்றி.

(சந்-வ-ம்) அப்பா அசலாத்து மைந்தர்களே ? என்மகனதிக சிறுவனாதலால், பத்திரமாய்ப் பாதுகாத்து என்னிடஞ் சேர்ப்பீர்களுங்கள் பாதங்களுக்குப் போற்றி போற்றி.

(அசலா-வ-ம்) அப்படியே உனதுமகனை உன்னிடமே கொண்டுவந்துசேர்க்கிறோம், நீ வீட்டிற்குப் போவாய் அம்மா.

(சந்-வ-ம்) அப்பாதேவதாசா ? நான்போகட்டுமா, எனக்கொருமுத்தங் கொடுத்துப்போடா கண்மணியே.

(தேவ-வ-ம்) அப்படியே கொடுக்கிறேன், பத்திரமாய் வீடுபோய் சேருமென் னம்மணி. (சந்திரமதிநீங்கல்)

பொது விருத்தம்.

மங்கையராடதிவ்ய மானகீதங்கள்பாட
சங்கையில்லாமல்மன்னர் சரணைவமைச்சர்கூட
வெங்குளபங்கஞர்வாட வினியவேதியர்கொண்டாட
கங்கைசூழ்காசிவேந்தன் கனமுடன்கொலுவுற்றானே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்வாறிருக்க, காசிபட்டணத்தை அரசாக்ஷிசெய்யுங் காசிபமகாராஜன் கொலுவுக்கு வருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

---

# காசிமஹாராஜன்கொலு.

பொது-தரு-இராகம்-தோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

இராஜ ராஜனுன ராஜன் காசியை யாளும்
ராஜாதி ராஜன் வந்தான் கொலுவிருக்க
ராஜாதி ராஜன் வந்தான்.

அநுபல்லவி.

தேசாதிபர்கள்சூழ திறைக்கப்பகைஞர்தாழ
திவ்யனழகில்மாரன் தீரன்வீராதிவீரன்
சீர்பெறுமனுமுறை நேர்வழுவாதுறைச்
யார்தனிலருமறை தீர்பெறவேயுரை. (இ)

௫௭

சரணம்.

இரத்னமுடிசிரசி லெழிலுடனே துலங்க
ஏற்றிநுதலில்நீறு இடரிலாமலிலங்க
கொத்தாய்முத்துவடங்கள் கூடிமார்பிற்றுலங்க
கத்தியொளிவுமின்ன-பகைவர் கண்டுசரணமென்ன-கீர்த்தி
எத்திசையிலுந்துன்னஞ்சிரு ரிருபுரமிசை-பன்ன
திந்திமிதிமிதிமி திமிதிமியெனவே
திசைகளெட்டுமெதிர-மலர்மழை ளிஞ்சகளுடனுதிர
செப்பிறுபேரிகை பம்பைகள்கொம்புகள்
ஒப்புறுவல்லரி துந்துஞசங்குகள்
ஜெயஜெயஜெயவென சீருடனூதிட
பயமுடன்கட்டியம் பணிந்துமேயோதிட. (இ)

காசிமகாராஜன்போற்றி விருத்தம்.

செங்கதிர்குலம்விளங்க ஜெயமுடன்மன்னர்வாழ
வெங்குநீர்சொரிந்தேமேக மெதேஷ்டமாய்க்குடிகள்வாழ்க
பங்கமதின்றித்தர்மம் பாலித்தெவ்விடமுமோங்க
கங்கைபாயெனதுசெங்கோற் கனம்பெறவருள்வாய்போற்றி

மந்திரி-போற்றி விருத்தம்.

தேசத்தில்நீதியோங்க தெளிதபநெறிகளொக்கிய
வாசமாய்ப்புரியசித்தர் வாழ்ந்திடக்குடிகளுட்டில்
நேசமாய்ப்பசுவும்வேங்கை நீக்கியேபகையைவாழ்க.
பாசமாயரசுசெய்யுன் பாதமேபோற்றிநாதா.

காசிமகாராஜன் தேசவிசாரணை.

சுரர்பதிசெங்கோலுங் குறைவின்றிவிண்ணுலகில்
சுகமாய்நடந்தேறுதா?
மந்.—தூபனேயிந்திரன் நேமமுளவாளுகை
சொகுசாய்நடந்துவருதே.
காசி.—நரர்பதியெனுமன்னர் முறமையதுவழுவாமல்
ஞாயமாய்நடக்கிறாரா?
மந்.—நாட்டினிலரசர்கள் நீதிதவறாமலே
நடத்துறார்செங்கோலுமே.
காசி.—குலவிதிதவறாமல் வேதியர்கள்வேதத்தின்
கோஷ்டமதுசெய்கிறாரா?
மந்.—கொற்றவாவந்தணர்கள் தினந்தினம்வேதத்தைக்
கொண்டாடியேவருகிறார்.

காசி.—ஆலயங்களிற்பூஜை சாலவேகுறைவின்றி
யனுதினம்நடந்தேறுதா ?
மந்.—அண்ணலேபூஜைகள் யாதும்வழுவின்றியே
யன்புடனேநடந்துவருதே.
காசி —காசினிதழைக்கவேமாதமும்மாரியுங்
கருதியேபெய்கின்றதா ?
மந்.—கடவுளினருளதா லின்றுமோங்கவே
கனமழைபெய்துவருதே.
காசி.—வருணாதிமுறைகளிற்குறைவின்றிநாட்டுளோர்
மகிழ்வுடன்நடக்கிறாரா ?
மந்.—மகாராஜனேகுல விதிகள்பிசகாமலே
மதியாய்நடக்கிறார்கள்.
(காசி-வம்) மெத்தசந்தோஷமப்பா மந்திரி.

## கட்டியன் துதி.

| | |
|---|---|
| வீராதிவீரனேவீரப்ரதாபனேவிஜயனே | வெகுபராக்கு |
| வேந்தனேகாசியைச் சாந்தமாயாள்கின்ற விமலனே | வெகுபராக்கு |
| காந்தாளமன்றியே தர்மத்தைவிளைவிக்குங்கர்த்தனே | வெகுபராக்கு |
| கடிந்திடும்பகைவரின் நெஞ்சைப்பிளந்திடுங்கையனே | வெகுபராக்கு |
| சூராதிசூரனே சூக்ஷ்மநியாயத்தின்சுத்தனே | வெகுபராக்கு |
| சொல்லொணாதிவ்யகுணவல்லவாவைரமுடிசூடுவோய் | வெகுபராக்கு |
| காயமனவாக்குடன்நேயமாய்மண்ணுளோர்கருதுமணியே | வெகுபராக் |
| கைகட்டிவெகுமன்னர்மெய்த்தொண்டுசெய்திடுங்காசிபா | வெகுபராக்கு |

## காசிமகாராஜன் விருத்தம்.

மந்திரிநமதுநாட்டில் மகிழுடன்யாத்திரையாக
வந்திடும்பிரஜைகட்கே வண்ணமாய்சோமாஜிகள்
தந்திடுகிறாரோதர்மந் தழைக்குதோதெரியவேண்டி
யெந்திருசபைக்கவாளை யினிதுடன்வரச்செய்வாயே.

(காசி-வ-ம்) அப்பாமந்திரி ? நமதுநாட்டில், யாத்திரையாக வருபவர்கட்கு வேண்டியவைகளை சோமாஜிகள் தடையின்றி நடத்துகிறாரா அவாளை வரவழைப்பாயப்பா.

(மந்-வ-ம்) அப்படியே வரவழைக்கின்றேன் மகாராஜனே.

## மந்திரி கவி.

கேளாய்நீகட்டியக்காரா கெடிதலக்காசிதன்னில்
வாணாடுமேசதாபர்த்தியும் நம்பிகள்வரச்செய்வாயே.

(மந்-வ-ம்) அடா கட்டியனே ? நமதரசனுக்கினையின்படி சதாபர்த்கொடுக்கிறவர்களை வரச்செய்வாயடா.

(கட்-வ-ம்) அப்படியே வரச்செய்கிறேன் சுவாமி.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாய் கட்டியன்சென்று காசிபட்டணத்தில் யாத்திரையாக வரப்பட்டவர்களுக்கு சதாபர்த்து கொடுக்கும் சோமாஜிகளுக்குத் தெரிவித்தவுடன் சபைக்குவருகிறவிதங் காண்பீர்கள் கனவான்களே.

சோமாஜிகள் தரு.

இராகம்-சுருட்டி, அடதாளம்.

பல்லவி.

சோமாஜிகள்வந்தார்-ராஜனைக்காண -சோமாஜிகள்வந்தார்.

அநுபல்லவி.

சாமாஜி-ஏமாஜீ சம்போஜீ-லம்போஜி
நாமாஜிகளான நம்பிகள்திரளாக. (சோ)

சரணங்கள்.

வெகுவிதமாக வேண்டிப்பொருளைத்தேடி
விந்தையுலகிலுண்டு விரும்பிப்புதைத்திடும்
இகபரபந்தனக்கு மேதுவாகுந்தான
மீபாலோபிகளை யிழிவாகப்பேசிடுஞ். (சோ)

வாகனஞ்சிவிகைகள் வைப்பார்பொருளதை
வட்டிக்காசிக்கீந்து வழக்கிட்டேயழுகுவார்
காசிநேனென்றெருவர் சாற்றினும்போவெனுஞ்
சண்டாளரையென்றுஞ் சார்ந்துமேகண்ணேக்கா. (சோ)

சிவமகோற்சவங்கள் செய்வோரையிகழுவார்
இலையிற்பலனில்லை சீசீவிடுவிடென்பார்
சவமாமட்டுந்தங்கள் சம்பத்தும்பொருள்மதஞ்
சார்ந்தோரகேகுஞ் சண்டாளரையேசுஞ். சோ)

(சோமா-வ-ம்) போற்றி போற்றி, எங்களாண்டவனே,

காசிமகாராஜன் விருத்தம்.

நம்பிகாணமதுநாட்டில் நாடோறும்வருவோருக்கு
நம்பிகாள்தானம்நீங்க ணயமுடனளிக்கின்றீரோ.
நம்பிகாள்குறைகளுண்டோ நாட்டினில்பசித்தோருண்டோ
நம்பிகாளுனக்கேட்க நலமுடனுரைசெய்வீரே.

(காசி-வ-ம்) நம்பிகளே? நமதுநாட்டில் வரும்படியானவர்களுக்கு சதாபர்த்து தடையின்றி கொடுத்துவருகிறீர்களா? சொல்வீர்கள் சோமாஜீகளே.

சோமாஜிகள் விருத்தம்.

வேந்தனேவந்தவரைதேடியேகொடுவந்து
விரைவினில்நபரையெண்ணி

விந்தமாம்பப்புறுநெய்ரவைபாலுஞ்சர்க்கரை
விநோதகனியெரிகரும்புஞ்
சாந்தனேபாத்திரம்விடுதியுந்தீபநெய்
சயனிக்கவொலுருமெத்தை
சந்தனந்தாம்பூலமீந்துமிசைகேட்டிடச்
சதிருமேற்பாடுசெய்து
பாந்தமாயென்னுளிருக்கினுங்குறைவின்றி
பணிவிடையியற்றிநாதா
பண்புடனவர்கேட்பவெவ்வண்ணமாயினும்
படைத்துடன்களிக்கவித்தங்
காந்தனேநெறியுடன்முறைவழாதிவ்வாறு
கருத்துடன்பாதுகாத்தே
காசிபர்மதுசெங்கோலதுத்தழைத்தோங்க
கருதியேநடத்துவேமே.

(சோமா-வ-ம்) ஆண்டவனே? உமதாக்கினை கடவாமல் வந்தவர்களுக்கு கோதுமைரவை, பால், சர்க்கரை, முதலானதுங்கொடுத்து யாதொன்றுங் குறைவின்றி போஷித்துவருகிறோம் மகாராஜனே.

(காசி-வ-ம்) மகாசந்தோஷம், மகாசந்தோஷம் நம்பிகளே.

(காசி-வ-ம்) அப்பா மந்திரி? இந்த நம்பிகளுக்கு வேண்டிய வெகுமதி கொடுத்தனுப்புவாயப்பா.

(மந்-வ-ம்) அப்படியே கொடுத்தனுப்புகிறேன் மகாராஜனே.

பொது விருத்தம்.

மன்னவனுங்காசிநகராளும்வேந்தன்
மந்திரியுங்கொலுக்கலைந்து மனைக்குட்சென்று
ரன்னநடைசந்திரவதி யீன்றபால
னடவிக்கேசமித்தெடுக்க வேண்டியந்த
நன்னவனும்வேதியரின்மைந்தரோடு
நாயகியும்வழிகூட்டி யனுப்பிப்பின்னர்
சொன்னமொழிதவறாமலையர்பாதஞ்
சோர்வின்றித்தானடைந்து தொழுகுவானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? காசிமகாராஜன் கொலுக்கலைந்தரண்மனைபுகுந்தான், அப்பாற்சந்திரமதி தன்மகனை சமித்தெடுத்துவரும்படி வேதியமைந்தருடன் வழிகூட்டனுப்பித் தன்னையடிமைகொண்ட காலகண்டையரிடம் வந்துரைக்கும் விதங்காண்பீர்கள் கனவான்களே.

சந்திரமதி விருத்தம்.

ஐயரேநீருரைத்த வசலாத்துமைந்தரோடு
பையவேபோகவெந்தன் பாலனையனுப்பிவந்தேன்

செய்யவேயெனக்கேவேலே செப்புவீர்புரியகானுங்
கையதாற்பணிந்தேனுந்தன் கழலடிக்கடியாள்போற்றி.

(சங்-வ-ம்) சரணஞ் சரணஞ்சுவாமி? அசலாத்துப் பிள்ளைகளுடன் என்மகனையுங் கூட்டியனுப்பிவச்தேன் எனக்கு இனிச்செய்யவேண்டியவேலைகள் சொல்லும் வேதியரே.

காலகண்டய்யர் விருத்தம்.

ஏதடிசந்திரீதா னின்னேரம்பொழுதுபோக்கி
ஓதடிவரவுமானு யொப்புமோநீதிதானே
தீதடியிவ்வாருகக் திரிவதுமுனக்குநன்றே
போதவென்னுத்திவ்வேலே பொட்டெனப்புரிகுவாயே.

(காலகண்ட-வ-ம்) அடிசந்தி? காலதாமிசஞ்செய்து வருவதுனக்குத்தகுமா. வீட்டிலுள்ள வெளிவேலைகளைச் செய்யப்போவாயடிசந்தி

(சங்-வ-ம்) அப்படியே செய்கிறேன் கோபம்வேண்டாம்.

(போது-வ-ம்) சபையோர்களே? வேதியர்வீட்டில் சந்திரமதியம்மன் தன்மகனைப்பிரிந்த துயரத்துடன் வேலைசெய்துகொண் டிருந்தாள், தெர்ப்பைக்காகப்போன அசலாத்துப்பிள்ளைகள் காட்டில் தேவதாசனை விசாரிக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

அசலாத்துப்பிள்ளைகள் விருத்தம்.

சுந்தரமுடையபாலா சொகுசுளதேவதாசா
வந்தணர்க்கடிமையான வாபத்துயாதோகானே
மிந்தவூர்நீங்கள்வந்த தெந்தவாற்முன்வசித்த
சொந்தனாடெதுவோவப்பா சொல்லுவர்யினீவாய்த்தானே.

(அசலா-வ-ம்) அப்படிதேவதாசா? உங்கள்தேசமெதுவோ? நீங்களிந்தவேதியனுக்கடிமையான காரணமென்ன? தெரியச்சொல்லுவாயப்பா.

(தேவ-வ-ம்) அப்படியே சொல்கிறேனப்பா தோழர்களே.

தேவதாசன் அகவல்.

என்வளப்பதனை யினிவுடன்கேட் ட
நன்மதிதோழரே நவிலுவேன்கேளீ ர்
எந்தனைப்பெற்றே னிறையரிச்சந்திர ன்
தந்தையோரயோத்தி தானுண்டமன்ன ன்
செல்வமும்பாக்கியஞ் சிரதுபடைத் தே
தொல்லுலகாண்டு சுகித்திடும்நாளி ல்
தவமுனிகவுசிகன் தான்யாகஞ்செய் ய
கவண்விடுதூரங் கரியின்மேலேறி யே
பொன்தனைக்கேட்டான் புகழுளோனு ன
என்தந்தையளிக்க பேர்ந்தபின் னீ

வைத்திருவேண்டில் வருகுவேனென் றே
கைப்பதிதாங்கொள காட்டில்வாழ்விலங் கை
ஏவியேபயிர்களை யிழிவதுபுரிந்தா ன்
தாவியென்தந்தை தான்வேட்டையா டி
ஓட்டவேவிலங்கை யோட்டுவேன்கேளீர் ர்
தாட்டிகப்பன்றியைத் தானவனனுப் ப
திருபனும்வதைக்க நீச்சமாதிருவ னை
குருமுனிவிடுத்தே கூடிடக்சொன்ன ன்
வேந்தனுமறுக்க விசுவாமித்திர ன்
சாந்தமாய்நாட்டைச் சரசமாய்க்கவர்ந் தே
பரதேசியாக்கிப் பாவியுமெங்களை த்
துறவிபோற்காவி துணியதுகொடுத் தே
நாட்டைவிட்டப்புறம் நகன்றிடச்செய்தா ன்
காட்டையுமடையவே கவுசிகன்றனு ந்
தானமாயீந்த தனமதைத்தாவெ ன
மோனனுங்கேட்டான் முடிபுனைமன்ன ன்
காசியிற்சேர்ந்து கடன்தருவேனெ ன
தோசிபோற்றரகனைத் தொடரவேவிடுத்தா ன்
அவன்புரிதுன்ப மனுபவிக்காம லே
தவமுனிகடனைத் தான்தரவேண் டி
அன்னையைவிற்க வரசனுந்துணி ய
பொன்னதைக்கொடுத்து பூசுரன்வாங்கின ன்
அடாவழக்கிட்டே யடியனைக்கூ ட
திடமுடன்பற்றினன் தெரிகுவீரை யா
தந்தைமந்திரியுந் தானுமேசென்றன் ர்
எந்நாட்டிற்கோ வெளியனுமறியே ன்
வேதியனியற்றும் வெம்புளுதொழில தை
ஆதியினெழுத்தென வமைக்கின்றமை யா
எந்தன்சரித்திர மிதுவதாம்நேச ரே
சந்திரவதிதாய் சாற்றினேனறிவீ ர்.

(அசலா-வ-ம்) இதுகளெல்லாம் பரமசிவன்செய விதற்காக வருத்தப்படாதே யப்பா.

சாமாசாவந்திரி விருத்தம்.

நாட்டினைவிட்டுனாமும் நடந்ததிதூரம்வந்தோம்
காட்டினிம்பாதியுற்றோங் கதிரோனுமுச்சிசாய்ந்தான்
தாட்டிகமாகத்தெர்ப்பை தன்னோடுசமுத்தடுக்கி
வீட்டினிற்கேகவேண்டும் விரைவினிற்சேர்ப்போப்பா.

(சாமா-வ-ம்) அடேசீனு? குப்பா? அப்பாதேவதாசா? உச்சிப்பொழுதிறங்கி விட்டது, காட்டில் நெடுந்தூரம் வந்து விட்டோம், சீக்கிரம் சமுத்துகள் சேர்த்துக் கொள்ளுங்கள் வீட்டுக்குப் போவோந் தோழர்களே.

(அச-வ-ம்) ஆம், ஆம், போதாய்விட்டது, நேக்குபசிக்கிறது, அடா நேக்கு பசிக்கிறது, சீக்கிரம் போகவேண்டாமாடா சீனு.

தேவதாசன் தரு.

இராகம்-நாதநாமக்கிரியை, அடதாளம்.

சேர்ப்பீர்களென்றிநிமுன்னமே-இதோ
சிக்கெனகாரைபறித்தனன்.

அசலாத்து மைந்தர்கள் தரு.

இராகம்-மோகனம், அடதாளம்.

பார்ப்பவர்மெய்ச்சிடநாங்களும்-இதோ
பற்றியேதர்ப்பையுந்தந்தனோம்.

தேவ—புதரினில்மெள்ளெனத்தாவியே-இதோ
பொடிவிறகுகளைச்சேர்த்தனன்.

அச.—சதிராகநாங்களுட்சென்றுமே-இதோ
தழைத்தபிலாவிலைதந்தனோம்.

தேவ—நீண்டமரந்தனைசுற்றியே-இதோ
நிசழ்தேக்கிலைநானுஞ் சேர்த்தனன்.

அச—தாண்டவமாடியேநாங்களும்-இதோ
தனிமுசுட்டைமுன்னைதந்தனோம்.

தேவ—தோழரேமுன்னைமுசுட்டையும்-பலா
சொல்மாவிலையும்பறித்தனன்.

அச—தாழ்வதுவன்றியேநாங்களும்-இதோ
தனிவிறகுமெத்ததந்தனோம்,

தேவ—அண்ணமாரேதெர்ப்பைதேடியே-கொஞ்சம்
அறத்தேவருகிறேன்தாழ்வீரே,

அசலாத்துப்பிள்ளைகள் விருத்தம்.

அப்பனேதேவதாசா வந்திவின்பொழுதுவாய்த்தும்
அப்பனேயிங்கேநின்றால் யானைநாய்கரடிநோக்கும்
அப்பனேயுனக்கேதெற்பை யளிக்கிறோம்கொஞ்சம்நாங்கள்
அப்பனேவருவாய்போவோ மாத்திற்குவிரைவிற்றுனே.

(அச-வ-ம்) அப்பா தேவதாசா? சாயுங்கால மாய்விட்டது, இங்கிருக்கப் போகாது, மிருகங்கள் கண்டால் வதைசெய்யு முனக்கு நாங்

கள் கொஞ்சம்போது * தெர்ப்பைகொடுக்கிறோம், நம்பளாத்திற்கு போவோம் வாருமப்பா

(தேவ-வ-ம்) அது சரியல்லவே, நீங்களறுத்ததை நானறுத்ததெனக் கொண்டுபோகலாகாது ஆனதால் நானேதேடி அறுத்துக் கொண்டு சீக்கிரம்வருகின்றேன் தோழர்களே

பொது விருத்தம்.

காட்டினிற்றேவதாசன் கருதியேதெர்ப்பைக்காக
காட்டினில்நிற்கக்கண்ட கவுசிகன்சமயமென்றே
கூட்டினிற்சர்ப்பமாகக் கந்தனைவரவேகோரி
காட்டினிலழைக்குமார்க்கங் கருதியேதெரிகுவீரே

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவதாசனிந்தப்பிரகாரங்காட்டில் தெர்ப்பையைத் தேடப்போகுஞ் சமயங்காத்திருந்த கவுசிகன், சுப்பிரமண்ணியரை அழைக்கிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

விஸ்வாமித்திரன் தரு.

இராகம் எழுனகல்யாணி-தாளம் ஆதி.

பல்லவி.

வேலாயுதனேவருவீர் இதுசமயம் வேலாயுதனேவருவீர்.

அநுபல்லவி.

கோலாகலமாமயி லேறுங்கந்தனேநாதா
சீலாதெய்வானைமகிழ் லோலா நின்வாக்கின்படி. (வேலா)

சரணங்கள்.

தேவர்கள் சபைமுன்னிலே-வசிஷ்டனுடன்
செய்தசபதந்தன்னிலே
மேவின்னடியுன்று மேன்வாக்களித்தமூர்த்தி
சாவதானஞ்செய்யாமற் சாற்றுமென்முறைகேட்டே (வேலா)

நாடுநகரஞ்சொத்தும்-அரிச்சந்திரன்றன்
வீடுங்கவர்ந்தேன் முற்றும்
ஓடுகையேந்திக்கடனுட்பட்டிச்சாசிவந்தே
யீடுமகன்றேவியையு மிட்டானடுமையானுன். (வேலா)

பாலன்காட்டிற்கேவந்தான்-சமிதைக்காக
லோலன்தெர்ப்பைக்காய்நொந்தான்
காலமிதுவேநாதா கடுகிநீயென்முன்வரில்
ஞாலமீதினிற்கீர்த்தி நானடைகுவேன்சுவாமி (வேலா)

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திரன்சபையில் கொடுத்தவாக்கின்படி சுப்பிரமண்ணியர் விஸ்வாமித்திரன் முன்தோன்றினுரென்றறிவீர்கள் கனவான்களே.

(விஸ்-வ-ம்) போற்றி, போற்றி, சிவசுப்பிரமணியக்கடவுளேபோற்றி.

(சுப்பிரமணியர்-வ-ம்) ஒப்புமுனியே ? என்னைக்கோரி அழைத்தகாரியந் தெரியச்சொல்லவேண்டும் இரிஷியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

கந்தனேசொல்லக்கேளாய் காலகண்டையரேவ
வந்ததோர்தேவதாசன் வனமதிற்றெர்ப்பைக்காக
நொந்ததோகொய்யவேண்டி நோக்கிருனவின்கீழே
யந்தமாம்புத்தொன்றங்குண் டதிற்சேர்வாயிறையனாதா.

(விஸ்-வ-ம்) சுவாமி ? தேவதாசன்காட்டில் அசலாத்துப்பிள்ளைகளுடன் தெர்ப்பைகொய்யவேண்டி ஆலமரத்தடியிலிருக்கும் பாழும்புத்தின்மீதில் ஓங்கியிருப்பதை நோக்குகிறான், ஆனதால் அடிமையின்மீது சற்றுகிருபைகூர்ந்து நீரதிற்பிரவேசிக்கும் விதஞ்சொல்வேன் கேளும் சிவசுப்பிரமண்ணியக்கடவுளே.

இதுவுமது.

அறைகுவேனண்ணலேநீ ரரவமாய்ப்புத்திற்சேர்வீர்
துரைமகன்றெர்ப்பைகொய்யத் துணிந்திட நானேசெய்வேன்
விரைவினீருஞ்சீறி விஷமேவக்கரத்திற்கொத்து
முறையவன்றனைக்கெலித்தே வாழ்குவேனும்மாற்றேவே.

(விஸ்-வ-ம்) சுவாமி நீர்நாகப்பாம்பாகி, அந்தப்புற்றிலிரும், நான் தேவதாசனை புற்றின்மீதிருக்குந் தெர்ப்பையைக்கொய்யச்செய்வேன் அப்போதவன் கையில் விஷமேறும்படிகொத்தும் அதினால் நான்வதிஷ்டனை கெலிப்பேனுண்டவனே.

(சுப்பிரமணியர்-வ-ம்) அப்பாமுனியே ? அப்படியேகொத்தி தேவதாசனை மரிக்கச்செய்வேன், நீ வுன்சமர்த்தால் அரிச்சந்திரன்வாயால் பொய்சொல்லச்செய்வாய் முனியே.

(விஸ்-வ-ம்) ஆண்டவனே ? தாங்களிவ்வள வுபகாரஞ்செய்யில்நானந்த வரிச்சந்திரன்வாயிற் பொய்வரவழைத்துடனே வதிட்டனையதிக அவமானத்திற் குள்ளாக்குவேன் சுவாமி.

(சுப்பிரமணியர்-வ-ம்) அப்பாமுனியே ? சொல்லியவாறே செய்கிறேன் போய்வாரேன் இரிஷியே.

(விஸ்-வ-ம்) அடியேன்பேரில்கிருபைசெய்வீர் கடவுளே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? சுப்பிரமணியர் பாம்பாய்புற்றில் சேர்ந்தவுடன், விஸ்வாமித்திரமுனி பிராமணவேடம்பூண்டு அசாலாத்துப்பிள்ளைகள் முன்வந்து தேவதாசன்தனித்து நிற்குங்காரணத்தை விசாரிக்கிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

(விஸ்-வேதி-வ-ம்) அப்பாசிறுவர்களே ? நீங்களார் இந்தமலைப்பொ

முதில் மிருகம்நிறைந்தகாட்டில் நிற்கின்றீர்கள், என்னயோசிக்கின்றீர்கள், என்க்குச்சொல்லுங்களப்பா மைந்தர்களே.

(அசலாத்து-வ-ம்) அய்யரே? நாங்கள் காசியிலிருக்கும் வேதியர்களின் பிள்ளைகள், சமுத்தெடுக்கவந்தோம், இந்தசிறுவனுக்கு தெர்ப்பைவேண்டியோசிக்கின்றோம் வேதியரே.

(விஸ்-வேதி-வ-ம்) இந்தசிறுவன்யார்? இவன் உங்களைவிடமிருந்து அழகும்காத்திரமும் உடையவனுயிருக்கிறான் இவனும்பிராமணப்பிள்ளைதானு சொல்லுங்களப்பபாலரே.

(அசலாத்து-வ-ம்) இவன்பிராமணப்பிள்ளையன்னு, க்ஷத்திரியப்பிள்ளை, காசிப்பட்டணத்திலிருக்கும் ஒருவேதியனுக்கடிமையாகுமையூரசுவாமி.

## விஸ்வாமித்திரன் விருத்தம்.

ஆரப்பாவுன்னையீன்ற வன்னையார்தந்தையாரெந்
தூரப்பாவடிமையாக வுற்றவாறெதுவோவுந்தன்
பேரப்பாயாதுதானே பெருகநீதெர்ப்பைகொய்ய
தேரப்பா வுன்பின்வாறேன் தீவரஞ்செப்புவாயே.

(விஸ்-வேதி-வ-ம்) அப்பாபாலகா? நீயார்? உன்தந்தையார்? நீயடிமையான காரணம் சொன்னால் நீ தெர்ப்பைசெய்யுமிடத்திற்கு நானும்வருகிறேனப்பா சிறுவனே,

## தேவதாசன் விருத்தம்.

எந்தவூரென்றுமேவந்தெனைக்கேட்டிட்ட
விப்பனேயுரைக்கக்கேளா
யினிவுடனயோத்தியைக் கனிவுடனுண்டதொரு
மிறையவனற்றவத்தாற்
சந்திரவதிகெர்ப்பத்தின் வந்தனென்பெயர்தேவ
தாசனென்றியம்புவார்கள்
சர்ப்பனைகள்புரியவப்பாவி கௌசிகன்செய்த
சதியினுலரசிழந்தோம்
வந்தவனிரக்கவே தந்தபொன்கடனுகி
வளருமிக்காசிசேர்ந்தே
வனிதைனையவிற்றன னினிவுடனென்தந்தை
வரக்கினுன் காலகண்டன்
தொந்தமாய் வழக்கிட்டெந்தனைக்கவர்ந்தறி
சொல்லானுவிமிசையிட்டான்
தூரத்தினுனடவிக்கே விருத்தமாய்வந்தேனுன்
துரோகிமுனிசெய்ததுதே.

(தேவ-வ-ம்) சுவாமி ? என்பேர்தேவதாசன், என்தாய் சந்திரமதி, தந்தைஅயோத்தியாண்ட அரிச்சந்திரன், பாதகனுகிய விஸ்வாமித்திரன் ஏதோசூதுநினைந்து அரசைக்கவர்ந்தான், தானங்கொடுத்த பொன்னை கடனாய்சுமத்த காசியில்வந்து தந்தையென்தாயைவிற்க வேதியன்வாங்கி மோசத்தால் என்னைக்குகைக்கொண்டு வெகுதுன்பம் கொடுத்து காட்டுக்குமனுப்பினனிது எல்லாமெங்களுக்குச் சனியனுய்மூளத்தசண்டாளகௌசிகன் சூதென்றறிவீரையா.

(விஸ்-வேதி-வ-ம்) அப்பாதேவதாசா ? முனிவன்சூதென்று சொன்னுய் அவன் என்னமோசஞ்செய்தான் நேக்குத் தெரியச்சொல்லுமப்பாபாலகா.

தேவதாசன் விருத்தம்.

ஐயரேயிரந்தபொன்னை யரசன்பாலிட்டுச்சென்றே
ஐயரேபுணரச்சொல்லி யனுப்பினனிச்சமாதை
ஐயரேமறுக்கவேந்தே யரசதைக்கவர்ந்தான்பாவி
ஐயரேயந்தப்பொன்னை யருங்கடன்சுமத்தினனே.

(தேவ-வ-ம்) அய்யா ? தானம் கொடுத்தபொன்னை அரசனிடம் வைத்துச்சென்றுன், நீச்சமாதரையனுப்பி சேரச்சொன்னான், மறுக்க, தந்தையின் செங்கோலைக்கவர்ந்தான், பரதேசிகளாக்கினன், செங்கோலுக்குள்ளடங்கியதென்றுணராமல் முன்வைத்தபொன்னைகடனாகச் சுமத்தினன் இன்னங்கேளும்வேதியரே..

இதுவுமது.

அன்பனேகடனைத்தண்ட வனுப்பினன்தரகனென்றால்
துன்பமேபுரிந்தான்பொய்யைச்சொல்லெனவறுத்தெடுத்தான்
கன்மமீதாகாதென்றே கருதியேயடிமையானேன்
மின்னமென்செய்வான்பாவி யினியஞ்சோந்தெரிகுவீரே

(தேவ-வ-ம்) ஐயரே ? கடனைத்தண்ட தரகன்வந்தான் அவன் மகாகுரூரசித்தமுடையவன்; ஒருபொய்யுரையென வருத்தினன், அதற்கஞ்சினாலு மென்தாய் மடிமைபட்டு, கடன்தீர்த்தோம் இனியந்தப்பாவி யென்னசெய்தாலு மஞ்சேளோமென்றறிவீர் வேதியரே

(விஸ்-வேதி-வ-ம்) அப்பாபாலகாஇவ்வித்துன்பங்களை யனுபவிப்பதைவிட ஒரு பொய்யுரைத்தா லதினலென்ன போகுமப்பா சிறுவனே

தேவதாசன் விருத்தம்.

நீரின்மேற்குமிழியொக்கும் நிலையில்லாயிவ்வாழ்வுநிசமோவையா
யாருதான்படைத்திருந்தா ரழியாமலிவ்வுலகிலசத்யராகி
சீர்மனைவிமக்கள்சுற்றந் தனைநம்பிநிலைவிடுத்தாற்செப்பப்போகா
பேர்நரகிலாழ்ந்திடுவா ரினிக்கேளினிவ்வார்த்தைபேசாதையா.

(தேவ-வ-ம்) வேதியரே ? பொய்சொல்லி அசத்தியஞ் சற்பகோடி காலம் பூலோகத்தில் வாழ்ந்தவர்களுண்டோ, மனைவிமக்கள் சம்பத்தைநம்பி நிலைவிட்டவு னிருப்பதற்கிடம் அழிநரகமென்றறிவீர் இனியிப்பேர்க்கொத்தவார்த்தை யென்செவிகேட்கப் பேசாதிருப்பீரையாவேதியரே.

(விஸ்-வேதி-வ-ம்) ஆ ராசா ! அன்றுதேவசபையில் சரியெடுத்தவர் முன்னர்நான் சபதஞ்செய்தவாறு இங்ஙனந்தோன்றி ஆண்பெண் அடங்கலையும் எவ்விதசோதனைசெய்தும் ஒருமொழியாகிலும் பிறழாமல் தான்பிடித்தமுயலுக்கு மூன்றேகாலென சத்தியமென்னுங் கயிற்றால் கட்டுண்டிருக்கிறார்களல்லவா இனியென்னசெய்வேன் நமதுஎதிரில்நிற்குஞ்சிறுவனோ அதிபாவியனும் மதனச்சொல்மாறுதவனுமிருந்தும் துப்பாக்கிவயிற்றில் பிறந்ததுபோலத்தோன்றலாயினுன் தந்தையைவிட அதிக பிடிவாதக்காரனுகவுமிருக்கிறான் நமதுவாக்கை பரிபாலிப்போமா, ஏதோ, மெய்வருந்தக்கூலிதருமென நீதிமொழியைக்கைவிடவுங்கூடாது சீ வெறிபிடித்தம்மைமேமுழுமையும் சோதித்தபிறகன்றோ இவ்வித ஆதைரியப்படவேண்டும் ஆகையால் சீக்கிரம் முயற்சிசெய்வாய் சரி, அப்பாசிறுவனே ? நோக்கு இந்தவேலையில்தொப்பை யெங்குசிக்குமப்பா பாலனே ?

(தேவ-வ-ம்) ஐயா ? அதோ ஒருபுற்றின்பேரில் விசேஷமாய் தொப்பைதெரிகின்றது, அருகில்சேர அச்சமாகின்றது வேதியரே

(விஸ்-வேதி-வ-ம்) அப்பா ? நீ க்ஷத்திரியனுய்பிறந்தபிள்ளை யச்சங்கொள்ளப்போமோ, பயத்தைவிட்டு பறித்துக்கொண்டுபோவாயப்பா.

தேவதாசன் விருத்தம்.

ஐயனேயருகிற்சேர வச்சமும்பயமும்நெஞ்சி
லையனேயாகுதெந்த னன்னைமேனுமதென்ன
மையனேதொப்பைதன்னை யமைக்காமற்செல்வேனுகி
லையனேயடிமைகொண்டோ னடிப்பனேயென்செய்வேனே.

(தேவ-வ-ம்) வேதியரே ? தொப்பையைப்பார்த்து அருகிற் சேரதிகிலாகின்றது தாய்தந்தைகள்பேரில் மனம்நாடுகின்றது, தொப்பைகொண்டுபோகாவிட்டால், காலகண்டையர் தெண்டிப்பாரென்று திகிலுமாகின்றது என்னசெய்வேனையரே.

(விஸ்-வேதி-வ-ம்) அப்பாபாலகா ?. நான் முன்னேநடக்கிறேன், நீ பயப்படாமலென்பின்னே வருவாய்பாலகா:

(தேவ-வ-ம்) அப்படியானால் வருகின்றேன் சுவாமி.

அசலாத்துப் பிள்ளைகள் விருத்தம்.

ஒப்பிலாத்தேவதாசா வுயர்குணபாலாகேளாய்
இப்பவோபொழுதானு மிரங்கிடுங்கமாச்சையா




அப்பனேயந்தப்புற்றி னருகினிற்போகப் போகா
இப்படித்திரும்பிவாரா யெங்கள்பங்குனக்கேயீவோம்.

(அசல-வ-ம்) அப்பாதேவதாசா? அந்திநேரத்தில் புற்றினருகிற்போகக்கூடாது புற்றிலிருக்கும் சர்ப்பம் வெளியர்குங்காலம், நாங்களறுத்த தெர்ப்பையில் கொஞ்சம்போது யுனக்கேகொடுக்கிறோம் வருவாயப்பா.

தேவதாசன் விருத்தம்.

ஐயரேநூதென்னி லலேந்துநீர்வருத்தமுற்று
நொய்யவேகொய்ததெர்ப்பை நுகர்வ்துநீதியன்றே
பையநான்சென்றேதெர்ப்பை பற்றியிங்கோடிவாறேன்
கையதைக்குவித்தே தனிங்கு கனிவுடனிற்பீர்போற்றி.

(தேவ-வு-ம்) அப்பாதோழர்களே? நீங்கள்காட்டிலலேந்தறுத்த தருப்பையைய நான்வாங்கிக்கொள்வது நீதியல்ல, ஆனதாலிதோ நானோட்டமாயோடி தருப்பையறுத்துக்கொண்டு வருகினே், அதுவரையில் நீங்களிந்த மரத்துநிழலில் நிற்பீர்களப்பா நேசர்களே.

(அசலா-வ-ம்). ஆனாலுன்னிஷ்டம்போல் போய்சீக்கிரம்வருவாயப்பா

தேவதாசன் விருத்தம்.

அடிமையாயென்னைக்கொண்ட வண்ணலவ்வேதியன்றான்
கொடும்பாவிவருதன்முன்னே கொய்துவாதர்ப்பையென்றான்
விடுகிலானன்றிச்சென்றால் வேதிப்பானடிப்பானையோ
கடுகியேகொய்வேன்காப்பாய் காசிவாழ்விஸ்வநாதா.

(தேவ-வு-ம்) ஓ! காசிவாழும் விஸ்வநாதனே! நானிந்ததருப்பையைக்கொய்து கொண்டுபோகாவிடி லடிமைகொண்டவேதியன் தண்டிப்பான் புற்றருகிற்செல்ல பயமாகின்றது, நீதான் துணைவிஸ்வநாதா.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவதாசனையழைத்துக்கொண்டுவந்தவிஸ்வாமித்திரன் புற்றினருகில்விட்டு மாயமானான், தேவதாசன்கடவுளைத் தியானித்துபுற்றின்மீதிலிருக்கிற தருப்பையை பறிக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## தேவதாசன் தர்ப்பைக்கொய்யுங்

### கண்ணிகள்.

இராகம்-அடாணா உசேனி-ஏகதாளம்.

தில்லாம்திரி-தில்லாம்திரி-தில்லாம்திரி-தில்லாம்
தில்லாம்திரி-தில்லாம்திரி-தில்லாம்திரி-தில்லாம் (தில்)
எல்லாம்முனிசூதோ காசி யீசாவுன்றனருளோ
இக்காட்டினிற்றருப்பைகொய்ய விட்டாய்விதிச்செயலோ (தில்)

பார்க்கபயமாகுதுளம் பதறுதடிதாயே
பற்றிக்கையாற் றருப்பைகொய்வேன் பரமேயருள்வாயே (இல்)
பாவிகனிவில்லாளெனைப் பாலனென்றுமறிந்தே
யற்றச்சொன்னுன்றருப்பையிதோ பறிக்கிறேனேதெரிந்தே (இல்)

தேவதாசன் விருத்தம்.

என்னமோவீசாபுற்றி லிரைச்சலுஞ்சீறற்சத்த
மென்னமோவிடுகுதையா வேதுண்டோவறியேனுள்ளே
என்னமோகாலங்காணே னெந்தையேபெற்றதாயே
என்னையித்துயராருந்த வெழுதினான்பாவியன்றோ.

(தேவ-வ-ம்) ஓ! பரமசிவமே! என்னைபெற்றதந்தையே! என்னை மறவாததாயே! இந்தப்புற்றினுள் பெருத்தவிரைச்சலுஞ் சீறலுங் கேட்கிறது என்னமோ தெரியேன்! அடியம்மாவுன்வயிற்றிலென்னையுற்பவிக்கும்போதே யிவ்விதத்துன்பமனுபவிக்க வெழுதினவன்பாவியாகுமடி அம்மணி.

புதருபோற்புற்றின்மீதிற் பொதிக்தோங்கியதருப்பை
புகிதாகொய்யமனதிற்பயம் பொங்குதருள்வைப்பை (இல்)
சத்யமுளவெனதுதந்தை சந்திரன்பதந்தன்னைச்
சார்ந்துமிதோகொய்யலுற்றேன் சம்போகாருமென்னை (இல்)
ஆ! ஆ! காசிநாதாநாக வரவுஞ்சீறித்தானே
அடியேன்கையிற்கடித்த துனக்கபயமிதோநானே. (இல்)

தேவதாசன் விருத்தம்.

ஐயரின்மக்காளென்னை யழைத்துமேவந்தீரிங்கு
ஐயவேதருப்பைதன்னைப் பற்றிநான்கொய்யுங்காலை
நொய்யவேநாகஞ்சீறி நோக்கியேயெயிற்றினாலே
கையிற்கடித்ததப்பா கடுகியிங்கோடிவாரீர்.

(தேவ-வ-ம்) அப்பாதோழர்களே? நான்தருப்பைகொய்யும்போது, புற்றிலிருந்து நாகசர்ப்பஞ்சீறி யென்வலதுகரத்திற்கொத்தினது, ஓடிவருவீர்களப்பா நேசர்களே.

அசலாத்துப்பிள்ளைகள் விருத்தம்.

என்னடாதேவதாசா-வெங்கள்பின்னோடிவந்தா
யென்னடாவேண்டாமென்று மேற்காமற்றருப்பைகொய்தா
யென்னடாசர்ப்பந்தீண்டி யேங்கிறாய்தாய்வயற்றி
லென்னடாகொள்ளியிட்டா யிதற்கென்னசெய்வோமப்பா.

(அசு-வ-ம்) அப்பாதேவதாசா? நாங்கள்வேண்டாமென்று தடுத்துங்கேளாமற்புற்றின்மீதிருக்குந் தருப்பையைத் தீண்டவேபாம்பு

கடித்து, பெற்றதாய்வயிற்றில் கொள்ளியைவைத்துவிட்டாய்! என்ன செய்வோமப்பா.

தேவதாசன் கண்ணிகள்.

இராகம்-சாவேரி, தாளம்-ரூபகம்

ஆ! சிவனே! ஆ! சிவனே! ஆ! சிவனே ஈசனே!
காசிவாழு மீசாவுன்றன் கழலடிதா பரனே. (ஆ! சி)
புவனம்படையப்னுமரி பூணக்கிட்டாத்தாளா
பவநீக்கிடு பவனேகாசி பாதாவென்னையாளாய். (ஆ! சி)
நீலிமகிழ்நிபுணமதி நீறுமழுவுடையா
ஞாலியுனைப்பணிந்தேன்பிஞ் ஞகனேபூதப்படையா. (ஆ! சி)
மாயன்றனக்கோராழியை மகிழ்ந்தீந்திட்டகுணனே
சேயன்றனைவிஷந்தீண்டிற்று சீர்மந்தாமணனே. (ஆ! சி)
அஞ்சலெனவமரர்நஞ்சை யன்றுவுண்டபரனே
தஞ்சமென்றே யுனைக்கோரினேன் தற்கார்சூலக்கரனே. (ஆ! சி)
காலன்றனைவீழ்வுதைத்தே காத்தாய்பாலன்றனையே
சீலனெனத்தொழுதேனினிச் சீர்தூக்கிடுமெனையே. (ஆ! சி)
முக்கணனேமாயன்மகஷ முடியவெரித்தவனே
இக்கணனைக்காருமுமை யிடமாய்த்தரித்தவனே. (ஆ! சி)

(தேவ-வ-ம்) ஓ! பரமசிவமே! என்னகெதிவிட்டாய்; உன்திருவடிக்கபயம்! அபயம்! காசிநாதா!

தேவதாசன் கண்ணிகள்.

ஆதியேயும்பரோதிடுமெவ் வருளேயம்பொருளே
ஜோதியேயுனைத்தொழுதேனிங்கு சுகுணவரமருளே. (ஆ! சி)
விண்ணே விண்ணின் வெளியேசிவ வித்தேமோனமுற்றே
அண்ணேயுன்ற னடியேபற்றினே னரனேவரந்தந்தே. (ஆ! சி)
எங்குநின்றவீசாவென்னு ளிங்குநின்றதுரையே
தீங்கும்படியுன்பதத்திற் றயைவைத்தருளிறையே. (ஆ! சி)
சரவணனையளித்தசரா சரத்தினுளவுருவே
தருணமிதுகாசிவிட்டே தாவயென்முன்குருவே. (ஆ! சி)

(தேவ-வ-ம்) அப்பாதோழர்களே

தேவதாசன் விருத்தம்

ஆலமுள்ளரவப்புற்றென் றறியாமற்றுவியம்மா
பாலனுந்தர்ப்பைதன்னைப் பற்றியேயறுக்கப்பாம்பு
சீலனைக்கடித்ததென்று செப்புவீரென்றன்றாயு
மோலமிட்டழுவாணீதி யோதிப்பின்போவீரப்பா.

(தேவ-வ-ம்) அப்பாதோழர்களே? பாம்பிருக்கிற புற்றென்றறியா

மல் நாங்கள் தடுத்துங்கேளாமற் றருப்பையைக்கொய்ய, பாம்புகடித் துன்மகனிறந்தானென்று, என்தாய்க்குச்சொல்லி, மெத்தஅழுது புல ம்பாமல் வேண்டியதைதெரியமுஞ்சொல்வீர்களப்பா.

தேவதாசன் கண்ணிகள்.

இராகம்-பியாக், தாளம்-ரூபகம்.

சிவசங்கரா ! சிவசங்கரா ! சிவசங்கரா ! சிவமே !
தவஞ்செய்தெனைப்பெற்றதாயை தர்க்காத்தருள்பவமே !
ஐயோவண்ணமாரே வென்றனன்னை சொன்னசீரே
நொய்யவந்துமுடிந்ததிங்கே நோகீர்விதிநேரே.

அசலாத்துப்பிள்ளைகள் கண்ணிகள்.

அப்பாதேவதாசாநாங்க ளடிக்கடியேதடுத்தோம்
ஒப்பாமலே மோசஞ்செய்தாய் ஓகோ துயரடுத்தோம்.

தேவ — அந்தேயபனெழுதினதை யழிக்கப்போமோஐயா
இந்திக்கெதியுற்றதென வியம்பீர்தாய்க்கேமெய்யா.

அச. — விதியோமுனிசதியோகாலகெதியோவொன்றுமறியோம்
பதிவிரதையனதேற்றிடும் பண்பெதுவோதெரியோம்.

தேவ. — அன்னையிதைக்கேட்டால்மெத்த வழுவாளுயிர்விடுவாள்
முன்னைவினைவாய்த்ததென்று மொழிவீர்கிலேப்படுவாள்.

அச. — கூடியுனையழைத்தேவந்தோர் கொடும்பாம்பினுக்கிரையாய்
தேடியிட்டசேதிசெப்புந் தெளிவறியோம்நிரையாய்.

தேவ — ஈசன்விதிதனக்கேநீங்க ளேதுசெய்வீரையா
நாசமுனிகூறுதுஞ்சனி நாட்டமென்பீர்மெய்யா.

(அச-வ-ம்) அப்பாதேவதாசா? என்னடா வாய் குளறினதுபோல் பேசுகிறுய் நேக்குமெத்த துக்கமாகிற தப்பா !

தேவதாசன் கண்ணிகள்.

இராகம் - சாமா, தாளம் - ரூபகம்.

கால்சோருதுகைசோருதே கண்களிருளுதம்மா
பால்குடிக்தநாவும்பல்லும் பற்றிக்கிட்டுதம்மா
மறையோன்கையிலுன்னைவிட்டு மடியலானேனம்மா
துரைகளுடேநெஞ்சின்கோழை நோக்குதேமேலம்மா
பெற்றவயிறெரியவிட்டேன் பிள்ளையென்னுமாசை
அற்றிடவுங்கெதியுனக்கே யமைந்ததுவோவோசை
தந்தைபோனவழியுங்காணுய் தனையனையுந்துறக்க
இந்தவிதியுனக்கேபாவி யெழுதினனோமறக்க.

(தேவ-வ-ம்) அப்பாதோழர்களே ? நீங்கள் சாக்கிரதையாய் நாடு

ருகு

சேர்ந்து என்தாய்க்கிந்த சங்கதிசொல்லி யவளென்னைக் காணும்படிக் கு அடையாள மிட்டுக்கொண்டு போவீர்களப்பா நேசர்களே.

## தேவதாசன் கண்ணிகள்.

இராகம்-முகாரி-ஏகதாளம்.

அன்னைதனைவிடுக்கவு-மிந்த-வடவிதர்ப்பையெடுக்கவும் -அரனே
என்னைப்பாம்புகடிக்கவும்-அரனே-அ-அ-யிதுவுமுன்ற னருளோ
தந்தைதனிபோனது-மென்றன்-ருயுமறியானதும் அரனே
என்றனுயிர்பறிப்பதும்-அரனே-அ-அ-யிதுவுமுன்ற னருளோ
மன்னுளநான்பிறந்ததும்-அ அ-அ-மறையோனுக்காளானதும் அரனே
இந்நாட்டனிமாளவும்-அரனே-அ-அ-யிசைந்தது முன்னருளோ
சூரியன்குலம்பொய்த்ததும்-வேதச்-சுருதிமொழியேய்த்ததும் அரனே
காரியுமுனிசேர்ந்ததும்-அரனே-அ-அ-கபடமுன்ற னருளோ

## தேவ்தாசன் ஆவிநீங்கும்போது

## சொல்லுங் கண்ணிகள்.

இராகம்-நீலாம்புரி, ஏகதாளம்.

என்னைகெதியென்றிருந்தாள் இனிவொண்டியாய்விட்டேன்
அன்னைதனையருள்வைத்துமே ஆளுமுறையிட்டேன்
அடியற்றதோர்மரம்போல்மண்ணி லமர்ந்தேனிதோ-அரனே!
முடிசோர்ந்ததுகபங்கட்டுது மூச்சொடுங்குதுபரனே.

## சாமர்சாஸ்திரி விருத்தம்.

என்னதான்செய்வோமிந்த விபம்பொணுவவதிக்கேதான்
முன்னவன்பாலன்ருனு மண்மீதிலயர்ந்தேசோர்ந்தா
னிந்ததுற்சேதிதன்னை யிடம்பிடிவிலவன்ருய்கேட்டே
நன்னகர்தனில்வாழாளே நாமிதற்கென்செய்வோமே.

(சாமா-வ-ம்) அடாய்சுப்பாய் சீனுய்? இந்த அவதிக்கென்ன செய் வோம், இவன் மண்மீதிற் சாய்ந்திறந்தான், இந்தசங்கதி இவன்ருய் கேட்டால் உயிர்வைக்க மாட்டாளே, அதற்கென்ன செய்யலாகு சொல்லுங்களடாய்.

(சுப்பா-வ-ம்) அடாசாமா, நேக்கொன்றுந் தெரியவில்லே, இந்தப் பழி நம்மைவிட்டதென்று எண்ணப் போகாதடா.

## அசலாத்துப்பிள்ளை கண்ணிகள்.

இராகம்-ஆனந்தபைரவி, தாளம்-ஆதி.

என்னசெய்குவோமினி என்னசெய்குவோம் நாம்தான்
யிவனுக்குற்றவிதிக்கே ஓ! சிவமே!

அன்னநடையாளெங்க ளடைக்கலமெனச்செய்தா
ளவடனக்கேதுசொல்வோம் ஓ! சிவமே!
என்மகனெங்கேயென்றே யேங்கியவள்தான்கேட்டா
லெவ்விதம்வாய்விடுவோம் ஓ! சிவமே!
மன்மதனையெரித்தமகிபாகீபுரிந்திட்ட
மாயமோதான்றெரியோம் ஓ! சிவமே!
இனியவசனமுள்ளானிலகுங்கல்வியுணர்ந்தோ
னிறையவன்மகனுச்சே ஓ! பாம்பே!
கனிவாயுளோனைவிட்டே கருதியெங்களைத்தீண்டிற்
கருமமோவுனக்குத்தான் ஓ! பாம்பே!
அசைத்துங்கட்டையைப்போல் வழகுள்ளதேவதாச
னடங்கிமூச்சொடுக்கினன் ஓ! சிவமே!
வசைக்காளாய்நாங்கணின்றோம் வடிவுடையாள்பாகனே
வந்திச்சவத்தைக்காப்பாய் ஓ! சிவமே!

அப்பாசாஸ்திரி விருத்தம்.

இப்படியழுவதாலே யிங்குறும்பலனேதப்பா
இப்படியிவனுமாண்டா னினிவீடுபோகவேண்டும்
இப்படிவளர்த்ததாய்க்கே யிவன்சேதியுரைக்கவேண்டும்
இப்படிவிட்டாற்பிரேதமிருக்குமோ விராதோசொல்வாய்.

(அப்பா-வ-ம்) அன்னடாசீனு? இவனோ இறந்துவிட்டான், இந்த சேதி யிவன்தாய்க்குத் தெரிவிக்கவேணும், பொழுதும் போகின்றது, நாம்போய்விட்டா லிந்தசவமிங்கு இப்படியே இருக்குமோ இராதோ இதற்கொரு யோசனை சொல்லடா சீனு.

சீனன் விருத்தம்.

ஓடியேதெர்ப்பைகொய்து ஓடுங்கியதோழன்றன்னை
நாடியேவிலங்குபக்ஷி நரிகளுந்தீண்டிடாமல்
தேடிநாமிலைகொம்பாலே திரேகத்தைமூடிச்சென்று
வாடிடுந்தாய்க்கேசொன்னால் வந்துகண்டிடுவாளப்பா.

(சீனன்-வ-ம்) அடாய் அப்பா? தேவதாசனை நரிகழுகு முதலானதுகள் தீண்டாதபடிக்கு செடிகளைப்பிடுங்கி யிவன்திரேகத்தைமூடி தாயான சந்திரவதிக்குப் போய்சொன்னால் அவள்வந்து காணக்கூடுந் தோழனே.

(அப்பாசாஸ்திரி-வ-ம்) ஆம், ஆம், அப்படியே செய்யலாம், நீ சொன்ன உபாயங் கேட்டெனக்கு மெத்த சந்தோஷமாச்சுது, சீக்கிரஞ் செடிகளைப் பிடுங்குங்க ளப்பா.

(அச-வ-ம்) அப்பா தேவதாசா? உன்னுடலை நரிநாய்கள் தீண்டா

திருக்கூசெடிகளால் நன்ருய்மூடிவிட்டோம், இனி நாங்களாத்துக்குப் போயுன்னுடையதாயாருக்கு இந்தசங்கதிதெரிவிக்கின்றோ மிதுவுமெ ங்கள் தலைவிதிதா னுன்னைத் தனியேவிட்டுப் போவதடா தோழனே.

சாமாசாஸ்திரி விருத்தம்.

ஓதவேனென்றுகேளீ ருண்மையாந்தோழமாரே
மாதுதான்வழியறிந்து மகன்றனைக்காண்பதற்கு
மேதுவாய்த்தழைபிடுங்கி யிரைத்துக்கொண்டேகினப்பா
நீதுகளின்றிமாண்டோன் றிரேகத்தைக்காணுவாளே.

(சாமா-வ ம்) அப்பா, சந்திரமதிக்கு வழிதோற்றுதாதலால் தேவ தாசன் சொன்னபடி வழியிற்காணுஞ் செடிகளைப்பிடுங்கி, நாம் நடக் கும்பாட்டையிற் போட்டுக்கொண்டு போனாலதைப் பார்த்துக்கொண் டேவந்து தன்மகனைக்கண்டு பிடிப்பாள் தோழரே.

(அச-வ-ம்) ஆம், ஆம், நீ சொன்னபடியே அடையாளமிட்டுக்கொ ண்டு ஜாக்கிரதையாய் ஆத்துக்குப் போகலாம் வாருங்களப்பா.

பொது விருத்தம்.

இவ்வாறுயசலாத்துமைந்தர்காட்டி
லிருந்தியபிரேதத்தைத்தழைபால்மூடி
நொவ்வாமல்வழிதெரியக்குறிப்புமிட்டு
நோக்கிவரக்காசிதனையையன்வீட்டில்
ஒவ்வாதமனத்துடனேபிரிந்துசென்ற
உத்தமியும்பொழுதஸ்தமுற்றதென்று
எவ்வாறுமகன்காணேனெனவேயெண்ணி
யேங்குவாள்துயரத்தாலேங்குவாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்விதமாக அசலாத்துப்பிள்ளை கள், காட்டைவிட்டு வருகிறவழிகளில் தழைகளைப்போட்டு வீட்டிற் கு வருஞ்சமயத்தில் சந்திரவதியம்மன் மாலைப்பொழுதாகியும் மகன் வரவில்லை யென்றுதாக துயரப்படுகிற விதங்காண்பீர்களனவான்களே

சந்திரமதி தொச்சகம்.

காட்டுக்குப்போனவென்றன் கண்மணியந்தியாயும்
வீட்டுக்குவரவேணுமேனென் வேகுதென்கும்பியையோ
காட்டுளமைந்தர்விட்டு நடந்துமுன்வந்திட்டாரோ
கேட்டுமேவருவோமென்றும் கிட்டிடவிடங்காணேனே.

(சந்-வ-ம்) ஓ ! பரமசிவமே ! காட்டுக்குப்போன என்மகன் இன்னே ரமாகியும் வரக்காணேன், அந்திப்பொழுது மாய்விட்டது, என்வயிற்றி லேதோ சங்கடமுமாகின்றது, அசலாத்துப்பிள்ளைகளைப்போய்க் கே ட்போமென்றால் இடமுந் தெரியேனே தெய்வமே.

சந்திரமதி-தரு.

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

என்னசெய்வேனின்னமும் வரக்காணேன் ஆ! ஆ! என்மகன்

அநுபல்லவி.

என்வயிற்றினி லீசலனருளினல்
நன்மையாய்த்தோன்றிய நாயகமாமணி. (என்)

சரணங்கள்.

அந்திப்பொழுதும் வந்திடலாச்சே-ஆ! ஆ! மகனே!
அன்னங்கேட்டிடு நேரமும்போச்சே
எந்தன்மனமெத்த வேங்கித்துடிக்குதே
எண்ணுதெல்லாமெண்ணி யென்னுளம்நோகுதே. (என்)
தீபம்வைக்கும் பொழுதும்வந்துதே-ஓ! ஓ! மகனே!
தேரவிருண்டு வானங்குவிந்துதே
தாபமாகுதே தன்வயிற்றிற்கொள்ளி
தாக்கினவாறுபோற் றவிக்குதேதுள்ளி. (என்)
காட்டுமிருகத்தைக் கண்டுபயந்தாயோ-ஆ! ஆ! மகனே!
களைசொக்கிக்காற் பின்னியிடைந்தாயோ
நாட்டுமைந்தர்கள் நாடிவளர்வீதி
நானறியேன்கேட்க நாயகத்தின்சேதி (என்)
காதகன்சூதுமேது செய்தானோ-என்மகனுங்
காலில்முட்தாக்கிக் கடுக்கின்றானோ
வாதனையாகுதே வதனமுஞ்சோருதே
வாவாமகனென வாக்கில்வருகுதே. (என்)

பொது விருத்தம்.

இவ்வாறுசந்திரமதியெண்ணுதெல்லா
மெண்ணியே துயரமுற்றிருக்குங்காலை
அவ்வாறேயடவிதனை நாடிச்சென்ற
வசலாத்துமைந்தர்களுந்தோன்றிநெஞ்சம்
ஒவ்வாமற்றெருப்புறத்திற்சத்தங்காட்ட
வுத்தமியுந்தொனியறிந்துபுறத்திருந்தே
வவ்வால்போற்பறந்துவந்துமகனேயென்று
வதறுவாளவர்கள்முன்னேகதறுவாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாய் சந்திரமதியம்மன் மகன்வரவில்லையென்று விசனப்பட்டுக்கொண் டிருக்கிறவேளையில், அ

சலாத்துப்பிள்ளைகள் காலகண்டன்வீட்டிற் கெதிரில்நின்று சத்தங்காட்ட, சந்திரமதியம்மன் ஓடோடிவந்து வேதியர் மைந்தர்களை விசாரிக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

சந்திரமதி விருத்தம்.

தாவியேமான்றன்கூட்டந் தனைக்கண்டேதொடர்தல்போல
ஏவிட்வுங்கள்பின்னே யிணைத்தவென்மகன்றானெங்கே
ஓவிதியேசொல்லாணே ணுரைத்திடவெனக்குத்தோன்ற
பாவியென்வயிறுமெத்தப் பதறியேபதைக்குதப்பா.

(சந்-வ-ம்) அப்பா ஐயமாரே? மான்கூட்டத்தைக்கண்டு மான்தொடருவதைப் போலுங்கள் கூடவந்த என்மகனெங்கே? சொல்லுவீர்கள் அப்பா.

(சாமா-வ-ம்) அடாய்சீனு? நீ சொல்லும் பிள்ளாய்.

(சீனு-வ-ம்) அடாய்சாமா? நேக்கு வயிற்றைப்பற்றி யெரிகிறது, நீயே சொல்லும் பிள்ளாய்.

(சாமா-வ-ம்) அடாய் அப்பா? நோக்குதோஷ மில்லை, நீயாகிலுஞ் சொல்லும் பிள்ளாய்.

(அப்பா-வ-ம்) அடாய் சாமா? நேக்ஙானால் பயமாகின்றது கையுங் காலு முதறுகிறது, நாமெல்லோரு மொரேமுகூர்த்தமாய் சொல்லுகிறதும், ஓடுகிறதுமா யிருக்கவேண்டும் பிள்ளாய்.

(சாமா-வ-ம்) ஆம், ஆம், அதுவேசரி, அதுவேசரி.

(சந்-வ-ம்) ஓ! காசிநாதா! என்னமோ மோசம் நேரிட்டாப்போலிருக்கின்றதே! நானென்செய்வேன்! அப்பா? நடந்தவாறு தெரியச் சொல்லுங்கள் வேதியர் மைந்தர்களே.

அசலாத்துப்பிள்ளைகள் விருத்தம்.

அழுகதாலாவதென்ன வம்மணிசொல்லக்கேளாய்
பொழுததுசாயாமுன்னம் போயினோமங்குன்பாலன்
வழுவின்றிச்சமிதைசேரா வமைத்திடதெர்ப்பைகொய்தான்
பழுதுளபாம்புதீண்டிப் பாலகன்மாண்டானம்மா.

## சந்திரமதி மகனிறந்ததுசேதிகேட்டு

புலம்புங் கண்ணிகள்.

இராகம்-அபுரூபம்-தாளம்-சாப்பு.

ஆ! ஆ! மகனே! பாம்பு! அப்பா! மகனே! பாம்பு!
ஐயோ! மகனே! பாம்பு! அடவியிற் கடித்ததோ!
அப்பா! அப்பா! அம்மா! அம்மா வென்று
அழுதுமடிந்தாயோடா மகனே! மகனே-மகனே.

வேமணலிற்புழுபோலத்துடித்துமே, விழியில்நீர்சொரிய
பழிகாரிநான்பெற்ற மகனே-மகனே-மகனே. (ஆ)
என்னென்றழுதாயோ ஏங்கிப்பறந்தாயோ-ஐயோ!
ஏந்தலேமனதி லெண்ணமிட்டாயோடாமகனே!
கன்னமாபுரியாள்வோன் கருதியநற்றவத்தில்
காதகிவந்திந்தகண்ணுறவிகாணவோடா மகனே-மகனே-மகனே. (ஆ)
பாவியுன்னைப்பார்த்துப் பாரிலுடல்ததும்பி-ஐயோ!
பதவிபெறுவோமென்றே பண்புற்றிருந்தேனம்பி-மகனே-மக!
ஆவிகுலைந்தாயோ அரவத்தாலுத்தம
ஆதித்தன்மரபின னன்னமேமாண்டாயோடாமகனே-மகனே. (ஆ)
தந்தையைநினைந்தாயோ தாளடிதொழுதாயோ
தாயானவென்வயிற்றிற் றணியாத்தீயிட்டாயோடா-மகனே!
இந்தவிதிகாணவோ வென்னைவிட்டுப்பிரிந்தாய்
ஏதுக்கிச்சென்மமென வேசிநீயிறந்தாயோடாமகனே-மகனே! (ஆ)
என்னநான்செய்வேனடா வெப்போதுகாண்பேனடா-அப்பா!
என்வயதினிற்பெற்ற வின்பமேமாண்டாயோடா-மகனே!
அன்னமேதாரூவே யழகுகைப்புருவே
ஐயையோவென்வயி றடிபற்றெரியுதடாமகனே-மகனே! (ஆ)

## சந்திரமதி விருத்தம்.

மாண்டையோமகனேபாம்பால் மறந்தையோவன்னைதன்னை
வேண்டையோதெருவிலென்னை விட்டையோவொண்டியாக
ஆண்டையுஞ்செய்துபோன யடிமையும்பொய்க்கலாச்சோ
பூண்டையோநாதன்பாதம் போனையோமகனேயப்பா.

(சந்-வ-ம) அப்பாமகனே! நீ காட்டில்தனியாய் மாண்டாயா! என்னை ஓரியாய் விட்டாயா! உன்தந்தைசெய்த * அடிமையு மறந்தாயா! இனியெப்போ காண்பேனடாகண்மணியே!

## சந்திரமதி-தரு.

இராகம் - செஞ்சுருட்டி, ஏகதாளம்.

பல்லவி.

அப்பாமாண்டையோ ஓ! ஓ! பாலனே!
எப்போகாண்பேனடா என் சீலனே. (அ)

அநுபல்லவி.

கப்பியேயுன்னைக் காளந்தீண்டிட
ஒப்பிவந்ததோ ஓகோவிதியோ. (அ)

சரணங்கள்.

கத்தித்துடித்துமே கதறியழுதையோ!
தத்திநீயுந்தரை தாங்கவிழுந்தையோ!
சத்தியம்பொய்த்ததோ சந்திரவழிபெற்ற. (அ)

பாவியர்க்கியென்னைப் பறந்துபோனையோ !
கூலித்தாயென்றே குரலுமற்றையோ !
ஆவிபோம்போது அம்மாவென்றுமே. (அ)
எந்தன்வயிறிதோ வெரிந்துவாடியே
உந்தனைவிட்டுநா னொண்டியாகியே
வந்தவினையாளீ வாய்விட்டலறியே. (அ)
தளத்திலுன்னையே தாங்கினாளுமே
வளத்தேனேபாம்பின் வாய்க்கோனுமே
குலத்திற்கேயினிக் கொழுந்தேதடா. (அ)

சந்திரமதி விருத்தம்.

போனையோமகனேநீதாஞ் புவியாள்வாயென்றிருந்தேன்
போனையோவெனைமறந்தே பூசுரன்றன்பம்விட்டே
போனையோவேந்தல்வந்தாற் புகன்றிடவேதுங்காணேன்
போனைபோவினியோர்பாலன் பொருந்துவாறுண்டோகண்ணே.

(சங்-வ-ம்) அப்பாமகனே ? நீ அரசாள்வாயென்றும், உன்னால்பதவி பெறலாமென்று மிருந்ததற்கு, இத்துன்பத்தைவைத்து நீ வேதியன் துன்பத்தை நீக்கிக்கொண்டு என்னை வொண்டியாக்கினய், இனிவேறு புத்திரன் உன்னைப்போல் கிடைக்குமோ செல்வமே !

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-சுத்தசாமா, ஏகதாளம்.

என்னநான்செய்வேண்டா எவ்விதம்மறப்பேண்டா
சின்னவயதிலுன்னைச் சீராட்டாப்பாவியானேன்.(என்)
நீரில்லாக்கிணறுனேன் நிலையில்லாப்படகானேன்
பாரினிலினியுன்னை பார்க்கப்போறேனேபாலா.(என்)
தனிமையாய்நீமாண்டாய்த் தவிக்கிறேனுன்கண்டாய்
இனிமேலெனக்குத்துணை எவரைக்காண்பேண்பாலா.(என்)
இரவியில்லாப்பகலானேன் ஈனுதோர்பசுவானேன்
பரதவிக்கவேயுன்னை பாம்புக்கிட்டேண்டாபாலா.(என்)
ஒண்டிமரமாய்நின்றேன் உதவாப்பிறப்பிதென்றேன்
எண்டிசையிலுமுன்னை யினிநான்பார்ப்பேனேபாலா.(என்)

சந்திரமதி கொச்சகம்.

கடுகிநீவருவாயென்றே கையினிற்கூழையேந்தி
அடவியின்வழியைப்பார்த்து அரும்பாவிகாத்தேன்தோஷி
படபடத்திடவென்னெஞ்சம் பாலனேநாகங்கொத்தி
விடத்தினுன்மாண்டாயென்றே விளம்பவுங்கேட்டேன்பாவி.

Page numbering incorrect

(சங்-வ-ம்) அப்பாமகனே? காட்டுக்குப்போனவன் சீக்கிரம்வருவா யென்று ஐயரின்தேவிவார்த்தகூழை யுனக்காகவைத்து, நீவருகிறவ ழியைப்பார்த்துக்கொண்டிருக்க, காட்டில் பாம்புதீண்டியிறந்தாயெ ன்று கேட்கவுமானேனடாசெல்வமே.

திக்கில்லாப்பாவியானேன் தியங்கியுருகலானேன்
கக்கிப்பெற்றேனேயுன்னை கைசோரவிடபாலா.(என்)
மதியில்லாவிண்ணானேன் மருந்தில்லாப்புண்ணானேன்
விதியோவெனக்குமுன்னே விஷத்திற்கிடவும்பாலா.(என்)
இலையிலாச்செடியானேன் ஏரியிலாக்குடியானேன்
கொலையிலடக்கியுன்னைக் கொண்டபலனிதுவோ.(என்)
அரசில்லாநாடானேன் அறுகில்லாக்காடானேன்
வரத்தாற்பெற்றுமேயுன்னை வனப்பாம்புக்கிட்டேன்பாலா.(என்)
கூடில்லாபக்ஷியானேன் குறையுளபேச்சியானேன்
நாடிப்பெற்றுமேயுன்னை நமனுக்கிட்டேண்டாபாலா.(என்)

சந்திரமதி விருத்தம்.

ஐயரின்மக்காளுங்க ளாதீனமெனவேசொல்லி
மையனையொப்பித்திந்த பாவியுந்திரும்பினேனே
நொய்யுறவவனைவிட்டே நோக்கிநீரெங்கேசென்றீர்
துய்யரேநான்போய்காணத் தோன்றுவாறுரைசெய்வீரே.

(சங்-வ-ம்) அப்பா அசலாத்துமைந்தர்களே? உங்களுடக்கலமென் றொப்பித்த மகனைவிட்டு நீங்களெங்கேபோனீர்களப்பா! என்மகனி ருக்கிறவிடத்தி னடையாளந்தெரியச்சொல்லுங்களப்பா.

அசலாத்துபிள்ளைகள் விருத்தம்.

அம்மணிதாயேகேளா யறைகுவோம்நீதான்கிட்ட
நம்பனின்நாட்டைவிட்டே நாடிநீமுன்னேவந்த
செம்மலிபாட்டைசேர்ந்தே செடியிலைகுறிப்பைப்பற்றி
சிம்மெனச்செல்வாயாகிற் சிக்குமோராலுந்தானே.

(அச-வ-ம்) அம்மாதாயே? நீமுன்வந்தவழியைப்பற்றி நடந்தால், நாங்கள்செடியைப்பிடுங்கி யடையாளமாய்ப் போட்டுக்கொண்டு வந் திருக்கிறோம், அதைப்பற்றிச்சென்றுலொருபெரிய ஆலமரந்தோன் றுங்கேளாய்தாயே.

இதுவுமது

ஆலமாமரத்தைக்கண்டே யதற்குநேர்தெற்கிலம்மா
சீலமாந்தர்ப்பையோங்குஞ் செப்பொணுப்புற்றைக்காண்பாய்
கோலமாமிருகமுன்றன் குழந்தையைத்தீண்டிடாமல்
ஞாலமேற்கிடத்திமூடி நாம்வந்தோமறிகுவாயே.

(அரச-வசம்) அம்மா? அந்த ஆலமரத்தின்கீழ் புற்றின்மேல்தர்ப்பை ச்செடியிருக்கின்றது, அதன் தெற்கில்தேவதாரனேகிடத்தி மிருகங்கள் தீண்டாதிருக்க இலைகளால்மூடி வந்திருக்கின்றோம்தாயே, நாங்கள் போய்வருகிறோம் அம்மா.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-காம்போதி-தாளம்-ரூபகம்

ஐயோ!என்னமோசஞ்செய்தாய் கண்ணின்மணியே ஆ! ஆ! கனியே
அடுத்தமங்கையரறிந்துமென்னையே ஏச-ஆ! ஆ! மகனே!
அரும்பாவியென்றுமனைவரும்நின்றுபேச-ஆ! ஆ! மகனே!
ஆலமரத்தெதிர்-பாழும்புற்றில்வளர்
காளமுனைத்தீண்ட-சீலா நீ மாண்டாயோ (ஐ)
அப்பா என்னசெய்வனடா கண்ணின்மணியே-ஆ! ஆ! கனியே!
அருந்தவஞ்செய்துவருந்திப்பெற்றேனேசீலா-ஆ! ஆ! மகனே!
அடுக்காத்துயரமருந்தலுற்றேனேபாலா-ஆ! ஆ! மகனே!
அடவிக்குள்ளேசென்று - படருந்தர்ப்பைகொண்டு
திடமாய்வாறேனென்று - நடந்துநீமாண்டாயோ (ஐ)
கொஞ்சும்வயதாச்சுதேடா கண்ணின்மணியே-ஆ! ஆ! கனியே!
குருமொழிதனைக்கோராதிருந்தேனே கிளியே-ஆ! ஆ! மகனே!
கொண்டவர்மனங்கொதிக்கநடந்தேனே அளியே-ஆ! ஆ! மகனே!
கோவென்றழுகாதே-கோவாலுருகாதே
யேவநீதிசொன்ன-பாலத்தால்மாண்டாயோ (ஐ)
தாயென்னும்வாயும் போச்சே கண்ணின்மணியே-ஆ! ஆ! கனியே
தாயிலடித்தோரைத்தவிரவிடுத்தேனேபாவி-ஆ! ஆ! மகனே
தாயிலாச்சிசுவைத்தடிகொண்டடித்தேனே-மேவி-ஆ! ஆ! மகனே
தாவியென்வயிற்றில் - ஆவிகொண்டெழும்ப
பாவிநீயைவிட்டு - கோவித்துமாண்டாயோ (ஐ)

சந்திரமதி விருத்தம்.

ஐயனேகாசியீசா வருளிதோமழுவைத்தாங்கும்
கையனேபாலனுவி-கவர்ந்தையோபாம்பையேவி
ஐயனேமுனிகோளிற்கே துணைவனோயோநீதான்
நொய்யவேவிட்டதுன்னை நோன்பினைதற்கோநாதா.

(சந்-வ-ம்) ஓ! காசிவிஸ்வநாதா! உனக்குநானிழைத்த நோன்பிற் காக முனியுடன்கலந்து, பாம்பையேவி என்மகனுயிரைப்பறித்தா யோ பாழுந்தெய்வமே.

சந்திரமதி விருத்தம்.

ஆதியாய்புவனமெல்லா மாள்பவன்கோளோசூற்று
சோதிக்கும்விஸ்வாமித்திரன் சூட்சியோமாய்கையாதோ

மாதினைவருத்தவந்த மகேசனுமகிழ்ந்ததாலே
வேதியர்மக்காளுங்கள் வீட்டினிற்கேகுவீரே.

(சங்-வ-ம்) அப்பாமைந்தர்களே ? எனக்கித்துயர்வந்த காரணமீசன் செயலோ, அல்லது விஸ்வாமித்திரர்சூதோதெரியாது, நீங்களுங்கள் வீட்டிற்குப்போவீர்களப்பா.

(அச-வ-ம்) அப்படியேதாயே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? அசாலாத்துப்பிள்ளைகள் தேவதாசனிறந்தானென்றுசொல்லிப் போனபின்பு, சந்திரமதியம்மன் தன்னை யடிமைகொண்ட வேதியரிடம்போய் உத்திரவு கேட்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

சந்திரமதி விருத்தம்.

ஐயரேயண்டினேனா யாதரித்திடும்பொற்பாதா
வெய்யவேயசலாத்துள்ள வேதியர்மைந்தர்வந்தே
யையரவதினுலென்றன் பாலனுமடிந்தானென்றார்
துய்யரே செலவளிப்பீர் தோகைசென்றடக்கத்தானே,

(சங்-வ-ம்) என்னை அடிமைகொண்ட ஆண்டவனே ? காட்டுக்குத் தாங்களனுப்பிய எனதுபாலனைப்பாம்புகடித் திறந்தானென்று, அசலாத்துப்பிள்ளைகள் சொல்லிப்போனார்கள், நான்போய் அடக்கஞ்செய்துவரவுத்திரவுதரவேணுஞ்சுவாமி-

காலகண்டய்யர் விருத்தம்.

என்னடிசொன்னாய்சந்தி யின்னமோர்தரம்நான்கேட்கப்
பன்னடியெனதுதிரேகம் பதைக்குதேயாவிகூடத்
தின்னமாயேங்குதையோ தீங்கதுவந்ததென்றன்
பொன்னெலாம்பாழதாகப் போச்சுதென்செய்வேன்பாவி.

(காலகண்ட-வ-ம்) ஐயோ ! ஐயோ ! என்பணமெல்லாம் போச்சுதே ! வயிறெரியுதே ! வயிறெரியுதே ! (அங்குமிங்குமோடிகுதித்தல்)

காலகண்டய்யர்-தரு

இராகம்-தர்பார்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

என்னசெய்வேண்டி-அடிசந்தி-ஏதுசெய்வேண்டி.

அநுபல்லவி.

அன்னிதமதுபொன்னை யளித்தேனடிபாவி
ஆ ! ஆ ! ஆ ! இப்படியாகுமென்றறியேண்டி. (என்)

சரணங்கள்.

கரியின்மீதினேறி-ஒரு-காளையும்பரி
நெறிகவண்மீறி-பொன்-எண்ணினேனோநாரி

வருவிதிதனே-யறியாமலேம்னஞ்
சரிபோனபடி-சார்ந்துகெட்டேன்கனம். (என்)
நல்லவுணவறியோ-மொரு-நாணயவுடுப்பறியோஞ்
செல்லப்பரிசறியோ--மடிபாவி-செருக்காயுணிந்தறியோம்
கல்லுமுள்ளுந்தைக்கக்-காலுமெத்தநோகத்
தள்ளாடிசேர்த்திட்ட தனமும்போச்சேமிக்க. (என்)
பிச்சனுலேதானே-அடிபாவி-கேட்டதையீந்தனே
வாச்சாய்சண்டிதானே உன்னுலே-வருமோபணந்தானே
ஏச்சாநீயெந்தனே-பெத்துசெய்காயடி.
போச்சாபணம்நல்ல-புத்திகற்றுயடி. (என்)
பெண்ணுலாவதேது-தனம்-பெருகுமோதானேது
உன்னுற்பலன்யாது-கிச்சா-னுதவிபோனபோது
மண்ணுண்டவனிந்த-மர்மமறிந்துமென்
பொன்னேவாங்கியுந்த புனிதனுக்கீவானேன். (என்)
சேஷியுஞ்சொன்னுளே-யிப்போ சிறவுமாவாளே
தோஷிநீயும்காளே-ஓடி-தொலைவாயேகோளே
யோசித்துநிற்காதே-யுனக்குவிடையீயேன்
ராசக்குவாங்கின-காணியடிமைநாயே. (என்)

## சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-புன்னுகவராளி, அடதாளம்-சாப்பு.

பெற்றவயிறது பற்றியெரியுதே
உத்தமானென் செய்வேன்-அதி
பத்தளியுன்னடி யுய்வேன்-என்
கத்தனேமாண்டவென் கண்மணியைக்காண
கருணைவாக் களித்திடுமையா.

## காலகண்டய்யர் கண்ணிகள்.

இராகம்-மோகனம்.

கத்தியழுதுமே சித்திரமாய்ப்பேசி
தத்திவிழுகிறுயென்னடி உனக்கு
புத்தியுண்டோசந்தி பன்னடி-மெத்த
சத்தியவானென்று சாற்றியவாநில்லாஞ்
சடுதிவெளியாச்சு போபோடீ.
சந்.— பாம்புகடித்தோனே சாம்பலாய்நீற்றிட
தேம்பிவிடை கேட்டேனையா-நீர்
வீம்புகள்செய்வதேன் றய்யா-யா

தாம்புயங்கோரினேன் தணிவாய்மனந்தேற்றி
தயைவிடையீகுவீர் நாதா.
கால.—ஏதடிசந்திரீ ஓதுறாய்வீண்வார்த்தை
தீதுகள்செய்குவேன் பாரடி-மெத்த
வாதுசெய்யாதேநீ தோடி-அடி
போதும்போதுமெத்த புதுமையாய்ப்பேசுறாய்
போகவிடையீயே ஞண்டி.
சந்.—கெட்டகுடிகெடும் பட்டகாலிற்படும்
திட்டமும்நான்கண்டே ஞதா-இந்த
அட்டதிசைபுகழ் பாதா-உன்
இட்டமதைப்பெற வெண்ணிவணங்கினேன்
ஏகவருள் தாருஞ்சுவாமி.
கால.—ஏகக்கூடாதெங்கும் போகக்கூடாதடி
தேகத்தைவிற்றவள் நீயாச்சே-என்
பாகத்தில்நஷ்டமது வாச்சே-உப்
யோகமில்லாப்பால ஞெழிந்துபோனதை
உதறியாத்தின் வேலைசெய்யடி.
சந்.—செய்யும்வேலையெல்லாங் கையினல்முடித்திட்டேன்
ஐயனேயந்தியில் யானுமே-அருள்
துய்யனேயங்கேக நானுமே-பாவி
பொய்யுரைசெய்யிலேன் பொழுதுவிடியாமுன்
போற்றிடவருகிறேன் நாதா.

(காலகண்ட-வ-ம்) அடிசந்திரீ ? நீ சொன்னவார்த்தையா லென்பணமெல்லாம் பாழாய்விட்டதடி, பிள்ளைபோனல் மறுபடியும் நீபெற்றுக்கொள்ளலாம், பணம்வருமாடி, அடிமையானதால் எனது உத்திரவின்றி யெங்கும் போகக்கூடாது கால்மாட்டில் விழுந்திருடி.

சந்திரமதி விருத்தம்.

பண்டுநான்மெய்யேமெய்யே பணிந்திட்டேன்குருவேஐயா
தொண்டுநின்னடிக்கேயாகுந் தூயனேபேதமுண்டோ
சென்றுபோற்பாலன்மாண்ட செல்லோணுவடவியேகி
கண்டுமேயடக்கிவாறேன் கடுகினிலருள்வீரே.

(சந்-வ-ம்) சுவாமி ? அடியாள் தங்களுக்குத் தொண்டென்பதற்குத் தடையுண்டா, நான் காட்டுக்குச்சென்று மாண்டமகனை அடக்கஞ் செய்து அதிக ஜாக்கிரதையாய் விடியுமுன் வருகிறேன் செலவு தயருஞ் சுவாமி.

(காலகண்டி-வ-ம்) ஓய் ஐயரே ? இவள் பெற்றவளானதால் வருந்துகின்றாள், தோக்கேதுயாணுங் கொஞ்சமாகிலு மனமிரங்கா திருக்கிற

து, சுடுதியில்போய் சவத்தைச்சுட்டு வரும்படி யுத்திரவு கொடுத்தனுப்புங்காணும் ஐயரே.

(காலகண்ட-வ-ம்) அடிசேஷி ? இராஜன்தெரிந்தும், நமக்குமோசஞ்செய்தான், தெரிந்திருந்து மகனைவிற்றுன், கீச்சானுஞ் செத்தான், இவளையு மனுப்பிவிட்டால் வருவாளோ என்னமோதெரியாதடி.

காலகண்டி விருத்தம்.

கேளுமோய்வீணாய்மெத்த கிளம்புதீர்மன்னனந்த
நாளுமேவிற்றதித நாரியமாண்டோன்றன்னைக்
கோளுற்றபுரிந்தேவம்பாற் கொண்டுநீவந்தீரையா
தாளுடபலனைக்கொண்டான் தயங்கலேனிருப்பீர்சும்மா

(கால-வ-ம்) ஓய் ஐயரே ? ஏன்காணுமெத்த வருத்தப்படுகிறீர், இராஜன் சந்தியைவிற்றுனன்றி, கீச்சானைவிற்கவில்லை, நீர்மோசமாய்க்கொண்டுவந்தபடியா லும்மைமோசஞ்செய்து ஏமன்கொண்டுபோனான், வெறுமையாயிருங்காணும் ஏன்வீணாக இவள்வயிற்றெறிச்சலைக்கொள்ளுகிறீர், நீரும் பிள்ளை பெற்றிருந்தால் இவள்படுந்துயரம் உமக்குந்தெரியும், இவளோஉலகாண்ட மன்னன்தேவியென்றும் காலவித்தியாதத்தால் அடிமையானார்களென்றும் நீரேயெனக்குச்சொல்லியிருக்கிறீர், மேல்சொன்னசுகங்களெல்லாம் போக்கின இவள்மகனிறந்தசங்கதிகேட்டு உம்மை உத்திரவுகேட்டால் ஏன்தடைசெய்கிறீர் வேண்டாம் அனுப்பிவையும்.

காலகண்டய்யர் விருத்தம்.

நல்லதுசந்திகேளாய் நாரிநீபசப்பிநீதி
சொல்லிடிலதிகவண்ணஞ் ஜோடித்துவாடுகின்றாய்
நல்லிருட்டனிலேயோடி நாடியுன்பாலன்றன்னை
செல்லமாயெடுத்தடக்கிச் சீக்கிரம்வருகுவாயே.

(காலகண்ட-வ-ம்) அடிசந்தி ? நீ மெத்தபசப்பியாயிருக்கிறாய், ஆத்தின்வேலைக ளதிக மிருப்பதால், ஜாக்கிரதையாய்ப்போய் கீச்சானை தகனஞ்செய்தோடி வருவாயடி.

சந்திரமதி விருத்தம்.

போவெனவிடைதானீந்த புண்ணியாவடிமைகொண்ட
கோவேகானடவிசென்று கொப்பெனப்பாலன்றன்னை
தாவியேமயானமுற்று தனையனைச்சுட்டுமையா
பாவியேன்விடியாமுன்னுன் பதங்காணவருவேன்போற்றி.

(சந்-வ-ம்) அடியாள்செய்த அபசாரங்களைப் பொறுத்து போகவிடையீந்தகாதா ? நான்போய் பாலனை மயானத்தில் தகனஞ்செய்துவிடியுமுன் வருகிறேனுமதுபாதங்களுக்குப் போற்றிசுவாமி.

(காலகண்ட-வ-ம்) நல்லது தீவிரத்தில்வந்து சேருவாயடி; நமதுசே ஷிக்குத் தெரிவித்தேகடி சந்தி.

(சங்-வ-ம்) மகாபாக்கியம், அப்படியே தெரிவித்துப் போகின்றேன் சுவாமி.

சந்திரமதி விருத்தம்.

அம்மணியையர்தானு மன்புடன்செலவளித்தார்
அம்மணியடியாளிப்போ வடவிக்கேயேகிபாலன்
அம்மணிமடிந்தவாறு மறிந்துமேசுடலைசேர்ந்து
அம்மணிதகித்தேவாறே னடியர்களுக்கருளீவாயே.

(சங்-வ-ம்) அம்மா? ஐயர் போகும்படிக்கு உத்தரவு கொடுத்தார் தாங்களு மடியாள்மகனை யடக்கஞ்செய்துவர செலவுதாருமம்மணி.

காலகண்டி விருத்தம்.

சந்திநீகேளாய்சொல்வேன் சூரொணுவடவிபோறுய்
வந்திடும்யானைசிங்கம் வகைவகைபூதஞ்சென்றுய்
நந்திவண்ணனையேயேற்றி நாடிநூற்றுன்பம்நீங்கி
யுந்திருமகனைச்சுட்டே யுளமதுகளிப்பாயம்மா.

(கால-வ-ம்) அடிசந்தி? இந்த இருளில் காட்டுக்குள் யானை, சிங்கம், பேய், பூதங்கள்முதலியவைகள் சஞ்சரிக்குமிடமானதால் காசிநாதனை தியானித்துப்போவாய்; என்னசெய்யலாம், வரும்விதிவந்தேதீரும் இட்டதெல்லாம்பயிராகுமா, பெற்றதெல்லாம் பிள்ளையாகுமா.— ஈசன்செயலிப்படியிருந்தால் நம்மாலாவதென்ன; விசனப்பட்டதால் அடையும்லாபம் ஒன்றுமில்லையென மனதைத்தேற்றி, போய் உன்மனதின்படி பிள்ளையைத்தகனஞ்செய்து, சந்தோஷத்துடன் சுருக்காய் வருவாயடி.

(சங்-வ-ம்) மகாபாக்கியம், அப்படியே தியானித்துக்கொண்டு போய்வருகின்றேன் தாயே. (காட்டிற்கு சந்திரமதி செல்லுதல்)

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-காம்போதி, தாளம்-ஆதி.

வேண்டித்தவம்புரிந்தேன் வெகுவிரதமிருந்தேன்
விரும்பியுனக்கா மகனே! மகனே! மகனே!
ஆண்டியருளால்கரு வாகநீயுதித்தபின்
அடிவயிற்றிடந்தந்தேன் மகனே! மகனே! மகனே!
காலகாலவுணவைக் கடிந்துவொளிமழுங்கி
கறுக்கமுலைக்காம்புகள் மகனே! மகனே! மகனே!
தூலம்வதக்கிப்பால் தோன்றிடக்கண்டுமே
தோஷிமனமகிழ்ந்தேன் மகனே! மகனே! மகனே!

ஒன்றாட்டெட்டுந்தள்ளி ஒன்பதில்நாளையெண்ணி
ஓகோநீவரக்காத்தேன் ! மகனே ! மகனே ! மகனே !
நன்றாநீதிங்கள்பத்தில் நாடிவெளிவரவே
நான்வெகுதுயருற்றேன் மகனே ! மகனே ! மகனே !
வேளைக்கொருவிதமாய் வேண்டியுனைவளர்த்தே
வித்தைபுகட்டலானேன் மகனே ! மகனே ! மகனே !
காளைவயதினியே கணையாழிதாங்கியிக்
காசினியாள்வாயென்றேன் மகனே ! மகனே ! மகனே !
காதகன்புரிந்திட்ட கோரத்தாலடிமையாய்
காட்டின்மடிந்தாயோடா மகனே ! மகனே ! மகனே !
பாதகிநானுமென்ன பழிசெய்தனோவெனது
பத்தாவுக்கேயுரியேன் மகனே ! மகனே ! மகனே !

சந்திரமதி-கண்ணிகள்.

இராகம்-இந்துஸ்தான்-சஹானா-தாளம்-ரூபகம்.

ஐயையோயிதென்னகாலம் அடவிசென்ற மகனைநஞ்சுப்
பையரவந் தீண்டலானனே.
ஆனெனாரு மில்லாப்பாவி யரும்புதல்வன் மாண்டபோதே
கானேதோவிகாட்டில்வாழ்வேனே.
வாழ்ந்தபல னிதுபோதும் வஞ்சகமுனிசூதால்
தாழ்ந்தநிலைக்காளாகினேனே.
ஆளாக்கினேன் னுளர்போனா ரவர்திரும்புமுன்பேபாலா
காளமுந்தன்காலனுச்சுதே.
ஆச்சுஇந்த கெதிகாசி யய்யனருளில்லையோதான்
போச்சுதென்றன்புகழுமின்றுடே.

சந்திரமதி-கண்ணிகள்.

இராகம்-நீலாம்புரி-தாளம்-ஆதி.

மகனேலோகிதாவென்ன மாளாத்துயரமிட்டாய் !
மாபாவிவருந்திடக் கண்மணியே !
அசமதிற்கீர்த்திபெற்ற வரசரளித்தசிலா !
அளியேமடிந்திட்டாயோ கண்மணியே !
கண்ணேகனியேதேனே கற்கண்டேதெள்ளமுதே !
கலங்கவிட்டாயே யென்னைக்கண்மணியே !
விண்ணேமதியேரவி விளக்கேவிரிமருவே !
விட்டெனைமாண்டிட்டாயோ கண்மணியே !
தந்தைதனைப்பிரியத் தான்செய்தபாழுந்தெய்வம்
தாயையும்பிரித்ததோ கண்மணியே !



இந்தவிதியுனக்கே யெழுதினபாவியயன்
எனக்கெழுதாதேனோடா கண்மணியே !
காட்டுக்குப்போனநீதான் கடுகிவருவாயென்றே
காத்திருந்தேனடா பாவி கண்மணியே !
காட்டுப்பாம்புன்னை நாகங்கடித்ததென்றே
நவில்லவாடினேனுளங்கண்மணியே !
அந்தமெழுதினவ னாயுளைத்தானெழுத
அயர்ந்துமறந்தானோடா கண்மணியே !
இந்தப்பழியாருக்கே யினைத்திருந்தேனோமுன்பே
யெரியுதென்னடிவயிறு கண்மணியே !

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்விதமாகச் சந்திரமதியம்மன் தன்மகனைக் காணக் காட்டில்பிரவேசித்த காலத்தில் விஸ்வாமித்திரர் நிந்து உளமகிழ்ந்து இதுதான் தருணமென எண்ணி, வருணபகவானையுன்னி, காற்று, மழை, இடி, மின்னல், குமுறல், முதலியவைகளை வரவழைத்து சந்திரமதியம்மனை மென்மேலும் விருத்தமுறச் செய்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-முகாரி-அடதாள்சாப்பு.

ஆ ! சிவமே ! இத்துயருற இத்துயருற
இத்துயருற ஆகாது சிவமே !

பாவிநானென்ன பாதகஞ்செய்தேனோ
தாவிப்பத்தாவார்த்தை தன்னைத்தடுத்தேனோ
பாதிக்கிறாயென்னை சோதிக்கிறாய்மெத்த
வேதிக்கிறாயருள் காதிக்கிறாய்நீயே (ஆசி)
உன்னைப்பணிந்திட்ட வுத்தமர்தன்பாலன்
தன்னைவிஷந்தீண்டத் தவமுனிக்கனுகூலன்
சாதித்தையேபகை போதித்தையேசேயை
வேதித்தையேமுற்றுஞ் சோதித்தையேயிதோ (ஆசி)
அடவியினுன்போக வதட்டிப்பலமிருகம்
தொடரமனதுமெத்த துயருந்திவ்வுருக
சூட்டினையேயிருளை காட்டினையேமதி
ஓட்டினையேமெத்த வாட்டினையேசரி (ஆசி)
அச்சலாத்துமைந்தர்க ளமைத்தகுறிவழியில்
பசபசெனவிழித்தே பயந்தேநடக்கையில்
பண்ணுகிறாய்கோர மெண்ணுகிறாயென்மேல்
நண்ணுகிறாயிடி விண்ணுலகாதியே

தாயில்லாமைந்தர்கள் தலையிலடித்தேனோ
வாயில்லாமிருகத்தை வதைதான்புரிந்தேனோ
வாட்டுகிறாய்துயர் காட்டுகிறாய்பகை
நாட்டுகிறாய்மதி யோட்டுகிறாயிது (ஆசி)

பாலன்படுத்தயர்ந்த பாழிடத்திலொருவாற்
ஆலமாமுண்டென்று அறைந்தனரேசிறுவர்
ஆதித்தனேயிடம் போதித்தனேமனம்
பேதித்தனேதடம் சாதித்தருளுவாய் (ஆசி)

(சங்-வம்) ஓ! பரமசிவமே! நானுனக்குச் செய்தகுற்றங்களென்ன! அதையென்முன் வந்துரைசெய்யும் ஆண்டவனே.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-காபி-தாளம்-ஆதி.

ஐயோவிக்கதிதியே-யாரால மைந்தர்க்கிவோசதியே.]

என்னபழிசெய்தேண்டா-உனக் கித்துயர்வந்ததேண்டா
அன்னமிட்டாருக்கடா-நான் அருந்துயரிட்டேனோடா (ஐ.)
தருமமிகப்புரிந்தேன்-பலன் தன்னையிதோவறிந்தேன்
கருமங்களேதுசெய்தேன்-மனங் கலங்கிடயாரைவைதேன் (ஐ.)
தரையைமெழுகிப்பாலா-பல தவங்கள்செய்துமேசீலா
திரையின்முழுகிமேலா-வுனைத் தேடிப்பெற்றேனேலோலா. (ஐ)
பெற்றும்மலடியானேன்-பலர் பேசவசைக்குளானேன்
முற்றுமூதேவியானேன்-சுபம் முடித்துப்பார்க்காமற்போனேன். (ஐ)

சந்திரமதி விருத்தம்.

வனத்தில்வாழ்கிளிகுயில்காள் வல்லமைசேர்மிருகம்பூச்சி
கனப்புகழயோத்திவேந்தன் கருதியேயளித்தபாலன்
தினத்திலிக்குற்றபாட்டைத் தெரிந்திருப்பீர்களாகில்
மனக்குறையகலநீங்கள் மகிழ்வுடனுரைசெய்வீரே.

(சங்-வம்) இந்தவனத்தில்வாசஞ்செய்யும்படியான பக்ஷிகளே? மிருகங்களே? என்னுடையமகனை தேவதாசனிங்குவந்தானா? நீங்கள்கண்டிருந்தாலெனக்குச் சொல்லுங்கள்.

சந்திரமதி விருத்தம்.

படர்ந்தவிவ்வனத்திலுள்ள பலமிருகங்கள்பக்ஷி
யடர்ந்திடும்பாட்டைதன்னி லெயமுடன்வணங்கிக்கேட்டும்

தொடர்ந்துநீயிங்குவந்த தொகைபதையுரைத்திடாம
லடர்ந்தெனைச்சூழ்ந்தேநின்று மழுகுதென்செய்வேன்மைந்தா.

(சந்-வ-ம்) ஆ! மகனேதேவதாசா! நீ யிங்குவந்த சங்கதி இக்காட்டிலுள்ள மிருகம், பக்ஷி, முதலானதுகளைக் கேட்டாலொன்றுஞ் சொல்லாமலென்னைச் சூழ்ந்து வருத்தமாய் நிற்கிறதே என்ன செய்வேன் பாலா.

சந்திரமதி தரு.

இராகம்-வராளி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கெங்காதர கெங்காதர கெங்காதர வருவாய்.

அநுபல்லவி.

துங்கா மாது பங்கா யெங்கும்
தங்காமலே சிங்கா வென்முன். (கெங்)

சரணங்கள்.

மன்னன்றனைவிட்டு-அந்த-மறையோன்பணிதொட்டு
கன்றிழந்தேன்பாம்புக்கிட்டு கதறுங்குரலிட்டு
காராதுயர் தீராயோடி வாராயிங்கே-நேராகநீ. (கெங்)

ஒருத்திதானுந்தோசி-யிந்த வுலகில்வந்தேன்ரோசி
பருத்திப்படும்பாட்டைவீசி-படவிட்டனைகாசி
பாசாவன்பர்-நேசாபரவ நாசாஜெக-நீசாவாராய். (கெங்)

அந்தவயன்றனே-எனக்-களித்தவிதிதானே
செந்தபணியெனவேயானே தொழுதேனுனைநானே
தூயாலோக-மாயாகனி வாயாமங்கை-நேயாவாராய். (கெங்)

சிறகறுந்தபக்ஷி-யிங்கு-சிக்கிவாடிருக்ஷி
மரமாகினேன்வந்தேரக்ஷி மாயமருங்காக்ஷி
மதியேமழுப்பதியேசுரர் கதியேவந்து-தயிதருள். (கெங்)

சந்திரமதி விருத்தம்.

பிறையுறைச்சடையில்விட்ட பிஞ்ஞகாகைலைவாசா
மறையவர்க்கடிமையாக்கி மைந்தனைப்பறித்துமென்றன்
துரைமகன்வீழ்ந்தபூமித் தோற்றுமலையக்காட்டில்
நிறையிருள்மழையுங்காற்றும் நேரிடச்செய்தனன்றோ.

(சந்-வ-ம்) ஓ! பரமசிவமே! என்னைபதியைவிட்டகற்றிப் பாப்பானுக்கடிமையாக்கிப், பாலகனைக்காட்டில் விஷப்பாம்புதீண்டி யிறக்கச் செய்தாய்! அவனிறந்தவிடத்தை நான் தேடிவர வழி தோற்றுதபடிக்கு இருளும், காற்றும், மழையும், மின்னலு, முண்டாக்கினதுவும் உன்னுடைய திருவிளையாடலோ தெய்வமே!!!

சந்திரமதி விருத்தம்.

மெய்யதையுணர்ந்தசத்ய மிணையிலார்மகனேநீதான்
உய்யொணக்காட்டில்வந்தே உடம்பெலாம்வாடமுள்ளும்
பையவேதைத்துமென்றன் பாலனேயுனைவதைக்கத்
தெய்வமுமுனிவனோடே திகழெனச்சேர்ந்ததோடா.

(சம்-வ-ம்) மகனேதேவதாசா? நீயிந்தகாட்டில் வரவும், முள்ளுகள் தைக்கவும், பாம்புதீண்டி யிறக்கவும், செய்தது தெய்வத்தின்கொடுமையோ, விஸ்வாமித்திரன் சூதோ, அறியேனடாமகனே.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-சங்கராபரணம்-அடதாளம்.

அப்பாலோகிதாவென்கண்மணியே
ஒப்பிடாக்குணத்துட னுதித்தநற்பணியே
உன்னையிழந்தபின் னுயிர்வைத்தல்பிணியே
யினித்-துயர்பெற்றேன் துணியே-து-து-அடா. (அ)
கும்பியுங்குடல் கொதிக்குதேமருவே
குழந்தையென்றேயரைக் கூப்பிடத்திருவே.
பால்-சாப்பிடத்தருவே-த-த-அடா. (அ)
பெற்றவயிற்றில் தீபிடித்ததேவிதியே
பிள்ளையெனுமாசை பிரண்டதேசதியே
மனம்-வரண்டதேமுதியே-ம-ம-அடா. (அ)
செம்மலினறத்தினல் ஜெனித்தநற்கலையே
செல்வமீண்டபின் சீரேதுமிலையே
சுகம்-வேறேதுஅலையே-அ-அ-அடா. (அ)
பட்டக்காலிலேக்ல்லு படும்வாறுயவ்ரியே
பர்தகிக்கே யிதோர் பலித்துதேஒளியே
பகை-கெலித்துதேகிளியே-கி-கி-அடா. (அ)
எனக்குக்கொள்ளிதனை யிடவந்தமயிலே
பிறந்தையோாகத்தா லென்செய்குவேன்குயிலே
உன்-தன்கெதிக்கொயிலே ஒயிலே-ஒயிலே-அடா. (அ)

சந்திரமதிவிருத்தம்.

சூரியன்மரபுவோங்கச் ஜொலித்திடவுனையேதேடி
வீரியர்மைந்தர்சொன்ன விதிப்படியிங்குவந்தேன்
கோரியதெய்வங்கூடக் கொடுமைசெய்திடவேயெண்ணிக்
காரிருள்சூழ்ந்ததிங்கள் கவலைக்குளானேன்பாலா.

(சங்-வ-ம்) ஆ! மகனே தேவதாசா! அசலாத்துப்பிள்ளைகள்

யிறந்தசங்கதியைத்தெரிவித்து, நான்வருவதற்காகக் குறிப்பிட்டதைத் தொடர்ந்திவ்வளவுதூரம் வந்தேன், இங்குற்ற இருளினால் வழி தப்பியதோ தெரியேன்; தெய்வமுஞ் சதிசெய்கின்றதப்பா என்னருமைமகனே.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-நீலாம்புரி- தாளம்-ரூபகம்.

மாதோஷியென்றெனைவிட்டு நீ மடிந்தாயோடாமகனே ! இந்த
மண்ணின்மீதுபதியையுவ ந்தித்தேனேடாமகனே ! நீ
திதோநகர்தனைவிட்டிந்த திசைக்கேவமகனே ! மனந்
தேங்கநரிவுளரநெஞ்சந்திடுக்கிடவேமகனே ! ஐயோ
அம்மாவென்றுயினிமேலென்னை யழைப்பவராா்மகனே ! இந்த
அவ்னிதனிலெனைப்போற்பாவி யார்தானுண்டுமகனே ! நீ
பெம்மான்மகிழ்பெருகும்படை பெற்றிருந்தாய்மகனே ! உன்மேல்
பிரமனுசைவைத்தேவுயிர் பிடிங்கினனேமகனே ! நாம்
இனிமேற்சுகமடையோமென்று யெண்ணிநீதான்மகனே ! இந்த
யிருண்டவனந்தனிலேவந்து இறந்தாயோடாமகனே ! உன்
கனிவாயையுங்கிளிமொழியுங் காண்பதெப்போமகனே ! என்றன்
காயமனல்மெழுகாகவே கரையுதிப்போமகனே ! நான் !
மன்னன்பிரிந்ததையுமுன்னால் மறந்திருந்தேன்மகனே ! அந்த
மறையோனுக்காய்காடுறைந்து மரைந்தாயோடாமகனே !
என்னைவந்துவேந்தனே யெங்கேயென்றால்மகனே ! நான்
ஏதுசொல்வேன்பாதகிதான் இரிசியானேன்மகனே !

(சங்-வ-ம்) ஓ ! பரமசிவமே ! எனக்கென்ன விதியெழுதி விட்டாய் ஐயோ·! சுராசுரருக்கதிபதியே.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-எதுகுலகாம்போதி,தாளம்-ஆதி.

அதிபதியரிச்சந்திர-ரளித்தமகனைத்தேடி
அலைகிறேனிவ்விருளில்-ஐயையோ ! ஐயோ ! ஐயோ !
சதியோமுனிசூதோ-சாதித்தபழிதானோ
சற்றுமறிகிலேனே-ஐயையோ ! ஐயோ ! ஐயோ ! !
கொடுமையிலுமதிக-கோரஞ்செய்தேனோவுன்
கோவிலிடியாதோதான்-ஐயையோ ! ஐயோ ! ஐயோ !
அடிமைகொண்டவருமே-யதிசீக்ரம்வாவென்றார்
அன்றில்சத்யம்பொய்க்கும்-ஐயையோ ! ஐயோ ! ஐயோ !
இத்திசையெதுவென்று-யெளிதில்நான்தெரியவும்
இருள்வந்தேகப்பியதே-ஐயையோ ! ஐயோ ! ஐயோ !

சத்தியமுதுமுன்றன்-கண்ணுங்குருடோகாதும்
கல்லாலடைபட்டுதோ-ஐயையோ ! ஐயோ ! ஐயோ !
மின்னலொளியினல்-மெள்ளவடிமேலடி
மிதித்திந்தமட்டும்வந்தேன் ஐயையோ ! ஐயோ ! ஐயோ !
சொன்னவாலமரத்தின்-சுரூப்கண்டிடமின்னல்
ஜொலிக்காமலிருண்டுதே-ஐயையோ ! ஐயோ ! ஐயோ !
நாய்களும்பேய்களும்-நரிகளுங்கூவுதே
நடுக்காட்டில்வழிகாணேன்-ஐயையோ ! ஐயோ ! ஐயோ !
தாய்வருவாளென்றன்-தனயனுங்காத்திருப்பான்
தடமிங்கேகாணேநான்-ஐயையோ ! ஐயோ ! ஐயோ !
ஐயாவருணதேவா-அபயமுனக்கபயம்
அடக்கியொளிவைக்காட்டும்-ஐயையோ ! ஐயோ ! ஐயோ !
மெய்யானவரிச்சந்திரர்-மெல்லியணுனல்
மேவிவெளிச்சங்காட்டும்-ஐயையோ ! ஐயோ ! ஐயோ !

பொது விருத்தம்.

பத்தினியும்மாண்ட மகன்றன்னைத்தேடி
பதைத்துமுடல்வெதும்பி யிருள்தனல்வாடிக்
கத்திமுறையிடவருணன் கலங்கிநெஞ்சங்
கயவர்மனம்போலோங்குமிருளைவாங்க
நத்திவந்தஆலமரந்தன்னைக் கண்டாள்
நாட்டமுடனேடியங்கு தெர்ப்பைதானு
முத்தியுமேவிளைந்திருக்கும் புற்றைக்கண்டே
மூறுவரளினித்துயரமீறுவாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? சந்திரவதியம்மன் வருணபகவானைவேண்ட இருளானதீ நீங்கிற்று, உடனேதேடி ஆலமரமுந் தெர்ப்பை வளர்ந்திருக்கும் புற்றையுங்கண்டு புலம்புகிறவிதம் காண்பீர்கள் கனவான்களே.

சந்திரமதி கண்ணிகள்,

இராகம்-சஹானு, தாளம்-ஆதி.

பாலனிறந்தவிடமிதுதானே ! என்றன்
சீலன்மடிந்தவிடமிதுதானே !
ஆலமரமென்றதுவுமிதுதானே ! சிறுவர்
சாலவேவைத்திட்டகுறிப்பிதுதானே !
காரைமுள்ளுப்புதரென்றதிதுதானே ! மகன்
பேரையழித்திட்டவிடமிதுதானே !

தெர்ப்பையோங்குமென்று சொன்னதிதுதானோ! சேர்த்த
அர்ப்பசமித்துவகையிதுதானோ !
என்மகன்தேவதாசனிவன்றானோ-விஷத்
தன்மையான்மப்பங்கியிங்குவீழ்ந்தானோ !

(சங்-வ-ம்) அப்பாவென் கண்மணியே ! உஸ்.— (அயர்ந்து சோகி த்து எழுந்திருக்குதல்.)

சந்திரமதி தரு.

இராகம்-புன்னாகவராளி-தாளம்-ஆதி.

பல்லவி.

வாடாவென்கண்ணின்மணியே எழுந்தொருமுத்தம் நீ
தாடாவென்கண்ணின்மணியே.

அநுபல்லவி.

காடாவுனக்குமனை வீடாநீயிங்குறங்கப்
பாடாவயன்விதித்த தோடாநான்பாவிபாவி. (வா)

சரணங்கள்.

பஞ்சணையைவிட்டுமிறங்காய்-அடாமகனே !
கெஞ்சைவிட்டுத்தாழவுறங்காய்.
கொஞ்சுங்கிளிமொழிக்கே-அஞ்சுவையோடாஅப்பா !
வஞ்சமிருகக்காட்டில்-பஞ்சைபோற்றூங்கலுற்றாய்.(வா)
உறக்கப்பேசினற்றிடுக்காய்-செவிகள்மூடி
திறக்கவந்தாலும்விடுக்காய்
சறக்கென்னுமொலிகேட்டா-லிருக்கமாட்டாயேநானு
வருக்கமிருகங்கூவ-பெருக்கவுறங்கலானாய். (வா)
சோச்சிசோச்சியென்று ஒருவனை-அடிக்கடிக்கு
பாச்சிபாச்சியென்றுவருவாய்
காச்சியியஞ்செவியிற்-சாச்சிவிட்டவாறுபோல்
ஆச்சிமக்களுமுரைத்த-பேச்சினுலுருகலானேன். ()

(சங்-வ-ம்) ஆ! என்னருந்தவத்தில்வந்த கொஞ்சுங்கிளியே! பத்து மாதம் சுமந்துபெற்ற தாய்வருந்தி கூப்பிடக் கூப்பிட ஏண்டா இப்ப டி மௌனம் சாதிக்கிறாய், அல்லது நாம் சிறுவனெனத் தெரிந்திருந்து ம் நமதுதாயே காட்டிற்கு அனுப்பினளல்லவா என்று மனதில் அட ஞ்சாதித்து உறங்குபவன்போல் இருக்கின்றாயோ! ஐயோ ! இது என் குற்றமல்லவோ, சி, பேதைமனமே. மைந்தன்மீது வைத்த ஆசை யால் வேதியர்மக்கள் சொன்னதை முற்றும் மறந்து விட்டனேபோலு ம் காண்கிறது, அப்படிக்கு உன்மைந்த னுன்மீது மருமம்சாதிக்கினும் அவனென்ன வாசித்தறியாதவனு, உயிர் இருந்திடில், (தாய்சொற்றுறந்

தால் வாசகமில்லை) எனும் நீதிவாக்கியத்தை யுணர்ந்தவனல்லவா, ஏ
ன்வீணாய் கத்தியழுகின்றாய், வேண்டாம் இனி நடக்கவேண்டியகாரி
யத்தில் முயற்சிசெய் சரி.—

சந்திரமதி தரு.

இராகம்-இந்துஸ்தான்-சுருட்டி, தாளம்-சாப்பு.

பல்லவி.

வா வா வா வென்றுக்கூவியழைத்தேன் ஓடிவருவாயே
மகனேவருவாயே-முத்தந்தருவாயேமகனே. (வா)

அநுபல்லவி.

கூ கூ வெனநான் தாவியழைத்தவாயாற்
பாவியழுதகுரல்-மேவியுன்றன்செவிக்கேறலேயோ
மகனே ஏறலேயோ-நான்பெறலேயோமகனே. (வா)

சரணங்கள்.

சொள்ளிவாயின்பூதங்குள்ளாநரிகரடி
பல்லையிளித்துமென்றன் உள்ளம்நடுங்கிடவே
பார்க்குதேடா-மகனே-பார்க்குதேடா
உன்னைக்-காக்குதோடா மகனே. (வா)

உன்னையடிக்கடிக்கு மெண்ணியெனதுயிரு
கண்ணின்நீர்வடித்திடும் அன்னையின்மேற்கோபம்
ஆகுமோடா-மகனே-ஆகுமோடா
துயர்போகுமோடா மகனே. (வா)

ஆதிக்குருடனொளி ஜோதியடைந்தபகல்
பாதிதனில்மறைந்த கெதியாகினேனான்
பாவியோடா-மகனே-பாவியோடா
குலத்-துரோகி யேநடாமகனே. (வா)

தந்தையின்வாக்கியம் பிந்திநடந்தறியா
உந்தனுக்கித்துயர் வந்ததின்காரணந்
தர்மமோடா-மகனே-தர்மமோடா
என்-கர்மமோடா மகனே. (வா)

சந்திரமதி விருத்தம்.

அப்பனேஐயாவாவென் றழைத்திடும்பெருமைபோச்சே
ஒப்பிநீயம்மாவென்றே யுரைப்பதுமின்றேபோச்சே
செப்பியேசாதங்கேட்குஞ் செங்கனிவாயைமூடிக்
கப்பியவிஷத்தாலிந்தக் காட்டினில்மடிந்தாயோடா.

(சந்-வ-ம்) அப்பா என்னருமைமகனே ? நான்வாடா என்கண்மணி
யென்றழைப்பதும், நீ அம்மா என்றெனைக் கனிந்தழைப்பதும் இன்
றுமறக்கலாச்சோ ! பாம்புகடித்த விஷமேறி மடிந்தனையோ மகனே.

சந்திரமதி கண்ணிகள்.
இராகம்-சாமா-ஏகதாளம்.

ஐயோமகனேநீ அலறித்துடித்திட
அரவந்தீண்டலாச்சே!
அருள்போச்சே-யிருள்வாச்சே
அப்பவே-காண்ப-தெப்பவே-காண்ப-தெப்பவே-ஏ-ஏ.

(சங்-வ-ம்) ஐயையோ! மகனே! பாழும் அரவம் தீண்டும்போது எப்படி அலறித் துடித்தாயோ!

கப்பியகாட்டினி-லப்பு தேவதாசா
காளந்தீண்டவிதியோ!
காரிமதியோ-நாரிசதியோ
கண்ணனே-சொலு-வண்ணனே-சொலு-வ-வ-வு-

(சங்-வ-ம்) ஆ! ஆ! மகனே! வழிகூட்டி யனுப்பும்போது கண்ட சகுனமே உனக்குச் சனியன் பாம்பாய் உருவெடுத்து வந்து கடித்து தோடா இதுயார் செய்தசதியோ!

பற்றியெரியுதே-பெற்றவயிறுமே
உற்றதுசொல்லாயா!
பணிநேயா-மணிவாயா
பாவியே-எனைத்-தாவியே-எனைத்-தா-தா-தா.

(சங்-வ-ம்) ஆ! சுதனே? பெற்றவயிறுனது தீப்பற்றியெரியுங் காலத்தில், இப்படி அப்படியென உற்றது சொல்லவாராயா!

அருந்தவஞ்செய்துமே-வருந்தியேநான்பெற்ற
தரும்குணபாலனே!
அதிசீலனே-மதிசீலனே
அன்னமே-அடா-சொர்னமே-அடா-சொ-சொ-சொ

(சங்-வ-ம்) அடா மகனே? மைந்தனில்லாப் பாவியென உலகோர் வசை பேசுவார்களென எண்ணி நானும் உனது தந்தையும், அருந்தவஞ் செய்துபெற்றும்; நாம் அடிமையாகி தர்ப்பை நிமித்தம் காட்டிற்கனுப்பின தோஷத்தால் நல்லபலன் கண்டேனடா கிளியே.

சந்த்ரனைப்பழிக்குஞ்-சுந்திரவடிவுள்ள
என்றன்குலமணியே!
சரவணியே-வரப்பணியே
சாரையோ-எனைப்-பாரையோ-எனைப்-பா-பா-பா.

(சங்-வ-ம்) சந்திரனை நிகரொத்த சுந்திரவடிவுள்ள அடா கண்மணியே! உன்னிமித்தம் என்னென்று நானழுவேனடா, ஒன்றுந்தோன்றவில்லையே! என்னைச்சற்று திரும்பிப்பாராயா!

உன்னைப்பெற்றதந்தை-என்னைவந்துகேட்டால்
மன்னனுக்கேதுரைப்பேன் !
உருக்குறைப்பேன்-செருக்கறைப்பேன்
ஏதடா-துணை-ஏதடா-துணை-ஏதடா-ஏ-ஏ.

(சங்-வ-ம்) அடடா ! ஆ ! உஸ், உன்னைப்பெற்றதந்தை, உன்னோடு அனுப்பிய மைந்தன் எங்கு சென்றானடி என்று வந்து எனைக் கேட்டால் என்னசொல்வேன் ! ஆ ! ஈசா !

மண்ணாளுவாயென்ற கண்மணியென்றுமே
மகிழ்ந்திருந்தேன்தோசி !
மனம்ரோசி-தினமேசி
மாண்டையோ-எனை-வேண்டையோ-எனை-வே-வே-வே.

(சங்-வ-ம்) அடாகிளியே ? உன்தந்தைபோல் உலகை யாள்வாயென்று மகிழ்ந்திருந்த எனைவெறுத்து எங்குபறந்து போனாயடா சுதனே !

ஆண்டிட்டகாலத்தில்-மாண்டிருந்தாலே நீ
வேண்டுந்தளம்வருமே !
அளிதருமே-ஒளிபெறுமே
ஐயையோ-வாழ்வு-பொய்யையோ-வாழ்வு-பொ-பொ-பொ

(சங்-வ-ம்) மகனே ? உனதுதந்தை அரசுசெய்தகாலத்தில் நீமாண்டிருந்தால், எவ்வளவு வைபோகமாய் நடக்கும், அன்றியில், எவ்வளவுசேனை, தளம், பரிவாரங்கள் வரும், மேலும், அன்று எழுதிய ஜாதகமும் காலத்திற்குத் தக்கவாறு பொய்த்து விட்டதல்லவா, சி, மனமே, ஏன் ஜாதகத்தின்பேரில் குற்றஞ் சாட்டுகிறாய், மகனிறந்த கொடுமையால் ஒன்றுந் தோன்றாமல் பலவாறு உளறுகிறாய்போலும் ஆகுனின்றது இனி நடக்கு நடக்கப் பார்ப்பாய்.

அத்தராத்திரியில்-ருத்திரபூமியை
எத்திசையென்றறிவேன் !
அறியறியேன்-குறிதெரியேன்
அப்பனே-ஒன்றுஞ்செப்பனே-ஒன்றுஞ்-செ-செ-செ.

(சங்-வ-ம்) ஐயோ ! இந்த அர்த்தராத்திரியில் மயானபூமி யெங்கிருக்கிறதெனத்தெரிந்து ஒண்டியாய் எப்படி எடுத்துச் செல்வேனடா சொர்னமே !

இப்பச்சுடலையி-லப்பாவளர்த்திட
எப்படிச்செய்வேண்டா !
இனிவேண்டா-கனிவேண்டா !
ஏசவோ-விதியை-ரோசவோ-விதியை-ரோ-ரோ-ரோ.

(சங்-வ-ம்) அடா குழந்தாய்! அப்படி வழிதெரிந்து உன்னைச் சுடலைக்குக் கொண்டு போயினும், கட்டையைப்பரப்பி அதின்பேரில் உன்னைவளர்த்தி பெண்பால் எப்படி கொள்ளி இட்டுவேண்டா!

பொட்டெனவஞ்சகயே-கட்டையுனைச்சுடக்
கிட்டுமோடாமகனே!
புனிகுணனே-யினிமணனே
போறேண்டா-கூட-வாறேண்டா-கூட-வா-வா-வா.

(சங்-வ-ம்) ஆ! சிவமே! மயானந்தெரிந்து என்மைந்தனைச் சுடப்போகில், கட்டை, முட்டை, எங்குசென்று தேடுவேன்! இப்படியும் என்தலையில் எழுதிவைத்த விதியா! அடாமதனே! உன்னைச்சுட கட்டை, முட்டைகிட்டுமா! இனி என்னசெய்யலாம், சரி உருத்திரபூமிக்கொண்டுபோவோம்.

இருசியைப்போலுனை-ஏந்தியென்றோளிலே
ஏகவிட்டாய்பாவம்!
இதுதாவம்-எதுசோவம்
ஏகிறேன்-சுடலை-போகிறேன் சுடலை-போ-போ-மியா.

(சங்-வ-ம்) ஓ! பரமசிவமே! என்மைந்தனே, பேய்,பிசாசியைப்போல் என்தோளிலிட்டுமயானம் ஏகச்செய்தாயா! இதுவும் உன்கூத்தோ இதோ சுடலைக் கேகிறேன், என்மீது கிருபைவிட்டுப் பக்கத்துணை வாரும் கருணாகரக் கடவுளே.

பொது விருத்தம்.

பாலனைக்கண்டிவ்வாறுமாதுவாடி
பரதவித்தேயினிச்சுடலைபோவேனென்றே
காலவிதிதனைநினைத்துக்கண்ணிழந்த
காராவைப்போற்கதறிமகனைத்தாங்க
ஜாலமதிலுயர்ந்தவனுங்காட்டில்வாழுஞ்
சண்டாளவேடனைப்போலுருவெடுத்து
கோலவிழிபடைத்தவளுக்கெதிரேவந்து
கொடும்பாவிகவுசிகனுங்குறுக்கிட்டானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாகச் சந்திரவதியம்மன் மகனையெடுத்துக் கையில்தாங்கித் துயரப்பட்டுக்கொண்டிருக்கிற சமயத்தில், விஸ்வாமித்திரன் வேடரூபமெடுத் தெதிரேவருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

வேடனென்னும் விஸ்வாமித்திரன் தரு.

இராகம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி.

வேடனுய்வந்தான்-விஸ்வாமித்திரன்-வேடனுய்வந்தான்

அநுபல்லவி.

காடதனிலேவாழும் கனமிருகம்பக்ஷிகளே
கவர்ந்தேபுசிக்குமந்த கயவர்குணம்படைத்த (வே)

சரணம்.

கையில்வில்லைத்தாங்கியே முடியிற்றுணி
கட்டிச்சுங்குக ளோங்கியே
மெய்யில்வலையைத் தாங்கியே விழிசிவந்து
மிரட்டியுருட்டி யோங்கியே
பய்யனடைகடந்து பதுங்கிவலையைவீசி
நொய்யுறுந்தேவிமுன் நோக்கிநோக்காமலே.(வே)

வேடனென்னும் விஸ்வாமித்திரன் விருத்தம்.

ஆரதின்னேரந்தன்னி லடாதவிவ்வனத்திவ்வந்தே
வீரமாய்த்தனித்துக்குந்தி விறிட்டசத்தத்தோடே
கூரலாய்சிவத்தையெண்ணிக் கோவித்தேயழுகுகின்ற
வாறதையெனக்குத்தோன்ற வதையுடனுரைசெய்வாயே.

(வேட-விஸ்-வ-ம்) ஆரது இந்த இருண்ட காட்டினிற்றனியாய் சிவத்தின்பேரில் நொந்து, துயரப்படுகிற காரணமென்ன, தெரியச்சொல்லுவாய் அம்மா.

சந்திரமதி விருத்தம்.

திக்கில்லாப்பாவியையா தெய்வமுமிவ்வாறென்னை
கக்கிஷப்படவேசெய்து கருதிநானீன்றபாலன்
விக்கினம்போன்றூன்சாக விரும்பியேபாம்பையேவி
துக்கிடவுயிரைக்கொண்ட துயரத்தாலழுகின்றேனே.

(சந்-வ-ம்) அண்ணா? நான் திக்கில்லாப்பாவி, தெய்வமென்னை யிக்கெதிசெய்தும், என்மகனையும், பாம்பைவிட்டுக் கடிக்கச்செய்து, உயிரைப் பறித்ததால் விசனப்படுகிறே னண்ணா.

(வேட-விஸ்-வ-ம்) உன் மகனை பாம்புகடிக்கும்படிவிட்டு எங்குபோயிருந்தாய்,

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-கெண்டா, தாளம்-ஆதி.

என்னசொல்லுவேன்னண்ணா ஏதுசொல்லுவேனுனே
எனக்குவந்தவிதியை அண்ணா
மன்னனரிச்சந்திரர் மனைவியாய்நான்வாழ்ந்து
மகனையும்பெற்றெடுத்தே னண்ணா. (எ)
பாதகவெண்ணமிட்டே பற்றில்லாவிஸ்வாமித்திரர்
பறித்தனர்நாடுஞ் செங்கோலண்ணா

காதகர்மன்னர்மீது கந்தகடன்சுமத்தி
　காசிவரவேசெய்தா ரண்ணு. (ஏ)
தரகரவீரனுப்ப தயையிலாப்பாவிசெய்த
　தாழ்மையாலினிக்கேளு மண்ணு
மரம்போலவென்கணவர் மகிழ்வாயென்றனையொரு
　மறையோனுக்கேவிற்று ரண்ணு. (எ)
கொண்டவேதியரென்றன் குமரனைக்கொண்டே
　கோரப்பணிகளிட்டா ரண்ணு
அண்டைவீட்டுமைந்த ரடவிக்கேபோறுரென்றே
　அனுப்பச்செய்தாரிவனை அண்ணு. (அ)
வந்தபாலனும்பிந்தி வருகாமலேசிவனும்
　வதைத்திட்டான்பாம்பினு லண்ணு
என்றன்மகனைநா னெடுத்தேகச்சுடலைக்கே
　எதுவோவழியறியே னண்ணு. (எ)
அடிமைசெய்தேயரச ரமைச்சனுடனேகூடி
　யகன்றவிடமுங்காணே னண்ணு
புடமிசையெனைப்போல பிறந்திட்டபாவியுண்டோ
　புலம்புறேனிதற்காய்நா னண்ணு. (எ)

வேடனென்னும் விஸ்வாமித்திரன் விருத்தம்.

நல்லதுநீதான்சொன்ன நிபாமுநம்பப்போமோ
தில்லையுறத்தேஞான மறிந்ததோர்விஸ்வாமித்திரன்
கல்லதாய்மனதைநாட்டிக் கருதியேயுனையிவ்வாறு
தொல்லையிலிருத்தவந்த தோற்றமேதுரைசெய்வாயே.

(வேட-விஸ்-வ-ம்) நீ சொன்னதை நம்பலாகுமோ, ஞானசீலனுகிய அந்தவிஸ்வாமித்திரமுனி யுன்னை யிவ்வாறுசெய்யாரென, அப்படி செய்வதற்கு வந்தகாரணத்தைத் தெரியச்சொல்லுவாய்.

சந்திரமதி விருத்தம்.

வேந்தனையடுத்தேதானம் விரும்பியேகாடிக்கேட்டார்
வேந்தருங்கொடுக்கப்பெற்றே யிருத்தியங்கெங்கோசென்றார்
வேந்தருங்கருகாப்பொய்யை விளம்பிடவேண்டினின்றார்
வேந்தருமறுக்கவிந்த வினைகளைப்புரிந்தாரண்ணு.

(சந்-வ-ம்) அண்ணு? அம்முனிவர் இராஜனைத் தானங்கேட்டார், கொடுத்தபின், இராஜனிடத்திலேயே வைத்துச்சென்றார், மறுபடியும் பயிரையழித்து ஜாரத்வம் புரியச்சொன்னார், மறுக்கப்பொய் பேசவேண்டினார், தடுக்க, எங்களை யிக்கெதிக் காளாக்கினாரண்ணு.

## வேடனென்னும் விஸ்வாமித்திரன் விருத்தம்.

ஆ! ஆ! ஆ! இதாதென்ன ஆச்சர்யமானவார்த்தை
ஆ! ஆ! ஆ! ஒருபொய்க்கஞ்சி யாசனுந்தவித்தனே
ஆ! ஆ! ஆ! அடிமைசெய்த லடுக்குமோநானேயாகில் [ன்.
ஆ! ஆ! ஆ! வேண்டும்பொய்யை யனேகமாயுரைத்தேவீழ்வே

(வேட-விஸ்-வ-ம்) ஆ! ஆ! ஆ! இதென்னவாச்சரியம்! ஒருபொய் பேசமாட்டாமல் இராஜன் பெண்டை விற்பதாண்மையா, நானுகில் வேண்டிய பொய்களைப் பேசிசுகிப்பேன்.

## சந்திரமதி விருத்தம்.

பொய்சொன்னபேருக்கண்ணு புவிதனிற்றாழ்வேயாகும்
பொய்சொன்னபேருக்கல்லோ புகழிலாநரகம்வாய்க்கும்
பொய்சொல்லிவுலகிற்சாவை போக்கியேவாழ்ந்தோருண்டோ
பொய்யல்லவாழ்வுஞ்சுற்றம் புவிதனிற்கீர்த்திமெய்யே.

(சந்-வ-ம்) அண்ணு? பொய்சொன்னவாளுக் கிருப்பிடம் நரகமல்லவா, பொய்பேசினல் சாவை நீக்கலாகுமா, மெய்பேசுவதே சத்தியம், கீர்த்தி, சுத்தமென் றறிவாயண்ணு.

## வேடனென்னும் விஸ்வாமித்திரன் விருத்தம்.

நல்லதுமாதேயுன்றன் நாயகன்றனைநான்தேடி
மெல்லவிச்சேதியெல்லா மிசைந்திங்கழைத்துவாறேன்
வல்லமைகொள்ளநீங்கள் வாய்ந்தவன்னடிமைபோக்கச்
சொல்லவோர்பொய்சொல்வித்தாற் சுகமுடன்வாழ்வீர்தானே.

(வேட-விஸ்-வ-ம்) நல்லது நான்போய் உன்கணவனைத் தேடியழைத்து வருகிறேன், ஒருபொய்பேசச் செய்வித்தாற்றுயரங்களை யெல்லாம் நீக்கி சுகமாயிருக்கலாம், உன்னைப்பார்க்கப் பரிதாபமா யிருக்கின்றது, ஐயையோ! இதென்ன விந்தை! என்னைச் சொல்லச் சொன்னுல் வருஷத்திய புண்ணிய ஒரு நிமிஷத்தில் புளிகிவிடுவேன், இதுவொரு பெரிதானகாரியமா, இப்படியும் நாடு முதலியவைகளைதோத்து பனுகியைப்போல் அலைக்கப்பட்டு திரியலாமா இது சரி அல்லவேதாயே.

## சந்திரமதி விருத்தம்.

உடலுமுயிருந்தாலும்வதையுற்றாலு
மோகோகோபொய்பேச ஒப்போமண்ணு
சடலமிதைச்சுமந்தொருநாள்தொலைக்கவேணுஞ்
சண்டாளப்பொய்யுரைத்தல்சரிதானன்றே
கடலோங்கிப்பொங்கிடினு மேனமண்ணுந்த
கணவரும்பொய்யுரைப்பதவேதனவிலுண்டோ

தடஞ்சுடலைநாவேகக்காட்டியாள்வாய்
தமையனேநின்னடிக்கேதாழ்ந்தேன்போற்றி.

(சந்-வ-ம்) அண்ணு ? எங்களுக்கு இன்னமனேக துன்பம் வந்தாலும், உடலழிந்தாலும், லோகமுழுகினாலும், சூரியசந்திராள் கதிமாறினாலும், என்பிராணநாதர் கனவிலும், பொய்யை நினைக்கார், சுடுகாட்டிற்குப் போகும்வழி காட்டுவாயண்ணு.

(வேட-விஸ்-வ-ம்) நீ சுகப்பட வுனக்கு நற்சொன்னேன் அதைத் தடுத்து விட்டாய், ஆனால் உன்னிஷ்டப்படி இதேவழியாய்ப்போனால் சுடுகாடு காண்பாய், அதன்பேரில் உன்னிஷ்டம்—மனமே ? பார்த்தனையா ! யாவரும் ஒரேமனதாய்விட்டார்கள், நீ ஏன் முன்னறேதெரிந்து அமரர்கள் முன்பாகச் சபதஞ்செய்துகொள்ளக்கூடாது, முன் பின் யோசிக்காமல் நீ கெட்டேவிட்டாய் ; வசிஷ்டனைக்கேலிப்பையா, அல்லது அருமையாய்ச்செய்த தவத்தினைப்போக்கடித்துக்கொள்ளுவையா ஏதேது, இரண்டையும் தோற்பைபோலுங்காணுகின்றது, அடடா ! இவர்களை யென்னபாடுபடுத்தியும் தாங்கள்பிடித்த உறுதியைத் தாசோர மாட்டோமென்கிறார்களே, ஆகிலும் இன்னமும் பார்ப்போம்.

(சந்-வ-ம்) அப்படியே என்விதியின்படி போய்வருகிறேனண்ணு.

(பொது-வ-ம்) சபையோர்களே ? வேடனாய்வந்த விஸ்வாமித்திர முனிவர் மயானத்திற்கு வழிகாட்டி மறைந்தான், இனிசந்திரமதி சுடலைக்கு வருகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## சந்திரமதி மயானத்திற்குப் போகுங்

### கண்ணிகள்.

இராகம்-கேதாரம், தாளம்-ரூபகம்.

போறேனிதோ-போறேனிதோ-போறேனிதோ
போறேனிதோ-போறேனிதோ-சுடலை.

தேறேன்துய ராறேனப்பா காரேனுன்னைப்-பாரேனினி. (போ)
சுடலையிருப்-பிடமேநாடி-யடவிதனிற்-றடங்கொண்டோன். (போ)
நில்லுமென்றே-கல்லெறிந்தே-சொல்லும்பூதத்-தல்லல்நீக்கி, (போ)
வருகும்வழி-குறுக்காகவே-கருநாய்களுந்-திருகவுநான். (போ)
மெத்தபசி-யுத்தேனென-கத்திபேயுந்-தத்தளிக்க. (போ)
என்னைச்சுட-உன்னைப்பெற்றேன்-தன்னைச்சுட-அன்னையும்நான். ( )
நானேயொண்டி-யானேன்மாறிப்-போனேனினித்-தானேயிதோ. (போ

(சந்-வ-ம்) அப்பாமகனே ? இதுவும் விதியா ! ஆ ! ஜெகதீசா.

சுடலைபாராய்-புடம்வேகுது-மடலோக்கிய-விடமிதுதான். (போ)
வந்தேனடா-வந்தேனடா-வந்தேனடா-வந்தேனடா-சுடலை. (போ)

(சங்-வசம்) ஓ! காசிநாதா! நான் பெற்றமகனைத் தோளின்பேரில் தாங்கிச் சுடுகாடுவந்தேன், இவனையிந்த மணலின்பேரில் வைத்துக் கட்டைதேடப் போகிறேன், சிங்கம், கரடி, நாய், நரி, பூதமுதலானது தீண்டாதிருக்கச்செய்வாய் விஸ்வேசா. இத்துணையாகிலும் செய்யலாகாதா

பொது விருத்தம்.

மாதுமகன்றனைக்கிடத்திக்கட்டைமுட்டை
மயானத்திற்றன்பொறுக்கச் சென்றாளிப்பாற்
நீதேதுமுன்செய்தேனப்பாமந்திரி
நிகழிலாப்புலையனைப்போல்வேடந்தாங்கி
ஊதுபுரிந்தாட்டயிடும் பேயின்கூச்சல்
வர்ணசங்கீதமெனச்செவியிற்கேட்கப்
பாதகமேன்புரிந்தேனோ பரமேயென்று
பதறுவான் றிரிதினுற் கதறுவானே.

(பொது-வசம்) சபையோர்களே? இவ்வாறு சந்திரமதி தன்மகனை யோரிடத்திலவைத்து கட்டை பொறுக்கச்சென்றாள், இப்பால் அரிச்சந்திரன் தனக்குநேரிட்ட காலகெதியையெண்ணி மந்திரியுடன் சொல்லி பிரலாபிக்கிற விதங்காண்பீர் கனவான்களே.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-நீலாம்புரி-தாளம்-ஜம்பை.

ஆதிசிவசங்கரனே-யடியேனிச்சுடலைவர
யாதிமதியோசன்றனது-பகூமதோமந்திரி.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? இக்காசிமாநகரிலுள்ள இச்சுடலையைக்காக்க சிவசங்கரன் விதித்தக் கட்டளையை யென்னென்றுசொல்வேன்.

மந்—சங்கரனுமன்னொருநாள்-சாம்பவியினுடன்கூடி
இங்குதங்கிநடனித்த-விடமிதுகாணரசே.

(மந்-வ-ம்) அரசே? இப்படியும் புகலப்போகுமா! நீர் இப்போது வசிக்குமிடமானது சாம்பவியினுடன், சங்கரன் நிர்த்தனஞ்செய்த இடமென்று அறிவீர் ஆண்டவா.

அரி—காட்டமடிக்கிச்சவத்தை-கடத்தித்தணல்மூட்டிடவும்
வாட்டமுடன்நாற்றமதில்-வருந்துவதேன்மந்திரி.

(அரி-வ-ம்) சரி, அப்பாபாலகா? இங்கு கட்டை முட்டை அடுக்கி அதன்பேரில் சவத்தையிட்டுச் சுடும்போது துர்நாற்றமெழும்ப அதைச்சகிக்கவும் எனக்கு விதியா!

மந்—இத்திருவாசனைக்கொள்ள-என்னுளுமிவ்விடத்தில்
ருத்திரனும்வீற்றிருப்பா-னுண்மையிதுவரசே.

(மந்-வ-ம்) அரசே! இங்குதோன்றும் வாசனையைதுர்வாசனையென்று

சொல்லப்போகுமா ! கெங்கையை ஜடையின்மீது தாங்கியகெங்காதரன், இம்மதுரமுள்ளவாசனை நிமித்தமல்லோ அரூபியாய் இங்கு வீற்றிருக்கின்றார், மேலும் இதையாககுண்டலமென்றும் அறிவீர், இதுபொய்யல்ல, சுருதிமுறையில் தாங்கள் காணலாம் கோவே.

அரி—கைதனிலேகோலேந்திக்-காவலிக்குநான்புரிய
வையகத்திலென்னகுறை-வகுத்தேனோதான்மந்திரி.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி ? நீ சொன்னது பிசகில்லை, சரி; ஆனால் நான் இவ்விடத்தில் என்கைகனில் கோலொன்றைத் தாங்கி காவல்புரிய வையகத்தில் யாராருக்கு என்னதீங்கு செய்தேனோ ! இதுவும் விதியா ! சிவன்றந்தமதியா ! கவுசிகன்சூதா ! அடடா பாவியிலும் பாவியானேன்.

மந்—வறுமைசுகமன்பருளும்-வாழுலகோர்புரிவதெலாந்
தருமமென்றறிந்தேநீதி-தாவிடுங்கோலரசே.

(மந்-வ-ம்) அரசே ? சுகதுக்கந்துக்கன்றோ உலகில் மானிடராய்ப் பிறப்பது, இது ஒரு தீங்கானகாரியமல்லவே. ஆனதால் தாங்கள்கைதனில் தாங்கியிருக்கும் கோலானது, தருமமறிந்தே நீதியுணர்த்தும் செங்கோலெனத் தெரிகுவீர்பிதாவே.

அரி—பரணையின்மேல்நானமர்ந்து-பலவிதமாய்நொந்துருகத்
தரணிதனிலேதுசதி-தான்புரிந்தேன்மந்திரி.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி ? இலை, செடி, கொடிமுதலியவைகளால், கட்டப்பட்ட இப்பரணையின் மீதிருந்து, பலவாறு மனம்நொந்துவாட இப்பார்மீது ஒப்பிலாசதியென்னசெய்தேனோ ! தெரிந்திலேன் ! இது ஒருநிலையா.

மந்—அட்டமதக்களிறியாடுக்கி-யங்குநாகமதையடக்கி
இட்டமுடன்சாம்பவனு-மிருந்தநிலேஅரசே.

(மந்-வ-ம்) தந்தையே ? சற்று சவனிப்பீர், அதாவது ஜெகதீசன், அஷ்டகெஜங்களை யொடுக்கி பணமுடியைத் தாங்கிய ஆதிசேஷனுடைய கெர்வத்தையடக்கி இன்பமுடன் இவ்விடம் வீற்றிருந்த நிலையாக்கும் அரசே.

அரி—பூதமோடாகினிகொள்ளி-பொறிஜாகினிகூவ
பாதகனென்கேட்கவென்ன-பழிபுரிந்தேன்மந்திரி.

(அரி-வ-ம்) சரி, அப்பாமந்திரி ? நீ சொன்னதை யொப்பினேன் ஆனால் இதோபார் பேய்முதலிய பூதகணங்கள் தங்கள் மனம்போல் கூத்தாடிக் கூவுவதைக் காதாரக்கேட்டும், கண்ணாரப் பார்த்துமிருக்க என்னபாதகஞ் செய்தேனோ தெரிந்தேனில்லையே மைந்தா.

மங்—ஆதிசத்தியம்பிகையும்-அமைத்துருவங்காளியைப்போற்
சோதனைசெய்வேளையவள்-சொற்கேட்போரரசே.

(மங்-வ-ம்) அரசே? அ! உமது பெருமையே பெருமை! அதாவது, ஆதிசத்தியானவள் காளியைப்போலுருவெடுத்தவிதம் உமக்குந் தெரியுமல்லவா, ஆனகால் அவள்கூவும் சப்தத்தைக்கேட்கும் உமது பெருமையே பெருமை, நீர் யாதொன்றுக்குஞ் சிந்திக்க வேண்டாம் பிரபுவே.

அரி—கட்டிகட்டி என்னரையிற்-றரித்துமிந்தக்கருங்கந்தை
வெட்டியான்போலிங்கிருக்க-விதிவசமோமந்திரி.

(அரி-வ-ம்) அப்படியா, சரி, ஒப்பினேன், மந்திரி? பட்டு பீதாம்பர வஸ்திரத்தைக்கட்டி உலாவியயான், இப்போது அரையில் கட்டிகட்டி, கையிலும், சிரசிலும், கறுத்தக் கந்தைத்துணி தாங்கி வெட்டியானைப்போல இருக்கவும்விதியா! சி, சி, இது வீணில் எடுத்த தேகமே என்றறிவாயப்பா.

மங்—மன்புலித்தட்டிதொட்டு-பாங்கியுடன்கரித்தோலை
காத்திவிட்டுநடனித்த-காரணங்காணரசே.

(மங்-வ-ம்) அரசே? இதென்னவிந்தை! பரமசிவன் புலித்தோலை இடையில்கட்டி, யானைத்தோலை போர்வையிட்டு சங்கரிமகிழ நடனம் புரிந்த காரணந் தெரிந்திரில்லைபோலுங் காணுகின்றது.

அரி—சுடுகூலிவாங்கிடநான்-சுடலைதனைக்காத்திருக்கப்
படுபாவியேதுகுற்றம்-பண்ணினேனோமந்திரி.

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? நீ சொன்ன நியாயந்தெரிந்தேன், ஆனால் நான்வரும் சவத்திற்குக் காத்திருந்து சுடுகூலி, முழத்துண்டு வாய்க்கரிசிக்காக எதிர்நோக்குவந்து பாவியாகியயான் என்னபாதகஞ் செய்தேனோ! ஐயையோ! என்விதியும் நல்லவிதியே!

மங்—அண்ணவிட்டவாக்கினையை-யசட்டைசெய்துமறித்திடவே
பண்ணியதோர்கருமத்தின்-பகுதியீதாமரசே.

(மங்-வ-ம்) அரசே? எப்போது ஒரு எஜமானுக்கு ஊழியஞ்செய்ய ஒப்புதல் பட்டீரோ, அவர்கட்டளைப்படி நடப்பதே மேலானகீர்த்தி ஆனால்முன் ஊழ்வினை இப்போது சற்றுதொடர்ந்ததால் இவ்விதக்கட்டளைக்கு உள்ளானீர் மனந் தளரவேண்டா மரசே.

அரி—பெண்டுபிள்ளைநாடுவிட்டு-பிரிந்திருக்கச்சிவனுடைய
தொண்டுபுரிவோரையென்ன-துன்பஞ்செய்தேன்மந்திரி.

(அரி-வ-ம்) சரி, பாலகா? யான் அரசாண்ட காலத்தில், ஏழைகள், ஊழியர்கள் முதலியோர்கள் மனம்வருந்த என்னதீங்கு செய்தேனோ தெரிகிலேன், அதாவது இப்போது பெண்டுபிள்ளை சுற்றம், நாடு இ

வைகளைவிட்டு ஒருவருக்கு அடிமைத்தொண்டு புரியவிட்ட சிவத்தி ன்காருண்யமே காருண்யம்.

மந்—சத்தியத்தைக்கைக்கொண்டு-சார்ந்திருந்தீர்பத்திநெறி
நித்யமலவாழ்வெனவே-நினைக்கவந்தீரரசே.

(மந்-வ-ம்) அரசே? சதாசத்தியத்தை சதமென எண்ணியிருக்கும் தாங்கள் இப்படி நினைப்பது சரியல நாதா.

அரி—சுற்றத்தார்நேசமெங்கே-சூழும்பராமரிசையெங்கே
நற்றுபுந்துவர்க்கமிங்கு-நாடாததேன்மந்திரி.

(அரி-வ-ம்) மைந்தா? நீசொன்னதையொப்பினேன், ஆனால் சுற்றத்தார், உறவின்முறையார், பந்துவர்க்கங்களனைத்தும்பேர்களிருந்தும் உன்னைவிட யாவரையும், இங்கினிம் நாடக்காணேன், இது என்னவிந்தை! சுதனே.

மந்—மச்சமதிற்காசித்தே-மகிழ்ந்தகொக்குநீர்வாங்கில்
மெச்சிவேறிடம்போகு-மியற்கையென்பீரரசே.

(மந்-வ-ம்) தந்தையே? குளம், குட்டை, ஏரி, தடாகம், இவைகளிலுள்ள மீன்களைக் கொத்தித்தின்னும் பொருட்டுக் கொக்கானது காப்பதும் நிஜமே, அவைகளிலுள்ள ஜலம்வற்றிடில் மேற்படி கொக்கினங்கள் வேறோரிடஞ் செல்வதுபோலாயிற்று அரசே.

அரி—மந்திரிகடனிலொருவன்-மனந்தளர்ந்துபோகாமல்
எந்தனுடனிருந்து-மிச்சையென்னமந்திரி.

(அரி-வ-ம்) அப்பாபாலகா? அனந்தபிரஜைகள் மந்திரிகள் முதலியவர்களிருக்க, நீமாத்திரம் யானடையும் பலனை, அனுபவிக்க வந்துவிட்ட காரணம் யாதோ தெரிகிலேனே நேசா.

மந்—கமலமதுநீரிலுற்றே-காய்ந்திடினுங்காய்ந்திடுக்குஞ்
சபலம்விட்டேயுண்மைதனைச்-சான்றோன்முறையரசே.

(மந்-வ-ம்) அரசே? கமலமானது நீரிலுதித்து அந்நீர் இருக்குமளவும் செழித்து, அதுவற்றினால் தானுமுலர்ந்து, மறுபடி அதுபெருகினால் தானும் உற்பத்தியாகிறதுபோல், சான்றோர்களுடைய எண்ணம் இவ்வாறு இருக்குமென் றறிவீர் சத்தியவுருவே.

அரி—சித்திரையின்றேவருது-சேமமுடனென்காவல்
பத்தியாய்ப்புரிபவரார்-பகர்ந்திடுவாய்மந்திரி.

(அரி-வ-ம்) அப்பாபாலகா? யான் சந்தேகங்கொண்டு மனதிற்கு எட்டாவிஷயங்களை உன்னைக் கேட்டதற்கு வெகு நியாயத்துடன் வெளியிட்டதும் சரியே, தற்காலம் என்திரேகமோ சற்று சோர்வடைகின்றது, அன்றியில் சித்திரையும்வருகிறது, ஆண்டையின்கட்டளையையும் மீறவுங்கூடாது, இதற்கு மார்க்கம் யாதோ உளிசெய்வாயப்பா.

மங்—நானிருந்துகாவற்செய்வேன்-நாயகனே நித்திரைசீர்
தான்புரியவேதுதடை-தயவுசெய்விரசே.

(மங்-வு-ம்) தந்தையே? அப்படிக்குத் தங்கள் திரேகம் ஒருவாறு இருக்கில் சற்று நித்திரைகொள்ளும், உமது ஆண்டையின் சொல் மீறுவண்ணம் அதிஜாக்கிரதையாக நான்காவல்புரிகிறேன் ஆண்டவனே

(அரி-வ-ம்) சரி, நல்லதப்பா.—(அரசன் பரணையின்மீது நித்திரை கொள்ளல்.)

(பொது-வ-ம்) சபையோர்களே? இந்தப்பிரகாரம் பரணையின் பேரில் அரசன் நித்திரை செய்யும்போது, கனவுகண்டு திகைத்து மந்திரிக்குத்தெரிவிக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## அரிச்சந்திரமகாராஜன் கனவுகண்டு

### சத்தியகீர்த்தியினிடம் சொல்லுதல்.

(அரி-வ-ம்)—(அரசன் நித்திரைவிட்டுத் திடுக்கென எழுந்து இரு கண்களையும் இருகரத்தால் நிமிட்டிக்கொண்டு மந்திரியுடன் தெரிவித்தல்) ஆ! பாலகா? என்னென்று சொல்லுவேன்! அந்தோ! உன்னிடம் சொல்வோமெனில் நாகுளருகின்றதே! திரேகத்தினின்று ஆவியானது நீங்க எத்தனிக்கிறதுபோலும் காணுகின்றதே! உஸ், என்ன செய்வேன்பாலா! (கன்னத்தின்மீது கையையிட்டுத்துக்கித்தல்) ஆ! நேசனே? சற்று சவனிப்பாய், அதாவது, நான் அரசாண்டகாலத்தில் முனிவனுலனுப்பப்பட்ட மிருகங்களென்றுணராமல், குடிகள் முறையைக்கேட்டுக் காட்டுக்குச்சென்று வேட்டையாடி அன்றிரவில் அங்கனேதங்கி நித்திரைசெய்த காலத்தில் கண்டகனவை உன்னிடம் கூட தெரிவித்திருக்கிறனல்லவா, ஆனதால் அந்தக்கனவின் தோஷத்தால், பெண்டு, பிள்ளை, சுற்றம், நாடு முதலியவைகள் போய் பறையாபிச்சுடலைக்காக்க விதிவந்தது! அதன்றிக இப்போது என்திரேகமாலுத்தென்று உனதிடம்தெரிவித்துச் சற்றுமூக்தாளுக்கிடந்தேனல்லவா! அக்காலையில் யான்கண்டது கனவோ, அல்லது நினைவோ, யாதுந்தெரிகிலேன்! அப்படி ஒருக்கால் கனவாயிருந்திடில் இன்னம் யாது விபத்துவருமோ, தோணேன்! என்னசெய்வேன்! ஆ! ஜெகதீசா! இன்னமுமா என்னைச் சோதிக்க எண்ணங் கொள்ளுகிறாய், வேண்டாம், இனியாகிலுங் காரும், என்வினையைத்தீரும் முத்திக்குவித்தே.

(மங்-வ-ம்)—(மன்னன் திருமுகத்தை யுற்றுப்பார்த்து யோசித்துரைத்தல்) ஏ! மனமே? அன்று நமது மன்னர்கனவுகண்டு சொன்ன காலத்தில் இருந்தத் திருமுகத்தைக் கண்டிருக்கிறாயல்லவா, சரி, இன்று நமதிடம் கனவுகண்டேனென செப்பு மரசனது திருமுகத்தை

யுற்றுப்பார், பார்த்தனையா, சரி, நமது தேசிகன்தேகத்தில் ஒருவாறு தேஜசுங் காணப்படுகின்றது, என்னவிந்தை! அன்று வேறுவிதமாகக் கண்டாயல்லவா, இன்று அப்படிக்கொருபேதுமில்லை, என்ன ஆச்சரியம்! இதுகாறும் நமதுதந்தை பட்டகட்டத்தைப்பார்த்து சங்கரனருள்புரிந்தான் போலுங் காணுகின்றது, இல்லாவிடில், நமக்கும் இவ்விதச் சந்தோஷம் வாராதல்லவா? நமது மன்னனைப் பார்க்கப் பார்க்கமனம் பூரிக்கின்றதே! மேலும் நமது அரசன் அரசாண்டகாலத்தில் நாம்பக்கவிருந்து வார்த்தை யாடினது போலல்லவா இன்னிமிஷங்காணப்படுகின்றது, மேடு பள்ளம், பள்ளம் மேடு எனும் நீதிவாக்கிய நமது அரசர்நிமித்தங் கண்டோம், ஆ! எவ்வுயிர்களையுங் காப்பவனே! ஏ! கருணைக்கடலே! எங்களை யாள்பவனே! எல்லாவுலகுக்குங் காரணமூர்த்தியே! நின்திருக்கண்பார்வையை என் அரசன்மீது இப்போது தானு தயைபுரிய எண்ணங்கொண்டீர்! இது அல்லவோ காருண்யம் சரி, அரசே? சத்தியமென்னுங் கயிற்றால் தங்கள்மனதை இறுகக்கட்டிய மன்னாதி மன்னரெனப் பெயர்வகித்தவராயிருந்தும், ஏனிப்படி தியங்கலானீர்? இது சரியொத்ததல்லவே, ஆகையால்யாவருக்கும்தைரியமே புருஷலக்ஷணம், ஆனதுபற்றி அடிமையின்பேரில் சற்றுதயவிட்டு தாங்கள்கண்டகனவை வெளியிடில் என் புல்லறிவிற் கெட்டியவாறு புகலமாட்டுவேன், பிரபூ.

(அரி-வ-ம்) ஆ! இதென்ன ஆச்சரியம்! அன்றுகனவுகண்டதை நமது அமைச்சனாகிய இச்சத்தியகீர்த்தியிடம் வெளியிட்டபோது இவன்பட்டபாட்டைக் கண்டே யிருக்கிறோம், அப்படியிருக்கஇன்று நாம் கண்டகனவை வெளியிடாமுன்னம் அங்குமிங்கும் ஓடி ஒருவிதகுதூகலத்தையு மடைந்து ஜெகதீசனைப் போற்றி செய்யவுமானான், இதென்னவிந்தை! அப்படிநாம் யாதொருகுறியும் கண்டோ மில்லையே மேலும் திரிகாலமும் அறிந்து சொல்லத்தக்க வல்லமை யிவனிடத்திலிருப்பதால், எக்குறிகண்டோ இப்படி ஆனந்திக்கலானான், எப்படியிருக்கினும் நமது மனமாத்திரம் தாமரையிலையில் நீர் தத்தளிப்பதுபோல அதிகவருத்தத்திற் குள்ளாகிறதே, என்னசேய்வோம்! ஆகினும் நாம் மனதை ஒருவாறு தேற்றிக்கண்டகனவை மந்திரியிடம்வெளியிடுவோம், அதன்பேரில் யாது நேரிடுமோ தெரிந்து கொள்வோம். சரி, அப்பாமந்திரி? நீ கேட்டவாறு யான்கண்டகனவை வெளியிடுகின். அங்குமிங்கும் மனதைச் செலுத்தாமல் கவனிப்பாயப்பா.

(மந்-வ-ம்) அப்படியே தாங்கள் சொன்னவாறே கவனிக்கின்றேன் ஆண்டவா, சீக்கிரம் வெளியிடுவீர், அரசே? ஜெகத் ரக்ஷகன் அருள்படியே முடியும்.

### அரிச்சந்திரமகாராஜன் அகவல்.

மந்திரிகேளாய் மகிழுடனுறு ஞ்
சுந்தரப்பரணைமேற் சொக்கினேனளவி ல்
கனவதுகண்டேன் கழுறுவேனீ தா
னினவுடன்கேட்டே னிகழ்த்துவாய்பல னொ
ஒருபெரும்பூதம் ஓங்கிப்பதுங்க வே
மருளுடன்மற்றொன்று மகிழ்ந்துசந்தோஷமா ய்
ஜெயஜெயதோட்டி ஜெயம்பெறுவென் றே
யுடனுரைத்தே நாட்டியஞ்செய்த து
பெண்பூதமொன்று பிள்ளையையேந்தி யே
என்னெதிர்முன்னே யிருத்தியேநின்ற து
பாம்புருவாகப் படைத்தொருபூத ங்
தேம்பிடசிசுவின் தேகத்திற்றங் க
காலுங்கையில்லாக் கரும்பூதமொன் று
மேலாகவென்றே மிசைந்தோடக்கண்டே ன்
கொள்ளிப்பிசாசுங் கூடொருபிடாரியு ங்
கள்ளனைப்போலவே கறுத்தமேனியா ய்
கோலக்கிடாவின்மேற் கொண்டிடக்கண்டே ன்
நாலொருதலையுடன் நகைத்தொருபூத ஞ்
சிரித்துமேயாட சிரசினில்மயி ரை
விரித்துநிர்வாணமாய் வேறொருபூத ம்
பக்கத்திலேயொரு பசாசினைத்தாங் கி
கக்கத்திற்சட்டியுங் காலையுந்தூக்கி யே
வந்தெதிர்நிற்க வாயதுகுள றி
எந்தேகமறந்து ஏங்கியேநின்றே ன்
வெள்ளிமுளைந்திட விடிந்துபொழுதெ ன
துள்ளிநானெழுந்து தொடுத்துசெங்கோலி னை
தேசவிசாரணை திகழுடன்புரிந்தே ன்
மோசமென்வருமோ மொழிகுவாய்மந்தி ரி.

(மந்-வ-ம்) ஆ! காசிவிசுவேசா! உன்பெருமையை என்னென்றுதுதித்தேத்துவேன்! சரி, அரசே! யான்தாங்கள்கண்டகனவை ஒன்றும் விடாமலேவெளியிடுகிறேன், ஆகையால்தங்களுக்கு இன்றுமுதல்தொட்டு,

சத்தியகீர்த்தி தரு.

இராகம்-பைரவி, தாளம்-ஆதி.

பல்லவி.

பெருமைபெருகக்காலம் பெம்மானருளாலெனைப்
பெற்றவாவரும்பாரீர்.

அநுபல்லவி.

அருமையாய்நீர்கண்ட அச்சமிலக்கனவால்
அடையும்பலனைச்சொல்வேன் ஐயாயினிமேல்நீரும். (பெ)

சரணங்கள்.

நம்மைக்கெடுக்கமனம் நாட்டியிவ்வாறுசெய்த
நலமிலாமுனிவனே நடுங்கிக்குன்றியபூதம்
இம்மைமறுமையிலு மேற்றக்கீர்த்திபுனைந்த
இறைவாநின்குருதானே யெதிரிலாடியபூதம்
ஏந்தலேபெண்பூதமென் றனைப்பெற்றதாய்
எண்ணுவீர்தூக்கிய தெழிலுருமைந்தனீர். (பெ)
பாம்பென்றீரப்பூதம் பன்னிருகைவேலன்
பகன்றகொள்ளிவாய்ப்பூதம் பாருமக்கினிதேவன்
தாமின்றுகண்டகள்ளன் தருமராயன்சடை
தரித்தபரசிவன் தானேபார்வதியுடன்
தந்தையேகாவிலான் தாவியகாரிணள்
தாணுவேமுடிந்ததாற் றுண்டிலென்வாழ்த்திநீர். (பெ)
வெள்ளிமுளைந்ததென்றே விளம்பினீர்தசுக்கிரன்
வேண்டியுமக்காயிங்கு விரைவில்வருவார்கோவே
கள்ளம்புரிந்தமுனி கர்வமழிக்கியும்மாற்
கவலைக்குள்ளாவானல்ல கதியைப்பெறுவீர்தேவே
காசினியிலுமது கனமும்பெருமையோங்கும்
கதிர்குலந்தழைத்திடும் கழலடிக்கடியனீர். (பெ)

(பொது-வ-ம்) சபையோர்களே? அரசன்கண்ட கனவின் சங்கதியை மந்திரிசொல்லக்கேட்டு மனங்குளிர்ந்திருந்தான், அச்சமயத்தில் சந்திரவதியம்மன் கட்டைபொறுக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-ஸ்ரீராகம்-தாளம்-ஆதி.

காசிநாதாவிதுவுன்னருளோ!
காட்டினில்மைந்தனை நீட்டினேனுன்வசம்
மேட்டியோநான்வரு மட்டிலுமையா. (காசி)
முட்டைபொறுக்கவைத்தாய் சிவமே!
முன்ஞ்னியா னென்னபாதகம்
பண்ணினேனோவன்றி யுன்னருடானோ! (காசி)
கட்டைதேடவேவிட்டாய் ததியே!
காதல்மிகுத்திடும் போதகராளித்த
திதிலாப்பாலனை பாதகிசுடவே! (காசி)

கப்பல்பொறுக்கவைத்தாய் சுகமே !
சுந்தரநாதா உன்றனருளிதோ
என்மனைவொண்டியாய் வந்தழச்செய்தாய் ! (காசி)
கள்ளிகுவிக்கலானேன் காலம் !
சோதனைசெய்தெனை வேதனைபுரிந்திட
பாதகிநானென்ன காதகஞ்செய்தேனோ ! (காசி)

சந்திரமதி விருத்தம்.

வனத்தினிலுன்னைத்தேடி வருந்தியேகண்டெடுத்து
தினத்துநான்றோள்மேற்றூக்கி சேர்ந்துமேசுடலைதன்னிற்
கனத்ததோர்பிணங்கள்வெந்து கரித்திட்டகட்டைதேடி
மனத்துணிவாகக்காஷ்ட மடுக்கினேன்வளத்துவேனே.

(சங்-வ-ம்) அப்பா மகனே தேவதாசா ! உன்னைக்காட்டில் கண்டெடுத்து தூக்கிவந்து, பிணங்கள்சுட்டு மீந்தகட்டைகளை பொறுக்கி,காஷ்டமடுக்கினேன், இனி உன்னைக் கட்டையின் மீதில் வளத்தப்போறேனடா கண்மணியே.

காசிவிஸ்வேசனீயே-கெதி !
கங்காதரனே திங்களணிந்தவா
எங்களையிவ்வண மங்கிடச்செய்தாய் ! (காசி)
போதும்நான்பட்டதுன்ப மன்னா !
புண்ணியவரசே எண்ணியுமதுபதம்
கண்ணியவிதியாலென்-கண்மணியைச்சுட. (காசி)
ஓடிவருவீர் பிராணநாதா !
உத்தமாவுமக்குநான்-பத்தியாய்நடந்தே
சத்தியமாகினால் இத்திசைவருவீர். (காசி)

சந்திரமதி விருத்தம்.

மன்னனேயுந்தனுசை மகனுமேநாகந்தீண்டித்
தின்னெனமரித்தான்காட்டிற் றேடிநான்றூக்கித்தோளில்
இன்னருமயானந்தன்னி லெரிந்தகொள்ளிகளைச்சேர்த்து
இன்னிமைவளர்த்திகொள்ளி யிடுகிறேன்வருவீர்நாதா.

(சங்-வ-ம்) ஓ ! என்பிராணநாதா ! உமது கண்மணியைச் சர்ப்பந் தீண்டி, காட்டில்மரித்தான், நான் தூக்கிவந்து இவ்விடத்தி லெரிந்து விட்டகட்டைகளால் காஷ்டமடுக்கி, மகனைவளத்தி கொள்ளிவைக்கப் போகிறேன், நான்பதிவிரதாதர்மம் பிசகாமல்நடந்தது மெய்யானால், நீர் ஓடிவந்து பார்த்துப்போவீர் பிராணநாதா.

காஷ்டத்திலேபடுப்பாய் மகனே !
கல்விதோன்வைத்தேன் நல்லொலிவாய்க்கே
மெல்லியமணலை செல்லுறேனரிசியாய். (காசி)

(சங்-வ-ம்) ஓ! பிராணநாதா! வாரும், வந்துபாரும்!
கொள்ளிவைக்கவேபோறேன் மன்னா!
கூவியும்மைநான் பாவியழைத்தகுரல்
மேவியுமதயிரு செவியினுழையிலையோ! (காசி)
எரியுதேகட்டைபற்றி அப்பா!
என்னருவிழியின் றன்னுளமணியே
உன்னருந்தேகம் பொன்னுறுதேமகனே! (காசி)

சந்திரமதி விருத்தம்.

பார்த்திட்டகோவிலெல்லாம் பணிந்துகைசிரமேற்கொண்டு
கார்த்திவிரதத்தோடுங் கனமுளதானமீந்து
பார்த்திபரளிக்கப்பெற்ற பண்புளபாலாவாசை
தீர்த்தையோகர்மமென்றன் றீவினையாற்செய்தேனே.

(சங்-வ-ம்) அப்பாமகனே! அருந்தவஞ்செய்துபெற்ற பலனே! யின்று தீர்த்தையோ பாலா! இதோ உனக்குச் செய்யவேண்டிய கருமஞ் செய்தேனப்பா கண்மணியே!

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

என்னமோபுதுமையாக விருக்குதுமந்திரிபாராய்
வன்னிருள்தனிலேயிந்த வனத்தினில்யாரோகாணேன்
இன்னமாய்க்காஷ்டமேற்றித் தீயதோமூட்டுகின்றா
ருன்னிநானவிடஞ்சென்றே யுருப்பார்த்துவாறேனப்பா

(அரி-வ-ம்) அப்பாமந்திரி? இதோபுதுமையாயிருக்கின்றது! யாரோ இந்த அர்த்தராத்திரியில் காஷ்டந் திருட்டுத்தனமாய் கொளுத்துகிறார் நான்போய்பார்த்து வருகின்றேனப்பா சத்தியகீர்த்தி.

(சத்-வ-ம்) மஹாபாக்கியம், அப்படியேபோய்வாரும் ஆண்டவனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஆரடிகள்ளிநீதா னடாதவிவ்விருளிற்றானே
பேரிடபமழையில்வந்தே பிணந்தனைச்சுடவுமானாய்
கூரடியுன்றனாரும் கொளுத்துமிப்பிணத்தின்வாறுந்
தாரடியாண்டைவாரந் தரத்திடின்விடையீவேனே.

(அரி-வ-ம்) ஆரடியார்? நீதிருட்டுத்தனமாய் வந்து இவிடத்திற்கு கொடுக்கவேண்டியதை கொடுக்காமல், பிணத்தைச்சுடலானாய், நீயார்? உன்பெயரென்ன? சொல்லடிசொல்லு?

சந்திரமதி விருத்தம்.

கள்ளிநானல்லவையா கபடியுமல்லவையா
தள்ளியென்பாலன்காட்டிற் றேன்றியேநஞ்சால்மாண்டான்

கள்ளிருள்தனிலேதாங்கி நானிந்தச்சுடலேகண்டே
கொள்ளியைவைக்கலானேன் கோபத்தைப்பொறுப்பாய்போற்றி:

(சந்-வ-ம்) ஐயா? நான்திருடியுமல்ல, கபடியுமல்ல, என்மகன் பாம்பு கடித்திறந்தான், ஆனதாலிந்தேதகனஞ் செய்யவந்தேன், தயவு செய்வீர் ஐயா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

கடலேயையாளுமென்றன் சுவாமியினருட்படிக்கே
கடமையைவாங்கவிங்கு காவல்நானிருக்கநீயுந்
திடமுடனுத்திரவன்றி தீபனைமூட்டலானாய்
கடகடபிணந்தைத் தூக்கிநனணியுன்பதிக்குத்தானே.

(அரி-வ-ம்) அடி என் எஜமா னுத்திரவின்படி யிங்குகாவலிருக்க, என்யெஜமானுக்குச் சேரவேண்டிய கூலியைக்கொடாமல் தீயைமூட்டியது தகாது, சவத்தையெடுத்துக்கொண்டு உன் வீடுபோவாயடி திருடி.

சந்திரமதி விருத்தம்.

காவலிங்குண்டேயென்றென் கனவிலுமறியேனையா
பூவிகானேழைதொண்டு பகருமுன்கடமையிய
தாவியேபடைத்திருந்தாற் றனித்திங்குவருகுவேனே
கோவிக்காதென்மேலிந்தக் குழந்தையைச்சுடச்செய்வீரே.

(சந்-வ-ம்) ஐயா? இவிடத்தில்காவலுண்டென்று எனக்குத்தெரியாது, நானே ஒருத்தருக்கடிமை, கூலிகொடுக்ககெதியிருந்தால், தனியாய்வருவேனா, தயவுசெய்து குழந்தையைச்சுடச்செய்வீர் ஐயா:

# பிள்ளையை யுதைத்தல்.

அரிச்சந்திரன் விருத்தம்.

நாட்டிலிலெல்லாக்குமஞ்சா நாரிநீலிநீலி
வாட்டமில்லாமலிங்கு வந்ததுமன்றிமெத்த
நீட்டமாய்ப்பேசலுற்றாய் நிர்மூடிசவத்தைநீதா
னோட்டமாயெடுத்துச்செல்வா யுதைத்திட்டேன்கள்ளிபாரே.

(அரி-வ-ம்) ஆ! ஆ! அடிநீயகீலி, இதோ உன்மகனைக் காலாலுதைத்துத் தள்ளினேன், எடுத்துக்கொண்டோடிப்போடிபோ.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-காப்பி, தாளம் ஆதி.

அடபாலாவிந்த அவதியென்னடாசேலா!
அங்கம்பதறத்தோட்டி யதட்டியுதைக்கக்காலால். (அ)
படைமன்னர்சூழ்ந்திட பட்டவர்த்தனர்தாழப்
பணிந்துபலதேசத்தோர் பாதமதைத்தொழ

குடைநிழலினிலிருக் கூடியரசளித்தக்
கொற்றவரளித்திட்ட குலமணியேசிலா. (அ)
அரசும்பதியும்நாடும் அடியவரிரந்திட
அளித்தவென்னைசீன்ற அளியேநாம்பிரிந்திட
பரமனருளாற்காசி யாப்பானடிமையாகி
பாம்புகடித்திறந்தும் பறையனுதைக்கச்சிலா. (அ)
மண்ணிற்பெண்ணாய்ப்பிறந்து மாதவங்கள்புரிந்தேன்
மகனேயுன்பலத்தை மயானந்தனிலறிந்தேன்
எண்ணிக்கையில்லாத்துய் ரெனக்கேயெழுதவயன்
ஏதுபழிபாவங்க ளிழைத்திருந்தேனோசிலா. (அ)

(பொது-வ-ம்) சபையோர்களே? போன அரசன் சீக்கிரம் வாராதபடியால் மந்திரிநாம்போய் பார்க்கலாமென்று அரசனிருக்கிறவிடம் வந்தானென்றறிவீர்கள் கனவான்களே.

(சந்-வ-ம்) ஐயையோமகனே! அப்பாமகனே! என்னருமைமகனே காசிநாதா! காசிநாதா!

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-மோகனம்-தாளம்-சாப்பு.

மகனேமகனேயென்று-ஜெகஜாலியிருட்டினில்
பகவானைநினைக்கிறாயென்னடி-நீலி
சுகமாயெனக்கதைப்பன்னடி.
சகலருமயங்கிடச்-சாதிக்கிறாய்மொழி
சாத்துவேன்கோலினாற்பாரடி.

சந்திரமதி-கண்ணிகள்.

இராகம்-கொண்டா-தாளம்-சாப்பு.

என்னடியெனத்தோட்டி-யின்னமாய்ப்பேசிடுஞ்
சின்னமொழிகேட்க லாச்சுதே-என்
வன்னமேனிகுன்றிப்போச்சுதே
மன்னவர்பாதத்தை மனேவாக்காற்பூசித்து
மயானத்திலிக்கெதிவாச்சுதே.

தோட்-அரி—பதிவிரதாதர்மத்தி-லதியாயின்வரவிங்கு
விதிவந்தகாரணமேனடி-மெத்த
அதிசயமுந்தன்சொற்றானடி
சதிகாரிநீமெத்த-சண்டாளிபடுநீலி
சாற்றினேனுன்வாயைமூட்டடி.

சந்—சதிகாரியென்றெனை-மதியாமற்றோட்டிதான்
அதிகமாய்ப்பேசவுமானதே-என்

பதியோடிருந்தசுகம்போனதே
விதிவசமோவிந்த-வெட்டியான்பலவாறு
வெறுத்துக்கூவவுங்காலமானதே.

அரி—வெட்டியானென்றுமே-மட்டிபோற்பேசுறாய்
கெட்டித்தனமுள்ளபாதகி-இனி
எட்டிநடவடிகாதகி
பட்டித்தனவார்த்தைப்-பதறுதேகதறுதே
பாரிலிலாக்குணசாதகி.

சந்—காதகியென்றெனை-யோதவுந்தோட்டி-உன்
னீதங்கேட்கவிதியிட்டடையோ-உன்
பாதம்பணிந்துக்கைவிட்டையோ
வேதந்துதித்திடும்-விமலாகாசிவாசா
விளைக்சத்தன்பந்தலைப்பட்டையோ.

அரி—தாசிகாதகனெந்த-பாசித்தவள்போல
பூசிப்பேசுறாயுன்றன் ஜாலத்தை-அடி
தூசிக்கிறாயென்றன் கோலத்தை
பேசிடிற்பயனுமோ-பேச்சிகாசிந்திடில்
பிணஞ்சுடலாமனு கூலத்தை.

சந்திரமதி விருத்தம்.

நதிவளம்பெருக்குங்காசி நகரினிற்சுடலைகாக்கு
மதிபதிகேளென்பால னரவத்தால்மாண்டானாகாட்டில்
விதியினாற்சுடவேநானும் வெந்தணலவித்தீரையா
கதியிலைகாசுமீயக் காப்பாயுன்கழலைபோற்றி.

(சந்-வ-ம்) ஐயா ? நீர்கோபஞ்செய்யவேண்டாம், என் குழந்தையைச் சுடவேண்டாமெனில், எனக்கு காசுமுதலானதுங் கொடுக்க கெதியில்லை, யானதால் தய்வுவாக்குகொடுப்பீர், உமக்குபோற்றிசெய்கிறேனையா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

போற்றியென்றுரைத்தமாதேபுகலுவேனொன்றெனுண்டை
சாற்றியவாறுபோலச் சவத்தனைச்சுடவேகூலி
மாற்றிடேன்துண்டுங்காசும் முக்கூடரிசியீந்தால்
ஏற்றியேசுடுவேனென்னை யெஜமானுமதிப்பார்பெண்ணே.

(அரி-வ-ம்) பெண்ணே ? எனக்குப்போற்றிசெய்தாய், கால்பணம், முழத்துண்டு, வாய்க்கரிசி, முதலானதுங்கொடுப்பாயாகில், தடையின்றி உன்மகனைச்சுடுவேனமாதே.

சந்திரமதி விருத்தம்.

துண்டுகாற்பணத்திேைடு தோகைவாய்க்கரிசிதானுங்
கொண்டளித்திடவெனக்குக் கூடுமாயிருக்குமாயின்
கண்டிருள்தனிலேனாலும் காளிபோற்சவத்தையேந்தி
யொண்டியாய்வருகுவேனே வுத்தமாவிடைதாவையா.

(சங்-வ-ம்) ஐயா ? அப்படி பணந்துண்டுவாய்க்கரிசி முதலானதுங் கொடுக்க சக்தியிருந்தால், நான் ஒண்டியாய் சவங்கொண்டுவருவனே, மன்னித்தருளுமையா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

விடையதுகொடுக்கநானே வெட்டியான்டிமைகாண்பாய்
தடையதுசெய்வாரென்னைத் தண்டிப்பாரெஜமான்கேட்டால்
கடையனுனெனக்குச்சேருங் கமறுவாய்க்கரிசிவேண்டேன்
படைத்துநீகாசுந்துண்டும் பாலனைச்சுடுவாய்மாதே.

(அரி-வ-ம்) மாதே ? எனக்குச் சேரும்படியான வாய்க்கரிசியைத் தள்ளிவிடுகிறேன், மற்றதைதத்தள்ளினல் என்னெஜமான் தண்டிப்பானாதால் காசுந்துண்டும் கொடுத்துவிட்டு பாலனைச்சுடுவாய் மாதே.

சந்திரமதி விருத்தம்.

ஐயனேயுரைப்பேனுனே வரும்பாவிகெதிவேறில்லை
வையகந்தனிலெனக்கு வாழ்மனைசுற்றமில்லை
கையினுற்காசுந்துண்டுங் கவர்ந்திடவகையுமில்லை
துய்யனேமனுவுதாராய் தொழுதடிபோற்றினேனே.

(சங்-வ-ம்) ஐயா! எனக்கு காசுந்துண்டுங் கிடைக்கும் வழியில்லை எனக்கு கொடுப்பவருமில்லை, தயவுசெய்து சுடச்செய்தால் உமக்குத் தருமமுண்டு ஐயா.

அரிசசந்திரமகாராஜன் விருத்தம்.

கெதியில்லைசுற்றமில்லை கிட்டிடவகையுமில்லை
பதியில்லையென்றிங்கே நீ பணிந்துமேயுரைத்தாயோதே
மதிதனிலுணர்ந்தேனுன்னை மஹாராஜாவின்ஸியென்றே
சதிவிடுதாலிதன்னை சாங்கமாய்விற்றுத்தாராய்.

(அரி-வ-ம்) ஆ ! பெண்ணே ? கெதியில்லையென்று சொல்லுகிறாய், நீ மஹாயிந்திராஜாலி, உன்கழுத்திலிருக்கிற அதிகபிரகாசமுள்ள தாலியைவிற்றுக் கொடுப்பாயடி மாதே.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-நீலாம்புரி- தாளம்-சாப்பு.

என்னகாலமிந்தக்காலம் எனக்குவந்ததிக்கோலம் ஐயோ !
அன்னமேகாசியில்வாழும் ஆதியே ஓ ! விசாலாக்ஷி. (எ)

தேவருமுனிவர்சித்தர் தேடினுங்கண்ணினுற்காண
ஓவியமுற்றவென்றாலி ஓகோதோட்டிகாணஆகூதி. (எ)
இராஜருக்தேசருக்கூட எண்ணிலுங்காணிடாத்தாலி
வேசஞ்சுடலைக்காக்கும் வெட்டியான்பார்த்திடகாகூதி. (எ)
மன்னவர்கண்ணிற்கேதேற்ற மாதவத்தாற்பெற்றதாலி
இன்னரும்புலையனுக்க இட்டையேவிதிகாமாகூதி. (எ)

ஸ்ரீரிச்சந்திரமகாராஜான் விருத்தம்.

தாலியைக்கண்டேனென்றே தவிக்கிறாய்தயங்குகின்றாய்
நீலிபோல்வந்துமென்னை நிந்தித்தேபுலம்புகின்றாய்
சீலியாந்தேவிதன்னை சிந்தித்தும்வருந்துகின்றாய்
பாலிநீயார்தானிந்த பாலனார்பகருவாயே.

(அரி-வ-ம்) அடிமாதே ? நான் தாலியைக் கண்டேனென்று என்னை நிந்தித்து, சிவத்தை சிந்தித்து, மெத்தவுருகுகின்றாய், நீயார் ? இந்த பாலனார் ? சொல்லுவாய் மாதே.

(சங்-வ-ம்) ஐயா ? என்னையாரென்றீர் ? என்குறையைச் சொல்லுகின்றேன் கேட்டபின் சுடவுத்தரவு தாருமையா.

சந்திரமதி அகவல்.

ஆரெனவென்னை அன்புடன்கேட் டே
வீரவாகுவேகான் விளம்புவேனை யா
கன்னமாபுரியைக் காத்திடுமரச ன்
கன்னருந்தவத்தால் நானுதித்தே னே
என்னுடன்கூடவே யெழிலுருத்ாலியு ம்
உன்னதமாகவே ஓங்கியேவந்த து
அயோத்தியையாண்ட அரிச்சந்திரதீர ர்
வியோத்தமரென்னையே வேண்டியேமணந்தா ர்
சந்தோஷமாக சகலமும்படைத் து
இந்தநற்புதல்வனை யீன்றனர்பா வி.

(அரி-வ-ம்) அப்பாசத்தியகீர்த்தி கேட்டாயா ! ! !

(மங்-வ-ம்) முழுதுங் கேட்பீர் அய்யா, ஒருவேளை முனிவன் சூதா யிருக்கும்.

(அரி-வ-ம்) சரிதான், அப்படியே கேட்கிறேன் நல்லதப்பாமந்திரி

கவுசிகர்தானுங் கபடநினைந் தே
தவசுக்குப்பொன்தான் தரவெனவரச ர்
ஈந்தனர்வாங்கி யிருத்துமுன்னிடமென ச்
சாந்தமாய்ச்சென்றபின் சகிக்கொணக்கோர ம்
புன்னிபோனாட்டைப் பறித்துமேகொண் டு

உன்னிடம்வைத்தபொன் னுதவெனக்கேட்டார்
இன்னாகர்தனிலே யிருவேனென வே
மன்னவர்பின்னே மகாபாவியா ன

(அரி-வ-ம்) அப்பா பாலா, கேட்டையா ? இதனைநன்றாய் கவனி.

(சங்-வ-ம்) எனது தந்தையே பொறும், பொறும்.

தாகனென்றொருவன் றகாதவாறு டி
காமதிற்கிட்டிதாள் கல்லைநெற்றியிலு ம்
இட்டனன்பாவி யிறைவருக்கங் கே
பட்டவிப்பாலனும் பதைக்கவுங்கிட்டி யை
பூட்டினான்தோஷி பொறுக்காமலென்மன ம்
நாட்டினில்விற்கவே நயந்திடவா ர்

(அரி-வ-ம்) அப்பா மந்திரி ? இதனையுங் கேட்டையா !

(மங்-வ-ம்) அப்படியே கேட்கிறேனையா, ஐயோ ! விதியா !

விலையதுகூறி விற்றிடச்சக ல
கலைகளுணர்ந்த காலகண்டைய ன்
விலைக்கெனைவாங்கியே வேந்தனைமிரட்டி க்
குலக்கதிர்பாலனைக் கொண்டனன்றன்வச ம்
தொண்டதுபுரிந்தே தொழுதிடும்நாளி ற்
காட்டிற்குமேவக் கடித்ததுமேபாம் பு
மாட்டியவிஷத்தால் மாண்டனன்பால ன்.
வேந்தனுமந்திரியும் விடையதுகொடுத் தே
சார்ந்தனரெங்கையோ சதியறியே னே
என்குறைமெத்த விருக்குதவுரைத்தா ல்
நன்மதிபுரிந்தே நயந்துவாக்கருள்வா ய்
பாலனைச்சுடவே பாதகிசடுதியி ற்
காலகண்டன்மனே கருதிடஐ யா.

(சத்-வ-ம்) உனக்கு மிப்போக்கொத்தகாலம்வந்ததா என்னம்மணி !

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

சூரியன்மரபின்றோடு சோர்ந்ததோவழிந்துபோச்சோ
காரியமென்னமாச்சோ கவுசிகன்கதிக்குள்ளாச்சோ
கோரிநான்பெற்றபாலன் குவலயமாண்டிடாமற்
காரிருள்காட்டிற்பாம்பு கடித்துமேயிறக்கவையோ.

(அரி-வ-ம்) ஓ ! பரமசிவமே ! சூரியகுலம் அழிந்ததா ! முனிவருஞ் சனியனுமொன்றானார்களா ! நான் தவஞ்செய்து பெற்றபாலன் பாம்பு கடித்திறக்கச்செய்தாயா ! ஐயோ ! காசிநாதா.

### அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ரூபகம்.

அப்பா ! எப்போகாண்பேனடாகட்டிக்கரும்பே-ஆ ! ஆ ! அரும்பே !
ஆவிவிடுத்திட கூவிநாகமது
தாவிக்கடித்துயிர் பாவிகொண்டதோடா. (அ)

ஐயையோ ! எத்தனைசெபலாம்போச்சே-அளியே-ஆ ! ஆ ! கிளியே !
அன்னைக்குதவியாய் உன்னையனுப்பினேன்
தன்னைவஞ்சித்துமே என்னமோசஞ்செய்தாய். (அ)

குலத்திற்கொருவிளக்காயிருந்தாய்குயிலே-ஆ ! ஆ ! மயிலே
கோதையழுதுமே பாதைதெரியாமல்
வேதையுடன்வந்து நிதைக்கவிட்டாய். (அ)

மரபுக்கொருமுளையாய்வந்தாயேமணியே-ஆ ! ஆ ! கனியே !
மாதவஞ்செய்துமே-பாதகனனுமே
ஆதவரேற்றிடும் காதனைக்கோரினேன். (அ)

கொள்ளிவைக்கவுன்னைப்பெற்றேனடாகுமரா-ஆ ! ஆ ! சமரா
கூவியழுதாலும் தாவிமகனேநீ
பாவிமுகம் மேவிப்பார்க்காயோடா. (அ)

### அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-பியாக், தாளம்-ரூபகம்.

தாயைவிட்டுவந்து காட்டில்தனியாமாண்டாயோ-அன்னை
தன்னைவேண்டாயோ.
வாயைமூடியிருப்பதென்மேல் வஞ்சமோபாலா-உனை
வணக்கமுறிசெய்தேனென்று வர்மமோசீலா-என்றன்
கர்மமோலோலா-எ
செங்கோலீயாத்தந்தையெனசித்தம்நொந்தாயோ-அப்பா
சிறுவயதில்விடுத்தேனெனச் சிறுமைதந்தாயோ-வருத்த
அருகேவந்தாயோ-வ
ஐயர்சொன்னவாறடவி அடைந்தையோதாவி-தெர்ப்பை
அறுக்கும்போதுபாழும்பாம்பு அமைந்ததோகூவி-தீண்ட
லானதோமேவி-தீ.
அருமகனேதெர்ப்பைகொய்ய ஆசைப்பட்டாயோ-பாலா
அங்குநாகஞ்சீறக்கேட்டு அச்சமிட்டாயோ-தாயை
அலையவிட்டாயோ-தா.
இக்கிள்ளையைப்போலகாட்டில் செத்தையோஜூதம்-உனை
தேடிப்பேயுங்கூளிகூவிசெப்பசங்கீதம்-நீ
ஒப்பிடகீதம்-நீ.

தந்தையென்றேயெனையழைத்து தாவிடுங்காலம்-ஐயோ
தப்பினதோபிரிந்ததினால் தனிமையாய்க்கோலம் இனி
தாழ்ந்ததேசிலம்-இனி.
என்னாலல்லோ இந்தத்துன்பம் நேர்ந்ததுமானே-அப்பா
இனிக்ஷமித்துதாய்முகத்தை யேறிடேதேனே-பழி
யேந்தினேன்நானே-ப.

(அரி-வ-ம்) அப்பாமகனே! அருமைசுதனே!

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி.

என்னசெய்வேனினி ஏதுபுரிவேனான்தான்
எனக்குவந்தகெதிக்கேசிவமே.

அநுபல்லவி.

அன்னவாகனமேறு　　மயனுமிவ்வாறெழுத்
அமைத்தமதியெதுவோ சமைத்தபழியிதுவோ. (என்)

சரணங்கள்.

முன்னாளினிலென்ன　　மூர்க்கங்கள்புரிந்தேனோ
முனிவர்கள்மனம்நோக　　முறைகளிசைத்தேனோ
இன்னாளினிலெந்தனுக்　　கின்றமகனுஞ்சாக
ஈசா வன்புனைக்காக்கும்　　நேசா விசுவேசா நோக்கும். (என)
அரசையிழந்தபின்ன　　ரவதிகளுக்குள்ளாகி
யடிமைப்படவிடுத்து　　தன்றித்துயர்க்காளாகி
வரிசையென்குலத்திற்கே　　வாய்த்தபாலனைமாய்க்க
வழியோ வுனக்கென்மேற்　　பழியோ வென்றுயனைப்பார். (என)
உன்னையனுதினமு　　மோதிப்பணிந்தபலனை
ஓகோயிதோகண்டே　　னுரங்கிடவென்சிலன்
என்னையடிக்கடிக்கே　　யிப்படிசோதிப்பது
ஏதோ வுந்தனுட　　குதோ இவ்வசைகெட. (என)

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ரூபகம்.

துரையேவுன்னைப்பறையனுகச்செய்தானோ! ஓ! ஓ! பாழும்பிரமன்!
தொல்லுலகரசர்-அல்லும்பகலுமே
வல்லவாநின்புகழ்-சொல்லுவதும்போச்சோ. (க)
அங்கமுழுந்தனழகுங்குன்றலாச்சோ! ஆ! ஆ! மன்னவா!
ஆனாலுமிக்கெதி-வானோருந்தேவருந்
தானானவேந்தருங் காணுரொன்னாளிலும் (உ)

சுடு

Sequence of pages changes from this page

குரலுமாறிக்கூறுகின்றீரேயென்கோவே! ஆ! ஆ! மன்னவா!
கோடிசூரியரும்-கூடிவொருமிக்க
நாடியவாற்முகம்-வாடிவதங்கவே. (து)
என்னைத்தொட்டுமென்னசுகம்பெற்றீர்-கோவே! ஆ! ஆ! மன்னவா!
ஏதென்றுசொல்லுவேன்-பாதகியைத்தொட்ட
வாதனைபாலல்லோ-தீதுகள்வாய்த்தது. (து)
புருஷர்சுகம்பெண்டாலென்பார்மொழிநாதா! ஆ! ஆ! மன்னவா!
பூமியிலேபாவி-சாமிநானேயாகும்
நேமிக்குமிக்கெதி-காமிக்கேவாய்த்தது. (து)
மனைவிபாவமனுளனுக்கென்பரோகோவே! ஆ! ஆ! மன்னவா!
மாபாவிநானும்-ஆ! ஆ! ஆ! இத்துயர்
ஒ! ஒ! ஒ! நீர்பட-சாகாமல்நான்பார்க்க. (து)
பத்தாவெனுயிர்பாருன்பாதத்திலேமடிப்பேன்! ஆ! ஆ! மன்னவா!
பார்த்தவருமேச-காத்தவரும்ரோச.
மூத்தவளாமென்னை-சேர்த்தபாவமிதோ. (து)
உம்மால்மாண்டாலுலகிற்கீர்த்தியாங்கோவே! ஆ! ஆ! மன்னவா!
உத்தமாவென்னைகயை-நத்திப்பிடிக்காதே
செத்தாலும்நானுஞ்சீர்-பெத்திடவாழ்த்திடும். (து)

## சத்தியகீர்த்தி தரு.

இராகம்-முகாரி-தாளம்-சாப்பு.

பல்லவி.

ஆ! அம்மணி! உனக்குத்துன்ப மமைந்ததோவம்மணி!

அநுபல்லவி.

பாரினினியொரு பாதகமறியாயே
பாவிஅயனிப்படி பரிவாயெழுதினனோ. (ஆ)

சரணங்கள்.

மதிதயநற்றவத்தில் மண்ணிற்பிறந்தாயையோ
மன்னரரிச்சந்திரனை மகிழ்வாய்மணந்தாயையோ
வேதியருமுனிவர்கள் விளம்பினர்சுபமென்றே
வேணநீயித்துன்பம் விழுந்லிதுவும்நன்றோ. (ஆ)
சந்த்ரன்றனைப்பழிக்குஞ் சார்ந்தவழகெங்கே
சரிமலறந்தோவுடல் சாங்கம்குறைந்ததிங்கே
இந்தவிதிகாணவோ வியற்றினாய்வெகுநோன்பு
என்னசெய்குவேன்பால னிறந்தானுனக்கார்தெம்பு. (ஆ)
சதிகாரகவுசிகன் சனியனாய்த்தோன்றினான்
சர்வமுந்தான்பறித்தே சன்யாசராக்கினான்

பதிபிரிந்தாற்றுணை　பாலனென்றிருந்தேனே
பாவிதெய்வமுமிந்தப்　படிசெய்யவறிந்தேனே. (ஆ)
தாயைப்போலென்றனைத்　தான்வளர்த்திட்டவம்மா
தனையிம்புரண்டுநீயுந்　தானழுகாதேசும்மா
சேயைப்பிரிந்தசோகஞ்　சித்தத்தினிவிடாதே
சிவனருளாலிது　சீக்கிரமழியும்வாதே. (ஆ)
வேந்தன்றுயரைமாற்றி　வேண்டுந்திறமுரைப்பாய்
விளையாட்டிவ்வாவென்று　விரைவில்மனைக்களிப்பாய்
ஏந்தலும்நீயுமம்மா　வித்துயருந்திட
இறக்காமலனுமே　யிருந்தேனேயுயிருடன். (ஆ)

சந்திரமதி விருத்தம்

வேணவேசத்தியகீர்த்தி விப்பிரன்விதித்தவாறு
தோணுவாயானேதோஷி தோன்றலுமென்னைமணந்தே
வீணிலனேகதுன்பம் விளைந்ததுசுடலைகாத்தற்
காணப்பாதுணையாய்நீயுங் கஷ்டமுற்றனையோபாலா.

(சங-வ-ம்) அப்பாசத்தியகீர்த்தி? அரசரெனைக் கைப்பற்றியபின்னனேகதுன்பங்களனுபவிக்கலானார், நீயும்கூட்துன்பப்படலாச்சுதோ அப்பா.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-சாமா-தாளம்-சாப்பு.

ஐயோபாலனே அருமைசீலனே!
　அயர்ந்துபடுத் தாயோடா!
　அடுத்தாயோடா! துடித்தாயோடா
　விடுத்தாயோடா! அடாமகனே
ஆனையோ-பாவி-நானையோ-மாண்டு-போனையோ-போ-போ.
சேயாநீயுமே-செங்கோலாளவே
　செப்பியதும்போச்சே
　திங்குமாச்சே-காங்கலாச்சே
　வாங்கலாச்சே-உயிர்மகனே
சேயனே-தனி-நேயனே-கனி-வாயனே-வா-வா.
பத்துவயதில்-பெற்று அரசை
　பற்றியிருப்பாயென்றே
　படித்தனரோ-நடித்தனரோ
　விடித்தனரே-அடாமகனே
பாவியோ-நான்-தோஷியோ-குல-துரோகியோ-து-து.

ஒகோஷமந்தனே-சாகானென்னவே
உரைத்தமொழிபோச்சோ
உனக்காச்சோ-எனக்கேச்சோ
முடிவாச்சோ-அடாமகனே
உற்றதோ-தய-ரிட்டதோ ஆசை-விட்டதோ-வி-வி.
அப்பாநெருப்பில்-ஒப்பியேவிழு
கப்பிநடந்தையடா
துடந்தையடா-விடந்தையடா
தொடர்ந்தையடா-அடாமகனே
ஐயையோ-நூல்-பொய்யையோ-விதி-மெய்யையோ-மெ-மெ.
இந்தவிதிக்கோ-சந்தமா நூல்களும்
விந்தையாய்நீபடித்தாய்
இந்துமடித்தாய்-அந்தமொடித்தாய்
பந்தநொடித்தாய்-அடாமகனே
இப்பவே-காண்பூதெப்பவே-மன-மொப்பவே-ஒ-ஒ.

(அரி-வ-ம்) அப்பாதேவதாசா? என்னடா பேசாமலிருக்கின்றாய், உன்னைப்பெற்றது இந்தச்சிறுவயதிலிறக்கவாமகனே.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-சுத்தசாமா-ஏகதாளம்.

அப்பாநீமாண்டாயோ அன்னையைவேண்டாயோ
தப்பிலிநான் துரோகி சண்டாளனேடாபாலா. (அ)
அஞ்சலியென்றோனை அதட்டிச்சொன்னேனேவுனை
கொஞ்சம்வயதிலுன்னை கொள்ளைகொடுத்தேன்பாலா. (அ)
நீநிலையைவிட்டு நெறியிலாவழிதொட்டு
ஓதினரியாயமோடா உன்னையிழந்தேன்பாலா. (அ)
எண்ணுதவெண்ணமையா வெண்ணியிருந்தேன்றய்யா
புண்ணுக்கியெங்களையே போனாயேமாண்டுபாலா. (அ)
கொள்ளியெனக்குவைக்க குமானிருந்தாய்தக்க
துள்ளியாடும்காளில் துரைநீமாண்டாயோபாலா. (அ)
அரசுக்குரியகடை அழகும்படைத்தாய்விடை
பாமனெனைச்சினந்து பறித்தானேயோபாலா. (அ)
உன்னாலெனதுகுலம் ஓங்குமென்றேனேநலம்
இன்னாளெங்களைவிட்டு இறந்துபோனாயோபாலா. (அ)
முறிசெய்ததந்தைமுகம் சரியாமோபார்க்கலகம்
மரியாதையலவென்று மாண்டுபோனாயோபாலா. (அ)

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-முகாரி-தாளம்-ஆதி.

உன்னைப்பெறவீட்டிலே-மகனே!
உருகித்தவங்காட்டிலே-அடடா!
தன்னைச்செய்தேன்மேட்டிலே-மகனே-ம-ம
சதிமோசஞ்செய்தாயடா.
கம்பம்நட்டுநானுமே-மகனே
கைலையனைத்தானுமே-அடடா
கும்பிட்டதும்வீணுமே-மகனே-ம-ம
கொள்ளைகொடுக்கவோடா.
வீம்புசெய்யுமுனியுமே-மகனே
விரட்டக்கூடசனியுமே-அடடா
பாம்புதீண்டதனியுமே-மகனே-ம-ம
பறந்ததோஆவியடா.
போயிவாறேனென்றுமே-மகனே
புகன்றுயென்முன்னின்றுமே-அடடா
தாயைவிட்டுமின்றுமே-மகனே-ம-ம
தனியாய்மாண்டாயோபாலா.
என்னபழிசெய்தேனோ-மகனே
எவர்சிசுவைகொய்தேனோ-அடடா
சொன்னமொழிதவிர்த்தேனோ-மகனே-ம-ம
சொக்கவேபாம்பாற்பாலா.
முன்னோர்செய்தபாபமோ-மகனே
முனிவரிட்டசாபமோ-அடடா
மன்னர்மனஸ்தாபமோ-மகனே-ம-ம
மாண்டிட்டாம்பாற்பாலா.
போகேனென்றுதடுத்தாயே-மகனே
பூசுரன்பால்விடுத்தாயே-அடடா
நோகமனக்கெடுத்தாயே-மகனே-ம-ம
நுண்ணறிவெங்கேயடா.

சத்தியகீர்த்தி தரு.

இராகம்-கமாஸ்.தாளம்-ஆதி.

பல்லவி.

ஏனிந்தப்படிமனக்கலக்கலானீர்மன்னா
இறந்தசிறுவனுமேபெழுந்துவருவானோதான். (ஏ)

அநுபல்லவி.

தானிங்கத்துயரதைத் தரித்துமனங்கலங்கிற்
றுனுமேதுரைசெய்வேன் தரணிபுகழுமன்ன. (ஏ)

சரணங்கள்.

நீர்மேற்குமிழியைப்போ னிலையிலாவிவ்வுடல்பாரீர்-மெத்த
நெறியாயிருப்பதுவே தரையிலழியாதெனத்தேறீர்
ஆறுநாளுண்டே எழுதேபுரண்டிடினும்
அயன்விதியைத்துடைக்கப் பயன்றருகுமோபாரீர். (ஏ)
சத்தியமெனுந்தனுசைக்கரத்திற் றரித்தவருமானீர்-சற்றுஞ்
சார்பிலாப்பேதைபோல்ஜலங்கண்ணில் நிரப்பிடலானீர்
நித்தியநிராமய நிர்மலநிஷ்கள
நிருபனுமருபனுந் தருமனைமறந்துமே. (ஏ)
வருத்தமும்நீங்கிடத்தரித்திர மகன்றிடக்காலம்-இதோ
வந்ததுகாசிவாழ் சுந்தரனருளினால்-ஞாலம்
விரித்தவரசுவாழ்வு மரித்தபுதல்வன்கரி
யுரித்தோனருள்புரிந்தாற் றரித்திடுவீர்வேந்தே. (ஏ)

சந்திரமதி விருத்தம்.

கிரிதனைநிகழ்த்துந்தோளா கிளரொளியுண்மைத்தாளா
அரிபருமகனைக்கண்டே யழுவதும்நீதிதானோ
அரிமகனெழுத்தைநம்மா லழித்திடப்போமோநாதா
பிரியமாய்நீரிக்குற்ற பெருமையையுரைசெய்வீரே.

(சங்-வ-ம்) கேளுமென் பிராணநாதா ? பிரமன்விதியைக் கடக்கப் போமா, மாண்டமகன் வருவானு, நீரிவ்விடம் வந்தகாரணஞ்சொல்லுவீர் சுவாமி.

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்

இராகம்-காபி, தாளம்-ஆதி.

என்னசொல்லுவேன்கண்ணே-இதோ எனக்குவந்தகெதியை
முன்னமுனையேவிற்று-அந்த முனிகடன்தீர்த்தபின்னே. (என்)
தாகன்கூலிக்காயென்னை-பா தகிக்குமொழியுரைத்தான்
கரங்கூப்பித்தன்னைவிற்க-வங்கு கதறினன்மந்திரியவன். (என்)
தடுக்கவெனையேவிற்க-வுன் தனையன்கூவினன்தோட்டி
கொடுக்கப்பொன்சம்மதித்தே-யவன் கொண்டானெனையடிமை.(என்)
இவனையென்தாயுந்தந்தை-மற்றும் இணையிலாத்தோழனுமே
அவனுமென்னுடனிங்கு-பல அவதிப்படவுமானன். (என்)

## சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-ஆஹிரி, தாளம்-ரூபகம்.

அரசர்கெலாமொரு அதிபதியாயிருந்தமன்னவா-உமது
உரமுமழகுங்குன்ற உகந்தெழுதினனோதான்மன்னவா!
சிரமதில்மணிமுடி சீருடன்தாங்கிருந்தமன்னவா-இந்த
பறக்கந்தைதன்னையே பணிந்தேயுடுத்தலாச்சேமன்னவா!
முத்துவடம்மாலை மோகனமணியுந்தோள்மன்னவா-இந்த
பொத்தகம்பளந்தாங்கப் பொறுத்திரோமுணந்தான்மன்னவா!
அவனிமகிழச்செங்கோ லணிந்திட்டவுமதுகைமன்னவா-யாருங்
கவனியாவெட்டியன் கைக்கோலேந்தவுமாச்சே-மன்னவா!
விலைமதியாமடியும் வெண்பட்டுடுத்துமரைமன்னவா-என்ன
தலைவிதியோவிந்தத் தட்டிபூண்டலானீர்மன்னவா!
மஞ்சத்திருந்தென்னுடன் மகிழ்வாய்சயனித்தமன்னவா-ஆ-ஆ
நெஞ்சம்பதறித்தூங்கா நீச்சக்குடிசையாச்சேமன்னவா!
வேணுநாதமும்வீணை வெகுவாய்க்கேட்டிட்டமன்னவா-இங்கு
பூணுதோபேய்களும் பூதத்தொனிகள்கேட்கமன்னவா!
கந்தபரிமளங்கள் காலமும்பூசுமுடல்மன்னவா-சவம்
வெந்தசாம்பலுங்கப்ப விதிவந்ததுவுங்காலம்மன்னவா!
அதிபயவிநயமா யரசர்பணியும்பாதம்மன்னவா-இங்கு
மிதிக்கச்சுடலைசாம்பல் மிருடனமைத்ததுவோமன்னவா!
தேசத்தரசரேவல்புகழாய்ச்செயவிருந்தமன்னவா-நீர்
நேசமாய்முறிபட்டு நீச்சனுக்காளாயினீர்மன்னவா.

## அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-தேசிகதோடி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஏனழுகிறாய் மாதே ஏனழுகிறாய்.

அநுபல்லவி.

வானுலகில்மரீசன் வகுத்தவிதியிதுவாகும். (ஏ)

சரணங்கள்.

முன்னஞ்செய்தகர்மம்வந்து மூண்டுதிந்ததுயர்தந்து
நன்னிலைமறந்துநீதான் நாயகியுருகலாமோ. (ஏ)
புத்தியிலுயர்ந்தபதி பத்தியிலமர்ந்தசதி
நித்தியமன்றேயிவ்வாழ்வு நினைப்பதுஞ்சரியாமோ. (ஏ)
உன்னைநான்பிரிந்துமகன் தன்னைப்பாம்புதீண்டஜகன்
கொன்றைமலரோனுடைய கோளதன்றிவேறதாமோ. (ஏ)

சொப்பனத்திற்கண்டபூதம் செப்பமந்திரியெனநீபதம்
இப்போதுனேக்கண்டவிதம் இறைவன்செயலன்றியாமோ.(ஏ)
எந்தநாளுமுனேக்காண வெனக்குவாராதெனத்தோண
னொந்தவென்மனங்களிக்க நோக்கினதேபலன்போதும். (ஏ)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

என்னருங்கிளியேமானே யினிப்புளகனியேதேனே
உன்னைநானடிமைசெய்தே யுலகெலாமிழிவுபெற்றேன்
பன்னரும்பாலன்மாண்ட பழிக்குமேயாளாமென்றன்
தன்னைநீகண்டுவாடத் தகுமோதான்தகைமையன்றே.

(அரி-வ-ம்) கேளாய் பெண்ணே? நானுன்னை யடிமைசெய்வித்தது ந்தவிர, பாலனிறந்த பழிக்கும் ஆளானேன், இப்பாவியைப் பார்த்து, நீவிசனப் படப்போமோ அடிமாதே!!!

சந்திரமதி விருத்தம்.

கற்புடையமாதர்கட்குத் தரணிவேந்தே
கணவரலால்வேறு தெய்வங்கருதவுண்டோ
விற்பனமும்புத்திரனுங் கணவரின்றி
வேறுவிதமடைவதற்கு விதியுமுண்டோ
சொற்பமல்லகணவரென்று லென்றன்கோவே
ஜோதியெனும்பரப்பிரம சொரூபமாகும்
நற்றினவர்பதிபெறுவார் கணவர்பாதம்
நாடாதார்நரகடைவர் நாளுந்தேவே.

(சங்-வ-ம்) சுவாமி? உத்தமிகளுக்குக் கணவனே குரு தெய்வமாகும், கணவரைப் பணிந்தவர்கள் பதவிபெறுவர், கணவரை யிகழ்ந்தவர்கள் நரகமடைவர், ஆனதால் உம்மைவிட நான் வேறுகருதேன் என் பிராணநாதா.

சந்திரமதி விருத்தம்.

ஐயையோசாமியுன்ற னசனத்திற்கெந்தவாறு
செய்யவுமானிர்திரேகச் சீரெலாங்குறைந்ததோதான்
துய்யவெண்காளையேறுந் தோன்றலினருளிதாச்சோ
வெய்யிலரனலிக்திட்டீரே வேந்தனேயென்மணாளா.

(சங்-வ-ம்) சுவாமி? உமதுபோஜனத்திற்கேது செய்தீர்? உமது தங்கநிறமானமேனி வாடியதே, சிவத்தினருளிப்படிச்செய்ததோபிராணநாதா.

(அரி-வ-ம்) பெண்ணே? நம்மாலாவதொன்று மில்லை, நீ ஒன்றுக்கும் விசனப்படவேண்டாம், சவத்திற்கிடும் வாய்க்கரிசியை பசுவிற்கிட்டுத் தலைக்கிலடித்துப் புசிக்கின்றேனடிமாதே.

(சந்-வ-ம்) ஐயையோ! என்னையகருக்கு விதி இப்படியும் விதிக்கையா! காசிநாதா! இதுவுமுன்றன் திருவிளையாடலோ! சரி, சுவாமி? இறந்துபோனநமதுபாலனை சீக்கிரம் சுடுவீராகில், நான்தீவரத்தில் ஐயர்வீடு போய்ச் சேருகின்றேன், பிராணநாதா.

### அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

மாதினியுரைப்பேன்கேளாய் மகிபனென்னுடையான
கோதிலான்வாக்குக்கேதுங் குறையதுபுரியப்போகா
வேதியாருகிற்சென்று விரும்பியேபணமுந்துண்டும்
நீதின்றிக்கொணர்ந்தாலன்றிச் செல்வனைத்தகிக்கொணாதே.

(அரி-வ-ம்) அடிபிராணவல்லபி? நேர்ந்தவெலாம் நுகர்ந்தே ஒழிய வேண்டும், நீ உரைத்தமொழியானது என்தேகத்தை நடுங்கச்செய்கின்றதே! மைந்தனெனப்பாவித்து இச்சவத்தைத் தகனஞ்செய்வேனேல் எஜமானுக்குத்துரோகம் செய்ததாகும், அதாவது என் இறைவன் வீரவாகுவின்கட்டணம் கொணர்ந்தாலன்றி சம்ஸ்காரஞ்செய்ய ஒட்டேன், அப்படிச்செய்ய இடம்யான்கொடுக்கில்மீளாநரகம் எய்ப்பது துணிவு, தலைவனைவஞ்சித்த துரோகியேநிலப்பொறை எனப்பெரியோர்புகலுவர், நீரில்குமிழிபோன்ற இந்தயாக்கையை நிலையெனநம்பி நீடூழிகாலம் நரகம் அனுபவிக்க, நடுவின்றித் தீவினைபுரியலாமோ! பிறந்தபோதே இறப்பதுதிண்ணம், "நார்தொடுத்தீர்க்கிலென் நன்றாய்ந்து அடுக்கில் என்" இவ்வுயிர் நீங்கியபின் சரீரம் எப்படியானால் என்ன, அட்டை ஓர்புல்லைத்தொட்டு மற்றொன்றைவிடுவதுபோலும் ஆன்மாவானது ஓர் உடல்புகுதற்கே மற்றொன்றையொழிப்பது உனக்குத் தெரிந்திருந்தும் ஏன் இப்படிபேதமை குணத்துடன்தெரிவிக்கலானாய், மைந்தனிறந்தகொடுமையால் நன்னெறிகளை விலக்கிசெய்யத்தகாதகாரியங்களை நீ செய்யச்சொல்லலாகுமா! தீநாற்றமவீசாநின்ற இவ்வினவுடலுக்காகப் பாவம்செய்வேனோ! ஆவி கூட்டை விட்டுநீங்கின உடன் மாதா, பிதா, சகோதரன், மனைவி, மகன் ஆர்? அடி சந்திரவதனா? இன்னமுங்கவனிப்பாய், அதாவது பூர்வஜன்மத்தில் கொடுக்கவேண்டும் இருணத்தின்சம்பந்தத்தினாலேயே, பசுவும், பத்தினியும், சுதனும், வீடும்நேரும்; இருணம் தீர்ந்தால் உடனே நீங்கும், உலகில் நீங்காத்துணைவர் அறுவர்; யாவரெனில், மனமடங்குதலே மனைவி, பொறுமையேபுத்திரன், வாய்மையே அன்னை, அறிவே அத்

---

முக்கியகவனிப்பு.—ஆரியநேயர்களே? இச்சரித்தையில் ௬௫-வது பாரத்தில் பேஜ் நெம்பர் ௫௧௩, ௫௧௪, ௫௧௫, ௫௧௬, ௫௧௭, ௫௧௮, ௫௧௯, ௫௨௦, இந்த எண்ணுகளிருக்கவேண்டியதற்கு மாறுதலாக ௫௧௭, ௫௧௮, ௫௧௯, ௫௨௦ ௫௨௧, ௫௨௨, ௫௨௩, ௫௨௪ ஆக அச்சிடப்பட்டிருக்கின்றது, இதைக்கண்ணோட்டமிடுமொவ்வொருவரும்சந்தேகங்கொள்ளப்போகா. ஆனால்சரித்தையின் கோர்வை சரியே.

த்ன், அறமேசகோதரன், கருணையேமித்திரன், இவைகள்தான் அழி யாப் பொருளெனவுணர்வாய் கோதே; ஆகலினால் என் வாய்மை விரதத்தைச்சிதைக்காது இன்னே உன்னிருப்பிடஞ்சென்று உன் எஜ மானைவேண்டி பணமும், பிணக்கோடித்துண்டும், கொணர்ந்து கொ டுத்தாலொழிய உன்னெண்ணம் இங்கனமுடியாது விரைந்து செல் வாயடி மதிதயன் அருந்தவத்தில்வந்த பெண்ணே.

சந்திரமதி விருத்தம்.

மன்னரேசத்தியந்தன்னை மகாநெறியுடனேகாக்கு
முன்னருட்படியேயோடி பொருநொடிக்குள்ளேவாறேன்
நன்னருமகனையிங்கு நாய்நரியருகண்டாம
லுன்னியேகாப்பீரென்ற னுபயபாதங்கள்போற்றி.

(சந-வ-ம்) நெறிபிசகி காரியமாகவேண்டுமென்னுங்கருத்துடையவ ளல்லேன், விதிப்படியேசெய்வதுதான் அழகு, புகழ், கீர்த்தி, மேலா னபதவி இவற்றிற்கு மூலமாகும், சுவாமி? அப்படியேபோய் வாங்கி வருகிறேன், அதுவரையில் மகனை நாய், நரிகள், பேய், பூதம், இதுக ள் தீண்டாமற்பாது காப்பீரென்னாண்டவனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

கேளடிமாதேநான்றான் கிளறுநன்மொழிதானிங்கு
தாளவேவெகுநேரந்தான் றடையதுபுரிவையாகில்
கோளடியிங்கேதங்கிற் கோவிப்பாரெந்தணண்ணல்
தோளதிற்கோலேயேந்தித் தோகையேசொல்வேன்கண்டாய்.

(அரி-வ-ம்) பெண்ணே? நீ சீக்கிரம்வரவேண்டியது, நேரஞ்செய் வையாகில் சுடுகாட்டைச்சுற்றிப் பார்க்கப்போய்விடுவேனடி மாதே.

(சந்-வ-ம்) அப்படியேசெய்யுமென்பிராணநாதா.

சந்திரமதி விருத்தம்.

பிள்ளைபோலெங்களோடு பிரியாமலன்பமெல்லாங்
கொள்ளவேயுடந்தையான குணமுளமந்திரிகேளாய்
வள்ளலிவ்விடத்தைவிட்டே வகன்றிடினீதானின்றே
தெள்ளரும்பாலன்றன்னைத் திறமுடன்காப்பாயப்பா.

(சந்-வ-ம்) அப்பாமந்திரி? ஒருவேளை நமதரசன் சுடலையைப்பார்க் கச் சென்றால், நீ என்மகனைப் பத்திரமாய்ப்பார்த்துக் கொள்ளுவாயப் பா சத்தியகீர்த்தி.

சத்தியகீர்த்தி விருத்தம்.

அன்னையேயென்னைப்பெற்ற வருந்தவப்பொருளேயம்மா
மன்னவரடிமையிந்த மயானத்தைச்சுற்றவேண்டி
யுன்னியேநடப்பாராகு மொருவனுமிருந்துபாலன்
றன்னையேபாதுகாப்பேன் றடம்பற்றிப்போவீர்தாயே.

(சத்-வ-ம்) தேளாயம்மணி? அரசரடிமையானதால், சுடுகாடுசுற்ற

ப்போனாலும், நானிருந்துபார்த்துக் கொள்ளுகிறேன், சீக்கிரம்வருவா யம்மணி.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாகச் சந்திரவதியம்மன் காற்பணமும், துண்டும், வாங்கவேதியன்வீட்டிற்குத் திரும்பக்கண்ட கௌசிகன்முன்னுதாகக் காலகண்டையரிடம் வருகிறவிதங்காண்பீர் கள் கனவான்களே.

விஸ்வாமித்திரன் தரு.

இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஓடிவந்தானே விஸ்வாமித்திரன் ஓடிவந்தானே.

அநுபல்லவி.

தேடிவேதியன்றன் திவ்யமாளிகைபுக்க
நாடியிதேசமயம் நான்கெலிப்பேனென்று. (ஓடி)

சரணங்கள்.

பாலனிதோமாண்டான் அடிமைத்தோட்டி
பணமின்றிச்சுடத்தீண்டான்
காலகண்டனைக்கண்டு களிப்புடன்தான்பேசி
காசுந்துண்டதைக்கேட்கிற் கடிந்துக்கொள்ளெனச்சொல. (ஓ)
வெறுங்கையோடிவள்வந்தால் சவத்தைத்தோட்டி
வேண்டிடச்சுடக்கணிக்தால்
தருமமறந்துசத்தியத் தன்மையைவிட்டானென்றே
தாண்டிவிண்ணுலகேகித் தானுரைப்பெனென. (ஓடி)
நல்லசமயமீதே-பந்தயத்தை-நான்கெலிக்கிப்போதே
வல்லமையினாலந்த வதிஷ்டன்றன்கெர்வத்தை
வாட்டியென்புகழெங்கும் வழங்கச்செய்வேனென்று. (ஓடி)

(விஸ்-வ-ம்) எனக்காக சொர்க்கத்தைவிட்டு காசிபட்டணம்வந்த அக்கினிபகவானே? போற்றி போற்றி.

(காலகண்டன்-வ-ம்) வாரும் வாரும், விஸ்வாமித்திரரே? இன்னே ரத்திலிவ்வளவு துரிதமாய் நீர்வந்தகாரியம் சொல்லும்முனியே.

(விஸ்-வ-ம்) சுவாமி? நீர்காட்டிற்கனுப்பியபாலனைபாம்பினால்வதை செய்தேன், அதைக்கண்டு தாயுந்தந்தையு மழச்செய்தேன், இப்போ துசுடுகூலி பணம் கேட்கவருகிறாள், நீர் ஒன்றுங்கொடுக்காவிடில் அ வன்தன்னுடைய மகன்தானேயென்று சுடுவானந்தச்சமயம்பார்த்து, கிலேபிசகினனென்று மெய்ப்பித்துவதிஷ்டனைக் கெலிப்பேன் சுவாமி

(கா[illegible]ண்டன்-வ-ம்) கேளும்விஸ்வாமித்திரமுனியே? நீர் சொன் னபடியேசெய்வேனன்றி வேறுசெய்யேனம்பும் இரிஷியே.

(விஸ்-வ-ம்) சந்தோஷம் போய்வருகிறேன்சுவாமி போற்றி.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாக விஸ்வாமித்திரன் காலகண்டருக்குரைத்து, அக்குடக்கும்சங்கதிகளை யறிந்து கொள்ள மறைந்திருக்குஞ்சமயத்தில், சந்திரமதி புலம்பிக்கொண்டு வருகிற விதங்காண்பீர்கள் சபையோர்களே.

சந்திரமதி தரு.

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி.

பல்லவி.

என்னவிதி-என்னகாலம்-எங்களுக்கே-வந்தகோலம்.

அநுபல்லவி.

மன்னனரசிழந்துமையோ மயானங்காத்திடவந்த. (எ)

சரணங்கள்.

என்னையேபிரியவை ரீன்றநற்புதல்வன்சாக
தன்னிகரிலாவேந்தர் தானடிமைத்தோட்டியாக. (எ)
ஆதிசிவமேயுனக்கு அடியரென்னகுறைசெய்தோஞ்
சோதித்தாயென்றுரைதன்னை சொல்லும்நீச்சனுக்காளாக்க. (எ)
கோடிசூர்யர்போன்றமேனி குன்றியேயுடலும்வாடி
நாடிநாற்றச்சுடலைதன்னி ஞகன்வீற்றிருக்கலான, (எ)
பாலன்மாண்டதுயரைவிடப் பதிமடங்கதிகமாமென்
லோலனுற்றகெதிகண்டென் னுயிர்விடாதிருந்தேன்பாவி. (எ)
வேதியன்கொடியனேயோ விரைவினிற்கொடானேதுண்டும்
பாதிமதிபூண்டோய்காசும் பாலனைச்சுடவேஐயோ. (எ)

சந்திரமதி விருத்தம்.

ஐயரேயென்றன்றன்னை யடிமையாய்க்கொண்டுமெத்த
நொய்புருப்படியேகாக்கும் நோன்பினில்மிக்கோய்போற்றி
பையவேமாண்டோன்றன்னை பற்றியேசுடலைபோனேன்
கையினிற்காசுந்துண்டுங் காட்டெனத்தடுத்தான்றோட்டி.

(சந்-வ-ம்) சுவாமி? நான்காட்டிற்சென்று மகனைக்கண்டெடுத்து, சுடுகாட்டிற்குச்சென்றேன், இங்கே கால்பணமுந்துண்டுங்கொடுக்காமல்சவம் சுடக்கூடாதென்று தோட்டிதடுததான், வேதியரே, கால்பணமும் துண்டுந்தயவுசெய்வீரையரே.

காலகண்டய்யர் விருத்தம்.

ஏதடியுரைத்தாய்சந்தி யிங்கேதுபணமுஞ்சீலை
ஓதடிநேக்குமென்ன வுபாயங்கள்கற்றநீலி
சாதனைபுரியவேண்டாஞ் சாதிக்கேனேதுநோக்கு
வேதனையிட்டாய்ரொக்கம் வீணச்சேயோடிப்போடி.

(காலகண்டன்-வ-ம்) அடிசந்தி? என்னிடம் பணமேது? துண்டேது? கேக்குபணம் கஷ்டமாச்சுதேயன்றி வேறென்னயோடி போரயோ.





சந்திரமதி விருத்தம்.

கோபங்களென்றன்மீது கொள்ளவுந்தகுமோசுவாமி
பாபங்கள்செய்ததாலென் பாலனும்பாம்பால்மாண்டான்
சாபனைவிடுத்தேயையா சாண்துணிபணங்காலீந்தாற்
றூபமதின்றிச்சுட்டுன் றாளடிபணியமீள்வேன்.

(சங்-வ-ம்) சுவாமி? நான்பாவி, நீர் துண்டுங்காசுங்கொடுத்தால் சவத்தைச்சுட்டு சீக்கிரம் ஓடி வருகிறேன்; இவ்வளவு அருள்புரியவேண்டும் ஆண்டவனே.

காலகண்டய்யர் விருத்தம்.

கொடுத்திடேனென்றும்நோக்கே கூச்சலிங்கிடுவையாகில்
படுத்துமேயிருக்குஞ்சேஷி பதைத்தென்மேற்கோபங்கொள்வா
ளெடுத்துநீசவத்தையங்கே யிருக்குமோராருவிதன்னில்
விடுத்துமேயோடியிங்கே விடியுமுன்வருவாய்சந்தி.

(காலகண்டன்-வ-ம்) அடிசந்தி? நான் ஒன்றுங் கொடுக்கமாட்டேன், நீ ஓடிப்போய்சவத்தை ஒருஜலம் ஓடுகிற ஓடையில் எறிந்துவிட்டு, சீக்கிரம்வருவாயடிசந்தி.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-சாமா-தாளம்-சாப்பு.

என்னைமுறிகொண்ட-நன்னவாதோட்டியுங்
கன்னமிகப்படித்தான்
எனைதடுத்தான்-சினந்தொடுத்தான்
மனங்கடுத்தான்-தனங்கொடுத்தான்
ஏற்றுவேன்-சுவாமி-போற்றுவேன்-சு-போ-பே.

காலகண்டய்யர் கண்ணிகள்.

இராகம்-இந்துஸ்தானி-காபி-தாளம் ஆதி.

ஏற்றவும்வேண்டாமடி-என்றன்பணம்போச்சு
வந்ததுவேயேச்சு
சாற்றுமொழிவிடடி-சண்டாளி நீ-ஆ-ஆ சண்டாளி-நீ
ஓ! ஓ! சண்டாளிநீ-சார்ந்துமடத்திருப்பாய்.
சங்—இருக்கத்தடையுண்டோ-மரித்தமகனையே
எரிக்கத்தடையாச்சே
இழிவாச்சே வழியேச்சே
சுழிபோச்சே பழியாச்சே
ஈகுவாய்-துண்ட-மீகுவாய்-காசும்-ஈ-ஈ.
கால—ஈவதுமில்லையடி-என்னிடந்துண்டேது
நன்னியகாசேது

ஆவதுவொன்றேயடி-சண்டாளிநீ-ஆ-ஓ.
அடிமையெதிர்க்கலாமோ.
சங்—எதிர்மொழிபேசிட-சதுர்மறை ஐயரே
என்னுற்றுணிவாமோ
இனியாமோ-கனிவாமோ
சனிபோமோ-கனியாமோ-ஐயா
எண்ணிடேன் தடைபண்ணிடேன்-த-ப-ப:
கால—இழிவதுமேதடி யிருக்கப்பாவிமாண்டால்
பெருக்காச்சுழிகொண்டால்
பழிவந்துசாருமடி-சண்டாளிநீ-ஆ-ஓ
பத்திரம்வாய்மூடடி.

சந்திரமதி விருத்தம்.

தெய்வமேயிதவுமுன்றன் றிருக்கூத்தோவறியேனென்றன்
கைதவப்பாலன்மாண்ட கலக்கத்தினதியதாக
மொய்யெனத்தோட்டிக்கீயும் முழத்துண்டுபணங்காலின்றி
தொய்புறவைத்தாயென்ன நோன்பதுநோற்றேனுதா.

(சங்-வ-ம்) ஓ! பரமசிவமே! என்பாலன் பாம்பால்மடிந்தும், தோட்டிக்குச் சேரும்படியான கால்பணம் முழத்துண்டுக்கும், கெதியில்லாமல் தவிக்கவிட்டாயா! ஓ! தெய்வமே.

காலகண்டய்யர் விருத்தம்.

அன்னுடிசந்தியுன்ற னானுங்கொர்வியன்றே
சொன்னடிபொய்பேசாத சூரத்தாலுனேயேவிற்றான்
என்னடியிண்டுநீதா னிசைந்துபொய்யுரைக்கச்செய்தா
லின்றெடிக்காசுந்துண்டு மினித்தரவிசைவேன்கொள்வாய்

(காலகண்டன்-வ-ம்) அடிசந்தி? உன்னும்பிடையான் பெய்பேசே னென்ற அகங்காரங்கொண்டு உன்னை அடிமைசெய்தான், இப்போதாகிலும் பொய்பேசச் செய்வாயாகில் பணமுந்துண்டுங் கொடுக்கிறேன்.

சந்திரமதி விருத்தம்.

சத்தியத்தைநிலைநிறுத்தவேண்டுமன்றிச்
சாரமிலாப்பொய்யுரைக்கின்வருவதேது
புத்திரனுமாண்டிட்டான்சவத்தைநானே
புதைத்தாலுமெரித்தாலுமொன்றேயாகும்
நத்தியிதற்காய்ப்பொய்யை நாவாற்பேசி
னுய்க்னேயார்மதிப்பார்தரணிமீதி
லெத்திசையும்புகழோங்கநிலையினிற்போ
மிறந்தவனேயான்கருதேனினிவாய்த்தானே.

(சங்-வ-ம்) சுவாமி ? சத்தியம்விட்டுப்பொய்பேசில் வருவதேது, குழந்தைபிறந்தான், இறந்தவனை சுட்டாலுஞ்சரி, எறிந்தாலுஞ் சரியே யாகும், இதற்காக பொய்பேசச்செய்வதுதகாது சுவாமி.

பொது விருத்தம்.

மாதுரைத்தவுறுதிதனைக்கேட்டேயங்கே
மறைந்திருந்தவுசிகனு மனம்நடுங்கி
ஏதுயிவர்பாலனுக்காய் மனமிரங்கி
யியம்பிலார்பொய்யெனவேயெண்ணிவேறு
சூதுசெயக்கருதியவனடவியுற்றே
சொல்லொணாத்துயரமதுவருத்தநெஞ்சை
வாதுபுரிந்திடவிளைத்த சொல்லுக்காக
வாடிவானினிவேறு தேடுவானே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்விதமாகச் சந்திரமதி காலகண்டருக்குச்சொன்ன உறுதிமொழி கேட்டிவர்கள் பிள்ளை பிறந்ததற்காகமனந்தளரமாட்டார்க ளானதால், நாம்வாய்க்கொழுப்பால் செய்துகொண்ட பந்தயங்கெலிக்க வேணுமென்று வேறு உபாயந்தேடிச் செய்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

விஸ்வாமித்திரன் தரு,

இராகம்-கல்யாணி, தாளம்-ஆதி.

பல்லவி.

வருவாய்வைகுந்தா-என்றனை நாடி-வருவாய்வைகுந்தா

அநுபல்லவி.

கருதித்தொழவேயன்று-கருணைவாக்கீந்தவாறு. (வரு)

சரணம்.

அமரர்க்கருளளித்தநேயா-முறையிட
ஆனையைக்காத்தளித்த தூயா
சமரசமாகவண்ட-சராசரமாளுந் தேவே
சாற்றித்துதிகையேற்றி சரணமடைந்தேனிங்கு. (வரு)

(விஸ்-வ-ம்) சுவாமி ? அண்டினபேரை ஆதரிக்கவேண்டிய உபாய தந்திரங்களுஞ்செய்து காப்பாற்று மாயாவதாரியே போற்றி.

(மகாவிஷ்ணு-வ-ம்) விஸ்வாமித்திரமுனியே ? என்னை யழைத்தகாரியத்தைத் தெரிவிக்கவேண்டும் இரிஷியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

இக்காசிவேந்தனின்றிட்டபால
னிருக்கிருன்மஞ்சத்தினித்திரைபூண்டு

திக்கென்னீர்கள்ளனைப்போற்சென்றுமந்தச்
சிறுவனையேகவர்ந்தவன்றன்னுயிரைப்போக்கி
பக்குவமாம்பணிகளெல்லாங்கழட்டிக்கொண்டப்
பாவைசந்திரமதிமிதிக்கும்பாட்டைதன்னில்
தக்கிடவேயெறிந்தகன்றுபோகவேண்டுந்
தயாபரனேயீதுசமயந்தற்காப்பாயே.

(விஸ்-வ-ம்) சுவாமி ? இந்தக் காசிராஜன்மகன் சுதாகரனுனவன் இ ய்பக்கத்தில் மஞ்சத்தில் நித்திரை செய்கிறான், நீர் திருடனுகச்சென் று அவனை யெடுத்துவந்து பணிகளைக் கழட்டிக்கொண்டு, உயிரைப் போக்கி சந்திரமதிவருகிறவழியிலெறிந்து போகவேண்டும் நாதனே.

(மகாவிஷ்ணு-வ-ம்) அப்படியேசெய்கின்றேனுகிலும், நீகெலிப்பது வருத்தமென் றறிவாய் முனியே.

(விஸ்-வ-ம்) ஆண்டவனே ? என் புத்திக்கும் அவ்வாறுதான் எட்டு கிறது, ஆகிலும் இன்னமும் சற்று முயற்சி செய்துபார்க்கிறேன் சு வாமி.—(மகாவிஷ்ணு நீங்கல்)

பொது விருத்தம்.

கன்னக்கோல்வில்லுமம்பு கத்திரிவாளுமீட்டி
வன்னமுட்டடிகளேந்தி வாகுடன்காளிபூஜை
தின்னமாய்முடித்துக்காசித் தேவன்றனரையைத்தேடி
யுன்னதமாயக்கள்ள ரோடியேவருகின்றாரே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? காசிராஜன் பள்ளியறையில் சய னித்துக்கொண்டிருக்க, விஸ்வாமித்திரன் கோரியபடி மகாவிஷ்ணு, வாள், கதை, சங்கு, சக்கரங்களைத் திருடராக்கித் தானவர்களின் ற லைவனைப்போல் ரூபந்தரித்துக் காசிபன்மகனைக் கவறவருகிற விதங்கா ண்பீர்கள் கனவான்களே.

## திருடர்கள் வருந் தரு.

இராகம்-மத்தியமாவதி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

திருடர்நாங்களே பொல்லாத் திருடர்நாங்களே
பெங்களூர்திருடர்நாங்களே தெற்கித்தித்திருடர்நாங்களே.

அநுபல்லவி.

வறுமையுற்றுமே வன்பொருளமைத்த
வம்பர்கள்வீட்டினி லம்புபோற்பாய்ந்திடும். (திரு)

சரணங்கள்.

கோரைமீசைதனைமு றுக்கி-கண்டோர்
குலைநடுங்கிட விறுக்கி

ஊரைவலமாகவேரிக்கி-நல்ல
　உண்டைவிற்கன்னக்கோல்பெரிக்கி
யாரைமறந்தாலு-மாங்காரங்கொண்டோரை
யடித்துத்தள்ளிவிட்டை யிடித்துக்கொள்ளையிடுங். (திரு)
காலபாசமதைத்தள்ளுவோம்-மதுக்
　கண்கள்தோற்றமலேகொள்ளுவோம்
சிலமுறைப்புத்திவிள்ளுவோம்-தீயர்
　சிந்திக்கவர்பொருளள்ளுவோம்
வேல்னருளினல் வித்தையுணர்ந்தோரை
வேண்டிப்புகழ்ந்திதோ தாண்டிப்பணிந்திடுங். (திரு)
உத்தமர்பொருளை யெடுக்கோம்-லோபி
　ஊராள்வோனுலும்விடுக்கோம்
சத்தியன்வாசலை யடுக்கோம்-நயாச்
　சண்டாளரைவிட்டுப்படுக்கோம்
செத்ததோரன்னியர்-செல்வங்கவர்ந்திடும்
சிரிலாப்பாதகர் பேரினைத்தூஷிக்குங். (திரு)
இச்சபையோங்கிடநடிப்போம்-எங்கு
　மெங்கள்பெருமையைவிடுப்போம்
அச்சமில்லாமலேதுடிப்போம்-மெத்த
　அன்புடனிக்கதைபடிப்போம்
மெச்சத்தக்கீராக மெட்டுகளமைத்த
மித்ரன்சுப்பராயன்-மேன்மையையேற்றிடும். (திரு)

(தலை-திரு-வ-ம்) அடேடே தோவிருக்கச் சுளைவிழுங்கியும், துரும்பிலேமறையும் வெறியானும், காலிலேமலையைக் கெல்லியும், கடுகிலே கடலையடக்கியும், இவாளெல்லேலாரும் வந்தார்களா?

(திரு-வ-ம்) எல்லோரும் வந்திருக்கிறார்கள் ஆண்டவா.

(தலை-திரு-வ-ம்) சரி சந்தோஷம், கேளுமப்பா நமக் குயிர்த்துணையாகிய அமாவாசை யிருட்டுக் கிடைத்தும், நாமோடிவந்த காரியத்தை முடிக்காமலிருக்குங் காரணஞ்சொல்வீர்க ளப்பா திருடரே.

(திரு-வ-ம்) ஐயா? எங்களாலாகவேண்டிய காரியத்தைச்சொன்னல் இப்போதே முடித்துவருகிறோமையா.

தலைவன் விருத்தம்.

மனமதிற்குரூரமிட்டே யெங்கிடவினிப்பைக்காட்டுஞ்
சினமதுகுடிகொண்டோரே செப்புவேனென்றுகேளீர்
கனமுளகாசிமன்னன் கருத்திடும்பாவன்றன்னை
யினமதாயெடுத்துத்தோண்மே லிக்கணங்கொணருவீரே.

சுஎ

(தலை-திரு-வ-ம்) அப்பா ? கபடமுஞ்சூதும் சத்ரமனதி லடக்கஞ்செ ய்திருக்கும் நேசரே ? காசிமகாராஜன் பிள்ளையானசுதாகரனேயிங்கெ த்தி லெடுத்தோடி வருவீர்களப்பா.

(திரு-வ-ம்) ஐயா ? நீர் சொன்னகாரியஞ் செய்யத்தடையிராது, கா சிமகாராஜன் மனைக்குள் எப்படிச்செல்லேவா மையா.

(தலை-திரு-வ-ம்) அப்பா தோழர்களே ? இந்தச்சொக்குப்பொடியை கோட்டையின்பேரில் தூவினால் ஒருவரு மெழுந்திருக்கமாட்டார்கள், அரசனிருக்கும் பள்ளியறைசேர்ந்து கதவிற்கொஞ்சம்பொடி [illegible]த்தா க்கில் ஆதுவுந்திறக்கும், உள்ளே நுழைந்து பணிகளுடனே பாலனைக் கொண்டு வாருங்களப்பா.

(திரு-வ-ம்) ஐயா ? நீர் சொல்லிய படியேசென்று காரியத்தைமுடி வுசெய்துக்கொண்டு வருகின்றோ மையா. (ஏகுதல்)

(பொது-வ-ம்) சபையோர்களே ? தலைத்திருட னுத்திரவின்படி கள் வர்கள் பொடியைவீசி இராஜன்பள்ளியறைக் கருகிற்சென்று கதவின் பேரிலும் பொடியைத்தூவி யுள்ளேசென்று பாலனையெடுக்கிற விதங் காண்பீர்கள் கனவான்களே.

(திருடர்-வ-ம்) அண்ணே ? பத்திரமாயிதோ தாய்பக்கத்திலிருக்கிற பாலனை நகைகளோடு எடுத்துக் கொள்வீர்களண்ணே.

(மற்றொரு-திருடன்-வ-ம்) அப்படியே யெடுத்துக்கொண்டோம்.

(மற்றொரு-திரு-வ-ம்) சரி, பத்திரமா யோடிவந்து விடுங்களப்பா. (அசையாமல் தோளின்மீது தாங்கிச்செல்லுதல்)

(சுதாகரன்-வ-ம்)—(நித்திரைவிட்டெழுந்து துக்கித்தல்) ஆ ! இ தென்னகொடுமை ! இவர்கள் யார் ! ஐயையோ ! இவர்கள் கள்ளர்க ளைப்போலுங்காணப்படுகின்றதே ! ஆ ! நமதரண்மனையின் கட்டுக்கா வலைக்கடந்து சப்ரகூடமஞ்சமீது அன்னைபக்கலில் நித்திரைசெய்த ந ம்மை யெவ்விதமாய்க்கண்டு கொணர்ந்து விட்டார்கள் ! நம்மை எப் படுத்துவர்களோ தெரியவில்லையே ! அன்றியும் நம்மை தொங்க த்தொங்க எடுத்தேகுங்காரணம் யாதோ தெரியவில்லையே ! சரி, இன் று நமதரண்மனையில் நல்லநாள் கொண்டாடின நிமித்தமல்லவா நம தன்னை மகிழ்ந்து இப்பூஷணங்களைப் பூட்டலானாள் ; ஐயோ ! இந் நகைகளைப் பூட்டும்போதே வேண்டாமென்று வெகுவாய்த் தடுத்தும், கேளாமற்பூட்டினாளல்லவா, சி, வெறிமனமே, ஏன் அன்னைமீது குற்ற ஞ்சாட்டுகிறாய், உலகத்துக்கற்றவாறு எனக்குப்பூட்டி மகிழ்ந்தது சரி யே, நீ எடுத்தேகுங் கள்ளர்மனமகிழப் பேசி தப்பித்துக் கொள்வதே பிழைக்கும் மார்க்கம், இதைவிட்டு வீணிலேன் காலஹரணஞ்செய்கி றாய், சரி, ஐயா ? யாரென்றறியேன், தாங்கள் என்னை எடுத்தேகுங் கார

ணத்தைப் பார்த்தால் கொல்லக் கொண்டேகுவது போலுங் காணுகின்றது யானென்ன செய்வேன்! தாங்கள் பொருளாசை யிட்டல்லோ, என்னை இச்சிக்கலானீர்கள், ஆதலால் தங்களிஷ்டப்படி இதோ இந்நகைகளைக் கழட்டித்தருகிறேன், தயவுசெய்து விட்டுவிடில் இக்காட்டில் என்னுவி பிரியுமளவில் தங்கள் பெயரைச் சொல்லி ஜீவிக்கிறேன் விட்டுவிடுவீர்கள் இதோ பாதம்போற்றினேன் என்னாண்டவா. ஐயோ! இப்படியும் என் விதிமுடியுமா!

(மற்றொரு-திரு-வ-ம்) அடா அண்ணே? இந்த சிறுவனைப்பார்த்தால் எனக்கு மிகவுந் துக்கமாகுதடா, ஏண்டா இந்த தண்டாவில் மாட்டிக் கொண்டோம், மேலும் இவனணிந்திருக்கும் நகைகள் நிமித்தம் வந்திருந்தால், இவன் வேண்டுகோளுக் கிரங்கலாம், அப்படியில்லையே. எதுக்கும் இவனைத் தலைவரிடம் கொண்டுபோவோம், அங்கு அவரால் என்னகட்டளை நேரிடுகோ பார்ப்போம், சரி, அய்யாதலைவரே? இதோ தங்களுத்திரவின்படி காசிராஜன்மகனை யெடுத்துக் கொண்டு வந்தோம், இனி நடக்கும் வேலைக்குக் கட்டளைசெய்தா லத்தப்படி முடிக்கிறோமையா.

(சுதாகரன்-வ-ம்) அ! இவனைப்பார்த்தால் இவர்களுக் கெல்லாம் எஜமான் திருடன்போலுங் காணுகின்றது சரி, இவனை அதிவினையத்துடன்கேட்டு உயிர்பெற்றுச் செல்லுவோம், கபடநாடக சூத்திராவதாரியாகிய மகாவிஷ்ணுவைப் போலிருக்கும் மகானுபாவா? யானோ சிறுவன், இன்னம் பால்நாற்றமும் மழலைச்சொல்லும் மாறவில்லை, இன்னம் மென்மேலும் யான் வளர்ந்து சுகதுக்கங்களை யனுபவிக்கவேண்டியவனாகவு மிருக்கிறேன், ஆகையால் இவ்வேழையின்மீது தயைசெய்து விட்டு விடுவீராகில் தங்களுக்கு யாதொரு தொந்தரவு மில்லாமல், நானே இப்பூஷணாதிகள் யாவும் கழட்டிக் கொடுக்கிறேன், ஐயா? தாயுடன் பிள்ளைசேர்ந்து முகிட்சி யடைய கிருபைசெய்யவேண்டும் ஐயா.

(தலை-திரு-வ-ம்) விழுந்துகிடடா பயலே, தலையெல்லாம் பேசுகிறாய், அப்பாநேசரே? இந்தச்சிறுவன் நகைகளையெல்லாங்கழட்டிக்கொண்டு கழுத்தைமுறித்து, அதோ தெரிகிற கால்வழியில் தூக்காகக் கிடத்திவருவீர்களப்பா நேசர்களே.

(திருடர்-வ-ம்) அப்படியே செய்கின்றோமையா, (கழுத்தை முறித்தெறிதல்)—அண்ணே? நீரிட்ட ஆக்கினைப்படி நகைகளைக் கழட்டிக்கொண்டு பாலனுடைய வுயிரைப்போக்கி, சுடுகாட்டிற்குப் போகிறவழியில் வளர்த்திவந்தோமையா.

(தலை-திரு-வ-ம்) அப்பாதோழரே? நாம்நாடிவந்த காரியம் முடிந்தது, இனி நமதிருப்பிடம் போவோம் வாருங்களப்பா.—(செல்லல்)

பொது விருத்தம்.

மாயவனுர்திருடனைப்போற்காசிமன்னன்
மகனுடனையேகவர்ந்துயிரைப்பறித்தேயந்தச்
சேயிழந்தசந்திரமதி செல்லுயார்க்கும்
சிக்கும்வாற்கிடத்தியுமே யப்பாற்போக
நேயமுடன்மஞ்சத்திலரசனேடு
நித்திரைகொள்மதனவல்லிவிழித்துப்பெற்ற
தாயவளும்பாலனிலையென்னவென்று
தாவுவாள்கணவனுடன்கூவுவாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இந்தப்பிரகாரம் மகாவிஷ்ணுவானவர்கள்ளனுகி, காசிராஜன்மகனுகியசுதாகரனைக்கைப்பற்றி உயிர்போக்கிச்சுடலைவழியிலெறிந்து போய்விட்டார், இப்பால் காசிராஜன்மனைவி விழித்துமகனைக் காணுமென்று தன்புருஷனிடஞ்சொல்லுகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

(மதனவல்லி-வ-ம்) ஐயோ ! மகனைக்காணுமே ! (நித்திரைபங்கஞ்செய்து தட்டியெழுப்பி அறிவித்தல்.)

மதனவல்லி விருத்தம்.

மஞ்சத்தினித்திரைசெய்யு மகிபனேமன்னுகேளீர்
நெஞ்சதிற்கரதலைத்தாங்கி நித்திரைசெய்தபாலன்
வஞ்சசோயாரின்ருதோ வந்தசோகள்ளர்தானு
மஞ்சனிமகனைக்காணே னன்பனேயெழுந்திடீரே.

(மத-வ-ம்) என்பிராணநாதா ? மஞ்சத்தில் படுத்திருந்த மகனைக்காணேன் ! இதுவென்ன மோசமோதெரியாது ! எழுந்திருஞ்சுவாமி.

காசிமகாராஜன் விருத்தம்.

அரண்மனைக்கட்டடந்தா னற்பமோவதனைச்சுற்றி
உரமுளமதில்களென்ன வுன்னதகாவலென்ன
சர்ப்பணியடைத்தவுள்ள சாரொணுவிடத்தைநாடி
வரக்கள்ளரானமாய வகையறியேனேமானே.

(காசி-வ-ம்) அடிபெண்ணே ? இதென்னவாச்சரியம் ? நமதரண் மனைக்கட்டுக் காவலென்ன ! இப்படிக்கிருக்க, எப்படி வந்தார்களோ தெரியவில்லையே,

காசிமகாராஜன் விருத்தம்.

பயப்படவேண்டாமாதே பாலனையெடுத்துப்போன
கயப்புளகள்ளர்தம்மைக் கவர்ந்திடவிக்கணத்தி
லயப்புடனகரைக்காக்கும் நமதுகாவலர்கடன்னுல்
வியுப்புறப்பிடித்துன்முன்னே விட்டிடச்செய்வேன்மானே.

(காசி-வ-ம்) பெண்ணே ? பாலனைத் திருடிப்போனவர்களை யிந்த க்ஷணம் பிடித்துவந்து உன் முன்னே விடச்செய்கிறேன் துயரப்படா தே மாதே.

காசிமகாராஜன் விருத்தம்.

ஆரின்றுவாயற்காத்த வாசாரகட்டியக்கரா
வீரியமாகச்சென்றே விரைவுடனமைச்சர்தம்மை
காரியமாகநான்றான் கடுகியிங்கழைப்பதாகக்
கூறியேயவரைமுன் கொப்பெனவரச்செய்வாயே.

(காசி.வ-ம்) அடா கட்டியனே ? சீக்கிரமாக வோடிப்போய் மந்திரி களை யழைத்து வருவாயடா.

(கட்-வ-ம்) மகாபாக்கிய மப்படியேயழைத்துவருகிறேன் சுவாமி— சுவாமிகளே ? தங்களை அதிசீக்கிரமாகக் கொலுமண்டபத்திற் கழைத் துவரும்படி ஆண்டவ ருக்ஞாபித்தாரையா.

(மந்திரி-வ-ம்) இந்தவேளையி லரசரழைத்த காரியமியாதோ ! இ தோவருகிறோமப்பா கட்டியனே, போற்றி போற்றி, சுவாமி ? எங்க ளை யிவ்வேளையி லழைப்பித்தகாரிய முரைசெய்வீர் வேந்தே.

காசிமகாராஜன் விருத்தம்.

என்னருமமைச்சமாரே யியம்பிடப்போமோநெஞ்சம்
அன்னமும்நானுமைந்த னமர்ந்துமஞ்சத்தின்மீதி
நன்னதாய்நித்திரைசெய்தோம் நாயகன்றனையேக்கள்ளர்
கன்னமாய்க்கொண்டுபோன காரியமறிந்துசொல்வீர்.

(காசி-வ-ம்) அப்பாமந்திரிகளே ? என்னுடன்கூட சயனித்திருந்த பாலனைக் கள்ளர் பணியுடன் கொண்டுபோன சங்கதிதெரிந்து சொல் வீர்கள் மந்திரிகளே.

மந்திரி விருத்தம்.

வேந்தனேபாலன்றன்னை விரைந்துமேகொண்டுபோன
சாந்தமில்லாதவந்த சண்டாளர்தம்மையிப்போ
மாந்தளிர்மாலைமார்பா முடக்கிடவாட்களேவிக்
காந்தலத்துடனேயிங்கு கடுகியேவரச்செய்வோமே.

(மந்-வ-ம்) சுவாமி ? உமதுபாலகனைத் திருடிப்போனவர்களை, இக் தக்ஷணம் காவலாளிகளால் பிடித்துவரச் செய்கின்றோம் அ ! இப்ப டியும் நடப்பதுண்டா ! அடாகட்டியனே ? நமது நகர்க்காவற்காரரை சீக்கிரமழைத்து வருவாயப்பா.

(கட்-வ-ம்) புத்தி ஆண்டவா, ஓ காவலாளிகளே ? உங்களை அரசன திசீக்கிர மழைத்துவரச் சொன்னார் வாருங்களடா.

(காவலர்கள்-வ-ம்) அப்படியே வருகிறோம் சுவாமி.

### பொது விருத்தம்.

இந்திரஜாலவித்தை யெழிலிலாச்சூதுவாது
சுந்தரமதிமயக்குஞ் சொக்குத்தூளேவுங்கள்ளர்
மந்திரஞ்செய்வோர்தம்மை மடக்கிடப்பிடித்துக்கட்டி
தந்திரமுட்டனேக்குந் தனிக்காவலாளர்வாறார்.

(பொ-ரு-ம்) சபையோர்களே? காசிப்பட்டணத்தை நெறியுடன்காவற்காக்கின்ற காவற்காரர்கள் வருகிறவிதங் காண்பீர்கள் கனவான்களே.

### காவற்காரர்கள் தரு.

இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

காவற்காரர் நாங்களே-காசி-காவற்காரர் நாங்களே.

அநுபல்லவி.

பாவமொழிகாசி பூர்த்திபநகரைக்
காவலன்றனுள்ளங் களித்திடக்காக்கும். (கா)

சரணங்கள்.

உத்தமர்தன்னை நத்திடாமூடர்க
ளொடுக்கும்படிக்கே யடிப்போஞ்-சற்று
மொழுங்கில்லாமலே யழும்புசெய்தீயர்க
ளுதட்டின்மே லெட்டியிடிப்போம்
வித்தமும்பொய்தனை சுத்தம்போலாடிடும்
மீச்சரினுவியை முடிப்போம்-மிகு
நேசமாய்ப்பேசியே மோசம்புரிவோரி
னெஞ்சுதிரத்தையே குடிப்போம்
கத்தியும்வாளம்பு கனத்ததோமரங்
கதைவேலீட்டியிற் கைகள்பழகியே
சத்திவெகுகாதஞ் சோம்பலிலாமலே
சூரமும்வீரமாய்ச் சொல்நகர்காத்திடும். (கா)
வீட்டினுழைந்திடப் பூட்டையுடைத்துமே
பேசிடுங்கள்வரைத் தேடியே-அதி
வேகமதாகவோ யேகவவர்களை
விட்டிடாமலடி நாடியே
காட்டிலொளித்திட ஓட்டமாயோடினுங்
கயவரையெட்டிக் கூடியே
கண்டக்கோடாலிகைக் கொண்டேயவர்களின்
கரங்களற்றிட சாடியே

மேட்டியாய்ப்பொருளோ | ராங்காரம்பேசியே
மேலோரைந்தியா | மிருகப்பிறவிகள்
ஊட்டியைத்திருவி | யுதிரங்குடித்திடும்
ஓகோகோயிக்காசி | யுள்ளும்வெளிசாக்கும். (ள)
யானைபுலிசிங்கஞ் | சேனைவந்தாலெதிர்
அலக்ஷயமாயெண்ணிக் | குட்டுவோம்-வெகு
அகங்காரமிஞ்சியே | செக்ப்புறட்டுவெடு
மற்பரைவாய்மூடக் | கட்டுவோம்
பூனைபோற்குலத்தைப் | பொய்யெனவிகழும்
புல்லரின்பற்களைத் | தட்டுவோம்-கையில்
பொருள்வைத்துலகினிற் | கருணையிலாப்பேயின்
புகழைப்பேசி | நாளுந்திட்டுவோம்
மானையணிந்தவன் | மகிழுங்குகனடி
மறவாதெங்கள்குரு | மனங்கனிந்து
ஆனைமுகனரு | ளாலேயிக்கையேடு
அன்பாயெழுதிய | ஆழ்வாரடிபோற்றும். (கா)

(காவலர்-வ-ம்) போற்றி போற்றி, ஆண்டவனே? எங்களையழைத்த காரியஞ் சொல்லும் மகாராஜனே.

(காசி-வ-ம்) அடா காவலாளிகளே? கெருடன் கோழியின் குஞ்சை த்தாவுவதுபோ லென்மகனை நீங்களெடுத்துப் போனீர்கள், கொண்டு வாருங்களடா காவலர்களே.

(காவலர்-வ-ம்) சுவாமி? நாங்களிதுவரையி லிப்படிச் செய்ததுண்டா! என்றுமில்லாதவார்த்தைகேட்கலானோம் யாதுகாரணமோ! அறியோம் ஆண்டவனே.

(முங்-வ-ம்) அடா காவலாளிகளே? நமது இராஜன்மகனைத் திருடிப்போன கள்ளரையிந்த க்ஷணம்பிடித்து வராவிட்டா லுங்களைச் சிரச்சேதஞ் செய்விப்பேனடா காவலாளிகளே.

(காவலர்-வ-ம்) சுவாமி? நீர்சொன்னபடியே கள்ளரைப் பிடித்து வருகிறோமையா.—இதென்ன ஆச்சரியம்!!! கேளுங்க ளண்ணமாரே? திருடர்களின்காலடி யிதோதெரிகிறது, இதைப்பற்றி நாலுபக்கமும் பார்த்துக்கொண்டு வாருவீர்களப்பா.

காவலர்கள் துக்கிக்குந் தரு.

இராகம்-இந்துஸ்தான், பைரவி-தாளம், ரூபகம்.

பல்லவி.

என்னசெய்வோ மண்ணமாரே-எப்படிவுய்குவோமுயிர்

அநுபல்லவி.

மன்னன்மகன்சிக்காவிடில் மாய்வதின்றிவேறேதுநாம். (எ)

சரணங்கள்.

கள்ளர்தனைக்காட்டவேணும் காட்டேரிநமைக்காக்கவேணும்
வள்ளல்மகன்சிக்காவிடில் வாட்டுவான்கழுமாட்டுவான்நாம் (எ)
பாவிதுள்ளனெங்கிருந்து பதுங்கிவந்தாரோதெரிந்து
தாவிதாம்பிடிக்காவிடிற் தண்டிப்பனரசனினிநாம். (எ)
உனதில்லகம்மக்காக்குமாரி யுபயபதத்தைக்கோரி
சீரான்காவுடன்பூசை செய்குவோநாளை தினம். (எ)
உத்தமிபிடாரியோடி யுகந்துமேவருவாய்தேடி
சத்தியமுள்ளவளானாற் சமயக்காப்பாயெங்களைநாம். (எ)

(காவ-வ-ம்) அடா அண்ணமார்களே ? சலிக்காமலென்பின் வாருங்களப்பா.

## காவலர்கள் தேடுந் தரு.

இராகம்-எமுனாகல்யாணி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

பதுங்கிவாருங்கள்-என்பின்-ஒதுங்கிவாருங்கள்.

அநுபல்லவி.

ஓதுங்கவேகள்ள ரொட்டுத்திண்ணைகளில்
ஓண்டியிருப்பார்க ளோரமாய்நோக்கியே. (பது)

சரணங்கள்.

சந்திரனுக்குங்கள் தடியாற்-சாடத்தீர்க்குங்கள்
மூந்திக்கருப்பாக மூடுதுவென்னமோ
சந்தடிசெய்யாமற் சாங்கமாய்ப்பாருங்கள் (பது)
பள்ளத்திற்பாருங்கள் ஏதோ பரிவாய்த்தேருங்கள்
பள்ளத்தைமெத்தெனப் பாய்ந்துமேயப்புறம்
மெள்ளமதிலேறி மேலேயும்பாருங்கள். (பது)
நாட்டைவிட்டோமே சுடலை நல்வழிதொட்டோமே
கேட்டிடீராயாரோ கீச்சுகீச்சென்கிறார்
ஓட்டமாயோடியே உற்றுமேபார்த்திட. (பது)

## பொது விருத்தம்.

காலகண்டன்கா சுதரத்தனைட்கள்செப்பிக்
கண்டித்தமொழிபேசமாதுதானும்
நீலகண்டனிவ்விதியை விதித்தானென்றே
நினைந்துருகிச்சுடலை தனைக்குறுகியாங்கே

கோலமிசையுற்றதுயரருந்திவாடிக்
கொண்டழுதுவரும்வழியிற்காலிற்பட்ட
ஞாலமகிழ்சுதாகரனுங் காசிபன்சேய்
நறும்புதல்வனென்றேங்கிநவிலுவாளே.

(பொது-வ-ம்) சபையோர்களே? காலகண்டன் துண்டுங்காசுங்கொடுக்கத் தவிர்த்தபின், சந்திரமதி மறுபடியுஞ் சுடலைக்கு வரும்வழியில் தன்காலிற்பட்ட காசிபன்மகனை சுதாகரனையெடுத்து தனமகனென்று புலம்புகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

சந்திரமதி விருத்தம்.

ஐயையோமகனேயுன்னை யண்ணலின்காவல்விட்டே
பய்யவெப்பூகந்தாங்கிப் பற்றியிக்குற்றதோடா
உய்யவேயுதிரம்பாய வூட்டியையரியலானுய்
வையகந்தனிலேயிந்த வருத்தமுற்றோருமுண்டோ.

(சங்-வ-ம்) அப்பாமகனே? உன்னை அரசன்காவலே விட்டுப் பூகங்கொண்டுவந்து கழுத்தைக்கடித்து எறிந்துப்போச்சுதோடா! இதுவும்விதிதானோ! மகனே .(நிதானித்துப்பார்க்கல்)

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-பியாக்,தாளம்-ரூபகம்.

சிவசிவசிவமே! சீருளதவமே! இந்த
சிறுவனுரோ! தெரிகிலேனுன்னைச் சிந்தித்தேன்நலமே!
அரகராசிவமே! ஆகரிபரமே! இங்கு
அடியாள்படுந்துயரதைவந் தகற்றுவாய்தரமே!
திரிபுரதகனே இகழொளிபவனே - யுன்
திவ்யவடிகாட்டிக்கலியைத் தீர்த்தருள்வோனே
கரியுரித்தோனே கயிலைவாசனே - நான்
கதறினேனென்னையொதறிடாமலே கனியும்நேசனே!
மதியணிந்தோனே மழுதரித்தோனே - அந்த
மாமுனிவன்சூதோகாரி மாயமோமோனே
கெதிநினைந்தேனே கிழ்ப்பணிந்தேனே - என்ன
கெடுதியிதுவறியேனுன்றன் கிருபைதாதேனே.
அரும்பெரும்பொருளே ஆதியாமருளே - பால
னுரென்றறியாமல்மெத்த அலருறேனருளே
வருந்தடத்திலே வருடக்காலிலே - என்
வதனம்மெத்தநடுமேங்கி வாடுதேசாலே,
நாதம்நம்பினேன் பாராய்வெம்பினேன் - என்
பாலனுவன்றியாரோவென்றுசிற் பயந்துசோம்பினேன்

வேதபோதனே விமலநாதனே - ஐயா
வெறும்புதுளம்பொருக்கிலேனுனே வேண்டினேன்பாதனே.

தலைக்காவலன் விருத்தம்.

காட்டையுங்கடந்தேபிந்த நடுச்சாமவேளைதன்னிற்
காட்டையும்பற்றிரமுன் கால்வழிதனிலேவந்தோங்
கேட்டையோயேதோசத்தங் கேட்குதேவடக்குமூலை
ஓட்டமாயோடிப்பார்ப்போ மொருமித்தேவருகுவீரே.

(தலை-வ-ம்) அடா காவலாளிகளே ? இந்தகாட்டில் வந்துவிட்டோம் அதோ வடக்குமூலையிற் சத்தங்கேட்கிறது மெதுவாய் வாருங்களப்பா

(காவலர்-வ-ம்) அப்படியே வருகிறோம் அண்ணே, நமக்கு நல்லகாலம் அண்ணே ? அதோயாரோ ஒருபிசாசு பிள்ளையை யேந்திக்கொண் டிருக்கிறது, சீக்கிரமா யோடிவாருங்கள் போய்ப்பார்ப்போம்.

காவலன் விருத்தம்.

ஆரதுதனிமையாக வடாதவிவ்விருண்டகாட்டில்
சீரதாய்நின்றுமேதோ செப்பியேபுலம்புகின்ற
கோரமேபசாசோபேயோ குலத்திற்குதெய்வமோநீ
வீரமாயெங்களுக்கே விரைவினிலுரைசெய்வாயே.

(காவ-வ-ம்) ஆரது ? இன்னேரத்தி லிந்தக்காட்டிற் புலம்புகிறாய் நீ பேயா ? அல்லதுபூதமா ? தெரியச் சொல்லவேணும்.

சந்திரமதி விருத்தம்.

பேயல்லபசாசுமல்ல பேணிடுந்தெய்வமல்ல
காயல்லபூதமல்ல காட்டின்வாழ்மாதுகாண்பீர்
மாயமாய்மாண்டவென்றன் மகன்றனைச்சுடவேயேகும்
நேயநிலிங்கேபால னேரிடவழுகின்றேனே.

(சந்-வ-ம்) ஐயா ? நான்பேயுமல்ல, பசாசுமல்ல, தெய்வமுமல்ல, மனுஷிதான், என்மகனைச் சுடவேண்டி சுடலையில்வைத்து வந்தேன் அவனுக்கு வந்திருக்கின்ற கோரத்தைக்கண்டு புலம்புகின்றேனையா.

(காவ-வ-ம்) அண்ணே ? இவள் கையிலிருக்கிற குழந்தை நமதுராஜாவினுடையது தான் பாருமண்ணே.

தலைக்காவலன் விருத்தம்.

சிக்கினுள்கள்ளிதானுஞ் சேர்ந்தவரெங்கேகாணேன்
கக்கிடவுதிரம்வாயாற் கழுத்தின்மேலறையடாநீ
பக்கமும்விரியக்கையைப் பற்றியேகயிற்றாற்கட்டி
துக்கிடவடித்துத்தள்ளிக் கொணர்ந்திடரோன்பின்தானே,

(தலை-காவ-வ-ம்) அடா காவலாளிகளே ? இதோதிருடி மகப்பட்டாள்

ள், இவளை யிந்த மணிக்கயிற்றினுல்கட்டி உதிரங் கக்கும்படி யடிமே லடியடித்துக்கொண்டு என்பின் கொண்டுவாருங்களப்பா.

(காவ-வ-ம்) அப்படியே கொண்டு வருகிறோ மையா. (அடித்தல்)

சந்திரமதி·கண்ணிகள்.

இராகம்-எதுகுலகாம்போதி,* தாளம்-சாப்பு.

மடலோடுமடலிறுக்கி வரியகயிற்றினுற்கட்ட
வந்தவிதியறியேன்சிவமே !

(தலை-காவ-வ-ம்) அண்ணே ? ஏதடா வாய்பேசுகிறுள், மொட்டா தலையின்பேரில் மொட்டு. [தலையின்மீதுமொட்டுதல்]

சிவமேயுனதுசெய்கையோ விதறியேன்
சிக்கினுள்கள்ளியென்றுஞ் செப்பும்வகையறியேன்
தவமோநான்முன்செய்த தகாப்பழிபாதோகாணேன்
தற்பராயுன்றனருள் தானிலாவகையாதோ !

(தலை-காவ-வ-ம்) சிவத்தை நினைப்பதேதடி, அ ! நீயே நீலி, எங்களாசன்மகனைக் களவால்கைப்பற்றி, பணிகளெல்லா முன்புருஷன் வசமனுப்பிவிட்டு ஓடிப்போகிற வேளையில் எங்கள்கையிற் சிக்கினுய், இப்போ ஏய்க்க வெத்தனிக்கிறையோ, அடா அண்ணே இவளை கன்னத்தில் அறையடா. [முதுகிலும், கன்னத்திலும் அறைதல்]

பாதிமதியுடனேபையரவமணியும்
பங்கைபனையருள் பார்க்கவோடிநீயும்
வேதனையடியினுல் வெதும்புதேமேனியும்
விரியுதெனதுநெஞ்சம் விரனுதேயாவியும்

(தலை-காவ-வ-ம்) கத்தியினுல்திருடியின் தேகத்திற் குத்துங்களடா, பிள்ளையின் கழுத்தைத்திருகி யுதிரமுங் குடித்திருக்கிறுள், நமதரசன் முன்னே சீக்கிரம் போகவேண்டுந் தள்ளிக்கொண்டு வாருங்களப்பா.

என்மகனென்றுமே யெண்ணிக்கைதொட்டிட
வெவ்விதிவந்ததே யென்றனைநற்றிட
கன்மனத்தோரென்னை கைகட்டிபற்றிட
கள்ளியென்றுமேசொல்லிக் கத்தியாற்குத்திட

(காவ-வ-ம்) இருக்கட்டும், நடவடிநட, மாயக்கள்ளி.

(சப-வ-ம்) ஓ ! ஓ ! பரமசிவமே ! இதுவுமுன்றன் செயல்தானே !

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-நாதநாமக்கிரிகை-தாளம்-சாப்பு.

ஐயையோயிதென்ன ! அன்னீதம் ! அன்னீதம் !
யார்சகிப்பாரித்துன்பம் ஓ ! தெய்வமே !

மெய்நடுங்குதேயென்றன் மேனியும்வாடுதே
 மிடியாச்சேயென தின்பம் ஓ! தெய்வமே!
மதியன்செய்திட்ட மாதவத்தால்நானும்
 மண்ணுலகிலுதித்தேன் ஓ! தெய்வமே!
விதியிவ்வாறெழுதிட விப்பிரன்கொண்டிட்ட
 வெறுப்பறவேதுதித்தேன் ஓ! தெய்வமே!
என்னைப்போல்பெண்ஜென்ம மெடுத்தவர்களுமுண்டோ
 ஏங்கித்துடிக்கவிட்டாய் ஓ! தெய்வமே!
உன்னைக்கெதியெனவே உருகிப்பணிந்துங்காரிக்
 குடன்பன்டெனைத்தொட்டாய் ஓ! தெய்வமே!
மறையோனுக்கடிமையாய் மகனைப்பறிகொடுத்து
 மனங்கலங்கிடும்வேளை ஓ! தெய்வமே!
திரைதரும்வேந்தன்முன் திருடியென்றெனைப்பேசுந்
 திகழுஞ்சரியோநாளை ஓ! தெய்வமே!
வேந்தர்சபையின்முன்னே வெட்கம்நாணமுமச்சம்
 விட்டெவ்வகையாயடைப்பேன் ஓ! தெய்வமே!
சாந்தமாம்தருமத்தைச் சார்ந்தபலனோவிவர்
 சாற்றிலேதுதடுப்பேன் ஓ! தெய்வமே!
விலைமதியாச்சுகத்தில் வீற்றிருந்ததைமாற்றி
 விசனத்திற்காளானேன் ஓ! தெய்வமே!
கொலைகாரியெனவெனைக் கூறுவாரிவரங்கு
 கோலோனுக்கினைதானேன் ஓ! தெய்வமே!
தொல்லையகற்றியேகண் தோற்றியசாக்ஷியிவர்
 தோன்றலுக்குரைப்பாரே ஓ! தெய்வமே!
இல்லையென்றாலும்பழி யென்னைவிட்டகலுமோ
 ஏதுக்குந்துணை கா கா ஓ! தெய்வமே!

(தலை-காவ-வ-ம்) அப்பாகாவலாளிகளே? கொலுவாசல்வந்தோம், அரசன்முன் கொண்டுபோக நாலுபக்கமும் இவளைச்சூழ்ந்து வாருங்கள்.

தலைக்காவலன் விருத்தம்.

ஏங்களாண்டவனேயிந்த விருட்டினிற்றேடிநாடி
திங்களில்லாதகாட்டில் திடமுடன்சென்றோமிந்த
மங்கையும்பாலன்றன்னை மடித்துமேவாயால்ரத்தம்
பொங்கபாயுறியும்வேளை பொட்டெனக்கட்டிவந்தோம்.

(தலை-காவ-வ-ம்) சுவாமி? நாங்களெல்லாவிடமுந் தேடிக்காணாமல், பின்பு காட்டில் நுழைந்தோ மங்கு தங்கள்பாலன் ஊட்டியையுறிந்துகொண்டிருக்கும் வேளையி லிக்கள்ளியைப் பிடித்துவந்தோம் தேவே.

(காசி-வ-ம்) அப்படியா! இவள்தானு என்பிள்ளையைக் கொன்ற நீலி. [காசிமகாராஜன் சந்திரமதியின் முகத்தை யுற்றுப்பார்த்துரைத்தல்] அ! இதென்னகொடுமை! நமது எதிரில் நிற்கும் மாதசிரோன்மணியைப்பார்த்தால் இம்மாதால் நமது பாலகன் இறந்தானென்றுசொல்வதற்கு மனந்துணியவில்லை, ஈசா! என் முன்னோர்முதல் நமது ஆளுகைவரையில் இச்சகவயில் ஒருபெண்பால்குற்றஞ்செய்ததாகவும், அக்குற்றத்திற்குத்தகுந்த தண்டனையும் விதிக்கவில்லையே! அப்படியிருக்க, தக்க ஆராச்சிசெய்யாமல் எவ்வாறு நமது காவலாளிகளின்வார்த்தையைக்கேட்டு தண்டிக்கக்கூடும், இது சரியொற்றதல்லவே, ஆலோசனைசபையின்முன் நீரவிசாரித்து யோசனையின்படி நடத்துதல் மேலான புகழ், சரி,—அடா சுதாகரா! இப்படியும் உனக்குவிதியிருக்குமா! ஐயோ! என்ன செய்வேன்டா!

காசிமகாராஜன் சோகமுறுந் தரு.

இராகம்-செஞ்சுருட்டி-ஏகதாளம்.

பல்லவி.

பாலாவெனை மறந்தாயோ! நான்பெற்றகுண
சீலா மடிந் திறந் தாயோ!
அடபாலா-குணசீலா-மதிமேலா-விழிநீலா. (பாலா)

அநுபல்லவி.

கோலாகாலனைவென்ற மூலாதாரனுல்வந்த
லோலாசுதங்கைகொஞ்சும் காலாவென்கண்ணின்மணி. (பா)

சரணங்கள்.

தந்தையெனுமொழிபோச்சோ! விதிவசத்தால்
வந்தகெதி யிதுவாச்சோ!
எந்தன்தவத்திலுற்றே வந்தவுனக்கிந்நாட்டை
தந்துமகிழக்கொண்ட பந்தமிதுதானேடா (பா)

என்னகெதியானுய்பாலா! வடிந்துதிரம்
இன்னம்வருதேடா சீலா!
சின்னவயதில்வெகு உன்னதக்கல்விகற்று
மன்னவனுவாயென்றே சொன்னமொழியும்போச்சே. (பா)

கிளிமொழி கடந்தாயோ! எங்குலநிறை
ஜோதிபதமடைந்தாயோ!
பாதிமதியணியு மாதிபரனையேற்றி
வேதியரோதவேநான் மேதினியாளப்பெற்ற (பா)

வீட்டைவிட வானுயோடா! பிணங்கள்சூழ்
காட்டைமேவப்போனுயோடா!

கோட்டையில்வாழ்ந்தென்ன நாட்டைகாணுண்டென்ன
மூட்டையாய்வயிற்றினில் போட்டையேபெருந்தீயை. (பா)

### காசிமகாராஜன் விருத்தம்.

அன்னமேமரதேயுன்ற னருமைய[illegible]கனையின்று
துன்னமாங்களவுசெய்த கள்ளியென்றெந்தன்முன்னே
தன்னகர்காவலாளர் நாடியேபிடித்துவந்தா
ரென்னருங்கனுமாண்டா னினியென்னசெய்குவோமே.

(காசி-வ-ம்) ஆ! பெண்ணே? உன்னுடைய மகனைத்திருடிப்போன கள்ளி இவள்தானெனக்காவலர் பிடித்து வந்தார்கள், ஆனால் பாலன் மாண்டுவிட்டான் என்னசெய்வோமடி மாதே.

### மதனவல்லி விருத்தம்.

மாண்டையோமகனேநீதான் மலடியின்கையிற்சிக்கி
மாண்டையோவென்வயிற்றில் மட்டிலாநெருப்பையிட்டு
மாண்டையோவம்மாவென்றே மனதினினைந்தேயப்பா
மாண்டையோவிவளையிங்கே மரித்திடச்செய்குவேனே.

(மத-வ-ம்) அப்பாமகனே! என்கட்டிக்கனியே! மாண்டாயா, என்னை மறந்தாயடா கண்மணியே.

### மதனவல்லி விருத்தம்.

மகன்றனைக்கொல்லவந்த மாபாவியிருசிமூடி
சகத்திலுன்னைப்போன்ற சாதகியுண்டோகள்ளி
ஜெகத்தனையிரட்டிக்தோஷி செங்கொலுமுன்னேநீலி
யகத்துடன்கையிலேந்தி வந்தையோமயக்கத்தானே.

(மத-வ-ம்) அடி சண்டாளி? நீ பேயா, துர்க்கியா? இரிசியா? பூதமா? என்மகனைக்கொன்றது மல்லாமல், அச்சமின்றி இராஜசமுகத்தில் உன்கையிற் பிள்ளையைத் தாங்கிக்கொண்டு வந்தாயடி அடிதோஷி.

### சந்திரமதி விருத்தம்.

தோஷிநீயென்றேயென்னைத் தூஷவும்விதியேதாயே
யாசித்தேதிருடிப்போன வடாதவள்நான்றுனென்றே
தாஷிக்குர்வகைதானந்த தோகைபார்வதியாளோடு
காசிவாழ்விஸ்வலிங்கன் கருத்தெனத்தெரிந்தேனம்மா.

(சந்-வ-ம்) அம்மணி? என்னைதிருடி, தோஷி, நீலியென்று பலவாறாய் சொல்வது, காசிநாதன் செயல்தான் தாயே.

### மதனவல்லி விருத்தம்.

காலனுமுங்கொஞ்சங் கருணைதான்செய்வானிந்த
பாலனைபதைக்கக்கொன்ற பாதகியடிசண்டாளி

சாலவேயச்சம்விட்டு சரிசரியென்முன்னின்று
ஞாலவன்பெயரைச்சொல்ல ஞாயமோவுனக்கேநீ.

(மத-வ-ம்) அடிபாதகி ? எமனானாலுங் கொஞ்சம்மனமிரங்குவானே உன்மன மிரங்காமல் கொன்றுவிட்டும், காசிநாதனை நினைப்பதுந் தகுமோடி திருட்டுக்கள்ளி.

சந்திரமதி விருத்தம்.

கள்ளியென்றும்நீலியென்றும்பசாசமென்றும்
கடிந்துரைக்குமம்மணியேகழறக்கேளாய்
நள்ளிருளிலுன்னருகேயிருந்தவிந்த
நற்புதல்வன்றனையெடுத்தோர் நானுமன்றே
சுள்ளிகொண்டுமாண்டவென்றன்மகனையம்மா
சுடச்சுடலைபோந்தடத்திற்சுதனைக்கண்டு
வெள்ளிமயக்கிரியமர்ந்தோன்விண்டோவென்று
வெம்பினேனினிநீதிவிளம்புவாயே.

(சந்-வ-ம்) அம்மணி ? என்னை நியாயமின்றி கள்ளி நீலியென்று இராஜ சமுகத்தில் பேசுவது சரியல்ல, உன்மகனைக் கொன்றவள் நானல்லதாயே.

மதனவல்லி தரு.

இராகம்-காப்பி, தாளம்-ஆதி.

கள்ளிகொலைக்காரி கருணையிலாமாரி
கொள்ளிவாயின்வீரி கொண்டவனைப்பிடாரி
துள்ளிநடிக்காதடி சண்டாளிநீ
தோஷியகலப் போவாய்.

சந்திரமதி தரு.

இராகம்-காபி, தாளம்-ஆதி.

கள்ளியென்றுபேசவுந் தாயே
கடிந்துசொல்லியேசவும் எனையே
தள்ளிமனம்ரோசவும் விதியே-வி-வி
தயாபரனருடானே.

மத—தெய்வத்தைசிந்தித்து சிரதைசிந்தித்து
வைவதைசந்தித்து வாய்தனைமந்தித்து
நொய்யுறக்காரணமோ சண்டாளிநீ
நொடிக்குள் வதைப்பேனடி.

சந்—வதைக்கவெனைநீயுமே மனம்
வைத்தாற்போதுந்தாயுமே எனையே

சிறைக்கச்செய்தாலோயுமே-விதியே-வி-வி
செங்கழல்போற்றி அம்மா.

மத—நீதிகள்பேசாதே நிர்மூடி ஆகாதே
ஓதிஞய்கூசாதே ஒன்றும்பலியாதே
வேதனைவிட்டாயடி சண்டாளிநீ
வெட்டுண்டுபோவாயடி.

சக்—வெட்டிடவேசெய்குவாய் தாயே
விமலனருளுய்குவாய் கனியே
இட்டவிதிநொய்குவாய் விதியே-வி-வி
இறைவிதுணைதானே.

மத—பாலனைக்கொன்றுமே பாவிநீயின்றுமே
சீலமாய்சென்றுமே செருக்கோடுநின்றுமே
கோலமாய்ப்பேசவந்தாய் சண்டாளிநீ
கொலைகாரிவாய்மூடடி.

சக்—பாலன்தன்னைக்கொல்லவே தாயே
பாதகிநானல்லவே கனியே
காலமம்மாசொல்லவே விதியே-வி-வி
கடிந்துரைக்காதே அம்மா.

(மத-வ-ம்) ஓ! பிராணநாதா? இவளை யின்னம் வெட்டச்செய்யாமலிருப்பதேன் சுவாமி.

(காசி-வ-ம்) பெண்ணே? மைந்தனிறந்த கொடுமையால் நீ இப்படியும் சொல்வதடுக்குமா! நமது முன்னோர்களால் ஏற்பட்ட மநுநீதிப்படி இம்மாதிடங்குற்றங்காணில் நீ சொல்வதுபோல் செய்யத்தடையிரா, அப்படி நாமுண்மை தெரியாமல் தண்டித்துவிடில் பெண்ஹத்தி தோஷம் உடனேசம்பவித்துவிடுமல்லவா, ஆகையால்தீர்க்கவிசாரித்து வெட்டச்செய்கிறேன் என்கண்ணே.

(மத-வ-ம்) பிராணநாதா? தாங்கள் சொல்வதல்லாம் சரியே, ஆனால் பெற்றவயிற் பற்றி எறிகிறதால் தங்களிடம் இவ்வாறு சொல்லத்துணிந்தேன் மன்னிப்பீர், இறந்தபாலனைச் சுடலைக்கனுப்பி இவளைத்தீர்க்க விசாரித்து தங்கள் மனம்போல் தண்டனைவிதிப்பீர், அடியாள் போய்வருகின்றேன்.

காசிமகாராஜன் விருத்தம்.

அன்னமேதுயரந்தன்னை யடைந்துநீயுருகவேண்டாஞ்
சொன்னமேகாசிநாதன் சோதித்தாளம்மையன்றி
யின்னிமைதனிலேபாலனேகிடச்சுடலைசெய்வேன்
கன்னியின்கள்ளவக்கண்டே கட்டளைவிடுவேன்போவாய்.

(காசி-வ-ம்) பெண்ணே? நீ துயரப்படவேண்டாம், நான் நீதிவிசாரித்து தெண்டனை விதிக்கின்றேனடி பிராணநாயகி.

(மத-வ-ம்) நல்லது என் பிராணநாதா. (நீங்கல்)

(பொது-வ-ம்) சபையோர்களே? காசிமகாராஜன் மந்திரி பிரதானிகளுடன் கொலுவமர்ந்து சந்திரமதியம்மனையும், காவலாளிகளையும் மறுநீதிப்படியுண்மையைவிசாரிக்கிறவிதங்காண்பீர்களனவான்களே.

# காசிமஹாராஜன்கொலு.

## காசிமகாராஜன் விருத்தம்.

பெண்ணாகப்பிறந்தவிந்தப் பேதையைத்திருடியென்றே
யெண்ணாமற்கொணர்ந்தீர்நீங்க ளெவ்விதம்வதைக்கக்கண்டீர்
கண்ணாடியொளியைப்போலக் கழறுவீர்பொய்யுரைத்தால்
விண்ணாடியேகநீங்கள் விதிப்பேனாக்கினைதானே.

(காசி-வ-ம்) அடா காவலாளிகளே? இந்தப்பெண்பிள்ளை திருடியென்று கொண்டுவந்தீர்கள், நடந்தவாறு சரியாய் சொல்லுங்கள், பொய்யுரைத்தா லாக்கினை செய்விப்பேனடா காவலாளிகளே.

## தலைக்காவலன் விருத்தம்.

திருடியுமிவளேநாதா தேடியேயடியைப்பற்றி
மருவவேரண்டக்காட்டில் மைந்தனைக்கடிக்கக்கண்டோம்
நிருடியைச்சூழ்ந்தோமங்கு நிமைக்குள்ளேயோட்டலான
வெருடியைப்பிடித்துக்கட்டி வேந்தனேகொணர்ந்தோம்மெய்யே

(தலை-காவ-வ-ம்) சுவாமி? நாங்கள்காலடிகளைப் பற்றிக்கொண்டே ரண்டகாட்டிற்குள் சென்றோம், இவளங்கு பாலகனை எடுத்து லூட்டியைக் கடிக்கும்போது போயினோ மிவள் எங்களைக்கண்டு ஓடப்போகுந்தருணத்தில் நாங்கள் இவளைப் பிடித்து வந்தோம் மகாராஜனே.

## காசிமகாராஜன் விருத்தம்.

ஆரம்மாநீதானிந்த வலங்கோலமாகவந்தாய்
ஊரென்னபேர்தானென்ன வுற்றவிக்கொடுமையாதோ
காரணம்நீயோவன்றிக் காவலர்செய்தசூதோ
தீரமாயென்முன்னின்றே திடமுடன்தெரிவிப்பாயே.

(காசி-வ-ம்) அம்மா? நீயார்? எந்தவூர்? உனக்குமிந்த பழிவந்த காரணமேது? காவலாளிகளேதாவது சூதுசெய்தார்களா? பயமின்றிச் சொல்லுவாயம்மா.

சந்திரமதி விருத்தம்.

ஊரிதுவாகும்வேந்தே யுத்தரம்பிறந்ததென்றன்
பேரதுசந்திகண்டீர் பேணிநானையர்வீட்டின்
சேரவேதொண்டுவேலை செய்திடுமடிமைகாண்பீர்
வீரியக்குன்றவந்த விதிதனைநோகின்றேனே,

(சந்-வ-ம்) ஐயா ? என்பேர்சந்தி, நான் இருப்பது இதுவேநாடு, பி றந்தது இதற்குவடக்கு, நான்வேதியர் வீட்டின் முறித்தொழில் செய் யுமடிமை, முன்விதியின் பயனிது சுவாமி இதுவுமன்றி,

சந்திரமதி விருத்தம்.

மன்னவாவுமதுதிவ்ய மகனுமென்கரங்கடன்னில்
வன்னமாயிருக்கக்கண்டீர் வழுத்தியவாறுங்கேட்டீ
ரென்னநானியம்பலாகு மிப்பழியெனக்குவாய்க்க
அன்னவாகனன்றனெண்ண மறிந்திலேன்றெரிகுவீரே.

(சந்-வ-ம்) அரசனே ? உமதுபால னென்கையிலிருப்பதும்பார்த்தீர் காவலாளிகள் சொல்லியதுங்கேட்டீர், இப்பாவி சொல்லவதென்ன இரு க்கிறது, நியாயமறிந்து நீதிசெய்வீர் சுவாமி.

காசிமகாராஜன் விருத்தம்.

மந்திரிமாரேயென்றன் மகன்போனதுயரமன்றி
யிந்திளமாதுசொல்லு மியற்கையால்வருந்துகின்றேன்
மைந்தனைக்கொன்றாளென்னும் வகையதுதெரிந்திலேனு
னெந்தவோர்குறியுங்காணே னிதைநன்றாயோசிப்பீரே.

(காசி-வ-ம்) மந்திரிகளே ? என்மகன் மாண்டது விதியாகும், இந்த ப்பெண் கொலைசெய்தா ளென்பதற்கு முகத்தில் யாதொருகுறியையுங் காணேன், இதையோசித்து சொல்வீர்களப்பா.

முதல்மந்திரி விருத்தம்.

நீதனேசொல்லக்கேளும் நீள்புவிகடலினாழம்
காதனேகாணக்கூடும் நவிலுவேன்வானந்தன்னைச்
சாதனையாலேவில்லாய்ச் சாங்கமாய்வளைக்கலாகும்
மாதர்கணெஞ்சினெண்ண மறிந்திடலாகாதையா.

(முதல்மந்-வ-ம்) மகாராஜனே ? கடலினாழத்தைக் காணலாகுந் தவி ர ஆகாயத்தை வில்லாகவும் வளைக்கலாகும், இந்தமாதர்களி னெஞ்சி னுண்மையறிய எவராலு மாகாது வேந்தனே.

(காசி-வ-ம்) அப்படியா, அப்பா ? உன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரியப்படுத்துவாய்மந்திரி.

இரண்டாவதுமந்திரி விருத்தம்.

வேந்தனேசிங்கந்தன்னை விரைந்துமேவசமதாக்கி
சாந்தனையாடலாகுஞ் சமுத்திரமணலையெல்லாம்

காந்தனேகணக்காயெண்ணிக் கயிறதாய்த்திரிக்கலாகும்
நீந்தவேமாதர்நெஞ்சி னிசமதைநிகழ்த்தொணுதே.

(இரண்-வது-மந்-வ-ம்) ஆண்டவனே ? அடவியில்வாழும் சார்தூலம், யாளி, சிங்கம், கரடி, முதலிய துட்டமிருகங்களை வசப்படுத்துவதும், சமுத்திரக் கரையின்கண்ணே யிருக்கும் சிறுமணலையும் கணக்கிட்டு எண்ணி ஒருசமயம் கயறுகத் திரித்தாலும் திரிக்கலாம் பாவங்களே உருவாகக்கொண்டு அவதரித்திருக்கும் பெண்களின் மனோ நிலையையாவராலும் அறிந்துசொல்லத்துணிவது துர்லபமே, ஆண்டவா.

(காசி-வ-ம்) அப்படியா ! ! !

### காசிமகாராஜன் விருத்தம்.

பழியதுவாய்த்தனென்றிப் பாலனையேந்திவந்தாய்
வழியதிலிவர்கள்செய்த வஞ்சமிருக்குமாகி
விழிவிலமாதேயென்முன் னியம்பிடப்பயங்கள்வேண்டாஞ்
சுழிதனிலாடுமெந்தச் சுந்தரன்காப்பானம்மா.

(காசி-வ-ம்) அம்மா ? இந்தக் காவலர்களேதாகிலும் வழியில் சூது செய்திருந்தா லெனக்குத் தெரியப்படச் சொல்லுவாய்மாதே.

### சந்திரமதி விருத்தம்.

சாற்றிடவேறுகாணேன் சற்குணவரசேயிங்கு
வேற்றுமைபுகலவென்றும் வேண்டிடேன்காவற்காரர்
போற்றிடும்வேளைதன்னில் பொருவிலாப்பாலன்றானு
மாற்றவென்காத்திருக்க வறிந்தனருண்மைதானே.

(சங்-வ-ம்) ஐயா ? காவலாளிக ளென்னைக்காணும்போது இந்தப்பால னென்கையிலிருந்தது உண்மை, அதின்பேரிலுமக்குத் தோணும் வகைசெய்வீர் இராஜனே.

### காசிமகாராஜன் விருத்தம்.

மந்திரிமாரேயென்றன் மகன்மாண்டான்விதியாலன்றே
வந்திளமாதுமிந்த வதைதனைவிளைத்தாளென்றால்
சுந்தரமொழியாள்யாரோ ஜொலிக்கிருள்ஜோதிபோல
வெந்தனல்லெல்லைக்கப்பா லிவடனைவிடுத்திடீரே.

(காசி-வ-ம்) அப்பாமந்திரிகளே ? என்மகன் பிரமன்விதித்த விதிப்படி மாண்டு விட்டான், இவள் வதைத்தா ளெனச்சொல்ல வென்மனதில் நாட்டமில்லை, இவளையிந்த வூருக்கப்புற மிருக்கும் காட்டிற்குத் துறத்திவிடச் செய்வீர்களப்பா.

### தலைக்காவலன் விருத்தம்.

நாட்டைவிட்டோட்டினாலும் நாற்கடற்கடத்திட்டாலுங்
காட்டிலேதுறத்திட்டாலுங் கள்ளியைக்கொணரோமாகில்

வாட்டியேயெங்கடன்னே வதைத்திடச்செய்வீரன்றோ
மீட்டுமிந்தகரைக்காக்க விருப்பிலோமறியும்வேந்தே.

(தலை-காவ-வ-ம்) சுவாமி ? நாங்களிந்தத் திருடியைக் கைப்பிடியாக க்கொண்டுவேந்தும், ஓட்டிவிடச்சொன்னீர், நாங்கள் கொண்டுவராவிட்டாலெங்களைத் தெண்டிக்கத் தடையுண்டோ, இப்படிச்செய்தால் இனிகாசிநகரைக்காக்க வெங்களுக்கு மனமில்லை யாண்டவனே.

(காசி-வ-ம்) அப்படியா ! ஆ ! சிவனே ! இதற்கு என்னசெய்வேன் இம்மாதைப்பார்த்தால் குற்றஞ்சாட்டுவதற்கு யாதொருகுறியுங் காணுதவனாகவு மிருக்கிறேன் ! அப்படி நமது புத்திக்கு எட்டாதிருப்பது எதுவாயிருக்கும், யோசிப்போம், சரி. சரி, நமது புத்திர னிறந்தசோகத்தால் பஞ்ச அறிவும் ஓர்நிலையி னில்லாமல் அலைந்து கெடுவதேகாரணம், ஆதலால் நமது சகலில் அமச்சர்முதலியவர்கள் முன்னிலையில் நன்கு ஆராய்ந்து இம்மாதுக்குதகுந்த ஞாயவழிகாட்டுவதே நமக்கும், நமது முன்னோருக்கும் புகழ்,சரி, காவலர்களே ? சற்று நிதானியுங்கள்

(தலை-காவ-வ-ம்) அப்படியே, புத்தி ஆண்டவா.

காசிமகாராஜன் விருத்தம்.

நல்லதுவமைச்சமாரே நாடியிம்மாதைக்கூட்டி
வல்லிருணீங்கக்கையில் வகையுடன்பந்தமேந்தி
மெல்லியளடியோவன்றி மேவுவேற்றடியோவென்று
சொல்லிடினீங்கடேர்ந்து சூக்ஷமதுரைசெய்வேனே.

(காசி-வ-ம்) மந்திரிகளே ? நாம் காவலர்கள் வாக்குமூலத்தால் இம்மாதைத் தண்டிப்பது சரியெனத் தோற்றவில்லை, நமது அரண்மனையிலிருந்து காவலர்சொன்ன ஏரண்டகாட்டில் இம்மாது நமதுமைந்தனையேந்தி குந்தியிருந்த இடம்வரையில் இம்மாதின் காலடியிருக்குமல்லவா, ஆனதுபற்றி நீங்கள் நள்ளிருளெனப்பாராமல் பலதீவட்டிகளைக் கையிற்றூக்கி அவ்வடிகளைப் பரிசோதித்து எனதிடம் தெரிவிப்பீர்களாகில் சத்தியநெறியை யனுசரித்து தீர்ப்புச் சொல்லக்கூடும் அமைச்சர்களே ? மண்ணின்மேல் நின்று பெண்ணோருஞ் சொல்லலாகாதென முதறிஞர்மொழி, ஆதலால் மானிடதேகமெடுத்த ஒவ்வொருவருக்கும் பிரயோசனத்தைத் தாநின்ற இம்மண்ணனது ஓர் பெண்ணே, அப்படி ஒருக்கால் இம்மாது நமது மைந்தனை திருடிப்போனகாலத்தில் இம்மண்ணின்மீது காலடி யிருக்குமல்லவா, அதைநீங்கள் கண்டுவரில், பிறகு யோசித்துரைப்போம், சீக்கிரம்செல்லுவீர்கள்.

(மந்திரிகள்-வ-ம்) அரசே ? யோசித்துரைத்ததும் நல்லமார்க்கமே அவ்வாறு செய்வதேபுகழ், கீர்த்தி ஆண்டவா ? இப்போது முன்பு இ

வாள் வாக்குமூலத்தை விசாரித்து பிறகு இம்மாதின் காலடிகளைச்சோதிப்பதே சரி யொத்ததாக இருக்கிறது பிரபூ.

(காசி-வ-ம்) மந்திரிகளே? நீங்கள் உரைத்த ஞாயமும்சரியே, அப்படியே செய்வீர்களாக.

## வாக்குமூல விசாரணை.

(முதல்-மந்-வ-ம்) அம்மாதாயே? இங்குவந்து யாவருங்கேட்க நான் சொல்வதுபோல் நீயும் சொல்வாயாக; அதாவது தேவசபைக்கு நிகரொத்த இந்தமகாசபையின் முன்பாக நான்சொல்வது நிசமே, நிசந்திர,வேறொன்றுமில்லை (சந்திரமதியும் அவ்வாறேபுகலல்) சரி,நீயார்? உன்நாமதேயமென்ன? உன்பதியாது? இந்த மகாபாதகந் தொடர்ந்ததற்குக் காரணம்யாது? ஒன்றையும் விடாமல் வெளியிடுவாய்தாயே.

(சந்-வ-ம்) ஆ! ஜெகதீசா! உமதுபெருமையேபெருமை! நீயே என்னை இக்கோலமாக்க எண்ணங்கொள்ளில் நான்யாரிடம் முறையிடக்கூடும், மேலும் ஆக்கலழித்தலுக்குக் காரணபூதனுகவு மிருக்கிறாய் என்னுலிங்காவதென்ன ஐயோ! ஜனனத்தில் பெண்ஜனனம் கடைப்பிடியென இன்றுதான் தெரிந்தேன், சி, வெறிமனமே? இம்மகா சகவில் நிற்பதால் உன் எண்ணம்மாறி பெண் ஜனனத்தின்பேரில் குற்றஞ்சாட்டப்போகுமா! இப்பெண் ஜனனம் மேலென எண்ணியல்லோ மாலும் ஓர்காலத்தில் பெண் உருவெடுக்கலானார். ஆனதால் வீண்வார்த்தை ஏன் ஆடுகிறாய், இப்போது உன்னைக்கேட்ட கேள்விக்கு உத்திரவுகொடுப்பாய், சரி, ஐயா? நானுதித்தது இந்நகருக்கு வடக்கு இப்போது வசிப்பது இக்காசிபட்டணமே, நானோ இப்பட்டணத்திலிருக்கும் ஒருவேதியருக்கு முறிப்பெண், இப்பாவிபெயர் சந்தி, என்பாலனிறந்ததைப்பற்றி மயானத்திற்குச் செல்லு மார்க்கத்தில் இப்பாலகன் என்காலில் வருடக்கண்டு, என்மகன்தானோ என இருகரத்தாலுந்தாங்கி முகத்துடன் முகம்வைத்து அழுதுகொண்டிருந்த காலத்தில் இந்த உத்தம காவலாளர்கள் கண்டு என்னை இவ்விடங் கொணர்ந்தார்கள் இது சத்தியம், பிசகில்லை ஐயா.

(தலை-காவ-வ-ம்) அட! இதென்ன! கஞ்சியில் வடிக்கிறாள், யாரை நம்பினாலும் பொட்டச்சிகளை நம்பலாகாதுடா அப்பா! இந்தே மெய் பொய், பொய், மெய்யாய்விடும் போலுங் காணுகின்றதே நாம்பிடித்த வியாஜ்யம் எப்படியாகுமோ! தெரியவில்லை! நமது அரசரும் இக்கள்ளியின்வார்த்தை நம்பிவிட்டார்போலுமிருக்கிறது, எப்படியும் இக்கள்ளியை காட்டிக்கொடுத்த மாரித்தாய் இச்சமயம் எங்கு போய்விடப்போறாள், இன்னமும் பார்ப்போம், சரி.



(முதல்-மந்-வ-ம்) சரி, அடா காவலர்களே ? இப்படிவந்து நில்லுங்கள் யான் சொல்லுவதுபோலச் சொல்லுங்கள், இந்தமகாசகவயில் யாவருமறியசொல்வது மெய்யே ஒழிய பொய்யல்ல, இதுசத்தியம்.—(தலைக்காவலன் முதலியோர்கள் முதல்மந்திரி சொன்னவாறு சத்தியஞ்செய்தல்.)

(தலை-காவ-வ-ம்) சரி, ஆண்டவனே ? தங்களுத்திரவுபெற்று சந்துபொந்து முதலிய இடங்கள்யாவும் பார்த்து கடைசியில் காலடி ஒன்று தெம்பட அதைப்பற்றி சுடுகாட்டுக்கும் நமது ஊருக்கும் மத்தியிலிருக்கும் ஏரண்டகாட்டில் நுழைந்தோம், அங்கு இச்சண்டாளி நமது இளவரசனைக் கையிற்றூங்கி ஊட்டியை யறியப்போகும் சமயத்தில் எங்கள்கண்ணுூரக்கண்டு பிடிக்கப்போகுந் தருணத்தில், எங்களைக்கண்டு ஓடத்தலைப்பட்டாள், நாங்கள் விடாமல் குழந்தையுடன் இவளை இங்கு கொண்டுவந்தோம், இதுபொய்யல்ல, மெய்யே, சந்திரர், சூரியர், பூமிதேவி, இச்சபையோரறிய சத்தியமே.

(முதல்-மந்-வ-ம்) அப்படியா ! சரி, இவளுடைய வாக்குமூலத்தில் ஒன்றுக்கொன்று பொருத்த நிமித்தமில்லாமலிருக்கிறதே, சற்றுயோசிப்போம் !—(யோசித்தல்.)

(இரண்-வது-மந்-வ-ம்) அடா தலைக்காவலனே ? நீகொடுத்த வாக்குமூலத்தில் சிற்சிலதோஷங்க ளிருக்கிறது, இப்படிவா ? நமதரசன் மைந்தனணிந்திருந்த நகைகளெங்கே ? இம்மாது கழட்டும்போது பார்த்தாயா ? விபரமாய்ச்சொல்.

(தலை-காவ-வ-ம்) சுவாமி ? இவள் முன்னடிகழட்டி இவளோடுகூடவந்திருந்தவர்களிடம் கொடுத்தனுப்பி விட்டதாகத் தெரியவருகிறது, (மேலும் இவள் ஒண்டியாய் வந்தேயிராள், அதையும் கவனிப்பீர் ஆண்டவா (மாரித்தாயே ? நிசம்பலுக்கடி அம்மா !) சுவாமி இவளைக்காணும்போது மனுஷியாகத் தோற்றவில்லை, இவ்விடம்பார்த்தால் சாதாரணமாய்க் காணப்படுகின்றது.

(இரண்-வது-மந்-வ-ம்) அடா தலைக்காவலனே ? கேட்டதற்கு சரியுத்தமார்க்கஞ் சொல்லாமல் கண்டபடி உளருகல் சரியா, ஆ ! அரசே ? அப்பா முதல்மந்திரியாரே ? இத்தலைக்காவலன்கொடுத்த பிரமாணவாக்கு மூலத்தையும், இம்மாது கொடுத்த வாக்குமூலத்தையும், ஆராய்ச்சிசெய்து நோக்குமளவில், இம்மாதின் வாக்கே சரியெனப்புலப்படுகின்றது இக்காவலன் வாக்கை நம்பப்போகா தாகையால் இவ்வியாச்சியத்தை நிவர்த்தித்துவிட்டு பிசகாகக்கொண்டுவந்த இக்காவலனுக்குத்தக்க தண்டனை விதிப்பதே சரியென என் புல்லறிவி லெட்டுகின்றது, பிறகு தங்கள் சித்தம்.

(தலை-காவ-வ-ம்) ஐயையோ! என்னசெய்வேண்டா நேசர்களே.

(காசி-வ-ம்) அப்பாமுதல்மந்திரி? நமது இரண்டாவதுமந்திரி இம்மாதிடம் யாதொரு குற்றமில்லையெனப் புகன்றவாறு என்மனதிலும் தோற்றுகிறது, ஆகையால் உன்னெண்ணத்தையும் தெரிவி.

(முதல்-மந்-வ-ம்) நல்லது ஆண்டவா,—(அண்ணாந்து யோசித்தல்.) அரசே? நமது இரண்டாவது மந்திரியோசனையும், தங்கள் யோசனையும், ஏதோ என்புத்திக்கு எட்டவேயில்லை, அதாவது தாங்கள் முன்பு உரைத்ததுபோலும், காவலன் இம்மாதின் காலடியைப் பற்றிபோய் கண்டுபிடித்ததாக வாக்குமூலப்படி சோதனைசெய்வது நன்மார்க்கமென என்புத்தியில் படுகிறது, பிறகு தங்கள் உத்திரவுக் கெதிர்பார்க்கிறேன் ஆண்டவா.

(காசி-வ-ம்) அப்பாமுதல்மந்திரி? நீ வெளியிட்ட விஷயமும்சரியே இப்போது இம்மாதையும், தலைக்காவலனையும் திவட்டியுடன் பின்பற்றி சோதனை செய்துகொண்டு வாருங்கள்.

பொது விருத்தம்.

அண்ணலின்னுணையாலே வமைச்சனங்களுகாமுன்னங்
கண்ணிலாமுனிவனோடி காரிகையடிபோலின்று
மண்ணின்மீதமைத்துத்தானும் மாயமாய்மறைந்துநின்று
னெண்ணிடாத்துயரத்தோடு மிறைவியக்குற்றுளன்றே.

(பொது-வ-ம்) சபையோர்களே! இந்தப்பிரகாரம் காசிமகாராஜன்சொன்னவுடன், மறைந்திருந்தவிஸ்வாமித்திரனோடிவந்து, அவ்விடத்தில் சந்திரமதியடியைப்போல செய்வித்து மறைந்தான், அப்பால்மந்திரிகள் காலடியைப்போய் பரிசோதிக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

(காசி-வ-ம்) கேளாயம்மா! நீ என்மந்திரிகளுடன்போய், அவ்விடத்திலிருக்கு மடிகளைப் பார்த்துவருவாய் மாதே.

(சந்-வ-ம்) அப்படியே போய்வருகின்றேன் ஐயா.

(மந்-வ-ம்) காவலாளிகளே? இம்மாது கையிலிருக்கிற சவத்தைக் கீழேவைக்கச் செய்வதுடன் என்பின்பற்றி அழைத்துவாருங்கள், இம்மாதின் காலடியைப்பார்த்து சோதிக்கவேண்டும் வாருங்களப்பா.

(காவ-வ-ம்) அப்படியே அழைத்து வருகின்றேன் சுவாமி.—அடி கள்ளி? செத்தபாலனைக் கீழேவைப்பாயடி பாதகி.

(சந்-வ-ம்) ஐயா? உங்களுத்திரவின்படி வைத்தேனையா. ஆ! ஈசா!

(மந்-வ-ம்) அம்மா? உன்பாதத்தை யிந்தக் காலடியின்பேரில் வைப்பாய் தாயே.

(சந்-வ-ம்) அப்படியே இதோவைத்தேன், ஈசா! காரும்!

(தலை-காவ-வ-ம்) சரி, சரி, ஐயா! பார்த்தீரா! இம்மாதின் அடி சரியாக விருக்கின்றது.

(மந்-வ-ம்) அம்மா? உன்பாதத்தை யிந்தக்காலடியின்பேரில் வைப்பாய் தாயே.

(சந்-வ-ம்) அப்படியே, இதுவும் விதிதானு!

(காவ-வ-ம்) ஐயா? பார்த்தீரா! அடிசரியாக விருக்கின்றது.

(மந்-வ-ம்) அம்மணி? இன்னும் முன்தோன்றுகிற வடிகளின்பேரில் வைப்பாயம்மா.

(காவ-வ-ம்) ஐயா? பாரும் அடிகளெல்லா மிவள்காலடிதான் சுவாமி.

(மந்-வ-ம்) அம்மா? காலடிகளெல்லாம், உன்னடிகளாகவே யிருக்கிறதே, என்னவிபரீத முன்னைப்பார்த்தால் பரிதாபமாகின்றதே! இதற்கென்ன செய்வோம் தாயே,

சந்திரமதி விருத்தம்.

அமைச்சரேநீங்களிந்த வரிவைமேற்கருணைகாட்ட
அமைச்சரேதகுமோவேந்த னரைந்தவாற்புரிவீரையா
அமைச்சரேயுதிக்கும்போது அன்றயன்விதித்தவாறே
அமைச்சரேநடப்பதன்றி யணுத்துணைபிசகாதையா.

(சந்-வ-ம்) ஐயா மந்திரிமார்களே? நீங்களேன் துயரப்படுகிறீர்கள் பிரமன் என்தலையி லெழுதியவாறு நடக்குமன்றி வேறுநடக்குமோ அமைச்சரே!

(மந்-வ-ம்) காவலாளிகளே? அரசனிட மிவளை யழைத்துக்கொண்டுவாருங்க ளப்பா.

(காவ-வ-ம்) அப்படியே யழைத்துக்கொண்டு வருகிறோஞ் சுவாமி! நட நட.

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-சௌராஷ்டிகம், தாளம்-ஆதி.

இப்போதுனதுமன மொப்பிக்குளிர்ந்துதோதான்
ஏனிப்பழிதொடுத்தாய் பரசிவமே!
ஏந்தலைப்பிரிந்தபின் வாழ்ந்தும்பலனென்ன
எனக்கிவ்விதிவிதித்தாய் பரசிவமே!
வேதத்திற்கொவ்வாத வெங்கொலைக்காரியென்றே
வேந்தனுரைக்கலாச்சே பரசிவமே?
விந்தையிதுவேயாரும் தந்தைதவத்தாலன்று
விளைந்தபலனும்போச்சே பரசிவமே!
நாட்டிலிதுவரையில் நாரிகள்தானறியா
நாணத்தையும்பூண்டுகொண்டேன் பரசிவமே!

நான்பாவியோவலது நீபுரியுஞ்சூதோ
நாட்டிற்பழியையுண்டேன் பரசிவமே !
பிறந்தபோதேயிறந்தால் பெருகியித்துயரென்னை
பேணுமோபேணுதே பரசிவமே !
பேதைமேலிப்பகை சாதிப்பதுமுனக்குப்
பெருமையாய்த்தோணுதே பரசிவமே !

முதல்மந்திரி விருத்தம்.

மன்னவாவென்சொல்வோமிம் மாதுதனடிகளன்றி
யின்னம்வேறடிகள்காணே மிஃதிவள்விதியேயாகு
மென்னமோவிவள்மேற்குற்ற மேற்கிலோமென்றேயின்று
பன்னவோர்வகையுங்காணேம் பார்த்திபாபோற்றிபோற்றி.

(முதல்மந்-வ-ம்) மகாராஜனே ? அவ்விடத்தி லிந்தமாதினுடைய அடிகளன்றி வேறொன்றுங் காணேம், இம்மாதின் பேரில் குற்றமில்லையென்று சொல்ல, வேறோர் மார்க்கமுங் காணேம் வேந்தே. ஆ ! காசிவாழ் விஸ்வேசா ! இதுவரையில் இச்சபையின் கண்ணே யாதொருமாதும் வந்து நிற்கக்கண்டிலேன் ! ஐயோ ! இளவரசுக்குரிய பாலகன். அன்னீதமாய் தென்னாட்டிற்கேகியும் இம்மாது பூர்வஜனனத்தில் யாருக்கென்ன தீங்குசெய்தனளோ ! முன்வினை இன்று இம்மாதுக்கு சூழ்ந்திடலாயிற்றே தவிர இம்மாதால் இத்தீங்கு நேர்ந்ததெனச் சொல மனம் துணியவில்லையே ! இனி என்னசெய்யலாம், சரி, யோசிப்பதில் பிரயோசன மில்லை, ஆதலால் அரசே ? நீதியை அனுசரித்து தீர்ப்பு எழுதிவாசிக்கின்றேன், தங்கள் சித்தமெதுவோ வெளியிட வேண்டும் ஆண்டவா.

(காசி-வ-ம்) அப்படியே எழுதி வாசிப்பாயப்பா, ஆ ! ஈசா ! இப்படியும் என்சகவில் நடக்கச்செய்தா யல்லவா ! (சோகமுறல்)

---

## தீர்ப்புவாசித்தல்.

இக்காசிமா நகரையாளும் காசிமகாராஜன், அருந்தவப் புதல்வன் சுதாகரன் பள்ளியறை மஞ்சத்தின்மீது சயனித்திருந்தவன் அகஸ்மாத்தாய்க் காணாமல் போனதைப்பற்றி நகர் காவலாளிகளைக்கொண்டு அப் பாலகனைக்கண்டுகொணரும்படி கட்டளையிட அவ்வாறே நகர்காவலாளிகளெங்குந்தேடி கடையில் ஏரண்டகாட்டில் சந்திரமதியென்னும் ஓர் பெண்பால் பாலகன் நகைகளைக் கவர்ந்து அன்னியர்பால்கொடுத்தனுப்பிவிட்டு, உயிரைமாய்த்து ஊட்டியை உரியப்போகுந் தருணத்தில் கண்டுபிடித்ததாக காவலர்கள் வாக்குமூலம் (சந்தியென்

னும் பெண்பால் வாக்குமூலம்) இம்மாது உதித்தபூமி வடதேசமென்றும், இப்போது காலவித்தியாசத்தால் இக்காசிபட்டினத்தில் அக்கிராரவீதியி லிருக்கும் ஓர் அந்தணனுக்குப் பணிப்பெண்ணென்றும், தன்நாமதேயம் சந்தியென்றும், தன்மைந்தனிறந்த நிமித்தம் சுடலைக்குப்போகும் மார்க்கத்தில் ஏரண்டகாட்டில் நடக்கும் அவ்வழியில்மகாராஜன்மைந்தன் சுதாகரன் சவமாக தன்காலில்படக்கண்ட சந்தி, தன்மகன்தானென எனக்கையிற்றூக்கி தூக்கிக்குங்காலையில் காவலர்கள்கண்டுபிடித்துவந்து வந்தார்களென சந்தியென்னும் மாது வாக்குமூலங் சொல்லியிருக்கிறாள், இவைகளை யோசிக்குமிடத்தில் இப்பெண்பாலை குற்றவாளி யலவென்த் தீர்மானிக்க யாதொருமார்க்கமுங் காணாததினால் இவ்வாக்குமூலங்களைக்கொண்டு இம்மாதைக் கண்டுபிடித்த இடம்வரையில் இம்மாது காலடிகளையன்றி மற்றொருவர் காலடிக்குப் பொருத்தமில்லாதிருந்தும், பெண்ணாகிய பூமிதேவியின் சாக்ஷியே ரூபுதலையாகக்கொண்டு சிசுஹத்திசெய்த பழிக்காகச் சந்தியென்னும் மாதைச் சூழ்ந்தவளைச் சத்தியநாலிருப்பதால், ஷை மாதின்சிரசை ஷை பூமியின் பேரில் வீழவும், பழிக்குப்பழி வெட்டித்தள்ளுவதே நீதியெனத் தீர்மானிக்கப்பட்டது.

| | | |
|---|---|---|
| சாக்ஷிகள். | } | இப்படிக்கு, |
| முதல்மந்திரி. | | |
| இரண்டாம்மந்திரி. | | ஸ்ரீ காசிமகாராஜன். |
| சபையோர்கள். | | |

காசிமகாராஜன் விருத்தம்.

என்னதானிதற்குச்செய்வோ மெழிலுறுமந்திரிமாரே
தன்னிகரில்லாமாதின் றலைவிதிதானேவையோ
கொன்றைமாமலரணிந்த கோமளன்செயலேரகாணே
னின்னகர்தோட்டிதன்னை யிங்ஙனம்வரச்செய்வீரே.

(காசி-வ-ம்) ஐயோ! இதுவும்காசிநாதன் செயல்தான்! நானெனச் செய்வேன்! சரி நமதுதோட்டியை வரச்செய்வீர்களப்பாமந்திரிகளே

(மந்-வ-ப்) ஆரடா கட்டியனே? அரசர்கோரினதாக அதிசீக்கிரத்தில் வீரவாகுவை அழைத்து வருவாயடா.

(கட்-வ-ம்) அப்படியே அழைத்துக்கொண்டு வருகிறேனையா,—அடே வீரவாகு? உன்னை நமது இராஜாதிராஜன் அழைத்துவரச் சொன்னார், ஓடிவருவாய் வெட்டியானே.

(தோட்-வீர-வ-ம்) அப்படியா! இதோவந்தேஞ்சாமி ஆண்டே.

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

மாதேகேள்காசியாளு மன்னவனழைத்தானென்றே
மாதேகேள்கட்டியன்றான் மகிழுடன்கூப்பாடிட்டான்

மாதேநம்மடிமைத்துன்ப மகன்றிடுமின்றுகண்டாய்
மாதேகேள்செல்வேனிந்த மனையினிலிருப்பாய்கண்ணே.

(தோட்-வீர-வ-ம்) அடி பெண்ணே சாமலா? காசிராசன் அழைக்கிறானும், நான்போய்வருகிறேன், நீ யிங்கு இருப்பாயடி, இதுவுமன்றி நமது அடிமையாகிய அரிச்சந்திர பூபனுக்கு நல்லகாலம் வந்துவிட்டது, இனி சற்று நேரத்தில்சுகம்பெறுவானடி என் கண்ணே.

(சாமலா-தோட்டிச்சி-வ-ம்) அப்படியா! அப்படியே போய்வாருஞ் என்சாமி, ஆனல் விஸ்வாமித்திரமுனிவன் கதியென்ன?

(தோட்-வீர-வ-ம்) அவன் கதி அம்பலமே, அவனும் சற்றுநேரத்தில் சகலருமறிய தலைகுனிய காலம் வந்தேவிட்டது, இனி அரசனைக்கெடுப்பது அதி துர்லபமே, மாதே? காலகரணம் செய்யப்போகாது, நான் வெகு சுருக்கில்போகவேண்டும்.

(சாமலா-தோட்டிச்சி-வ-ம்) சரி, சரி, சீக்கிரம் போய்வாரும் சுவாமி

(தோட்-வீர-வ-ம்) என்னை அய்த்தசங்கதிசெல்லவேணுஞ் சாமி.

காசிமகாராஜன் விருத்தம்.

வலிமையிலுயர்ந்தவீர வாகுவேசொல்லக்கேளாய்
கொலுமுனேநிற்குமிந்தக் கோதையின்கையைப்பற்றி
வலுமையாய்ச்சுடலைக்கேகி வஞ்சகம்புரிந்திடாமல்
தலையதுவிழவேவெட்டித் தான்வந்துதெரிவிப்பாயே.

(காசி-வ-ம்) அடா வீரவாகு? நீ யிந்த பெண்பிள்ளையைச் சுடுகாட்டிற்குக் கொண்டுபோய் தலை பூமியில் விழும்படியாக வெட்டி சங்கதி தெரிவிப்பாயடா தோட்டி.

(தோட்-வீர-வ-ம்) சுவாமி? நா வெட்ட உங்க கையில் இக்கும் பட்டாகத்தியை குடுக்கணும் சாமி..

(காசி-வ-ம்) இதோகொடுத்தேன் வாங்கிக்கொண்டுபோடாதோட்டி

சந்திரமதி கண்ணிகள்.

இராகம்-கெண்டா, தாளம்-ஆதி.

என்னெனச்சொல்லுவேனையோ! எதினிச்செய்குவேனன்றான்
எங்கள்விதிதனக்கே ஓ! சிவமே!
மன்னன்சத்தியபாஷனுந்தான் மயானங்காத்திடச்செய்து
மகனையுமடியச்செய்தாய் ஓ! சிவமே!
கன்றிழந்ததுயரத்தாற் கதறிவரும்வழியிற்
கடும்பழிசுமத்தினாய் ஓ! சிவமே!
இன்றுடனீகொண்டதொரு எண்ணமுமுடிந்ததோதா
னினியென்னசெய்யப்போவாய் ஓ! சிவமே!

கட்டியேகயிற்றாலென்னை கடினமெழுகிளாடி
கதறவிட்டாய்பறையனே ஓ ! சிவமே !
வெட்டியானல்வெட்டுறவே விட்டதுமடியாடனே
விமலாவுன்விளையாட்டோ ஓ ! சிவமே !
நன்றாநன்றுசெய்தாயெந்த நாதனிலைபொய்க்காவண்ணம்
நம்பனேயருளளிப்பாய் ஓ ! சிவமே !
என்றுமுன்றன்றருகினி லிருக்கவெங்களைத்தாங்கி
யிசாமனங்களிப்பாய் ஓ ! சிவமே !

## தோட்டியென்னும்வீரவாகு விருத்தம்.

நடநடநீதான்மெத்த நடித்துமேபடிப்பதேது
சடசடத்திடவேசெந்நீர் சார்ந்திடமுடிதான்வீய
திடமுடன்வெட்டவெந்தன் றிரிபிலாவுரையீதாகும்
தடந்தனிற்காலம்போக்கத் தகாதினிற்றள்ளுவேனே.

(தோட்-வீர-வ-ம்) அடி நடடி நட, என்னடிசிணுக்கிறாய், எல்லாமிப்போது தெரியுது, உன்தலையிரத்தம் ஒழுக வெட்டித்தள்ள அரசன் சொன்னார், நிக்காதே கயித்தை பிடித்து நெட்டுவேண்டி.

## சந்திரமதி விருத்தம்.

என்றனைத்தீண்டவேண்டா மியம்புவேன்வீரவாகு
உன்றனற்கரத்தாலென்ற னுயிர்விடிற்பதவியாகுஞ்
சென்றனன்விதியாலிங்குச் சேரொணாத்துயரருந்த
அந்தணன்கொண்டவெண்ண மறியாதுபுலம்பினேனே.

(சந்-வ-ம்) என்னைத் தீண்டவேண்டாமையா, நானே நடக்கின்றேன், உன்னுடைய கையினாலே நான்மடிய என்னதவஞ் செய்திருந்தேனோ வீரவாகுவே.

(பொது-வ-ம்) கேளுங்கள் சபையோர்களே ? காசிராஜன் உத்திரவின்படி சந்திரமதியை, மாயனத்திற்கு வீரவாகு அழைத்துக் கொண்டுபோனான், அப்பால் காசிராஜனுடைய புத்திரனை மயானத்திற்குக் கொண்டுபோய் அடக்கஞ்செய்யும்படி ஆக்கியாபிக்கும் விதங்காண்பீர்கள் கனவான்களே.

(காசி-வ-ம்) அப்பாமந்திரி ? என்குமாரனை பன்னீரினால் குளுப்பாட்டி இவ்பகந்தபரிமளம்பூசி, புட்பமாலைபுனைந்து, பீதாம்பர மணிந்து எனக்குத் தெரிவிப்பாய் மந்திரி.

(மந்-வ-ம்) சுவாமி ? தங்களுத்திரவின்படி செய்வித்தேன்வேந்தே

## காசிமகாராஜன் விருத்தம்.

அமைச்சரேகேளீரென்ற னருமையாஞ்சிறுவன்றன்னை
இமைப்புடன்றூளமேள மியம்பிடத்தளமுஞ்சூழ

கமைப்புடமயானமேகி காரகில்காஷ்டஞ்சேர்த்தே
யமைத்துமேதகனஞ்செய்தென் னருகினிலுரைசெய்வீரே.

(காசி-வ-ம்) அப்பாமந்திரி ? என்மகனை சதுரங்கசேனைகளுஞ்சூழ, மேளதாளங்களொலிக்க, மயானங்கொண்டுபோய் அகிற்கட்டை மேற் கிடத்தி தகனஞ்செய்து எனக்குசங்கதி தெரிவிப்பாயப்பா.

(மங்-வ-ம்) சுவாமி ? தங்களுத்திரவின்படி உமதுபாலனை சுடுகாட்டுக்கு எடுத்துச்செல்கின்றோம் வேந்தனே.

காசிமகாராஜன் விருத்தம்.

மாதவஞ்செய்துபெற்ற மகனேநீமாண்டிட்டாயே
பாதகனுன்முகத்தைப் பார்ப்பதுமென்றோவப்பா
வாதரவாவாயென்றே யகத்தினில்மகிழ்ந்ததற்கோ
சோதனைசெய்தான்பிரமன் சுடலைபோய்வாழ்வாய்பாலா.

(காசி-வ-ம்) அப்பாமகனே ? நீ யெனக்குதவியாய் அரிசுக்குரிய காரியங்க ளியற்றுவாயென்றிருந்தேன், பாவிபிரம்மன் எழுதிய விதியினால் மாண்டினையோ, நீ சுடலைக்குப்போய் வாழ்ந்திருப்பாய் கண்மணியே.

மந்திரி தரு.

இராகம்-சௌராஷ்டகம், தாளம்-சாப்பு.

பல்லவி.

போவோம்வாரீர்-சுடலைநாடி- போவோம்வாரீர்.

அநுபல்லவி.

காவலனீன்றதோர் கண்மணியைச்சுட
ஆவலாய்நாமெல்லா மன்பாகவேகூட.(போ)

சரணங்கள்.

இராஜன்மனையை விட்டோம் - இதோ
நடுவழியைத் தொட்டோம்
வாசவன்காசியாள் வள்ளலீன்றபாலன்
மோசமாய்மாண்டிட்டான் மொழிவதேதஇனி (போ)

மதனவல்லி தனக்கே - தவத்தின்
மகனுதித்கெதிக்கே
சுதனுயரசுக்கே சுதாகரனென்றமே
சொர்னமளித்ததுஞ் சோர்வுறலாச்சுதே.(போ)

எந்தைபெற்ற பாலா-பிரம்மன்
எழுத்திதுவோசீலா
விந்தையாய்சிறுவனே விரைவிற்தகித்துமே
வந்தேயரசனை வாடாமற்றேற்றிட.(போ)

மந்திரி விருத்தம்.

ஆடாசுடலைகாக்கு மஞ்புளதோட்டிகேளாய்
சேரடாராஜனீன்ற செல்வனேச்சுடவேகட்டை
பேரடாசவத்தைவைக்க பிரியமாய்வந்தோம்நாங்கள்
தீரடாநொடிக்குள்ளேநீ தீவரம்போகத்தானே:

(மங்-வ-ம்) அடா சுடலையி லிருக்குந்தோட்டி ? நமது இராஜாவின் செல்வமகனே தகனஞ்செய்வதற்காக சந்தனக்கட்டை அதிற்கட்டையி னால் சீக்கிரங் காஷ்டம் சித்தஞ்செய்வாயடா.

(தோட்-வீர-வ-ம்) ஓ-ஆண்டமார்களே ? காசிராசா கொயந்தையை திக்க கட்டையடுக்கினே பாருங்கோ சாமி.

(மங்-வ-ம்) அப்பா அண்ணமார்களே ? நமதுராஜகுமாரனே யிந்தகா ஷ்டத்தின்மீதில் பழுதிலாமல் வளர்த்துவீர்க ளப்பா.

(சுற்றத்தார்-வ-ம்) அப்படியே காஷ்டத்தின்மீது அசையாமல் வளர் த்தியாச்சுது, அப்பா மந்திரி ? இனி நடக்கும் காரியம் யோசிப்பாய்,

மந்திரி விருத்தம்.

பரபரப்புடனேநிற்கும் பாங்குளகட்டியக்காரா
அரசன்றன்பாலீசென்றே யன்புடனடந்ததெல்லாம்
திரமுறவிளம்பிநான்ருன் றெரிவித்தவாறுபோல
விரைவினிற்கொள்ளிதீட்ட வேந்தனேவரச்செய்வாயே.

(மங்-வ-ம்) அப்பாகட்டியே ? நீசீக்கிரமாயோடி அரசனிடஞ் சென் று, இவ்விடம் யாவற்றும் தயாராய்விட்டதென்றுசொல்லி கொள்ளி தீட்டுவதற்காக அரசனே அழைத்துக்கொண்டு வருவாயப்பா.

(கட்-வ-ம்) அப்படியே, இராஜபரமேஸ்வரா ? சுடலையில் காஷ்டம டுக்கி ஆச்சுது, கொள்ளி யிடுவதற்காக மந்திரி தங்களே அழைக்கச் சொன்னுர் ஆண்டவா.

காசிமகாராஜன் விருத்தம்.

நாயகன்றனக்கேகொள்ளி நானிடமனமுங்கொள்ளேன்
தாயுடன்பிறந்தவம்மான் ருனுமக்கிருப்பதாலே
காயமுமூழ்கிநின்றே கையினிற்கொள்ளிதாங்கி
நேயமாய்வைக்கச்சொல்லி நீயுரைத்திடுவாயப்பா.

(காசி-வ-ம்) அடா கட்டியனே ? என்னருமை மகனுக்குக் கொள்ளி யிட என்மனம் தியங்குகின்றது? அவடமிருக்கும் எனதுமைத்துனரா கிய பாலன் தாயுடன்பிறந்த அம்மானே கொள்ளியிடச் செய்வாயடா.

(கட்டி-வ-ம்) அப்படியே மகாபாக்கியஞ் சுவாமி.

கட்டியன் விருத்தம்.

நீருரைத்தவாறுசென்றுகொள்ளிதீட்ட
நிருபனேயானழைக்கவந்துமாமீறி

பேருலகையாண்டிடவேபெற்றபாலன்
பிரேதத்தைகட்டையின்மேலிருத்தினாலும்
தேருவுனேகொள்ளியதுதீட்டநெஞ்சம்
திகைத்திடுமேயல்லாதுவேறுமுண்டோ
கூறுகிறேன்ஜெகதலரைக்கொள்ளிவைக்க
கோறினதாயுரைசெய்தார்கொற்றோர்காண்பீர்.

(கட்-வ-ம்) ஐயா மந்திரி ? நமது இராஜாவின் மைத்துனராகிய ஜெகதலமகாராஜன்கையினால் இவ்விடத்தியகருமங்களை நடப்பிக்கும்படிக்கு வேந்தர் உத்திரவு செய்தார் சுவாமி.

(மந்-வ-ம்) ஐயா புரோகிதரே ? ஜெகதலராஜனை ஸ்தானம் செய்வித்து இவ்விடத்திய கருமங்களை கிரமமாய் நடத்திவைப்பீரையயரே.

(புரோகிதன்-வ-ம்) அப்படியே செய்விக்கிறேனையா மந்திரி.—ஓ ஜெகதலமகாராஜனே ! கெங்கையாட எழுந்துவாரும், கட்டியனே தீவட்டிதாங்கி செல்லுவாயப்பா.

(கட்-வ-ம்) அப்படியே முன்னே நடக்கிறேன், இதோ என்பின்பற்றி வாருங்கள் சுவாமிகளே.

அரிச்சந்திரமகாராஜன் தரு.
இராகம்-செஞ்சுருட்டி, தாளம்-ரூபகம்.
பல்லவி.

என்னவிதிவந்தது-அப்பாமந்திரி-என்னகெதிதந்தது.

அநுபல்லவி.

நன்னகரிழந்து நாயகமாமாதை
காடிமுறியாகத் தேடிநான்விற்றுபின்.(என்)

சரணங்கள்.

அருந்தவந்தானே-செய்துபெற்ற
அன்பனும்போனானே
நெருங்கலாகா நீளடவிதனில்
நின்றுதெர்ப்பைகொய்ய வின்றுநாகந்தீண்ட.(என்)

இந்தவிடந்தேடி-என்றன்மாது
ஏங்கிமனம்வாடி
சுந்தரமகனைச் சுடவந்தவளை
சுடுகாமற்சொல்லினால் அடுக்காமொழிபேச.(என்)

கங்குலிற்பேயராளே-காலகண்டன்
கடிந்திடிற்றோராளே
இங்குமிச்சவத்தை யிருத்திவேகினுள்
ஏதேது இன்னமுனி சூதுசெய்வாரோதான்.(என் )

பொது விருத்தம்.

இந்தவாறயோத்திமன்ன னியம்பவுங்காசிராஜன்
மைந்தனைவதைத்தாளென்றே மறையடிதுபிசகான்றேவி
சந்திரமதியைத்தோட்டி சாங்கமாயழைத்துவந்தே
விந்தையாயரிச்சந்திரன்பால் வெட்டிடவளித்திட்டானே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இந்தப்பிரகாரம் சுடலையிலரிச்சந்திரன் வருத்தப்பட்டுக்கொண் டிருக்குங்காலே, சந்திரமதி கொலைசெய்தாளென்று காசிராஜன்விதித்த ஆக்கினைப்படி வெட்டும்படி வீரவாகு அடிமைத் தோட்டியென்னும் அரிச்சந்திரமகாராஜன் கையிற்கொடுக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

தோட்டியென்னும் வீரவாகு விருத்தம்.

காசிபன்மகனைக்கொன்ற கள்ளியாமிவடான்கண்டாய்
தோசியங்காட்டில்வாயுந் தூர்க்கியாம்பாலன்றன்னை
யோசனையின்றியூட்டி னுதிரத்தைகுடித்திட்டாளா
மாசியும்விலகுமுன்னே மறித்திடவெட்டுவாயே.

(தோட்-வீர-வ-ம்) அடா அடிமை அனிச்சா ? இவள் நம்போராசன் மவனைகொண்ணுளாம் காட்டிலேவாயும் பிசாசாம், இவளைபொயிதுவெடியாமுன்னே வெட்டுவாயடா அனிச்சா,

(அரி-வ-ம்) ஆண்டையே ? தங்களாக்கினைப்படி இந்தக் கள்ளியை வெட்டுகிறேனையா சுவாமி.—ஆ ! ஜெகதீசா ! இதென்னகொடுமை ! என்னை பலருமறிய மன்னுதி மன்னருக்கி மகிழச்செய்தவனும் நீயே, இப்போது எங்களைப் பரதேசியாக்கி முறித்தொழில் செய்யவிட்டு, பாலகனை அன்னீதமா யிறக்கச்செய்து என்னை பறையனுக்குக் கீழ்ப்பட்டு அடிமைத்தொழில் புரியும்படி இச்சுடுகாடு காக்கச்செய்தது மல்லாமல் இப்போது எனதெதிரில் நிற்கும் மாதுசிரோன்மணியைப் பார்த்தால் அதியுத்தமிபோலுங் காட்டுகின்றது, இப்படிக்கொத்தவளை,கொல்லாவிரதங்கொண்ட என்னை, இம்மாது சிரசைவெட்டவும் செய்தாயல்லவா ! இது நிமித்தியம் எனக்கு என்னதோஷம் நேரிடுமோ ! ஐயோ ! உன்கிருபையால் ஒருவேளை எனக்கு நல்லகாலம் வாய்த்திடில் உலகோர் பெண்கொலை செய்தபாவியென ஏசார்களா ! ஏ ! பிரமதேவா ! இப்படியும் என் லலாடத்தில் என்னமர்மம்வைத்து எழுதத்துணிந்து விட்டாய் ! இனி யென்னசெய்யலாம் ! (எதிரில் நிற்கும்மாதை நிதானித்துநோக்கல்).அ ! இதென்னபழி ! இம்மாதைப்பார்த்தால் நமது கைப்பற்றிய நங்கைபோலுங் காணுகின்றதே (சந்தேகங்கொள்ளல்) இவளை யின்னுளெனத் தெரிந்துகொண்டு பிறகுயோசிப்போம், சரி மாதே ? நீயார் ? எங்கிருப்பது ? உன் நாமதேயம்யாது ? இக்கொடிய

தண்டனைவாய்த்த தற்குக்காரணமென்ன ? உன்சிரசு மண்மீதில் வீழு முன் உரைசெய்ய வேண்டும் பெண்ணே.

(சந்-வ-ம்) ஆ! தெய்வமே! இரவானதால் நமது நாயகருக்கு இன்னுளெனத் தெரியவில்லை போலுங் காணுகின்றதே! சரி தெரிவிப்போம், ஆ! என்னை பலரும்பார்க்கக் கைப்பற்றிய துரையே! என்கதியைப்பாரும் (இருவரும்துக்கித்தல்.)

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-முகாரி, தாளம்-ஆதி.

பல்லவி.

என்னவிதியடியிது பெண்ணே
என்றலைமையாலிறக்க லானாய்கண்ணே. (என்)

அநுபல்லவி.

உன்னதவிடையேறு முத்தமனருள்தானோ
ஓகோகோவிக்கொடுமை யுலகிலுண்டோதானே (என்)

சரணங்கள்.

மன்னன்மகளாக வந்துபெண்ணே
மாபாவியெனைத்தொட லானாய்கண்ணே
கன்னமாபுரியோன்பாற் கருதிநான்போவென
கசந்தாயிற்றுயருறக் கனியேயடிமானே. (என்)
துரைத்தனமிழந்துடற் சோறவும்பெண்ணே
தொடர்ந்திக்காசிக்கே வந்தாய்கண்ணே
மறையோனுக்கடிமையாய் மகனைப்பறிகொடுத்தாய்
மாதேவாளினல்வெட்ட வந்ததேகதிகண்ணே (என்)
பருத்திபடும்பாட்டிற்கு மதிகமாய்பெண்ணே
பட்டதும்போதாமற் அயனுங்கண்ணே
வருந்திடநீதான்செய்த வாறேதோவறிகிலேன்
வல்விடியுன்றனுக்கே வந்தவாறேதோதேனே. (என்)

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

என்னருமாதேயுன்மே விடியின்மேலிடியதாக
நன்னகர்காசிவேந்த னவின்றதேன்வெட்டச்சொல்லி
யன்னையாமுமையாள்கூற்றே லடைந்தையோவையர்பாகம்
வன்னமாயெனக்குத்தோற்ற வகையுடனுரைசெய்வாயே.

(அரி-வ-ம்) அடியென் பிராணநாயகி ? வேதியரிடம் பணமுங் காசுக்காகப்போன உனக்கு இதென்ன, இடிவந்தது, எனக்குத் தெரியச் சொல்வாய் சந்திரமதி.—ஆ! ஈசா! இதுவுமுன் திருக்கூத்தோ.

## அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-முகாரி, தாளம்-ஆதி.

ஐயோவிதென்னகாலம் அருங்கிளியே-யுனை
அடித்துக்கட்டிவரவு மபன்வி தியோ.
சந்—அரசேநீர்மனத்துயர் அடையலாமோ-ஈசன்
அன்றேயிட்டவாறிதுவே அகலப்போமோ.
அரி—பாலனேயிக்கிருத்தியே பாப்பானைத்தேடி-போன
பாவையேயித்துயர்வர பாவமேதடி.
சந்—காசுதுண்டிலேயெனக் கடிந்துரைக்க-சுடு
காடுவரும்போதுபாலன் காலிற்றுக்க.
அரி—இக்கிருக்கவுன்மகன் ஏதுக்கடி-சவத்தை
எடுத்தாய்கையிளுலிந்த யேச்சுக்கோடி.
சந்—என்மகனென்றழக்கட்டி யென்னைவேந்தே-காசி
இறைவன்முன்விடவெட்ட விட்டான்தேர்ந்தே.
அரி—ஆரையிந்தப்பழிசெய்தேன் அரும்பாவி-என்
றரையலோகத்தோரெனை யானேன்தாவி.
சந்—சத்தியம்நிலைநிறுத்த சாமியேவெட்டி-எனை
சாயுச்சியபதவியைச் சாருங்கெட்டி.

### சந்திரமதி விருத்தம்.

வருத்தமோடையர்தன்னை வணங்கினேன் துண்டுங்காசுந்
தருகிலேனென்றூர்பின்னே தடம்பற்றிவருங்காலிந்தக்
கருமியின்பாதத்திந்த காசிபன்மைந்தன்றுக்க
வருமையாயெடுத்தேன்காவ லாளரும்பிடித்தார்நாதா.

(சந்-வ-ம்) சுவாமி ? நான் வேதியரிடம்போய் பணமும் துண்டும் கேட்டேன், தருகேனென்றூர், திரும்பிவரும்போது வழியில்காசிராஜன்மகன் என்காலில்தாக்க எடுத்தேன் காவலாளிகளும்வந்து பிடித்தார்நாதா.

### இதுவுமது.

கள்ளியென்றெனைப்பிடித்துக் கட்டியேயடித்துக்குத்தி
தள்ளியேபோனூர்காசித் தலைவனுமடியைக்கண்டே
விள்ளவும்நீதியங்கு வேறென்றுந்தோன்றிடாமல்
துள்ளியேபிடித்தோர்வேண்டத் துணித்திடவிதித்தான்போற்றி.

(சந்-வ-ம்.) சுவாமி ! என்னைக் கள்ளியென்று பிடித்துக்கட்டி, அரசன்முன் கொண்டுபோகவிதி வாய்த்தது, காவலர்களடித்த அடிக்கும் குத்திற்கும் தப்பித்தேன், அரசன் உத்திரவளித்தவண்ணம் உம

து ஆண்டையின் கட்டளைப்படி தங்கள் மனதில் யாதொரு சிந்தனை யில்லாமல் தங்கள் கையில் வெட்டுண்டால், நான் பதம் பெறுவேன் பிராணநாதா.

சத்தியகீர்த்தி-தரு.

இராகம்-பியாக், தாளம்-ரூபகம்.

பல்லவி.

என்னகொடுமையோ அம்மா இது
என்னகொடுமையோ வுனக்கிட்டவறுமையோ

அநுபல்லவி.

இன்னங்கொஞ்சத்திற்கு ளிடிமேலிடியுன்மே
லேககாலத்தினில் வேகமாய்வந்தது. (என்)

சரணங்கள்.

முன்செய்தபழியோ-அப்பாவி
முனிவன்செய்வழியோ
என்செய்குவோமினி-யேந்தையும்நானுமே
யிருக்கலானேமிங்கு-வெறுக்குங்கோட்டானைப்போல் (என்)

உத்தமிநீபாச்சே-யுன்றனு
லுதித்தசேயும்போச்சே
நத்தியேகாசியாள்-நாதனுமென்னையே
நறுக்கிவிட்டுன்னுயிர்-தரிக்கவேசெய்யானே. (என்)

இப்படியாமென்றே-அம்மணி
யெனக்கறியாதன்றே
கைப்பிடிகசிவுசிகன்-கவனமணுகாமற்
காத்தேயரசனைத்-தேற்றிருப்பேனேயோ. (என்)

பாவிசெய்தசூது-அம்மணி-இனி
பறந்திடுமின்றேது
கோபித்துநீயொன்று-கூறில்மரிப்பானே
கொஞ்சம்விடப்போக-வஞ்சம்புரிந்திட்டான். (என்)

எல்லாமவன்சூதே-அம்மா-இனி
யேதும்பலியாதே
கொல்லாமலேகொன்றான் கொடும்பாவிகவுசிகன்
கிருபைசெய்யத்தேவர் வருகுவார்சலியாமல். (என்)

சத்யந்தலைகாக்கும்-அம்மா-உன்
சாந்தவொளிநோக்கும்
நித்யநிராமய நிமலன்வரப்போறார்
நீயுமெந்தன்ராஜன் சேயுஞ்சுகம்பெற. (என்)

கெட்டகுறியில்லையே யுன்முகத்தில்
கிளரமதியல்லையே
அட்டலட்சுமியு-மர்டுமுர்முடிமேலே
அடியனிருகண்ணும்-படியவானந்தத்தில் (என்)

## சத்தியகீர்த்தி விருத்தம்.

ஒன்றுக்குமஞ்சவேண்டா மொளிபெருமெந்தாயிங்கே
இன்றுறுங்கவலைநீக்க விறைவியுன்சிரசின்மீதில்
நன்றதையளிக்குந்தேவி நடிக்கிறுளுனக்குத்தோன்ற
வென்றும்நாங்காணப்போகா வீசனும்வருவாரம்மா.

(சத்-வ-ம்) என்னைப்பெற்றதாயே? நீ யொன்றுக்கு மஞ்சவேண்டாம், உன்முடியின்பேரில் சாம்பவி நடிக்கிறுள், தேவாதிதேவர்கள் தெரிசனந்தருவார்கள் அம்மணி.

## அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-சுஹானு, தாளம்-ருபகம்.

விதியோமுனிசதியோகால கதியோவிது - பரனே!
மதிசந்திரவதியைவெட்ட வந்தவினை - யரனே!
நதிமேவியசடையாகாசி நாதாவாரும் - பரனே!
ததியிதுவேதர்க்காத்திடத் தருணந்தெரி - யரனே!
சொல்லாள்கள்ளமெல்லாள் பொய்யையில்லாளிவள் - பரனே!
கல்லாகிலுங்கேட்டாலிவள் சொல்லுக்கழு - மரனே!
பிள்ளைமாண்டுங்கள்ளியென பெண்டீர்தனை - பரனே!
உள்ளமோங்கிவெட்டலானே னுன்றன்செய - லரனே!

## சந்திரமதி விருத்தம்.

படிமிசைதன்னுளாண்ட பண்புளவேந்தரெல்லாம்
முடிபுனைந்தறமியற்றி மொழியொணுப்பெருமைபூண்டு
மிடியதுதொடரப்போந்து மீண்டுபின்கீர்த்திபெற்றுர்
மடிந்திடவந்தேனும்மால் மாய்ந்திடவிதித்தோன்வாழி.

(சந்-வ-ம்) என்பிராணநாதா? இரவிகுலத்தில் பிறந்தமன்னர்கள் வினையால் விளைந்த துன்பங்களை யனுபவித்து பலதருமங்களையுஞ் செய்து தங்கள்கீர்த்தியை நிலைநாட்டியல்லோ, மாண்டு பரமபதவி யடைந்தார்கள், அவ்வாறே நீருமது கீர்த்தியை நிலைநிறுத்த என்னை வெட்டுவீர் பிராணநாதா.

(அரி-வ-ம்) அப்படியே வெட்டுகிறேனடி என்கண்ணே.

## பொது விருத்தம்.

மன்னனுமாதுதன்னை மனக்களிப்புடனேவெட்ட
மன்னனும்வாளையோங்கி மயானத்தினிற்குங்காலை
மன்னவனிலையைக்கொஞ்சம் மாற்றிடச்செய்யவெண்ணி
மன்னவன்முன்னேவிஸ்வா மித்திரன்தோன்றினனே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்வாறாக சந்திசமதியை வெட்ட அரிச்சந்திரன்வாளை யோங்குங்காலை, அவனிலையை யுணராமல் விஸ்வாமித்ரன் தந்திரமொழியாடுகிற விதங்காண்பீர்கள் கனவான்களே

விஸ்வாமித்திரன் தரு.

இராகம்-அடாணா, தாளம்-ஆதி.

பல்லவி.

பொறுப்பாயேமன்னா - இதோநான்
புகட்டுறேந்திரமகற்றுறேன்பதறநீ போகாதுகாண்மன்னா.

அநுபல்லவி.

தருமகுணம்போன்ற தையலுக்கிந்தவிதி
தாங்கியவாறதனை தடுக்கவில்லையோமதி. (பொ)

சரணங்கள்.

கொண்டசந்தோஷமோக்ஷம் கொள்துயர்நரகமென்றே
கூறுமறையின்மொழி கொள்கைவிடுத்தாயின்றே
நன்றோமாதுகழுத்தை நறுக்கத்துணிந்தாயுன்போ
னாட்டிலொருவருமில்லை நயந்துகேளென்றன்சொல்லை (பொ)
அத்திசெய்வதிலெல்லா மறுப்பதுபெண்ணைப்பெரு
அடாதபாதகமென்றே யறியாமற்போனாயிரு
நத்திவந்தவருக்கே நல்கும்வாழ்துதானே
நாயமோவிவ்வழியை நாடாதேபெண்பழியை (பொ)

தத்தஞ்செய்தபொருளைத் தருகவில்லையென்றே
தானுரைக்கினுனக்கே தந்திடுஞ்சுகமின்றே
பெற்றமகன்வருவான் பேதைதன்மகளும்
பேணுவாயென்றன்மொழி பூணுவாய்நல்வழி. (பொ)

(விஸ்-வ-ம்) ஏ ! அரிச்சந்திரபூபனே ? பொறு, பொறு, பதராதே பாஸ்கரன்மரபால், க்ஷத்திரியவம்சத்தில் தோன்றி பத்தினியை வதைக்கத் தொடங்கினையல்லவா ! உன்மனம்கல்லா ! இன்றல்லோ உன்மூர்க்ககுணமும், கொடியச் செயலுங்கண்டேன்; இப்படியும் பெண்கொலைசெய்தபாபியாகிய ஓரரசன் இருந்தானல்லவா என உலகோர் ஏசார்களா ! சக்கிரவர்த்தியெனப் பேர்பூண்டு உன்மாதை இவ்விதக்காரியம் செய்தல்நன்காகுமா ! இன்னமும்பார், மனைவியில்லாவீடு இடுகாடொக்கும், அதில் வசிப்பதாலும் இழிவு உண்டு. மனைவியில்லான் செய்யுங் கருமமெல்லாம் பயனற்றவை, உன் எஜமான் தகாதகாரியத்தைச் செய்யக்கட்டளை யிட்டபோதிலும், அதைசீர்தூக்கி உரைத்தல் சரியொழ்ற ஞாயம், மேலும் இவ்வாறு தானா உன் குருபோதித்தான் ! சதியைவெட்டி சுவர்க்கஞ்செல்கில் அங்கு உனக்கிடங்கிடைக்குமா ! பத்தினியும்,

சுதனுமன்றி அனுபவிக்கும் சுவர்க்கம் நரகமென்றுணர்வாய், இப்போதாகிலும் என்வார்த்தைக் கிடங்கொடுப்பாயாகில் உன்னாற்பெற்ற நாடுமுதலியவைகள் கொடுத்து விடுவதன்றி, பாலகனையும் எழுப்பித் தரத்தடையிராது, என்னசொல்கிறாய் மன்னா ?

அரிச்சந்திரமகாராஜன் தரு,
இராகம்-மோகனம், தாளம்-ஆதி.
பல்லவி.

போம்போமிதுவுங்கனமா எனக்கேபுத்தி-புகட்டுவதிந்ததினமா.

அநுபல்லவி.

தாம்பழிசுமந்ததும் தனையனைத்துறந்ததுந்
தானேயறிந்துமிங்கே தணிவாயுரைக்கவந்தீர்.(போ)

சரணங்கள்.

நாடுநகரம்வீடும் நல்லபணிதளமும்
நயமுடனீரிருக்கத் தந்தேன்-மனம்
வாடும்படிக்கேயன்று வகுத்தகாசியைத்தொட்டு
வளர்காசிமாதுடனே வந்தேன்
பாடுதரகன்செய்பப் பதைத்தென்மனங்கனிந்து
பத்தினிதன்னைநானே பாங்காய்விற்றதறிந்து(போ)

தரகன்கூலிக்காவென்னை தான்பற்றிவருத்திட
தாழ்ந்தகுலத்திற்காளாய் நின்றே-உம்மால்
கரமதிற்சூரிதாங்கி கன்றுகுட்டியறுத்தேன்
கால்வேறுதலைவேறாய் அன்றே
பரமனைப்பணியோரே பதியாய்ச்சுடலைதந்தீர்
பகரொணுகோரங்கண்டும் பாசாங்குபேசவந்தீர்.(போ)

கொடுத்ததையில்லையென்று கோரமொழியென்னுவால்
கோணுதுலைரக்கமனங் கொள்ளேன்-நான்
எடுத்தவிரதமதை யிவ்வுடலழியினும்
இனியொருக்காலும் பொய்யைவிள்ளேன்
தடுத்துத்தடுத்தேயின்னுந் தான்சோதிக்கவுமானீர்
தரமோவுமக்கேமேன்மை தருகாதெண்ணுமற்போனீர்.(போ)

(விஸ்-வ-ம்) அப்படியா ! நல்லதப்பா, அரிச்சந்திரா ! [அயர்ந்துசோகமுற்று எழுந்திருக்கல்] ஆ ! மதியே ? உன்னை நம்பி இக்கோலமாய் விட்டேனல்லவா ! சி,சி,கெட்டேன், ஐயோ ! திருச்சங்கு நிமித்தமாக அமரர்களை பகைத்துக்கொண்டு தவத்தின் வல்லமையால் அபயஸ்தம் கொடுத்து சொர்க்கமளித்த பெருமையெல்லாம் இன்றுடன்தாரைவார்த்தேன், இனி செய்யும் வேறுமார்க்கங் காணேன் ! சத்தியமே பெரு

தென எண்ணி கடைசியாக தன்பத்தினியை வெட்டத் துணிந்தே விட்டான்; இனி வதிஷ்டனைக் கெலித்தேனில்லை! ஆகிலும் நமதுமரபாகிய சூரியவமிசத்தில் இவ்விதசத்தியமுள்ள அரசன் ஒருவன் இருந்தானல்லவா என பூமண்டலமுழுவதும் பேசிக்கொள்வதே நமக்குமேலானகீர்த்தி, இதுதான் இதுநாள்செய்த தவத்தின்பெருமை; நமது முயர்ச்சியே முயர்ச்சி, (சந்தோஷகரமாய் குதித்தல்.)

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம் - கேதாரம், தாளம் - ஆதி.

பல்லவி.

இது தகியே - சிவனைத் துதியே.

அநுபல்லவி.

சதியே - போக்க - விதியே
காந்தனை-மோனப்-பாந்தனை-சாந்தனை-சேந்தனை.  (இது)

சரணங்கள்.

மாதையே-இப்-பேதையை வாதையே-வெட்டக்-கோதையை
வாடினேன்-உனைத்-தேடினேன்
கூடினேன்-இதோ-பாடினேன் நாடினேன்-ஆடினேன்.  (இது)
மங்கையே-என்-னங்கையே இங்கையேநீக்கிச்-சங்கையே
ஏங்கினேன்-மயல்-நீங்கினேன்
தாங்கினேன்-வாள்-நோங்கினேன் ஓங்கினேன்-பாங்கியே.  (இது)
கையனை-வளர்-சையனை மெய்யனை-மோன-மையனை
வேதியை-அருட்-சோதியை
நீதியை-முன்-ஆதியை ஞாதியை-ஓதுவாய்.  (இது)
நாதனை-காசிப்-பாதனை நீதனை-சதுர்-வேதனை
நாடுவாய்-பெண்ணே-ஆடுவாய்
பாடுவாய்-பதி-தேடுவாய் வேடுவாய்-கூடுவாய்.  (இது)

சத்தியகீர்த்தி கண்ணிகள்.

இராகம்-சாமா, தாளம்-சாப்பு.

மாண்மழுவேந்திய நான்மறையேத்திடும்
மோனகுருபரனே - மகிதரனே - அதிபரனே
மானனே-விதி-காரணனே-யிது-தோணனே-தோ-தோ.
அன்னைதனையிங்கு மன்னன்கையால்வெட்ட
என்னமதி தொடுத்தாய்-அறிவெடுத்தாய்-குறிகெடுத்தாய்
ஐயனே-அருள்-மெய்யனே-மனம்-நொய்யனே-நொ-நொ.
தந்தையடிமையாய் தாயுமுறிபட
தனையனுயிர்பறித்தும்-தனைவெறுத்தும்-உனைப்பொறுத்தும்
தாக்கினுய்-துய-ராக்கினுய்-வினை-நோக்கினுய்-நோ-நோ.

உத்தமாவென்றன்னை-பெற்றவள்வெட்டுண்டால்
பித்தனேலோகமுண்டோ-ஊருமுண்டோ-பேருமுண்டோ
ஓடிவா இங்கு-தேடிவா-மனம்-நாடிவா-நா-நா.

(அரி-வ-ம்) அடிமாதே ? காசிவிஸ்வேசனுடைய பாதத்தைதியானித்துக்கொண்டுன் முடியைநேராய்க் குனிவாயடிஎன்ரத்தினமே, இனி தாமதிக்கப்போகாது, ஆ ! ஈசா !

(சங்-வ-ம்) ஏ ! பிராணநாதா ? மதிவல்லோய் ? உடலின் இழிவும் புகழின் உயர்வும் நன்குணர்ந்த நரபதியே ? இதென்ன ! உமது மனதைவிட்டு மாய்கையென்னும் பசாசு இன்னமும் நீங்கவில்லை போலுங் காணப்படுகின்றது, நீரும் அறியாதார்போல் தைரியம் இழக்கலாகுமா உமது பெருங்குணங்கண்டு அறவாழிமூர்த்தி அருள்புரிவார் ஐயமில்லை ; மேலும் பெண்டென்னு மாசை நீரும்விட்டு, என்னை உமது ஆண்டையின் கட்டளைப்படி கொலைபுரிந்திடில் இதுதான் அடியாள்நோற்றநோன்பின்பலன், சீக்கிரம்வெட்டுவீர் இதோகுனிந்தேன்துரையே.

## சந்திரமதியை முதன்முறை வெட்டுதல்.

### அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அரகரசிவமேசம்போ வாதியேயுமையாளோடுங்
கரமதிற்சூலமேந்திக் கந்தனையளித்தநேயா
சிரமதுவிழுவேயென்றன் செல்வியைவெட்டுகின்றேன்
புரவலாயிவளுக்குன்றன் பொன்னடியளிப்பாய்போற்றி.

(அரி-வ-ம்) அடி மதிதயன் தவத்தில்வந்த பெண்ணே ? நமது நாடுவிட்டுக் கடனுக்காக இன்னாட்டில் என்று விற்றேனே அன்றே பெண்டெனும் ஆசை திக்கிரிகித்தேன், ஆனால் உலகபாசம் உன்னைப்பார்த்தவுடன் கப்பினதால் இவ்வாறு உளரி மனந்தளரலானேனே ஒழிய வேறொன்றுமில்லை, சரி, இனித்துணிந்தேன், ஓம் அரகரசிவசம்போ ! சங்கரமகாதேவா ! சச்சிதாநந்தமூர்த்தி ! எனதருமைப்பெண்ணாகிய சந்திரமதியை ஆண்டையி னுத்திரவின்படி யிதோ வெட்டுகின்றேன், இவளுக்குன்னடி காட்டிக் காத்தருள்வாய் கைலைநாதா.

### பொது விருத்தம்.

மன்னவனுங்கயிறுபற்றி வாளையோங்கி
மாதுதனைமுடிகுனியச் செய்துவெட்ட
தன்னகத்தாற்சதிபுரிந்த விஸ்வாமித்திரன்
தானருகிலொளித்திருந்து கண்டுமெப்போ
தின்னமிவனிலையதனை யறிவோமென்று
இறைவனுடைவாளதனை யோலைபோல

அன்னநடையாள்கழுத்திற் சுற்றச்செய்தா
னயோத்திபனுங்கண்டு மனம்வாடுவானே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? அரசன் ஓங்கிவாளினால் வெட்ட பக்கத்தில் ஒளித்திருந்த விஸ்வாமித்திரன் தனதுமாய்கையால் வாளானது சந்திரமதிகழுத்தில் ஓலைபோல் சுத்திக்கொள்ளச் செய்தான், அதைக்கண்ட அரசன்வருத்தப்படுகிற விதங்காண்பீர்கள் கனவான்களே

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

என்னடிமாதேசெய்தா யெனக்குமேதோன்றநீதான்
பன்னடிகற்பிலேதும் பழியுண்டோவலதுயாதோ
மின்னடிதேகமின்று மெலிந்லோவுளமுஞ்சோர்ந்து
மன்னனுன்சத்தியம்பொய்க்க மார்க்கமேவந்ததையோ.

(அரி-வ-ம்) அடிபெண்ணே ? இதென்ன ! நீயேதாகிலுங் கற்புமீறி நடந்ததுண்டா ! என்வெட்டுக்குத் தடைவந்த காரணமென்ன ! என் மனம் பதறுகின்றது, சீக்கிரஞ் சொல்லுவாய் பெண்ணே.

சந்திரமதி விருத்தம்.

அரசனேயெனதுகற்பி லணுவினிலணுவும்பேதம்
சரசனேநடந்ததில்லைச் சண்டாளமுனியின்சூதோ
புரவலாநிலையிலேதும் போந்ததோர்தோஷங்காணேன்
பரன்வசம்நிறுத்தியெண்ணம் பண்புடன்வெட்டுவீரே.

(சந்-வ-ம்) சுவாமி ? என்கற்பில் யாதொருகுறைவுமில்லை, உமது நிலையில் ஏதுதோஷமோ ! அல்லது கௌசிகன்சூதோ ! நீர் பரத்தின் பேரில் மனம்நிறுத்தி வெட்டுவீர் அரசே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

ஏனப்பாவீணுயிந்த விம்சையுந்துன்பங்கொண்டாய்
தானமாய்க்கொடுத்தநாட்டைத் தந்திடென்றுரைப்பாயாகி
லூன்மொன்றில்லாவிங்கே யுன்மனையாளும்பாலன்
தீனமோடில்கில்வாழத் திருவெலாமீவன்கண்டாய்.

(விஸ்-வ-ம்) அப்பா அரிச்சந்திரா? ஏனிந்த துன்பங்கள் படுகின்றாய், எனக்குக்கொடுத்த நாட்டையில்லையெனவாங்கிக்கொள், நானுனக்கு சகலசம்பத்தும் வரச்செய்கின்றேனப்பாராஜனே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயனேசத்தியந்தொண்டே யடாதபொய்யதனைச்செப்பி
வையகந்தனிலேவாழ வணங்குவேனுமைப்போலொக்குந்
துய்யவென்னிலையைநாட்டத் தோகையையிருதுண்டாகக்
கொய்யுவேன்குறுக்கேபேசிற் குணமுண்டோவுமக்கேபோற்றி.

(அரி-வ-ம்) சுவாமி ? பொய்பேசி வாழ்வைக்கோருபவருமமைப்போலொக்கும், என்சத்தியம் பிசகாமல் என்தேவியை இரண்டாமுறையும் வெட்டுவேன், குறுக்கேபேச வுமக்குத்தகாதென்றறிவீர்.

சந்திரமதி விருத்தம்.

மேகத்திற்றோன்றிமாயு மின்னற்போனிலேமையில்லாற்
றேகத்தைநம்பிச்சத்திய மிழைப்பவருமைப்போலாவர்
யோகத்திலுயர்ந்தநாதா வுன்மனங்களிக்கவென்றன்
சோகத்தைவிடுவேன்நீராப் பழிசுமந்தேங்குவீரே.

(சந்-வ-ம்) சுவாமி முனியே? இந்தவுடல் மின்னலைப்போலொத்தது உமது எண்ணங்களிக்க என்திரேகத்தை யிழைக்கிறேன், நீரென் பழியைச் சுமந்தலைவீர் தூரப்போம்முனியே.

(விஸ்-வ-ம்) அப்படியா! ஐயையோ! கெட்டேன், கெட்டேன்.

சத்தியகீர்த்தி விருத்தம்.

மகிபனேகாதகன்சொல் மனதினினிறுத்தலாகா
அகிலமீதுமதுசத்திய மாணியாயறையவேணும்
திகிலதுபோக்கியுன்றன் றேவியைத்திரும்பிவெட்டி
மூகிலுடன்முடியும்வீழ முதற்பதியடைவீர்போற்றி.

(சத்-வ-ம்) மகாராஜனே? இந்தமோசவெண்ணமுடைய முனியின் வார்த்தைக் கிடங்கொடாமலென்தாயின் முடிதரையில் விழவெட்டி கீர்த்திகிறத்தி திவ்யபதவியை யடைவீர்வேந்தனே.

சத்தியகீர்த்தி விருத்தம்.

காதகவிஸ்வாமித்திர கனிவிலாமுனியேகற்றப்
பாதகவினையிருந்தாற் பண்புடன்புரியலாகும்
வேதனைதனக்கேயஞ்சோம் வேந்தலின்னுறுதியாலே
மாதவநெறிகுலேந்தாய் மயக்காமனடந்திடாயே.

(சத்-வ-ம்) ஓ! விஸ்வாமித்திரமுனியே? இன்னமேதாகிலும் வஞ்சகமிருந்தால் காட்டிவிடும், கொஞ்சமும் அஞ்சமாட்டோம், சந்திரமதியும்மன் கற்பினால் நீதுயரத்துக்குள்ளாவாய் முனியே.

(விஸ்-வ-ம்) அட்டா! இவனுமா இப்படியாய் விட்டான் சரி சரி.

சந்திரமதி தரு.

இராகம்-உசேனி, அடதாளம்-சாப்பு.

பல்லவி.

என்னஜென்மம் பெண்ணின்ஜென்மம்
இட்டதே துன்பம் என்றன்விதி. (என்)

அநுபல்லவி.

மன்னன்பணியிலொன்று மறுத்ததிலேயேயென்றுந்
துன்பத்திற்கெனைவிட்டதே என்றன்விதி. (எ)

சரணங்கள்.

வெட்டினவுடன்தலை விழுத்தாமல்வாளதைச்
சுற்றிவிட்டதேகன்மம் என்றன்விதி. (எ)

சத்தியம்பிசகிடாச் சார்ந்துநடந்தமெய்யன்
கத்தித்தடைசெய்ததே என்றன்விதி. (எ)
உத்தமாகாசிவாழ் உம்பனேயுன்றுதோ
மூற்றுஞ்சோதிக்கவிட்டதே என்றன்விதி. (எ)
என்னைச்சோதிக்கப்போமோ வெறியுதேயுடலிதோ
பன்னகாதுணித்திடவே என்றன்விதி. (எ)
ஆச்சியென்விரதம்பொய் யாச்சுதோவடியேயுன்
தாக்ஷண்ணியமதைவிடவே. யிதுததி. (எ)

சந்திரமதி விருத்தம்.

மன்னனேயெனதுசத்திச மதிபனேயுன்றுள்போற்றி
யென்னருநிலையுமாக்ஷி யிணையடிமனதில்வைத்தே
னுன்னருங்கடவுள்பாத மூறுதிகொண்டோங்கிவாள
லின்னமோர்தரம்நீர்வீசி யெறிந்திடென்முடியைத்தானே.

(சங்-வ-ம்) என்பிராணநாதா ? என்னிஷ்ட தெய்வத்தை நினைந்து கொண்டேன், நீர் உமதுதெய்வத்தைப் பணிந்து இன்னமொருதரம் வெட்டி யென்முடியை வீழ்த்தி கீர்த்திபெறுவீர் அரசே.

## இரண்டாம்முறை வெட்டுதல்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

புவனசராசரவுயிர்கட்கெல்லா மதிபதியேபசுபதியுன்புகழேசத்தியம்
தவம்பெறுமாமுனிவர்துதிபிரணவத்திேைனாங்காரப்பொருளேசத்தியம்
அவனிதனிற்பிசகில்லாவாண்மைகொண்டேனிதமாகிலதுமேற்சத்யம்
பவமறியாதிவள்கற்புஞ்சத்தியமேவெட்டுகிறேன்பண்பாய்த்தானே.

(அரி-வ-ம்) இந்த ஈரேழுபுவனத்திற் கதிபதியாகிய பரமசிவமே! தவசிரேஷ்டர்கள் துதிக்கும் ஓங்காரப்பாதமே, எனது நிலைமையும், இவள்கற்பும் சத்தியமாகில், இவ்வெட்டுக்கு இரண்டு துண்டாக விழக்கடவது.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தேவிநான்வெட்டவாளுன் றிகழ்பெறுங்கழுத்திலேயோ
தாவிபூமாலையாகத் தான்விழ்வதென்னேகாணேன்
பூவின்மேலரிகள்மேவும் புகழ்முகின்மாதேயிந்தப்
பாவனையெதுவோதோற்றப் பன்னடிபரிவாய்த்தானே.

(அரி-வ-ம்) பெண்ணே சந்திரவதி? நான் வெட்டியவாளானது உன் கழுத்தில் பாரிஜாதமாலையாய் விழுந்தது, இது என்ன அதிசயம் சொல்லுவாயடி பிராணநாயகி.

சந்திரமதி விருத்தம்.

வேந்தனேவிண்ணில்வாழும் விமலர்கள்விளைத்தமாயங்
காந்தனேவேறேயெண்ணங் கருதிடப்போகாதென்றன்

பாந்தனையவர் மேலாணை பகர்ந்துநானிற்பேன்கோப
சாந்தனேவெட்டியென்னைச் சாருவீர்கீர்த்திபோற்றி.

(சக்-வ-ம்) எம்பிராணநாதா ? இதுதேவதைகளால் கடந்தபுதுமை யா யிருக்கிறது, இதோநான் அந்த தேவதைகளின்பேரில் ஆணையிட் டுமறித்து நிற்கின்றேன், நீர் மனந்தளராமல் பரமசிவத்தைத் தியான ஞ்செய்து வெட்டுவீர் அரசே.

(அரி-வ-ம்) பெண்ணே ? அப்படியேநான் உறுதிநினைவுடன்வெட்டு கின்றேனடி உத்தமியே.

சந்திரமதி விருத்தம்.

அட்டதிக்குப்பாலகரினடிமேலாணை ஆதிசிவவுமையவளினடிமேலாணை
சிட்டிசெயுமாறுமுகச்செம்மலாணை செழுமையுறுநவக்கிரகர்பாதமாணை
கட்டமதைப்புரிவித்தகௌசிகன்மேலாணை கதனமுளதேவாதிதேவராணை
இட்டமுடனிவாளாலென்னையிங்கே யெறிகுவீரினிப்பெருமைபெருகுவீரே

(சந்-வ-ம்)—(சந்திரமதி கொலைப்பாறையின்மீது நின்று சத்தியங் கூறல்) ஏ ! அட்டதிக்குப்பாலகர்களே ! ஏ ! கங்காதரனே ! ஏ ! உமா தேவி ! ஏ ! முருகக்கடவுளே ! ஏ ! நவக்கிரஹாதிபதிகளே ! இவ்வளவு இடர்களையுண்டாக்கியும் போதாமல் மென்மேலும் எங்களை நாசப்படு த்த எண்ணங்கொண்டுதிரியும் ஏ ! விஸ்வாமித்திரமுனியே ! கதிராயி ரங்கொண்ட ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே ! இன்னமற்றுமுள்ள தேவ தேவர்களே ! உங்கள்யாவர்பேரிலும் முழுமனதோடு ஆணையிட்டே ன், அதாவது யான் பத்தாவாக்குமீறாத பதிவிரதையாயிருந்தது உண் மையாகில் இன்று பதியின்கையால் இவ்வெட்டுக்கு என்தலை பூமியில் உருளவேண்டும் ; ஜெகதீசா ! அப்படி ஆவி நீங்கினும்கருமத்தையொ ட்டி வேறுஜனனம் உற்பத்திசெய்தாலும் என்பத்தாவையே யடைய வேண்டும், இந்தவரந்தந்து ஆதரித்தாளவேண்டும் சம்போ ! ஆதிமூல ப்பொருளே ! காரும் ! காரும் ! இனி வெட்டுவீர் பிராணநாதா.

## மூன்றும்முறை வெட்டுதல்.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அம்பிகைமணாளனை யரியராசுரர்களொப்ப
வம்பனுமித்திரன்கூறும் வாடிடக்கிளியோனும்
நம்பினேனுன துசத்தியம் நாயகிமகிழ்ந்தேனுள்ளந்
தம்பினேனிலையினாலே துணிக்கிறேன்குனியுவாயே.

(அரி-வ-ம்) பெண்ணே ? உன்சத்தியத்திற்கு மெச்சி நம்பினேன், இ தோவெட்டுகின்றேன் குனிவாயடி மாதே.—(வெட்டுதல்)

மயானகாண்டம்,

சம்பூரணம்.

சுப்ரமண்யன்சகாயம்.

ஸ்ரீ-அப்பாவு பிள்ளை.



ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோதசபை.

# மீட்சிகாண்டம்.

## பொது விருத்தம்.

இவ்விதமிவர்கள்சத்திய மியம்பியேகொலைபீடத்தில்
ஒவ்வவேயிருவரொத்து ஒருமையாயுண்மைகொண்டு
வெவ்வியேவேந்தன்வாளை வீசிடும்வேளைதன்னிற்
கவ்விடப்பரமன்வந்தே கைதனைப்பற்றினனே.

(பொது-வ-ம்) சபையோர்களே, இவ்விதம் சந்திரமதி சத்தியமிட்டே க்குனிய, அரசன் வாளையோங்கிவெட்டும் தருணத்தில், பரமசிவன் பார்வதிசமேதனாய் ஓடிவந்து தனது அன்பனுடைய கையைப்பிடித்துத் தடுத்தாட் கொள்ளுகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## பரமசிவன் விருத்தம்.

அரிச்சந்திராவோடிவந்தே னரிச்சந்திராபதறவேண்டாம்
அரிச்சந்திராநீயேசத்திய னரிச்சந்திராநீயேநித்யன்
அரிச்சந்திராநீயேயன்ப னரிச்சந்திராநீயேயின்பன்
அரிச்சந்திராகையைத்தொட்டே னரிச்சந்திராபொறுத்திடாயே.

(பர-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நீயேசத்தியன், நீயேநித்தியன், நீயே அன்பன், இதோநா னுன்கையைப் பிடித்தேன், பதறாதேபதறாதே பத்தனே.

(கட்-வ-ம்) சுவாமி ? நமதரசன்மகனைக் கொலைசெய்தவளைச் சிரச்சேதஞ்செய்ய நமது வேந்தனுக்கினையிட்டாரே அவளை வீரவாகுகொணர்ந்து தன்னுடைய ஆளின்வசமொப்பிக்க, அவன்வாளையோங்கி வெட்டுங்காலை பரமன்வந்து தோட்டியின்கையைப் பிடித்துக்கொண்டார் நந்த அதிசயத்தைவந்து காண்பீரையா.

(காசிமந்திரி-வ-ம்) அப்படியே வருகின்றேனப்பா கட்டியனே.

## அரிச்சந்திரமகாராஜன் தேவாரம்.

விடையாச்சுடலைப்பொடி பூசும் விமலாமழுமான்மதிநீருஞ்
சடைமீதணிந்துபுரமெரித்த சம்போவன்பர்தயாநிதியே

மைய்யா திருவாலயன்றனக்கே கிட்டாவெளியேகிளரொளியே
படையாயுமையாளொளிப்ங்கா பதியேயிவளுன்னடைக்கலமே.

இதுவுமது.

தூப்பதுன்கூட்டமையென்றே கதறினேன்கயிலைவாசா
தீர்ப்பதுசமயம்நாளுந் தரிசிக்கவந்தாய்போற்றி
பார்ப்பதுமெனைநீயல்லால் பரனேவேறொருவருண்டோ
ஏர்ப்பதைக்கனிவுகூர்ந்தே யிவட்னைரக்ஷிப்பாயே.

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம் - மோகனம் - தாளம்-ஆதி.

| | | |
|---|---|---|
| இப்படிநீ | கைபிடித்தா | எப்படிநிலை |
| தப்பிடி | லெனக்குவசை | கப்புமேதேவே |
| செப்புவாய் | வெட்ட | ஒப்புவாய்நாதா. (இ) |
| இப்புவியி | லுப்புகொளுந் | தொப்பைதானுமே |
| குப்பியின்றி | செப்புசிலை | யொப்புமோதேவே |
| துப்புறவு | மெய்ப்பரனே | அப்புமோயெங்கும் |
| தூயனே | அருள் | நேயனேவிடு. (இ) |
| சத்தியமே | நித்தமென | பித்தனேகோவே |
| சுத்தமுடன் | சித்தமதில் | வைத்தேனேதேவே |
| இத்தருணங் | கத்தரித்த | லுத்தமோலோகம் |
| ஏசுமே | என்னைப் | பேசுமேவிடு. (இ) |
| தத்தமிட்ட | நத்தமதை | சுத்தனேநாதா |
| பத்திடி | லசுத்தமாகு | முத்தனேதாதா |
| உத்தமியை | பத்தியுடன் | கத்தரிக்கவேவரம் |
| ஊட்டுவாய் | அருள் | நாட்டுவாய்இனி. (இ) |
| அந்தமுள | சுந்தரியின் | கந்தாத்தையேநாதா |
| வந்தவினை | பிந்திடவே | கொந்திடவுமேபாதா |
| அந்தரத்தோர் | விந்தையுடன் | எந்தனைப்பேசமன |
| மாக்குமே | வினை | போக்குமேஇனி. (இ) |

அரிச்சந்திரமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-தேசிகதோடி, தாளம்-ரூபகம்.

| | | |
|---|---|---|
| சம்போசதாசிவா | வெனைச் | சாரவந்தவா |
| உம்பருரைபவா | வுமை | மகிழ்ந்தவா |
| ஆலமுண்டவா | ஞான | வருமைபூண்டவா |
| காலகண்டவா | கனத்த | தாண்டவா |
| மூலரூபமே | ஜீவ | மோனதீபமே |
| கோலாகாலனே | துதிக்குங் | கொண்டரூபனே |

| | | |
|---|---|---|
| கங்கைநாதனே | மோன | கிருபைபோதனே |
| சங்கைவேதனே | சர | ணம்பாதனே. |
| சூலப்பாணியே | சொக்குஞ் | சுழிந்திருணியே |
| காலவேணியே | கண்டேன் | பூணியே |
| காளைவாகனு | வுமை | கருதும்போகனு |
| வேளைமோகனு | விஷத்தின் | தாகனு |
| ஞானருத்திரா | நாடும் | மோனபாத்திரா |
| இயானநேத்திரா | கிளருஞ் | சாத்திரா |
| எங்குந்தாண்டவா | திங்க | ளிளமைபூண்டவா |
| சங்குகொண்டவா | சகல | மூண்டவா. |

## சந்திரமதி தேவாரம்.

ஆகூஷிநீகிளத்தியம்பா வானந்திவீரிசூலி
பேச்சினிருபிமாதா பிங்களிகுமரியன்பர்
வாகூஷிநீகயிலையீசன் வளரிடம்வாழுமீ
நாகூஷியேயுமையேயுன்றன் நல்லடிநமஸ்துதாயே.

சுந்தரிநீலிகௌரி சொல்லுமுக்குணத்திகாளி
விந்தரிவாலைசோதி வேதகிவிமலிசத்தி
மந்தரியுமைவராகி மாதவியம்பாதேவி
யந்தரிலோகமாதா யடியாளையாட்கொள்தாயே.

## சத்தியகீர்த்தி தேவாரம்.

நஞ்சதையுண்டதூயா நாடினேம்நமசிவாயா
தஞ்சம்நீயல்லால்வேறு தயாநிதியறியோம்நேயா
நெஞ்சதுவாடிவேந்தன் நிதிபதிமாதுபாலன்
அஞ்சலாலிழந்துத்தானும் அடிமையாய்நின்றார்தானே,

## அரிச்சந்திரமகாராஜன் நானத்ஷா.

ஆதிமூலப்பொருளே ஜோதியொளியேயுனை
ஓதிபணிந்தேன்குருவே பலன்
ஏதினித்தான் மருவே.

பாதிமதிதரித்த நீதி ஓங்காரனே
ஆதரித்தாள்திருவே இனி
சோதிக்காதேகுருவே யிந்த
மாதினையாள்திருவே ஓம் (ஆதி)
அரியயனமரர்கள் பிரியமாயேற்றிடும்
கரியுரித்தலோகா வெள்ளி
கிரிமிதித்தவாகா
திரிபுரந்தனையன்று கரியதாயெரித்திட்ட



-தேவியுமைபாகா | பாலன்
மரிக்கவிட்டாய்யோகா | நிலை
தரிக்கச்செய்வாய்யோகா | ஓம்.(ஆதி)

பாரறக்கருமன்றுதிரிகிக்கடையவந்த
காளமுண்டநாதா | நாங்கள்
சரணமென்றோம்வேதா
தரணியிலுதித்தது | பாலனேபோதுமுடலே
தான்சுமக்காள்பாதா | நல்ல
வரமளிப்பாய்நீதா | என்
கரம்பற்றியதாதா | ஓம்.(ஆதி)

நீர்மேற்குமிழியதாம் பாரினில்வாழ்வது
தீர்க்கவரங்கொடுப்பாய் | முனியின்
ஆக்கமதைகெடுப்பாய்
கார்முகில்சிரம்வாளால் | சீறிநான்வீசியே
கண்டிக்கக்க்ரம்விடுவாய் | பாவம்
தீர்த்திடத்துணைப்படுவாய் | சத்தியம்
ஏர்த்திடஅருளிடுவாய் | ஓம் (ஆதி)

பரமசிவன் விருத்தம்.

மைந்தனேயரிச்சந்திராநீ மனமினித்தளரவேண்டாம்
சிந்தைகளுனக்கொன்றில்லை நீயுமென்னன்பனுகு
மிந்தவாறுனக்குத்தீமை யெய்திடக்கொடுமைசெய்தே
வந்தவனூரோவந்த வம்பனைத்தெரிவிப்பாயே.

(பரம-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ! நீயொன்றுக்கும் மனங்கலங்க வேண்டாம், உனக்கு யாதொரு குறைவுமில்லை நீயென் அன்பனுகும், உனக்கிவ்வாறு கொடுமைசெய்த வம்பனை தெரியப்படுத்துவாய் அப்பா

(காசிமந்திரி-வ-ம்) அப்பா கட்டியனே, இதோதோட்டியா யிருப்பவர் அயோத்தியையாண்ட ஏகசக்கிரேஸ்வராகிய அரிச்சந்திரமகாராஜர், நமது அரசன் வெட்டும்படி யாக்ஞாபித்ததாக் குடன்பட்டவள் சந்திரவதியம்மை ; ஆனதால் நீயோடி யிச்சங்கதியை நமது அரசனுக்குத் தெரிவித்தழைத்து வருவாயப்பா கட்டியனே.

(கட்டி-வ-ம்) அப்படியே தெரிவித் தழைத்து வருகின்றேனையா.

கட்டியன் விருத்தம்.

மன்னவரேகள்ளியென்று வெட்டச்சொன்ன மங்கைதனைத் தோட்டியுமே வாளேயேந்தி, அன்னநடையாள்தலையைக் குனியச்செய்பி, அரகரசம்புவென்றே வீசும்வேளை, என்னசொல்வேன் கையிலையனுரோடி

வந்து இட்டமுடனவன்கரத்தைப் பிடித்துமையா, துன்பமென்னவந் ததரிச் சந்திராவென்றார் தோன்றலேயறிவிக்கத் தோன்றினேனே.

(கட்-வ-ம்) கேளுஞ்சுவாமி? தங்கள்பாலகனைக் கொலைசெய்தவளை னக் காவலாளிகள் பிடித்துவந்தமாதை,சிரச்சேதஞ்செய்ய ஆக்கினையி ட்டவாறு, வீரவாகு அம்மதைதத்தன்னடிமைவசமொப்பிக்க அவர் சுடலையில்வாளைவோங்கிவெட்டும்போது, நஞ்சுண்டமூர்த்தி ஓடிவந்து கையைபிடித்துக்கொண்டார், வெட்டவோங்கிய தோட்டி அரிச்சந்தி ரமகாராஜராம், தாங்களாக்கினையிட்டமாது சந்திரவதியம்மனும், ஆன தால் மந்திரிதங்களுக்குத்தெரிவிக்கச்சொன்னார் வேந்தே.

(காசி-வ-ம்.) ஆ! அப்படியா! என்னகெடுதிசெய்துவிட்டோம்; மோ சம்வந்து நேரிட்டதே, இதற்கேதுசெய்வது காசிநாதா!

காசிமகாராஜன் விருத்தம்.

அன்னமேகாவலர்கள்மொழிந்தவாறே யருமகனைக்கொலைசெய்த க ள்ளியென்று, வன்னமாய்வாளளித்து வெட்டச்சொன்ன வஞ்சியுமே யயோத்திபரின் மாதாங்கண்ணே, இன்னகரின்சுடலைதனிற் சக்ரவர்த் தி யிருந்தடிமையாளாகி வெட்டும்போது,பன்னகபூஷணம்பூண்டோ னவர்கரத்தைப் பற்றினாராம் தெரிசிப்போம்பரிவாய்வாராய்.

(காசி-வ-ம்.) கேளாய்பெண்ணே? நமதுசிறுவனைக்கொலைசெய்த கள்ளியெனவெட்டச் சொன்னதோர்மாது, சந்திரவதியம்மனும், சுடலை யிலேசக்ரேஸ்பரராகிய அரிச்சந்திரபூபதியடிமைத்தோட்டியாய்வாளை யோங்கி நமதாக்கினைப்படித் தன் மாதைவெட்டும்போது,பரமனோடிவ ந்துஅவரிருகரத்தைபிடித்தனராம், நாம்போய் அவரை தெரிசித்துநம துகுற்றத்தைப்பொருக்கும்படி மன்றாடுவோம் வருவாயடிமாதே.

(மத-வ-ம்.) அப்படியா! இதோ வருகின்றேன், பிராணநாதா? ஐ யோ! நாம் என்ன தீங்குசெய்துவிட்டோம்! நமக்கு என்னதீங்குநே ரிடுமோ! சீக்கிரம்வருவீர்துரையே.

அரிச்சந்திர மகாராஜன் தரு.

இராகம்-சங்கராபரணம்-தாளம் ரூபகம்.

பல்லவி.

சொல்லுவேன்நாதா வந்தவாறு சொல்வேன்பொற்பாதா

அநுபல்லவி.

அல்லும்பகலுமுன்ற னடியிணைத்தொழுதேற்றும்
அடியனெனக்குவந்த வருந்துயரிடரதைச் (சொ)

சரணங்கள்.

யாகஞ்செய்திடப்பொன்னை யன்புடனெனைக்கேட்க
அளித்தேன்முனிவருக்கே யதையென்றன்பாலிறுத்தி

வேகமாய்ச்சென்றேவி விட்டரர்வனவிலங்கை
விரட்டப்பன்றியும்வர விழ்த்தநீச்சமாதரை
மேவகோரினுரெனத் தாவ மருதளிக்க
கோவமுடனேவந்து பாவ கௌசிகர்தேவே
கொண்டார்களர்ந்தாசை கோமளாபலதுயர்
கொடுக்கப்பாவிதரகன் கொண்டதாரத்தைவிற்றேன். (சொ)
முறிகொண்டவையனே முஷ்கரன்பாலனை
மூதையேகைபற்றி முள்ளடவிக்கேகி
சிறியவனைசமித்துச் சேரெனபாம்புதீண்ட
செல்வன்மறிக்கத்தாயுஞ் சிக்கெனக்கண்டெடுத்தே
சிந்திடசுடலையும் வந்திட பறையனுளாய்
தந்திடதுண்டுங்காசு முந்திட வெனமறுக்க
சேயையிங்கிருத்தியே செம்மலிபோனபின்
சிக்கிக்காவலர்கையிற் சிவனேயிவளின்கெதி. (சொ)
இன்னகரமன்ன னீன்றநற்புதல்வனை
இவள்கொலைசெய்ததா யிறைவன்முன்பாய்விடுக்க
துன்னவாவேந்தனும் துணிக்கவிவள்சிரசை
துரையேயென்னுண்டையித் தோட்டிவசமளித்தார்
தூயனேயெங்குநிறைந்த மாயனே கௌசிகராலே
நேயனேயிக்கதியானேன் சேயனே வெட்டவே துண்டாய்
தொலைக்கவேயிவளாவி தோன்றலேயாடுவாய்
தொல்லுலகிலென்சத்தியந் துலங்கிடவருளுவாய். (சொ)

(பொது-வ-ம்.) சபையோர்களே ? இந்தப்பிரகாரம் அரிச்சந்திரமகாராஜன் சொல்லைக்கேட்ட கௌசிகன், நின்றகிளையும் பிடித்தகொம்பும் விட்டமந்திபோற்குன்றி பரமசிவன் முன்வருகிறவிதங் காண்பீர்கள் கனவான்களே.

## விஸ்வாமித்திரன் தேவாரம்.

விண்ணவர்க்கதியேபோற்றி வித்தகப்பொருளேபோற்றி
மண்ணினர்க்கிறையேபோற்றி மாதவக்கொழுந்தேபோற்றி
பண்ணலேயானேபோற்றி யாதியேபோற்றிமூன்று
கண்ணனேபோற்றியிந்தக் கடையனையாள்வாய்போற்றி.

## பரமசிவன் விருத்தம்.

மிக்கதோர்தவங்கள்செய்த மித்திரமுனியேகேளாய்
அக்கமுமொழித்தே லோகத் தொல்லையையழித்தநீதா
னக்ரமும்புரியவிந்த வாண்மைதான்கொண்டதேது
பக்குவஞ்சரியோவிந்த பகருவாய்குணத்தைத்தானே.

(பர-வ-ம்) ஏ! தவமுனியே? நானெனுமாணவத்தை யொழித்தவ னுச்சுதே, இப்படிசத்திய அரிச்சந்திரனைத் துன்பப்படுத்த உனக்குவந்ததுற்குணத்தை சொல்லுவாய்முனியே. அ! இதென்னகொடுமை!

விஸ்வாமித்திரன் விருத்தம்.

என்னருந்தேவேசா னியம்புவேனிந்திர னினியநற்சபைநாடியே, ஏகினேன்சுக்கிர னக்கினியுமரிகால னெட்டுதிசையோரைநோக்கி, பன்னருந்தேவர்கோனுலகினிற்சத்யனூர் பகருவீரெனவதிட்டன், பதட்டமாய்தன்சிடனையோத்திபனெனவங்கு பசுபதிவந்தநந்தான், சொன்னவர்க்குரைப்பீரெனத்தடுத்தவன்பொய்யன் செறற்சோருஜாரனென்றேன், சோமனேபந்தயஞ்சாற்றினே மிருவருஞ் சோதியுணர்வதிஷ்டன்றன்னை, தன்னகமொடுக்கிடசிறையிட்டு மண்ணுற்று தாணுவேயிமயமேகித், தந்தும்நான்பலவாறு துன்பங்கள்பலியாம லறிந்திதோதவிக்கிறேனே.

(விஸ்-வ-ம்) பரமசிவமே! தேவசபையில்,வதிஷ்டன் இந்தஅரிச்சந்திரனை சத்தியவானெனை, நானசத்தியனென இவ்வாறுநாங்களிருவரும் பந்தயங்களிட்டு நான்சொன்னமொழியைருபிக்கவேண்டி பலவாறுதுன்பங்களை இவனுக்கிட்டும், இவனிலை பிசகாததினுல் நான் தலைகுனிந்துழலலானேன் ஆண்டவனே.

(பர-வ-ம்) நீசெய்ததுன்பங்களை விவரமாய்த் தெரிவியும் முனியே.

(விஸ்-வ-ம்) அப்படியே தெரிவிக்கின்றேன்நாதா

விஸ்வாமித்திரன் ஆசிரியவிருத்தம்.

மலைதங்கியோசித்து மன்னவன்பாற்சென்று மறியாகமதுசெய்யவே, மட்டிலாப்பொன்பெற்றவன் பாலிருத்தியே மாதவாவிலங்கையேவி, குலையுளபயிரெலா மழித்திடவிவனுமே கொன்றனன்வேட்டையாடி, கோவேநானிருநீச்ச மாதரைவிடுத்திவனைக் கூடிடவழைக்கவென்றேன், தலைவனுமவர்களை தண்டித்தவோட்டவும் தயாநிதிநான்கோபமுய்த், தான்சென்றுமிவனுடைய வரசுடனியாவத்துந் தாரைவார்த்திடக்கவர்ந்து, நிலைபிசகானிடமுன்வைத்தபொருட்னை நேயனேகொடுக்கவென்றே, நிஜமுளோன்காசியிற்றருவேனெனத்தாகனை நித்தனேயேகினேனே.

(விஸ்-வ-ம்) நாதனே? நான் இமோத்கிரிச்சாரலை யடைந்தபின் இவனிடம்வந்து யாகஞ்செய்யப்பொன்கேட்டேன், கேட்டவாற்கொடுத்ததை யிவன்பாலிருத்தி மிருகங்களையேவிப் பயிர்களையழிக்கச்செய்தேன் அன்றியுமிரண்டுநீச்சமாதர்களையனுப்பி இவனைக்கூடிச்சுகந்தர அழைக்கச்செய்தேன்,மறுத்திவன்தெண்டிக்க, இவனுடையாநேகாங்

களை கைக்கொண்டு பணாதையாக்கி முன் இவனிடம் யாசித்து இருத்திப்போன பொன்னைக்கடனுகச்சுமத்தி, காசிக்கு,

இதுவுமது.

ஏவியதாகனுற் பலதுய்ராருந்தியேயிறைவனுமாதுதன்னை, எண்ணுமல்விற்றுமக்கடனீயதாகனுந் தன்கூலிதாவென்னலே, மேவினவடிமையாய் வீரவாகுவனுக்கு மிழிவானதொழில்புரிந்தான், மெய்க்கவிலன்மாதினைக் கொண்டவன்பணித்தொழில் மிகவாயியற்றவைத்தான், தாவிடவிமன்மகன் காட்டிற்குப்பாம்பினாற் றன்மறித்திடவமைத்தேன், தயாபராசவமதை யிவளேந்தியிச்சுடலை தங்கவுஞ்சுடுகூலிதான், கூலியேயிவன்கேட்க காலகண்டர்க்குநான் கொடாவெனப்போயுரைத்தும், கொற்றவாவிவனுளம் வருக்கவுங்காசியன் குழந்தைவாறறைகுலேவனே.

(விஸ்-வு-ம்) சிவமே ? தாகனிம்சைக்கஞ்சி பெண்டைவிற்றுக் கடனளித்தான், தாகன்கூலிக்காய்த்தான் பறையனுக்காளானன், இவன் மகனைக்காட்டிற் பாம்புகடிக்கச்செய்தேன், சந்திரமதிசவத்தை சுடவ்ரச் சுடுகூலிகேழ்க்கச்செய்தேன், ஐபறை கூலிகொடாதிருக்கச்செய்ததுந்தவிர,

இதுவுமது.

அறைகுவேன்மைந்தனைக் கள்ளராற்கவர்ந்துமே அவன்கழுத்தினை முறித்து, ஐயனேயிவள்வரும் பாட்டையிற்கிடத்திட அனங்கைகாற்பட்டெடுக்க, துரைமுனமிவள்கொன்றளெனவிட்டுமாதினைதோன்றலே சிரசைவெட்ட, துன்பமாயிவன்கைவசம் விட்டுமனதினைத் தோன்றியேசோதித்தோனான்.

கிரைகுறையாமலே நின்றனன்முன்கொண்ட நிலைதனில்யான்கலங்கி, கெட்டுயிர்விட்டிங்குவாடினேன்காரியும் நீங்கினுனிவனைவிட்டே, தரைதனிலழியாத சத்தியனிவனுகித் தானுவேநான்பாவியாய்த், தாங்கினேனபாவதமென்றனையாட்கொளுன் றுளடிக்கடிமைநானே.

(விஸ்-வ-ம்) பரமே ? சந்திரமதிவருகின்றவழியிற் காசிராஜன் குழந்தையைக் கொலைசெய்தாளெனச்செய்து, இவன் கையால்வெட்டுறவும்விடுத்தும், இவனிலைபிசகாதிருக்கக்கண்டு, வசைக்குள்ளானேன், மன்னித்து ஆட்கொள்ளும் பரம்பொருளே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்வாறுவிஸ்வாமித்திரன் தான் கொலைசெய்வித்த துன்பங்களையெல்லாம் பரமசிவனுக்கு தெரிவித்தான் ; அப்பால்தெய்வலோகத்தில் நாரதமுனி காசிச்சுடலைக்கு தேவேந்திரனையழைத்து வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே,

## நாரதர் விருத்தம்.

தேவர்கள்வாழ்த்தயோகத் தினர்களேத்தவந்த
மூவர்கள்புகழயாரு மொழிந்திட விண்ணையாளுங்
காவலாவயோத்திமன்னன் கைதனைப்பரமன்றொட்டார்
தாவுவோம்வருவீர்நாமுந் ததியினிலங்குகானே.

(நாரதர்-வ-ம்) தேவேந்திரமகாராஜனே ? அரிச்சந்திரன்காசித்தோட்டியாய் மயானத்தில், கவுசிகன்மோசத்தினால் சந்திரமதிமுடி விழவாளால்வீசும்போது, பரமனவன்கையைப்பிடித்துக்கொண்டார், நாமும்போய் காணலாம் வருவீர்வேந்தே.

(தேவே-வ-ம்) அப்படியா ! இதோ வருகிறேன் நாதமகாமுனியே.

## தேவேந்திரன் விருத்தம்.

மங்கையேயிந்திராணி மானேகேளயோத்திமன்னன்
நங்கையைவாளேயோங்கி நறுக்கிடும்வேளைபித்தன்
சங்கையைவிலக்கவேண்டிச் சார்ந்துகைபிடித்திட்டாரா
மங்கைநாம்செல்லவேண்டு மன்புடன்வருகுவாயே.

(தேவே-வ-ம்) பெண்ணே ? அரிச்சந்திரன்தோட்டியாகித் தன்மனைவியை கவுசிகன்மாய்கையால் காசிபன்கட்டளைப்படி மயானத்தில் வெட்டும்போது, பரமன்தோன்றி கையைபிடித்துக் கொண்டிருக்கின்றாராம், நாம்போய் காணுவோம் வருவாயடி பெண்ணே,

(இந்திராணி-வ-ம்) அப்படியேவருகின்றேன்சுவாமி.

## பொது தரு செத்து.

தேவர்கோனுஞ்சுடலைநாடித்தேவியுடனே
திங்கள்தரித்தோனைக்காணத் தின்புயத்துடனே
அயோத்திமன்னன் நிலைதனையறியத்தானே
ஆவலுடனரசருமழைக்கவுமானே
தன்னெதிரில்கவுசிகன்றன்றன்மைக்காணவே
தயானிதிசம்புமுன்னேதானுந்தோணவே

## தேவேந்திரன் கவி.

அண்ணலேகைலைவாழு மையனேயுமையாள்பாகா
வண்ணமாம்விடைமீதேறும் வாதியேபோற்றிபோற்றி.

(தேவே-வ-ம்) போற்றிபோற்றி கைலைவாழ்வேபோற்றி.

பரமசிவன்-கவி. ஆயிரங்கண்ணுவாழி யயிறுவந்திலேறும்
நோயிலாமனத்தோய்தேவர் நூற்றிடுங்கோனேவாழி.

(பர-வ-ம்) வாழிவாழி தேவேந்திரமஹாராஜனேவாழி.

இந்திராணி-கவி. ஆகூதிரூபியம்பா ஆதவிமுங்குணத்தி
காக்ஷியேதருகுமுன்றன் கழலடிபோற்றிபோற்றி.

(இந்திராணி-வ-ம்) போற்றிபோற்றி பரமேஸ்வரியம்பாபோற்றி.

பார்வதி-கவி. இந்திரன்மனதில்நாளு மிருந்திடுமருவேதிவ்ய
சுந்தரவதநாகீயுஞ் சுகம்பெறவாழிவாழி.

(பார்-வ-ம்) வாழிவாழி, இந்திராணியேவாழி

(நாரதர்-வ-ம்) போற்றிபோற்றி பரமசிவமே.

நாரதர் விருத்தம்.

அன்றுமெத்தவாங்கார மாகப்பேசி ஐயனும்வதிஷ்ட்டனுடனடமே செய்தாய், இன்றுதலைகுனிந்துநிற்க வந்ததேது இகழ்ந்திடவேசகலரு னையெடுத்தாய்கோலம், நன்றிதுகாண்வீணுகப் பழிக்காளானுய் நாத ருடன்முனிவர்களும் நகைக்கலாளு, ரெண்டிசையும்புகழ்பெற்றூர்வதி ஷ்டரப்பா இசைக்குமொழி வசைக்குடம்பே யெடுத்தாய்நீயே.

(நார-வ-ம்) ஓய்விஸ்வாமித்திரமுனியே? நீதேவசபையில் பேசிய பெருமை யெங்கேபோய்விட்டது, இப்போதுதலைகுனிந்திருக்க வந்த காரணமேது சொல்லும் ரிஷியே.

(விஸ்-வ-ம்) நீரறியாதகாரணமொன்றுண்டோ, எல்லாந்தெரிந்து என்னை யிப்படிகேழ்ப்பதுஞ் சரியோ நாரதரே.

தேவேந்திரன் விருத்தம்.

என்னகாண்விஸ்வாமித்திரா விரக்கமாய்தலைகுனிந்தாய்
நன்னதாய்ச்சபையிலன்று நவின்றவுன்வாக்கின்வாறு
மன்னவன்புரியவிங்கு மமைத்தையோகெலித்திட்டாயோ
வின்னமேன்வெளியிடாம லிருப்பதுவுரைசெய்வாயே.

(தேவே-வ-ம்) விஸ்வாமித்திரமுனியே? உம்முடையபந்தயம் கெலி த்தீரா, தெரியச்சொல்லும் இராஜரிஷியே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

இந்திரனேயிமையவருக் கரசேயென்ன இயம்புவேனடியனுடவிறு மாப்பெல்லாஞ், சுந்தரனேயிருண்டவன மடையலாச்சு சொற்சோறு னைவிவனைச்சொல்லலாச்சு, தந்தரம்நான்செய்ததெல்லாம்வீணதா ச்சு தாபமுடன்றலைகுனியுந் தகியதாச்சு, வந்தவர்களனையேசிவரை யலாச்சு வம்பனென்றுந் துன்பனென்றும் வகையாய்த்தானே.

(விஸ்-வ-ம்) தேவர்கோனே? நான்செய்தபிரயத்தினங்களெல்லாம் வீணதாச்சு, உலகோரென்னை வசையாடவுமாச்சென்றறிவீர் வேந்தே

தேவேந்திரன் விருத்தம்.

கல்லதுமுனியேநீதா ஞடியேதேவர்முன்பு
வல்லமைசெய்தாய்தோற்பில் வதிட்டனுநீயேயாகி
லல்லலையகற்றியன்றே யரைந்திட்டபந்தயத்தை
[illegible]யில்புரிவீரிந்த வுலகவரொப்பத்தானே.

(தேவே-வ-ம்) விஸ்வாமித்திரமுனியே? தோற்றவர்வதிட்டரா? அல்துநீரா? நீர்தோற்றிருந்தால் சொன்னபடி பந்தயத்தை நிறைவேற்றும் இரிஷியே.

விஸ்வாமித்திரன்விருத்தம்.

ஏதுநான்சொல்வதினி யிறைவர்வேந்தே யுன்மொழியேயிழிவாச்சுதோற்றேனுனே, தீதரியாபிரம்மரிஷி கெலித்தோனுந் தெரிகுவீரன்றுரைத்தவாறுபோலச், சூதரியாவரிச்சந்திரன் றனக்கோனுஞ் சொன்னபடியென்றவத்திற் பாதியோடு, மாதவரேமுன்னவனுலடைந்தநாட்டை மகிழுடனேயானளிப்பேன் மன்னிப்பீரே.

(விஸ்-வ-ம்) தேவராஜனே? நானேதோற்றவன், கெலித்தவர் வதிட்டரே, நான்சொன்னபடி அரிச்சந்திரனுக்கு என்தவத்திற்பாதியு மவனிடமிருந்து நான் தாரைகொண்ட நாடு நகரமுதலானவைகளையு மிதோகொடுக்கின்றேன்வேந்தே.

(தேவே-வம்) அப்படியேசீக்கிரந்தாரைவாருமுனியே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

என்னமொழியிக்குரைத்தீர் மூயோநாதா வெறியுதென்னுடல்பற்றிசெவியினுள்ளே, வின்னலுறநாரசங்காச்சிச்சாய்த்து விட்டனபோற்றுன்றுதையோவெதும்பிநெஞ்ச, மின்னிலத்திலிரந்தவருக் கீந்தசொத்தை யெவர்கொண்டார்மறுபடியு மெங்குங்காணேன், நன்னயமோ நாடாண்டவரசனுகி நானளித்தபொருளடைதனவிலக்கேளே.

(அரி-வ-ம்) முனிநாதா? நீரிப்போது சொன்னமொழிகேட்டு என்னுடலெல்லாம் பற்றியதீதணியாதெரிகின்றது, வந்திரந்தவருக் கீந்ததைமறுபடியும் பெற்றுக்கொண்டவர்களுண்டோ கேளிம்நாதா.

இதுவுமது.

நவிலக்கேளவ்வாறு புரிவேனுகி நரகம்வருமிம்மைதனி னாட்டோரெல்லாஞ், சவலமிலாளெனப்பலவாறேசுவார்கள் சற்சனர்களிகழ்வார்சண்டாளனென்றே, தவமணியேயெனைப்பலவாற் றுன்பமெல்லாந் தானருந்தவிட்டதன்றிப் பழியைமுன்னும், பவம்பெருக்கச் சுமைசுமத்தவெண்ணங்கொண்டீர் புண்ணியுவோ வன்றளித்தநகர் பற்றேன்போற்றி.

(அரி-வ-ம்) சுவாமி? நீர் சொன்னவாறு கொடுத்ததை மறுபடியும் வாங்குபவனுக்கு நரகமேகாணியாகும், என்னையிவ்விதத்துன்பங்களனுபவிக்கச்செய்ததும் போதாமலினிமுன்னுக்கு மெனக்கு பாவமூட்டைசுமத்தவெண்ணங் கொள்வதுதருமமா, கொடுத்தநாடு வாங்கிடேன்நாதா.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

மன்னவனேயின்றுரைக்கக் கேளாயென்றன் மகாயோகதவநிலையை மறந்துமப்பா, உன்னகரையாண்டுநிசமற்றவாழ்வி லோங்கிடவும்நான ன்றுகவர்ந்ததன்றே, நன்னவர்களறியவன்றுன் குருவுநானும்நாடியே தேவர்கோன் முன்பதாகப், பன்னியவாறுனையசைத்துப் பார்த்தேனீ யோ பண்புளோனதிசத்தியன்பற்றுவாயே.

(விஸ்-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நானுன்னுடை நகரைப்பரித்துக் கொண் டிந்த நிலைபற்ற வாழ்விலிருக்குஞ் சுகத்தை யனுபவிக்கவும் நானடைந்திருக்கும் அழியாவாழ்வை யிழந்திருக்கவும், கவனித்தவன ல்ல,தேவேந்திரன் முன்சொல்லியபடி யுன்னை சோதித்துப்பார்த்தேன். நீயே சத்தியனுதலால் உன்னுடைய நாட்டை நீயே பெற்றுக்கொள்வா ய்வேந்தே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

சரியலவேயிவ்வார்த்தைமாதுதன்னைச் சலியாமலந்தணருக்கடிமை செய்தேன், இரியவேயென்மகனும்பாம்பால்மாண்டா னிங்குநான்புலே யனுக்காகின்றேன், கரியானசுடுகாட்டிற்காவல்பூண்டேன் கனிவில் லாத்தரகனிலுவிடுக்கமுற்றேன், பரியாசஞ்செயவந்தீ ரயோத்திநாட் டைப் பற்றிடேனெனக்கிதுதான்பதிகாண்பீரே.

(அரி-வ-ம்) சுவாமி ? நீர்சொல்வது சரியோ ! நானென் பெண்டை வித்தும், பாலனை பாம்புக்கிட்டும், நான் பறையனுக்காளாகியும் இந்த சுடுகாட்டைக் காத்தும், மறுபடியும் செங்கோல் பிடிக்கத்தகுமோ, என க்கிதேகாணி, நீரயோத்தியை யாளுவீர் முனிநாதா.

பரமசிவம் விருத்தம்.

ஒருவரைக்கெடுத்தேவாழ வுள்ளத்தில்நினைந்தேசத்தியந்
தருமத்தைவிடுத்துமிந்தத் தகாததோர்பழிகளாக்குங்
கருமத்தைச்சுமந்தாய்நீயும் கவுசிகமுனியேயுந்தன்
வருமத்திற்கிணைந்தோர்த்திமை வரச்செய்வாயிங்குதானே.

(பர-வ-ம்)—(யோசித்தல்) சரி, கவுசிகமுனியே ? உனக்குடைந்தை யா யிருந்தவர்களை யதிசீக்கிரத்தில் வரவழைப்பாய்முனியே.

(விஸ்-வ-ம்) அப்படியே வரச்செய்கிறேன் பரமசிவமே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

அந்திந்திரன்சபைதனிலேயடியேன்றங்க ளருள்வழியேவணங்கிநி ற்கமனங்கனிந்தே, நன்றுசெயவெனக்காகவிண்ணைவிட்டே நாடியுயர் காசிநகரடைந்தீர்யானு, மன்றுசெயும்வகைபுரிந்தமாயாவேமா மாதவ த்தோர்பணிசுப்பிரமணியேயன்பு, துன்றவருவீரிங்குவருணசுக்கிரா தொழுதிட்டேனக்கினியேதோற்றுவீரே.

(விஸ்-வ-ம்) எனக்கு இந்திரன்சபையில் வாக்களித்தபடி என்கோ ரிக்கை நடாத்திய எமதர்மனே ? மாயவனே ? சுப்பிரமணியனே ? சுக் கிரனே ? வருணனே ? அக்கினியே ? தங்கள் தங்கள் சுயரூபத்துடன் இந்தசுடலைக்கு வருவீர்கள் சுவாமிகளே.

அக்கினிபகவான் விருத்தம்.

அன்னமேமாதேகேளா யருந்தவவிஸ்வாமித்திரன்
சொன்னமேசுந்தரமூர்த்தி சொல்லியவாறுநம்மை
சன்னகமொடிங்கிபந்த சத்தியன்றனக்கேதோற்று
இன்னிமையழைக்கலானு னேகுவோம்வருகுவாயே.

(அக்-வ-ம்) பெண்ணே சுவாலா ? அரிச்சந்திரனை யசத்தியனுக்க தான் கொண்டவெண்ணம் நிறைவேறாமல், சுடலையிற் பரமசிவன்மு ன் கவுசிகன் றலைகுனிந்தவனுய் நம்மையங்கு சுவயரூபத்துடன் வரக் கோறுகின்றான் ஆனதால் வருவாயடி மாதே.

(சுவாலா-வ-ம்) அப்படியே வருகின்றேன் பிராணநாதா.

அக்கினிபகவான் தரு.

இராகம்-சாவேரி, தாளம்-ஆதி.

பல்லவி.

எக்கினேசுரன் நானே

அநுபல்லவி.

இமையவர்முனிவர்க ளனைவருமேற்றிடும். (எ)

சரணம்.

வேதமுதலறிந்தோர் மற்றும்
விளங்குநெறியுந்தெரிந்தோர்
போதநிலையுணர்ந்தோர் யோகப்
புனிதநடையிற்சிறந்தோர்
மாதவர்ஸ்ரீதரர்மன்னவர்வைத்தியர்
மனங்களிந்தேதுதிக்க மகிழச்செய்வோனை. (எ)

எமதர்மராஜன் விருத்தம்.

கேளடிமாதேநம்மைக் கிட்டிச்சுடலைதானே
தாளடிதொழுதேயந்தோ தவிக்கிறான்முனிவன்றனும்
நாளடிமுடிந்ததிப்போ நலம்பெறவயோத்திமன்னன்
தோளதுபெருகநீதி தொல்லுலகாளுவானே.

(எமதர்-வ-ம்) பெண்ணே சாமலா ? அரிச்சந்திரனுக்கு நல்லகால ம் வந்துவிட்டது, கௌசிகன் தன்கொர்வ மொடிங்கிப் பரமன்முன் த

எச

லைக் குனிந்து, நம்மை வரும்படி வேண்டுகிறான், போவோம் வருவா யடி கண்ணே,

(சாமலா-வ-ம்) மகாசந்தோஷம், அப்படியே வருகின்றேன் சுவாமி.

### எமதர்மராஜன் கண்ணிகள்.

இராகம்-மோகனம், தாளம்-ஆதி.

வாராரிதோதருமனும் வனிதையுடனே
பாராளுமன்னனின்றுயர் பரக்கத்துடனே
கொண்டபறைவேடம் நீக்கிக்கோதைமேவவே
அண்டர்புகழ்பரமன்றன் னடியைத்தாவவே
பத்தினியின்கொள்கையாலே பரமன்பாருமே
நித்தியன்றன்கைபிடித்த நேர்மைதேருமே.

### சுப்பிரமணியர் கண்ணிகள்.

வாராரிதோகுக நமசிவாயதேவனும்
சீராயரிச்சந்திரன்றுயர் சிதைக்கபாவனும்
பூலோகமும்புனித தேவர்புகழும்பாதனும்
சாலோகசாமீபக்தருஞ் சாமிநாதனும்
வேலாயுதமோங்கிடவே விமலன்காணவும்
பாலாவாவெனவுமித்திரன் பணிந்துநாணவும்
நாகமாகத்திண்டியதோர் நயத்தைக்காட்டவே
லோகமதின்மன்னன் புகழோங்கநாட்டவே.

### மகாவிஷ்ணு கண்ணிகள்.

வாராரிதோவைகுந்தத்தின் வாழுமாயனே
கோராய்வேந்தனென்ன மதைநீக்கநேயனே
தேவர்களுமூவர்களுந் தினந்தினமேற்ற
ஆவலுடனடியவர்க என்புடன்போற்ற
கள்ளனுகிகாசிவேந்தன் கனியுமாய்த்தவன்
வள்ளல்முன்புதோன்ற அன்பர்வருமைதீர்த்தவன்

### சுக்கிரபகவான் கண்ணிகள்.

கையைக்கட்டிபிதோசுக்ரன் கனங்குறைந்துமே
கடிகவாரான்பயந்து ஜலக்கண்ணீரறைந்துமே
முனிவன்சொன்னமொழியைக் கேட்டுமுனேந்துநாடியே
மூர்த்திமுன்னேதோன்றமன முகமும்வாடியே
பதிவிரதையைவிற்கச்செய்த பாவமெண்ணியே
பார்வதியாள்கோபமாகப் படியாயுன்னியே
காசிநகர்சுடலையினிற் கணத்திற்றேற்றவே
காக்குவித்தேபரமனடி கண்டுபோற்றவே.

## பொது விருத்தம்.

கவுசிகன்றன்முறையிடவும்வரவேசொல்லிக்
காலனுந்தன்மாதுடனேவருசலானுன்
தவிழின்றித்தேயுவுமேயெண்ணினல்லா
டன்ஞேடுநெடுமாலும்வெள்ளிதானும்
மவுனிகளுக்கருள்புரியுங்குமரவேளும்
மயிலேறிவேலேந்திமகிழ்கூஷியோடு
நவிலொணுச்சத்தியனதுநிலேயைக்காண
நாடியேசுடலேதனைநண்ணினரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? விஸ்வாமித்திரன் முறையிடக்கேட்ட சுப்பிரமணியன், மாயவன், எமதருமன், அக்கினிதேவன், சுக்கிரன் முதலானவர்களுஞ் சுடலேவந்து பரமனேவணங்குகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## தேவர்கள் கவி.

எங்களேயன்றுட்காக்க வெண்ணியேவிஷத்தையுண்ட
மங்களவுமையாள்பாகா மலரடிபணிந்தோம்போற்றி.

(தேவர்-வ-ம்) போற்றிபோற்றி, எங்களேயாட்கொண்டபரமசிவமே

## பரமசிவன் விருத்தம்.

காலனேதருமன்தன்னேக் கண்டவாவாழிமாயா
சீலனேவாழிஜோதிச் செகம்புகழ்தேயுவாழி
ஞாலத்திற்பெருமைபூண்ட நல்லசுக்கிரனேவாழி
வேலனேமயூரவாகா வேந்தையேவாழிவாழி.

(பரம-வ-ம்) வாழி வாழி, எனதன்பர்களே வாழி.

தேவதாஸ்ரீகள்-கவி. அம்மையேயுமையேசர்வ வாதியேமோனரூபி
நம்மையேயளித்துக்காப்பாய்நாயகியேபோற்றிபோற்றி

(தேவதாஸ்ரீ-வ-ம்) போற்றிபோற்றி எங்களிறைவியேபோற்றி.

பார்வதி-கவி. சாமலாவாழிவாழி சான்றவற்காதியான
நேமனின்மாதேசுவாலா நீடூழிகாலம்வாழி.

(பார்-வ-ம்) வாழிவாழி என்னன்புக்குரிய கண்மணிகளேவாழி.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

நாயினுங்கடையேனென்னே நாடியேசுவர்க்கம்விட்டு
நோயுறுஞ்சுடலேவந்த நவலருமமரர்கோவே
தாயகம்போன்றமாலே தாணுவேகந்தவேளே
காயமோவனித்திபங்கண்டேன் காலனேதேய்வேபோற்றி.

(அரி-வ-ம்)சுவாமி சுப்பிரமணியரே? மாயதாரிமாதவா? தருமரே? அக்னிதேவே? இந்திரதேவே? சுக்கிரபகவானே? சுவர்க்கம்விட்டுநா

யினுங் கடையனென வென்னை யிக்கோலமாய்ப்பார்க்க கூடோடி வரப் போமோ, அடியேனைக் காப்பீர் நாதாக்களே.

தேவர்கள் விருத்தம்.

திரிசங்குமைந்தாநீயே திகழ்தரும்பெருமைபூண்டாய்
திரிசங்குமைந்தாநீயே தேசத்திற்சத்தியனானாய்
திரிசங்குமைந்தாவுன்றன் தேவியேபத்தினியானாள்
திரிசங்குமைந்தாமந்திரி தெளிவுளோன்காண்பாய்வாழி.

(தேவர்-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நீயேசத்தியன், உன்தேவியே பத்தினி, உன்மந்திரியே யுத்தமன், உன்பெருமை மற்றெவருக்கு மில்லை, சதா வாழி வாழி அரசே.

சந்திரமதி விருத்தம்.

இந்திரனார்மனக்காதற் றேவியம்மா
யிணையிலாக் கருணையுள்தாயேசுவாலா
சுந்தரத்தில்மிகுந்தவளே தருமன்றேவி
சோம்பிரான்சண்டாளி பாவிபாவி
எந்தநகர்நாடிழந்து மடிமையாகி
யீன்றமகன்றனைப்பாம்புக் கிட்டுமையோ
வந்துநின்றேன் வெட்டுறவேகள் ளியென்றே
வளர்சுடலையென்பொருட்டு வருதனன்றோ.

(சங்-வ-ம்) அம்மா சுவாலாதாயே ? சாமலா அம்மணி ? இந்திராணியே ? இந்தப் பாதகியாகிய கள்ளியைக்காணத் தாங்களிந்தசுடலை வருதலடுக்குமோ தேவிகளே.

தேவஸ்ரீ விருத்தம்.

அங்கமேபூண்டாய்சத்திய மாணியாய மைந்தாய்பத்னி
எங்குளமாதர்க்கேநீ யிட்டதேபிச்சையம்மா
சங்கரனருளுமாச்சு சதாதினமகிழ்வினோடு
மங்களகரமாய்வாழ்வாய் மதிரவிபுகழத்தாயே.

(தேவஸ்ரீ-வ-ம்) அம்மா சந்திரமதி ? நீயேயுத்தமி, லோகத்தில் சத்தியமென்பதை நிலை நிறுத்தினாய், நீ சதா வாழி வாழி.

(பரம-வ-ம்) கேளுந் தேவர்களே ? நீங்கள்செய்த சூதுகளையெல்லாம் வெளியிட்டு, அரிச்சந்திரனை முன்போ லசாக்ஷிசெய்து ஆளச் செய்வீர்கள் தேவர்களே.

(தேவர்கள்-வ-ம்) அப்படியே வெளியிடுகிறோம், பரமசிவமே.

சுக்கிரபகவான் விருத்தம்.

இன்பனேதாகனு யுனைத்தொடர்ந்துநானு
மியம்பியும்பலமொழிக யோமெத்த

[அன்பனைதொடுத்துமுன்ற னில்லையக்காண
அன்றுசெய்தேன் மாதைவிற்கப்புரிந்துமய்யா
துன்பமுறவுனையடிமை செய்துபார்த்தேன்
தோன்றலேபொய்யுரையா துணிவைக்கொண்ட
தன்மைதனைக்கண்டகன்றேன் சத்தியனென்றே
தானறிவாயிதுவுண்மை தரணிவேந்தே.

(சுக்-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நான்தான் நாகனுய்வந்து; உன்னை துன்பமுறச் செய்தவனிது சத்தியமென்றறிவாய் மன்னா.

அக்கினிபகவான் விருத்தம்.

மன்னவனேநீவிலக்கேமாதுதன்னை
மாறிவேவரும்வேளைமுனிதான்வேண்ட
நன்னகரைவிடுத்துமங்கேமறையோனாக
நடித்துமேகாலகண்டனெனப்பேரிட்டு
இன்னகரில்வந்திரங்கிமாதுபால
னிருவரையுங்கைக்கொண்டேனெனதுதேவி
பன்னிமொழிவேலையிட்டாள்நீதானீந்த
பணிமுறிச்சீட்டிதுதானேபாராய்மன்னா.

(அக்-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? சந்திரமதியையும், பாலனையும், அடிமைகொண்டவனானும், உன்பத்தினிக்கு வேலையிட்டவள் எனது தேவியாகும், இதோ நீ யெழுதிக்கொடுத்த முறிச்சீட்டைப்பாருமன்னா

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயனேயிதுதானென்னை யாட்கொண்டசீட்டேயாகும்
பையவேதங்களிங்கு பதியெனவுறைந்தவாறு
மையறுகாலகண்டனெனும் பெயர்கொண்டவாறும்
செய்யவேதியர்கள்காணச் செறிந்தவாறுரைசெய்வீரே.

(அரி-வ-ம்) சுவாமி ? இந்தசீட்டு அடியேன் எழுதிக்கொடுத்ததேயாகும், தேவரீருக்கு காலகண்டனெனும் பெயர்வந்ததேது, இங்கேயிருக்க இடமேது, இந்த நாட்டின்வேதியர் உம்மையறியாமலிருந்தவாறேது ! அடியேனுக்குத் தெரியச்சொல்லும் சுவாமி.

(அக்-வ-ம்) அய்யா சத்தியனே ? இங்கொருவன் காலகண்டனெனும் பெயருடைத்தாயிருந்தான், அவனும் அவன்தேவியாகிய காலகண்டியும், யாத்திரை போயிருந்தார்கள், அதையுணர்ந்து அவனைப்போல் உருவெடுத்து அவனின் மனையிலே தங்கியிருந்தோம், அசலாத்து வேதியர்கள் அவனென்றே பாவித்திருந்தார்களப்பா.

(அரி-வ-ம்) மஹாபாக்கியம், அடியேன் இவ்விதம் வினவினதற்காக அபசாரம் க்ஷமித்தருளும், நான் புனிதனானேன், ஆண்டவனே.

எமதர்மராஜன் விருத்தம்.

தரகனுடகலிதனைகொடுக்கவன்று
தாவியேமந்திரியுனை விலையாய்க்கொள்ள
வரவெனவேகவிநிற்க முனியும்வேண்ட
வளர்சுடலேதோட்டியைப்போலுருவுமாறி
காமதனிற்கம்பளமுங் கோலுமேந்தி
கருநியேபொருளீந்து களிப்பினேடு
அரசனேயுனைக்கொண்ட சீட்டிதாகு
மறிகுவாயிதுவன்ற னுடையீர்மோ.

(எம-வ-ம்) அப்பா அரிச்சந்திரா? மந்திரி, உன்னை விலை கூறுங்காலேயில், நான் சுகோடு தோட்டியைப்போல், உருமாறி தரகன்கோறிய பொருளை கபடமாய்கொடுத்து உன்னைக்கொண்டேன், இது நீ யெழுதிக்கொடுத்த சீட்டாகும், இதோ நீயன்று என்னிடத்தில் ஒப்பிவைத்த வுபேப்பாகும் பாலகா.

(அரி-வ-ம்) சுவாமி ? நீர் தோட்டியாய்வந்தேனென்று சொன்னீரே, இவ்விடத்திய தோட்டியேதுவானுன், அடியேனுக்கு தெரியச் சொல்லுவீர் நாதா.

எமதர்மராஜன் விருத்தம்.

வீரவாகென்றெருவன் தோட்டியாக
விற்றிருந்தானின்னகரில் வேந்தேகேளாய்
சாரமனேயெங்கென வென்றேவிகேட்க
சற்சனதூதரினுற் ருேட்டிதன்னை
சேரவிட்டேனிமயமலே யேண்டிரேடு
செல்லியெனபேரயைத் தென்மாதுதானும்
பாரறியவுனதுநிலே நிறுத்தவந்தோம்
பண்புடையாயிதுமெய்யே பகர்ந்தேன்பாலா.

(எம-வ-ம்) அப்பா அரிச்சந்திரா? இந்தகாசியில் வீரவாகு என்றெரு தோட்டியிருந்தான், கவுசிகமுனி என்னை தோட்டியைப்போலுருமாறி வரக்கோறினதால், நான் இங்கிருந்த தோட்டியையும் அவன் மனைவியையும் என்தூதரா லிமயமலேச்சாரல் சேர்த்து, அவாளைப் போல் உருவெடுத்து அவாள்வசித்திருந்த குடிசையிற்சென்று உன் சத்திய நிலையை பலருமறிய வெளியிடவந்த கருத்தென்றறிவாய் கண்மணியே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அடிமையாவென்னைக்கொண்டீர் அகமதுகளித்தேனுதா
மிடிபதுநீங்கவிங்கு மிசைந்ததுமினிவாய்கேட்டேன்

படிதனிற்பலருமேச பண்பிலாச்சுடலைதன்னில்
முடிகுனிந்திருக்கச்செய்தீர் மூத்தனேபெருமைதானே.

(அரி-வ-ம்) என்னுண்டவனே? என்னை அடிமைகொண்டவர் நீரே என்றறிந்தேன், மெத்தவு மானந்தத்தை யடைந்தேன், ஆனால் என்னை யிந்த இழிவான சுடலைகாக்க அமைத்ததே என்பெருமைக்கு குறை வென்று உருகுகின்றேன் நாதா.

## எமதர்மராஜன் விருத்தம்.

சுடலையென்றிங்கு மன்னனேநீதான்
சொன்னதுன் சிற்றறிவலவோ
இடமிதேயாக மியற்றிடுஞ்சோலை
யெரிகரும்புக ளொலாஞ்சமிதை
சடந்தனைக்கொளுத்தும் நெருப்பெலாமுத்தி
சண்டிகைப்பேயெலா முனிவர்
திடமுடன்கூவுதல் வேதமந்திரமாம்
திகழ்பிணம் பசுவெனத்தெளியே.

(எம-வ-ம்) அப்பா அரிச்சந்திரா? நீ காத்திருந்தசுடலை யாகசாலை யாகும், இவ்விடமுலாவுதல் முனிவர்களாகும், அவைகளொலிக்கும் மொழிகள் வேதமந்திரமாகும், இந்தக்கட்டைமுதலானவைகள்சமிதை களாகும் நீ ஞானமாயுற்றுநோக்கில் உள்ளத்திற்றெளிவாய் வேந்தே.

(அரி-வ-ம்) ஆண்டவனே? தாங்கள் சொன்னவாறு காணக்கண்டு ஆனந்த பரவசமானேன் எனதுபாக்கியமே பாக்கியம் நாதா.

(பர-வ-ம்) கேளுந் தேவேந்திர மகாராஜனே? வதிட்டமுனிவ்வர வழைப்பா யப்பா.

(தேவே-வ-ம்) அப்படியே வரவழைக்கிறேன், பரமசிவமே.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திரன் மொழிப்படி கட்டியனழைக்க, வதிஷ்ட ரதிகசந்தோஷமாய் வருகிற விதங் காண்பீர்கள் கனவான்களே.

## வதிஷ்டர்வருகிற தரு.

இராகம்-தேவமனோஹரி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஆனந்தக்கூத்தாடியே-வதிஷ்டரும்-ஆ! ஆ! வந்தாரோடியே

அநுபல்லவி.

வானிந்திரன்சபைதனில் நாட்டியபந்தயத்தை
தான்கெலித்தேன்மித்திரன் தலைகுனிந்தானென்றே. (ஆ)

சரணங்கள்.

தேவர்கள்முன்னில்சொன்ன-சபதப்படி
தீட்டுவேனிதோவென்ன

மூவர்மகிழுலோக மூற்றுமெனப்புகழ
முடித்ததசிட்டனாலே மொழிக்கதுகலியனென்றே. (ஆ)
கொண்டசெருவத்தாலே-கவுசிகன்தலே
குனிந்தானேமண்மேலே
அண்டருமானிடரு மனைவருமெனத்தொழ
ஆனேனென்சிட்டனாலே யகங்குளிர்ந்தேனென்றே. (ஆ)
தானென்றுங்காரம்பேசி-கவுசிகன்தவந்
தானிழந்தானே தோசி
மோனமறிந்துமென்ன மூர்க்கம்போக்காதபேர்க்கு
மூவுலகத்திற்கீர்த்தி மொழிவதரியதென்றே. (ஆ)

வசிஷ்டர் விருத்தம்.

நந்திமேல்வருவாய்போற்றி நான்மறைக்கிறைவாபோற்றி
செந்திருவாயாபோற்றி செப்பருமகிபாபோற்றி
சுந்தரவடிவாபோற்றி சூக்குமநிலையாபோற்றி
யுந்திருவடிக்கோனாயே னூழியன்போற்றிபோற்றி.
(வசி-வ-ம்) போற்றி போற்றி, பரமசிவமே நின்னடிக்கே போற்றி.
(பர-வ-ம்) வாரும் வாரும், வசிஷ்டமுனியே வாழி வாழி.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

என்குலக்குருவேபோற்றி யென்னையாள்கோவேபோற்றி
அன்பினிலுயர்ந்தாய்போற்றி யாதியையறிந்தாய்போற்றி
நன்புலத்தவத்தாய்போற்றி நற்குணக்கடலேபோற்றி
துன்பமேகுடியாய்க்கொண்ட தோஷிநான்போற்றிபோற்றி.
(அரி-வ-ம்) போற்றி போற்றி, என் குருநாதா.

அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-கேதாரகவுளம், தாளம்-சாப்பு.

பல்லவி.

நீரிருந்துமெனக்கித்துன்பம்-நேரிடப்போமோகுருவே.

அநுபல்லவி.

ஆராகிலுமடைந்தோருண்டோ-வடியன்பாவியோகுருவே. (நீ)

சரணங்கள்.

மன்னர்மன்னனாகினானு மகுடஞ்சூடிநீதியெய்து
மானிலத்திற்சத்தியந்தனை மாரிபோலப்பெய்யச்செய்தும்
என்னகொடுமையரசிழந்தே யிந்தநகர்வரவுமாநாதா
ஏந்திழைதானடிமையாகவு மென்மகன்பாம்பினால்வன்
[மையாய்ச்சாகவும். (நீ)

நிலையைவிடப்பலவலைகள் 　　நேராய்வீசினுரிவரும்
நேர்மைவிடாதிருக்கவெனை 　　நீச்சனுகநிற்கச்செய்தார்
மலையைப்போன்றதுயாருந்தி 　　மயங்குவேளைமாதைவெட்ட
மன்னன்காசிபனுக்கனையிட மகிழ்ந்தீரோவெனையிகழ்ந்தேகைவிட. (நீ)
அமைச்சனையாயென்னைப்பற்றி 　　யருந்துயரால்வருந்தலுற்ருன்
ஆ! ஆ! மாதுசெய்தபணியோ 　　வரையப்போமோகள்ளியென்றே
நிமைக்குள்காவல்நிறுக்கிக்கட்டியே 　　வெட்டவுந்தட்டவுந்திட்டவுமாகி
னுள், நிறுத்தேனெலாம்வெறுத்தேனுதா 　　நீர்சொலும்வெட்டுமேன்பா
ரிலிதோ வேதா. (நீ)

## வசிஷ்டர் விருத்தம்.

பெறவரியநின்னுடும் பதியும்பாக்கியம்
　　பிறழ்ந்திடவும் புரிந்தபெரும்பாவிநானே
செறலரியவெட்டிமையைப் பூண்டாய்வேந்தே
　　செப்பரியவுன்மனைவி யடிமையானுள்
விறலுடையவுன்மகனும் பாம்பால்மாண்டான்
　　விற்பனனுமந்திரியும் வறுமைகொண்டா
னுறலரியமனத்துயர முற்றீரந்தோ
　　வுத்தமரேயும்பர்புக ழூடம்பானீரே.

(வசி-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நீ இந்த வேடமெடுக்கவும், சந்திரமதி யம்மாள்தொண்டு வேலைசெய்யவும், உன்குலமணியாகிய தேவதாசன் பாம்பு கடித்திறக்கவும், விளைந்தகாரண மெல்லாத்திற்கும் காரணமாகியபாவி நான்தான், நான்தேவசபைக்கு போனதினுல்விளைந்ததுன்பங்களாகுமப்பா, ஆனுல் உங்களை யடிமைகொண்டவர்கள் எளிதிற் காணுரு தேவர்களாகும், துன்பங்கள் நீ யனுபவித்ததினுல், உன்னையும் என்னையும் தேவர்கள் முதலானவர்கள், புகழத்தக்கபெருமையுண்டாச்சுது சீடனே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்வாறு சுடலையில் நடக்குங்காலை மதிதயமகாராஜன் காசியில்வந்து அரிச்சந்திரம்காராஜனை தேடிக்கொண்டுவருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

(மதி-வ-ம்) அப்பா கட்டியனே ? நான் வந்திருப்பதாக வுங்களரசனுக்குத் தெரிவிப்பா யப்பா.

(கட்-வ-ம்) அப்படியே தெரிவிக்கிறேன் சுவாமி.—சுவாமி ? மதிதயமகாராஜன் வந்திருக்கிறசங்கதி தெரிவிக்கச்சொன்னுர் சுவாமி.

## காசிமகாராஜன்மந்திரி விருத்தம்.

அன்னம்போற்புத்ரிதன்னை யரனருளாலேயீக்கு
மன்னவனயோத்தியாண்ட மகாராஜன்றனக்கேயீந்த

வுன்னிகீரிந்த்வேளை யுற்றதோர்சேதிதன்னே
பன்னவேவேண்டுமென்றன் பாதமேபோற்றிவேந்தே.

(காசிமந்-வ-ம்) சுவாமி? சந்திரமதியைப்பெற்று சத்தியபாஷனை மருகனுக்கொண்ட தேவே? போற்றி போற்றி, இந்தவேளையி லதிக வருத்தமாய் வந்திருக்குங் காரணந் தெரிவிப்பீராண்டவனே.

(மதிதயன்-வ-ம்) அப்பா மந்திரி? முனிவன் கடனைத்தீர்க்க என் மருகன் இங்குவந்த சங்கதி நீயறிந்திருந்தாலறிவிப்பாயப்பா.

காசிமகாராஜன்மந்திரி விருத்தம்.

என்னசொல்லுவேன்வேந்தனுக்கேயீசன்றுனு
மிட்டவிதிகாசிவந்துந் தெரிவிக்காமற்
சொன்னமொழிதவறுதோன்மாதைவிற்றே
சூகானமுனிகடனைத் தீர்த்துமையா
பின்தொடர்ந்ததரகனுக்காய்ப் பறையனுளாய்
பிணங்கள்சுடுங்காடடைந்தேயிருக்குங்காலே
மன்னவனே சுதாகரனைக்கள்ளர்தானு
மாயமாய்க்கவர்ந்திட்டார் வகுத்துக்கேளே.

(காசிமந்-வ-ம்) சுவாமி? முனிவன் கடனுக்காக உமதுமகளைவிற்றுத் தீர்த்தபின், தரகனுக்காகத்தான்பறையனுக்கடிமையாகிச்சுடலைகாத்திருக்குஞ் சமயத்தில் எங்களரசன்மகனைக் கள்ளர் திருடிப்போனர், பின்பு நடந்ததைக்கேளும் மதிதயமகாராஜனே,

கள்ளர்தனைப்பிடித்திடவே சென்றதூதர்
கண்மணியாமுன்மகளைத் திருடியென்றே
தள்ளுடனேகட்டிவரக் காசிவேந்தன்
தலையைவெட்டவரு ளளிக்கச்சுடலைக்காக்கும்
உள்ளமகிழ்ந்தரிச்சந்திரர் வாளையோங்க
உம்பர்புகழ்சம்புவந்தே கரத்தைப்பற்றிக்
கொள்ளவுமேநடுங்கியுடற்காசியாளுங்
கொற்றவனுமாதுடனே கோவேசென்றார்.

(காசிமந்-வ-ம்) சுவாமி? கள்ளரைப் பிடிக்கப் போனவர்கள், தங்கள் மகளைக் கட்டிக்கொண்டுவர, எங்களரசன் தங்கள் மகளின் காலடிகளை குசுவாகக்கொண்டுபழிக்குப்பழியாக வெட்டிவிட ஆக்கினையிட,மயானக்காக்கு மரிச்சந்திரர் வாளோங்கி வெட்டும்போது பரமன்கையைப்பிடிக்கக்கேட்டு அரசனுந் தேவியு மங்கே போயிருக்கிறார்கள் நாதா.

(மதிதயன்-வ-ம்) ஐயையோ! இப்பேர்க்கொத்த துன்ப மயோத்திபனுக்கு வந்ததா! நானுஞ் சுடலைக்குப் போய்வருகிறேனப்பா மந்திரி

(காசிமந்-வ-ம்) அப்படியே போய்வாருஞ் சுவாமி,

பொது விருத்தம்.

தேவர்களுக்குலகுருவு மயோத்திமன்னன்
தேரியிவ்வாற்சுடுகாட்டி லிருக்குங்காலைப்
பாவமென்னவந்ததென்றே மதிதயன்றன்
பாரெலாந்தான்தேடிக் காசிசேர்ந்து
ஆவதுதான்கன்றிழந்த வாறுபோல
வமைச்சன்சொலச் சுடலைக்கேயலறிக்கொண்டு
தாவமுடன்வந்துசந்திர வதியைவேந்தன்
தன்னையுமேகண்டுரனந் தவித்திட்டானே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? தேவர்கள், முனிவர்கள், முதலானவர்கள் மயானத்தி லிருக்கும் வேளையில், மதிதயராஜனுந் தோன்றி பிரலாபிக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

மதிதயமகாராஜன் கண்ணிகள்.

இராகம்-எதுகுலகாம்போதி, தாளம்-ரூபகம்.

இந்தவிதிகாட்டவோ வீசனுனைமகளாய்
எனக்கன்றளித்தானே மகளே ! மகளே !
வந்ததுயரதனை வறிந்தாலுங்களைமீட்டு
வாகுடனிருந்தேனே-மகளே ! மகளே !

கல்யாணி. என்னவிதியதனை எழுதிவிட்டான்பாவி
ஏதுசெய்குவேனையோ அரசே !
நன்னிலையுள்ளவற்கே நடாதுதுயரென்று
நவிலும்நான்முறை பொய்யோ-அரசே !

காம்போதி. அன்பத்தார்தேசத்திர்க்கும் அதிபதியாயிருந்தி
ரதின்பலனிதுவாமோ-அரசே !
இன்பத்திருந்ததெல்லா மேந்தலைமீர்கொண்ட
இத்துயர்க்கிணையாமோ அரசே !

மோகனம். தவமுனியேநீருந் தானெனுமாணுவத்தை
தள்ளிவிட்டவராச்சே-முனியே
பவம்பெறநீதியின்றி பறித்தாய்செங்கோலையா
பலனிதுகாணவாச்சே-முனியே
குலத்திலொருவன்கீர்த்தி கொண்டாற்சகலருக்கும்
கொடுக்கும்புகழல்லவோ-முனியே
நலமுளதவசிநீ நாடியிவ்வாறுசெய்தாய்
நாட்டோர்வசைசொல்லவோ-முனியே.

சாவேரி. சிவமேயுனைப்பணிந்தே செய்ததவத்தால்வந்த
செல்விக்கித்துயரிட்டாய் - சிவமே !

கவனிதியுமிழந்து நாட்டினிற்கள்ளியென்றே
நாட்டோரிகழவிட்டாய் - சிவமே!

(பர-வ-ம்) மதிதயேந்திரா ? நீதானதிகபுண்ணிய புருடன், உன்மக ளினுலும், மருகனுலும், உன்குலம், என்னும் அழியாத பெருமை யடைந்தது, நீயிப்படி பேதைபோ லழப்போகாது வேந்தனே.

சந்திரமதி விருத்தம்.

தந்தையேயன்னுளீசன் முனிட்டவிதியின்வாறே
தந்தையேசுகமுந்துக்கந் தாவிஞ்சமமாயன்ரு
தந்தையேவருவதெல்லாந் தானீக்கக்கைலைநாதன்
தந்தையேயிங்குவந்தார் தயங்காமலிருப்பீரையா.

(சந்-வ-ம்) என்னை யருந்தவஞ்செய்து பெற்றதந்தையே ? சுகத்தை யுந் துக்கத்தையுஞ் சமமா யனுபவிக்கவேண்டும், துயரைநீக்க பரம சிவ னிதோவந்திருக்கிறார், தியங்கவேண்டாந் தந்தையே.

அரிச்சந்திரமகாராஜன் கொச்சகம்.

நான்பாவியென்றெண்ணுமை நாயமோயாசேயன்று
தான்கோறியுமதுபெண்ணைத் தாரைவார்த்தெனக்களித்தீர்
தேன்மொழியாளையன்றே திகழும்மிடம்போவென்றேன்
வான்குயில்மறுத்தாள்சர்வ வருத்தமும்தொலைத்தாள்வேந்தே.

(அரி-வ-ம்) நான் பாவியென்று தெறிந்தும் உமது பெண்ணைகொ டுத்தீர், நான்முன்னமே தங்களிடம் சந்திரமதியைப் போகச்சொன் னேன், தடுத்து இத்துய ரும்முள் என் மாமா.

மதிதயமகாராஜன் விருத்தம்.

தன்மணவாளனேகத் தாய்வீடுபோகும்மாது
நன்மையையறியாஜென்மம் நாய்க்குணமுடையாளாகுந்
தன்மையிலுமைவிடாமற் றேகையுமிருந்ததாலே
யின்மையிற்சுகமுங்கீர்த்தி யெய்தினளெனக்குநன்றே.

(மதி-வ-ம்) அப்பாமருகனே ? கணவனுக்குத் துயர்வந்த காலையில், பிரிந்து தாய்வீடு போகுபவள் நாயைப்போலொற்ற ஜென்மம்; உன் னுடன் அப்படி பிரியாம லிருந்தபடியால், எனக்கும், உமக்கும் தனக் கும் பெருமைய்ய உண்டாக்கினள் அரசே.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

குருமுனிவசிஷ்டன்சொன்ன கொள்கைதானரிச்சந்திரன்பால்
உருவுண்டோயிலையோவென்றேயோசித்தேயாண்டுபார்த்தேன்
அருமறைபுகழாச் செய்கையனுவெனுமிவன்பாலில்லை
பெருமையுங்கீர்த்திதானும் பெற்றானுன்மருகன்காண்பீர்.

(விஸ்-வ-ம்) கேளும் மதிதயராஜே ? நான் இவ்வாறு செய்ததாலும மருமக னதிகபெருமைய யடைந்தானென் றறிவீர்வேந்தே.

மதிதயமகாராஜன் விருத்தம்.

பதிதனிலுயரயோத்தி பாவித்தோன்றனைமணர்ந்தும்
விதிமுறைநெறியுணர்ந்த விண்மதிமுகம்படைத்த
அதிகமாங்கற்பைப்பூண்ட வம்மணிநீதானீன்ற
மதியுளபாலனெங்கே மகிகூறியாயுரைசெய்வாயே.

(மதி-வ-ம்) அம்மாமகளே? நீயருந்தவஞ்செய்துபெற்ற திவ்வியகுண பாலனுன எனது பேரனெங்கே தெரிவிப்பாய் கண்மணியே.

சந்திரமதி விருத்தம்.

தந்தையேயடிமைகொண்ட தயாபராசிறுவன்றன்னை
நிந்தையோடிழுத்துவந்தே நிகரிலாவடவியேகி
விந்தையாஞ்சமிதையோடு விறகதுங்கொணரவிட்டா
ரெந்தையேயரவந்தீண்டி யிறந்தனனிதோகாண்பீரே.

(சந்-வ-ம்) ஆ! தந்தையே? என்னை அடிமைகொண்டவரெண்ணப்படி காட்டுக்குள்தர்ப்பை கொய்யப்போனான், அவனைப்பாம்புதீண்டியிறந்தான் இதோபாரும் தந்தையே!

பொது விருத்தம்.

மதிதயனுமனக்கலங்கி நின்றுமங்கே
மாதுசந்திரவதிமுகத்தை யுற்றுப்பார்த்து
அதிகநிலைதனையறிந்த மகளேயம்மா
அன்றுநீயீன்றெடுத்த பாலனெங்கே
விதியென்னவெனவிமலன் முனியைநோக்க
வேண்டவவன்மனக்கனிந்தே விண்ணோரேற்றும்
ததியெனவேசண்முகனும் பாலன்றன்னைத்
தானெழுப்பும்வாறதனைத் தான்காண்பீரே.

(பொது-வ-ம்) சபையோர்களே? மதிதயன் கேட்டவுடன், பரமசிவனை நோக்க, முனிவன் சிவசுப்பிரமண்யரை வேண்ட, தேவதாசனை சுப்பிரமணியர் பாம்புருவெடுத்து எழுப்புகிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

(சுப்பிரமணியர்-வ-ம்) ஓய் முனியே? நான்சொல்லியும் கேளாமல் அரிச்சந்திரன் மகனை யிறக்கவைத்தா யிப்போது தலைகுனிந்து நிற்பதுஞ்சரியோ சொல்வாய்.

விஸ்வாமித்திரன் விருத்தம்.

கொண்டவாங்காரமென்னைக் குனிந்திடச்செய்ததையா
மண்டலப்புருடாவிங்கு மன்னித்தென்பிழைகளெல்லாந்
தண்டுளமாலைமார்பன் றனையனைப்பிழைக்கச்செய்யு
மண்டர்களேற்றுந்தூயா வடைக்கலங்காப்பீர்கோவே.

(விஸ்-வ-ம்) சுவாமி? நான்கொண்ட ஆங்காரத்தினாலிந்த இக்கஷ்டியை அடையலானேன், மன்னித்து தேவதாசனை யெழுப்பித்தருவீர் நாதா.

(சுப்பி-வ-ம்) அப்படியே செய்விக்கிறேன் மௌடீகருனியே.—(மயில்வாகனன் பாம்புருவாகி தேவதாசனடைந்திருக்கும்விஷத்தை நிக்கிரகித்துமுன்போல்தற்சுயரூபங்கொண்டு வார்த்தையாடல்,)அப்பாதேவதாசா? நான்புற்றினுள்பாம்பாயிருந்து தீண்டவிஷமேறி காட்டில்மாண்டவன் இங்கு பிரேதமாயிருக்கக்கண்ட வுன்தாய்தந்தையர் வருந்தி நிற்கிறார்கள், நீ தூங்கியெழுந்தவனைப்போ லெழுந்து வருவாயப்பா.

## தேவதாசன் விருத்தம்.

பார்த்தீரோதோழமாரே பறித்திதோதெற்பைநானும்
சேர்த்திட்டேனுடுசெல்வோஞ் சீக்கிரம்பொழுதுபோனா
லாத்திரங்கொள்வாரைய ரடித்தெனைவருந்தச்செய்வார்
காத்துமேயிருப்பாளென்றாய் கடிகியேநடப்போம்வாரீர்.

(தேவ-வ-ம்) அப்பாதோழரே? நானிதோ தெற்பை யறுத்துக்கொண்டேன்,வாருங்கள்சீக்கிரம், விடுதிபோகாவிட்டால் அய்யர் அடிப்பார் அதிக தொந்தரவுஞ்செய்வார், எனது தாயுங்காத்திருப்பாள், வாருங்களப்பா நேசரே.—ஆ! இதென்ன ஆச்சரியம்! நாம்சேர்த்த சமிதைகளெங்கே! நம்முடன் கூடவந்த நேசர்களெங்கே! நானறுத்த தெற்பையெங்கே! ஒன்றுங்காணோமே! ஓ! ஓ! பரமசிவமே! இந்தசுடுகாட்டுக்குநானெவ்விதம் வந்தேன்! ஒன்றிமறியேனே! சூரியன் ஒளியுங்காணேனே! இதுயாரின் சூதோ! நீயேதுணை காசிநாதா!—சரி, எல்லாமந்த திருவுளத்தின் செயலேயாகும், ஒருவேளை நமதுநேசர்கள் இங்கு கொண்டுவந்து மாய்கையாய்விட்டு மறைந் திருக்கிறார்களோ என்னமோ சுற்றிப்பார்ப்போம், பரமன்றுணைசெய்வார்.—ஏ மனமே? ஏன்தயங்குகிறாய்? அதோ நமது நேசர்கள் கும்பலாக நின்று ஒருவருக்கொருவர் பேசுவதுபோல் தோற்றுகின்றது, போய்பார்த்து வருவோம்.—ஆ! ஆ! விதியே? இதென்ன காரணம்! கயற்றால் கட்டப்பட்டு யாரோ ஒருகாத்திரதிரேக முடையபுருடன் ஓருகையால் பற்றிநிற்கும் மாது என்னையீன்ற தாயைப்போல் தோற்றுகின்றதே! ஓடிப்போய் பார்ப்போம்.—ஆ! என்னைப் பெற்றதாயே! இது என்னகாரணமோ சற்று தெரிவிப்பாய்.

(சந்-வ-ம்) அப்பா என்னருமைமகனே? அழுகாதே இதோ உன்தந்தையின் பாதத்தைப் பணிவாயடாபாலகா.

(தேவ-வ-ம்) ஐயையோ! என்னையீன்றதந்தையே! இவ்விதம் நீரானகாரணம்யாதோ! ஓ! பரமசிவமே! உனக்கு கண்ணில்லையா!

(அரி-வ-ம்) அப்பா என்னருமை குழந்தாய் தேவதாசா.



## அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம் - புன்னாகவராளி, தாளம் - ஆதி.

பல்லவி.

வாராயென்கண்ணின்மணியே பரசிவத்தைப்
பாராயென்கண்ணின்மணியே.

அநுபல்லவி.

தேராய்நமதுதுயர் நீருய்விட்டதேயின்று
பாராய்பர்த்தையேற்றிக் கூருய்நீமனமுருகி. (வா)

சரணங்கள்.

அடிமைத்தொழிலிற்சிக்கியே அடாமகனே
படிமிசைதுன்பத்தாற்சொக்கியே என்மகனே
வடிவுங்குறைந்தாயோடா இடியுடனேயர்சொன்ன
படிநீநடக்துமிந்த மிடியுறலானுய்பாலா. (வா)

அன்னையைவிடுத்துநீயுமே அடவிபோக
உன்னைப்பாம்புதீண்டதாயுமே தேடியெடுத்து
முன்னேநான்தாருக்காக இன்னகர்தோட்டிக்காளாகி
தன்னையேசுடவேவந்த கன்னியுமிக்கெதியானுள். (வா)

சுரமதிற்றவங்கள்செய்தேண்டா உனக்காயன்று
பரமனுலுன்றனைப்பெற்றேண்டா மறித்தவுனே
விரதமுடையவென்முன் வரதன்தோன்றியேயிதோ
கரத்தைப்பிடித்துன்னுயிர் வரவும்செய்தனன்சீலா. (வா)

பொது விருத்தம்.

தெற்பைகொய்யும்போது கொண்டவெண்ணுடித்
திகழ்பெறுகுஞ்சிறவனுமேயெழுந்துவந்து
சற்பனைசெய்முனிவனுடன் தனதுதந்தைச்
சந்திரவதிமேற்றேவர் நிர்க்கக்கண்டான்
விற்பனரும்வேந்தர்களும் பாலன்வாயால்
வெளியானமொழிகேட்டு முனியைநொந்தார்
அற்புதனும்பரசிவத்தைக்கண்டுசீல
னரகராசம்புவென்றேயலறுவானே.

(பொது-வ-ம்) சபையோர்களே? இந்தப்பிரகாரம் தேவதாசன் எழுந்துவந்து சொன்னமொழிகளைக் கேட்டெல்லோரும், துயரடைந்து விஸ்வாமித்திரனை நொந்தனர்கள், பின்புதேவதாசன் பரசிவத்தைக்கண்டு அதிக துயரத்துடன் துதிசெய்கிற விதங்காண்பீர்கள் தனவான்களே.

## தேவதாசன் தேவாரம்.

மான்மழுதரித்தாய்போற்றி மறைகளுந்துதிப்போய்போற்றி
தேன்மொழியுமையாள்பங்கா, தீவினைவிஸ்வாமித்திரர்
தான்செய்தசூதாலேயர் தனக்குமேயடிமையானேம்
நானின்றுகண்டேனுதா நம்பனேயருள்வாய்போற்றி.
கொண்டேனன்றுயரமெத்த கோவினங்களையேமெய்த்து
பண்டுவாய்ஜலத்திற்கந்தை பரமனேதோய்க்கக்கையால்
குண்டுபோற்பொருமினேக கொடும்பசிவருத்தவையர்
கண்டுமேசற்றுநெஞ்சம் கரையாமலிருந்தார்போற்றி.
உந்தனையின்றுகண்டே னும்பர்கள்தேடுங்கோவே
வந்தவன் துயரைப்போக்கி வாழ்ந்திடவுனதுபாதம்
தந்தடியேனோளுந் தயாபராகைலேவாசா
அந்தணனடிமைநீக்கி யாட்கொள்வாயன்புளோனே,

(பர-வ-ம்) அப்பாதேவதாசா ? இன்றுட னுன்னடிமை நீங்கிவிட்டது, நீ இனி சுகமாய் வாழ்வாய் பாலா.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்விதமாய் தேவதாசன் தாய்தந்தைகளைப்பார்த்து, துக்கமுடன்கேட்க, அவாள் நடந்ததைச் சொல்லக்கேட்டு சகலதேவரையுங் குலகுருவையும் விஸ்வாமித்திரரையும் பணிந்தான், அப்பால் காசிமகாரர்ஜன் விஸ்வாமித்திரரைக் கேட்கிற விதங்காண்பீர் கனவான்களே.

## காசிமகாராஜன் விருத்தம்.

நல்லதுமுனியேகேளும் நாடியேநானுனக்கே
சொல்லொணுப்பழியுமோசஞ் சூட்டியதுண்டோவென்றன்
வல்லமைமகனைச்சூதால் வதைத்திடலாமோநீதி
யல்லவேயுமக்குமிந்த யாண்மையுந்தரமோசொல்வீர்.

(காசி-வ-ம்) கேளுங் கவுசிகமுனியே ? நீ என்பாலனை கொலைசெய்விக்க, உமக்கு நானென்னபழிசெய்தேன், இந்த ஆண்மைத்தனஞ் சரியோ சொல்லுமுனியே.

(விஸ்-வ-ம்) காசிகாராஜனே ? கோபஞ்செய்யவேண்டாம், உமதுபாலனை வைகுந்தவாச ரெழுப்பித்தருவாரரசே.—சுவாமி ? மாயாவதாரியே ! காசிமகாராஜன் குழந்தையை யெழுப்பித்தாரும் பகவானே.

## மகாவிஷ்ணு விருத்தம்.

நன்மதிமுனிவன்பூண்டே தொழுதன்றென்வார்க்கைப்பெற்று
புன்மையைநினைந்துமென்னைப் புகலொணுக்கள்வனைப்போல்
உன்றனைக்கவர்ந்தெடுத்தே உயிர்தனைப்போக்கச்செய்தும்
நன்மையைப்பெறுதோநா நாயகாவெழுந்துவாராய்.

(மகாவிஷ்-வ-ம்) அப்பா சுதாகரனே ? நீ யெழுந்துவருவாய் கண்மணியே.—அன்று உமது புத்திரனணிந்திருந்த நகைகளையிதோ பெற்றுக்கொள்ளும் காசிராஜனே.

சுதாகரன் தேவாரம்.

முப்புரமெரித்தநாதா முனிவர்களேற்றும்பாதா
அப்புவும்நாலுமொன்று யமைந்திடவருளும்நீதா
சுப்புரநிலையேஜோதி சூக்குமாவுமைசமேதா
எப்புவனத்தோரேற்று மெந்தையேபோற்றிபோற்றி.

(பர-வ-ம்) வாழி வாழி அப்பா சுதாகரனே, நீசதாவாழி.

(விஸ்-வ-ம்) அடியேன் வசிஷ்டருக்கு தோற்றபடியால், என்தவத்தில்பாதி, அரிச்சந்திரனுக்கு தத்தஞ் செய்கின்றேன் பரமசிவமே.

(பர-வ-ம்) சீக்கிரம் அப்படியே செய்யும் விஸ்வாமித்திரமுனிவரே.

விஸ்வாமித்திரமுனிவர்தன்தவத்தில்பாதிதத்தஞ்செய்தல்.

(விஸ்-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நான் தேவசபையிற் பகிய வாறுசெய்யத் துணிந்துன்னை வெல்லத்தோற்றதால், தேவர்களறிய இதோ என்றவத்திற் பாதிதாரைவார்க்கிறேன், இதுவுந்தவிர அன்று கொடுத்த உனதுநாட்டையு மொப்புகொள்ளு மன்னவா.

(அரி-வ-ம்) மாதவப்பொருளே ? தாங்கள் என்னிமித்தம் எவ்வித க்காரியம் புரிந்தபோதிலும் மனங்களேறேன், மேலும் தாங்களன்று தேவசபையில் பிரதிக்கினைப்பண்ணியவாறு தங்கள் தவத்தில்பாதி பெறுவது தடையில்லை, இது என் பாக்கியமே பாக்கியம், ஆனால் என்னால் கொடுக்கப்பட்ட நாடு முதலியவைகளைத் தாங்கள் மறுபடியுந்தர, நான் பெறுவது சரியொற்றதல்ல, நானே கொண்டவன் வாக்கை மீறுவிரதம் பூண்டவனென்று தங்கள் திருவுளத்திற்குத் தெரிந்திருந்தும் என்னை இன்னமும் சோதிப்பதழகலவே நாதா.

(விஸ்-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நீ சொன்னமொழிக்கு ஒப்பினேன், [செய்வனத்திருந்தச்செய்] எனும் நீதிவாக்கியத்தை அறிந்தே நடத்துகிறேன், — சரி ஐயா எமதருமராஜரே ? சீக்கிரம் இம்மன்னனுக்காக அறிவிலுயர்ந்தோன் சத்தியகீர்த்தி எழுதிக்கொடுத்த சாசன உடுப்பு முதலியவைகளையுங்கொடுத்து என்னால்கொடுக்கக்கோரும் அரசுயாவற்று மிச்சத்தியபாஷனை ஆளும்படிக்குக்கட்டளையிட்டருள்வீர்.

(எம-வ-ம்) சரி, அப்படியே அப்பா பூலோக இந்திரா ? உனது மந்திரி சத்தியகீர்த்தி உன்பொருட்டு எழுதிக்கொடுத்த சாசனத்தை நீ தடைசெய்யாம லொப்புக் கொள்வதுந்தவிர, என்கட்டளைப்படி முன்போல் கையிற் கோலைத்தாங்கி அரசுசெய்து பிறகு நற்கதியடையக் கடவாய்மன்னா.

(அரி-வ-ம்) அப்படியே தங்கள் கட்டளையின்படி ஒப்புக்கொண்டேன், பவபுண்ணியங்களைச்சீர் தூக்கி அவாளவாள் கர்மத்திற்குத்தக்கவாறு கட்டளை யிட்டாண்டுவரும் தருமரே சரணம் சரணம்.

(அக்-வ-ம்) அம்மா சந்திரமதி ? உனக்காக உன்பத்தாவாகிய சத்தியபாஷன் எழுதிக்கொடுத்த சாசனத்தை இதோ அரசனிடங்கொடுத்து

ஷிசேரிறன், நீயும் உன்பதியுடன் அயோத்திக்குச்சென்று பாலன்மூத லியயாவரும் சதா வாழி வாழி.

(சங்-வ-ம்) புத்தி, யுத்தி, ஆண்டவா ? அப்படியே தங்கள்மனம்போ ல் நடக்கிறேன் தேவே.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

ஐயனேகுருவேயும்மா லருந்தவந்தனிலேபாதி
ஐயனேமுனிவரீந்தா ரடியேனுங்கொண்டேன்மேலும்
ஐயனேபதவிபெற்றே னரையொணுப்புனிதனுனேன்
ஐயனேபெருமைகொண்டே னடிகளுக்கடியேன்போற்றி.

(அரி-வ-ம்)குலகுருவே ? உம்மால்மெத்த பெருமையடைந்தேன் விஸ் வாமித்திரர் தவத்திற்பாதி தாரைவிட்டார்,யான் பெற்றுக்கொண்டேன்.

(வதி-வ-ம்) மெத்தசந்தோஷ மப்பா அரிச்சந்திரனே.

## பரமசிவன் விருத்தம்.

அரிச்சந்திராவரீழிநீதா னமைச்சனும்மா தும்பாலன்
அரிச்சந்திராவாழ்கவுன்ற னயோத்திநாடடைந்துசெங்கோல்
அரிச்சந்திராதாங்கிநீதி யமைத்துநாட்கழிந்தபின்பு
அரிச்சந்திராவெனதுபாக மன்புடன்வருவீர்வாழி.

(பர-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நீ உன்னுடசேர்ந்து அரசுசெய்து பின்பு என்னிடம்வந்து சேருவாய் வாழி வாழி.

## பரமசிவன் கவி.

தவமுனியேகௌசிகனே வதிஷ்டமூர்த்தி
தன்மைபெறுகாசிபனே மதிதயேந்திரா
நவகுணன்றன்னுடன் சென்றுமுடிதான்சூட்டி
நாடடைவீர்நாம்போவோம் வாழிவாழி.

(பர-வ-ம்) கேளுங்களப்பா வதிட்டமுனியே ? கௌசிகமுனியே ? காரதனே ? காசிராஜனே ? மதிதயராஜனே ? அரிச்சந்திரனுக்கு முடி சூட்டிப் பின்னுங்க ளிருப்பிடம் போவீர்களப்பா.

## பொது விருத்தம்.

வேந்தனுக்கேவிடைகொடுத்துத்தேவரெல்லாம் விண்ணடைந்தார் முனிவருடனயோத்திமன்னன், காந்தமுள்ளமாதுசந்திரவதியும்பாலன் க ளங்கமிலாமந்திரியுமாமனுேடு,சாந்தகுணகாசிபனுமதனவல்லி சார்ந்து வாரதமேறியயோத்திவந்தே, சேர்ந்தவுடன்கொலுவரையைச்சிங்காரி த்து செயம்பெருகமுடிசூட்டலினிகாண்பீரே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? அரிச்சந்திரன், சந்திரமதி, தேவ தாசன், சத்தியகீர்த்தி, காசிமன்னன், மதிதயேந்திரன், மதனவல்லி, கௌசிகன், வதிஷ்டர், முதலானவர்களும் இரதமேறி அயோத்திவந்து கொலுமண்டபம் சிங்காரித்து, அரிச்சந்திர மகாராஜனுக்கு முடிசூட் டுகின்ற விதங்காண்பீர்கள் கனவான்களே.

## மீட்சிகாண்டம்.

சம்பூரணம்.

சுப்ரமண்யன்சகாயம்.

உ



ஸ்ரீ-அப்பாவு



பிள்ளை.













ஸ்ரீசாமுண்டீஸ்வரி துணை.

பெங்களூர் ஆதி விநோதசபை.

சத்தியபாஷ

## அரிச்சந்திரமகாராஜனுக்கு

# முடிசூட்டுதல்.

---

பொது தரு.

இராகம்-சங்கராபரணம்- தாளம்-ஆதி.

பல்லவி.

நவரத்தின முடிசூடினான் அரிச்சந்திரன்
நவரத்தின முடிசூடினான்.

அநுபல்லவி.

தவசிரேஷ்டவஷிஷ்டரும் தன்குலமுனிவனுஞ்
சாற்றஆசிகள்வேதம் ஏற்றமரைகள்கூற
சந்திரவதியாளும் மந்திரிகீர்த்தியும்
வந்திதபாலனும் திந்தோமெனமேளம். (நவ

சரணம்.

இருபுறஞ்சாமரை யெடுக்கநாட்டியமாட
இசைகூட்டிநாரதர் யெழிலேந்தித்தான்பாட
தருமதேவதையுச்சத் தானத்தினின்றாட
ததாசுபமெனச்சொல்லி தானாகாயத்திலாட.

தகைமைசேரும் மகுடவீரருங்
கணதேவரும் மிகவேவாழ்த்தவுந்
தாங்க மன்னர்களாகு
ஓங்க பகைஞர்மனம்
வாங்க துட்டர்களெண்ணம்
ஏங்க கொலுவின்முன்னே
தணிந்துமன்னர்கள் குனிந்து அடிதொழ
புனிந்துநவமணி கனிந்துகுடிகளுந்
தழைத்துமகிழ்ந்திட வழைத்துயுங்களையென்றும்
விழைத்தலுடன்சுகமாய்க் குழைத்திடச்செய்வே
[னென்று. (நவ)

### அரிச்சந்திரமகாராஜன்போற்றிவிருத்தம்.

சத்தியந்தழைத்தோங்க சகலரினெறிக்ஞோங்க
நித்தியவிதிகளோங்க நீண்டமெக்கியங்களோங்க
கத்திரும்மாரிபெய்ய நாட்டினிற்குடிகளோங்க
வெத்திசைக்கீர்த்திபொங்க விரக்ஷிப்பாய்கைலைநாதா.

### சந்திரமதிபோற்றி விருத்தம்.

திங்களைச்சடையிலிட்ட தேவனேகைலைவாசா
மங்களவுமையாளொரு மருவிடுமதியுல்லாசா
வெங்களின்றுயரைவெட்டி யெறிக்கதோர்பாவநாசா
சங்கராவேந்தன்சத்தியஞ் சதாகாலமோங்கச்செய்யே.

### தேவதாசன்போற்றி விருத்தம்.

மான்மழுதரித்தேவெள்ளி மலைதனிலமர்ந்தபாதா
தேன்மொழிகௌரிமேவுந் திரிபுரமெரித்தநாதா
நான்முகன்மாயன்றேடி நாடிடாச்சர்வவேகா
தான்மனம்பொங்கியென்றன் றந்தைசெங்கோலைக்காரே.

### சத்தியகீர்த்திபோற்றி விருத்தம்.

வெள்ளியங்கிரியாயென்றன் வேந்தனையாண்டநேயா
கள்ளியாந்தரியாணித்தவ் கருதிடுஞ்சகலமாயா
வெள்ளினிலெண்ணெய்போல வெங்கணும்நிறைந்ததூயா
வள்ளலின்செங்கோலனும் வாழ்விப்பாய்கைலைவாழ்வே.

### கட்டியன் பராக்கு.

அத்திமுகனைப்பெற்ற வுத்தமனைதெரிசித்த
வண்ணலே வெகுபராக்கு
ஆதித்தன்மரபிற்கு ஜோதியாய்த்தோன்றிய
வரசரே வெகுபராக்கு

நித்தியக்கருமவிதி பிசகாமலெக்கியம்
நிறைவேற்றுவாய் பராக்கு
நேரதாய்மும்மாரி தேசத்திலேபொழிய
நெறிதரித்தவா பராக்கு
சத்தியமெனும்பயிர் தழைக்கவேயரசுசெயுஞ்
சாந்தனே வெகுபராக்கு
சாற்றிடுநால்வேத மொழிப்படிகாத்திடுஞ்
சாந்தனேவெகுபராக்கு
முத்திபெறத்தேவரை கண்டுதெரிசித்தவென்
மூர்த்தியே வெகுபராக்கு
மோனநிலைகௌசிக ஞனவமொடிக்கிய
முதல்வனே வெகுபராக்கு.

நாரதர் விருத்தம்.

அயோத்திபாவண்ணலிட்ட வாக்கினைப்படியேயிங்கு
அயோத்திபாமுடிதான்சூட்டி யானதால்சுகித்திருப்பாய்
அயோத்திபாவிண்ணிற்கேகி யாயிரங்கண்ணனுக்குன்
அயோத்திபாபெருமையெல்லா மறிவிக்கப்போறேன்வாழி.

(நார-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நான்தேவலோகம்போய் இவ்விடத்திய காரியங்களையெல்லாம், தேவேந்திரனுக்குத் தெரிவிக்கப் போகின்றேன் விடைதாரும் இராஜே.

(அரி-வ-ம்) மகாபாக்கியம், அடிக்கடி தங்கள் பாததெரிசனங் கொடுத்து அடியேனை காத்தருள வேண்டும் நாரதரே.

(நார.வ-ம்) அப்படியே பூபா.

(விஸ்-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நான் தவசுக்குப் போகிறேன், நீங்கள் சதா வாழி வாழி.

(அரி-வ-ம்) மகாபாக்கியம், என்றந்தைக்கு அந்தர சொர்க்கமளித்த அண்ணலே, அடியேனேதாகிலும் பிழைகள் செய்திருந்தால் மன்னித்தாண்டருள்வீர் முனிநாதா.

(விஸ்-வ-ம்) அ ! இதென்ன ! அப்பா சத்தியபாஷ அரிச்சந்திரா ? நான்செய்த விளையாட்டெல்லாம் என்னிட மிருக்க, உமதுபேரில் குற்றம் சாட்டப்போமா, இதுவுமன்றி இன்றுமுதல்யான் எங்குசெல்கினும் உமதுபெருமையை யெடுத்து புகழுவேனே ஒழிய பின்புரணி பேசேன் நீங்கள் சதாவாழி.

வசிஷ்டர் விருத்தம்.

என்மொழிபோகாவண்ண மிம்சைகளனேகத்தோடுந்
துன்புமதடைந்துஞ்சத்தியம் துவளாமலிருந்ததூயா

வுன்மகன்மாதுமந்திரி யுத்தமக்குடிகளோடு
நன்மையாயரசுசெய்வாய் நண்பனேபோறேன்வாழி.

(வதி-வ-ம்) அப்பா மடனே ? நீயும், மாதும், பாலனும், மந்திரியும், குடிகளும், வாழி வாழி, நான்போய் வருகின்றேனப்பா.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

தாயகமேயென்குலத்திற்காதியான
தனிக்குருவேமோனமறைதானேபூண்ட
நேயனேயெம்பெருமை நிலையைக்கண்ட
நித்தியனேயுத்தமனேநிகழ்த்தொணாத
நாய்தனுக்குங்கடைப்புட்டேற்கெளிதாய்வாய்த்த
நற்பொருளேதற்பரமேநாதன்மெச்ச
மாயமறைக்கொய்தவனேயுன்றன்றிவ்ய
மலரடிக்கேதுதிபடித்தேன்மாசிலானே.

(அரி-வ-ம்) அடியேன்பேரி லென்னாளுங் கிருபை யிருக்கவேண்டும், அடிக்கடிபாததெரிசனந்தந்து ஆட்கொள்வீரென்குருவே.

(வதி-வ-ம்) அப்படியே, நீங்கள் சதாவாழி.

(காசி-வ-ம்) இராஜ பரமேஸ்வரா ? எனக்கு போகவிடை தருவீரேவந்தே.

(அரி-வ-ம்) அன்பரே ? உம்மால் சகலபெருமையுங் கொண்டேன், சுகமாய் போய்வருவீர், வாழி வாழி.

(மதனை-வ-ம்) அம்மணி சத்தியபாஷன் தேவியே ? எனக்குவிடைதருவாய் தாயே.

(சந்-வ-ம்) அம்மா மதனவல்லி ? உன்னைப்போலுத்தமி வேறுகாணேன், நீ சுகமாய் பதியுடன் போய்வருவாய், வாழி வாழி.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இவ்வாறு எல்லோரும் விடைபெற்றுக்கொண்டு போனபிறகு, சிலநாட்கழித்து அரிச்சந்திரமகாராஜன் முன்னுக்கு நடக்கவேண்டிய காரியங்களைக்குறித்து மந்திரிகளுடன் ஆலோசிக்கிற விதங்காண்பீர்கள் கனவான்களே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அல்லலையகற்றத்தக்க வருமையாமதியின்மிக்க
வல்லமையுடையவென்றன் வாகுளமந்திரிமாரே
நல்லதோரறிவும்நீதி நியாயமுமறிந்தவெந்தன்
செல்வனுக்கினிநாமிங்கு செய்யும்வாறெதுவோசொல்வீர்.

(அரி-வ-ம்) மதிமந்திரிகளே ? எனது தவபுத்திரசிகாமணி சகல காரியங்களில் வல்லவனாயிருப்பதால் இனி அவனுக்கு நாம் செய்யவேண்டிய காரியமெதுவோ தெரியச்சொல்வீர்கள் மந்திரிகளே.

(சத்-வ-ம்) சுவாமி ? தேவதாசன் பக்குவகால மடைந்திருப்பதால் இந்தப் பூமண்டலத்திற் கதிபதியாக செங்கோலளித்து முடிசூட்டினுல் சகலலோகங்களிலும் மேன்மையான புகழ்தரிக்கு மரசே.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி ? நீ சொன்னவாறே செய்வதும் என்கடமையாகும்; ஆனதால், அதிக்ஜாக்கிரதையி லென்குலகுருவை யழைத்து வரும்படி செய்வாய் மந்திரி.

(சத்-வ-ம்) அப்படியே வரவழைக்கிறேன் சுவாமி — அப்பா கட்டியனே ? அதிகசீக்கிரத்தில் சென்று வதிட்டமூர்த்தியை வேந்தன்கோரியதாய்செப்பி அழைத்துவருவாய் வீரனே.

(கட்-வ-ம்) புத்தி ஆண்டவா, சுவாமி ? தங்களைக் கோரி யழைத்ததாக வெங்களாண்டவனுகிய அரிச்சந்திர மஹாராஜர் தெரிவிக்கச் சொன்னுர் குருநாதா.

(வதி-வ-ம்) அப்படியே வருகின்றே னப்பா.

(பொது-வ-ம்) சபையோர்களே ? அரிச்சந்திரமகாராஜ னழைத்ததைக்கேட்டு வதிஷ்டமூர்த்தி அரசன்கொலுமுகம் வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே.

வஷ்டர் வருகிற தரு.

இராகம்-கேதாரகவுளம், தாளம்-ஆதி.

பல்லவி.

மன்னர்மன்னன் வாவென்றழைக்கவும்
வதிஷ்டர்வந்தாரவன் றழைக்கவும்.

அநுபல்லவி.

நன்னகரயோத்திபன் நாடியவாறுக
நலமுடன்முடித்திட நானெனக்கூறுக.(மன்)

சரணங்கள்.

சீலமறிந்தகுணவன்
செப்பிடாதமரு வொப்பிடாதகுரு. (சீல)
சினந்தகோபத்தைக் கண்டேயவனுடன்
அனந்துசாபத்தைக் கொய்தவனுகிய. (சீல)

சிவனிருந்திடும் நிலையும்நிறையும்
பவம்வருந்திடும் நெறியுமுறையும்
பகருமெட்டுகோ ரங்களுமேயோட
சிகரமானப்ர ணவமதுவாயாட (சீல)
சினமும்விலங்க நிலையுந்துலங்க
பனமுமிலங்க கலையுமிலங்க

சேப்கொட்டிக்கவு சிகனகம்போக்கிய
வாய்விட்டப்படி வரமதைதேக்கிய (சீல)
செப்பொணுதவுவ ஒப்பிலாதவ
தப்பிடாதசிவ ஞெப்புவாறுதவ
சித்தமுங்களித் தேமனச் சீருடனடியே
உத்தமனிருக்குங்கொலு உயர்சபைதேடியே (சீல)
சீலமிர்ந்தகுணவன் தத்வபுனிதன்
சிறந்தமேன்மை யினிதன்
தேசமெங்கும்புகழ் திட்டிமேவாற்நீதியும்
நேசஞனவனேயென் நிஜசிடனென்ருேதியும் (மன்)

(வதி-வ-ம்) அப்பாகட்டியனே ? நான்கொலுவாயல்முன் வந்திருப்பதாக அரிச்சந்திரமகாராஜனுக்குத் தெரிவிப்பாயப்பா.

(கட்-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே தெரிவிக்கிறேன் சுவாமி, கேளும் இராஜபரமேஸ்வரா ? வதிஷ்டபகவான் கொலுவாயலில் வந்திருக்கின்ருர் பரமேஸ்வரா.

(அரி-வ-ம்) அப்பாமந்திரிமார்களே ? நமது குலகுருவாகிய வதிஷ்டபகவான் கொலுவாயலில் வந்திருக்கின்ருராம், அவரை நாம்போய் வணங்குவோம் வருவீர்களப்பா.

(மந்-வ-ம்) அப்படியே போய் வணங்குவோம் அரசே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

இவ்வுடலழிந்திலக்க மெண்ணிடாப்பிறவிபுக்கு
மெவ்வுயிர்க்கிறைவன்றன்னை யெங்களால்காணப்போமோ
வெவ்வினையுயர்ந்தபாதா வுமதருளின்றிவேருேர்
கவ்வுதளளித்திருந்தன் கழலடிபோற்றிபோற்றி.

(அரி-வ-ம்) எங்களைப்பெருமைப்படுத்திப் பரமனைத்தெரிசிக்கச்செய்த என் ஆண்டவனே நின்றிருவடிக்கே போற்றி.

(வதி-வ-ம்) வாழி வாழி, அப்பா அரிச்சந்திரா ? அம்மா சந்திரமதி ? நீங்கள் சதா வாழி வாழி.

(அரி-வ-ம்) சுவாமி ? இந்ததிவ்ய ஆசனத்தின்பேரி லெழுந்தருளுமென்குருநாதா.

(வதி-வ-ம்) மஹாசந்தோஷம், அரிச்சந்திர மஹாராஜனே.

(பொது-வ-ம்) சபையோர்களே ? இந்தப்பிரகாரம் அரிச்சந்திர மஹாராஜன் கொலுவில் வதிஷ்டபகவா னிருக்குங்காலே, திரிலோகங்களுஞ்சஞ்சரிக்காநின்ற நாரதமுனிவர்வருகின்ற விதங் காண்பீர்கள் கனவான்களே.

(நார-வ-ம்) வந்தனம் வந்தனம், வசிஷ்டமூர்த்தியே.

(வசி-வ-ம்) வந்தனம், வாரும் வாரும், நாரதமஹா முனிவரே.

## அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

நாதனேயன்றுதேவ நாயகன்சபையில்திவ்ய
பாதனேயென்பேர்சொல்லப் பந்தயமிடவேசெய்து
நீதனேநானுமென்றன் நிலைதனைத்தவறுவண்ணம்
போதனேகாத்துக்கீர்த்தி புனைந்தவாபோற்றிபோற்றி.

(அரி-வ-ம்) சுவாமி? அடியேனுக்கு அதிகபெருமை கிடைக்கும்படி தேவர்சபையில் நடாத்தியமகானுபாவா, உமது திவ்யபாதங்களுக்கு அடியேன்போற்றி போற்றி.

(நார-வ-ம்) வாழி வாழி, அரிச்சந்திரனே வாழி.

(அரி-வ-ம்) நானடைந்த பெருமையெல்லாந் தங்களால்வந்ததேயாகும் இந்த ஆசனத்திலெழுந்தருளியடியேனைக் காத்தருள வேண்டும் முனிநாதா.

(நார-வ-ம்) மெத்தசந்தோஷம், அரிச்சந்திர மகாராஜனே.

## நாரதர் விருத்தம்.

சராசரமதனிலெல்லாஞ் சஞ்சரித்திடுவோனுன
கராசனமிடையிற்பூண்ட காளையன்றுனைக்கண்ட
பராசனம்புரியாயுன்றன் பணிகுருமுனிவர்முன்னே
சராசனந்தாங்குங்கையா சாற்றுவாய்கருத்தைத்தானே.

(நார-வ-ம்) பரமசிவத்தின் அருளைப்பூண்டு, கொலை, புன்,புலை,தவிர்த்தவுன் குருவந்திருப்பதால், வீரவில்லைத் தாங்குங்கையா? உன்கருத்தை வசிஷ்டருக்குச் சொல்லுவாய்மெய்யா.

(அரி-வ-ம்) அப்படியே தெரிவிக்கிறேன், நாரமூர்த்தியே.

## அரிச்சந்திரமகாராஜன் தரு.

இராகம்-சுருட்டி, அடதாளம்.

பல்லவி.

என்கருத்தைச் சொல்லக்கேளுமே ஓ! குருநாதா. (என்)

அநுபல்லவி.

அன்பிலுயர்ந் தடியேன்செப்பும்
அறிக்கையேற்றி யருள்புரிவீர். (என்)

சரணங்கள்.

ஜென்மங்கொண்டேவேந்தனுகிச் சீருடநீதிசெய்யலாகி
புன்மையுற்றேனுமக்காக புகழும்பெற்றேனிவதாக. (என்)

என

அருந்தவத்தைப்புரிந்தேநானு-மடைந்தவேந்தன்பாலன்றனும்
வருந்தனுற்றான்செப்பொணாத-வாய்மைகொண்டாரேயாவிதோ.(என்)
பாலனுக்கே பருவகாலம் பற்றலாச்சே யுற்றநாதா
சீலனுக்கே ராயேனினிச் செய்வதேதோசெப்புநாதா. (என்)

வதிஷ்டர் விருத்தம்.

பூதலத்தில்மானிடர்களின்றதிவ்ய
புதல்வருக்கேபருவமதுபொருந்துமாகில்
சூதகற்றிசுபமுகூர்த்தஞ்செய்வதுண்டு
சுந்தரனேயேந்தலர்க்குச்சொல்லக்கேளா
யாதரிக்கவுலகதனைச்செங்கோலீத
லடுத்ததாமவனெறியிலதிகனாகிற்
பேரதமுறுமாதுலங்கே கிடைப்பாளப்பா
பூசுரரின்முறைமையிதே புகட்டினேனே.

(வதி-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? மானிடரில் தனையன்வய தடைந்தால் விவாக மஹோற்சவஞ் செய்விப்பது முறைமை, மன்னரில் புத்திரன் பருவமடைந்தால் நீதிசெங்கோலைக் கொடுத்தல் தகுமை, அதனால் திவிலுங் கற்பிலு முயர்ந்தமாதை மணரும்பெருமை வகுத்திடுவானென் றறிவாய் வேந்தே.

(அரி-வ-ம்) சுவாமி ? தாங்கள் திருவாய்மலர்ந்தவண்ணஞ் செய்ய அதிகசந்தோஷங் கொண்டேன், ஆனாலதற் குகந்தநாளைத் தெரிவித்தால்வேண்டியதை சேகரிக்கின்றேன் குருநாதா.

(வதி-வ-ம்) அப்படியே சொல்லுகிறேனப்பா வேந்தனே.

வதிஷ்டர் விருத்தம்.

அப்பனேநாளைநிறைமதிதினத்தி
லண்டர்முனிவோருமன்னரறிவதாகச்
செப்பருநால்வகையுடனேவேந்தர்சூழச்
செய்வித்தேபேரிகைகண்முழங்கச்சிடா
ஒப்பவேவேணடுதெல்லாஞ்சேகரிப்பாய்
ஓதுவேனதுமட்டிங்கிருப்பேனானுந்
அப்புறவைப்பூண்டவனேயதுவேதிவ்ய
சுபகாளம்முடியதனைச்சூட்டத்தானே.

(வதி-வ-ம்) அப்பா அரிச்சந்திரா ? நாளையதினம் பௌர்ணமியில் உனது புத்திரசிகாமணியாகிய தேவதாசனுக்கு முடிசூட்ட திவ்யதினமாய் இருக்கின்றதுந் தவிர, மன்னாதி மன்னர்களுக்குந் தெரிவித்து வரவழைப்பாய் வேந்தனே.

(அரி-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே செய்விக்கின்றேன் என் குருநாதா.—அப்பாசத்தியகீர்த்தி? நமது தேவதாசனுக்கு முடிசூட்டுதலையென் மரபோர்க்கும், செப்பன்ன தேசத்தோர்க்குந் தெரிவித்து வரவழைப்பதுந் தவிர நமது நாட்டையும் அலங்கிருதஞ்செய்து வேண்டியவைகளை யெல்லாஞ் அதிசீக்கிரஞ் சேகரிப்பாய்மந்திரி.

(சத்-வ-ம்) அப்படியே தாங்களாக்கியாபித்தவாறு செய்விக்கின்றேனென் ஆண்டவனே.—(தெரிவித்தல்.)

(நார-வ-ம்) அப்பா அரிச்சந்திரமகா ராஜனே? நாளையதினம் முகூர்த்தநாளா யிருக்கின்றமையால் நான் அவசியம் வருகின்றேன், எனக்குப்போகச் செலவுகொடுப்பாய் வேந்தே.

(அரி-வ-ம்) மகாபாக்கியம், சுவாமி? தாங்கள் இவிடம் வரும்போது அடியேனுக்கு இப்பெருமையை நடத்தவேண்டிய காரணமாயிருப்பதால் தேவர்கோனை இவ்வெளியேன் நகர் விஜயஞ்செய்து இச்சிறுவனை ஆசீர்வதிக்கும்படி செய்விப்பீர் முனிநாதா.

(நார-வ-ம்) அப்படியே மகாசந்தோஷமப்பா அரிச்சந்திரா.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்வாறிருக்க தேவேந்திர மகாராஜன், கொலுமுகம்வந்து தனதுமந்திரிகளுக்கு ஆக்கியாபிக்கிர விதங்காண்பீர்கள் கனவான்களே.

(தேவேந்-வ-ம்) அப்பா மந்திரி? நமதுசபையில் தேவர்கள்,முனிவர்கள், சித்தர்கள், அஷ்டவசுக்களுஞ் சூழ்ந்திருப்பதால், காலம்போக்கும்படி அரம்பை, ஊர்வசி, திலோர்த்தமை, மேனகை, இந்நால்வரைக்கொண்டு நாட்டியம் செய்விப்பா யப்பா.

(மந்-வ-ம்) அப்படியே செய்விக்கின்றேன் வேந்தனே.—அப்பா கட்டியனே? அதி சீக்கிரத்தில் அரம்பையை நாட்டியம்புரிய அழைத்து வருவா யப்பா.

(கட்-வ-ம்) அப்படியே அழைத்துவருகின்றேன்சுவாமி.—(அழைத்துவருதல்.)

அரம்பை வருகிற தரு.

இராகம்-நோட்டு, தாளம்-ரூபகம்.

அரம்பைமாது சீதாய்
ரமிக்கவாராள் நேரதாய்
அம்பையொத்த விழியாள்கொங்கை
ஆட பாட நாட வாட.(அரம்பை)
சிம்பைமாற்று மேனியாள்
நிகரில்லாத மானியாள்
தும்பையொத்த தந்தங்காட்டி
சொக்க நிக்க மிக்க சுக்க.(அரம்பை)

(அரம்பை-வ-ம்) போற்றி போற்றி, ஆண்டவா ? தாங்களமைந்தகாரியத்தை அருள்புரியும் நாதா.

(தேவே-வ-ம்) பெண்ணே ? இன்று நமது சபையிலுள்ளவர்களின் மனங்களித்து உருகும்படிக் கொரு திவ்யபதம்பாடி நாட்டியம் புரிவாய்மாதே.

(அரம்-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே புரிகின்றேன் ஆண்டவனே

அரம்பை தரு.

இராகம்-கமாஸ், தாளம்-ரூபகம்.

பல்லவி.

இன்னமோடிசெய்வதேதுக்கோ - ஓ துரையே
இரங்கிவந்து சுரதமாட. (இன்ன)

அநுபல்லவி.

நன்னர்வழைபூண்டவுன்னை
நாடி பாடி ஆடி தேடி. (இன்ன)

சரணங்கள்.

கரும்புவில்லேவளேத்துமாரனும்-ஓ துரையே
சுரும்புநாணமைத்துவீரனும்
நெருங்கிவாரா னிரும்போநெஞ்சம்
நெட்ட வெட்ட தட்ட கிட்ட. (இன்ன)

கொங்கைவிம்மிகோரமாகுதே-ஓ துரையே
மங்கைமுகம் மாறலாகுதே
எங்கையோடில் விடான்பாவி
ஏரும் பாரும் வாருங் காரும். (இன்ன)

துலக்குமதனநூலேநாடியே - ஓதுரையே
குலுங்கநாமிருவர்கூடியே
இலகுகாலமிதுவாகும்
என்று மன்று வுன்று லின்னுள். (இன்ன)

அரம்பை தில்லானு.

இராகம் - டக்கு, தாளம்- ஆதி.

பல்லவி.

மாதர்க்கச்சும் மாரா வாரும் வாரும்
வாரும் பாரும் காரும் சேரும். (மா)

அநுபல்லவி.

கணகுணமணியிடை நடையதுதுவளுது
காமமீறிசீர் கரையதுபுறளது. (மா)

சரணங்கள்.

சீரதயைவளரு மாராமீறினகு
பேராயரக்கர்பணி சூராவிதுசமயம்
வறிதெரியுடலது திறுகுதுமொழியது
வாடலாகிதார் ஓடியேவழியிது. (மா)

(தேவே-வ-ம்) அப்பாமந்திரி? அரம்பைக்கு வேண்டிய இரத்தினு பரணங்களை கொடுத்தனுப்புவாயப்பா.

(பொது-வ-ம்) சபையோர்களே? இவ்விதமாய் நாட்டியம் புரிந்திருக்கும் சமயத்தில் அரிச்சந்திர மகாராஜனிடம் விடைபெற்ற நாரதமுனிவர் அதிசீக்கிரமாய் தேவேந்திரனை அழைக்க தேவசபைக்கு வருகிறவிதங் காண்பீர்கள் கனவான்களே.

(தேவே-வ-ம்) நாரதமுனிவரே? நீரின்னேரம் வாராதகாரணமென்ன? எங்கே போயிருந்திரேதாகிலும் விசேஷமிருந்தாற் றெரியச் சொல்வீர் முனிநாதரே.

(நார-வ-ம்) அப்படியே சொல்லுகின்றேன், வாழி வாழி தேவர்கோனே.—தேவராஜே? சத்தியபாஷ அரிச்சந்திரமகாராஜன், அயோத்தியாபுரியை தனது புத்திரனுகிய தேவதாசனுக்குப் பட்டங்கட்டப்போகிறபடியால், தங்களையு மழைத்துவந்து ஆசீர்வதிக்க வேண்டினனென் றறிவீர்.

(தேவே-வ-ம்) மகாசந்தோஷம் அப்படியே நாமெல்லோரும் போய்வருவோம் முனிநாதா.

(பொது-வ-ம்) சபையோர்களே? தேவேந்திரன் வரவெண்ணங்கொண்டதைக்கேட்ட நாரதமுனி அதிக சந்தோஷமாயிருக்க, அயோத்தியாபுரியில் நடப்பதைக் கேட்பீர்கள் கனவான்களே.

(சத்-வ-ம்) அப்பா கட்டியனே? நமதுராஜன் தேவதாசனுக்கு பட்டாபிஷேகஞ் செய்யப்போகிறபடியால் இந்நாடெல்லாம் அலங்கரிக்கச் செய்வதுந்தவிர, குடிகளை கொலுமுகம் வரச்செய்விப்பாய் அப்பா வீரனே.

(கட்-வ-ம்) அப்படியே செய்விக்கிறேன் சுவாமி.

(சத்-வ-ம்) சுவாமி? உமதுத்திரவின்படி பட்டணத்தைச் சிங்காரிக்கச்செய்து மகுடாபிஷேகத்திற்கு வேண்டியதையுஞ் சேகரித்தேன், இதோகுடிகளெல்லாம் அரண்மனைவாயலில் வந்திருக்கிருர்கள்வேந்தே.

(அரி-வ-ம்) மகாசந்தோஷம் அப்பா மந்திரி.—சுவாமி என் குருநாதா? இனித்தாங்க ளென்குமாரனுக்கு நடத்தவேண்டிய காரியங்களை நடப்பிப்பீர்நாதா.

(வசி-வ-ம்) அப்பா அரிச்சந்திரா? தேவதாசனுக்கு மந்திரியாரோ தெரியச் சொல்லுவாய் அப்பா?

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி? தேவதாசனுக்கு மந்திரி வேண்டுமே அதை யோசித்து வரவழைப்பாயப்பா?

(சத்-வ-ம்) அப்படியே யோசித்தழைப்பிக்கிறேன் மகாராஜனே.

(சத்-வ-ம்) சுவாமி ? தேவதாசனுக்குகந்த மந்திரி சத்தியகீர்த்தியின் தவப்புத்திரனாகிய உத்தமகுணன்தவிர வேறுயெங்கும் கிடைக்கமாட்டாரென்றறிவீர் வேந்தே.

(அரி-வ-ம்) அப்படியா, மெத்தசந்தோஷம், அப்பா சத்தியகீர்த்தி ? உனது புத்திரசிகாமணியாகிய உத்தமகுணனை என் மகன் தேவதாசனுக்கு மந்திரியாக இருக்கும்படி நேமிப்பாயப்பா.

(சத்-வ-ம்) மகாபாக்கியம் அப்படியே செய்விக்கின்றேன் சுவாமி.

(அரி-வ-ம்) குருநாதா ? என்னுயிர்க்கு உயிரான சத்தியகீர்த்தியின் புத்திரனாகிய உத்தமகுணனை தேவதாசனுக்கு மந்திரியாக நியமித்திருக்கின்றேன் சுவாமி.

(வசி-வ-ம்) நல்லதப்பா, அரிச்சந்திரா ? தேவதாசனையும், உத்தமகுணனையும், கெங்கைநதியில் தீர்த்தங்களாட்டி யழைத்துவரச் செய்விப்பாய் கண்மணியே.

(அரி-வ-ம்) அப்படியே செய்கின்றேன் குருவே.

அரிச்சந்திரமகாராஜன் விருத்தம்.

அப்பனேசத்தியகீர்த்தி யன்பனேயுரைக்கக்கேளா
யிப்பவும்ம[illegible]ஜய ரியம்பியவாறுபோல
வொப்பிலாமைந்தன்றன்னை யுயர்நதியாட்டிப்பின்னுங்
கொப்பெனவுடுத்தியிங்கு கூட்டியேவரச்செய்வாயே.

(அரி-வ-ம்) அப்பா சத்தியகீர்த்தி ? எனது அருமைமகனாகிய தேவதாசனுக்கு திவ்யதீர்த்தங்களாடச்செய்து உயர்ந்தபூஷணாதிகளை அலங்கரித்து இவ்விடம் வரச்செய்விப்பாயப்பா.

(சத்-வம்) அப்படியே வரச்செய்கின்றேன் மகாபிரபூ ? — அப்பாகட்டியனே ? நமது அரசன் மைந்தனாகிய தேவதாசனுக்கு முடிசூட்டப்போகின்றமையால் அம்மணி யவர்களுக்கு தெரிவித்து திவ்யஸ்தானத்துடன் நல்லவுடுபாவனையணிந்து அழைத்துவருவாய் கட்டியனே.— (அழைத்து வரச்செல்லல்.)

(கட்-வ-ம்) புத்தி அய்யனே, அம்மணி ? தங்கள் திவ்யபுத்திரனாகிய தேவதாசனுக்கு இன்று நல்லதினமென வசிஷ்டர்முதலிய மகான்களால்தெரிந்து இளவரசுக்குரிய தேவதாசனுக்கு இப்பூமண்டலமுழுதும் ஆளுகை செய்ய செங்கோலை கைபிற்கொடுத்து முடிசூட்ட எண்ணங்கொண் டிருக்கிறார். ஆகலால் திவ்யபனிநீரினால் ஸ்தானங்கள் செய்வித்து பூஷணாதிகளையணியச்செய்து என்னுடன் கூட வேந்தனழைத்து வரும்படிகட்டளையிட்டார் அம்மணி.

(சந்-வ-ம்) மகாசந்தோஷம் அப்படியே செய்வித் தனுப்புகின்றேன் அப்பா வீரகட்டியனே.— அம்மாதோழி சவுந்தரவல்லி ? தேவதாசனை திவ்யஸ்தானம் செய்வித்து அதி சீக்கிரமென்னிடம் அழைத்து வருவாய் தோழி.

(சவுந்-வ-ம்) மகாசந்தோஷம் அம்மணி, அப்படியே தாங்கள் ஆக்கி னையிட்டவாறு அழைத்துவருகின்றேன் தாயே.

(தேவ-வ-ம்) என்னையீன்ற அம்மணி? என்னை யாதுகாரணத்தினல் ஸ்னானஞ் செய்துவரும்படி ஆக்ஞாபித்ததை எனக்குத் தெளிவுரும் படி சொல்லவேண்டு மம்மா தாயே நின்னடிக்கே போற்றிபோற்றி.

(சந்-வ-ம்) அப்பா தேவதாசா? உன்னை நானருந்தவஞ்செய்துபெற் றபலன் இன்றைக்குக் கிடைத்தது, உனக்கு முடிசூட்ட வேந்தனழை த்தனராம், வருவாயடா என் கண்மணியே.

சந்திரமதி தரு.

இராகம்-தோடி, தாளம்-ஆதி.

பல்லவி.

கூடவருவாய்மகனே - கொலுமுகத்தை
நாடவருவாய்சுதனே.

அநுபல்லவி.

ஆடமாதர்களுன்முன் பாடவந்தணர்வேதங்
கூடவமைச்சர்முடி சூடவுனக்கேயென்பின். (கூட)

சரணங்கள்.

வெற்றிக்கொடிபிடிக்க வேந்தருனைப்பணிய
விரிவுளவுலகினில் வேணுநீதியளிக்க
நற்றிமுனிவரெக்கியம் நாட்டின்மிகப்பெருக
நாயகம்போலிருந்து நல்லவராசுபுரிய. (கூட)

(சந்-வ-ம்) பூச்சக்கிரக் குடைபிடிக்க கட்டியன்கூற, அந்தணர் வேத மோத, மந்திரி பிரதானிகள் இருபுரஞ்சூழ, மன்னர்க ளுன்னடிதாழ, இவ்வயோத்தியா புரிக்கு உன்னை ஏகசக்ரேஸ்வரனுய் முடிசூட்டப் போகின்றபடியால் நீ என்னுடன் வருவாயடா கண்மணியே.

(தேவ-வ-ம்) அப்படியே என்னைப்பெற்றதாயே இதோ வருகின்றே ன் அம்மணி.

(சந்-வ-ம்) அப்பா குழந்தாய் தேவதாசா! கவுசிகமுனிவரால் காசி யின்நகரின்கண், நேரிட்ட துன்பங்களையெல்லாம் விலக்க, தூயனைவரு ம்படிசெய்த நமது குலகுருவின்பாதத்தை பணிவாயடாமகனே, நீயெ ன்னாளும் சத்தியம் பிசகாமல் உன்தந்தையைப்போல் செங்கோல் நடாத்தி சுகமாய் வாழ்ந்திருக்க உன்தந்தையின் திவ்யபாதங்களையும், பணிகுவாயடா எனது கண்மணியே.

(தேவ-வ-ம்) அம்மா? அப்படியே இருவர்பாதங்களைப் பணிந்தேன் என்னையீன்ற அன்னையே.

அரிச்சந்திரமகாராஜனுக்கு முடி சூட்டுதல்.

சம்பூரணம்.

சுப்ரமண்யன்சகாயம்.

---



ஸ்ரீ-ஸ்ரீ-அப்பாவு.















ஸ்ரீசாமுண்டீஸ்வரிதுணை.

பெங்களூர் ஆதி விநோதசபை.

சத்தியபாஷன் மைந்தனாகிய

தேவதாசமகாராஜனுக்கு

# திருமுடி சூட்டுதல்.

---

## பொது விருத்தம்.

தேவதனுமுத்தமனுந் தீர்த்தமாடி
திருநுதலினீறணிந்து வாடைபூண்டு
மேவவந்தார்கொலுமுகத்தை யண்டரேற்று
மிறையவனும்நாரதனும் ராணியோடு
தாமடைந்தார்சத்தியனு மகிழ்கொண்டு
தாளடியைப்பணிந்துநிற்க வாழியென்றார்
ஆவலுடன்மேழியனு முடிதாங்கிய
அணிந்திட்டார்செங்கோலு மளித்திட்டாரே

(பொது-வ-ம்) சபையோர்களே தேவதாசனும், உத்தமகுணனும், கெங்கைநதியில் நீராடிவந்தவுடன், தேவேந்திரன், இந்திராணி சமேதராய் நாரதமுனியுடன் வரக்கண்டு அரிச்சந்திரமகாராஜன் பணிந்தான், பின்பு உத்தமவேளாளன் முடியை யெடுத்துக்கொடுக்க தேவதாசனுக்கு முடி சூட்டியவுடன் சத்தியபாஷ அரிச்சந்திர மகாராஜன்

தனது கரத்திலிருந்த செங்கோலை தேவதாசன் கரத்திற்கொடுக்க தேவேந்திரன், வசிஷ்டர், விஸ்வாமித்திரர், நாரதர், முதலானமுனிவர்களும் ஆசிகூற வேளாளர்கள் அகமகிழ்ந்தனர்களென்றறிவீர்கள் கனவான்களே.

## பொது தரு.

இராகம்-பந்துவராளி, தாளம்-ஆதி.

பல்லவி.

பட்டாபிஷேகங்கொண்டான்
பாலன்தேவதாசன்-லோலமாகவிதோ. (பட்)

அநுபல்லவி.

அட்டதிசைகளெங்கு மதிரவாத்தியமடிக்க
அந்தரத்துந்துமி ஆரக்கொடிபிடிக்க
பட்டவர்த்தனரெலாம் பணித்துகைகட்டிப்பார்க்க
பராக்கெச்சரிக்கையெனப் பரிவாய்க்கட்டியந்தீர்க்கப். (பட்)

சரணம்.

ஆலவட்டம்பிடிக்க அரம்பையர்நடமட
அந்தணர்முனிவரு மன்பாய்வேதத்தைப்பாட
சூலபாணியைநாடி சூரியனுச்சிநாட
சுபமங்கிலியப்பெண்கள் சோபனச்சேவைபோட
கோலவிழிமாதர்கள் குலிந்துநாட்டியஞ்செய்ய
கொற்றவனுனேயெனக் கோரிபாரத்தையுய்ய
சீலமுடனேபாலன் சிம்மாசனத்திற்பய்ய
சிந்தைகனிந்தேயேறிச் சீராச்சபையார்துய்ய
ஜெயஜெயவெனவே பேரிகைபேச
பயபயமெனவே பகைஞரும்கூச
நயநயமெனவே காதனும்நேச
குயமரசெனவே கொலைபுலைநாச
சித்தமகிழ்வருக்க வினிவரும்
நித்தஞ்செகிழ்வு யெனப்பலமுனிவரும்
செப்பிமருமலர்கள் ஒப்புவிய தூவிட
கப்பியசிலம்பொலி எப்புறந்தாவிட. (பட்)

## வசிஷ்டர் வாழி.

சத்தியனளித்தபாலா-உத்தமதேவதாசா
இத்தலந்தனிலுன்செங்கோல்-நித்தமாயோங்கவாழி.

(வசி-வ-ம்) வாழி வாழி அப்பா தேவதாசா.

(யொது-வ-ம்) சபையோர்களே ? இவ்விதமெல்லோரும் வாழ்த்தி அவாளவாளிருப்பிடஞ் சென்றனர்கள். இப்பால் தேவதாசமகாராஜன் மறுதினமெழுந்து நித்திய கடனைமுடித்துக்கொண்டு மந்திரி, பிரதானிகள்புடைசூழ கொலுமுகம் வருகிறவிதங்காண்பீர்கள் கனவான்களே,

## தேவதாசன் கொலுவுக்குவருகிற தரு.

இராகம்-கலியாணி, தாளம்-ஆதி.

பல்லவி.

இராஜராஜனுன - ராஜனயோத்தியாளும்
ராஜாதிராஜன்வந்தான் - தேவதாச
ராஜகெம்பீரன்வந்தான் - கொலுவிருக்க
ராஜசிங்காரன்வந்தான்.

அநுபல்லவி.

தேசதேசம்புகழ  திகழ்பேரிகைமுழங்க
திக்கெட்டுகள்மகிழ  திறைகள்மன்னர்வழங்க
வாசமணிந்துசெங்கோல்  வலக்கரத்திற்பிடித்து
வருந்தாதிருக்கநெஞ்சி  லஞ்செழுத்தைப்படித்து
வாகுடன்மன்னர்கை  லாகுகளீந்திட
போகவஜீகர  யோகரும்வந்திட. (இராஜ)

சரணம்.

ஆலவட்டம்பிடிக்க  அமரர்மலர்கள்தூவ
அரிவெண்சாமரைவீச  அந்தணர்வேதங்கூவ
மேலாமிரத்னகிரீட  மிளிவாய்முடிபுனைந்து
மேவிபரவிகுல  மிக்கவரும்நினைந்து
கிலமெங்கணுங்கூட  கிரணவொளிகள்வீச
கீர்த்திப்பிரதாபாவெனக்  கிளரெச்சரிக்கைபேச
கோலவிழியாராடக்  குரவராசிகள்கூற
கொடிதடியிட்டிகெந்தை  கொண்டுவீரர்கள்சார
கொம்புகளூத  பேரி
பம்பைகளோத  தாளஞ்
ஜம்பைகள்போட  மேளங்
தம்புரும்பாட  கைகள்
கூப்பியேமன்னர்கள்  நேர்ப்புடனின்றிட
கோப்பியமாகவே  காப்புரமென்றிட
கொற்றவருமற்றவரு  கற்றவரும்பேச
மட்டிலாதகீர்த்திபுனை  கெட்டியுளதேவதாச.(இராஜ)

### தேவதாசன் போற்றி விருத்தம்.

அமரர்கள்வாழ்கவென்றன் குலமதுண்டகோவே
சமரசமாகவெங்குஞ் சஞ்சரித்தருளுந்தேவே
குமரியோடாடும்பாதா கொற்றவன்றன்னைக்காத்த
விமலனேயெனதுசெங்கோல் விளங்கவேயருள்வாய்போற்றி.

### உத்தமகுணன் போற்றி விருத்தம்.

ஐயனேயரிச்சந்திரன்றன் அருந்தவத்தாலுதித்த
மெய்யனேயண்டரேற்று மீசனைத்தெரிசித்தோனே
துய்யனேகானந்தீண்டத் தோன்றலேயிறந்திராது
கையனுலெழுந்தவுந்தன் கழலடிக்கடியேன்போற்றி.

### சர்க்குணன் போற்றி விருத்தம்.

அன்றெனையடிமைகொண்டு மாதரித்திட்டசீமான்
நன்றதையுணர்ந்தவெந்தன் நாயகனளித்தகோவே
வென்றியைக்கொடுத்தவந்த விமலனுமுனதுசெங்கோல்
என்றுமிம்மரபுமோங்கி யிருந்திடப்பணிந்தேன்போற்றி.

(தேவ-வ-ம்) அப்பா மந்திரிகளே ? இந்த ஆசனங்களி லிருப்பீர்கள் தோழமார்களே.

---

## மங்களம்.

இராகம்-சுருட்டி, தாளம், ஆதி.

பல்லவி.

மங்களம் - மங்களம் - நித்யசுப - மங்களம் - மங்களம்

அநுபல்லவி.

திங்களணிந்தோனுக்குந் தேவிமனோன்மணிக்கும். (மங்)

சரணங்கள்.

ஆதிகணபதிக்கும் அறுமுகவேலனுக்கும்
அம்பாசரஸ்வதிக்கும் அரிபரந்தாமனுக்கும்
நீதியறிந்தவெம னிருதியக்கினிவருண
னெடுமாலுந்தியுதித்த நேயனயன்றனக்கும். (மங்)
ஞானவசிஷ்டருக்கும் நற்குணவிந்திரர்க்கும்
நவக்கிரகபதிகட்கும் நாரதமுனிவர்க்கும்
வானமர்சுரருக்கும் வளர்கவுசிகர்தனக்கும்
வழுத்துநூலறிந்தோர்க்கும் அரிபக்திபருக்கும். (மங்)

சத்யவரிச்சந்த்ரர்க்குஞ் சந்திரவதியம்மனுக்குஞ்
சற்குணதேவதாசன் சத்தியகீர்த்திதனக்கும்
நித்யானந்தம்பெருகி நீடிக்குங்கீர்த்தியாய்
நிலத்திலிதைப்படிக்கும் நேசரானவருக்கும் (மங்)

## வாழி விருத்தம்.

பார்வாழ்கப்படியாளு மரசர்வாழ் க
பண்புடனேவிநோதசபை பலகால்வாழ் க
ஏர்வாழ்கவிச்சரிதை படிப்போர்வாழ் க
யெழுதினோரிதைக்கேட்கு மின்பர்வாழ் க
கார்வாழ்கக்கவிவாண ரடிகள்வாழ் க
கனம்பெருகியிதை நடிக்குங் கண்ணயர்வாழ் க
சீர்வாழ்கநிலத்திலுள மறையோர்வாழ் க
கேமஞ்சொன்குருபாதம் நிதமும்வா ழி.

சத்தியபாஷ அரிச்சந்திரவிலாசம்,

சம்பூரணம்.

சுப்ரமண்யன்சகாயம்.

குருவேதுணை.

---

முருகன் துணை.

பெங்களூர் ஆதிவிநோத சபை.



மைசூர்.

# ஸ்ரீசாமுண்டேஸ்வரிகீர்த்தனை.

இராகம்-தோடி, தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஓம் சாம்பவி ஸ்ரீசாமுண்டேஸ்வரி - இந்த
சாமராஜமஹா சாமிக்கருள்புரி (ஓம்)

அநுபல்லவி.

பாம்பணிந்த பயிரவிநீலி
பதினெண்பேர்கள் பணியுஞ்சூலி
தேம்புவோருக் கருள்கபாலி
திவ்யகுணத் தேஜானுகூலி
தேவியேசுந்தரி கீதபோக்கந்தரி
நாவினில்மந்தரி நாடிநேந்தந்தரி (ஓம்)

சரணங்கள்.

பாதிப்பிறையணி கோதிலான்பக்கலிற்
பரங்குடனின்ற நாரணி
ஜோதிசுயம்பொரு ணீதியாரந்தமே
ஸ்தூலசூக்மக் காரணி
நீதிபேரானந்த நிர்மலநிஷ்கள
நிர்ரூபமாகிய வாரணி
ஆதிமூலாதர ரூதியேகுண்டலி
ஆருதாரப்பரி பூரணி

ஆங்கருமங்க ணாகச்செயுமாதி
ஐம்பத்தோரக்ஷரத் தாடிடுஞ்சோதி
நீங்காமலெங்கும் நிறைந்திடும்வேதி
நேமன்கிருஷ்ணராஜ ணித்தமணிபூதி
நேசிபராபரி நித்யகுணாகரி
வாசிநிராதரி யருணமனோகரி (ஓம்)

யோகநிஷ்டைதவ மேவவருள்தரு
நித்யகல்யாண சங்கரி
ஓமமுடனைக்கியத் தூபமிகக்கொணு
மூத்தமிசத்தி ஸ்ரீங்கரி
காயனையன்றுமே கண்ணாற்கருக்கிய
கரியுரித்தோன்மகிழ் ரீங்கரி
சாமமூதலாருஞ் சார்ந்துபணிந்திடு
சாயுஜ்யதரிய ஷடங்கரி
சந்ததமுந்தனைச் சார்பவற்காதரி
சராசரமதனிற் சாங்கமாய்ப்பூகரி
சிந்தையகன்றிட நீநினைசோதரி
நிமலிவிமலியே நேர்மணிதீதரி
நேமியேபிங்களி நிற்குணசிங்களி
நாமியேமெலங்களி நற்சமர்மங்களி (ஓம்)

தேவதேவருடன் மூவருளமகிழ்
திவ்யகுணாகரி யீசியே
பரவமனுகாமற் ருவிச்சாமராஜ
பழதுரைக்காத்திடு நேசியே
கோவினமாவியுங் குணமுடனடைக்
கோலோங்கச்செய்வி லாசியே
காவலினெண்ணுங் கருத்தெலாங்கைகூட
கருணையியும்பிர காசியே
காளிமதுபதி கண்மணியேபாராய்
கருதமுத்துசாமி கனிந்திடத்தாராய்
கூளிப்பெருப்படைக் கொற்றவளேவாராய்
குழம்பமகிடனைக் குத்தினையேசீராய்
சோமளிவீரியே கிருபைதருமாரியே
சாமளிசூரியே சரணோபகாரியே (ஓம்)

மைசூர் ஸ்ரீசாமுண்டீஸ்வரி கீர்த்தனை சம்பூரணம்.

---

Page number incorrect



